திருச்சிற்றம்பலம்



# திருஞானசம்பந்தர் ஆய்வு மாலை

1

திருவளர்திரு கயிலைமாமுனிவர் காசிவாசி
முத்துக்குமாரசாமித் தம்பிரான்சுவாமிகள் அவர்கள்
அருளாணையின்வண்ணம் வெளியிடப்பெற்றது


தோணியப்பர் திருக்கோயில், சீர்காழி.

பதிப்பாசிரியர்

த.கோ. பரமசிவம்
ந. முருகேசன்
கோ.ப. நல்லசிவம்



திருஞானசம்பந்தர் இலக்கிய ஆய்வு மாநாடு
வாரணாசி - 2002

திருச்சிற்றம்பலம்

# திருஞானசம்பந்தர் ஆய்வு மாலை

## தொகுதி ஒன்று

திருவளர்திரு கயிலைமாமுனிவர் காசிவாசி
முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின்
அருளாணையின் வண்ணம் வெளியிடப் பெற்றது.




பதிப்பாசிரியர்

**த.கோ. பரமசிவம்**

**ந. முருகேசன்**

**கோ.ப. நல்லசிவம்**



திருஞானசம்பந்தர் இலக்கிய ஆய்வு மாநாடு
குமாரசாமித் திருமடம் - வாரணாசி
2002

# பதிப்புரை

**திசையனைத்தின் பெருமைஎலாம் தென்திசையே வென்றேற**
**மிசையுலகும் பிறவுலகும் மேதினியே தனிவெல்ல**
**அசைவில்செழுந் தமிழ்வழக்கே அயல்வழக்கின் துறைவெல்ல**
**இசைமுழுதும் மெய்யறிவும் இடங்கொள்ளும் நிலைபெருக**
...........................................................................
**தவம்பெருக்கும் சண்பையிலே தாவில்சரா சரங்களெலாம்**
**சிவம்பெருக்கும் பிள்ளையார் திருஅவதாரஞ் செய்தார்**

(சேக்கிழார்)

**'திருஞானசம்பந்தர் ஆய்வு மாலை'** என்னும் இந்நூல், வாரணாசி குமாரசாமித் திருமடத்தில் நடைபெறும் திருஞானசம்பந்தர் இலக்கிய ஆய்வு மாநாட்டில் ஆய்வு செய்யப்பெறும் 198 ஆய்வுக் கட்டுரைகளின் தொகுப்பாகும். இது இரண்டு தொகுதிகளாக, தமிழ், இந்தி, ஆங்கிலம் என மூன்று மொழிகளாலான கட்டுரைகளைக் கொண்டு அமைந்ததாகும். எனினும் திருஞானசம்பந்தரின் இலக்கியங்கள் யாவும் தமிழ் மொழி யிலேயே அமைந்திருத்தலின் தமிழ்க் கட்டுரைகளே மிகுதியாக இடம் பெற்றுள்ள இயல்பைக் கொண்டது.

தமிழ் அருளாளர் ஒருவர்க்காக நிகழும் இம்மாநாடு அனைத்திந்திய மாநாடாக, கருத்தரங்காக அமைந்திருப்பது தமிழ் மொழிக்கும் தமிழருக்கும் பெருமை சேர்ப்பதாகும் என்றால் அது மிகையாகாது. பேராளரும் பார்வையாளருமாக 400 பேர்கள் கலந்து கொள்ளும் இப்பெரிய மாநாட்டைத் **திருப்பனந்தாள் காசித்திருமடமும் களம்பூர் கோவிந்தசாமி அடிகளார் அறக்கட்டளையும்** இணைந்து ஏற்பாடு செய்துள்ளன. பெரும் ஆய்வறிஞர்களாலும் இளைய தலைமுறை யினரான ஆய்வு மாணவர்களாலும் நிகழ்த்தப் பெறும் இக்கருத்தரங்கு, மாநாடு திருஞானசம்பந்தரின் தேவாரத்தை இன்றைய தலைமுறை யினரிடையே கொண்டு செல்ல வழி செய்யும் என்றால் அது மிகை யாகாது. வேற்றுமைகளுக்கிடையே மொழியுணர்வும், சமயவுணர்வும் தெளிந்த மனிதநேய உணர்வுடன் வளர்வதற்கு இம்மாநாடு ஒரு களனாக அமைதல் கூடும். பாரதப் பண்பாடாம் பக்தி, சமய ஈடுபாடு, திருத்தொண்டு, கோயில் வழிபாடு, திருத்தல யாத்திரை, வாழ்க்கைப் பிடிப்பு, இயற்கையோடு இணைந்த வாழ்வு என எல்லாவற்றையும் இணைத்து வழங்கிய ஞானசம்பந்தருக்கு வட இந்திய மண்ணில் குறிப்பாக, கங்கைக் கரையிலும் தமிழே பாடிய, குமரகுருபர சுவாமிகள்

காசியில் நிறுவிய ஸ்ரீ குமாரசாமித் திருமடத்தில் விழா எடுப்பது முற்றிலும் பொருத்தமான நிகழ்வாகப் போற்றலாம். இம்மாநாட்டு ஆய்வுரைகளை முன்கூட்டியே நூலாக வெளியிடுவதில் நாங்கள் பெருமையும் பூரிப்பும் கொண்டு மகிழ்கிறோம்.

## திருமுறை மாநாடுகள்

சென்ற ஆண்டு வாரணாசியில் நடைபெற்ற பெரியபுராண மாநாட்டின் தொடர்ச்சியாகவே இத்திருஞானசம்பந்தர் இலக்கிய மாநாடு வாரணாசியிலேயே நடைபெறுகிறது. முன்னதாக வாரணாசி குமாரசாமித் திருமடத்தில் நடைபெற்ற குமரகுருபரர் மாநாடு ஆய்வாளர்களிடையே சமய இலக்கியத் தாகம் இருப்பதையும் யாத்திரைத் தேவையின் உணர்வு இருப்பதையும் வெளிப்படுத்தியது. ஆதலின், சமய இலக்கியங்களுக்குத் தொடர்ந்து மாநாடுகளை காசிமாநகரிலேயே நடத்தலாம் என்ற எண்ணத்தை வித்திட்டது. இவ் எண்ணத்திற்குக் காசித் திருமடத்தின் அதிபர் சுவாமிகள் நீரும் உணர்வும் ஊட்டி வளர்த்து அருளாணைகள் வழங்கினார்கள். தொடர்ந்து எல்லாச் சமய நூல்களுக்கும் புலவர் அருளாளர் ஞானியர்க்கும் மாநாடுகளை நடத்தலாம் எனத் திட்டமிட்டார்கள்.

அத்திட்டத்தின்வண்ணம் பன்னிரு திருமுறைகளுக்கும் தொடர்ந்து பத்து ஆண்டுகள் ஆண்டுக்கொருமுறை காசியில் மாநாடு நடத்த முடிவுசெய்யப்பெற்று, சென்ற ஆண்டு பெரியபுராண மாநாடு நடத்தப் பெற்றது. அம்மாநாட்டில் 400-க்கும் மேற்பட்டோர் கலந்து கொண்டனர், 225 கட்டுரைகள் இரண்டு தொகுதிகளாக வெளியிடப் பெற்றன. மிகச் சிறப்பாக நடைபெற்ற அம்மாநாட்டின் வெற்றி திருமுறை மாநாடுகள் திட்டத்தை ஊக்கப்படுத்தியது. ஆதலின் இவ்விரண்டாவது மாநாடு நடத்தப் பெறுகிறது. இத்திட்டம் தொடர்ந்து நிறைவேற வேண்டும் எனத் திருவருளை வேண்டுகிறோம். அடுத்த ஆண்டு திருநாவுக்கரசர் இலக்கிய ஆய்வுமாநாடு நடத்துதற்கான ஏற்பாடுகளில் ஈடுபட்டுவரும் எங்களை உங்கள் ஆக்கமும் ஊக்கமும் வலுப்படுத்தும் என்ற நம்பிக்கை எங்களுக்குண்டு. இம்மாநாடுகளின் நோக்கம் சமய இலக்கியங் களைப் பயின்று சுவைப்பதும், யாத்திரை மேற்கொண்டு உலக அனுபவமும் மனிதநேயமும் பெறுவதுதான் என்பதை ஈண்டுக் குறிப்பதில் நாட்கள் நிறைவடைகிறோம்.

## பாரதப் பண்பாட்டில் திருஞானசம்பந்தர்

இம்மாநாடுகளின் நோக்கத்தை நிறைவு செய்யும் வண்ணம் இலக்கியமாக வாழ்ந்த அருளாளர் திருஞானசம்பந்தர் என்றால் அது மிகையாகாது. திருஞானசம்பந்தர் மொழிவழி தொண்டுவழி

இறைவனை உணர முடியும் அடைய முடியும் என்பதை நிலை நாட்டியவர். தலயாத்திரைவழி மனித நேயத்தை வளர்க்க முடியும். அதன்வழி ஆன்மநேய ஒருமைப்பாட்டை உருவாக்க முடியும் என உறுதியாக நம்பினார். பாரதப் பண்பாடு என்பது பக்தி, தொண்டு, யாத்திரை, மனிதநேயம், வாழ்க்கைப் பிடிப்பு, இயற்கையான வாழ்க்கை முறை எனப் பன்முகப் பாங்குடன் ஒளிர்வதாகும். இதனை முழுவதுமாக உணர்ந்த நம் திருஞானசம்பந்தர் இவ்இலக்கணங் களுக்கு அவரே இலக்கியமாக வாழ்ந்ததுடன் நம்மை வழிநடத்தவும் துணைபுரிந்தவராகக் காட்சி தருகிறார். அவர்தம் வாழ்வும் வாக்கும் இதனை உணர்த்துகின்றன. ஆதலின் மொழிவழி, சமயநூல்கள்வழி, யாத்திரைவழியாக மனிதநேய ஒருமைப்பாட்டைக் காண விரும்பும் இம்மாநாட்டுக்குரிய நாயகராகத் திருஞானசம்பந்தர் அமைந்திருக்கிறார் என்றால் அது மிகையாகாது. எனவே பாரதப் பண்பாட்டை உணர்ந்து தெளிவதற்கு இம்மாநாடு துணை செய்யும் என உறுதியாக நம்பலாம்.

## ஆய்வு மாலைகள்

இது திறனாய்வுக் காலம், கருத்தரங்கக் காலம். நூலாக்கங்கள் வழி தமிழ் வளர்த்த முந்தைய நூற்றாண்டுகளில் அதிகம் பயிலாத கருத்தரங்கங்கள் இந்நூற்றாண்டிலும் இனி எதிர்வரும் நூற்றாண்டு களிலும் தமிழ் மொழியை வளப்படுத்தும் என நம்புவதற்குரிய களங்கள் காணப்படுகின்றன. தமிழியல் ஆய்வில் தனித்த அறிஞர்களின் பெரும் ஆய்வுகள் ஒருபுறம் அமைய, ஆய்வறிஞர்கள், மாணவர்கள் அடங்கிய ஒருமித்த மாநாடுகளும் கருத்தரங்குகளும் நாளுக்கு நாள் பெருகி வருவதை நாம் அறிவோம். இவ்வகையில் கடந்த முப்பது ஆண்டுகளுக்கும் முன்பாகத் தோன்றிய அனைத்திந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் கருத்தரங்குகளும் மாநாடுகளும் சிறந்த வழிகாட்டிகளாக அமைந்தன எனலாம். அக்கருத்தரங்குகளில் படிக்கப் பெற்ற ஆய்வு செய்யப் பெற்ற கடடுரைகள் முன்னதாகவே அச்சிடப்பெற்று ஆய்வுக்கோவைகளாக வெளிவந்தன. அவை பலரை எழுதத் தூண்டின, பலரைத் திறனாய்வுக்குள் நுழைத்தன. பலரை ஒப்பீட்டிலும் மீள்பார்வையிலும் புகுத்தின. அவை சில எழுத்தாளர் களையும் திறனாய்வாளர்களையும் உருவாக்கின. மொத்தத்தில் அவை தமிழை வளப்படுத்தியதுடன் தமிழ் ஆராய்ச்சியாளர்களை மெருகூட்டி மதிக்கச் செய்தன என்றால் அது மிகையாகாது.

பல்கலைக்கழக, கல்லூரிப் பேராசிரியர்களும் இளம் ஆய்வாள மாணவர்களும் இணைந்து தத்தம் கருத்துகளை வழங்கத் தக்கவாறு களம் அமைத்து அக்கருத்துகளை அச்சிலிட்டு இனி வருகின்ற ஆய்வு களுக்கு இவற்றை அடித்தளமாக அமைப்பது என்பது இத்தகைய

ஆய்வுமாலைத் தொகுப்புகளின் சாதனையாகக் கருதலாம். தண்டபாணி சுவாமிகள் ஆய்வுமாலைத் தொகுதிகள், குமரகுருபரர் ஆய்வுமாலைத் தொகுதிகள், பெரியபுராண ஆய்வுமாலைத் தொகுதிகள், மீனாட்சி சுந்தரம் பிள்ளை ஆய்வு மாலைத் தொகுதிகள், சிவப்பிரகாசர் ஆய்வுமாலை போன்ற ஆய்வுமாலைத் தொகுதிகள் இதனை நிறுவுதல் காணலாம்.

தனி ஒரு நூலுக்காக, தனி ஒரு புலவருக்காக நிகழ்த்தப்பெறும் இத்தகைய ஆய்வுக் கருத்தரங்குகளில் நூற்றுக்கணக்கான ஆய்வாளர்கள் தம் எண்ணங்களை வெளியிடுவது, அதற்காக நூல்களை, புலவர்களை மீண்டும் கூர்ந்து பயில்வது என்பன இத்துறையின் மாட்சியினைக் காட்டுவதாக அமைகின்றது. எக்காலத்துக்கும் பொருந்தும் இலக்கியச் செல்வங்களாக நம் சமய இலக்கியங்கள் திகழ்வதை இவ்வகைக் கருத்தரங்குகளும் ஆய்வுமாலைகளும் உறுதி செய்கின்றன. தமிழின், தமிழரின் அருஞ்செல்வமாகிய பக்தி இலக்கியங்கள் சமுதாய உணர்வுகளோடு எழுந்தவை என்பதை விளக்குவனவாக இவ் ஆய்வுமாலைத் தொகுதிகள் காணப்படுகின்றன. இத்திருஞானசம்பந்தர் ஆய்வுமாலைத் தொகுதிகளும் இக்கூற்றை வலியுறுத்துவதாகவே அமைந்திருக்கின்றன என்பதை மகிழ்வோடு தெரிவிக்கக் கடமைப் பட்டுள்ளோம்.

## பதிப்பு முறை

திருஞானசம்பந்தர் இயற்றிய தேவாரப் பாசுரங்கள் தொடர்பான இவ்ஆய்வு மாநாட்டில் திருஞானசம்பந்தர் வாழ்க்கை வரலாறு, அவர் பதிகங்கள் சுட்டும் அடியார் வரலாறு, திருக்கோயில் வழிபாடு, பக்திநெறி, சைவசமயச் சிறப்பு, தலயாத்திரை, வினைக்கொள்கைகள், சமூக உணர்வு, தொண்டு நெறி, பாரதப் பண்பாடு எனப்பல நிலைகளிலான செய்திகள் பேசப்படுகின்றன. இம்மாநாடு தொடர்பாக ஆயிரம் தமிழ் ஆர்வலர்களை, ஆய்வறிஞர்களை, ஆய்வு மாணவர்களை முதல் சுற்றறிக்கைவழி தொடர்பு கொண்டோம். பலர் குறுகிய காலமாக அமைந்து விட்டதாலும் அண்மையில் சிவப்பிரகாசர் மாநாட்டில் கலந்து கொண்டதாலும் காலம் போதாது என முறையிட்டனர். என்றாலும் 200 பேராளர்கள் 100 பார்வையாளர்கள் தங்களைப் பதிவு செய்ததுடன் ஆய்வுரைகளையும் அனுப்பி வைத்தனர். பலர், ஆண்டுதோறும் புனித கங்கையில் நீராடவும் காசி விசுவநாதரைத் தரிசிக்கவும், தமிழ்முனி குமரகுருபரர் உலவிய மடத்தில் தங்கவும் துணை செய்யும் இம்மாநாடுகளைப் பாராட்டி வாழ்த்தியுள்ளனர்.

திருஞானசம்பந்தரின் தமிழ் நலமும் பக்தி வளமும் இறை உணர்வும் கொண்ட திருப்பதிகங்களை ஆழ்ந்து பயின்று நுணுகிய ஆய்வுரைகளைச் சிலர் அனுப்பினர். சிலர் காலம் போதாமையால் மேம்போக்கான வகையில் வரலாற்றடிப்படையில் கட்டுரைகளை அனுப்பினர். எனவே இவ்ஆய்வு மாலைத் தொகுதிகள் முற்றிலுமாக நிறைவுதரும் சூழலில் காணப்படா என்பதை இங்கே வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம். சுற்றறிக்கையில் இடம்பெற்ற சில தலைப்புகள் தொடர்பான கட்டுரைகள் ஒன்றிரண்டு கூட வரவில்லை. திருஞானசம்பந்தரின் வடமொழிப் புலமை, பிற புலவர்கள் பார்வையில் சம்பந்தர், திருஞானசம்பந்தர் பதிகங்களில் பாட வேறுபாடுகள், சுவடி வேறுபாடுகள், மொழிபெயர்ப்புகள், பதிப்புகள், அமைப்புகள் போன்ற தலைப்புகளில் கட்டுரைகள் வராதது வருத்தத்துக்குரியதன்றோ! என்றாலும் இவ்அடித்தள ஆய்வுமாலை அவற்றை எதிர் காலங்களில் கொண்டு வரும் என எண்ணுவோமாக.

திருஞானசம்பந்தர் தொடர்பான அடிப்படைச் செய்திகளும், பதிகங்கள் உணர்த்தும் செய்திகளும் பெரிதும் அலசப் பெற்று நிறைவான செய்திகளை வழங்குவனவாக இத்தொகுதிகள் காணப்படுகின்றன. வழக்கமாக எழுதும் ஆய்வாளர்களுடன் புதிய ஆய்வு மாணவர் பலரும் இத்தொகுதியைத் தம் கட்டுரைகளால் நிறைவு செய்திருக் கின்றனர். இதை ஒரு வெற்றியாகக் கருதலாம். முந்நூறு பேர்களுக்கும் மேலானோர் திருஞானசம்பந்தரை இந்த மாநாட்டை ஒட்டிப் பயின்றிருக் கிறார்கள் என்பது ஒரு மகிழ்ச்சியான வெற்றியாகக் கருதுகிறோம்.

பெரும்பாலான கட்டுரைகள் 8 பக்கம் எனக் குறிப்பிட்ட அளவிலேயே வந்தன. சிலர் இவ்அறிவிப்பை மீறி 20 பக்கம் 30 பக்கம் எனவும் அனுப்பியிருந்தனர். சிலர் ஒரு பத்தியையே தலைப்பாக 3 வரி அளவில்கூட அனுப்பினர். சிலர் ஒரே தலைப்பில் எழுதி கூறியது கூறலாகவே அமைத்திருந்தனர். சிலர் மரபையும் நெறியையும் நூலின் காலச் சூழலையும் புரிந்துகொள்ளத் தவறியிருந்தனர். சிலர் திருஞான சம்பந்தர் வரலாற்றை இக்காலகட்டத்துடன் இணைத்துக் குழம்பி யிருந்தனர். இப்படிச் சிற்சில குறைகள் இருந்த போதிலும் ஓரளவுக்கு அவை சரி செய்யப்பெற்று - கூடுமானவரை தலைப்புகளை ஒரு வரிக்குள் அடங்குமாறு நெறிப்படுத்தித் தரப்படுத்தி அச்சிட்டிருக்கிறோம். முற்றிலும் மரபை மீறிய கட்டுரைகளைத் திருப்பி அனுப்பி விட்டோம். காலந்தோறும் சொற்பொருள் மாற்றமடைந்திருப்பதைக் கூட சிலர் உணரத் தவறிவிட்டனர். சங்க இலக்கியத்துக் காணப்படும் காமம் என்ற சொல்லின் பொருள் இன்றும் அப்பொருளில் வழங்குகிறதா? நாற்றம் என்ற சொல் அன்று நன் மணம் எனும் பொருளில் வந்தது.

இன்று முற்றிலும் மாறிவிட்டது. இவ்வாறே கற்பு என்னும் சொல் அன்று கல்வி, கல்விச் செருக்கு, கொள்கை எனும் பொருள்களில் ஆளப்பட்டது. இன்று அதன் பொருள் உடலளவில் Chastity என்னும் பொருளாக மாறிவிட்டது. இத்தகு மாற்றங்களைக் கூட உணராத சிலர், ஞானசம்பந்தர் வாழ்க்கை வரலாற்றைப் பிறழ உணர்ந்திருக்கிறார்கள். அத்தகு ஆய்வாளர்களின் கட்டுரைகள் மாற்றப்பட்டன, தள்ளப்பெற்றன, கூறியது கூறலாக வருவதைக் கூடுமானவரை களைந்திருக்கிறோம். சிலவற்றில் வரலாறுகள் தவிர்க்க முடியாமல் இடம் பெற்று விட்டன. சில கட்டுரைகள் பக்கங்களால் மிக்கிருந்தாலும் செறிவான செய்திகளால் அவை சுருக்கப்படவில்லை.

கட்டுரைகளில் நாங்கள் பெருமாற்றம் எதையும் செய்யவில்லை. தொடர்ப்பிழைகள், ஒற்றுப்பிழைகள், மரபு மற்றும் சாத்திரப் பிழைகள் போன்றன பெரும்பாலும் களையப் பெற்றன. கூடுமானவரை கட்டுரைகளை இரண்டு தொகுதிகளிலும் ஆசிரியர் அகர வரிசையில் தனித்தனியாக அமைத்து இறுதியில் கட்டுரையாசிரியர் முகவரியையும் அகர வரிசையிலேயே அமைத்திருக்கிறோம். இவை பொருள் வாரியாகவோ, அமர்வு வாரியாகவோ பிரிக்க முடியாத சூழலில் அமைந்துள்ளன. இவ்வாறு பதிப்புக்கு வேண்டிய சில தவிர்க்க முடியாத மாற்றங்களைத்தான் நாங்கள் செய்திருக்கிறோம். அடிப்படை கருத்துகளில் நாங்கள் தலையிடவில்லை. எனவே கட்டுரைகளில் காணப்பெறும் செய்திகளின் நிறைகுறைகளுக்குக் கட்டுரையாசிரியர்களே பொறுப்பாவர் என்பதை ஈண்டுக் குறிப்பிட விரும்புகிறோம்.

கட்டுரையாசிரியர்களின் கருத்துகள் மேலாய்வுக்குரியன. இவை ஆய்வரங்கில் படிக்கப்பெற்று தடை விடைகளுடன் விவாதிக்கப் பெறவேண்டியன. தடைவிடைகளுக்குப் பின்பே இவை முழுமைபெறும் என்றாலும் திறனாய்வார்க்கு இவை ஒரு அடிக்கல்லாகப் பயன்தரும் எனும் நோக்கில் முன்கூட்டியே அச்சிட வேண்டிய சூழல். பலரும் படிக்க வேண்டும். அதன்வழி ஆய்வுகள் பெருக வேண்டும். பிற ஆய்வுகளுக்கு இவை துணை புரியவேண்டும் என்னும் நோக்கிலேயே இவை பதிவு செய்யப்பட்டு வெளியிடப் பெற்றன.

இக்கட்டுரைகள் பாரதப் பண்பாட்டை, பக்தி நெறியுடன், தொண்டு மனப்பான்மையுடன், தலயாத்திரை நெகிழ்வுடன் விளக்கியிருக்கின்றன என்றால் அது மிகையாகாது. இம்மாலைகளின் சாரம் மாநாட்டின் குறிக்கோளை நிறைவு செய்ததுடன், திருஞானசம்பந்தரின் தமிழ் தமிழை வளப்படுத்தியது, தமிழரை உயர்த்தியது என்பதில் தலைநிற்கின்றது என்றால் அது மிகையாகாது எனலாம்.

## சிவம் பெருக்கித் தமிழ் வளர்க்கும் காசித்திருமடம்

காசிமாநகரின் கங்கைக் கரையில் ஆதிகுமரகுருபர சுவாமிகள் நிறுவிய தமிழ்மடம் குமாரசாமித் திருமடமாகும். இம்மடத்தின் ஞானபரம்பரையில் தோன்றியதே திருப்பனந்தாள் காசித்திருமடம். இம்மடத்திற்கு 'இமசேதுபரியந்தம்' என்றாற்போல தென்குமரி முதல் இமாலயத்தின் திருக்கேதாரம் வரையான தொடர்புகள் உண்டு. நேபாள நாட்டுடனான தொடர்பும் ஒரு காலத்தில் இருந்ததாகக் கூறுவர். ஆதிகுமரகுருபர சுவாமிகள் தென்னகத்தினின்று வடநாடு சென்று அதாவது காவிரிக்கரையினின்று கங்கைக்கரை வரை சென்று தம் கல்வி கேள்விகளால், தவ வலிமையால் அன்றைய மாற்றுச் சமய அரசையும் போற்றச் செய்தவராவார். அவர் இந்துஸ்தானி மொழியைக் கற்று சைவ சித்தாந்தத்தை வட இந்தியாவில் பரப்பியதுடன் கங்கைக் கரையிலும் தமிழ்மணக்கச் செய்தார்.

ஆதிமுதல்வரின் இத்தமிழ்க் காதலையும் சிவப்பற்றையும் மதித்துப் போற்றும் நம் காசித்திருமடம் இன்றும் இவ்விரு பணிகளுக்காக ஏராளமான அறக்கட்டளைகளை நிறுவிச் செயற்படுத்தி வருகிறது. தமிழ்க் கல்விக்காகத் தமிழ்க் கல்லூரிகளை நடத்தி வருவதுடன் பல்வேறு பல்கலைக்கழகங்களில் தமிழ் பயில்வார்க்கு ஊக்கத் தொகை வழங்கியும் நூல் வெளியீடுகளுக்குத் துணை செய்தும் அறக்கட்டளைப் பொழிவுகள், தொடர் சொற்பொழிவுகள் இன்னிசை நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்தும் தமிழ்க் கல்வியை ஊக்கப்படுத்தியும் வருகிறது. இத் திருமடத்தின் அதிபர்களும் பிறரும் சிறந்த ஓதுவா மூர்த்திகளாகவும், சிறந்த சொற்பொழிவாளர்களாகவும் விளங்கிச் சைவத்தையும் தமிழையும் ஒருசேர வளர்த்து வருகின்றனர்.

## காசித்திருமடத்தின் திருமுறைப் பணிகள்

காசித்திருமடம் மூன்று நூற்றாண்டுக்கும் மேற்பட்ட பழமை யுடையது. சைவமும் தமிழும் புரந்து போற்றி வருவது. தமிழகத்தில் மட்டுமேயன்றிப் பிற மாநிலங்களிலும், அயல் நாட்டிலும் கூடச் சைவத்திருமுறைகள் பரவ வேண்டும் எனும் உயர்ந்த குறிக்கோளுடன் குறிப்பிடத்தக்க பணிகளைச் செய்து வருகிறது.

சைவத்தின் வேத நூல்கள் ஆகவும், 'எழுதுமறை' என்று சமயச் சான்றோரால் உரைக்கப்படுவதாகவும் உள்ள திருமுறை நூல்களையும், அவற்றைப் பாடிய அருளாளர்களையும், ஏற்றுப் போற்றிப் புரந்திட இத்திருமடம் எடுத்துள்ள முயற்சிகளும், நிலையான செயல்பாடு களும் பற்றி முழுதும் அறிந்தால் வியப்பு மட்டுமன்று; மலைப்பும் உண்டாகும். அவற்றை முற்றிலுமாக அறிந்தபின், இவ்வாறு

அருமைமிக்க வரலாற்றுப் புகழ்பெற்ற பணிகளைப் பாராட்டாமல் இருக்க முடியாது.

திருமுறைகளைப் பாராயண நூல்களாக ஒரு சிலர் மட்டுமே அறிந்திருந்த நிலை மாறி, பல்லாயிரக்கணக்கானோர் வாழ்வில் அவை முதன்மை பெற்ற தெய்வீக அம்சமாக இடம்பெறச் செய்ததில் இத்திருமடத்தின் பணி பெரியது, உன்னதமானது.

திருமுறைகளை உலகளாவிய நிலையில் பரவச்செய்து, நிலைத்த இடத்தைச் சமய உலகில் பெறும் வகையில் அவற்றின் மேன்மையை உணரச்செய்ய இம்மடம் எடுத்துள்ள ஏற்றமிகு முயற்சிகளை வகைப் படுத்திச் சொல்லல் தக்கதாகும்.

## 1. திருமுறைச் சொற்பொழிவு

பன்னிரு திருமுறைகளில் உள்ளே அமைந்துள்ள பற்பல அற்புதங்களை அனைவரும் அறியும் வகையில் வல்லார் வாயிலாகச் சொற்பொழிவு ஆற்ற நிலையான அறக்கட்டளைகள் இம்மடத்தால் நிறுவப் பெற்றுள்ளன.

1. சிதம்பரத்தில் பெரியபுராணச் சொற்பொழிவு
2. மதுரையில் பெரியபுராணச் சொற்பொழிவு
3. சிதம்பரத்தில் திருவாசகச் சொற்பொழிவு

இவற்றுக்கான நிலை முதலீடு சுமார் ரூ. 25,000/-

## 2. திருமுறை நூல் பதிப்பு நிதி

திருந்திய வடிவில், எளிய விலையில், திருமுறை நூல்கள் சமய அன்பர்களுக்கு ஒரே இடத்தில் கிடைக்க வேண்டும் எனும் உயர் நோக்குடன் பன்னிரு திருமுறை நூல்களை வெளியிட்டு வழங்கி வருகிறது இம்மடம்.

பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதி எனும் பெயரில் ரூ. 50,000/- முதலீட்டில் (1950-ஆம் ஆண்டு) அறக்கட்டளை உண்டாக்கப் பெற்றுப் பரிபாலிக்கப்பெறுகிறது. இவ் அறக்கட்டளையின்வழி தொடர்ச்சி யாகத் திருமுறை நூல்கள் பல பதிப்புகளைக் கண்டு வெளிவந்து கொண்டிருக்கின்றன.

## 3. திருமுறைவாணர் நியமனம்

தெய்வீகம் பொருந்திய தமிழகத்தில் உள்ள, தேவாரப் பாடல் பெற்ற திருத்தலங்களில் திருமுறைகள் விண்ணப்பம் செய்யப் பெற

வேண்டும் எனும் விருப்புடன் தகுதி வாய்ந்த, பயிற்சி பெற்ற திருமுறைவாணர்களை நியமித்து, மாதந்தோறும் அவர்களுக்கு ஊதியம் வழங்க அறக்கட்டளைகள் ஏற்படுத்தப் பெற்றுள்ளன.

திருநாரையூர், சிதம்பரம், மதுரை, பழைய பாபநாசம், திருக் குற்றாலம், ஆச்ராமம், திருவண்ணாமலை, வாரணாசி, இராமேஸ்வரம், திருக்காளத்தி, கும்பகோணம், திருவெண்ணெய்நல்லூர், புதுடெல்லி (ஸ்ரீ விநாயக சுப்பிரமணியசுவாமி மந்திர்) வடதிருவாலங்காடு, திருச்சாய்க்காடு, திருப்பாதிரிப் புலியூர், திருமாகறல் ஆகிய தலங்களில் தேவாரம் ஓதத் திருமுறைவாணர்கள் நியமனம் செய்யப்பெற்று, ஊதியம் வழங்கப்பெறுகிறது. இதற்கென தனித்தனியே 17 அறக் கட்டளைகளுள்ளன. இவற்றுக்கான பொருட்கொடை சுமார் 12 இலட்சம் (1972-க்கு முந்தைய மதிப்பில்) நிலைத்த வைப்பில் உள்ளது.

## 4. திருமுறை இன்னிசை நிகழ்வுகள்

ஆண்டுதோறும், சில குறிப்பிட்ட சிறப்பு விழாக்களிலும், நாட்களிலும் திருமுறைவாணர்கள் பலரை அழைத்துப் பண்ணிசைப் பதிகம் பாடச் செய்ய நிலைத்த ஏற்பாடு செய்யப் பெற்றுள்ளது. இதற்கென 9 அறக்கட்டளைகள் உள்ளன. இதற்கென சுமார் நான்கு இலட்சம் ரூபாய் நிலைத்த வைப்பாகவும், நிலவருவாயிலிருந்து பெறும் படியும் ஒதுக்கப்பெற்றுள்ளது.

1. திருநாரையூரில் நம்பியாண்டார் நம்பி நினைவு நாள் (வைகாசி புனர்பூசம்)
2. மதுரையில் குமரகுருபர சுவாமிகள் நினைவு நாள் (வைகாசி அமரபட்சம் திருதியை)
3. சுசீந்திரத்தில, மார்கழித் திருவிழா, சித்திரைத் திருவிழா நாட்கள்.
4. திருச்சியில் குமரகுருபர சுவாமிகள் நினைவாக ஆவணி மூல நாள்.
5. குடந்தையில் மகாமக விழா நாள்.
6. தில்லையில் ஆடிச்சுவாதி நாள்.
7. திருக்காளத்தியில் மகா சிவராத்திரி நாள்.
8. திருக்கொள்ளம்பூதூரில் ஐப்பசி அமாவாசைக்கு மறுநாள்.
9. தஞ்சையில் ஐப்பசி சதய நாள்

## 5. சிவசிவ ஒலிமண்டபம்

சிதம்பரத்தில், ஸ்ரீ நடராஜப் பெருமான் திருக்கோயிலில் நாடோறும் திருமுறை விண்ணப்பம் செய்யப்பெறச் 'சிவ சிவ

ஒலிமண்டபம்' ஏற்படுத்த உரிய தொகையுடன், இராஜராஜ அபய குலசேகர சோழன் நினைவு தேவார வைப்பு நிதி ஏற்படுத்தப் பட்டுள்ளது.

## 6. பள்ளி, கல்லூரி மாணவர்க்குப் பரிசு

அறிவு பெறக் கல்வி கற்கும் பள்ளி, கல்லூரி மாணவர்கள் சமய அறிவும், ஒழுக்கமும் பெற வேண்டும் எனும் கருத்துடன் பல்வேறுபட்ட ஊர்களிலுள்ள பள்ளி, கல்லூரி மாணவ, மாணவியர்க்குப் போட்டிகள் நடத்திப் பரிசு வழங்க, 11 அறக்கட்டளைகள் உண்டு. நிதி ஒதுக்கீடு: சுமார்; எழுபதாயிரம்.

1. திருவாரூர், திருவையாறு, ஆடுதுறை உயர்நிலைப்பள்ளி.
2. மாயூரம் உயர்நிலைப்பள்ளிகள்
3. ஸ்ரீவைகுண்டம் உயர்நிலைப்பள்ளி
4. மதுரை உயர்நிலைப்பள்ளி
5. ஸ்ரீவில்லிபுத்தூர் உயர்நிலைப்பள்ளி மாணவியர்
6. காஞ்சியில் மூவர் தேவாரப் பரிசு
7. திருச்செந்தூர் உயர்நிலைப்பள்ளி மாணவர்
8. தஞ்சாவூர் உயர்நிலைப்பள்ளி மாணவர்
9. மதுரை உயர்நிலைப்பள்ளி மாணவர்
10. சிதம்பரம் உயர்நிலைப்பள்ளி மாணவர்
11. திருவண்ணாமலை உயர்நிலைப்பள்ளி மாணவர்.

தமிழகத்தில் மட்டுமன்றி, கர்நாடக மாநிலத்தில் உள்ள மைசூர்ப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த கல்லூரி மாணவர்களுக்குப் பரிசு வழங்க, His Highness the Maharaja of Mysore Thevaram Prize எனும் அறக் கட்டளையை ஏற்படுத்தியுள்ளது. ஆக, 12 அறக்கட்டளைகளை ஏறத்தாழ 75,000/- பொருட்கொடையில் நிறுவிப் புரந்து வருகிறது.

## 7. தேவாரம் முதலிய பாடல்களைக் கல்வெட்டில் பொறித்தல்

திருக்கோயிலுக்குச் செல்வோர், இறையுணர்வுடன் வழிபடுவதோடு அருளாளர்தம் வாக்குகளையும் ஓதிப் பயன்பெற வேண்டும். அதற்கு நிலையான ஓரமைப்பு வேண்டும். அதற்கு அப்பதிகங்களைக் கல்வெட்டில் பொறித்து வைப்பதே சாலச் சிறந்தது எனக் கருதிப் பல தலத்துக் கோயில்களில் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன.

1. திருவண்ணாமலை பராசக்தி அம்மன் சன்னதியில் திருவெம்பாவைப் பாடல்கள் (சலவைக் கல்லில்).
2. சிதம்பரத்தில் திருப்பல்லாண்டு, சிவபுராணம், திருப்பள்ளியெழுச்சிப் பாடல்கள்.
3. மதுரை முதலான 35 திருப்பதிகளில் தேவாரப் பாசுரங்களைச் சலவைக்கல்லில் பொறித்தது.

மேற்குறித்த 3 பணிகளுக்கும் எழுபதினாயிரம் ரூபாய் நிதி ஒதுக்கப் பட்டது.

## 8. திருமுறை ஆசிரியர்கள் பெயரில் அன்னம்பாலிப்பு

**'அன்னம் பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலம்', 'அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல்'** எனும் அருளாளர் வாக்குகளை உளங்கொண்டும், திருமுறை ஆசிரியர்களின் நினைவாகவும் சில பதிகளில் அன்னம்பாலிப்புச் செய்ய 6 அறக்கட்டளை ஏற்படுத்தி அதற்கு நிதியாக சுமார் மூன்று இலட்சம் ஒதுக்கப்பெற்றது.

1. வாரணாசியில் ஸ்ரீ சுந்தரர் நினைவாக ஆடி மாதத்தில்.
2. திருவாதவூரில் ஆனி மக நாளில் ஸ்ரீ மாணிக்கவாசகர் நினைவு அன்னம்பாலிப்பு.
3. வாரணாசியில் ஐப்பசி மாதத்தில் திருமூலர் நினைவு அன்னம்பாலிப்பு.
4. திருக்கழுக்குன்றத்தில் ஆனி மகத்தன்று ஸ்ரீ மாணிக்கவாசகர் நினைவு அன்னம்பாலிப்பு.
5. வாரணாசியில் ஸ்ரீ திருஞானசம்பந்த தேசிகர் நினைவு அன்னம்பாலிப்பு.
6. கன்னியாகுமரி ஆசிரமத்தில் திருமுறை அன்னம்பாலிப்பு நிதி.

## 9. தண்ணீர்ப் பந்தல் அறம்

அறங்களுள் சிறந்தது தண்ணீர்ப் பந்தல் வைப்பது. அதனைச் சமய அருளாளர் தொடர்பில் வைத்துப் பெருமை செய்தது காசிமடம். 2 அறக்கட்டளைகள் சுமார் 7000 பொருட்செலவில் நிறுவப்பட்டன.

1. தத்துவாஞ்சேரியில் ஸ்ரீ திருநாவுக்கரசர் நினைவு தண்ணீர்ப் பந்தல்.
2. சுவாமிமலையில் அப்பர் தண்ணீர்ப் பந்தல் நிதி.

## 10. அருளாளரின் மடங்கள் புதுப்பித்தல்

திருப்பூந்துருத்தியில் உள்ள அப்பர் திருமடத்தைப் புதுப்பிக்க நிதிக்கொடை வழங்கப்பட்டது.

## 11. அப்பர் பெயரில் நூலகம்

அப்பரடிகள் பெயரில், திருப்பூந்துருத்தியில் நூலகம் ஏற்படுத்த நிதி வழங்கப்பட்டது.

## 12. காசி குமரகுருபரர் மாநாட்டு நினைவு அறக்கட்டளை

வாரணாசி குமாரசாமித் திருமடத்தில் 1999-ஆம் ஆண்டு குமரகுருபரர் ஆய்வு மாநாடு நடைபெற்றது. அப்போது செலவுகள் போக ரூ.50,000/- எஞ்சியிருந்தது. இத்தொகை காசித்திருமடம் மாநாட்டுக்காக வழங்கிய ரூ.60,000/- தொகையினால் எஞ்சியதாகும். இத்தொகை முழுவதையும் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் திருமுறை நிகழ்ச்சிகளுக்காக அறக்கட்டளையாக்கப் பெற்றது.

எனப் பலவகைகளிலும் திருமுறைகளுக்குச் சிறப்புச் செய்திருக்கிறது.

**(நன்றி : பனசை சுவாமிநாதன்)**

திருமுறைகளுடன் இவ்வளவு நெருங்கிய உறவைக் கொண்டாடும் காசித்திருமடம் திருஞானசம்பந்தர் மாநாட்டை நடத்துவது என்பது எல்லா வகையிலும் பொருத்தமுடையதே என்பதில் கருத்து வேறுபாடு இருக்க முடியாது.

## களம்பூர் கோவிந்தசாமி அடிகளார் அறக்கட்டளை

பெரியபுராணம் சுட்டும் குறிக்கோள் வாழ்க்கையில் தலைநின்றவர் களம்பூர் கோவிந்தசாமி அடிகளார். அவர் திருவண்ணாமலைக்கு அருகில் உள்ள களம்பூரில் தொண்ணூறு ஆண்டுகளுக்கு முன்பு தோன்றியவர். சிறுவயதிலேயே தந்தையாரை இழந்த அவர் தாயாரின் அரவணைப்பில் வளர்ந்து நாளும் சிவம்பெருக்கும் திருக்கோயில் வழிபாட்டு நெறியில் முன்னின்றார். தந்தையார் விட்டுச் சென்ற சிவப்பணிகளைத் திருப்பணிகளாகவே மேற்கொண்டு சிவாலய வழிபாட்டிலும் பொதுத் தொண்டிலும் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டார். நால்வர் மடம் அமைத்து கீற்றுக் கொட்டகை முதல் கான்கிரீட் கட்டடம் வரை படிப்படியாக உயர்த்தி சமயச் சொற்பொழிவுகளையும், குருபூசைகளையும் திருமுறை நிகழ்ச்சி களையும் முத்தமிழ் விழாவாகவே கொண்டாடிச் சைவம் வளர்த்தார். அவர்தம் அடியார் பூசைக்குச் சான்றாக அப்பூதியடிகளின் வரலாற்றைப் போன்ற நிகழ்ச்சியை முன்னர்க் குறித்திருந்தோம். எவ்வளவோ சொல்லிக் கொண்டிருக்கலாம்...

## நீலகண்ட சிகரத் துறவி

ஒன்றை மட்டும் ஈண்டுக் குறிப்பிடுவதில் நாங்கள் பெருமைப் படுகிறோம். அவரது அடியார் பூசையின் சிறப்பைப் பல

ஆண்டுகளுக்குப்பின் உணரும் வாய்ப்பைப் பெற்றவன் நான். 1983-ஆம் ஆண்டு நாங்கள் எங்கள் தாயாருடன் தமையனார் சிவானந்த அடிகளாருடன் திருக்கேதாரம் முதலான வட இந்திய யாத்திரை மேற்கொண்டோம். திருக்கேதாரம் வரை சென்ற நாங்கள் 'பத்ரிநாத்' செல்ல முடியாமல் திரும்பி விட்டோம். இது ஒரு குறையாகவே எனக்குத் தோன்றியது. எனவே தன்னந்தனியாக 1984-ஆம் ஆண்டு பத்ரிநாதம் சென்றேன். அங்கே சென்ற பிறகு நீலகண்ட சிகரத்தையும் பார்த்து விடவேண்டும் என்ற ஆவலில், அங்கேதான் இந்திர நீலப்பருப்பதம் என்னும் தேவாரத் தலம் உள்ளது. துணிந்து நடைப் பயணம் தொடங்கினேன். 15 கிலோ மீட்டர் தொலைவு பெரும்பகுதி பனிபடர்ந்த சில்லிட்ட பாறைகளூடே ஒற்றையடிக் காட்டுப்பாதை. அசட்டுத் துணிவில் தொடர்ந்தேன். பனிக்காற்றால் தலை வலி, தலைபாரம், தள்ளாட்டம் என 3 கிலோ மீட்டர் கூட கடக்க முடிய வில்லை. மயங்கி விழுந்துவிட்டேன். அந்த நேரத்தில் ஒரு துறவி வந்து தூக்கிப் பிடித்து என்னைப் பற்றியும் என் நோக்கம் பற்றியும் விசாரித்தார். அவர் கற்பாறைகளையே ஒன்றுடன் ஒன்றைத் தேய்த்துப் பொடியாக்கி நீறாக்கி என் நெற்றியிலும் தலையிலும் பூசினார். என் உணர்வு முழுமை பெற்றதும் அவரை உற்று நோக்கினேன், அவர் உடல் முழுவதும் திருநீறு பூசிய நிலை. ஆடை எதுவும் இல்லை தலைமுடி, தாடி நீண்டிருந்தது போலவே உடல் முழுவதும் 6 முதல் 7 அங்குல அளவுக்கு அடர்ந்த முடி. நான் ஒருவகை அச்சத்துடன், வியந்து நிமிர்ந்தபோது அவர் தமிழில் பேசினார். 'நீ எந்த ஊர்?' நான் தில்லியிலிருந்து வருகிறேன் என்றேன். உன் சொந்த ஊர்? தமிழ் நாட்டில் திருவண்ணாமலைப் பக்கம். அப்படி என்றால் களம்பூர் எது? போளூர் பக்கத்து களம்பூரா? என்றவர் என்னை அமரச் செய்தார். நான் களம்பூருக்கு 1954-ல் வந்திருக்கிறேன். அங்கே நாயனார் மடம் வைத்திருக்கும் கோவிந்தசாமி என்பவருடைய வீட்டில் நான்கு நாள் உணவு கொண்டிருக்கிறேன் என்றார். எனக்குத் தூக்கி வாரிப்போட்டது. அதிர்ந்து, பேச்சு வராமலேயே மலங்க மலங்க விழித்தேன். 'சாமி நான் அவருடைய பையன்தான்' என்றேன் 'அப்படியா... மிகுந்த சந்தோஷம்... நான் இன்று முதல் உண்ணா நோன்பிருந்து சமாதியடையத் திட்டமிட்டிருக்கிறேன். என்னிடம் இருப்பது இந்த உருத்திராட்க்க மணிமாலை ஒன்று மட்டுமே. இது இனி எனக்குத் 'தேவைப்படாது. நீங்கள் எடுத்துச் செல்லுங்கள்' என்று ஆசீர்வதித்ததுடன், 'நீங்கள் இந்திர நீல பருப்பதம் பார்க்க முடியாது. திரும்பிச் செல்வதே, நல்லது' என்று வழியனுப்பி வைத்தார். அந்தத் துறவியின் பெயர் சுந்தரமூர்த்தி சுவாமிகள். நான் அவரைச் சந்தித்தது சித்திரைத் திங்கள் சுவாதி நட்சத்திரத்தன்று...,

களம்பூர் திரும்பிய பின்பு தாயாரிடமும் தமையனாரிடமும் அவரைப் பற்றிக் கூறி உறுதி செய்து கொண்டேன். மறு வருடம் அவரது சமாதியைக் காண முயன்றேன்... முடியவில்லை... அது என் தவக் குறைவு. இந்த நிகழ்ச்சி எங்கள் தந்தையாரின் அடியார் பூசைக்கு மிகச் சிறந்த பலனாக எங்களுக்குப் படுகிறது.

**ஞானப்பால்**

எங்கள் நால்வர் திருமடத்தில் அப்போது நடக்கின்ற குருபூசைகளில் நாங்கள் பள்ளிக்கூடத்துக்கு 'லீவு' போட்டுவிட்டு முழுவதுமாகக் கலந்து கொள்வோம். மறுநாள் பள்ளிக்கூடம் சென்று அடி வாங்குவோம் - 'பள்ளிக்கூடத்துக்கு வராமல் சாமி தூக்கிக்கிட்டு ஊர் சுற்றுகிறாயா' என்று சொல்லிச் சொல்லி அடிப்பார். அதற்கு மறுநாள் எங்கள் தந்தையார் சென்று அந்த ஆசிரியரிடம் சண்டை போட்டு விட்டு வருவார். 'குருபூசையும் படிப்புதான்யா' வெறும் 'ஏட்டுக் கல்வி மட்டுமே வாழ்க்கை இல்லைய்யா' என்று அறிவுறுத்திவிட்டு வருவார். குருபூசை 'லீவால்' நாங்கள் அதிகம் அடி வாங்கியது திருநாவுக்கரசு தேசிகர் என்பவரிடம் தாம் என்பது இங்கே குறிக்கத் தக்கது. அன்று காலையில் எழுந்து நீராடி, மரங்களையும் செடிகளையும் தேடித்தேடிச் சென்று மலர்களைப் பறித்து வந்து போட்டி போட்டுக் கொண்டு மாலை கட்டுவோம். அதனை மடத்திலுள்ள நால்வர் படத்துக்கு அணிவித்து மகிழ்வோம். திருமுறை பாராயண பஜ்னைகளில் கலந்து கொண்டு கிட்டத்தட்ட 'ஒப்புவித்தல்' போல பாடிப் பெருமிதம் கொள்வோம்... ஒப்புவிப்பதற்கே எங்களுக்குப் பாராட்டு கிடைக்கும். பின்னர் தேவார கோஷ்டிகளுடன் நால்வர் திருவுருவப்படம் வீதியுலா வரும். இதில் சாமியைத் தூக்கி வருவதற்கும் குடை பிடிப்பதற்கும் தான் எங்களுக்குள் போட்டி வரும். ஊரெல்லாம் சுற்றிவிட்டு கிட்டத்தட்ட சோர்ந்த நிலையில்தான் மடத்திற்குத் திரும்புவோம்... மடத்தில் மீண்டும் அர்ச்சனை, நாமவேள்வி, தீபாராதனை, எங்களுக்குப் பொறுமை போய்விடும். தீபாராதனைக்குப் பிறகு அன்னம்பாலிப்பு நடைபெறும். அதற்கு முன்பாகவே பிரசாதமாகக் கொடுக்கப் பெறும் சர்க்கரைப் பொங்கல், தளிகைதான் எங்களை வெகுவாகக் கவரும். என்றால்கூட இவை பகல் ஒருமணிக்குத்தான் நடைபெறும். ஆதலின் நேரம் ஆக ஆக நாங்கள் சோர்ந்து விடுவோம். ஆனால் திருஞான சம்பந்தர் குருபூசையில் மட்டும் நாங்கள் சோர்வதில்லை. காரணம் அந்தக் குருபூசையில் மட்டும் இடையில் ஞானப்பால் வழங்கும் நிகழ்ச்சி நடைபெறும். கொண்டை வைத்து அணிமணிகளால் அலங்கரித்து பூணூல் போட்டுக்கொண்டு பஞ்சக்கச்சம் கட்டி ஞானசம்பந்தராகவே வேடமிட்டு (அதற்கான பொருள்களை மிகுந்த ஆர்வமுடன் ஒரு

மாத காலமாகவே தேடித் தொகுத்து வருவோம்) வருவோம். வருபவர் களில் மிகக் குறைந்த வயதுடைய ஞானசம்பந்தர் (கிட்டத்தட்ட 3 வயது 2½ வயது) பொற்கிண்ணங்களில் ஞானப்பால் வழங்குவார். ஞானசம்பந்தர் வரலாற்றில் அவருக்குச் சிவபெருமானும் உமாதேவியாரும்தான் பால் கொடுத்தனர். ஆனால் எங்களூர் குருபூசையில் ஞானசம்பந்தரே பால் கொடுப்பார். அதற்கு எங்கள் தந்தையார் ஒரு காரணம் கூறுவார். 'ஞானசம்பந்தர் தமக்குக் கிடைத்த ஞானப்பாலை - ஞானத்தைப் பிறர்க்கும் கொடுத்து மகிழ்கிறார்' என்பார். அப்போது எங்களுக்கு அது புரியாது. ஆனால் இன்று அதன் பொருளை நினைந்து நினைந்து உருகுகின்றோம்.

ஞானப்பால் வைத்திருக்கும் பாத்திரத்துக்கு ஆடை அணிகலன் மாலை அலங்காரங்கள் செய்யப்பெற்று அர்ச்சனை தீபாராதனை அனைத்தும் நிறைவுடன் செய்யப்பெறும். பின்னர் தோடுடைய செவியன் பதிகம் முழுவதுமாகப் பாடப்பெற்று, முதலாவதாக ஞானக் குழந்தை ஒன்று பாலருந்தியபின் அது அனைவர்க்கும் பிரசாதமாக வழங்கப்பெறும். சர்க்கரைப் பொங்கல், சுண்டல் போன்றன வீட்டுக்கும் கொடுத்தனுப்புவார்கள். ஆனால் ஞானப்பால் மட்டும் அந்த வழிபாட்டில் கலந்துகொள்வோர்க்கு மட்டுமே வழங்கப்பெறும். ஆதலின் நாங்கள் 'லீவு' போட்டுவிட்டு கட்டாயமாகக் கலந்து கொள்வோம்.

அந்த ஞானப்பால் இன்று நினைத்தாலும் சுவைக்கும். சுண்டக் காய்ச்சிய பசும்பாலில் சீனக்கற்கண்டு, ஏலக்காய், பச்சைக்கற்பூரம் சேர்த்து அமுதம் போன்ற உணர்வுடன் தயாரிக்கப் பெற்ற அது அனைவர்க்கும் வழங்கப்படும். எங்களுக்கு அது இன்றைய 'பாசந்தி'யை 'ரசமலா'யை விட உயர்வாக இருக்கும். இவ்விரு நிகழ்ச்சிகளால் ஞானசம்பந்தர் குருபூசை எங்களுக்குள் சிறப்பிடம் பெற்றிருந்தது. ஞானப்பாலின் சுவை ஒரு புறமாக அதைக் குடித்தால் நன்றாகப் படிப்பு வரும் என்ற நம்பிக்கை எங்களுக்கு இருந்தது. இதனாலும் ஞானசம்பந்தர் குருபூசை எங்களிடம் செல்வாக்குப் பெற்றது.

பெரியவர்களிடம் தேவாரம் திருவாசகத்தை வளர்ப்பதைவிட குழந்தைகளிடம் வளர்ப்பதற்குத்தான் அவர் முதலிடம் கொடுப்பார். பாடல்களை மனப்பாடம் செய்து ஒப்புவிக்கும் குழந்தைகளுக்கு மிட்டாய், கடலை, காலணா, பத்துக்காசு எனப் பரிசளித்து ஊக்கப் படுத்துவார். அவர்களுக்கு வேண்டிய சிறு சிறு நூல்களைத் தேடிப் பிடித்து வாங்கி வந்து வழங்குவார். பண்முறையுடன் பாடும் குழந்தை களுக்கு ஆடை வழங்குவார். யார் வந்து கேட்டாலும் எப்போது கேட்டாலும் விபூதியையும் உருத்திராக்க மணியையும் அன்பளிப்பாகவே

வழங்கி மகிழ்வார். முறையாக ஈடுபடும் குழந்தைகளுக்கு வெள்ளி, தங்க மலர்களால் அழகு படுத்தப்பெற்ற உருத்திராக்க மணிகளை அணிவித்துப் பாராட்டுவார். எங்களூரில் எங்கள் வீட்டை 'கொட்டைகட்டி வீடு' என்றும் மடத்துக்காரர் வீடு என்றுதான் இன்றும் அழைப்பார்கள். இப்படி அவரது சிவத்தொண்டின் நெறியான வாழ்க்கை சொல்லச் சொல்ல விரிந்துகொண்டே போகும்.

அவரது திருமுறைத் தொண்டுகளை நீடுநினைந்து போற்றும் வண்ணம் அவர் பெயரில் அறக்கட்டளை நிறுவி திருமுறை விழாக்கள் திருக்கேதார கங்கை நாதர் வழிபாடு, பிரதோச வழிபாடு, அறக்கட்டளைச் சொற்பொழிவுகள், கருத்தரங்குகள், நூற்பரிசு, நூல் வெளியீடு, யாத்திரைத் துணை, நால்வர் படங்கள் பரிசு எனப்பல வகைகளில் தொண்டாற்றும் நிலையில் இவ்அறக்கட்டளையைச் செயற்படுத்தி வருகிறோம். அந்த வகையில் இவ்அறக்கட்டளை காசித் திருமடத்துடன் இணைந்து திருஞானசம்பந்தர் இலக்கிய ஆய்வு மாநாட்டை நடத்துவதில் பெரிதும் பொருத்தம் இருப்பதாகக் காண்கிறோம்.

## நன்றியுரை

திருப்பனந்தாள் காசித்திருமடம் தோன்றிய காலம் முதலாகத் தொடர்ந்து தமிழையும் சைவத்தையும் ஒருசேர வளர்ப்பதில் தலை நிற்பதாம். பல்வேறு இனமொழி மக்களை ஒன்றுபடுத்தும் மனித நேயப்பண்பை வளர்ப்பதில் முன்னிற்பதாம். இத்திருமடத்தின் இன்றைய அதிபர் சுவாமிகள் திருவளர்திரு கயிலைமாமுனிவர் காசிவாசி முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் கன்னியாகுமரி முதல் திருக்கேதாரம் வரையுள்ள திருமடங்களில் மேற்கண்ட பணிகளைச் செம்மையாக நடத்தியிருகின்ற பான்மையை இப்பாரத பூமி நன்கு அறியும். இத்திருமடத்தின் இவ்அடிப்படைக் கோட்பாடுகளுக்கு ஏற்ப இப்பெரிய மாநாடு காசிமாநகரின்கண் மூன்று நாள் அளவில் நடைபெறுகின்றது. இம்மாநாட்டின் திட்டங்களை வரவேற்று ஊக்கப் படுத்தியதுடன் மாநாட்டின் ஒவ்வொரு பணியிலும் ஆய்வுக் கட்டுரை களின் ஒவ்வொரு செய்தியிலும் ஈடுபட்டுப் பணிமுன்னேற்றங்களைத் தொடர்ந்து உசாவியறிந்து அருளாணைகள் வழங்கித் துணைபுரிந்த நம் அதிபர் சுவாமிகளே இம்மாநாட்டுக்கு மூல காரணமும் முதற் காரணமும் ஆவார்கள்.

அதிபர் சுவாமிகள் தாமே ஓர் ஆய்வாளராக விளங்கி இத்தொகுதியின் முதற் கட்டுரையை வழங்கி ஆய்வு மாநாடுகளில் கருத்தரங்குகளில் தமக்கிருக்கின்ற ஈடுபாட்டை வெளிப்படுத்தியுள்ளார்கள். தமக்கிருக்கின்ற பல்வேறு திருப்பணிகளுக்கிடையிலும், ஆய்வுக்கட்டுரைகள் தரமாக

வரவேண்டுமே, தவறான செய்திகளும் மரபை மீறிய உணர்வுகளும் வெளிப்பட்டு விடக்கூடாதே என்பதில் மிகவும் பொறுப்புணர்வுடன் கட்டுரைகளை வரவேற்றார்கள். தமிழ் மொழியிடத்தும் சிவனடியாரிடத்தும் திருமுறைகளின் மீதும் அவர் கொண்ட பக்திச் சிறப்பை எண்ணி எண்ணி வியந்து நன்றி பாராட்டு கின்றோம்.

இவ்வளவு பேரையும் அழைத்துச் சென்று நல்ல முறையில் மாநாட்டை நடத்தி விடவேண்டுமே என்று ஓராண்டு காலமாகவே ஏற்பாடுகளில் ஈடுபட்ட அவர்கள் தொடர்ந்து ஆர்வம் காட்டி எல்லா வகையிலும் பெருந்துணை புரிந்தார்கள். நம் எண்ணங்களை ஆய்வுகளை வெளிப்படுத்துவதற்குக் களம் அமைத்துத் துணைபுரியும் நம் காசித்திருமடத்தின் அதிபர் சுவாமிகளுக்கு ஆய்வாளர்கள் எல்லா வகையிலும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டவர்கள். இம்மாநாட்டின் பெருஞ் செலவுகளை ஏற்றுத் துணைபுரிந்ததுடன் பேராளர், பார்வையாளர் அனைவரும் தங்க இடமும் உண்ண அறுசுவை உண்டியும் வழங்கிப் பல்லாற்றானும் அருள்பாலிக்கும் நம் சுவாமிகளின் கருணை வெள்ளத்தை எவ்வளவு புகழ்ந்தாலும் தகும். அவர்தம் பொன்னார் திருவடிகளின் அருட்கனிவுக்கு வழிபாட்டுடன் நன்றி பாராட்டுவதை முதற் கடமையாகக் கருதி மகிழ்கிறோம்.

அதில் சுவாமிகளுக்குத் துணையாக விளங்கும் காசித் திருமடத்தின் அன்பர்கள் அனைவர்க்கும் குறிப்பாக, திரு. முத்தையா பிள்ளை, மேலாளர் திரு. மாணிக்கம், திரு. சீனிவாசன் போன்ற அனைவர்க்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இம்மாநாட்டினைக் காசித்திருமடத்துடன் இணைந்து தஞ்சாவூரி லிருக்கும் களம்பூர் கோவிந்தசாமி அடிகளார் அறக்கட்டளையினர் நடத்துகின்றனர். அவர்கள் கொண்ட முயற்சியும் திட்டங்களும் அதிபர் சுவாமிகள் அருட்பார்வையால் வெற்றி பெறுகின்றன. எனவே அறக்கட்டளையைச் சார்ந்த அனைவர்க்கும் பெரிதும் நன்றி பாராட்டி மிகழ்வதோடு அவர்கள் இத்தகு திட்டங்களைத் தொடர்ந்து மேற்கொள்ள வேண்டும் எனக் கேட்டுக் கொள்கிறோம்.

மாலைக்கு மலர்கள் தாம் முதற்பொருள். இவ்ஆய்வுமாலைத் தொகுதிகளுக்கு ஆய்வுக்கட்டுரைகளாகிய ஆய்வு மலர்கள்தாம் முதற் பொருளாக அமைந்தன. இத்தொகுதிகள் சிறப்பாக அமைவதற்கு ஆய்வுக் கட்டுரைகளும் அவற்றை எழுதிய பேராளர்களும், அவர்களுக்குத் துணைபுரிந்த பார்வையாளர்களும் பெருந்துணை புரிந்திருக்கின்றனர். அவர்களின் பேருழைப்பு திருஞானசம்பந்தரை ஆய்வு செய்வதற்குச் சிறந்த நுழைவுச் சீட்டாக அமைந்திருக்கிறது

என்றால் அது மிகையாகாது. எனவே, அவர்கள் அனைவர்க்கும் பாராட்டுதலோடு கூடிய நன்றியைத் தெரிவித்து மகிழ்கிறோம். அவர்களின் தொடர்ந்த ஆக்கமும் ஊக்கமும் மேலும் பல கருத்தரங்கு களுக்கு வழிசெய்து தமிழ் மொழியை மேலும் வளஞ்செய்வதாக அமையும் என உறுதியாக நம்பலாம்.

இவ்விரு தொகுதிகளையும் அழகுற அச்சிட்டதுடன் உரிய காலத்தில், குறுகிய காலத்தில் வழங்கித் துணை புரிந்த **சிதம்பரம் சபாநாயகம் அச்சகம்** பெரிதும் பாராட்டுக்குரியது. அதன் **உரிமையாளர் திரு இரா. கௌதமசங்கர்** அவர்களுக்கும் அவர்தம் துணைவியார்க்கும் அச்சக மேலாளர் திரு மு. பாஸ்கரன் அவர்களுக்கும் மற்றும் அச்சகப் பணியாளர்களுக்கும் மாநாட்டினர் சார்பில் பெரிதும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளோம்.

எல்லாவற்றுக்கும் மேலாகத் தோன்றாத் துணையாக இருந்து திருவருள்பாலித்து இப்பெருமாநாடும் ஆய்வுத் தொகுதிகளும் நிறைவுறத் துணைபுரிந்த திருவருளை நினைந்து நினைந்து வணங்கி வாழ்த்தி நன்றி பாராட்டி மகிழ்கின்றோம்.

**சீதவள வயற்புகலி திருஞான சம்பந்தர்**
**பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்.**

**- பதிப்பாசிரியர்**

# தமிழ்த்திரு ஞானசம்பந்தர்

அண்ணலார் வீற்றிருக்கும் கயிலைமால்வரை, மன்னு நதிகளிலெல்லாம் புனிதமாய கங்கை நதி, பொங்குஒண் குமரிக்கடல் எனப் புனிதப் பொருள்களால் சூழப்பெற்ற பூமி இப்பாரத பூமி. இப்புண்ணிய பூமியில் தோன்றிய மதங்களும், மலர்ந்த இயக்கங்களும் பலவாகும். அவற்றுள் வேதங்களை முன்னிறுத்திய வைதிகமும் திருக்கோயில் வழிபாட்டை முன்னிறுத்திய பக்தியியக்கமும் முதன்மை யாகச் சொல்லும் சிறப்புடையன. முன்னது வடக்கே தோன்றியது, வடமொழியை அடிப்படையாகக் கொண்டது. பின்னது தெற்கே மலர்ந்தது, தென்மொழியாம் தமிழ்மொழியில் வளர்ந்து, வேதவழக்கு யாகங்களைத் துணைக்கொண்டது. பக்தி இயக்கம், உருவம், உருவ வழிபாடு, அபிடேக ஆராதனை போன்றவற்றைத் துணைக் கொண்டது. இப்படி ஒற்றுமையும் வேற்றுமையும் கொண்ட இவ்விரு இயக்கங்களின் பாலமாகத் திகழ்ந்தவர் திருஞானசம்பந்தர் என்றாலும் புறச்சமயங்கள் வைதிகத்தை எதிர்த்து நின்ற காலத்தில் அவற்றின் கலாச்சாரத் தாக்கு நிகழ்த்திய அழிவுகளைக் கண்ணுற்ற திருஞானசம்பந்தர் வைதிகத் தினின்று மாறுபட்டாலும் அதனை இகழாது தம் பக்தி இயக்கத்தை வளர்ப்பதிலேயே தலைநின்றார். வைதிகம் அபிடேக ஆராதனையை ஆதரிக்கவில்லை. காயத்ரியை மட்டுமே அந்தியுள் மந்திரமாகக் கொண்டது. ஆனால் வைதிகத்தைச் சாடாத நிலையிலும் நெய்யும் பாலும் தயிரும் கொண்டு செய்யப்பெறும் வழிபாட்டை, வகை வகையான வடிவ வழிபாட்டை ஆதரிக்கின்ற நிலையிலும் ஞானசம்பந்தர் அந்தியுள் மந்திரம் காயத்ரி இல்லை. அது நமச்சிவாயம்தான் என்று அடித்துக் கூறுகிறார். எனவே பழைய மரபுகளின் அடிப்படையில் புதிய பார்வைகளைச் செலுத்தி, மானிட வாழ்க்கையைப் பொருள்ளதாகக் காட்டிய பெருமக்களுள் இவரும் தலைச்சிறந்தவராகக் கருதப்படுகிறார்.

**பக்தி இயக்கம்**

பாரதம் கண்ட இயக்கங்களில் முதன்மை பெறும் சிறப்புடையது பக்தி இயக்கமாகும். இது தென்பாரதத்தில் தமிழ் மொழியில் மலர்ந்தது என்பது நம் அனைவர்க்கும் பெருமை சேர்ப்பதாகும். இது புதுமையான தல்ல. ஏனெனில் நாரதரும் அனுமனும் கொண்ட பக்தியை வியக்காதவர் இலர். என்றாலும் மறுமலர்ச்சி கண்ட இயக்கமாக இது மலர்ந்தது. ஒவ்வொரு உயிரிலும் கலந்து நின்ற ஆன்மாவைக் காதலித்து அதைப் போற்றி மதித்த இயக்கமாகவே இது அமைந்தது. ஆன்மாவை மதித்ததால் ஆன்மா தங்கிய உடம்பை மதித்துப் போற்றினர். ஆன்மாவில், இந்த

உடலில் இறைவன் தங்குவான் என்ற நம்பிக்கையை ஊட்டி, உடலை இகழாது அதைக் கொண்டு செய்யும் பக்தியை வரவேற்றது. வாய்த்தது 'ஈதோர் பிறவி நந்தமக்கு மதித்திடுமின்' என்ற அடிப்படையிலும் உள்ளம் பெருங்கோயில், ஊனுடம்பு ஆலயம் என்ற நினைப்பிலும், உடம்பை முன்னம், இழுக்கென்றிருந்தேன், உடம்பினுக்குள்ளே உறுபொருள் கண்டேன், உடம்பை யானிருந்து ஓம்புகின்றேனே என்ற கருத்திலும் இவ்உடம்பைக் காதலிக்க வைத்தது இவ் இயக்கம். அத்துடன் ஆணும் பெண்ணும் இணைந்து வாழும் இயற்கை வாழ்க்கை முறையைக் காதலித்துப் போற்றியது. இது ஈனப்பிறவி, இவ்வுடம்பே பாவச்சுமை, வினையை அனுபவித்தே தீரவேண்டும் என்றெல்லாம் வாழ்க்கை வெறுப்பை ஊட்டிய பிற சமயங்களுக்கிடையில் வாழ்க்கை வாழ்வதற்கே எனப் பச்சைக் கொடியுடன் புறப்பட்ட காவியயியக்கமாக இப்பக்தியியக்கம் நடை பயின்றது.

பக்தி செய்வதற்கு ஆர்வாரங்கள் தேவையில்லை, சடங்கு சம்பிரதாயம் தேவையில்லை. இன மொழி குலம் கோத்திர உயர்வு தேவையில்லை. எல்லா மொழியினரும், எல்லா நாட்டினரும் எல்லாத் தொழிலினரும், எல்லா இனத்தவரும் வேறுபாடின்றி பக்தி செய்ய முடியும். தேடிக் கண்டு கொண்டேன். என் உள்ளே தேடிக் கண்டு கொண்டேன். உன் தரிசனம் காண்பதற்கு மனிதப் பிறவியும் வேண்டுவதே என்றெல்லாம் இவ்வுடம்பை மதித்துப் போற்றும் இயக்கமாக இது மலர்ந்து விரிந்தது. இவ்வுடம்பின்றி பக்தி செய்ய முடியாது. பக்தியின்றி முக்தியுமில்லை என்றவாறு இவ்வுலக வாழ்வைப் போற்றியது இவ் இயக்கம்.

நாம் நம்மை மதிப்பதுதான் சுயமரியாதை என்பது எத்தனை பேருக்குப் புரிந்து விட்டது. பக்தியியக்கம் இதனை வலுவாகப் பறைசாற்றுகிறது. நாம், நம் உடம்பு, நம் உள்ளம், நாம் வாழும் ஊர், நம்மிடமுள்ள நீர்நிலை அனைத்தும் புனிதமானவை. நாம் வாழ்கின்ற இந்த மண் இறைவனே சுமந்த சிறப்புடையது. நான்முகனும் திருமாலும் நாம் இங்கே வந்து பிறக்கவில்லையே என்று ஏங்கும் புகழுடையது. எங்கேயோ உள்ள புனித கங்கை உன் ஊரிலுள்ள நீர்நிலையைத்தான் தேடி வருகிறாள். கயிலையில் உள்ள இறைவன் உன் ஊர்க் கோயிலில்தான் விரும்பி உறைகின்றான் என்றெல்லாம் எடுத்துக் கூறி வாழ்க்கையில் ஒரு பிடிப்பை உண்டாக்கி தன் நம்பிக்கையை உண்டாக்கி, அதன்வழி பக்திப்பயிரை வளர்ப்பதில் இவ் இயக்கம் தலைநின்றது. இவ் இயக்கத்துக்கு ஊடுபொருளாகும் சிறப்பை மொழி பிடித்துக் கொண்டது. ஆதலின் மொழிவழி, மொழியின் இசைவழி இவ்வியக்கம் வளர்க்கப் பெற்றது.

ஆக, நீ வினை செய்தவன் வினையை அனுபவித்துதான் ஆக வேண்டும், நீ ஒரு பாவிதான் என இடித்து இடுப்பொடித்த சமயங்களிடையே.... நீ புனிதமானவன் உன் வாழ்க்கை புனிதமானது. நீ பக்தி செய்தால் மூவினையையும் போக்கிக் கொள்ள முடியும். இதோ பார், இறைவனே ஆணும் பெண்ணுமாகத்தான் இருக்கிறான் என நம்பிக்கையூட்டி மனித நேயத்தை வளர்ப்பதில் முன்னின்ற இயக்கமாக இப்பக்தி இருந்தது என்றால் அது மிகையாகாது. இந்த இயக்கத்தின் ஆணி வேர்களில் ஒருவராகத் திருஞானசம்பந்தர் காணப்படுகிறார். இனி அவர்தம் வாழ்வும் வாக்கும் குறித்துக் காண்போம்.

## பாரதப் பண்பாடு

இப்பாரதத் திருமண்ணில் தோன்றிய பாரத மக்களின் நாகரிகம், நூல்களாலும், கலை உணர்வுகளாலும் பழக்க வழக்கங்களாலும் இத்திருமண்ணின் பண்பாட்டை எடுத்துக் காட்டியுள்ளன. வேதங்கள், இராமாயணம், மகாபாரதம் போன்ற இதிகாசங்கள், உபநிடதங்கள், புராணங்கள், அரச வரலாறுகள், செவிவழிக் கதைகள் போன்ற பலவற்றின் வழியாக நம் பாரதப் பண்பாடு எது என்பதை நிலை நாட்டியுள்ளன. பாரதப் பண்பாடு உருவ வழிபாட்டை அடிப்படையாகக் கொண்டு மனிதநேயத்தை எழுப்பியதாகும். ஆம் நம்மைப் படைத்துக் காத்தளிக்கும் 'இறைவனைக் காதலித்தல், அவனிடத்து பக்தி செய்யும் அருளாளர்களைப் போற்றுதல், குரு வழிபாடு செய்தல், திருக்கோயில் வழிபாடு செய்தல், அவ்வழிபாட்டிற்காகத் தலயாத்திரை மேற்கொள்ளல், இனமொழி, வேற்றுமையைக் களைந்து வேற்றுமையில் ஒற்றுமை காண்டல், பிற உயிர்களிடத்தும் நேசம் காட்டல், தம்மினும் தம் மக்கள் அறிவுடையராய் இருப்பர் என நினைத்துப் போற்றுதல், செய்யும் தொழிலைக் கடமையாகவும் இறைவனாகவும் பாவித்தல், நீர் நிலைகளை மதித்துப் போற்றுதல், நிலம், நீர், காற்று, நெருப்பு, ஆகாயத்தை மதித்துப் போற்றுதல், கைத்திருத்தொண்டு செய்து மகிழ்தல் என்பவற்றுள் நம் பாரதப் பண்பாட்டை இனங்கண்டு விடமுடியும். இவை எல்லாவற்றையும் ஒருசேரப் பிரதிபலிப்பவர்போல் தோன்றியவர் தான் ஞானசம்பந்தர். அவர் வாழ்வும் வாக்கும் இதனை நிறுவும்.

## திருஞானசம்பந்தர்

சைவ சமயக்குரவர் நால்வருள் முதலாவதாக வைத்து எண்ணப் பெறும் திருஞானசம்பந்தர் பக்தி இயக்க முன்னோடிகளிலும் முதலாமவராகத் திகழும் சிறப்புடையவராவார். இவரது வரலாற்றைச் சிறப்பித்துப் பேசும் நூல்களில் தலைசிறந்ததாகக் கருதத்தக்கது பெரிய புராணம் என்னும் திருத்தொண்டர் புராணமே ஆகும். அப்புராணத்தில்

கூறியவாறு திருஞானசம்பந்தர் வரலாற்றை ஓரளவு சுருக்கமாகக் காணலாம்.

திருஞானசம்பந்தர் சோழவளநாட்டின் சீர்காழியில் (கி.பி.637-ல்) அந்தணர் மரபில் கௌணிய கோத்திரத்தில் தோன்றினார். இவர்தம் பெற்றோர் சிவபாத இருதயரும் பகவதி அம்மையாரும் ஆவர். சேக்கிழார் இவர்தம் பிறப்பைப் பலவாறு சிறப்பித்துப் பேசுகிறார். சைவத்துறை விளங்கவும், வேதநெறி தழைத்தோங்கவும், பூதபரம்பரை பொலியவும் இவரதுஅவதாரம் அமைந்ததாகக் கூறுவதுடன், இவர்தம் பாதமலர்களைச் சென்னிமிசை கொண்டுதான் திருத்தொண்டு பரவுகிறேன் எனச் சிறப்பிக்கின்றார். மேலும், புறச்சமயங்களை வேரறுக்கும் ஒரு மகன் வேண்டுமென, 'பரசமயம் நிராகரித்து நீறாக்கும், புனைமணிப்பூண் காதலனைப் பெறப் போற்றும் தவம் புரிந்தார் எனவும், அவர்கள் தவவலிமையால் அவ்வாறே சிறந்த மகனாக இவர் அவதரித்தார் என்கிறார். ஆதிரை நன்னாளில் தோன்றிய இவரது வரவு தொண்டர் மனம் களிசிறப்பவும், தூயதிருநீற்று நெறி எண்திசையும் தனி நடப்பவும், வண்தமிழ்செய் நற்றவம் நிரம்ப மாதவத்தோர் செயல்வாய்ப்பவும் அருமையாக அமைந்தது. அத்துடன், திசையனைத்தின் பெருமை யெலாம் தென்திசையே வென்றேறவும் மிசை உலகும் பிறவுலகும் மேதினியே தனிவெல்லவும் அசைவில் செழுந் தமிழ்வழக்கே அயல் வழக்கின் துறை வெல்லவும் இசைமுழுதும் மெய்யறிவு இடங்கொள்ளும் நிலை பெருகவும் இனிதாக அமைந்தது என்கிறார்.

**அவம்பெருக்கும் புல்லறிவின் அமண்முதலாம் பரசமயம்**
**பவம்பெருக்கும் புரைநெறிகள் பாழ்பட நல் ஊழிதொறும்**
**தவம்பெருக்குஞ் சண்பையிலே தாவில்சரா சரங்களெலாம்**
**சிவம்பெருக்கும் பிள்ளையார் திருஅவதாரம் செய்தார்.**

எனச் சிறப்பிக்கின்றார். அவர் பிறந்தபோது நல்ல சகுனங்கள் பல தோன்றியதாகவும் தேவர்கள் மலர்மாரி பொழிந்ததாகவும் பிறக்கும் போதே சிறப்புற்ற நிலையைச் சுட்டுகிறார் சேக்கிழார்.

இவருக்கு மூன்று வயதாகும் போது நீராடச் சென்ற தந்தையாருடன் குளக்கரைக்குச் சென்றார். தந்தையார் நீரில் மூழ்கி அகமருஷண மந்திரம் சொல்லும்போது தந்தையாரைக் காணாது, தோணிபுர விமானத்தை நோக்கி 'அம்மே அப்பா' என்று அழுது அரற்றினார். அப்போது தோணியப்பர் உமாதேவியாருடன் காட்சி தந்தருளியதுடன், உமா தேவியாரை, அழுகின்ற அக்குழந்தைக்குப் பாலளிக்குமாறு பணிக்க, உமாதேவியாரும் பொற்கிண்ணத்தில் திருமுலைப்பாலைக் கறந்து சிவஞானத்தையும் உடன் குழைத்து இவருக்கு ஊட்டியருளினார்.

அக்கணமே இவரிடம் ஞானமும் சிவமும் தவஉணர்வும், பிற ஞானங்களும் உண்டாகப் பெற்று சிவஞான சம்பந்தராயினார். நீராடிய தந்தையார் குழந்தையின் வாயில் பாலொழுகக் கண்டு அதட்டி, 'யாரிடம் நீ பாலருந்தினாய்' என வினவ, இஞ்ஞானசம்பந்தர் தமக்குப் பாலூட்டியவர், தோணியப்பரே எனும்படி 'தோடுடைய செவியன்' எனும் திருப்பதிகத்தைப் பாடினார். இந்த அற்புத நிகழ்ச்சி இவரது வரலாற்றில் பெரும் திருப்பு முனையாக அமைந்தது. இந்நிகழ்ச்சிக்குப் பிறகு ஞானசம்பந்தப் பெருமானாக வளர்ந்து தலங்கள்தோறும் சென்று திருக்கோயில் வழிபாட்டைத் தமிழ்வழி உணர்த்தி பாசுரங்கள் பதிகங்கள் வழி சைவத்தை வளர்ப்பாராகத் திகழ்ந்தார்.

இவர்தம் வரலாற்றில், திருக்கோலக்கா என்னும் தலத்தில் இறைவியால் பொற்றாளம் வழங்கப்பெற்ற நிகழ்ச்சியும், திருநனி பள்ளியில் பாலை நிலத்தை நன்செய் நிலமாக மாற்றிய சிறப்பு நிகழ்ச்சியும், திருநெல்வாயில் அரத்துறைக்கு அருகே மாறன் பாடியில் முத்துச்சிவிகை, முத்துக்குடை, முத்துச்சின்னம் பெற்றதும், பாச்சில் ஆச்சிராமத்தில் கொல்லிமழவன் மகளுக்கு இருந்த முயலகன் நோயைப் போக்கியதும், கொடிமாடச் செங்குன்றூரில் அடியார்களின் நளிர் சுரத்தைப் போக்கியதும், பட்டீச்சுரத்தில் முத்துப்பந்தல் பெற்ற நிகழ்ச்சியும், திருவாவடுதுறையில் தந்தையார் வேள்விக்காக ஆயிரம் பொன் பெற்றதும், திருமருகலில் அரவம் தீண்டிய மாப்பிள்ளையை உயிர்பெறச் செய்ததும், திருவீழிமிழலையில் படிக்காசு பெற்றுப் பஞ்சம் தீர்த்ததும், திருமறைக்காடு சென்று திருக்கதவம் திறப்பித்து மூடியதும், பாண்டி நாட்டில் மங்கையர்க்கரசியாரின் கணவரான நின்றசீர் நெடுமாறனின் வெப்புநோயை நீக்கியதும், திருக்கொள்ளம்பூதூரில் வெள்ளம் பெருகிய ஆற்றில் கோலின்றியும் ஓடம் போக்கிய நிகழ்ச்சியும், திருவோத்தூரின் ஆண்பனைகளைப் பெண்பனைகளாக்கிய நிகழ்ச்சியும், மயிலாப்பூரில் இறந்து எலும்புருவான பெண்ணை உயிர் பெறச் செய்த நிகழ்ச்சியும் எனப் பல அற்புத நிகழ்ச்சிகள் நடந்தன.

இவர் திருநாவுக்கரசரின் சமகாலத்தில் வாழ்ந்ததுடன் இருவரும் இணைந்து தலயாத்திரை மேற்கொண்டு சைவம் வளர்த்த சூழலையும் சிறப்பு நிகழ்ச்சியாகக் கூறலாம். சிறுத்தொண்டர், குங்கிலியக்கலயர், முருக நாயனார் போன்றோரைச் சந்திக்கும் வாய்ப்பைப் பெற்ற இவர் தம்முடன் தாம் செல்லும் இடங்களுக்கெல்லாம் திருநீலகண்ட யாழ்ப்பாணர் என்னும் பாணர் குலத்தாரையும் உடன் அழைத்துச் சென்று சாதி வேறுபாடு களைக் கடந்த நிலையை வெளிப்படுத்தினார்.

பல்வேறிடங்களில் சமணர் பௌத்தருடன் வாதிட்டுச் சைவத்தின் உயர்வை நிலைநாட்டினார். குறிப்பாக, மதுரையில் அனல்வாதம்,

புனல்வாதம் வழியாக அவர் செய்த புரட்சியும், அதற்குமுன் மடத்தில் ஏற்பட்ட தீயை, பாண்டிமன்னனிடம் அனுப்பி வைத்த நிகழ்ச்சியும் பெரிதும் பேசப்பெறும் சிறப்புடையன என்பர். இவர் இலங்கை முதல் கேதாரம், கைலாயம் வரையுள்ள பல தலங்களையும் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவர் பாடிய திருப்பதிகங்கள் 383 என்பர் பாடிய தலங்கள் 219 என்பர். இந்த எண்ணிக்கைச் செல்லரித்து அழிந்தவை போக எஞ்சி நின்ற ஏடுகளின்வழி அறியத் தக்கதாம்.

இவ்வளவு சீரும் சிறப்பும் நிகழ்த்திய ஞானசம்பந்தர் ஆச்சாள்புரம் என்னும் நல்லூர்ப்பெருமணத்தில் தம் திருமணம் முடிந்தவுடன் அனைவருடனும் சிவசோதியிற் கலந்து தம் அவதாரத்தை நிறைவு செய்தார். அந்நாள் (653) வைகாசி மூலத் திருநாள் என்பர்.

தமது மிகக்குறுகிய வயதில் திருஞானசம்பந்தர் சாதித்த மொழிச் சாதனையும் சமயச் சாதனையும் அளவிடற்கரிய பெருமையைக் கொண்டன என்றால் அது மிகையாகாது. அவரது வரலாற்றுச் செய்திகள் வழியாக அவரை இனங்காண்பதை விட அவரது பாசுரங்கள் வழியாக அவரை இனங்காண்பதும் அவரது கொள்கை, தொண்டு, அறிவுரை ஆகியவற்றைத் தேடுவதும் மெத்தப் பொருத்தமானதாகும். எனவே அவர் தம்மை அவர்தம் தேவாரப் பாடல்கள், திருக்கடைக்காப்புகள், திருப்பதியங்கள் வழி ஓரளவு தொடர்ந்து காண்போம்.

**தமிழ்ஞான சம்பந்தர்**

அடியார்களுள் மிகுதியும் தம்மைத் தமிழோடு இணைத்துக் கொண்டவர் திருஞானசம்பந்தராவார். சிவஞானசம்பந்தர், திருஞான சம்பந்தர் என அழைப்பதை விட அவரைத் தமிழ்ஞான சம்பந்தர் என அழைப்பதே முற்றிலும் பொருத்தமானதாகும். தமிழ் மொழியை பக்தி மொழியாக உயர்த்திய பெருமை அவரையே சாரும். பதிகங்கள் தோறும் தம்மைத் தமிழ்ஞான சம்பந்தன் என அடையாளப்படுத்திக் கொள்ளும் ஆர்வமே இதற்குச் சான்றாகும். தமிழ் மொழிக்கு அவர் கொடுத்த அடைமொழிகளை வேறு புலவர்கள் கொடுத்திருப்பார்களா என்பது ஐயமே. அறிஞர் பெருமக்களும், நூல்களும் அவரைத் 'தமிழாகரர்' எனச் சிறப்பித்தல் போற்றும் பாங்கே அவர்தம் தமிழ் உணர்வுக்குக் கட்டியம் கூறுவதாம். இதனை விரிக்கில், இதுவே தனி நூலாகும் பெருமை கொண்டதாகி விடும். சங்க இலக்கிய மரபுகளின் வழி புதிய புதிய சொற்களையும் பொருள்களையும் இணைத்து அவர் பாடிய பாக்களின் வகை தொகைகள் அவர் தம் தமிழறிவையும் தமிழ் வளத்தையும் என்றும் பறைசாற்றுவன என்றால் அது மிகையாகாது. அவர் வளர்த்தது மொழிப்பயிரா, பக்திப் பயிரா என்னும் பட்டிமண்டபம்

இன்றும் நாளையும் கூட நடந்து கொண்டுதான் இருக்கும். அந்த வகையில் தமிழையும் சைவத்தையும் இணைத்தே வளர்த்த பெருமைக்குரியவர் நம் ஞானசம்பந்தர்.

## யாப்பு வகைகளும் இசை வளமும்

தமிழரிடையே வளர்ந்து வாழ்ந்து வரும் யாப்பு வகைகள் பலவற்றைப் பக்திப்பனுவல்களில் பதிவுசெய்து வாழச் செய்த பெருமை சம்பந்தருக்குண்டு. அவ்வாறே தமிழ்ப் பண்களைத் தமிழிசையாகப் பதிவு செய்து மலரச் செய்த பெருமையும் அவருக்குண்டு. ஆசிரியப்பா, கலிப்பா, வெண்பா, வஞ்சிப்பா எனப் பெருக வழங்கிய தமிழை——பதிகம், நாலடி மேல்வைப்பு, யமகம், யாழ்மூரி, திருவிருக்குக்குறள், மாலை மாற்று, அந்தாதி, வினாவுரை, ஈரடி, திருமுக்கால், ஈரடி மேல்வைப்பு, திருவிராகம், திருத்தாளச்சதி, பல்பெயர்ப்பத்து, மொழிமாற்று, ஏகபாதம், எழுகூற்றிருக்கை, திருச்சக்கரமாற்று, திருக்கோமூத்திரி, வழிமொழித் திருவிராகம், கூடற் சதுக்கம், விருத்தம் இப்படி எத்தனை எத்தனை யாப்பு வகைகள் வடிவங்கள்....

இவ்வாறே தமிழ்ப்பண்களைக் கால நேரமறிந்து பதிகங்களில் இணைத்து வழங்கிய பெருமையும் அவர்க்குரித்தாகவே கருதவேண்டும், நட்டபாடை, தக்கராகம், பழந்தக்கராகம், தக்கேசி, குறிஞ்சி, வியாழக் குறிஞ்சி, மேகராகக் குறிஞ்சி, யாழ்மூரி, இந்தளம், சீகாமரம், காந்தாரம் பியந்தைக் காந்தாரம், நட்டராகம், செவ்வழி, காந்தார பஞ்சமம், கொல்லி, கொல்லிக் கௌவாணம், கௌசிகம், பஞ்சமம், சாதாரி, பழம்பஞ்சுரம், புறநீர்மை, அந்தாளக்குறிஞ்சி என 22 பண்கள் பெரிதும் பேசப்பட்டுள்ளன. இவை பகற் பண்கள், இராப்பண்கள், பொதுப்பண்கள் எனவும், தலயாத்திரைகளில் பதிவு செய்யப்பட்டுள்ளன. இவை தமிழரின் இசைச் செல்வத்தைப் பறைசாற்றும் கருவூலங்கள் என்றால் அது மிகையாகாது.

## திருக்கோயில் வழிபாடும் யாத்திரையும்

திருஞானசம்பந்தர் தாம் ஏற்றுக்கொண்ட பக்தி இயக்கத்தின் அடிப்படையாக விளங்கும் திருக்கோயில் வழிபாட்டைப் பெரிதும் போற்றுபவராகக் காணப்படுகிறார். அவரது தேவாரப் பாசுரங்களில் தொட்ட தொட்ட இடங்களில் எல்லாம் தனிமனித வழிபாடு, குடும்ப வழிபாடு, கூட்டு வழிபாடு, உற்சவ சிறப்புவழிபாடு எனப் பல நிலைகளில் இது காணப்படுகிறது. அவர் ஊர்தோறும் சென்று ஆங்காங்குள்ள இறைவனைப் போற்றி பாடிப் பரவிய நிலையைப் பிறரும் உணர வேண்டும். பின்பற்ற வேண்டும் என விரும்புகிறார். இவ்வகைக் கோயில் வழிபாடு பூவையும், நீரையும் அடிப்படையாகக் கொண்டது என்றும்

சிறப்பு வகையில், நெய், பால், தயிர், தேன் கொண்டு செய்யப்பெறும் அபிடேகத்தையும் தீபதூபங்களையும் அடிப்படையாகக் கொண்டதாகும்.

**தொண்டர் அஞ்சுகளிறும் அடக்கிச் சுரும்பார்மலர்**
**இண்டை கட்டி வழிபாடு செய்யும்இடம் என்பரால்**
(திருக்கேதாரம்)

**பூநாளும் தலைசுமப்பப் புகழ்நாமம் செவிகேட்ப**
**நாநாளும் நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே**
( திருச்சாய்க்காடு)

**பூவார் மலர்கொண்டு அடியார் தொழுவார் புகழ்வார்**
**வானோர்கள்**
(திருவண்ணாமலை)

**ஆடினாய்நறு நெய்யொடு பால்தயிர்** (திருச்சிற்றம்பலம்)

**'நீற்றினை நிறையப்பூசி நித்தலும் நியமம்செய்து**
**ஆற்றுநீர் பூரித்து ஆட்டும் அந்தணாளர்'** (4635)

என வருகின்ற பல இடங்களில் பூவும், நீரும், புகழ்மாலையும் கொண்டு வழிபடுவதை இவர் வலியுறுத்துவதைக் காணலாம்.

இந்த வழிபாடு உள்வழிபாடாக, தனிவழிபாடாகவும் நடத்தப் பெறலாம்.

**அகனமர்ந்த அன்பினராய் அறுபகை செற்று ஐம்புலனும்**
**அடக்கி ஞானம் புகலுடையோர் தம்உள்ளப்**
**புண்டரிகத்துள் இருக்கும் புராணனே.** (1421)

**சிந்தை வெள்ளப் புனலாட்டி செஞ்சொல்மாலை அடிசேர்த்தி**
**எந்தை பெம்மான் என்னம்மான் என்பார்** (4313)

உள்ளத்தூய்மையும் அகமலர்ந்த அன்புமே பக்திக்கு அடிப்படை என்பதை இவ்வரிகள் தெளிவாக்குகின்றன.

'தேடிச்சென்று திருந்தடி ஏத்துமின்', 'சென்று தொழுமின்கள்' என்பது போல ஆங்காங்குள்ள புனித நீர்களை நாடிச் செல்லுங்கள். ஆங்காங்குள்ள இறைத்திருமேனிகளை வழிபட்டு வினையைப் போக்குங்கள் என்று அறிவுறுத்துவதுபோல.... பல பாசுரங்கள் அமைந்துள்ளன.

**சீரானைத் திகழ்தரு வெண்ணி அமர்ந்துறை**
**ஊரானை உள்கவல்லார் வினை ஓயுமே** ( 2:14:5)

**ஆமாத்தூர் அம்மானைக் காணாத**
**கண்ணெல்லாம் காணாத கண்களே**

**ஆமாத்தூர் அம்மான்எம் வள்ளல்**
**கழல்பரவா வாழ்க்கையும் வாழ்க்கையே.**

என வரும் தொடர்கள் நேர்வழியிலும் எதிர் வழியிலும் தலயாத்திரையை வற்புறுத்தல் காணலாம்.

இறைவனை இத்தகு செயல்களால் வழிபடுவதுடன் புகழ்ந்து பாடித் துதிப்பதைத்தான் பக்தி இயக்கம் பெரிதும் போற்றுகிறது என்பர். ஞானசம்பந்தரின் தேவாரப் பாக்களில் இத்துதிமாலை இன்றியமையாததாக இடம்பெற்றிருப்பதைக் காணலாம்.

**புகழ்நாமம் செவிகேட்ப நாநாளும்**
**நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே.**
**பாடும் சிறப்போர்பால் பற்றாவாம் பாவமே**
**பத்திமையாலே பாடியும் ஆடியும் பயில வல்லார்கள்**
**விண்ணவர் விமானம் கொடுவர ஏறிவியன்**
**உலகுஆண்டு வீற்றிருப்பர் தாமே** ( 819)

**ஆர்த்தானை அழகமர் வெண்ணியம்மான் தன்னை**
**ஏத்தாதார் என்செய்வாரே ஏழைப் பேய்களே** (2:14:4)

இத்தகு வழிபாடு கைத்தொண்டு எனப்பெறும் தொண்டு நெறியின் பாற்பட்டதாகும். இது நம் வினைகளைப் போக்கும் வன்மை கொண்டது. அத்துடன் பதட்டம் போக்கும் மருந்தாகவும் பயன்படும். ஆம், அலகிடுதல், மெழுக்கிடுதல், திருமஞ்சனம் செய்தல், பூமாலை புனைந்தேத்துதல், புகழ்ந்து பாடுதல் ஆகிய திருக்கோயில் வழிபாடு தடுமாற்றம் தீர்க்கும் மருந்தாகும்.

**'தலையினார் தொழுது ஓங்குவார் நீங்குவார் தடுமாற்றமே'**
(அறையணிநல்லூர்)

என்னும் ஞானசம்பந்தர் வாக்கு இதனை மெய்ப்பிக்கும்.

**வினைக் கொள்கைகள்**

வினையை மாற்றமுடியாது. அதுமுன் செய்த வினை தொடரத்தான் செய்யும். அனுபவித்துத்தான் ஆக வேண்டும் என்ற கொள்கையால் அலைப்புண்டு வாழ்க்கைப் பிடிப்பற்று கவன்ற கோழை மனிதர்களை நெறிப்படுத்தி இதோ இறைவனிடத்துக் காட்டும் பக்தி எவ்வினையையும் தூள் தூளாகப் போக்கிவிடும் என்னும் நம்பிக்கையை ஊட்டுகிறார் சம்பந்தர். இறைபக்தி வினையை ஒழிக்கும், இம்மை நலம் தரும், முத்திப்பேறும் தரும். இம்மூன்றையும் திருக்கோயில் வழிபாடு நல்கும் என்பதைப் பல்வேறிடங்களிலும் காட்டுகிறார் நம் சம்பந்தர். கைத்தொண்டு செய்தாலே செய்வினை போய்விடுமாம்.

அவ்வினைக்கு இவ்வினையாம் என்றுசொல்லும் அஃதறிவீர்
உய்வினை நாடாதிருப்பதும் உந்தமக்கு ஊனமன்றே
கைவினை செய்துஎம்பிரான் கழல்போற்றுதும் நாமடியோம்
செய்வினை வந்தெமைத் தீண்டப்பெறா திருநீலகண்டம்.

காவினை இட்டுங் குளம்பல தொட்டும் கனிமனத்தால்
ஏவினையால் எயில்மூன்று எரித்தீர்என்று இருபொழுதும்
பூவினைக் கொய்து மலரடி போற்றுதும் நாமடியோம்
தீவினை வந்தெமைத் தீண்டப்பெறா திருநீலகண்டம்

(1:116:1,2)

வினை அழிவதற்குரிய பக்திக்கு அடிப்படையாம் கைத்தொண்டை முன்னிறுத்தும் சம்பந்தர் எவ்வகையில் வழிபட்டாலும் வினையழிந்து நலம் பெறுவர் என்கிறார். பக்தி வினையை மாற்றும், அழிக்கும் என்பதில் அசைக்க முடியாத நம்பிக்கைக் கொண்டவராக இவர் திகழ்கிறார்.

வீழிமிழலையான் எனவினை கெடுமே

பக்திமையாலே பாடியும் ஆடியும் பயிலவல்லோர்கள்
......... வியன் உலகாண்டு வீற்றிருப்பர் தாமே.

மண்பொலிய வாழ்ந்து அவர்போய்
வான் பொலியப் புகுவரே.

நாலூர் மயானத்து நம்பான் தன்னடி நினைந்து
மாலூரும் சிந்தையார்பால் வந்தூரா மறுபிறப்பே.

கூறுவாரையும் கேட்க வல்லாரையும் குற்றங்கள் குறுகாவே

நரைதிரை இன்றியே நன்னெறி சேர்வரே

சித்தமதொன்றிச் செய்கழல் உன்னிச் சிவனென்று

நித்தலும் ஏத்தத் தொல்வினை நம்மேல் நில்லாவே (1087)

அந்தண் ஆரூரரைப் பத்திமலர்தூவ முத்தியாகுமே.

போன்ற தொடர்கள் பக்தியின் பயனை விரிவாகக் காட்டவல்லன.

கொன்றைத் தொங்கலான் அடியார்க்குச்
சுவர்க்கங்கள் பொருள் அலவே (1992)

அடியவர் மேல்வினை கனலிடைச் செதிள் அன்றே (2590)

தொண்டர் தொண்டரைத் தொழுதடி பணிமின்கள்
தூநெறி எளிதாமே (2603)

என வரும் தொடர்களில் பக்தி செய்கின்ற அடியாரிடத்துக் காட்டுகின்ற பக்திக்குக் கூட இறைவனிடத்துக் காட்டும் பக்தியின் பயன் கிட்டும் என்பதைக் காணலாம்.

இறைவனை எப்படித் தொழுவது? எக்காலங்களில் தொழுவது? போன்ற வினாக்களுக்கும் திருஞானசம்பந்தர் எளிமையாக விடை தருகின்றார். மனம் சதா இயங்கிக் கொண்டிருப்பது, கைத்திருத் தொண்டுக்குக் கூட நேரம் காலம் சூழல் தேவை. ஆனால் சதா சர்வகாலமும் இயங்கிக் கொண்டிருக்கின்ற மனத்திற்கு எதுவுமே தேவையில்லை. எனவே காற்றாகி எங்கும் கலந்திருக்கும் இறைவனை முப்போதும் எப்போதும் நினைந்து வழிபடுங்கள் என்கிறார்.

**துஞ்சலும் துஞ்சல் இலாத போழ்தினும்**
**நெஞ்சம் நைந்து நினைமின் நாள்தொறும்.**

**துஞ்சும் போதும் துற்றும்போதும் சொல்லுவன் உன்திறமே.**

**நனவினும் கனவினும் நம்பா உன்னை**
**மனவினும் வழிபடல் மறவேன் அம்மா.**

**உண்ணினும் பசிப்பினும் உறங்கினும் போய்**
**ஒண்மலர் அடியலாது சிந்தை செய்யா என்நா.**

என வருகின்ற இடங்களிலெல்லாம் இறைவனை நினைத்துத் தொழுகின்ற பக்திக்குக் காலம் இல்லை, நேரம் இல்லை, சூழல் வேண்டா. எப்போதும் தொழலாம். அது எல்லா வகை பக்தி நெறியினும் மேம்பட்டதாக அமையும் என்பதை ஞானசம்பந்தர் தம் பதிகங்கள் வழி வலியுறுத்துகின்றார்.

**நாளும் கோளும் நல்லவனே**

இறைவனிடத்துப் பக்தி செய்யும் அடியார்களுக்கு நாள், கோள் போன்றன தீமை புரியவேண்டிய காலத்தும் நல்லதே செய்யும் திறத்தனவாக அமைந்துவிடும் என்னும் நம்பிக்கையை ஞானசம்பந்தப் பெருமானே தெளிவாக்கியுள்ளார் எனலாம்.

**நமன்தூதர் ஆலமிடற்றான் அடியார்என்று அடர அஞ்சுவரே**

**அத்தன் அடிநினைவார்க்கு அல்லல் அடையாவே.**

**ஆளாய அன்பு செய்வோம் மடநெஞ்சே அரன்நாமம்**
**கேளாய் நம்கிளை கிளைக்கும் கேடுபடா திறம்அருளிக்**
**கோளாய நீக்குமவன் கோளிலிஎம் பெருமானே** (1:62)

**ஆளுமாதிப் பிரானடிகள் அடைந்தேத்தவே**
**கோளுநாளவை போயறும் குற்றம் இல்லார்களே** (2:10)

**நாளும் நாதன் அமர்கின்ற நாகேச்சர நண்ணுவார்**
**கோளும் நாளும் தீயவேனும் நன்காம் குறிக்கொண்மினே**
(2:119)

வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்
மிக நல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிமேல் அணிந்து
என்உளமே புகுந்த அதனால்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன்
வெள்ளி சனி பாம்பிரண்டும் உடனே
ஆசறு நல்லநல்ல அவை நல்லநல்ல
அடியாரவர்க்கு மிகவே. (2:85)

என வரும் பாடல்களில் பக்தி செய்வார்க்கு நாளும் கோளும் கூட தீமை செய்துவிட முடியாது என்பதைக் காணலாம்.

## பொது நிலை

திருஞானசம்பந்தர் சமயத் தொண்டுடன் சமூகத் தொண்டையும் இணைத்துக் காண்கிறார். கோயில் வழிபாட்டுக்குரிய புனிதமாயிற்று. அங்கே பக்தியுடன், கல்விக்கலை, இசைக்கலை, ஆடற்கலை, சிற்பக்கலை, வங்கிக்கலை, மருத்துவக்கலை, அன்னக்கலை எனப் பற்பல கலைகளும் வளர்ந்தன. எனவே பக்தியைக் கூடத் சமூக உணர்வுடன் ஊட்டுவதையே ஞானசம்பந்தர் வரலாறு உணர்த்துகிறது எனலாம். ஆண்பனை பெண் பனையான வரலாறு, விடம் தீண்டி யானை உயிர்ப்பித்த வரலாறு, எலும்பைப் பெண்ணாக்கிய வரலாறு, பஞ்சம் தீர்த்தது, உலவாக்கிழி பெற்றது, திருநீலகண்ட யாழ்ப்பாணரை உடன்கொண்டு சென்றது போன்ற வரலாறுகள் அவர்தம் சமூக உணர்வை, சமூகத் தொண்டைப் பறைசாற்றுவன எனலாம்.

திருநீற்றின் பெருமை பேசியது, செந்தமிழர் தெய்வ மறைநாவர், செழுநற்கலை தெரிந்தவரோடு அந்தமில் குணத்தவர்கள் அர்ச்சனை செய்கின்ற சூழலை விளக்கியது, அந்தியுள் மந்திரம் நமச்சிவாயவே என்றும் வேதநான்கினும் மெய்ப்பொருளாவது நாதன் நாமம் நமச்சிவாயவே என்றும் நமச்சிவாயத்தின் பெருமை பேசியது, போன்றவற்றுடன் தமிழ்வளம் சான்ற திருப்பதிகங்களும் அவரைத் தமிழ்ஞான சம்பந்தராக இனம் காட்டிப் பெருமைப்படுத்துகின்றன எனலாம். 'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன்' எனச் சுந்தரர் போற்றியதை ஈண்டு நினைவு கூரவேண்டும். சிவம் பெருக்குபவராகச் சேக்கிழார் கூறுகிறார். ஆனால் அவர்க்கு முன்னிருந்த சுந்தரர் தமிழ் பரப்புபவராக ஞானசம்பந்தரைக் காட்டியுள்ளார். ஞானசம்பந்தரின் தமிழ்க் காதலுக்கு இது ஒரு சான்றே போதுமாகும்.

எனவே இவர்தம் வரலாறும் திருப்பதிகங்களும் தமிழ் மொழிக்கும் தமிழினத்தார்க்கும் ஏற்றம் செய்வன எனலாம். இவை பாரதப் பண் பாட்டுக்கே விடிவெள்ளியாகும் சிறப்பின என்றால் அது மிகையாகாது.

**- த.கோ. பரமசிவம்**

# 1. ஸ்ரீ குமரகுருபரர் பார்வையில் சம்பந்தர்

திருவளர்திரு கயிலைமாமுனிவர் காசிவாசி
**முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள்**

திருஞானசம்பந்தப் பெருமானுக்கும் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகளுக்கும் நெருங்கிய ஒற்றுமைகள் பல இருப்பதை நாம் உணரலாம். ஞானசம்பந்தப் பிள்ளையார் மூன்று வயதிலேயே இறைவனுடைய அருட்பார்வையில் இலக்கிய இலக்கண நூல்களில் தேர்ச்சி பெற்று விளங்கினார் போல பற்பல வகைகளிலும் திருப்பதிகங்களை அருளிச் செய்தார். ஸ்ரீ குமரகுரு சுவாமிகளும் தம் ஐந்து வயது வரை பேசாதிருந்து செந்திற்கந்தன் திருவருளினாலே, கந்தர் கலிவெண்பா பாடியருளினார். ஞானசம்பந்தர் பல்வேறு யாப்பு வடிவங்களை, வகைகளைப் பதிவு செய்து தமிழை வளப்படுத்தினார். ஸ்ரீ குமரகுருபர சுவாமிகளும், தம் முதல் நூலாம் கந்தர் கலிவெண்பாவில்,

> **'ஆசுமுதல் நாற்கவியும் அட்டாவ தானமும் சீர்ப்**
> **பேசும்இயல் பல்காப் பியத்தொகையும் - ஓசை**
> **எழுத்து முதலாம் ஐந்து இலக்கணமும் தோய்ந்து**
> **பழுத்த தமிழ்ப் புலமை பாலித்து.................**
> **அடியேற்கு முன்னின்று அருள்'**

என வேண்டுகிறார். வேண்டியவாறே தமிழ் ஞானம் கைவரப்பெற்று இறைவனைப் பல்வேறு யாப்பு வகையாலும் வடிவாலும் புகழ்ந்து துதிக்கின்றார். இதனால் திருஞானசம்பந்தர் தமிழாகரராக விளங்கினார். ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்த வேந்தராகும் சிறப்புப் பெற்றார்.

இருவரும் தலயாத்திரை மேற்கொண்டு திருக்கோயில் வழிபாட்டை உயர்த்தினர். திருஞானசம்பந்தர் புறச்சமயத் தாக்கம் பிறமொழித் தாக்கங்களூடே தமிழையும் சைவத்தையும் இரு கண்களாக வளர்த்துப் போற்றினார். ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிறமொழியும் பிற சமயங்களும் நிறைந்த காசி மாநகரம் சென்று தமிழ் மடம் நிறுவி சைவத்தையும் தமிழையும் வளர்த்தார். இப்படிப் பல ஒற்றுமைகள். திருஞானசம்பந்தரை முருகனின் அவதாரமாகவே ஞானியர் பாராட்டுவர். அவ்வாறே ஸ்ரீ குமரகுருபரரை ஞானசம்பந்தப் பெருமானுடன் ஒப்பிட்டுப் பேசுவர். அவர்தம் அவதாரமாகவே குமரகுருபர சுவாமிகளைக் கருதுவர்.

திருஞானசம்பந்தரின் குருபூசையும் குமரகுருபர சுவாமிகளின் குருபூசையும் ஒன்றுபட்டு வருவதை நாம் ஈண்டு நினைவு கூர்தல் வேண்டும். இனி, ஸ்ரீ குமரகுருபர சுவாமிகளின் திருவாக்கில் ஞானசம்பந்தர் எவ்வாறு போற்றப்படுகிறார் எனச் சிந்திக்கலாம்.

காசித் திருமடத்தின் முதற்பெருங் குரவராகிய ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் இறையருளை முழுமையாகப் பெற்றவர்கள். பழுத்த தமிழ்ப் புலமையும் சிறந்த கவித்திறனும் பெற்ற ஸ்ரீ சுவாமிகள், தம் படைப்பு களில் சிவனடியார்களையும், தமிழுடன் சைவம் வளர்த்த சான்றோர் களையும் புகழ்ந்து பாடியுள்ளார்கள். அவர்கள் பார்வையில் திருஞான சம்பந்தர் எங்ஙனம் காணப்படுகிறார் என்பதைப் புலப்படுத்துவது சாலச் சிறந்ததாகும்.

## மூன்று கோணங்கள்

'கழுமல மதலை' எனவும், 'புகலியர் குரிசில்' எனவும், 'கவுணியர் பெருந்தகை' எனவும் திருஞானசம்பந்தரைப் புகழ்ந்து பரவும் ஸ்ரீ சுவாமிகள், அவரை, வேதாந்தப் பொருள் உணர்த்தும் திருப்பதிகம் பாடியவராகவும், சமண் மாசறுத்துச் சைவம் மீட்ட செம்மலாகவும், அருமைத் தமிழ் வளர்த்த அருளாளராகவும் மூன்று கோணங்களில் கண்டு பாடியுள்ளார்கள்.

## செழுமறை காட்டும் திருப்பதிகங்கள்

ஸ்ரீ சுவாமிகள் பாடியருளிய நூல்களில் மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் குறிப்பிடத்தக்கது. அன்னை மீனாட்சியின் திருக்கரங்களால் முத்துமாலையை ஸ்ரீ சுவாமிகளுக்குப் பெற்றுத் தந்த சிறப்புடைய நூலாகும் அது. பிள்ளைத்தமிழ் என்ற இலக்கிய வகையைச் சிந்தித்தால் தமிழறிஞர்கள் நினைக்கும் முதல் நூலும் ஆகும். அச்செந்தமிழ் நூலில், திருஞானசம்பந்தர், உமாதேவியின் ஞானப்பால் அருந்தியமையைக் குறிப்பிடும்போது,

**"செழுமறை தெளியவ டித்தத மிழ்ப்பதி கத்தோடே**
**திருவரு ளமுதுகு ழைத்துவி டுத்தமு லைப்பாலாற்**
**கழுமல மதலைவ யிற்றைநி ரப்பி"** (சப்பாணிப் பருவம், பா.10)

என்று பாடியருள்கின்றார் ஸ்ரீ சுவாமிகள். இதில் 'அறிதற்கயை வேதாந்தப் பொருளைச் சம்பந்தரின் தேவாரத் திருப்பதிகங்கள் எளிதில் அறியும்படி செய்கின்றன' என்று குறித்துள்ளமை சிந்திக்கத் தக்கது.

இறை, உயிர், உலகம் பற்றிய சீரிய சிந்தனைகளைப் பேசும் வேதாந்தக் கருத்துக்களைத் தம் திருப்பதிகங்களில் திருஞானசம்பந்தர் புலப்படுத்திப் பாடியுள்ள அருமை கருதியே ஸ்ரீ சுவாமிகள் அவ்வாறு

புகழ்ந்துள்ளார்கள். சிவபரம்பொருளின் திருவருட் சிறபபை, உபநிடதங் களாகிய வேதாந்தத்தை உணர்த்திய பெரும் சிறப்பாகக் கருதி,

> "வேதாந்தம்
> பண்ணுநன் பொருள் பயந்தவர் பருமதிற் சிரபுரத்தார்"

> "உண்ணிலா ஆவியாய் ஓங்குதன் தன்மையை
> விண்ணிலார் அறிகிலா வேத வேதாந்தனார்"

என்று திருஞானசம்பந்தர் பாடியருளிய பாடல் வரிகள் நோக்கத் தக்கவை. திருஞானசம்பந்தரின் தேவாரத் திருப்பதிக உள்ளடக்கச் சிறப்பைக் கண்டு பாடியுள்ள ஸ்ரீ சுவாமிகள், போற்றுதலுக்கு உரியவர்கள்.

**சைவம் மீட்ட செம்மல்**

ஸ்ரீ சுவாமிகள் படைப்புகளில் குறிப்பிடத்தக்க மற்றொரு நூல் பண்டார மும்மணிக்கோவையாகும். தம் குருநாதரைப் போற்றிப் பாடிய நூல் இது. குருவே சிவம் என அழுத்தமாகக் கூறும் இந்நூலில், தருமையாதீனக் குருபரம்பரையைப் போற்றும்போது, ஸ்ரீ சுவாமிகள்,

> "அமண்மா சறுத்த கவுணியர் பெருந்தகை"

என்று பாடுவார். திருஞானசம்பந்தரின் பணிகளில் முக்கியமான பணி, தென்பாண்டி நாட்டில் பரவி இருந்த சமண சமயத்தை அழித்து, அவண், சைவ சமயத்தை மீண்டும் நிலைபெற வைத்தமையாகும். அதனால்தான், அவர் 'பரசமயக் கோளரி' என்று போற்றப்படுகின்றார். அப்பணியினையே விதந்து கூறி, அப்பணியின் சிறப்புக் கருதி, சம்பந்தரைக் 'கவுணியர் பெருந்தகை' என்று போற்றிப் பாடுகின்றார் ஸ்ரீ சுவாமிகள்.

**அருமைத் தமிழ் வளர்த்த அருளாளர்**

திருஞானசம்பந்தர் தோன்றிய ஏழாம் நூற்றாண்டில் பிராகிருதம், பாலி முதலிய மொழிகள் தமிழகத்தில் செல்வாக்குடன் திகழ்ந்தன. இம்மொழிகளே கல்வெட்டுக்களில் பயன்படுத்தப்பட்டன. தமிழை வளர்க்க வேண்டிய காலச் சூழலை உணர்ந்து, தமிழை வளர்த்தவர் சம்பந்தர். "தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன்" என்றே சுந்தரமூர்த்தி சுவாமிகள் போற்றுவார். தமிழ் - 'அருமைத்தமிழ்' ஆயிற்று ஞானசம்பந்தரால். "அருந்தமிழ்", "இசைத்தமிழ்", "கொழிதமிழ்", "சங்கத்தமிழ்", "செழுந்தமிழ்த் தெள்ளமுது", "தண்டமிழ்", "பசுந்தமிழ்" என்றெல்லாம் தமிழைப் போற்றும் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள், சம்பந்தரின் அருமைத் தமிழை உணர்ந்து போற்றுகின்ற பாங்கு சிந்தனைக்கு உரியது. மதுரைக் கலம்பகத்தில் புயவகுப்புப் பாடும்போது,

> "புகலியர் குரிசில்ப ணொடுதமிழ் அருமை
> அறிந்தொரு தாளம் வழங்கப் புகுந்தன"

என்று பாடுகின்றார். சின்னஞ்சிறிய கைகளால் தாளம் போட்டால், கை வலிக்குமே என்று கருதி, சிவபிரான் பொற்றாளம் தந்தான் என்பர். ஆனால் நம் ஸ்ரீ சுவாமிகளோ பண்ணார் தமிழருமை கருதியே பொற்றாளம் தந்தான் இறைவன் என்று பாடியருள்வது மேன்மையானது.

**"நாளும் இன்னிசை யால்தமிழ் பரப்பும்**
**ஞான சம்பந்த னுக்குல கவர்முன்**
**தாளம் ஈந்தவன்"**

என்ற சுந்தரமூர்த்தி சுவாமிகள் வாக்கும் இவண் சிந்திக்கத்தக்கது.

திருஞானசம்பந்தரை முழுமையாகக் கற்று, மூன்று கோணங்களில் நோக்கி, ஸ்ரீ சுவாமிகள் போற்றிப் புகழ்ந்துள்ளமை போற்றத் தக்கதாகும். ஸ்ரீ சுவாமிகள் நோக்கு சீரிய நோக்காகவும், ஆழமான நோக்காகவும், ஆய்வு நோக்காகவும் உள்ளமையால், இன்றைய ஆய்வாளர்கள், ஸ்ரீ சுவாமிகள் நோக்கைப் பாராட்டாமல் இருக்க இயலாதென்க.

# 2. சம்பந்தர் தேவாரப் பதிப்புகள்

அரு. அப்பாசாமி, பாகூர்.

சைவத் திருமுறை பன்னிரண்டனுள் இற்றைக்கு ஏறத்தாழ 1300 ஆண்டுகளுக்கு முற்பட்டவரான திருஞானசம்பந்தர் தாம் வழிபட்ட திருத்தலங்கள் பற்றியும், பொதுவாகவும் இயற்றியருளிய திருப்பதிகங்கள் பலவும் மூன்று திருமுறைகளாகவும், அவருக்கு ஒத்தகாலத்தவரான திருநாவுக்கரசர் அருளிய திருப்பதிகங்கள் பலவும் அடுத்த மூன்று திருமுறைகளாகவும், இவ்விருவருக்கும் பிற்பட்டவரான சுந்தரர் அருளிய திருப்பதிகங்கள் பலவும் ஏழாந் திருமுறையாகவும் அமைக்கப்பட்டு இக்காலத்தில் 'தேவாரம்' என்ற பொதுப்பெயரால் வழங்கி வருகின்றன. இவற்றின் தொகுப்பு 'மூவர் தேவாரம்' எனவும், 'அடங்கன் முறை' எனவும் கூறப்படுகிறது. எனினும், இவை பழங்காலத்தில் 'திருப்பதியம்' என்றே வழங்கப்பட்ட செய்தி, 'திருப்பதியம் ஓதுவார்க்கு' (3.43), 'திருப்பதியம் விண்ணப்பம் செய்ய' (2.43) போன்ற கல்வெட்டுத் தொடர்களால் அறியவியலும்.

திருமுறைகண்ட புராணத்தின் 14-ஆம் பாடலில் திருஞானசம்பந்தர் அருளிய பதிகங்கள் பதினாறாயிரம் எனக் கூறப்பட்டுள்ளது. இவற்றுள் செல்லரித்த சுவடிகள் நீங்க எஞ்சிய சுவடிகளில் ஞானசம்பந்தர் பதிகம் 384 என்ற அளவில் கிட்டின என்பது அப்புராணத்தின் 25-ஆம் பாடலால் பெறப்படுகிறது. என்றாலும் சுவடிகளின் வழி 383 பதிகங்களே அறியப் பெற்றுப் பதிப்பிக்கப் பெற்றன. பின்னர் திருவிடைவாய் என்ற தலத்துக் கோயில் கல்வெட்டில் (க.அ.8/1918) அவ்வூர்க்குரிய சம்பந்தரின் பதிகம் கண்டெடுக்கப்பட்டு அதுவே திருமுறைகண்ட புராணம் சுட்டும் 384-ஆம் பதிகமாகும் என்றும் திருமுறை ஆராய்ச்சி அறிஞர்களால் கொள்ளப்பெற்றது. பின்னர் சுவடி (சித்தாந்தம் மலர்-5 இதழ்-11, 1932) மூலம் கிடைக்கப் பெற்ற கிளியன்னவூர்ப் பதிகம் உட்பட பதிகங்கள் 385. இப்பொழுது நமக்குக் கிடைத்துள்ள பாடல்களின் தொகை 4169 ஆகும் எனவும் சான்றோர் குறிப்பிடுவர்.

திருமுறை என்ற சொல் திருமந்திரத்தில் (1067) காணப்பெறுகிறது. இச்சொல்லிற்குத் தெய்வத்தன்மையும், அழகும், அருட்செல்வமும் பொருந்திய பனுவல் என்பது பொருளாகும் எனச் சுட்டுவர்.

மூன்றாம் அகவையில் அம்மை அளித்த ஞானப்பாலினைப் பருகித் ''தோடுடைய செவியன்'' என்று தொடங்கித் திருநெறிய தமிழ் பாடிய திருஞானசம்பந்தரின் பதிகப் பாடல்களை முதல் மூன்று திருமுறைகளாக முறைப்படுத்தினர். இவர் அருளிச்செய்துள்ள பதிகப் பாடல்களில் ஓர் அமைப்பொழுங்கினைக் காணலாம். ஒவ்வொரு பதிகத்தின் எட்டாம் பாடலில் இராவணானுக்கிரக மூர்த்தத்தையும் ஒன்பதாவது பாடலில் சமண பௌத்த கண்டனத்தையும் திருக்கடைக்காப்பாகிய பதினோராம் பாடலில் பதிகப் பயனையும், பாடிய தம் பெயரையும் சுட்டுதல் நோக்கத் தக்கது.

திருஞானசம்பந்தர் அருளிச் செய்தவற்றைத் 'திருக்கடைக்காப்பு' என்றும், அப்பரடிகள் பாடல்களைத் 'தேவாரம்' என்றும், சுந்தரரின் பாடல்களைத் 'திருப்பாட்டு' என்றும் கூறும் மரபு குறிப்பிடத்தக்கது.

தொடக்கக் காலத்தில் அப்பர் பதிகங்களைத் 'தேவாரம்' என்று குறித்தனர். காலப்போக்கில் சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய அருளாளர் மூவரும் பாடியுள்ள பதிகங்களை ''தேவாரம் செய்த திருப்பாட்டு'' என்று சுட்டிய நிலையினை இரட்டைப் புலவரின் ஏகாம்பரநாதர் உலாக் குறிப்பினால் உணரலாம். தேவாரப் பதிகங்களைப் பண்முறையாகத் தொகுத்து வழங்குதல் பழைய மரபாக விளங்குகிறது. கோயில் திருவேட்களம் முதலாகத் 'திருப்பதிகக் கோவை'யில் குறித்தமுறையில் தல அடிப்படையில் பதிகங்களை அடைவு செய்து தொகுத்த முறையும் காணப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட தலத்தில் கோயில் கொண்டுள்ள இறைவனை ஏத்துவதற் குரிய பதிகங்கள் அனைத்தையும் ஒருங்கோதுவதற்கு இத்தகைய தலமுறைத் தொகுப்பு பயன்தரும். அடங்கன் முறை என்ற பொருளாலும் தேவாரத் திருமுறைகள் வழங்கப்படுதல் சுட்டத்தக்கது.

'அகத்தியர் தேவாரத் திரட்டு' என்ற பெயரிலும் ஒருசில பதிகங்களுக்கு முதன்மை கொடுக்கப்பெற்று அன்றாட வழிபாட்டிற்குரியனவாகப் பயிலப்பெற்று வருகின்றன. கி.பி. 14-ஆம் நூற்றாண்டில் விளங்கிய கொற்றவன்குடி உமாபதி சிவாச்சாரியார் பத்து அதிகாரங்களை தொகுத்துள்ள தேவாரம் 'தேவார அருண்முறைத் திரட்டு' என்று வழங்கி வருகிறது.

சில நூற்றாண்டுகளுக்கு முன் தஞ்சை மாவட்டத்து வேதாரணியம், திருநெல்வேலி என்ற இரண்டு பகுதிகளிலும் வாழ்ந்த சிவநேசச் செல்வர் களான தேசிகர்கள் பலர் தேவாரப் பதிகங்கள் முழுதும் பனையோலை களில் எழுதி அவற்றை விலைக்குக் கொடுத்துப் பெற்ற ஊதியங்கொண்டு தம் வாழ்க்கையை நடத்தி வந்தனர் எனவும், அவர்கள் வரைந்த சுவடிகளே இன்று தமிழகம் எங்ஙனம் யாழ்ப்பாணத்தும் ஏனைய பிறவிடங்

களிலும் சுட்டும் சுவடிகளாம் எனவும், ஈரிடங்களிலும் வரையப்பட்ட அச்சுவடிகளிடையே பாட பேதங்கள் காண்டற்கு மிகுதியும் வாய்ப்பு இன்று எனவும் 'மர்ரே கம்பெனி' திரு. இராஜம் அவர்கள் குறிப்பிட்ட செய்தி அறிஞர்களுடைய கவனத்திற்குரியது.

## பண்முறைத் தொகுப்பு

ஏட்டுச் சுவடிகளில் காணப்பெற்ற நிலையில் மூவர் தேவாரங்களுக்குப் பண்கள் குறிக்கப் பெற்றுள்ளன. இப்பதிகங்கள் தோன்றிய காலத்துப் பண்களைப் பாடிய முறைகளை இக்காலத்தில் எதிர்பார்த்தல் இயலாது. தேவாரப் பாடல்களை இக்காலத்தில் ஓதிவருகின்ற முறை கீழ்வேளூர் சொக்கலிங்க தேசிகர் கற்பித்து வந்த வழிமுறையைப் பின்பற்றியதாகும். இம்முறை முத்துச்சாமி தீட்சிதர் கீர்த்தனங்களைப் பின்பற்றிய ஒருவகையான ஓதும் முறையாகும் (நல்லுரைக் கோவை- II, ப. 121).

பண்கள் வரிசையில் மூவர் தேவாரமும் அமைக்கப்பட்ட முறை பண்முறையாகும். இம்முறையில் ஒரே பண்ணில் பாடப்பட்ட பல்வேறு திருத்தலங்களைப் பற்றிய பதிகங்களும் இடம்பெறும். ஒரே திருத்தலத்தைப் பற்றிப் பல்வேறு பண்களில் பல பதிகங்கள் பாடப் பெற்றிருப்பின், அவை பண்களுக்கு ஏற்ப இடம் பெயரும். ஆகவே, இம்முறையில் ஒரே திருத்தலத்தைப் பற்றி ஒருவரே பாடிய இரண்டு மூன்று பதிகங்கள் ஒரே இடத்தில் ஒருசேர இடம்பெறாமல் பண்அமைதிக்கு ஏற்ப, வெவ்வேறு இடங்களில் பெயர்ந்து இடம்பெறுதலும் நேரிடும்.

## தலமுறைத் தொகுப்பு

ஒவ்வொரு திருத்தலத்தைப் பற்றியும் ஒருவர் பாடிய எல்லாப் பதிகங்களையும் அதே திருத்தலத்தைப் பற்றி இருவரோ மூவரோ பாடியிருப்பின் அப்பதிகங்களையும் ஒருசேரக் கண்டு ஓதல் வேண்டும் என்ற எண்ண மேலீட்டால் சந்தானாசாரியார்களுள் ஒருவரான உமாபதி சிவம் காலத்திலிருந்து இம்மூவர் தேவாரத்திற்கும் ஒன்று முதல் ஏழு திருமுறை என்ற தொகுப்பை விடுத்துத் தலமுறைத் தேவாரத் தொகுப்புத் தோன்றலாயிற்று. உமாபதி சிவம் தில்லை மூவாயிரவருள் ஒருவராதலின், இத்தொகுப்பின் திருத்தலங்கள் கோயில் என்று போற்றப்பெறும் தில்லையிலிருந்து தொடங்கப் பெற்றுள்ளன. திருப்பதிகக் கோவை என்ற பெயரில் பத்தொன்பது பாடல்களைக் கொண்டு அமைக்கப்பட்டுள்ள பதிகம் ஒன்றில் திருத்தலங்களின் முறை வைப்புப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. திருப்பதிகக் கோவை இயற்றப்பட்ட காலத்தில் திருவிடைவாய்ப் பதிகமும் கிளியன்னவூர்ப் பதிகமும் கிடைக்கப் பெறாமையால் திருப்பதிகளில் இவ்விரண்டு ஊர்களும் கணக்கிடப் படவில்லை.

மூவர் தேவாரத்திற்கும் சென்ற நூற்றாண்டின் இடைப்பகுதியில் இருந்து இன்றுவரை பண்முறை அமைப்பை ஒட்டியும் தலமுறை அமைப்பை ஒட்டியும் பலராலும் பதிப்பிக்கப் பெற்ற பல பதிப்புகள் வெளிவந்துள்ளன.

தேவாரம் அச்சில் வந்த தொடக்கக் காலத்தில்-ஏட்டுச் சுவடிகளில் பாடல்களின் அடிவரையறை எதுகையைக் கொண்டே அரிதின் உணரும் வகையில் பாடல்களின் அடிகள் தொடர்ந்தே அமைந்த நிலையை மாற்றி-அடிவரையறை காற்புள்ளிகள் இட்டுக் காட்டப்பட்டது.

அடிகளைத் தனித்தனியே பிரித்துப் பதிப்பித்தலும் அடிகளைச் சீர் பிரித்துப் பதிப்பித்தலும், முதல் அடியின் இறுதியிலும் அடுத்த அடியின் முதலிலும் அமைந்த சந்திகளை மாத்திரம் பிரித்துக் காட்டிப் பதிப்பித்தலும், கடினமான சந்திகளைச் சீர்நிலை பிறழாமல் ஓரோவழிப் பிரித்துக் காட்டிப் பதிப்பித்தலும் என்ற முறைகளை நிரலே பின்பற்றியதால் தேவாரப் பதிப்புக்கள் செப்பம் பெறுவன ஆயின. நமக்குப் புலனாகின்ற வகையில் இதுவரை வெளிவந்துள்ள தேவாரப் பதிப்புக்கள் பற்றிக் காண்போம்.

பல நூற்றாண்டுகளாக ஏட்டுச் சுவடிகளிலேயே இருந்த மூவர் தேவாரத் திருமுறைகளை முதன் முதல் காகித நூல் வடிவில் உலகுக்கு அளித்த பெருமை திருமயிலை சுப்பராய ஞானியார் அவர்களையே சாரும். இவர், ஞானசம்பந்தர் அருளிச்செய்த முதல் மூன்று திருமுறை களையும் திருவாவடுதுறை ஆதீனப் பிரதியை அடிப்படையாகக் கொண்டு, காஞ்சிபுர வித்துவான் சபாபதி முதலியார் அவர்களால் ஆராய்ச்சி செய்வித்து, அப்பாவு பிள்ளை, நமச்சிவாய முதலியார் ஆகியோரது பொருள் உதவிகொண்டு குமாரய்யர் அவர்களுக்குச் சொந்தமான கலாநிதி அச்சுக்கூடத்தில் ரூத்ரோத்காரி ஆண்டு ஐப்பசித்திங்கள் (கி.பி. 1864) பண்முறை தேவார முதற்பதிப்பாகப் பதிப்பித்துத் தமிழ் உலகுக்கு வழங்கினார்.

சுப்பராய ஞானியர் திருஞானசம்பந்தர் தேவாரத்தின் இரண்டாம் பதிப்பினை வேளானூர்த் தெய்வசிகாமணி முதலியார் உதவியால் சென்னைப் பாஸ்டர் அண்டுகோ அச்சுக்கூடத்தில் ஈசுவர ஆண்டு ஆடி மாதத்தில் (கி.பி. 1875) பண்முறை தேவாரப் பதிப்பாக வெளியிடப்பட்டது.

சைவ நன்மக்கள் மூவர் தேவாரத்திற்கும் தலமுறைப் பதிப்புக் கிட்டின. ஒரே திருத்தலத்தைப் பற்றி ஒருவரோ, இருவரோ, மூவருமோ அருளிச்செய்த பதிகங்கள் அனைத்தையும் ஒருசேரப் பாராயணம் செய்யலாம் என்ற எண்ணம் கொள்ள, அதனை ஈடேற்றும் வகையில் திருவாவடுதுறை ஆதீனத் தவத்திரு சுப்பிரமணிய தேசிகர் அருளாணையை

மேற்கொண்டு, திருப்பனந்தாள் காசிவாசி இராமலிங்க சுவாமிகளின் வேண்டுகோளின்படி, திருவாவடுதுறை ஆதீன அப்பு ஓதுவார் ஓதின பண்ணின்படி, மதுரையாதீனம், திருவாவடுதுறை ஆதீனம் முதலிய இடங்களில் இருந்த பிரதிகளை ஒப்பிட்டு, மதுரை இராமசாமிப் பிள்ளை என்னும் ஞானசம்பந்தம் பிள்ளை சென்னை புஷ்பரத செட்டியாரது கலாரத்நாகர அச்சுக்கூடத்தில் விஷு ஆண்டு மார்கழித்திங்கள் (கி.பி. 1881) தலமுறையாகத் தேவாரம் முழுதையும் முதன்முறையாகப் பதிப்பித்து வழங்கினார்.

தலமுறைத் தேவாரம் மீண்டும் தருமையாதீனத் தலைவர் தவத்திரு சிவஞான தேசிகமூர்த்திகள் ஆணையின் படி திருப்பனந்தாள் காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் விரும்பிய வண்ணம் திருமயிலை செந்தில்வேல் முதலியாரால் சென்னை விக்டோரியா ஜுபிலி அச்சுக்கூடத்தில் விஜய ஆண்டு சித்திரை மாதம் (கி.பி.1894) முதற்பதிப்பாக வெளிவந்தது.

பழைய மரபை ஒட்டி அமைந்த பண்முறைத் தேவாரப் பிரதிகள் கிடைத்தற்கரிதாயினமையால் பல பதிப்புக்கள் வெளிவரலாயின. அவற்றுள், திருவேங்கட நாயுடு அவர்களால் பார்வையிடப் பெற்றுச் சண்முக முதலியாரவர்களால் சென்னை ஆறுமுக விலாச அச்சுக்கூடத்தில் (கி.பி. 1898) பண்முறைத் தேவார அடங்கன் முறை மூன்றாம் (பதிப்பாக) முறையாகப் பதிப்பித்து வெளியிடப் பெற்றது.

கி.பி 1894-இல் முதற்பதிப்பாக வெளிவந்த பின்னர், கி.பி. 1905-இல் தலமுறைத் தேவாரம் மீண்டும் காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் விரும்பிய வண்ணம் அதே செந்தில்வேல் முதலியாரால் களாரத்நாகர அச்சுக் கூடத்தின் வாயிலாக குரோதி ஆண்டு தைத்திங்கள் இரண்டாம் பதிப்பாக வெளிவந்தது.

இப்பதிப்பினையடுத்து, பத்து ஆண்டுகளுக்குள்ளாகவே, மீண்டும் பண்முறைத் தேவார அடங்கன் முறை, திருமுறை வரலாறு, மூவர் சரித்திரக் குறிப்பு முதலியவற்றுடன் திருமயிலை வித்துவான் சண்முகம் பிள்ளையவர்கள் பார்வை இட்ட பிரதிக்கு இணங்க எஸ்.பி. இராசாராம் அவர்களால் தமது சன் ஆப் இந்தியா அச்சியந்திர சாலையில் முதற் பதிப்பாக கி.பி. 1906-இல் பதிப்பிக்கப்பட்டு வெளியிடப்பட்டது.

இதனையடுத்துப் பங்காளம் அப்பு பிள்ளையவர்கள் புலவர் பலரோடு பல பிரதிகளை ஒப்பிட்டு சென்னை நேஷனல் அச்சுக்கூடத்தின் வாயிலாக நவம்பர் மாதம் முதல் நாள் பண்முறை மூவர் தேவாரப் பதிப்பு வெளிவரலாயிற்று.

கி.பி. 1911-இல் பல்லாண்டுகளாகப் பல பிரதிகளைக் கொண்டு யாழ்ப்பாணத்து வண்ணைநகர்ச் சாமிநாத பண்டிதர் அவர்கள் ஆராய்ந்து

தாம் புதியனவாக எழுதிய பல செய்திகளுடன் சென்னை சைவவித்தியாநு பாலன அச்சியந்திர சாலை வழியாக வெளியிட்ட தலமுறை மூவர் தேவார அடங்கன் முறை தொகுதி சாதாரண ஆண்டு பங்குனி மாதம் வெளியிடப்பட்டது. இப்பதிப்பில் செய்யுள் முதற்குறிப்பகராதி சேர்க்கப் பட்டுள்ளதென்பது குறிப்பிடத்தக்கது.

கி.பி. 1906-ல் எஸ்.பி. இராசாராம் அவர்களால் வெளியிடப்பட்ட தேவார அடங்கன் முறை பதினோராண்டுகளுக்குள்ளாகவே மீண்டும் கி.பி. 1917-ஆம் ஆண்டு சூலைத் திங்களில் நமச்சிவாய முதலியார் அவர்கள் தமது நிரஞ்சன விலாச அச்சியந்திர சாலையில் இதன் மறுபதிப்பாக வெளியிடப்பட்டது.

இதுவரை தேவாரம் பற்றிப் பழைய பதிப்புக்களைப் பற்றி அறிந்தோம். இவற்றின் பின்னர் வெளிவந்த பதிப்புக்கள் யாவும் அச்சுப் புத்தகங் களை ஆதாரமாகக் கொண்டு பதிப்பிக்கப் பெற்றன. இவற்றை நோக்குவோம்.

சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம், கயப்பாக்கம் சதாசிவச் செட்டியார் அவர்களைக் கொண்டு பிப்ரவரியில் திருஞானசம்பந்தர் தேவாரத்தைப் பண்முறையை ஒட்டித் தனிநூலாக அச்சிட்டு 1927-இல் வெளியிட்டுள்ளது.

ஞானசம்பந்தரின் பண்முறைத் தேவாரம் சைவ சித்தாந்த சமாஜத்தின் பதிப்பாக 1929-இல் வெளிவந்துள்ளது.

இளமுருகனார் பதிப்பித்த பண்முறை என்னும் அடங்கன் முறைத் தேவாரம் மிகச்சிறந்த பல செய்திகளுடன் ஒரே தொகுப்பாக மிகக் குறைந்த விலையில் வெளியிடப்பட்டுள்ள ஆண்டு 1953 ஆகும்.

தருமபுர ஆதீனப் பதிப்பாக மிகச்சிறந்த முறையில் பாராட்டுரை, தலங்களின் அட்டவணை, வரலாற்றுக் குறிப்பு, பண்களும் பதிகத்தொகையும் குறிப்புரை முதலியவற்றுடன் 1953, 1954, 1955-ஆம் ஆண்டுகளில் நிரலே முதல் மூன்று திருமுறைகள் வெளிவந்துள்ளன.

திருப்பனந்தாள் காசிமடத்துப் பதிப்பாகத் தலமுறைத் தேவாரம் முழுமையும் ஒரே தொகுப்பாக வெளியிடப் பெற்றது. 1968-ஆம் ஆண்டில்.

திருஞானசம்பந்தர் தேவாரம் தலமுறையை ஒட்டித் திருப்பனந்தாள் மடம் 1950, 1961, 1971, 1979-ஆம் ஆண்டுகளில் பலமுறை வெளியிடப் பெற்றது.

திருவாவடுதுறை ஆதீனம் மூவர் தேவாரத்தையும் 1981, 1983-ஆம் ஆண்டுகளில் வெளியிட்டுள்ளது. புதுச்சேரி பிரஞ்சிந்திய கலை நிறுவனம் வெளியிட்டுள்ள, பண்முறை ஞானசம்பந்தர் தேவாரம் முதல் தொகுதியாக

1984-ஆம் ஆண்டும், அப்பர், சுந்தரர் தேவாரம் இரண்டாம் தொகுதியாக 1985-ஆம் ஆண்டும் (தேவாரம் பற்றிய) ஆய்வுத்துணை மூன்றாம் தொகுதியாக 1991-ஆம் ஆண்டும் வெளியிடப்பெற்றன. தேவாரத் தொகுதிகள் 1881 முதல் 1983 வரை வெளிவந்த பதிப்புகளையும், பல நிறுவனங்கள், பல்கலைக்கழகங்கள், நூலகங்கள், ஆதீனங்கள் முதலியவற்றில் உள்ள, தேவாரம் பற்றிய ஓலைச் சுவடிகளையும் ஒப்புநோக்கி ஆராய்ந்து வெளியிடப்பட்டுள்ளது.

முதல் தொகுதியில் இயக்குநர் டாக்டர் பிரான் சுவாகுரோ அவர் களின் பிரஞ்சு, ஆங்கில முன்னுரையும், பதிப்பு ஆசிரியர் தி.வே. கோபாலையர் அவர்களின் முன்னுரையுடன், சந்தியமைப்பும் நிறுத்தக் குறியீடும் தேவாரப் பதிக அட்டவணை, தேவாரத்தல அகராதி, பாடல்களின் பொருள் விளங்கும்படியாக சந்தி பிரிக்கப்பட்டு வெளியிடப்பட்டது.

கங்கை புத்தக நிலையம் தேவாரத் திருப்பதிகங்கள் முதல் ஏழு திருமுறைகளையும் அடங்கன் முறை பதிப்பாக 1998-இல் முதற் பதிப்பும், 1999-இல் இரண்டாம் பதிப்பும், 2001-இல் மூன்றாம் பதிப்பும் வெளிவந்துள்ளன.

வர்த்தமானன் பதிப்பகம் முதல் மூன்று திருமுறைகள் ஆறு தொகுதிகளாக மூலமும் தெளிவுரையும் கொண்டு 1995-இல் முதற் பதிப்பும், 1998-இல் இரண்டாம் பதிப்பும் வெளிவந்துள்ளன. 2002-இல் இவை மறுபதிப்பாக வெளிவந்துள்ளன.

தருமை ஆதீனம், தமிழில் வெளிவந்த மிகப்பெரிய தொகுதிகளாக 2000-இல் பன்னிரு திருமுறைகளையும் பதினாறு தொகுதிகளாக வெளி யிட்டுள்ளது. இத்திருமுறைகள் பழைய பதிப்பை ஒட்டிப் பாடல்களின் பொழிப்புரை இணைக்கப்பட்டுள்ளது. குறிப்புரையாசிரியர்களின் உரைச்சிறப்புப் பற்றிய கட்டுரைகள் அமைந்துள்ளன. குருமகா சந்நிதானத்தின் ஆசியுரை ஒவ்வொரு திருமுறையிலும் இணைக்கப் பட்டுள்ளது.

இதுவரை ஞானசம்பந்தப் பெருமான் தேவாரப் பதிப்பு பற்றி ஒரு சில செய்திகளைக் கண்டறிந்தோம் என்ற மனநிறைவு பெறுவோமாக.

# 3. திருவைந்தெழுத்து

வ.ச. அபிராமவல்லி, சென்னை.

இறைவனைச் சிவலிங்க உருவிலே கண்டு, அவனே ஐந்தெழுத்தாகிய ஒலி வடிவிலும் உள்ளான் என்பதை உணர்ந்து திருவைந்தெழுத்து மந்திரம் ஓதப்பெறுகிறது. யோகியர், ஞானியர் சிவலிங்கத்தையே ஐந்தெழுத்தின் ஒலி வடிவிலே, அதனால் ஏற்படக்கூடிய அக உடலின் ஒளியிலே சிவலிங்கத்தை ஆன்ம சோதியாகக் கண்டு வழிபடுகின்றனர்.

ஐந்தெழுத்தின் வடிவமாகிய சிவன் தனது கூத்து இயற்றும்போது இந்த ஐந்து எழுத்துக்களும் எந்தெந்த உறுப்பிலே எவ்வாறு நின்று ஒலி செய்கின்றன என்பதை உண்மை விளக்கம் நமக்குக் காட்டுகிறது. அப்பாடல்,

**சிவன் அருள் ஆவி திரோதமலம் ஐந்தும்**
**அவன் எழுத்தஞ்சின் அடைவாம் - இவனின்று**
**நம்முதலா வோதி நடாது நாடுமருள்**
**சிம்முதலா வோது நீசென்று.** (உண்மை விளக்கம் - 41)

என்பதாகும். இப்பாடலில், சிவன், அருள், ஆவி, திரோதம், மலம் முதலியன முறையே சிவயநம என்ற ஐந்தெழுத்துக்களையும் குறிப்பன வாகும். இத்திருவைந்தெழுத்தினை - குருவின் மூலமாக உபதேசம் பெற்று ஓதப் பெறும் இதனை, வடமொழியில் 'பஞ்சாட்சரம்' என்பர். இது தூல பஞ்சாட்சரம், சூக்கும பஞ்சாட்சரம், அதிசூக்கும பஞ்சாட்சரம் என்று கூறப்படும்.

**தூல பஞ்சாட்சரம்**

நமசிவய என்பது உடம்பில் நிற்கும் நிலையாகும். கிரியை முறையில் நமசிவய என்பதைத் தூல பஞ்சாட்சரம் என்பர். வேதநெறியில் புற வழிபாடு நமசிவய ஆகும். இது உலகியல் நலன் கருதி வாழ்வோர்க் குரியது. நமசிவய என்ற ஐந்தெழுத்தும் முறையே மறைப்பு, மலம், சிவன், அருள், ஆன்மா என்பவற்றைக் குறிப்பதாக உள்ளது.

இறைவனைப் புறவடிவத்தில் கண்டு வணங்குவார்க்கு, மனதை ஒருமுகப்படுத்த நமசிவய திருவைந்தெழுத்து சிறந்த மந்திரமாகும். இதனைச் சித்தர் பொறிவழிப் பூசனை முறை என்பர். திருவைந்தெழுத்து களும் அவற்றிற்குரிய நிலைகளும் பற்றி,

ஆடும் படிகேள்நல் லம்பலத்தான் ஐயனே
நாடுந் திருவடியி லேநகரம் - கூடும்
மகரம் உதரம் வளர்தோள் சிகரம்
பகர்முகம் வாமுடியப் பார்

என்று உண்மை விளக்கம் எடுத்துரைக்கிறது. இதற்குரிய மேனிச் சக்கரம் கீழ்வருமாறு.




**சூக்கும பஞ்சாட்சரம்**

சிவயநம என்று சிந்தித்திருப்போர்க்கு அபாயம் ஒரு நாளும் இல்லை. சிவனோடு கலந்து வாழும் பெரு வாழ்விற்கு - அருள் வாழ்விற்குச் சிவயநம என்று ஓதுதலே சிறப்பு. இதனைச் சூக்கும பஞ்சாட்சரம் என்பர். ஆகம நெறியில் தியானத்திற்கு உரிய மந்திரம் சிவயநம என்பதேயாகும்.

சிவயநம என்பதில் யகரமாகிய ஆன்மா நமக்களை விட்டபோது சிவ என்பவற்றோடு பொருந்தும். இக்கருத்தினை,

**ஆறா றகன்று நமவிட் டறிவாகி**
**வேறான தானே யகாரமாய் மிக்கோங்கி**
**ஈறார் பரையின் இருளற்ற தற்பரன்**
**பேறார் சிவாய அடங்கும்பின் முத்தியே** (திருமந்திரம் - 2291)

என்று திருமந்திரம் பேசுகிறது. இதில் யகரமாகிய ஆன்மா நம என்று சுட்டி அறியும் யகரமாகிய ஆன்மா நம என்று சுட்டி அறியும் பொருள் களை நோக்கினால் சிவ என்ற பரை விளங்காது மறைந்து நிற்கும். சுட்டியறிதலை விட்டு அகண்ட அறிவான சிவத்தை நோக்கி மேல் சென்றால் நம மறைந்து சிவ என்ற பரை விளங்கும்.

இதையும் விட்டு நின்றால் சிவய என்ற சிவ சக்தியோடு கூடி யிருக்கும் நிலை ஏற்பட்டு முத்தியாகும். தற்பரன் சிவன். சிவா - சக்தி. ஆன்மாவாகிய யகரம் சேர்ந்தபோது சிவாய ஆயிற்று.

## அதிசூக்கும பஞ்சாட்சரம்

இருளைவிட்ட ஆன்மா சிவசத்தியைத் தாரகமாகக் கொண்டு அழிவற்ற நிலைபெறுவது. ஒளியில் நினைவும் அற்று அடங்கி இருத்தலே அதிசூக்கும பஞ்சாட்சரம் ஆகும். அதிசூக்கும பஞ்சாட்சரம் சிவாய சிவசிவ என்பதாகும். சிவாய சிவசிவ என்பது மலம் நீங்கிய சீவன் சிவசக்தியோடு ஒளிமயமாய் இருத்தலாகும்.

இதனை,

**சிவாய நமவெனச் சித்தம் ஒருக்கி**
**அவாயம் அறவே யடிமைய தாக்கிச்**
**சிவாய சிவசிவ வென்றென்றே சிந்தை**
**அவாயங் கெடநிற்க ஆனந்த மாமே**

என்று திருமந்திரம் அதிசூக்கும பஞ்சாட்சரத்தைப் பற்றி உரைக்கின்றது.

## திருஞானசம்பந்தரின் திருவைந்தெழுத்து

திருஞானசம்பந்தர் திருவைந்தெழுத்தின் சிறப்புகளை நமசிவாயத் திருப்பதிகத்திலும், பஞ்சாக்கரத் திருப்பதிகத்திலும் கூறியுள்ளார். நமசிவாயத் திருப்பதிகம் தூலபஞ்சாட்சரத்தை வெளிப்படக் கூறியதாக விளங்குவது. பஞ்சாக்கரத் திருப்பதிகம் ஐந்தெழுத்து என மட்டும் உரைப்பதாக உள்ளது.

## பஞ்சாக்கரத் திருப்பதிகம்

திருஞானசம்பந்தர் முன்நின்று அந்தணர் மறைநாக்கும் தந்தோம் என்றனர். திருஞானசம்பந்தரோ எல்லா மறைகளைக் கேட்டும், மந்திரங் களை அருளப்பெற்றும் விளங்கினார். அவர், அந்தணர்களுக்குத் தெரியும் வண்ணம் மந்திரங்களுக்கெல்லாம் முதன்மையானது திருவைந்தெழுத்தே என்று உணர்த்தினார். அவ்வாறு உணர்த்தப் பெற்றதே பஞ்சாக்கரப் பதிகம் ஆகும்.

## நமசிவாயத் திருப்பதிகம்

திருஞானசம்பந்தர் நம்பியாண்டார் நம்பி திருமகளை மணம் புரிய இசைந்தார். மண்ணவரும் விண்ணவரும், பண்ணவரும் திருமணம் காணவந்தனர். தவநெறி வளர்க்க வந்த சம்பந்தருக்கு 'என்னை முன்னாள் ஆண்டு அப்பண்புகூட மலர்ப்பாதம் காட்டும்' என்னும் நல்லுணர்வு ஏற்பட்டது. திருமணத்தைக் கண்டோர்க்கும் தீதறு பிறவிப்பாசம்

தீர்த்தல் செம்பொருளாகக் கொண்டு, 'நாதனே! நல்லூர்ப் பெருமண நம்பனே! உன் பாத மெய்ந்நிழல் சேரும் பருவம் ஈது' என்று பாடி யருளியது, இந்நமசிவாய திருப்பதிகம் - காதல் மெய்ப்பதிகம்.

## புராணக் குறிப்பின் மூலம் ஐந்தெழுத்து பரவல்

உறக்கத்திலும் விழிப்பிலும் உள்ளம் உருகி நினைந்து நாள்தோறும் வஞ்சமில்லாத நெஞ்சமுடன் இறைவனின் திருவடிகளை வழுத்துவோரை மாய்க்கவந்த கூற்றுவன் அஞ்சும்படி உதைத்தன திருவைந்தெழுத்து. இப்பொருள்பட வந்த பாடலில்,

**..................................வந்தகூற்**
**றஞ்சவு தைத்தன அஞ்செழுத்துமே** (3031)

என்ற வரிகள் மார்க்கண்டேயர் வாழ்த்தி வழிபட அவரை நோக்கி வந்த கூற்றுவனும் அஞ்சும்பட உதைத்தன ஐந்தெழுத்து என்கிறார்.

நமசிவாயத் திருப்பதிகத்திலும், திருவைந்தெழுத்தாகிய நமசிவய ஓத, கூற்றுவன் தூதரும் அஞ்சுவர் என்று குறிக்கின்றார்.

**கொல்லந மன்றமர் கொண்டு போமிடத்**
**தல்லல்கெ டுப்பன அஞ்செ ழுத்துமே** (3034)

என்பது பஞ்சாக்கரத் திருப்பதிகமாகும்.

இராவணனும் அவன் மனைவி மண்டோதரியும் பாடிப் பயன் பெற்று உய்யச் செய்ததும் திருவைந்தெழுத்தேயாகும்.

கைலாயத்தைத் தூக்கிக் கலக்கமுற்றபோது அக்கலக்கம் விலக்கி இராவணனைக் காத்தது நமசிவாய மந்திரமேயாகும்.

திருமாலும் நான்முகனும் காணமுடியாத சேவடிச்செவ்வி உணர்ந்து திருப்பெயர் வண்ணங்களைப் பேசியும் பிதற்றியும் திருவருள் பித்தர்களாகிய மெய்யடியார்க்கு உள்ளமும் உணர்வும் நிறையும் வண்ணம் ஆவன திருவைந்தெழுத்தேயாம். இக்கருத்தினைக் கொண்டதாக,

**போதன் போதன கண்ணனு மண்ணல்தன்**
**பாதந் தான்முடி நேடிய பண்பராய்**
**யாதுங் காண்பரி தாகி யலந்தவர்**
**ஓது நாம நமச்சி வாயவே.** (3328)

## வரலாற்றுக் குறிப்பின் மூலம் ஐந்தெழுத்து பரவல்

புத்தர் சமணர் முதலிய புறப்புறச் சமயத்தவர் பொய்களைப் பொருட் படுத்தாத சித்தத்தினையுடையவர் தெளிந்து தேறியன திருவைந்தெழுத்தே யாகும். சிவனடியார்மேற் போர்புரியப் பகைவர் எவர் வந்தாலும் அவரை

எதிர்த்து அம்புபோல் பாய்ந்தழிக்க வல்லது திருவைந்தெழுத்தே. புகலியர்கோனை எதிர்த்த புத்தநந்தி தலையில் இடிவிழச் செய்ததும் இப்பாசுரமாகும் என்பர்.

நமசிவாயத் திருப்பதிகமும்,

**கஞ்சி மண்டையர் கையிலுண் கையர்கள்**
**வெஞ்சொன் மிண்டர்................** (3329)

என்றே குறிக்கிறது.

**சம்பந்தரின் ஐந்தெண் காதல்**

திருவைந்தெழுத்தே மன்மதன் வாளி, ஐம்பூதம், கற்பகச் சோலை, அரவின் படம், கைவிரல் முதலியன ஐந்தைந்தாக அமைந்திருக்கும் உலகத் தோற்றத்திற்கு அடிப்படையாகும். இதனை,

**கொங்கலர் வன்மதன் வாளி யைந்தகத்**
**தங்குள பூதமு மஞ்ச வைப்பொழில்**
**தங்கர வின்பட மஞ்சுந் தம்முடை**
**அங்கையி லைவிர லஞ்செ ழுத்துமே** (3035)

என்று பஞ்சாக்கரத் திருப்பதிகத்தில் சம்பந்தர் பாடுகிறார்.

**ஆயிரம் திருநாமத்தில் ஆரணத் திருநாமம் நமசிவாயவே**

நமசிவாயத் திருப்பதிகத்தில் சம்பந்தர், நாதன், நம்பன், நக்கன், நெற்றி நயனன், நல்லார், நந்தி, வரதன், நஞ்சுண்டகண்டன் என்னும் பெயர்களையுடைய இறைவனின் திருநாமம் நமசிவய என்றே குறிக்கிறார். அது நான்மறை மெய்ப்பொருளாகவும் எவ்வுலகிற்கும் செம்பொற்றிலகமாகவும் விளங்குவது என்கிறார்.

**திருவைந்தெழுத்து ஓதும் முறை**

நமக்குண்டாகும் நலங்கொள் நாமம் திருவைந்தெழுத்தே. அதனை ஓதும்போது உள்ளம் காதலாகிக் கசிந்து கண்ணில் நீர் மல்கி நாநவிற்றல் வேண்டும். உள்ளம் நினைந்துருகி, ஆர்வம் பெருகிவர கையில் அக்க மாலையைக் கொண்டு உருவேற்றல் வேண்டும். ஓதுவதில் நயம் தானாக வருதல் வேண்டும்.

நைந்த உள்ளமுடன் நாவில் ஓதும் போதெல்லாம் பூந்தேனைப் போலினிக்கும் திருவைந்தெழுத்து.

**எல்லோரும் நல்லவரே**

திருவைந்தெழுத்தினை நாளும் ஓதுவாரிடம் புகுதற்குக் கூற்றுவர் அஞ்சுவர். ஓதுவார் நற்குணமிலராயினும், கொல்வாராயினும் அவர் தீங்கின்றி இன்புறுவர்.

மந்தர மலை ஒக்க மிகப்பெரும் பாவம் மேவியராயினும், ஏழ்நரகம் புகுந்தவராயினும் அவர் திருவைந்தெழுத்தினை ஓதினால் முறையே புண்ணியராயும் உருத்திரகணத்துள் ஒருவராயும் விடுவர்.

## திருவைந்தெழுத்தினை ஓதுவதால் ஏற்படும் பயன்

திருவைந்தெழுத்தை விதிப்படி ஓதுவார் அனைவரையும் நன்னெறியில் செலுத்தும், வானவராக வகை செய்யும், தீமையைத் தீர்க்கவும், வல்வினையை வாட்டும், வராத செல்வமும் வருவிக்கும்.

எந்நாளும் செல்வம் கொடுக்கும் நிலைத்த பெருங்கூத்து ஆடி உயர்வன உவப்பன செய்யும்.

திருவைந்தெழுத்தைத் துதித்து வரும் தொண்டர்க்கு அண்டம் அளிக்கும்.

திருநீற்றை அணிபவருடைய வினைப்பகையைக் கொன்று வெற்றி பெறுவதற்குப் பெரிய படைக்கருவியாகும்.

நான்மறையும் மந்திரமும் ஆகி வானவர் சிந்தையுள் நிலைத்து அவரை ஆள்வன. செந்தீயோம்பும் செய்ய வேதியர் சந்திதோறும் உருவேற்றும் திருமந்திரமாகத் திகழும்.

நல்லவர் தீயவர் என்று பாகுபாடு செய்யாமல் திருவைந்தெழுத்து மந்திரம் கூறும் அன்பர் அனைவர்க்கும் சிவமுத்தியைக் காட்டும்.

திருவைந்தெழுத்தின் விளக்கம், திருவைந்தெழுத்தின் வகையான தூல பஞ்சாட்சரம், சூக்கும பஞ்சாட்சரம், அதிசூக்கும பஞ்சாட்சரம் பற்றிய உண்மைகள், ஞானசம்பந்தர் கையாண்டிருக்கும் தன்மை, சம்பந்தர் பாடலில் வரலாற்றுக் குறிப்பிலும், புராணக் குறிப்பிலும் திருவைந்தெழுத்துச் சுட்டல், சம்பந்தருக்கு ஐந்து என்ற எண்ணின் மீது இருந்த காதல், திருவைந்தெழுத்தினை ஓதும் முறை, தீயவர் ஓதினாலும் நன்மையே பயக்கும் திறன், திருவைந்தெழுத்தினை ஓதினால் ஏற்படும் நற்பயன் முதலானவற்றை எடுத்துரைப்பதாக இக்கட்டுரை திருவைந்தெழுத்தின் பெருமையினை விளக்குகிறது.

# 4. ஆளுடைப் பிள்ளையும் ஆளுடை அரசும்

க. அன்பழகன், அண்ணாமலைநகர்.

ஆளுடைப் பிள்ளை என்றழைக்கப்படும் திருஞானசம்பந்தப் பெருமானும் ஆளுடை அரசு என்றழைக்கப்படும் திருநாவுக்கரசுப் பெருமானும் புறச்சமயங்களாகிய சமணமும் பௌத்தமும் சைவ சமயத்தை அழிக்க முனைப்புக் கொண்ட சூழலில் வீறுகொண்டு எழுந்தவர்கள். சமயத்தைக் காப்பாற்றி வைத்தவர்கள் இருவரின் சமய முழக்கமும் சைவ சமயத்தின் அடி வேரைக் காப்பாற்றி இருத்தி வைத்தன. இவர் களின் தொண்டு பற்றியே இக்கட்டுரை அமைகிறது.

## திருநாவுக்கரசரின் சமய முழக்கம்

பெற்றோரிட்ட பெயர் மருள் நீக்கியார். இளமையிலேயே பெற்றோரை இழந்து தமக்கை வளர்ப்பில் இருந்தார். தமக்கை இளம் வயதிலேயே கைம்பெண் கோலம் பூண மனம் வெறுத்து மருள் நீக்கியார் சமணம் புகுந்தார். அங்கு இவரது ஒழுக்க வாழ்வின் உயர்ச்சியால் 'தருமசேனர்' எனும் பட்டமும் சூட்டப்பெற்றார்.

இளமையில் தவக்கோலம் பூண்ட தம்பியை சைவ சமயத்திற்குக் கொணர தமக்கையார் சிவனை நோக்கிப் பலகாலம் தவம் செய்தார். அதன் பலனாகக் கடும் சூலை நோயைத் தந்து சைவ சமயத்திற்குக் கொண்டு வந்தார்.

சமணத் தொடர்பறுத்துச் சைவத்திற்கு வந்தபோது கிட்டத்தட்ட அறுபது வயதிற்கு மேற்பட்டிருக்கலாம் என்பர் சான்றோர். சைவம் சார்ந்த போது இறைவன் திருநாவுக்கரசு எனும் நாமம் சூட்டினான். அதன்பின் ஊர் ஊராகச் சென்று உழவாரப் பணி மேற்கொண்டார். இறைவனை வேண்டிச் சமண சமயத்தில் இருந்து வளர்ந்த உடம்பைத் தூய்மைப் படுத்த வேண்டி உடம்பில் சூலக்குறியும் இடபக்குறியும் பொறித்தருளப் பெற்றார்.

தமது எழுபதாவது வயதில் சீர்காழியில் சம்பந்தப் பெருமானைச் சந்திக்கும் வாய்ப்பு நிகழ்ந்தது. பின் இருவரும் இணைந்து சைவ சமயத்தை ஊர் ஊராகச் சென்று பரப்பினார்கள். சம்பந்தப் பெருமான் பாடிப் பரவினார். நாவுக்கரசர் பாடிப் பரவியதோடு உழவாரத் திருப்பணியும் செய்து வந்தார்.

நாவுக்கரசர் சமணம் விட்டு சைவம் சார்ந்ததால் சமணர்கள் அவருக்கு அளவற்ற தீங்குகளைச் செய்தனர். இறைவன் அருளால் இவற்றைக் களைந்தார். பழையாறை எனும் தலத்தில் 'வடதளி' எனும் கோயிலின் விமானம் வஞ்ச மனமுடைய சமணர்களால் மறைக்கப்பட்டதைக் கண்டு 'அம்மறைப்பு அகற்றினாலன்றிப் போகமாட்டேன்' என உண்ணாவிரதம் மேற்கொண்டார். பின் அரசன் புதிய விமானம் அமைத்த பின்னரே உண்ணா நோன்பைக் கைவிட்டார்.

**"வண்ணங் கண்டு நான் உம்மை**
**வணங்கியன்றிப் போகேன் என்று**
**எண்ணம் முடிக்கும் வாகீசர்**
**இருந்தார் அமுது செய்யாதே"**

என இந்நிகழ்ச்சியைச் சேக்கிழார் பெருமான் எடுத்துக் காட்டுகின்றார். உள்ளன்போடு இறைவழிபாடு செய்வதையே நாவரசர் தம் பாசுரங் களில் வற்புறுத்துகின்றார். வேடதாரிகளின் வழிபாட்டைக் கண்டு இறைவனே வெட்கப்பட்டு நிற்கிறான் என்கிறார்.

**"நெக்கு நெக்கு நினைப்பவர் நெஞ்சுளே**
**புக்கு நிற்கும் பொன்னார் சடைப் புண்ணியன்**
**பொக்கம் மிக்கவர் பூவும் நீரும் கண்டு**
**நக்கு நிற்பர் அவர்தம்மை நாணியே"**

**திருஞானசம்பந்தரின் சமய முழக்கம்**

தமிழ்மொழிக்கும் இசைக்கும் ஏற்றம் தந்தவர். தம்மைத் 'தமிழ் ஞானசம்பந்தன்' எனப் பல இடங்களில் அவரே கூறியுள்ளார்.

சைவ சமயத்தின் தலையாய கொள்கையாகச் சிவபெருமானை அன்றி வேறு எந்த தெய்வத்தையும் வழிபடலாகாது என்கிறார்.

**"கைச்சிறு மறியவன் கழல் அலால் பேணாக்**
**கருத்துடை ஞானசம்பந்தன்"**

பதிகந்தோறும் பாடல்களை அமைப்பதில் ஓர் ஒழுங்குமுறையைப் பெரும்பாலான பதிகங்களில் சம்பந்தப் பெருமான் மேற்கொண்டுள்ளார்.

தம் பதிகங்களைப் படனம் செய்பவர்களுக்குத் துன்பம் நீங்கும், இன்பம் பெருகும். மேலும் நாள் தவறாமல் படனம் செய்பவர்கள் ஊழ் வலியிலிருந்து விடுபடுவதோடு இப்பிறப்பிலேயே வீடுபேறு அடைவர் என்று உறுதியிட்டுக் கூறுகிறார்.

**"ஞானசம்பந்தன் வாய் நவிற்றிய தமிழ் மாலை**
**..........சொலக் கேட்டு உகந்தவர்தம்மை வாதியா**

**வினை; மறுமைக்கும் இம்மைக்கும் வருத்தம்
உந்து அடையாவே''**

என்றும்,

**''நான்மறை நாவன் நற்றமிழ்க்கு இன்துணை
ஞானசம்பந்தன்..பத்தும் வல்லார் போய்,
வெந்துயர் கெடுகிட விண்ணவரோடும் வீடு
பெற்று, இம்மையின் வீடு எளிதாமே''**

புற சமயங்களோடு வாதிட்டுச் சைவ சமயத்தை நிலைநாட்டியவர். திருநீற்றின் பெருமையைப் பாடிப் பரவியவர்.

## ஆளுடைப் பிள்ளையும் ஆளுடை அரசும்

சம்பந்தப் பெருமானும் நாவுக்கரசுப் பெருந்தகையும் இணைந்து பணியாற்றி சைவ சமயத்தின் பெருமையை அழியாது தூக்கி நிறுத்தினார்கள். இவர்களால் சமண இருள் சூழ்ந்திருந்த தமிழ்நாடு ஒளி பெற்றது. சமண மன்னர்கள் பலர் சைவர்களாக மாறினார்கள். இன்றைக்கும் சைவம் நிலைத்திருக்க இவர்களே காரணம். ''சைவப் புண்ணியக் கண்கள்'' எனச் சேக்கிழார் பெருமான் இவர்களைப் போற்றுகிறார்.

இருவரும் பல திருப்பதிகளை வழிபடப் புறப்பட்டனர். அரசுவைப் பிரிய மனமில்லாத பிள்ளை சிவிகை பின்வர நடந்து சென்றார். இறைவன் ஆணைப்படி திருவீழிமிழலைத் திருக்கோயில் உட்புகுந்து இறைவனைக் கண்டு மகிழ்ந்து ''மைம்மருபூங்குழல்'' எனும் திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினார்.

மழையின்மையால் பஞ்சம் ஏற்பட்டு உயிர்கள் வாடின. இறைவனை வேண்ட கனவில் வந்து படிக்காசு தருவேன் என்க அவ்வாறு பெற்றனர். ஞானசம்பந்தரின் காசுக்கு வட்டம் கேட்க இறைவன் அதற்கு அருள் செய்ய அதன்படி நல்ல காசு பெற திருப்பதிகம் பாடினார்.

**''வாசி தீரவே காசு நல்குவீர்
மாசின் மிழலையீர் ஏசல் இல்லையே''**

இதனால் மழைபெய்து பஞ்சம் நீங்கியது.

பல தலங்களை வழிபட்டுத் திருமறைக்காட்டை அடைந்து அங்கு வடமொழி வேதங்களால் அடைக்கப்பட்டிருந்த வாயில் கதவைத் திறக்கப் பாடும்படி அரசரைப் பிள்ளையார் வேண்ட நாவுக்கரசர் இசைந்து ''பண்ணினேர் மொழியாள் உமை பங்கரோ'' எனும் திருப்பதிகம் பாட அடைந்து கிடந்த கதவு திறந்தது. மகிழ்ச்சியோடு கோயில் உள்நுழைந்து பாடி வணங்கி வெளியே வந்தபின் திருக்கதவம் அடைக்கப் பிள்ளையாரைப்

பாடும்படி அரசு வேண்ட பிள்ளையாரும் ''சதுரம் மறைதான்'' எனும் திருப்பாடலைப் பாட கதவு தானே அடைத்துக் கொண்டது.

பாண்டிமாதேவியாகிய மங்கையர்க்கரசி, அமைச்சர் குலச்சிறையார் வேண்டுகோளுக்கிணங்க இறைவன் திருவுள்ளம் எண்ணி நாவுக்கரசரிடம் வேண்டிப் பிரிந்து பாண்டிநாடு வந்தார். இதற்கு முன்னதாக ''வேயுறு தோளி பங்கன்'' எனத் தொடங்கும் பதிகம் பாடினார். பாண்டி நாட்டில் சம்பந்தர் தங்கியிருந்த மடத்திற்கு தீ மூட்டிய சமணர்களின் செயலை வெப்பு நோயாக மாற்றிப் பாண்டியனுக்குப் பரவச் செய்தார். பின் தானே இருந்து திருநீற்றுப் பெருமை உணர்த்தி நீக்கினார். சைவர்களை வாதில் வெல்ல அழைத்த புத்தநந்தி என்பவனின் தலை அறுபடச் செய்தவர் பிள்ளையாரின் திருமுறைகளை ஏட்டில் எழுதும் பெருமையுடைய அடியவர் ஒருவர்!

ஆளுடை அரசு பல்லாண்டுகள் சமணத்தில் இருந்து தமக்கையார் திலகவதியின் திருத்தொண்டினால் சமயம் வந்து சேர்ந்தவர். தம்மை அர்ப்பணம் செய்து கொண்டவர்.

சைவ சமயம் சார்ந்ததும் சமணர்கள் பல இன்னல்களைச் செய்தார்கள். நீற்றறையில் இட்டபோது ''மாசில் வீணையும்'' எனும் திருப்பதிகம் பாடி வெளியில் வந்தார். நஞ்சு கலந்த பால் உணவைத் தந்தபோது,

**''துஞ்சிருள் காலை - மாலை தொடர்ச்சியை மறந்திராதே**
**அஞ்செழுத்து ஓதின் நாளும் அரன் அடிக்கு அன்பதாகும்**
**வஞ்சனை பாற்சோறாக்கி, வழக்கிலா அமணர்தந்த**
**நஞ்சு அமுது ஆக்குவித்தார் நனிபள்ளி அடிகளாரே''**

என்று பாடுகிறார். பின் மதயானையைக் கட்டவிழ்த்துக் கொல்ல முயன்றும், கல்லினால் கடலில் கட்டிவிட்டு இறைவன் அருளால் பதிகம்பாடி உயிர்த்து வந்தார். சமண அழுக்கைப் போக்க இறைவனை வேண்டி தம்முடலில் இடபக்குறி, சூலக்குறி பொறித்துக் கொண்டார். தன்மேல் அன்பு கொண்ட அப்பூதியடிகளின் விடம் தீண்ட இறந்த மகனை ''ஒன்று சொலாம் அவர் சிந்தை'' எனும் திருப்பதிகம் பாடி எழுப்பி வைத்தார். பல தலங்களுக்குச் சென்றார். சம்பந்தருடன் தல யாத்திரை மேற் கொண்டார். திருவையாற்றில் கயிலைக் கோலம் கண்டார்.

இருவருடைய தொண்டுள்ளங்களைப் பார்க்கிறபோது பின்வருவன மனசுள் பதிவாகின்றன.

1. இருவருமே ''அன்பே சிவம்'' என்ற சிந்தை கொண்டவர்கள். உலகு எல்லாம் சிவமயம். அவன் அன்றி எதுவும் இல்லை என்பதில் தெளிவாக இருந்தார்கள்.

2. சைவ சமயத்தை உயிராக எண்ணிப் பரப்பியவர்கள். தொண்டே சிறந்தது என உணர வைத்தவர்கள். இறைவன் முன் எந்தப் பேதமும் இல்லை என்று காட்டியவர்கள்.

3. வயது வேறுபாடு இருந்தும் ஒருவரையொருவர் வேண்ட இறைவன் திருவுள்ளம் எனத் தொண்டு செய்தவர்கள். இறந்தோரை உயிர்க்க வைத்தும், இறையை உணராதவர்க்கு அன்பாக உணர்த்தியும், எதுவாகயிருப்பினும் இறைவன் திருவுள்ளம் வேண்டியும் செய்தனர்.

4. அனைத்தும் இறைவன் ஆணைப்படியே நடப்பவை என்று உலகுக்கு உணர்த்தியவர்கள்.

5. ஆணவம், கன்மம், மாயை எனும் மும்மலங்கள் நீக்கப்படவேண்டும். இளமை, உயிர், யாக்கை, செல்வம் இவை நிலையாமை தன்மை யுடையது. இறைவனே நிலையானவன். அவனே எல்லாமும் என்று உணர வைத்தவர்கள்.

6. அன்பு காட்டல், பணிவு, சகிப்புத்தன்மை, மனிதநேயம், பொறுமை, பெரியோரை மதித்தல், 'நான்' அகற்றியிருத்தல் போன்றவை மனிதப் பண்புகள். இவற்றுடன் வீடுபேறு அடைய இறைவனே ஒரே வழி சைவ சமயமே சிறந்த வழி என்று காட்டியவர்கள்.

சம்பந்தப் பெருமானும், நாவுக்கரசுப் பெருந்தகையும் சைவம் தழைக்கப் பாடுபட்டவர்கள். மனிதனுக்கு ஏற்படும் பழி, பாவங்களி லிருந்து காப்பாற்ற சைவப் பெருமையையும் இறைவன் பெருமையையும் உணர்த்தியவர்கள். சமணமும் பௌத்தமும் தங்கள் தங்கள் நெறிகளால் தெளிவற்ற போக்கை மக்கள் மனத்திலே உருவாக்கி வைத்திருந்தன. அவற்றை மாற்றி மக்களின் மனத்தில் தெம்பையும், தெளிவையும் இவ்விரு பெருமக்களின் அருளுரைகள் உருவாக்கின. சைவ சமயத்தின் மறுமலர்ச்சி காலமாக இவர்கள் காலம் அமைந்தது. கோயில்களில் வழிபாடுகள் தொடர்ந்து நடைபெற்றன. இசைக்கலையும் நடனக்கலையும் ஏற்றம் பெற்றன. பல மனிதப் பண்புகளை உருவாக்கினார்கள். புறச் சமய இருள் நீங்கித் தமிழகம் சைவ ஒளி பெற்றது. மக்கள் அடையும் நற்பயன்களை இருவரும் உருவாக்கித் தந்தார்கள். சைவப் புண்ணியக் கண்கள் என்று இருவரையும் சேக்கிழார் பெருமான் போற்றியது மீண்டும் இங்கு நினைத்தற்குரியது.

# 5. சம்பந்தரின் பிற சமய அணுகுமுறை

அன்னி தாமசு, சென்னை.

திருஞானசம்பந்தரின் பெரும்பான்மையான தேவாரப் பதிகங்களின் பத்தாவது பாடல்கள், அவரது பிற சமய அணுகுதலை அறிய உதவுகின்றன. நான்கு அடிப் பாடல்களில், பெரும்பாலும் முதலிரு அடிகள் இக்கருத்தாக்கத்திற்குக் களன் வழங்கும்; அருகி ஓரடி, இடையடிகள் அல்லது பின்னடிகள் என்பதும் உண்டு. இவர், 383 பதிகம் பாடியதால் (385 என்ற கருத்தும் உளது), 383 முறை இப்பிற சமயத் தகவல் கிடைக்குமென எதிர்பார்க்கக் கூடும். எனினும் இதில் சிறிது வேறுபாடும் உண்டு. புறச்சமயக் கருத்து வராத பதிகம் உண்டு; பத்தாவது பாடலிலன்றி அருகி ஒன்பதாவது அல்லது பதினோராவது பாடலில் இத்தகு கருத்து அமைவதும் உளது. பொதுப்பார்வையில், பத்திலொரு பாடலில் பிற சமய அணுகுதல் காணப்படுவதாக அறுதியிடினும், தனி - முழு பதிகத்திலும் இப்பாங்கு அருகி அமைவதைச் சுட்டல் தேவையாகும். படர்க்கையாகக் கருத்துத் தெரிவிக்கும் சூழலுக்கு மாறுபட்டு, சமயவாதச் சூழலில் நேராகக் கூறும் - மோதும் - பாங்கு ஏற்படுவது, இதன் அடித்தளம் அமைக்கும்.

முதல் திருமுறையின் 136 பதிகங்களையும் களமாக்கிப் பார்க்கும் போது, பிற சமயக் குறிப்பு இல்லாதனவாக எட்டுப் பதிகங்கள் (56, 57, 60, 73, 78, 87, 127, 128) அமைகின்றன. அகப்பாடலாக அமைதல் (56, 60, 73), சித்திரக் கவி நிலை (ஏகபாதம் - 127; எழுகூற்றிருக்கை - 128), பத்தாம் பாடலில் மால் - அயன் பற்றிய செய்திக்கு இடங்கொளல் (57, 78, 87) என்பன இக்குறிப்பில்லாமைச் சூழலாகும். பிறசமயக் குறிப்பு ஒன்பதாம் பாடலில் (63) அல்லது பதினோராம் பாடலில் (45, 90, 117) வருவது, 12 பாடலுள்ள பதிகங்களின் இயல்பாகும். முழுமையான பதிகங்கள் புறச்சமய எண்ணங்கட்கு இடந்தரல் முதல் திருமுறையில் அமைந்திலது. ஞானசம்பந்தருக்கும் சமணருக்கும் இடையே தத்தம் சமயத்திறம் நாட்டும் - நிரூபிக்கும் சூழல் தந்த பதிகங்களுள் 305, 309, 366 என்பன, எல்லாப் பாடலிலும் பிற சமயத் தரவு அளிக்கின்றன. சம்பந்தரின் பிற சமய அணுகுமுறையைக் கணிக்க, இவற்றையும் உட்கொண்டு காணல் இயலும்.

பிற சமய அணுகுதல் என்பதன் பல்பரிமாணங்கள் - பன்முகங்கள் பற்றிச் சிந்தித்தல் முகப்புத் தேவையாகும். பிற சமய அணுகுதல், சமய

மறுப்பாக, எதிர்ப்பாக, ஒறுப்பாக, வெறுப்பாக, காழ்ப்பாக, இழிப்பாக அமையலாமோ என எண்ணலாம். தம் சமயம் - பிறசமயம்/புறச் சமயம் என்ற கருத்தாக்கம் இதன் அடிப்படையாகும். அப்பிற/புறச்சமயம் ஒன்றாகவோ பலவாகவோ இருக்கலாம். புறமதம் ஒன்றன் தகுதி யின்மை அல்லது தேவையின்மை என்பன ஒருபாலும், தன் மதத்தின் செவ்வி பற்றிய அடிப்படை உணர்வு மறுபாலும் சமய மறுப்புக்கு இடன் வழங்கும். பிற சமயத்தை வெறுத்தல் என்பதோ, பிற சமயத்தினரைப் பொறுத்துக்கொள்ள இயலாமை - சகிக்க முடியாமை - என்பதோ மட்டும் மறுப்பு ஆகாது. அப்பிற/புறச் சமயத்தின் கோட்பாடுகளை மறுத்துரைத்தல், அச்சமயத்தில் காணப்படும் பொருந்தாமைக் கூறுகளைக் கேள்விகேட்டல், தருக்கரீதியாக அச்சமயத்தின் ஒரு கருத்தைப் பயன் கொண்டு அதன் மற்றொரு கருத்தை மறுத்தல், நடைமுறைக்கு ஒவ்வா நிலைகளை எடுத்துக்காட்டல், கடுமையாக விமர்சித்தல் என்று பலவாறு எதிர்ப்பு அமைதல் கூடும். இம்மையப் பகுதியையடுத்த வெளிவட்ட மாகவே, அப்பிறமதத்தினரை, அவர் ஒழுகலாறுகளை, அவர் பழக்க வழக்கப் பண்பாடுகளை விமர்சித்தலும், அவற்றின் தகுதியோ தகைமையோ இன்மை பற்றிக் கடிந்து கொள்ளுதலும் காணப்படலாம். சமயவாதமும் எழலாம்.

சொற்போர் அல்லது வாதமிடுதல் என்பது தமிழிலக்கியத்தில் பழங் கருத்தாகும். காப்பியங்களில் சமயவாதியாகப் பெண் வருதலும், வெற்றி பெறலும், காப்பியத் தலைவியாக அவளே அமைதலும் காணப்படுகிறது (பார்க்க: 'சமய வாதியாக - பெண்', தமிழர் சமூகவியல், அன்னி தாமசு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2000, ப. 49-57). பிற சமயக் கருத்தை மறுத்தல் என்பது நோக்கமாக இங்கமைய, தம் சமய எண்ணங்களை வலியுறுத்தல் என்பதுடன், பிற சமயம் பற்றிய தம் அணுகுதலையும் கூறல் என்பது சம்பந்தரிடம் புலப்படுகிறது. இதனால், பிற சமய மறுப்புடன் அமைந்துவிடாது, அதே பாடலின் பிற அடிகளில், தம் சமயச் சிந்தனைகளைக் கூறல், சித்தாந்தங்களைக் கைப்பற்ற வேண்டல், அதன் இனிமை - எளிமை சுட்டல், ஈடேற்ற வழி அதுவே என வலியுறுத்தல், தன்னனுபவச் சான்று காட்டல் என்ற தன்னிலைப்பாடு களுக்கும் களன் ஏற்படுகிறது. பிற சமயம் பற்றிச் சுட்டுவதுடன் அமைந்து விடாது, அத்தகையனவற்றைப் பின்பற்ற வேண்டாம், அவற்றிலிருந்து விலகியிருக்க வேண்டும் எனக் கோரிக்கை வைத்தலும், அவர் பேச்சைக் கேட்க வேண்டாம் எனப் பிறருக்கும் தன் நெஞ்சுக்கும் அறிவுறுத்தலும் பாடுபொருளாம்.

சம்பந்தர் பிற சமயத்தவரை எப்படிச் சுட்டுகிறார், பெயர் சுட்டிக் கூறுவதில் என்ன முறை கையாளுகிறார், என்ன - எத்தனை சமயத்தவர்

பற்றித் தெரிய முடிகிறது, நேரடியாகவோ அன்றியோ குறிப்பிடும்போது அடை - சொல் - தொடர்களால் பெறமுடியும் தகவல்கள் என்ன, சமயம் பற்றிக் கூறுதற்கும் சமயத்தினர் குறித்துச் சொல்லுதற்கும் வேறுபாடேதேனும் உளவா, சமயக் கோட்பாடோ சாத்திரமோ நெறியோ ஏற்கப்படலாகாது என்பதற்குக் காரணம் கூறப்படுகிறதா, பிற சமயத்தினரின் பேச்சு - உரை, வாதம், நூல் பற்றிய இவர் கருத்தென்ன - என்பன போன்ற பல சிந்தனைகளுக்குப் பாடலடிகள் களன் வழங்கும்.

இடைக்கால வைதீக சமய எழுச்சியின்போது, எதிர்க்கப்பட வேண்டிய எதிரணிச் சமயங்களாகச் சமணமும் பௌத்தமும் அமைந்ததால் அவ்விரண்டனைச் சம்பந்தர் குறிப்பிடுகிறார். சமணரை, அமண், அருகர் எனவும் புத்தரைச் சாக்கியர், தேரர் எனவும் வேறு சொற்களாலும் குறிப்பிடுகின்றார். இப்பிற சமயத்தவரை வெளிப்படையாகப் பெயர் சுட்டிக் குறிப்பிடுதலுடன், உய்த்துணர வைத்தலும் இவரிடம் உண்டு. அமண் (3, 9, 16), அமணர் (40, 72, 74), அருகர் (12, 89), சமண் (1, 4, 11, 17), சமணர் (14, 21, 51), சாக்கியர் (7, 41), தேரர் (9, 25, 49), புத்தர் (1, 14) எனப் பெயர் சுட்டுவதுடன் இவ்விரு திறத்தினரையும் பலவாறு இணையாக்கித் தருவதும் இவரிடம் உண்டு. ஒரே எதிர்ப்புக் கணையால் இருவேறு புறச்சமயிகளையும் வீழ்த்தல் என்ற உத்தியாக இதனைக் கருதலாம். அமண் சாக்கியர் (3),அமண் தேரர் (6), அமணர்கள் சாக்கியர்கள் (113), அமணொடு தேரர் (37), அருகரொடு புத்தர் (12), சமண்குண்டர் சாக்கியர் (103), சமண்சாக்கியர் (8, 31, 34, 134), சமண்டேரர் (95), சமணர் சாக்கியர் (24, 50, 86, 102, 115), சமணர் புத்தர் (15), சமணரும் தேரரும் (79), சமணும் புத்தரும் (4), சாக்கியர் சமணர் (75), தேரமண் (94, 135), தேரர் அமணர் (90, 93) தேரர்கள் சாக்கியர் (2), புத்தர் அருகர் (89), புத்தரோடு சமணர் (47) எனச் சான்று பல்கும். புத்த சமயப் பிரிவுகளாகத் தேர சாக்கியங் களமையும் எனும் கருத்து இங்குச் சுட்டற்குரியது.

வெளிப்பட மொழிதல், பெயரில் மட்டுமமையாது வகைமொழி யிலும் உள்ளமை கருதற்குரியது. சொல்லும், அடையும் வழி இழிவு சுட்டுதல் பழிகரப்பாகவன்றிச் செம்பொருளாக அமைந்து விடுகின்றது. குண்டர் (39, 41, 119), பிராந்தர் (27), பேய் (76, 77, 119), மிண்டர் (112, 130, 133) போன்று சான்று உள. மேலும், அறிவில் சிறு தேரர் (74), இழி தொழில் சேர் சாக்கியர் (132), சிந்தை இல் சமணர் (110), துன்மதியமணர் (124), புன்சமணர் (51), மதியில் தேரர் (70), வஞ்சச்சாக்கியர் (68), வெஞ்சமணர் (50) என அடையடுத்து வருதலும் உள.

இவ்வாறு பிற மதத்தினரை வெளிப்படையாகச் சுட்ட, அவ்வாறன்றிக் குறிப்பாக உணர வைப்பதிலும் சில வகைமைகள் காணப்படுகின்றன.

புத்தனுக்குப் போதியும், அருகனுக்குப் பிண்டியும் (அசோகு) தொடர்புடைய மரங்களாகையால், போதியவர் (16), போதியாரும் பிண்டியாரும் (66), போதியர் பிண்டியர் (107) என அவற்றடிப்படையில் சுட்டல் ஒரு முறை. மற்றொன்று, அவரது உடை, உணவு, நீராடாமை, மயிர் பறித்தல், பீலி கைக்கொள்ளல் போன்ற பழக்க வழக்கம் வழி உணர்த்த லாகும். இவ்வாறு பல பதிகங்கள் உள (5, 10, 13, 22, 27, 29, 36, 43, 46, 48, 53, 55, 58, 59, 65, 67, 80, 81, 82, 83, 88, 91, 92, 98, 100, 101, 104, 105, 109, 111, 112, 122, 123, 131). பெயர் சுட்டி வரும் பாடல்களில் வந்த செய்திகளே இங்குப் பெயர் சுட்டாதவிடத்தும் பெரும்பாலும் வருகிறது என்றாலும், ஒருமுறை சொன்னது போன்று வேறொரு முறை கூறுவதில்லை சம்பந்தர். இது அவர் படைப்புத் திறனை வெளிப்படுத்துகிறது.

உடைவகை, உடையின்மை என்ற இரு நிலையும் உடைப் பழக்கத்தில் உட்படும்.

**மூத்துவராடையினாரும் மூசு கடுப்பொடி யாரும்** (43)

**நாணாது உடை நீத்தோர்களும்** (98)

**உண்டுடுக்கை இன்றியே ஊர்நகவே திரிவார்**
**கண்டுடுக்கை மெய்யிற் போர்த்தார்** (65)

என இந்நிலை வகைமை காட்டும். உணவு வகை, உண்ணும் முறை என்பன சுட்டல் இவரை அடையாளம் காட்டும்.

**மாசடைந்த மேனியாரு மனந் திரியாத கஞ்சி**
**நேசடைந்த வூணினாரு நேசமிலாத தென்னே** (48)

**நின்றுண் சமணர் இருந்துண் தேரர்** (71)

கஞ்சி உண்ணுதல் என்பது இவரை வேறுபடுத்திக் காட்டியுள்ளது. குளித்துணா அமணர் (114), காலையில் உண்பவரும் (108), தம் கை இட உண்பார் (81) என்பனவும் அவரது உணவு முறைப் பழக்கத்தை விதந்து ஓதுகின்றன. ஆலும் மயிலின் பீலி அமணர் (74), பிச்சக் குடை நீழற் சமணர் (86), குடை மயிலின தழை மருவிய உருவினர் (122) என்பன மயிற்பீலி கைக்கொண்ட சமணர் பழக்கத்தை எடுத்துக் காட்டும். பறிகொள் தலையினர் (92), தட்டை யிடுக்கித் தலையைப் பறித்து (69) என்பன போன்று மயிர் பறித்தலும்; அலையார் புனலை நீத்தவரும் (64), கண்டான் கழுவாமுன்னே ஓடி (67) என நீராடாமையும் பன்முறை சுட்டப் படுவதுண்டு.

இந்த அளவு கூட உய்த்துணரற்கு இடமின்றி, மிகவும் பொதுப்படை யாகவும் கூறல் சம்பந்தரிடமுண்டு. குறிப்பிட்ட புறச்சமயத்தினர் என வெளிப்படாது, ஊகிக்க மட்டும் வாய்ப்புத் தரலாக இது அமையும்.

**போழம் பலபேசிப் போது சாற்றித் திரிவாரும்**
**வேழம் வருமளவும் வெயிலே துற்றித் திரிவாரும் (45)**

**பொல்லார் புறங்கூற அல்லார் அலர்தூற்ற (84)**

**நாணொடு கூடிய சாயினரேனும் நகுவ ரவரிருபோதும்**
**ஊணொடு கூடிய வுட்கு நகையால் உரைகள் அவைகொள வேண்டா (44)**

என்பன அச்சான்றுகளாம். குறிப்புகள் வரும் இடம் பற்றிப் புத்த சமணரைக் கருதுவதுடன், சம்பந்தர், தம் காலத்துப் புறச்சமயங்கள் எல்லாவற்றையும் கருதச் செய்தார் எனவும் கொள்ளலாம்.

தாம் ஒரு சமயத்தினராக இருப்பதால் மட்டுமே மற்றொரு மற்றப் பிற - சமயத்தை மறுக்க வேண்டுமென்ற தேவையில்லை. ஏன் மறுக்கிறார் என்ற கருத்தைப் பன்மடியாகப் பதிகமொன்றில் அமைக்கின்றார் சம்பந்தர். சமணரை வாதில் வென்றழிக்க இறைவன் திருவருளை நாடி வேண்டும் போது (366) இக்கருத்துகள் தரப்படுகின்றன. அவர்கள், வேத வேள்வியை நிந்தனை செய்கின்றனர்; வைதிகத்தின்வழி ஒழுகுவதில்லை; மறைவழக்கம் இல்லாத மாபாவிகள்; அந்தணாளர் புரியும் அருமறையைச் சிந்தை செய்யாதவர்; யாகம் செய்தல் தேவையில்லை என்கின்றனர் என்பன போல் இக்கருத்துகள் அமையும். பாண்டியனது சுரப் பிணியைத் தீர்க்கவும் சமணரை வாதில் வெல்லவும் இறையருள் வேண்டுமிடத்தும் சம்பந்தரின் இத்தகு சிந்தனை புலப்படும் (305). தவ வேடத்தர், வேள்வி செய்யாதவர்; ஓதி ஒத்து அறியாதவர்; மேலை வீடு (மோட்சம்) உணராதவர் என்பன போல் இவை அமையும். இவ்வளவு தெளிவாகவும் வெளிப்படையாகவும் இன்றெனினும், முதல் திருமுறையின் பாடல் களிலிருந்தும் இத்தகு எதிர்ப்புக் களத்தை ஓரளவு வெளிப்படுத்திக் காண இயலும்.

சமயப் போராட்டம் நிகழ்ந்த காலச் சூழல் ஆகையால், பிற சமயம் பற்றிய 'எதிர்ப்பு அணுகுதல்' இயல்பு எனக் கருதலாம். பழிப்போ இழிப்போ காரணம் சுட்டித் தரப்பெறும்போது, கருத்தழுத்தமும் வலுவும் பெறுகின்றன. தற்சார்புடனும், தற்சாரா நிலையிலும் இவ்வெண்ணங்கள் தரப்பட முடியும். தாம் வழிபடும் இறைவனான சிவனைப் பிற சமயத்தினர் உணராமை என்பதே ஞானசம்பந்தர், எதிர்ப்புத் தெரிவிக்க வேண்டிய அடிப்படைச் சூழல் ஆயிற்று.

**மாசு ஏறிய உடலார் அமண் குழுக்களொடு தேரர்**
**தேசு ஏறிய பாதம் வணங்காமைத் *தெரியா* னூர் (9)**

**அருகரொடு புத்தரவ *ரறியா* வரன் மலையான்**
**மருகன் வருமிடபக் கொடி யுடையானிடம் (12)**

சிவனை இவர்கள் தெரியார்; அறியார். 'அன்று முப்புரம் செற்ற அழக! நின் துன்று பொற்கழல் பேணா அருகர்' (366) என அவரை இறைவன் அடி சேராதாராகப் பிறவிடத்தும் உணர்த்துவார் சம்பந்தர். மேலும், சிவன், அவர்கள் உரைக்கு அப்பாற்பட்டவன், அவர்களைக் கடிந்தவன் - வென்றவன் - அழித்தவன் என்பதும் எதிர்ப்புக் களம் போலும்.

**பின்னிய தாழ்சடையார் பிதற்றும் பேதையராம் சமண் சாக்கியர்கள்**
**தன்னியலும் உரை கொள்ளகில்லாச் சைவர்** (8)

என உரைக்கு அப்பாற்பட்ட நிலை அமையும். 'கூப்பிலர் செப்பிலராகி' (42) என்பதால் அவர்கள் சிவனை வணங்குவதோ அவன் நாமத்தை உச்சரிப்பதோ இல்லை என்பது தரப்படுகிறது. 'தேர ரமணரைச் சேர்வில் கொச்சைமன்' (90), 'கடுக்கொள் சீவரை அடக்கினான் ஆரூர்' (91), துவர் உடை உடல் பொதியவர் கெட (20) என்பன பிற மதத்தினரை அவன் அடிப்படுத்தியதை உணர்த்தும்.

**குளித்துணா அமணர் குண்டாக்க ரென்றும்**
**களித்து நன்கழலடி காணலு(ற்)றார்** (114)

என்பதால், அவர்கள் தம் சமயம் விட்டு நீங்கி - மதம் மாறி - வரவேண்டுமென்ற அவாவினராகச் சம்பந்தர் அமைவது தெரிகிறது. ஐம்பூதங்களுக்கு முதல்வனான இறைவனை இவர்கள் 'இல்லை' என்பது (கடவுள் மறுப்புக் கொள்கை - atheism) சம்பந்தரால் சிறிதும் பொறுத்துக் கொள்ள முடியாததாக அமைகிறது.

**வையகம் நீர் தீ வாயுவும் விண்ணும் முதலானான்**
**மெய்யல தேரர் உண்டிலை யென்றே நின்றே தம்**
**கையினி லுண்போர் காண வொணாதான்** (97)

சிவனை அறியாததோடு, அவனையும் அம்மதத்தையும் பழிக்கின்றனர் என்பதும் சமண பௌத்தரைச் சம்பந்தர் மறுத்துரைக்கக் களனாகும். புறவுரை (109, 125), அலர் என்ற சொற்கள் இக்கருத்துத் தரப் பயின்று பயன்கொள்ளப் பட்டுள்ளன.

**புத்தரோடு பொறியில் சமணும் புறங்கூற** (1)

**புத்தரொடு பொல்லா மனச்சமணர் புறங்கூற** (14)

'புறங்கூற' (40, 88) என்பதால், நேர் நின்று விமர்சிக்கவோ எதிர்க்கவோ முடியாது. மறைவாகப் புறம் பழிக்கின்றனர் எனவும் கொள்ளலாம். அகத்திற்கு உரிய 'அலர்' இங்குப் புறத்திற்கு ஆக்கப்படுகின்றது:

**சமண் சாக்கியர் தான்அலர் தூற்ற அமைந்தான்** (34)

**சிக்கார் துவராடைச் சிறு தட்டுடையாரும்**
**நக்காங் கலர் தூற்றுந் நம்பான் உறை கோயில்** (82)

**பிச்சக் குடை நீழற் சமண் சாக்கியர்**
**நிச்ச மலர் தூற்ற நின்ற பெருமானை** (86)

என்ன புறங்கூறுகிறார்கள், எவ்வாறு அலர் தூற்றுகின்றனர் என்பது கேள்வி. நேரடியாகவன்றி, பொதுப்படையாகவே விளக்கம் கிடைக்கிறது. வாயில் வந்தவாறு பேசுகிறார்கள் என்பது, 'கண்டவாறு உரைத்து' (41) எனவும், சொல்லக் கூடாதன சொல்லுகிறார்கள் என்பது 'மொழிவல்லன சொல்லிய போதும்' (37) எனவும், பொருந்தாததைச் சொல்லுகிறார்கள் என்பது 'அடையாதன சொல்லுவர்' (30), 'உரையோடு உரை ஒவ்வாது' (46) எனவும், அவர்களுடைய உரை மாறுபாடுடையது என்பது 'போழம் பல பேசி' (45) எனவும் வருகின்றன. மக்களை வழிதவறச் செய்வன என்பதால் இவர்கள் பேச்சு, பொய்ம்மொழி எனவும் கவர் மொழி எனவும் எடுத்துச் சொல்லப்படுகின்றது.

**துவராடையர் தோல் உடையர்கள்**
**கவர் வாய்மொழி காதல் செய்யாதே** (36)

**மூத்துவராடையினாரும் மூசு கடுப்பொடியாரும்**
**நாத்துவர் பொய்ம்மொழியார்கள் நயம் இலராம்** (43)

**புத்தரோடு புன்சமணர் பொய் உரையே உரைத்து** (51)

இவற்றிலிருந்து இரு கருத்துகள் தேரலாம். ஒன்று, சைவம் பற்றி இவர்கள் பழித்து உரைக்கின்றனர்; அவை பொருத்தமற்ற பழிப்புரை என்பது. மற்றொன்று, தம் மதம் பற்றி இவர் கூறுவன ஏற்கத்தக்கனவாக அமையவில்லை என்பது.

இவ்வாறு மறுக்கவேண்டியனவாக அமைவனவற்றில் மூன்று முகங்கள் புலப்படும். ஒன்று சமய நெறி. மற்றொன்று சாத்திரம். இன்னொன்று சமயவாதம். பிற மதத்தினரின் சமயமும், அவர் கூறும் அறநெறிகளும் வஞ்சனையானவை என உணர்த்தப்படுகின்றன:

**அமைவன துவர்இழுகிய துகில்**
**அணி உடையினர் அமண் உருவர்கள்**
**சமையமும் ஒருபொருள் எனும் அவை**
**சலநெறியன அறவுரைகளும்** (19)

கவர்மொழி, பொய்ம்மொழி என்ற முன் சுட்டுதலும் சிறுசொல் (67), வெஞ்சொல் (68) என்ற பயன்பாடுகளும் இதனையே உள்ளுறுத்தின எனலாம். சமய நெறி மட்டுமன்றி, அவர் சாத்திரமும் ஏற்புடையன அல்ல என்ற கருத்தும் சம்பந்தர் தருவதாகும்.

**தடுக்கமருஞ் சமணரொடு தர்க்க சாத்திரத்தவர் சொல்**
**இடுக்கண் வருமொழி கேளாது ஈசனையே ஏத்துமின்கள்** (62)

இச்'சடங்கொண்ட சாத்திரத்தாரை' விரும்பி அவர் பின் செல்வது, கானல் நீரைத் தண்ணீரென நம்பி மொண்டுகொள்ளக் குடத்தோடு செல்வது போலாகும் என்கின்றார் (118) சம்பந்தர். சமண பௌத்தரின் சமய நூலைப் பற்றிய குறிப்பையும் இங்குக் கருதலாம். நூல், ஓத்து, பிடக்கு எனச் சுட்டுகள் அமையும். பிடக்கே உரை செய்வார் (13), கோது சாற்றித் திரிவார் அமண் குண்டர் ஓதும் ஒத்தை (28) சமண்கையர் அடையாதன சொல்லுவர் ஆதர்கள் ஓத்தைக் கிடையாது (30) எனவும்,

**போதியர் பிண்டியர் என்றுஇவர்கள் புறங்கூறும் பொய்ந்நூல்**
**ஓதிய கட்டுரை கேட்டு உழல்வீர்** (107)

எனவும் குறிப்புகளமையும். இவர்கள் சாத்திரமும் அதன் ஞானமும் மாயை நிலையானவை அல்ல என்ற கருத்து, தொடர்ச்சியாக அமையும்.

**வெந்துவர் மேனியினர் விரிகோவண நீத்தார் சொல்லும்**
**அந்தர ஞானமெல்லாம் அவையோர் பொருளென்னேல்** (104)

**செந்துவர் ஆடையினார் உடைவிட்டு நின்றுழல்வார் சொன்ன**
**இந்திர ஞாலம் ஒழிந்து இன்புற வேண்டுதிரேல்** (105)

இவற்றிலிருந்து, சமண-பௌத்த வேதத்தின் பொய்மை பற்றிச் சம்பந்தர் அவற்றை மறுக்கிறார் எனத் தெரியலாம்.

சமய வாதம் என்பது இவர்களது இயல்பாகும். வாதிடுபவர் எனும் பொருளில் 'மிண்டர்' (112, 130, 133) எனச் சம்பந்தர் சொற்பயிற்சி காட்டுவார்.

**குண்டாய் முற்றுந் திரிவார் கூறை மெய்போர்த்து**
**மிண்டாய் மிண்டர் பேசிய பேச்சு மெய்யல்ல** (100)

பொருது பகரும் மொழி, 'கட்டுரை' (108, 133) என்பனவும் வாதவுரை சுட்டும்.

**விருது பகரும் வெஞ்சொற் சமணர் வஞ்சச் சாக்கியர்**
**பொருது பகரும் மொழியைக் கொள்ளார்** (68)

இத்தகைய மதங்களிலிருந்து விலகியிருக்க வேண்டும் என்ற கருத்தைப் பன்முறை பலவிதமாக வலியுறுத்துகின்றார் சம்பந்தர். பார்த்த வளவில், புத்தரது சமயக் கோட்பாடான 'கணபங்க வாதம்' ஒன்றே வெளிப் படச் சுட்டப்பட்டதாகத் தோன்றுகின்றது:

**'குணம் அறிவுகள் நிலையில, பொருள் உரை மருவிய**
**பொருள்களும் இல**
**திணம்' எனும் அவரொடு, செதுமதி மிகுசமணரும்.....** (21)

புந்தியிலுரையான இது, அந்தணர் ஓத்தினோடு ஒவ்வா எனவும் அறிய முடிகிறது (110).

புத்த சமணர் உரைகளைக் கொள்ளாதேயுங்கள், அவற்றைப் பொருளென நினையாதீர், என் நெஞ்சே இவற்றை நீ கொள்ளாதே, யான் இதனைக் கொள்ளேன், நீவிர் அவரொடு பேசேல் என்பனவாகப் பலவாறு தற்சார்ந்தும், முன்னிலைப்படுத்தியும் இச்சமய அணுகுதல் களைச் சம்பந்தர் தருகிறார்.

**வழுவாச் சமண் சாக்கியர் வாக்குஅவை கொள்ளேல்** (31)

**பேணர் தூய்மை மாசு கழியார் பேசேல் அவரோடும்** (72)

எனச் சில சான்று சுட்டலாம்.

பொய்ம்மையான புறச் சமயங்களுள் மயங்கி ஆழ்ந்திருக்கும் மக்களை மீட்கும் சமய சமுதாயக் கடனாகச் சம்பந்தர் இப்புலப்பாடு களைத் தருகிறார் எனலாம்.

# 6. சம்பந்தர் ஊட்டும் நம்பிக்கை

ப. இராசமாணிக்கம், தஞ்சாவூர்.

தெய்வம், கடவுள் என்ற சொற்கள் பழந்தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தில் இடம் பெற்றுள்ளன. பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு ஆகிய நூல்களிலும் தமிழருடைய கடவுட் கொள்கைகள் ஆங்காங்கே புலப்படுகின்றன; சிவபிரான், முருகன், திருமால், கொற்றவை, பிரமன், இந்திரன், வருணன் முதலான பெயர்கள் கூறப்படுகின்றன; இவர்தம் வடிவங்கள் அருட்செயல்கள் ஆகியன கூறப்படுகின்றன. பரிபாடலில் திருமால், செவ்வேள் பற்றிய பக்திப் பாடல்கள் பல காணப்படுகின்றன. சிலப்பதிகாரத்தில் வேட்டுவ வரி, ஆய்ச்சியர் குரவை, குன்றக் குரவை ஆகிய இசைப் பாடல்களிலும், பிற இடங்களிலும் தலைசிறந்த பக்திப் பாடல்கள் உள்ளன.

இவை தமிழ் மக்கள் சமய உண்மைகளைப் பல நூற்றாண்டு களுக்கு முன்பே எண்ணி வந்திருக்கின்றார்கள் என்ற செய்தியைப் புலப்படுத்துவனவாய் அமைகின்றன. உணவு வழங்குதல், மருத்துவம் செய்தல், கல்வி கற்பித்தல் ஆகிய சமுதாயத் தொண்டுகள் மூலம் மக்களைக் கவரவேண்டும் என்ற நோக்கில் சமண பௌத்த சமயங்கள் செயல்பட்டன எனலாம்.

இவற்றால் கவரப்பட்ட தமிழர் தம் பழைய சமயங்களைக் கைவிட்டுப் புறச்சமயங்களில் ஈடுபாடு கொண்டனர். அரசர்களும் ஆட்சிப் பொறுப்பில் இருந்த அதிகாரிகளில் பலரும் அச்சமயங்களில் பற்றுக் கொண்டிருந்தனர். அவற்றைப் பழித்தோரும் அவற்றிற் சேர்ந்திருந்து விலகியோரும் அரசினருடைய கடுமையான தண்டனைக்குள்ளாகும் நிலை நிலவிய காலத்தில் சைவ சமயத்திற்கு உயிர் ஊட்டவும், மக்களின் சிந்தனை செம்மையுறவும் திருஞானசம்பந்தர் தோன்றினார்.

கோளறு பதிகம், திருநள்ளாறு பதிகம், திருவெண்காடு பதிகம் ஆகிய பதிகங்களிலுள்ள சில பாடல்களை மட்டும் இச்சிறு ஆய்வுக்கு எடுத்துள்ளேன்.

## திருஞானசம்பந்தர்

சோழநாட்டில் உள்ள சீர்காழிக்குப் பெருமை சேர்க்கும் வகையில் மண்ணிய இவ்வுலகில் திருவவதாரஞ் செய்தார். எவருக்குமே கிடைக்காத

அமிர்தமும் தலை கவிழும் ஞானப்பாலை உண்டவர். இவர் பல தலங்களுக்கும் யாத்திரை செய்து, சைவமும் தமிழும் தழைத்தினிதோங்கப் பணிபுரிந்தார்.

இறைவன் திருவருளால் அற்புதங்கள் பல செய்தார். திருக்கோலக் காவில் பொற்றாளம் பெற்றார். திருநெல்வாயில் அரசுத்துறையில் முத்துச் சிவிகை, குடை மற்றும் திருச்சின்னங்கள் பெற்றார். திருப்பாச்சிலாசிராமத்தில் கொல்லி மழவன் மகளுக்கு உண்டான முயலகன் என்ற நோயை நீக்கினார். திருப்பட்டீச்சரத்தில் முத்துப்பந்தரும், திருவாவடுதுறையில் பொற்கிழியும், திருவீழிமிழலையில் படிக்காசும் பெற்றார். திருமருகலில் அரவு தீண்டிய வணிகனை உயிர்ப்பித்தார். திருமறைக்காட்டில் திருக்கதவு அடைக்கப் பாடினார். மதுரையில் பாண்டியனைச் சமண சமயத்திலிருந்து சைவ சமயத்திற்குத் திருப்பினார். சமணருடன் செய்த அனல்வாதம், புனல் வாதம் ஆகியவற்றில் வென்று சைவம், தமிழ் ஆகியவற்றின் பெருமையை நிறுவினார்.

திருவோத்தூரில் ஆண்பனையைப் பெண் பனையாக்கிக் கனிகள் தருமாறு செய்வித்தார். திருமயிலையில் எலும்பைப் பெண்ணாக்கினார். இறுதியாகத் திருநல்லூரில் நம்பியாண்டார் நம்பிகளின் மகளைத் தம் பதினாறாம் வயதில் மணந்தார்.

மேற்கண்ட மாபெரும் அற்புதச் செயல்கள் செய்வதற்கு அவருக்குப் பெருந்துணையாக நின்றது நம்பிக்கையே. சிவபெருமான் மீது அவருக் கிருந்த அளவிடற்கரிய நம்பிக்கையினாலே சைவ சமயம் இதுகாறும் அவரை நன்றியோடு நினைவு கூர்கிறது என்று உறுதியாகக் கூறலாம்.

### ஞானசம்பந்தர் ஊட்டும் மொழி நம்பிக்கை

பிராகிருதம், வடமொழி, பாலி ஆகியன செல்வாக்குப் பெற்றிருந்த பல்லவர் ஆட்சிக்காலத்தில் தமிழ் மறுமலர்ச்சி இயக்கமாகவும் சைவ சமயம் தோன்றியதெனலாம். இச்சமயத்தினால் ஆயிரக்கணக்கில் தமிழ்ப் பாடல்கள் எழுந்தன. நாட்டு மக்களிடையே பரவின. வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, பரிபாடல் என இருந்த பா வகைகள் பல்வேறு புதிய இனங்களும், வடிவங்களும் பெற்றுப் புதிய கோலம் கொண்டன. புதிய பண்கள் இசைத்துறையில் மலர்ந்தன.

இறைவனை அடைவதற்கு மன உருக்கமும், நம்பிக்கையும் ஒருமைப்பாடும் தேவை. அவ்வுருக்கத்தை, நம்பிக்கையை, ஒருமைப் பாட்டை தமிழ் மொழியால் பெற முடியும், தமிழ் மொழியால் சாதிக்க முடியும் என்ற நம்பிக்கையை முதன்முதலில் வெளிப்படுத்தினார் ஞானசம்பந்தர்.

சமூகப் புரட்சியை முதலில் தூண்டியவர் இவரே என்று சொல்லு மளவிற்கு மொழியின் மீது ஒரு நம்பிக்கையை ஊட்டினார்.

**புற்றில் வாழுமர வம்மரை யார்ந்தவன் மேவும் புகலூரைக்**
**கற்று நல்லவர் காழியுண் *ஞானசம் பந்தன்றமிழ்*மாலை**
**பற்றியென்று மிசை பாடியமாந்தர் பரமன்னடி சேர்ந்து**
**குற்றமின்றிக் குறை பாடொழியாப் புகழோங்கிப் பொலிவாரே**

(திருப்புகலூர், பா.11)

என்பது ஞானசம்பந்தருடைய தமிழ்ப் பற்றையும், நம்பிக்கையையும் விளக்குகிறது.

**சமய நம்பிக்கை**

புறச் சமயங்களான பௌத்த, சமணக் கொள்கைகளை வன்மை யாகச் சாடுகிறார் ஞானசம்பந்தர். தம் ஒவ்வொரு பத்தாம் பாடலில் இம்மறுப்பை ஒரு மரபாகவே கையாண்டுள்ளார். தலைமயிர் பறித்தல், ஆடையின்றி இருத்தல் போன்ற புறச்சமயத்தாருடைய செயல்களை வெளிப்படையாகக் கண்டிக்கிறார்.

**ஒண்துவர் ஆர்துகில் ஆடை மெய்போர்த்(து)**
**உச்சி கொள்ளாமை உண்டே உரைக்கும்**
**குண்டர்களோடு அரைக் கூறை யில்லார்**
**கூறுவதாம் குணமல்ல கண்டீர்**

(கீழைத் திருக்காட்டுப்பள்ளி, பா. 10-1-4)

என்பன அவர்தம் பாடல்களில் வெளிப்படுகின்றன.

மக்கள் அன்றாடம் படும் வேதனைகளுக்கும் சிக்கல்களுக்கும் தீர்வு, இறைவன் மீது அசைக்க முடியாத நம்பிக்கையுடைய தெய்வ வழிபாடே என்பதை ஆணித்தரமாகக் கூறுகிறார். அடியார்களுக்கு அருள் செய்வதில் இறைவன் தன்னிகரற்றவன் என்பதையும், இறைவன் சிவபெருமானை எப்போதும் மனதால் வாக்கால் செயலால் நிற்பவர்களுக்கு ஓடோடி வருவான் என்பதையும் நாவுக்கரசரோடு பேசும் நிலையில் வெளிப் படுத்துகிறார். மக்களுடைய வினைகளாகிய ஆகாமியம், பிராரப்தம், சஞ்சிதம் என்பவற்றை நீக்குபவர் என்ற கருத்திலேயே,

**வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்**
**மிகநல்ல வீணை தடவி**
**மாசறு திங்கள் கங்கை முடிமேல் அணிந்துஎன்**
**உளமே புகுந்த அதனால்**
**ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி**
**சனிபாம் பிரண்டு முடனே**

**ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல**
**அடியார் அவர்க்கு மிகவே** (கோளறு பதிகம், பா.1)

என்று கோளறு பதிகத்தை உலக மக்கள் உய்விக்குமாறு பாடி அருளினார்.

யான், எனது என்ற செருக்கு இறைவனை அடையத் தடை செய்யும் மாயைகளாகும். இந்நிலை அகன்றால் இறைவனருள் திண்ணமாகக் கிட்டும் என்று வலியுறுத்துகிறார். இதனடிப்படையிலேயே தம் பதிகங்களின் எட்டாம் பாடலில் இராவணனின் செருக்கைக் கூறி உலக மக்கள், அடியார்கள் செருக்கொழிய வேண்டும் என்று கூறுகிறார். இங்கு இராவணன் ஒரு குறியீடாகப் பேசப்படுகின்றான். ஆற்றல் பல பெற்றவனாக இருந்தாலும் தனிமனித ஒழுக்கம் இல்லையெனில் எத்தகையானும் அழிந்து விடுவான் என்று கூறுகிறார்.

ஆணவம், கன்மம், மாயை என்றும் மும்மலங்களின் வெளிப்பாடான தாரகாட்சன், கமலாட்சன், வித்யுன் மாலி என்ற முப்பெரும் அசுரர்களும் இவ்வுலகத்தின் அமைதியை குலைத்தார்கள் என்பது இறைவன் மீது பற்றும் நம்பிக்கையும் குறையும்போது ஏற்படும் சோதனைகளாகவே கொள்ள வேண்டும்.

தேவர்கள் தவறை உணர்ந்து வருந்தி வணங்கி அழைக்கும் போது அவர்களின் நம்பிக்கை பொய்த்துப் போகாத முறையில் தக்க சமயத்தில் வந்து அருள் பாலித்தார் என்பது அவர்கள் இடைவிடாது முயற்சியுடன் தொடரும் நம்பிக்கைக்குப் பலனாக அமைகிறது.

தொலையாப் பீடைய போர்விடையனை அன்றாடம் தொழுதால் அகலாப் பிரச்சினைகளும் அகன்று வெருண்டோடும் இன்பம் கைகூடும் செல்வம் பெருகும் என்பதைத் திருநள்ளாறு பதிகத்திலே மெய்ப்பிக்கிறார்.

**எண்ண லாகாவுள் வினைஎன்று எள்கவலித்து இருவர்**
**நண்ண லாகா நம்பெருமான் மேயது நள்ளாறே**
(திருநள்ளாறு, பா.9)

என்று எண்ணிலா வினைகளும் தீரும் என்கிறார்.

ஒரு நாமம் ஒருருவம் ஒன்றும் இல்லார்க்கு ஆயிரம் திருநாமம் பாடி வழிபடுகிறார் ஞானசம்பந்தர். ஆயிரம் செல்வங்கள் இருந்தாலும் ஒரு குடும்பத்தில் பிள்ளைச் செல்வம் இல்லையென்றால் அக்குடும்பம் வற்றல் மரம் போல்தான் இருக்கும். இதனையே வள்ளுவமும்,

**குழலினிது யாழினிது என்பதம் மக்கள்**
**மழலைசொல் கேளா தவர்** (மக்கட்பேறு, குறள்-6)

என்று கூறுகிறது.

**மயக்குறு மக்களை யில்லோர்க்கு**
**பயக்குறை இல்லை தாம் வாழுநாளே** (பா.188)

என்று புறநானூறும் கூறுகிறது. திருவெண்காடு உறையும் பெருமானை வணங்கி 'அச்சுதகளப்பாளர்', ஞானி 'மெய்க்கண்டாரை மகனாகப் பெற்றது போல் இச்சமூகமும் நன்மக்களைப் பெறவேண்டும் என்பதே ஞானசம்பந்தரின் சமுதாயப் பார்வையாகும்.

**பேய்அடையா பிரிவுஎய்தும் பிள்ளையினோடு உள்ளநினைவு**
**ஆயினவே வரம்பெறுவர் ஐயுற வேண்டா ஒன்றும்**
(திருவெண்காடு பதிகம், பா.2)

என்றும் கூறுகிறார்.

அருமையான மானிடப் பிறவியை எடுத்தும், புற இச்சைகளுக்கு ஆளாகி, பின் மண்ணாய்ப் போகும் இவ்வுடலை நினைத்துத்தான் வள்ளுவப் பெருந்தகையும் இறைவன் திருவடிச் சிறப்பை அடைய வேண்டும் என்ற கருத்திலே,

**பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்**
**இறைவ னடிசேரா தார்** (கடவுள் வாழ்த்து, குறள்-10)

என்று கூறுகிறார்.

திருஞானசம்பந்தரும் மனிதப் பிறவியின் பாவங்கள் அப்பிறவி யிலேயே ஒழிந்து புண்ணியம் பெறவேண்டும் என்று கருதியே இச்சமூகம் உய்யத் 'திருநீற்றுப் பதிகத்தை' அளித்தார். முத்தி தரக்கூடியது, புண்ணியத்தை அளிக்கக் கூடியது, ஆசையை அகற்றுவது என்று கூறிவரும்போது,

**மாலோடு அயன்அறியாத வண்ணமும் உள்ளதுநீறு** (பா.9:1)

என்று தன் நம்பிக்கையின் உச்சத்தை வெளிப்படுத்துகின்றார்.

ஆன்மாவைப் பிடித்த மலம் பரிபாகம் நிகழும் பொருட்டே உயிர்களை இறைவன் மீண்டும் மீண்டும் பிறப்பிக்கின்றான். உலகத்தையும் ஒடுக்கி, மீண்டும் புனருற்பவம் பெறுவிக்கின்றான். இதனைத் திருஞானசம்பந்தர்,

**துயரிலங்கும் உலகில் பலஊழிகள் தோன்றும் பொழுதெல்லாம்**
(1:8)

என்று குறிக்கிறார்.

### சம்பந்தர் காட்டும் அன்பு

இறைபணியில் எத்துணை முன்னேறிச் சென்றாலும் திருஞான சம்பந்தர் உலக உயிர்களிடத்துக் கொண்டுள்ள அன்புக்கு அளவே இல்லை.

இதற்கு ஒரு காரணமும் உண்டு. உடம்பு எடுத்ததன் பயன் பிறர் பொருட்டுப் பயன்படுதற்காக, அப்பயன் விளையாத பொழுது அந்த உடம்பு பாரமாகி விடுகிறது. மனிதன் சிந்தனையை அகமுகமாகச் செலுத்துவதன் மூலம் உண்மைப் பொருளை காண முடியும் என்று உறுதியாக நம்பினார். அந்த நம்பிக்கையின் வெளிப்பாடே அவர்தம் பதிகங்களாகும். அறிவை அகமுகமாக செலுத்துவதன் மூலம் புற உலக அறிவை வளர்த்துக் கொள்ளலாம். அவ்வறிவை இன்னும் ஆழமாகச் செலுத்துவதன் மூலம் மெய்பொருளைக் காணவும் கூடும். ஆகவே மக்கட் சமூகத்தை அடிப்படையாகக் கொண்டு ஆன்மீக முன்னேற்றம் காண முடியும் என்று நம்பினார்.

நாளையும் கோளையும் கண்டு நடுங்குகின்ற இன்றைய சமுதாயத்தைக் கண்டு வேதனைப்படுவது போல,

**தான்அமர் கோளும் நாளும் அடியாரை வந்து**
**நலியாத வண்ணம் உரைசெய்**
**ஆனசொல் மாலைஓதும் அடியார்கள் வானில்**
**அரசாள்வார் ஆணை நமதே** (கோளறு பதிகம், பா.11)

என்று ஞானசம்பந்தர் பாடுகிறார்.

### ஞானசம்பந்தர் சுட்டும் இறைநெறி

ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஞானசம்பந்தர் அளவு மீறிய அறிவு வாதத்தால் இறைவனை அடைய முடியாது. எனவே அளவு மீறிச் சோதிக்க வேண்டா என்ற கருத்தில்,

**ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்**
**சோதிக்க வேண்டா சுடர்விட்டு நின்றுளன் எங்கள்சோதி**

என்று வலியுறுத்தினார்.

பிறப்பால் தாழ்ந்தவரகக் கருதப்பட்ட திருநீலகண்ட யாழ்ப்பாணரைத் தம்முடன் வைத்துக் கொண்டார் அந்தணராகிய ஞானசம்பந்தர். தாழ்த்தப் பட்டோராகிய திருநாளைப்போவாரையும், திருநீலகண்ட யாழ்ப்பாணரையும், வேடரான கண்ணப்பரையும் 'ஐயரே' என்று அழைக்கிறது பெரிய புராணம். இத்தகைய ஒருமைப்பாட்டைத் திராவிட சிசுவாகிய ஞானசம்பந்தர் கண்டிருக்கிறார்.

பிறவி வணங்குதலாகிய பயனை அளிப்பதால் அதனைப் பாதுகாக்க வேண்டும். யாரை வணங்குவது என்ற வினாவிற்கு சிவத்தை வணங்குவது என்ற விடையை அளித்தவரே ஞானசம்பந்தர்.

இறைவனுக்குச் செய்யும் தொண்டைவிட உயிர்கட்குச் செய்யும் தொண்டே சிறந்தது என்பதை, ஞானசம்பந்தர் திருவீழிமிழலையில்

மடம் வைத்துப் பஞ்சம் தீர்கின்ற வரை உணவு வழங்கியும், யாரோ ஒரு பெண் கணவனைப் பறி கொடுத்து வருந்தி அழுதாள் என்றால் அது அவள் விதி என்று கூறி விட்டுச் செல்லாமல் அவள் துயர் துடைக்க முன்வந்து கணவன் உயிரை எழுப்பித் தந்ததும் இதுபற்றியேயாம்.

செய்கின்ற செயலுக்கு முக்கியத்துவம் தராமல் அச்செயலின் பின்னே உள்ள மனநிலைக்கு முக்கியத்துவம் அளிக்கின்றார் திருஞானசம்பந்தர்.

வெறும் சடங்குகட்கும், கிரியைகட்கும் முக்கியத்துவம் தரும் இவ்வுலகம் திருந்த வேண்டும். அகத்தையும், புறத்தையும் தூய்மையாக வைத்திருக்க வேண்டும் என்பது சம்பந்தர் விரும்பும் கனவாகும். வீணான அச்சத்தைத் தவிர்க்க வேண்டும். துணிவோடு சைவ சமயத்தைக் கடைப்பிடித்து வாழவேண்டும் என்பது அவருடைய நோக்கமாகும்.

கால வெள்ளத்தைக் கடந்து வரும் ஞானசம்பந்தர் தேவாரத்தின் சிறப்புகளைக் குறைந்த பக்கங்களில் எழுதுவது என்பதும், வாசிப்பது என்பதும், மதிப்பிடுவது என்பதும் அறிவீனமே. இருப்பினும் காலங் கருதி ஒரு சில சிறப்புக்களை மட்டும் இங்குச் சுட்டியிருக்கின்றேன்.

**கரும்பு பிடித்தவர்க் காயப்பட்டார் அங்கோர் கோடரியால்**
**இரும்பு பிடித்தவர் இன்புறப்பட்டார்** (5-8-2)

என்று நாவுக்கரசர் சொல்வது போல இறையருள் திண்ணமாகப் பெற்றால் எத்தகையோரும் சாதிக்க முடியும், புகழ்பெற முடியும், வீட்டின்பம் பெற முடியும் என்று கூறி இக்கட்டுரையை நிறைவு செய்கிறேன்.

# 7. கல்வெட்டில் சம்பந்தர்

செ. இராசு, ஈரோடு.

திருஞானசம்பந்தர் வாழ்ந்த காலம் கி.பி. 630-646 என அறிஞர் க. வெள்ளைவாரணனார் அவர்கள் ஆய்ந்து நிறுவியுள்ளார்கள். தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டு மூலமும், தாராசுரம் பெரியபுராணச் சிற்பங்கள் மூலமும், சோழர் காலத்துப் பிற கல்வெட்டுக்கள் மூலமும் தேவார மூவரில் சுந்தரரே முதலாமவராக வைக்கப்பட்டுள்ளார் என அறிகிறோம். திருமுறை தொகுக்கப்படும்போது திருஞானசம்பந்தர் தேவாரம் முதலில் வைக்கப்பட்டது. தேவார மூவரில் திருஞானசம்பந்தர் முதலாமவராக வைக்கப்பட்டார்.

## திருஞானசம்பந்தர் தேவார ஈடுபாடு

தஞ்சைப் பெருவுடையார் கோயில் தேவாரப் பதிகங்கள் விண்ணப்பம் செய்த 48 பிடாரர்களில் ஐவர் திருஞானசம்பந்தர் பெயரை வைத்துக் கொண்டுள்ளனர். அவர்கள் திருஞானசம்பந்தர் தேவாரப் பதிகங்களைப் பாடுவதில் வல்லமை பெற்றவர்கள் போலும்.

முதல் குலோத்துங்க சோழன் காலத்தில் சிதம்பரத்தில் திருஞானசம்பந்தர் தேவாரங்களைப் பாடுவதற்கென்றே தனி மண்டபம் எடுக்கப்பட்டதை,

**'நட்டப் பெருமான் ஞானம் குழைந்தளித்த**
**சிட்டப் பெருமான் திருப்பதியம் - முட்டாமை**
**கேட்போர்க்கு மண்டபத்தைச் செய்தான்தெவ் வேந்தர்க்கு**
**வாட்போக்கும் தொண்டையர்கோன் மன்'**

என்ற சிதம்பரம் கல்வெட்டுப் பாடலால் அறியலாம்.

திருஞானசம்பந்தர் தேவாரத் தொடரை மக்கள் பெயராக வைத்துக் கொண்டனர் (ஆணை நமதென்ற பெருமாள்). நிலத்திற்கு அவர் பெயர் வைக்கப்பட்டது (தாளம் பெற்றான் குடிக்காடு). திருஞானசம்பந்தர் பாடிய தொடர்கள் கோயில் அம்மன் பெயராக வழங்கின (நாறுசாந்து இளமுலைநாச்சியார், பையரவல்குலாள்). திருஞானசம்பந்தர் பெயர் தாங்கிய பல அடியார்களும் இருந்தனர் (மன்றுள் ஆடி திருஞானசம்பந்தப் பெருமாள்) இதன்மூலம் திருஞானசம்பந்தர் தேவாரம் மக்களிடையே நன்கு அறிமுகமாகியிருந்தது புலப்படும்.

## வரலாற்றுக் குறிப்பு

பெரும்பாலும் திருஞானசம்பந்தர் தேவாரப் பதிகங்கள் பற்றிய செய்திகளே கல்வெட்டுகளில் காணப்பட்டாலும் மூன்றாம் இராசராசனின் ஆச்சாள்புரம் கல்வெட்டில் 'சொக்கியார்' என்ற பெண்ணின் பெயர் திருஞானசம்பந்தருடன் இணைந்த பெயராகக் குறிக்கப்பட்டுள்ளது.

'ஆளுடைய பிள்ளையாரும் சொக்கியாரும் காவேரிக்குத் தெற்கே வடக்கூர்களில் திருவெண்காட்டிலும் திருநனிபள்ளியிலும் திருவாக்கூரிலும் எழுந்தருளி' 'உடைய பிள்ளையார் திருக்கல்யாணம் பண்ணின திருமாளிகையும் திருவீதியும்' என்பன கல்வெட்டுத் தொடர்கள், ஆய்வாளர்கள் இங்கு குறிக்கப்பட்ட சொக்கியாரைத் திருஞான சம்பந்தரின் மனைவியார் என்றே கூறுகின்றனர்.

## திருக்கோயில்கள்

பல ஊர்களில் திருஞானசம்பந்தர்க்குத் தனிக்கோயில்கள் அல்லது தனிச் சன்னதிகள் எடுக்கப்பட்டிருந்தன.

தஞ்சை மாவட்டம் திருவிடைவாயில், திருவிடைமருதூர், சீர்காழி, ஆச்சாள்புரம், திருவாக்கூர், கோட்டூர், கோவிலூர், தென்ஆர்க்காடு மாவட்டம் சித்தலிங்கமடம், சிதம்பரம், இராமநாதபுரம் மாவட்டம் திருப்பத்தூர், சிவகங்கை மாவட்டம், குன்றக்குடி, திருச்சி மாவட்டம் திருமழபாடி, கங்கைகொண்ட சோழபுரம் ஆகிய ஊர்களில் திருஞான சம்பந்தருக்குத் தனிக்கோயில் அல்லது தனிச்சன்னதி அமைக்கப் பட்டிருந்தன.

திருஞானசம்பந்தர் திருக்கோயில் உள்ள திருவிடைவாயில் (விடையபுரம் ஆன விருதராச பயங்கரபுரம்) ஊர்க் கோயில்தான் அவருடைய பதிகம் பொறிக்கப்பட்ட கல்வெட்டும் கிடைத்துள்ளது. சீர்காழியில் உள்ள திருஞானசம்பந்தர் கோயிலில் அருகில் மங்கையர்க்கரசி நாச்சியார் கோயிலும் இருந்தது.

இக்கோயில்கள் சிலவற்றிற்குத் தனி நந்தவனங்கள் இருந்தன. 1270-ஆம் ஆண்டு மாறவர்மன் வீரபாண்டியன் காலத்தில் எட்டாம் ஆண்டு 57-ஆம் நாள் விக்கிரம பாண்டியக் காங்கேயராயன் ஆணைப்படி சிதம்பரத்தில் சோழிய சாலியர் குடியேற ஊர் அமைத்து அதற்கு 'தெரியவர நின்ற பெருமாள் புரம்' என்று பெயரிடப்பட்டது. அந்தச் சாலியர் ஆன நெசவாளர்கள் திருஞானசம்பந்தருக்கு 5 சிற்றாடைகள் கொடுக்க வேண்டும் என்ற நிபந்தனை விதிக்கப்பட்டது.

## திருஞானசம்பந்தர் குகை

மடம், திருமடம், சாலை, அறச்சாலை என்ற பொதுப் பெயர்களாலும், கோமடம், காபாலிகர்மடம், வீரசைவமடம், கோளகிமடம், கொல்லாமடம், பிட்சாமடம் என்ற சிறப்புப் பெயர்களாலும் தமிழ்நாட்டில் மடங்கள் விளங்கியமைபோல் 'குகைகள்' என்ற பெயரிலும் சமய நிறுவனங்கள் பல விளங்கின.

இக்குகைகளைத் துறவிகள் வாழுமிடம், தவமுனிவர் இருக்கை என்று தி.நா. சுப்பிரமணியமும், ஒருவகை மடங்கள் என்று டாக்டர் மா. இராசமாணிக்கமும் கூறுவர். பிங்கலந்தை நிகண்டும் 'முனிவர்கள் இருப்பிடம்' என்று கூறும்.

திருஞானசம்பந்தர் பெயரில் சதுர்வேதிமங்கலம், முன்னியூர், திருக்குறுக்கை, திருநெல்லிக்காவல் ஆகிய ஊர்களில் குகைகள் இருந்தன. முன்னியூரில் இருந்த மற்றொரு குகையின் பெயர் 'காழிக்கற்பகம் குகை' என்பதாகும். திருப்பைஞ்ஞீலித் திருப்பதிகத்தின் திருஞானசம்பந்தர் தன்னைக் காழிக்கற்பகம் என்று குறித்துக் கொள்கிறார்.

## திருஞானசம்பந்தர் மடம்

திருச்சி மாவட்டம் காமரசவல்லி, திருவானைக்கா, தஞ்சை மாவட்டம் திருச்சத்திமுற்றம், திருக்குறுக்கை, சீர்காழி, மதுரை மாவட்டம் தென்கரை, திருவேடகம், செங்கல்பட்டு மாவட்டம் திருவொற்றியூர் ஆகிய ஊர்களில் திருஞானசம்பந்தர் பெயரால் திருமடங்கள் இருந்தன.

இவைகளில் திருச்சத்திமுற்றத்து முதலியார் சீடர் ஞானசிவம், ஆச்சாரியர் ஸ்ரீகண்டசிவனார், பாண்டரங்கவாணர் சந்தானத்து முதலிகளில் குலசேகரத்து ஆட்கொண்டாரான உமையொருபாகர் போன்ற சமயப் பெரியார்கள் தங்கிச் சமயப்பணி புரிந்துள்ளனர்.

பலர் அந்த மடங்களுக்கும் கொடைகள் அளித்துள்ளனர். பலர் பூதானம் செய்துள்ளனர். அவற்றால் தவசிகளுக்கும், மாகேசுவரர்கட்கும் உணவளிக்கப்பட்டது.

இவையன்றி ஆச்சாள்புரமான திருநல்லூர்ப் பெருமணத்தில் 'பரசமயகோளரி மடம்', திருவெண்காட்டில் 'தனிநின்றுவென்றான் மடம்' என்னும் பெயர்களில் திருமடங்கள் இருந்துள்ளன. திருமாணிகுழியில் 'ஸ்ரீகாழிநாடுடைய பிள்ளையார்மடம்' என்ற பெயரில் மடம் ஒன்று இருந்தது. சேக்கிழார் தம் திருத்தொண்டர் புராணத்தில் திருஞானசம்பந்தரைப் 'பரசமயகோளரி' என்று குறிக்கின்றார்.

**'பேர்பலவும் ஊதுமணிச் சின்னம் எல்லாம்**
**பரசமய கோளரி வந்தான்என்று பரிமாற'**

எனத் திருஞானசம்பந்தர் மதுரைக்கு வந்த நிகழ்ச்சியைக் குறிக்கும்போது சேக்கிழார் திருஞானசம்பந்தரைப் பரசமயகோளரி என்பார்.

ஒரு பக்கம் எண்ணாயிரம் சமணர்கள் இருக்க, அவர்களை எதிர்த்துத் தனியாக நின்று சமணர்களைத் திருஞானசம்பந்தர் வெற்றி கொண்ட காரணத்தால் அவர் 'தனி நின்று வென்றான்' எனப்பட்டார்.

திருக்கேதீச்சுரம் பதிகத்தில் திருஞானசம்பந்தர் தம்மைக் 'காழிநாடுளார்க்கு இறை' எனக் குறித்துக் கொண்டுள்ளார்.

**ஆளுடைய பிள்ளை**

திருஞானசம்பந்தரை ஆளுடைய பிள்ளை என்பது மரபு.

பல கல்வெட்டுக்களில் திருஞானசம்பந்தர் ஆளுடைய பிள்ளை என அழைக்கப் பெறுகிறார் சேக்கிழார்,

**'யாவருக்கும் தந்தைதாய் எனுமிவர்இப் படியளித்தார்**
**ஆவதனால் ஆளுடைய பிள்ளையாராய்'**

என்பார்.

தலைச்செங்காட்டைச் சேர்ந்த சிற்றூர் சோழபாண்டிய நல்லூரில் திருமடைப்பள்ளிப் புறமாக கழுமலத்து ஆளுடைய பிள்ளையார்க்குத் திருப்பாற்போனகம் செய்தருள ஐந்துவேலி நிலம் அளிக்கப்பட்டது.

முதல் குலோத்துங்கசோழன் காலத்திலும், விக்கிரமசோழன் காலத்திலும் உயர் அரசியல் தலைவனாக விளங்கிய அரும்பாக்கிழான் மணவில்கூத்தன் காலிங்கராயனின் சிதம்பரம் கல்வெட்டில் ஒரு வடமொழிச் சுலோகம் உள்ளது.

அதன் பொருள்,

**'மலைமகளின் ஸ்தனத்திலிருந்து ஞானப்பாலைப் பருகிக் கலைமகளின் அருளைப்பெற்று ஆனந்தக் கூத்தாடி ஸ்ரீகண்டனின் புகழைப் பாடிய ஆளுடைய பிள்ளையாரான திருஞானசம்பந்தப் பெருமானுடைய பொன் திருமேனியை நிறுவி அதற்குப் பால் பாயசம் நிவேதிக்க ஏற்பாடு செய்தான்'**

என்பதாகும்.

தென்ஆர்க்காடு மாவட்டம் சித்தலிங்கமடம், இராமநாதபுரம் மாவட்டம் திருப்பத்தூர், தஞ்சை மாவட்டம் திருவிடைமருதூர், புதுக்கோட்டை மாவட்டம் குன்றக்குடி ஆகிய இடங்களில் உள்ள கல்வெட்டுகளில் திருஞானசம்பந்தர் 'ஆளுடைபிள்ளை' என்றே குறிக்கப் பெறுகிறார்.

ஆளுடைய பிள்ளையார் திருமேனி மாசி, வைகாசித் திருவிழாக் களின்போது திருவடதுறையிலிருந்து திருமாறன்பாடி எழுந்தருளும்போது இவருக்குத் திருஅமுது செய்தருளவும், பட்டைப் பொதிசோறு வழங்கவும் சேக்கிழான் பாலறாவாயன் ஆன களப்பாளராசன் மூன்றாம் இராசராசனின் 19-ஆம் ஆட்சியாண்டில் கொடை அளித்தான்.

## திருஞானம்

திருநெல்வேலி நெல்லையப்பர் திக்கோயிலில் ஆளுடையான் ஆனந்தக் கூத்தன் என்பவன் அக்கோயிலில் ‘திருஞானம்’ ஓதியவருள் ஒருவர் எனக் கல்வெட்டுக் கூறுகிறது. பதினொருவர் திருஞானம் ஓதியுள்ளனர். அவர்கட்கு அளிக்கப்பெற்ற இறையிலி நிலம் ‘திருஞானப்புறம்’ எனப்பட்டது.

திருச்செந்தூர் வட்டம் ஆற்றூர்க் கல்வெட்டில் ‘திருஞானம்’ ஓத இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் நிலம் அளித்த செய்தி ஒரு கல்வெட்டில் உள்ளது.

திருநெல்வேலி மாவட்டம் திருவாலீசுவரம் கல்வெட்டில் ‘திருஞானம் விண்ணப்பம் செய்ய சிவப்பிராமணர் எண்மருக்குக் கோளகிமடத்து ஞானாமிர்தாசாரிய சந்தானத்தைச் சேர்ந்த புகலிப்பெருமான் ஒரு உடன்படிக்கையின் மூலம் கொடை அளித்துள்ளான்.

தலைஞாயிறு என்னும் இடத்தில் உள்ள மூன்றாம் இராசேந்திரன் கல்வெட்டும், கோவிலூர் (திருவுசாத்தானம்) கல்வெட்டும் திருஞான சம்பந்தரை ‘திருஞானம் பெற்ற பிள்ளையார்’ என்று கூறுகிறது.

தஞ்சை மாவட்டக் கோட்டூர்க் கல்வெட்டும் ‘திருஞானம் பெற்ற ஆளுடைய பிள்ளையார்’ எனத் திருஞானசம்பந்தரைக் குறிக்கும்.

‘திருச்சி மாவட்ட இரத்தினகிரிக் கல்வெட்டு திருஞானசம்பந்தரை ‘திருஞானம் பெற்ற நம்பி’ என்று குறிக்கும்.

சேக்கிழார் திருஞானசம்பந்தர் பாலடிசில் உண்டு

**‘சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்**
**பவமதனை அறமாற்றும் பாங்கினில்ஓங் கியஞானம்**
**உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்**
**தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தார் அந்நிலையில்’**

என்று கூறுவார்.

‘திருஞானம்’ பெற்றுத் தேவாரப் பாசுரங்கள் பாடிய காரணத் தாலேயே அவர் திருஞானசம்பந்தர் ஆனார். எனவே ‘திருஞானம்’ என்பது திருஞானசம்பந்தர் தம் தேவாரப் பாடல்களையே குறிக்கும் என்பது புலனாகிறது.

# 8. சம்பந்தரின் முதல் பதிகம் - ஓர் ஆய்வு

சோம. இராசேந்திரன், திருச்சி.

தேவாரம் பாடிய மூவருள் முதல்வரான திருஞானசம்பந்தர், 'தோடுடைய செவியன்' எனத் தொடங்கிப் பாடிய முதல் பதிகம், சம்பந்தர் பெருமான் அவதரித்த திருத்தலமாகிய சீர்காழி இறைவன் மீது பாடப் பெற்றதாகும். மிகுந்த இளம் வயதினரான திருஞானசம்பந்தர் இறைவியின் அருளால் ஞானப்பால் உண்டு, பால்மணம் மாறாது பாடிய இப்பதிகத்தை ஆய்வுநோக்கில் அணுகுங்கால் எண்ணிறந்த செய்திகளை வெளிக்கொணர் வதற்கான செறிவுடையதாயமைந்திருப்பதைக் கண்டுணர முடிகிறது. எனினும், பக்க வரையறை கருதி 1. தலச்சிறப்பும், தலவருணனையும், 2. சிவவடிவமும், இறைவருணனையும், 3. சொல்லாட்சியும், தொடர்ச் சிறப்பும், 4. புராணக் குறிப்புகள், 5. பெறலாகும் பயன், 6. தனிச் சிறப்புகள் ஆகிய தலைப்புகளில் காணத்தக்க செய்திகள் மட்டும் இக்கட்டுரையில் கண்டுணர்த்தப் பெறுகிறது.

**தலச் சிறப்பும் வருணனையும்**

திருஞானசம்பந்தர் அவதரித்த தலமும் அவர் முதல் பதிகத்தில் பாடப்பெற்ற தலமுமாகிய சீகாழி என்றழைக்கப்பெறும், இன்றைய சீர்காழி என்னும் திருத்தலம், பிரமாபுரம், வேணுபுரம், புகலி வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம் புறவம், துண்பை, காழி, கொச்சைவயம், கழுமலம் ஆகிய பெயர்களால் அழைக்கப் பெற்றுள்ளமையைத் தேவாரப் பாடல் களின் வழி அறிய இயலுகிறது. ஞானசம்பந்தர் பெருமான் தம் முதல் பதிகம் முழுவதும் பிரமாபுரம் என்றே அழைக்கிறார். முதல் பாடலிலேயே 'பீடுடைய பிரமாபுரம்' எனச் சிறப்பிக்கும் சம்பந்தர் பெருமான்,

**"பெற்றம் ஊர்ந்த பிரமாபுரம்"**

எனவும்,

**"ஊர்பரந்தவுல கின்முதலாகிய ஓரூரிது என்னப்<br>பேர்பரந்தபிர மாபுரம்..."**

எனவும்,

**"கருமை பெற்றகடல் கொள்ளமிதந்ததோர் காலம்இதுவென்னப்<br>பெருமை பெற்றபிர மாபுரம்..."**

எனவும்

"கறைகலந்தகடி யார்பொழில் நீடுயர்சோலைக் கதிர்சிந்த
பிறைகலந்தபிர மாபுரம்..."

எனவும்

"துயரிலங்கும்உல கிற்பல ஊழிகள் தோன்றும்பொழு தெல்லாம்
பெயரிலங்கு பிர மாபுரம்..."

எனவும் பிரமாபுரத்தின் சிறப்புகளை விரிவாக எடுத்தியம்புகிறார். இவ்வருணனைகளில் கடல்கோளின்போது உலகமெலாம் அழியப் பிரமாபுரம் கடலில் மூழ்கி அழியாது மிதக்கும் தன்மை முன்னிறுத்திப் பாடப்பெறுகின்றது. இதனாலேயே திருத்தோணிபுரம் என இத்தலம் அழைக்கப் பெற்றதும் இங்குக் குறிக்கத் தக்கதாகும்.

## சிவ வடிவமும், வருணனையும்

சம்பந்தர் பெருமானின் தந்தையாராகிய சிவபாதவிருதயர் பிரமா புரத்தின் பிரம தீர்த்தத் தடாகத்தின் கரையில் சிறுவயதினரான சம்பந்தர் பெருமானை அமரச் செய்துவிட்டு, தடாகத்தில் நீராடும்பொழுது, நீருள் மூழ்கிச் செபித்தற்குரிய மந்திரத்தை ஓதுதல் பொருட்டு நீருள் மூழ்க, தந்தையாரைக் காணாத சம்பந்தர் 'அம்மே அப்பா' என்றழைத்து அழ, பிரமாபுரத்து இறைவன், உமையம்மையோடு தோன்றி, முலைப்பாலை பொன்வட்டிலில் அழும் பிள்ளைக்கு ஊட்டி அருளுமாறு இறைவியிடம் கூற இறைவியும் அவ்வாறே செய்தனர். கரையேறிய தந்தையார் வாயில் ஒழுகும் பாலினைக் கண்டு, பிள்ளையாரைக் கேட்டு விவர மறிந்து, ஆலயத்திற்கு அழைத்துச் சென்றபின் ஞானசம்பந்தர் பெருமான் பாடிய பாடலில், முதல் தொடர் அம்மையின் அருளிப்பாட்டை மறவாத நிலையில் "தோடுடைய செவியன்" என்னும் வருணனையாகவே அமைகிறது. தொடர்ந்து, வெண்மதி சூடியவன், வெண்ணீறணிந்தவன், ஆமை ஓடணிந்தவன், கங்கையைச் சூடியவன், மழுவேந்தியவன், யானைத் தோலைப் போர்த்திக் கொண்டவன், இளநாகம் அணிந்தவன், பன்றியின் கொம்பணிந்தவன் என அணிகல வருணனையாகவே அமைகின்றது. இவ்வணிகல வருணனையாலும், பிற வருணனையாலும், புராணக் குறிப்புகளாலும், இடபவாகனர், பலி ஏற்கும் பிச்சாடனர் பிறை அணிந்த வடிவினர், கங்காதர மூர்த்தி, மழுவேந்திய பைரவர், உமையொருபாகர், இராவணனுக்கு அருளிய வடிவினர், நால்வர்க்கு அறம் உரைத்த காட்சியினர், இலிங்கோத்பவர் ஆகிய இறை வடிவங்கள் பதிகத்தைப் பயில்வோர் மனக்கண்முன் தோன்றுகின்றன.

## சொல்லாட்சியும், தொடர்ச் சிறப்பும்

இறையருள் பெற்ற கவிஞர் பெருமானாய் சுவைமிக்கப் பக்திப் பனுவல்களை யாத்துத் தந்த சம்பந்தர் பெருமானின் சொல்லாட்சிகள்

காலம் கடந்தும் நின்று நிலவுவனவாய்த் திகழ்கின்றன. அவர்தம் பாடல்களின் வழி உலகுசேர்ந்து உச்சரிக்கப் பெற்ற தொடர்களில் முதல் பதிகத்தின்கண் அமைந்த, 'உள்ளங்கவர் கள்வன்', 'திருநெறிய தமிழ்' ஆகிய சொல்லாட்சிகள் தனித்துவம் வாய்ந்தவை. இறைவனைக் காதலனாகப் பாவித்துக் கூறப்பெற்ற 'உள்ளங்கவர் கள்வன்' என்ற தொடர், இறைவனைக் கண்ட சில நிமிடங்களில் சம்பந்தர் பெருமானால் உச்சரிக்கப்படுகிறது. காதலனைக் கள்வனென்று அழைக்கும் உரிமை, நீண்ட நாள் கண்டு, பழகி மகிழ்ந்தவர்க்கே இயல்பாகுமெனின், இத்தொடரை ஞானசம்பந்தர் பெருமானின் உள்ளத்தின் ஆழத்திலிருந்து வெளிப்பட்டதாய்க் கொள்வதினும், முன்வினைப் பயனாய்ப் பிறவிதோறும் இறைவன் மீது கொண்ட நீங்காக் காதலின் வெளிப் பாடாகக் கொள்ளுதலே பொருத்தமாயமையும். ஞானசம்பந்தர் பெருமானின் தமிழ்ப்பற்றின் வெளிப்பாடாயமைந்த "திருநெறிய தமிழ்" என்னும் தொடர், மடாலயங்கள் தோறும் மட்டுமன்றி சைவமும், தமிழும் போற்றப்படுமிடமெல்லாம் ஒலித்து வருவதையும் காணலாம். கல்வியும், கேள்வியும் நீதி இலக்கியங்களால் பெரிதும் வலியுறுத்தப் பெறுவன. அவ்வகையில், 'கற்றல் கேட்டல் உடையார் பெரியார்' என்னும் தொடரில் பக்தியென்னும் பாடுபொருளினுனக் கடந்த சமுதாய அறம் உணர்த்த விழையும், மானுடத்தின் உயர்வுக்குச் சிந்திக்கும் பான்மையை அறிய முடிகிறது. 'ஒருமை பெண்மையுடையன்' என்னும் தொடர் சிவதத்துவத்தின் செறிவாயமைந்த எளிய தொடராய் விளங்குகின்றது. 'அருநெறிய மறை', 'ஒரு நெறிய மனம்' முதலான தொடர்களும் பொருளாழம் நிறைந்ததாயமைந்து ஞானசம்பந்தர் பெருமானின் சொல்லாட்சித் திறனுக்குச் சான்று பகர்கின்றன.

**புராணக் குறிப்புகள்**

தேவாரப் பாடல்களைப் பயில்வோர், நேரடியான புராணக் குறிப்பு களாலும், வருணனைகளாலும் புராணச் செய்திகள் பலவற்றை மனம் கொள்ள இயலும். சம்பந்தர் பெருமான் தம் முதல் பதிகத்தில் நேரடியாகக் குறிப்புகளாலும், வருணனைகள் மூலமும் புராணச் செய்திகளைப் பதிவு செய்கிறார்.

**'ஏடுடையமல ரான்முனைநாள் பணிந்தேத்த அருள்செய்த"**

என்ற தொடரால், இறைவனைப் பிரமன் வணங்கிப் பணிந்து அருள் பெற்ற வரலாறும்,

**"விண்மகிழ்ந்தமதி லெய்ததுமன்றி விளங்குதலை யோட்டில்**
**உண்மகிழ்ந்துபலி தெரிய வந்து"**

என்றதனால், முப்புரம் எரித்த வரலாறும், தாருகாவனத்து முனிவர் களின் கருத்தழிக்கப் பிச்சைபாத்திரம் ஏந்திச் சென்ற புராணச் செய்தியும்,

"வியரிலங்குவரை யுந்தியதோள்களை வீரம்விளைவித்த
உயரிலங்கையரை யன்வலி செற்றன........ "

என்ற அடிகளால் இராவணனின் வலிமையை உணர்த்தி, ஆணவம் குறைத்து அருள் தந்த வரலாறும், ஒன்பதாம் பாடலடிகளால் திருமாலும் பிரமனும் அடிமுடி தேடிய வரலாறும் முதல் பதிகத்தின் வழி அறியக் கிடைக்கின்றன. மேலும், வருணனைகளால் நால்வர்க்கு அறம் உரைத்த செய்தியும், யானை வடிவம் கொண்டு வந்த கயாசுரன் என்னும் அரக்கனை அழித்து, யானைத்தோலைப் போர்வையாகப் போர்த்திக்கொண்ட புராணச் செய்தியும் வெளிப்படுகின்றன. நுணுகி உணர்வார்க்கு, தோடுடைய செவியன், வெண்மதிசூடி, இளநாகம், ஏனக்கொம்பணிந்தவன், கங்கையைச் சூடியவன் முதலான வருணனைகளெல்லாம் புராணக் குறிப்புகளைத் தருவனவாயமையும்.

**பெறலாகும் பயன்**

முன்வினைப் பயனால் இளம் வயதிலேயே இறையருள் பெற்றுப் பாக்களை இயற்றி அருளிய ஞானசம்பந்தர், தம் முதல் பதிகத்தைப் பாடுவார் தொல்வினை தீர்தல் எளிதெனப் பயன் உரைத்தல் ஈண்டுப் பெரிதும் பொருத்தமுடையதாய் அமைவதைக் கண்டறிய முடிகிறது.

**தனிச்சிறப்பு**

மிக்க இளம் வயதினரான சம்பந்தர் பெருமான் முதல் பதிகத் திலேயே நாயகன், நாயகி பாவத்தைப் பாடலில் பதிவு செய்தமையை இப்பதிகத்தின் தனிச் சிறப்பாகக் குறிப்பிடலாம். அகப்பொருள் பாடல் கூறுகளை அமைத்துப் பாடியமையால் அகத்துறை இலக்கணமமைந்ததாய் இப்பதிகம் திகழ்கின்றது.

ஆணும், பெண்ணும் சரிபாதி என்னும் கருத்தமைந்த, உமையொரு பாகன் வடிவத்தை மனதிற்கொண்டு, 'தோடுடைய செவியன்' எனப் பதிகத்தைத் தொடங்கியிருப்பதும் இப்பதிகத்தின் தனிச் சிறப்பாகும்.

இல்லற வாழ்க்கை நெறியிலிருந்து முற்றிலும் விலகிட வலி யுறுத்தும் பௌத்த, சமண சமயங்களை எதிர்காலத்தில் பல்வேறு சூழல் களில் எதிர்கொண்டு வெல்லப்போவதை முன்னமையே உணர்ந்ததால் தான், ஞானசம்பந்தர் பெருமான் தம் முதல் பதிகத்தையே அகப்பொருள் துறையமைந்ததாய் பாடி அருளினார் என்றறிவதும் இப்பதிகத்தின் தனிச்சிறப்பாகும்.

இறைவனை வருணிக்குமிடமெல்லாம் இறைவனின் மேனி அழகை விட, வெற்றிச் செய்திகளைத் தரும் அணிகலன்களையும், வெற்றிக் குறிப்புகளைக் கொண்ட தொடர்களையும் அமைத்திருப்பதும் கண்டுணரக் கூடியதாகும்.

புராணச் செய்திகளில் திருமால், பிரமன், இராவணன் தாருகா வனத்து முனிவர்களென இயம்பப்படும் - அனைவரின் தோல்வியிலும் ஆணவ அழிவே முன்னிறுத்தப்படுவதைக் காண இயலுகிறது.

திருஞானசம்பந்தர் தம் முதல் பதிகத்தில் தாம் அவதரித்த தலத்து இறைவனையே பாடி அருளுகின்றார். தல வருணனையில், பிரமா புரத்தின் ஊழிக்கால வெள்ளத்தில் மூழ்காத தனிச்சிறப்பை எடுத்தியம்பு கிறார். இறைவன் வருணிக்குமிடமெல்லாம் வெற்றிக் குறிப்புகள் தோன்றவே பாடுகிறார். புராணக் குறிப்புகளாலும், வருணனையாலும் பல்வேறு சிவ வடிவங்களைக் கண்டுணர வியலுகிறது. சொல்லாட்சிகள் ஞானசம்பந்தரின் தமிழ்ப்பற்றையும், இறைவனோடுள்ள முற்பிறவித் தொடர்பையும், சமுதாய அறம் உரைக்கும் மானுடத்தின் மீதான அக்கறையையும் புலப்படுத்துகின்றன. பதிகத்தின் பயனாகத் தொல்வினை தீர்தல் எளிதென்கிறார். இப்பதிகத்தின் தனித்தன்மையாக முதல் பதிகமே நாயகி நாயக பாவத்தினதாய் அமைத்துப் பாடுகிறார். புராணச் செய்திகள் அனைத்திலும் ஆணவ அழிவே சம்பந்தர் பெருமானால் அதிகம் வலியுறுத்தப் பெறுகிறது.

# 9. சம்பந்தரின் ஆளுமைத் திறம்

**அரங்க. இராமலிங்கம், சென்னை.**

தமிழ் இலக்கிய வரலாற்றில் கி.பி. ஆறாம் நூற்றாண்டு முதல் பன்னிரண்டாம் நூற்றாண்டு வரையிலான காலகட்டத்தைத் தமிழ் பக்தி இயக்கத்தின் பொற்காலம் எனக் குறிப்பிடலாம். இக்கால கட்டத்தில்தான் பக்தி இயக்கம் தமிழகத்தில் தோன்றி மெல்ல மெல்ல வடபுலம் நோக்கிப் பெயர்ந்து உலகளாவிய இயக்கமாகப் பரவியது. பக்தி இயக்கத்திற்கு வித்திட்ட பெருமை தமிழகத்திற்கு உரியது. அதற்கு உயிரூட்டியவர்கள் நாயன்மார்களும் ஆழ்வார்களும் ஆவர். நாயன்மார்களில் முன்னின்றவர்கள் இருவர். ஒருவர் திருநாவுக்கரசர்; மற்றவர் திருஞானசம்பந்தர். இவ்விருவரின் அடியொற்றி ஏனைய நாயன்மார்களும் ஆழ்வார்களும் பக்தி இயக்கத்திற்கு உரம் ஊட்டி னார்கள். கி.பி. 12-ஆம் நூற்றாண்டில் தோன்றிய தெய்வச் சேக்கிழார் பக்தி இயக்கத்தின் விழுதுகளாக விளங்கிய திருத்தொண்டர்களின் வாழ்க்கையைக் காப்பியமாகப் புனைந்து வரலாற்றில் நிலைக்கச் செய்துவிட்டார்.

பக்தி இயக்கத்தை முன்னின்று நடத்திய இருவரில் ஒருவராகிய திருஞானசம்பந்தர் தலைமைத்துவ நெறியில் தம் ஆளுமையைப் புலப்படுத்தியவர். திருநாவுக்கரசர் தொண்டு நெறியில் தம் ஆளுமையைத் தொடர்ந்தவர். தலைவராகத் திருவவதாரம் செய்த திருஞானசம்பந்தரின் பெருவாழ்வு இறைவனது திருஉள்ளக் குறிப்பின்வழி அமைந்தது என்பதை,

**அவம்பெருக்கும் புல்லறிவின் அமண்முதலாம் பரசமயப்**
**பவம்பெருக்கும் புரைநெறிகள் பாழ்பட நல்லூழிதொறும்**
**தவம்பெருக்கும் சண்பையிலே தாவில் சராசரங்களெல்லாம்**
**சிவம்பெருக்கும் பிள்ளையார் திருவவதாரஞ் செய்தார்**

(பெரியபுராணம் -1929)

எனத் தெய்வச் சேக்கிழார் குறிப்பிடுகிறார். தாம் பாடிய திருப்பாடல் களும் தம்முடைய செயல்களும் இறைவனின் விருப்பத்திற்கேற்பவே செய்யப்பெற்றதாக **(எனது உரை தனது உரையாக** - 1:76.5) திருஞானசம்பந்தரே கூறுவது உணர்ந்து அறியத்தக்கது. **என்னைத்**

**தன்னாக்கி, என்னால் தன்னை இன்தமிழ் பாடிய ஈசனை, ஆதியாய் நின்ற சோதியை** என நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் அருளி யிருப்பதை ஒப்புநோக்கி உணர்க.

காபாலிகம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், பைரவம் ஆகிய நிலைகளில் முரட்டுச் சைவமாகவும்; சுத்த சைவம், அசுத்த சைவம், மார்க்க சைவம், கடும் சுத்த சைவம் என்ற நிலைகளில் சடங்குகளில் சிக்குண்ட சைவமாகவும், பிற்காலத்தில் வீரசைவம், காஷ்மீர சைவம் எனப் பல நிலைகளில் சைவம் பிளவுபட்டுப் பிரிந்து கிடந்தது. வெற்று ஆரவாரச் சடங்குகள், அன்பு நெறிக்கு ஒவ்வாத வழிபாட்டு முறைகள் மற்றும் மது மாமிசம் அருந்துதல், புலித்தோல் ஆடை புனைதல், மண்டை ஓடு அணிதல் இன்னபிற நடைமுறைகளோடு இருந்து வந்த - சைவத்தை அன்புநெறிச் சைவமாக (**கூடும் அன்பினில் கும்பிடலேயன்றி வீடும் வேண்டாச் சைவமாக** - சேக்கிழார்; **அன்பே சிவமாக அமர்ந் திருக்கும் சைவமாக** - திருமூலர்) மாற்றிய பெருமை திருஞான சம்பந்தருக்கும் திருநாவுக்கரசருக்கும் உரியது. இப்பெருமக்கள் தமிழகத்தின் ஊர்கள்தோறும் சென்று மக்களைச் சந்தித்து அவர்களை ஒருங்கிணைத்து மக்கள் சைவமாக சைவத்தை மாற்றினர். மக்கள் இயக்கமாகச் சைவ சமய இயக்கம் உருவாயிற்று. மக்கள் சக்தியைத் திரட்டி அவர்களை ஓர் இயக்கமாக்கி அவர்கள் மூலம் பழைய திருக்கோயில்களைப் புதுப்பித்தும் - பல புதிய திருக்கோயில்களை உருவாக்கியும் இசைத்தமிழால் இறைவனைப் போற்றித் துதித்தனர். இசையும் நாடகமும் மீண்டும் தமிழகத்தில் புத்தெழுச்சி பெற்றது. தமிழ்ப் பண்பாடும் தமிழ் உணர்வும் இவர்தம் பாடல்களில் வெளிப்பட்டன. **காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்க இறைவனை வழிபடும் தூய பக்திநெறி உரம்பெற்றது - வளம்பெற்றது - வளர்ந்தது.** பண்டைத் தமிழரின் அகத்திணை மரபு ஆன்மீக அடித்தளத்தில் மீண்டும் தளிர்த்துத் தழைத்தது.

மக்கள் தங்களுக்குள்ள வேறுபாடுகளை மறந்து ஒருங்கிணைகின்ற இடமாகத் திருக்கோயில்கள் மடை மாற்றம் செய்யப்பெற்றன. சுருக்கமாகச் சொல்லப் போனால் திருக்கோயில்கள் சமுதாயக் கூடங்களாக மாறின. மக்கள் தொடர்புச் சாதனமாக அதாவது வெகுஜன ஊடகமாக (Mass Media) திருக்கோயில்கள் உருப்பெறலாயின. திருக்கோயில்களை மையப் படுத்தி இசை, நாட்டியம், கூத்து, நாடகம் என அனைத்துக் கலைகளும், சிறப்பு விழாக்களும் பூசனைகளும் நடைபெற்றன. அரசன் முதல் ஆண்டி வரை ஆண்டவன் முன்னால் அனைவரும் சமம் என்ற சமுதாயப் புரட்சியைத் திருக்கோயில்கள் நிகழ்த்தின.

மக்களுக்கும் மகேசனுக்கும் இடையே இருக்கும் இடைவெளியைக் குறைத்து அம்மை, அப்பன், ஐயன் என உரிமையோடு உறவு கொண்டாடு

கின்ற நிலையைப் பக்தி இயக்கம் உருவாக்கியது. இக்கட்டத்திலிருந்து இன்னும் ஒருபடி மேலே சென்று நாயக நாயகி பாவத்தில் இறைவனோடு தங்களுக்குள்ள உறவை உறுதிசெய்து மீளா அடிமை என்ற நிலையில் ஒரு பிணைப்பை - நெருக்கத்தை உருவாக்கியது பக்தி இயக்கம். தமிழ் இலக்கியத்தின் உயிர்நாடியாக இருக்கக் கூடிய அகத்திணை மரபை பக்தி இயக்கம் போற்றி வளர்த்தது. **சிறையாரும் மடக்கிளியே இங்கே வா, தேனொடு பால் முறையாலே உணத்தருவன்** (1:60.10) எனத் திருஞானசம்பந்தரும் **முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்** (6:25:7) எனத் திருநாவுக்கரசரும் காதலியாகிக் கசிந்து உருகுகின்றனர்.

**மண்ணினல் லவண்ணம் வாழலாம் வைகலும்**
**எண்ணினல் லகதிக்கி யாதுமோர் குறைவிலைக்**
**கண்ணினல் லஃதுறுங் கழுமல வளநகர்ப்**
**பெண்ணினல் லாளொடும் பெருந்தகை இருந்ததே** (3:24.1)

என வாழ்க்கையில் ஒரு பிடிப்பையும் நம்பிக்கையையும் ஊட்டுகிறார் சம்பந்தர். இல்லாளோடு இனிதே இருக்கும் ஆதியாம் எம் ஈசனைக் காட்டி இல்வாழ்வின் சிறப்பைப் போற்றியுரைக்கின்றார். இவ்வாறு பக்தி இயக்கம் செய்த சமுதாயப் புரட்சிகளை விரிவாக எடுத்துரைக்கலாம். ஆனால் இக்கட்டுரையின் நோக்கம் மேற்சுட்டிய பக்தி இயக்கத்தினைத் தலைமையேற்று நடத்திய திருஞானசம்பந்தரின் ஆளுமைத்திறத்தினை எடுத்துரைப்பதாகும்.

ஓர் இயக்கத் தலைவருக்குரிய வீரமும் தன்னம்பிக்கையும் - மக்கள் கூட்டத்தைக் கவர்ந்திழுக்கும் அழகும், ஆளுமையும் - பேச்சு வல்லபமும் கவிபுனை ஆற்றலும் - அனைவரையும் அரவணைத்துச் செல்லும் பாங்கும் - தாம் சென்ற இடங்களிலெல்லாம் அந்த இடத்தின் அழகை - இயற்கையை அழகுறப்பாடி அம்மக்களின் உள்ளங்களை கவர்ந்திழுக்கும் உளவியல் திறமும் - வாய்ப்பு நேரும்பொழுதெல்லாம் மாற்றுக் கருத்துடையவரை (வேறு சமயத்தவரை) இழித்தும் பழித்தும் உரைக்கும் போக்கும் - தன்னோடு ஒத்த கருத்துடையவர்களைப் (நாயன்மார்களை) புகழ்ந்தும் போற்றியும் - தாம் இறையருள் பெற்றவர் (அற்புதங்கள் நிகழ்த்தியமை) என்பதை உணர்த்தியும் - பல புதிய யாப்பு வடிவங்களை உருவாக்கித் தம் புலமைத்துவத்தை நிலைநாட்டியும் தம்மை ஒப்பாரும் மிக்காரும் இல்லாத தனிப்பெருந் தலைவராக நிலைநிறுத்திக் கொண்டவர் திருஞானசம்பந்தர். அவருடைய வாய்மொழிச் சான்றுகளாக இன்று நமக்குக் கிடைத்துள்ள (மொத்த பதிகங்கள்: 384 - மொத்த பாடல்கள் 4,158) தேவாரப் பதிகங்களே மேற்சுட்டிய அவரின் ஆளுமைத் திறத்திற்குச் சான்றுகளாய்த் திகழ்கின்றன. திருஞானசம்பந்தரின் ஆளுமைப் பண்புகளைப் பின்வருமாறு வரிசைப் படுத்தலாம்.

1. திருஞானசம்பந்தர் பாடியருளிய பதிகங்களின் இறுதிப்பாடலுக்கு திருக்கடைக்காப்பு என்று பெயர். இதனைத் தமிழில் முத்திரைக்கவி எனவும் வடமொழியில் பலசுருதி எனவும் வழங்குவர். காரைக்காலம்மையார், ஆண்டாள், நம்மாழ்வார் போன்றோர் தம்முடைய பதிகங்களின் - பாசுரங்களின் இறுதியில் தம்மைப் பற்றிய குறிப்பை மிகப் பணிவோடும் அடக்கத்தோடும் பதிவு செய்துள்ளதைக் காணலாம். ஆனால் திருஞானசம்பந்தர் தம்முடைய திருக்கடைக்காப்புப் பாடல்களில் **காழியர்கோன், கவுணி ஞானத்துயர் சம்பந்தன், தமிழ் விரகன், செழுமறைகள் பழகு நாவான், சந்தமெல்லாம் அடிசாத்த வல்ல மறைஞான சம்பந்தன், ஞானசம்பந்தனுரை செய் சங்கமலி செந்தமிழ்கள்** எனத் தமது ஊர்ப் பெருமை, குடிப்பெருமை, தம்முடைய மொழிப்புலமை இசைப்புலமை, மரபுசார்ந்த புலமை முதலான சிறப்புகளை எடுத்துரைக்கும் நிலையினைக் காணலாம். இவ்வாறு தம்மைத் தாமே முன்னிலைப்படுத்தி முன்னிறுத்திக் கொள்வது ஆளுமைப் பண்பிற்குச் சான்றாகும். **முத்தமிழாகரர், வேதபாலகர், முத்தமிழ் விரகர், பரசமய கோளரி** எனத் தெய்வச் சேக்கிழாரும் திருஞானசம்பந்தரின் மேற்சுட்டிய ஆளுமையை ஏற்றுக்கொண்டு போற்றியுரைப்பதைக் காணலாம்.

2. தம்முடைய திருக்கடைக்காப்புப் பாடல்களில் ஆணையிட்டு உறுதி கூறல் இவர்தம் இயல்பு. இவ்வாறு ஆணையிட்டுரைத்தல் தலைமைத்துவம் உடையாரின் இயல்பு.

**வினை கெடுதல் ஆணை நமதே** (2.84:11)

**அரசாள்வர் ஆணை நமதே** (2:85:11)

**அந்த உலகம் எய்தி அரசாளும் அதுவே சரதம் ஆணை நமதே** (3:78:11)

**மண்மிசைப் பிறவார் மற்றிதற்கு ஆணை நமதே** (3:118:11)

இவ்வாறு ஆணையிட்டு உறுதிகூறி, தம் தொண்டர்களை நம்பிக்கையுடனும் உற்சாகத்தோடும் வழிநடத்திச் செல்வது ஒரு தலைவருக்குரிய பண்பாகும்.

3. தலைவருக்குரிய அடிப்படையான இயல்புகளுள் ஒன்று எப்பொழுதும் தம்மைச் சுற்றித் தொண்டர் குழாத்தோடு இருப்பதும் எங்கு சென்றாலும் தொண்டர் குழாத்தோடு செல்வதும் ஆகும். திருஞான சம்பந்தரோடு தொடக்கம் முதல் இறுதிவரை நூற்றுக்கணக்கான அடியார் திருக்கூட்டம் உடனிருந்து உறைந்தது. அவர் எங்குச் செல்லினும் அவ்வடியார் திருக்கூட்டத்தோடே சென்றார். அவர் சென்ற இடங்களிலெல்லாம் மக்கள் ஆயிரக்கணக்கில் திரண்டு வரவேற்றனர். செல்லும் வழியெங்கும் கொடிகள், விதானங்கள்,

நடைப்பந்தர், தோரணங்கள், கரும்பு, நெல், கமுகு, வாழை மரங்கள் கட்டி வரவேற்றனர். பூமாலைகள், விளக்குகள், நிறைகுடங்கள் ஏந்தி எதிர்கொண்டு வரவேற்றனர். வேதங்கள் முழங்க, தமிழ் மறைகள் ஒலிக்க, கொம்புகளும், சங்குகளும், எக்காளங்களும் ஒலிசெய்ய மெய்க்கீர்த்திகள், சொல்லிச் சொல்லி வரவேற்றனர். **பரசமயக் கோளரி வந்தார், பாலறாவாயர் வந்தார், முத்தமிழ் விரகர் வந்தார்** என்பன போன்ற விருதுகளைக் கூறிக்கூறி வரவேற்றனர். மலர் களையும் பொரிகளையும் நாற்றிசையிலும் வாரி வீசி மகிழ்ச்சியில் திளைத்தனர். இத்தகு சிறப்புமிகுந்த வரவேற்போடு திருஞானசம்பந்தர் பவனி வந்தார். இத்தகு வரவேற்பு திருநாவுக்கரசருக்கு கிடைத்ததாகப் பெரியபுராணத்தில் குறிப்பில்லை.

திருஞானசம்பந்தர் போன்ற இளம் தலைவர் ஒருவர் கிடைத்த வுடன் சைவபக்தி உலகம் அவரைத் தலைமேல் வைத்துக் கொண்டாடியது. திருஞானசம்பந்தரின் தலைமையை அன்றைய சைவபக்தி உலகம் உரியவாறு உணர்ந்து மதித்துப் போற்றியது. தலைமையை ஏற்றுக் கொண்டாடி மகிழ்ந்தது.

திருநாவுக்கரசர், குங்குலியக்கலய நாயனார், திருநீலநக்கர், திருநீலகண்ட யாழ்ப்பாணர், சிறுத்தொண்டர், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார், நின்றசீர் நெடுமாறனார், முருக நாயனார் முதலான நாயன்மார் பலரும் திருஞானசம்பந்தரோடு இணைந்து செயல்பட்டமையே அவருடைய தலைமைத்துவத்திற்குச் சான்று. மேற்சுட்டியவர்களில் திருநாவுக்கரசரைத் தவிர ஏனையோர் திருஞானசம்பந்தரின் ஆளுமைக்குள் அடங்கியவர்கள்.

திருஞானசம்பந்தருக்குப் பிறகு முன்னூறு ஆண்டுகள் கழித்து, சுந்தரமூர்த்தி சுவாமிகள் **எம்பிரான் சம்பந்தர்** (திரு. தொகை) என்றும், சுந்தரருக்கு நூறு ஆண்டுகள் கழித்து வந்த நம்பியாண்டார் நம்பிகள் சம்பந்தர்மீது ஆறு தனிப்பிரபந்தங்கள் பாடியும் நம்பிக்குப் பின் இருநூறு ஆண்டுகள் கழித்து வந்த தெய்வச் சேக்கிழார் 1256 பாடல் களில் திருஞானசம்பந்தரைப் பாடியும் (பிள்ளைப்பாதி புராணம்பாதி என்ற நிலையில்) சம்பந்தரின் ஆளுமைத்திறத்தினை உறுதி செய்துள்ளனர். மூன்று வயது இளம்பிராயத்திலேயே அனைத்து ஞானங்களையும் உணர்ந்து தலைமைப் பண்போடு தவ முதல்வராக அவதாரம் செய்தவர் ஞானசம்பந்தர் என்பதைத் தெய்வச் சேக்கிழார் மிக நுட்பமாகவே பதிவு செய்துள்ளார்.

**சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்**
**பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கியஞானம்**

உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாம்உணர்ந்தார் அந்நிலையில்
(பெரியபுராணம்-1968)

இறையருளால் சிவபெருமான் திருவடிகளையே நினைத்துச் செம்மை பெருகச் செய்யும் சிவஞானத்தையும் பிறப்பு இறப்பென்னும் அறச்சக்கரத்தை ஓடாமல் ஒரு நிலையில் நிறுத்தும் ஓங்கிய ஞானத்தையும் உணர்வுக்கும் எட்டா நுண்ணிய மெய்ஞ்ஞானத்தையும் இளமையிலேயே பெற்றார் திருஞானசம்பந்தர்.

4. தலைமைக்குரிய முக்கிய பண்புகளில் ஒன்று தொண்டர்களைத் தன்வயப்படுத்தலாகும். அதற்குச் சில அற்புதங்களையும் சில வீரதீரச் செயல்களையும் செய்தாக வேண்டும். அந்த வகையில் திருஞான சம்பந்தர் சீர்காழியில் ஞானப்பால் அருந்தியது திருக்கோலக்காவில் பொற்றாளம் பெற்றது, திருவரத்துரையில் (திருநெல்வாயில் அரத்துரை) முத்துச்சிவிகை, முத்துச் சின்னம், முத்து மணிக்குடை பெற்றமை, திருப்பாச்சிலாச்சிராமத்தில் சிற்றரசனாகிய கொல்லி மழவனின் மகளைப் பிடித்திருந்த முயலகன் என்னும் பிணியை அகற்றியது, திருவோத்தூரில் ஆண்பனை மரங்களைப் பெண்பனை மரங்களாக மாற்றியது, திருவீழிமிழலையில் திருநாவுக்கரசருடன் இணைந்து நாள்தோறும் பொற்காசு பெற்று அடியார் திருக்கூட்டத் திற்கும் பொதுமக்களுக்கும் அருளமுது அளித்தது, திருமறைக்காட்டில் திருக்கோயில் திருக்கதவம் திறக்கவும் மூடவும் திருநாவுக்கரசருடன் இணைந்து செய்தது, திருமருகலில் நஞ்சேறி இறந்த இளைநனை உயிர்பெறச் செய்தது மயிலாப்பூரில் இறந்து சாம்பலாக இருந்த பூம்பாவையை உயிர்ப்பித்தது என்பன போன்ற பல அற்புதங்களைத் திருஞானசம்பந்தர் தலைமைத்துவ நிலையில் செய்து அடியார் களின் ஆதரவைப் பெறுகிறார். இந்நிகழ்ச்சிகள் அவர்காலச் சைவ அடியார்கள் மத்தியில் பெரும் பரபரப்பையும் உற்சாகத்தையும் ஏற்படுத்தியிருக்கும் என்பது உறுதி.

இதற்கெல்லாம் சிகரம் வைத்தது போன்ற நிகழ்ச்சி மதுரையில் நிகழ்ந்தது. அனல்வாதம், புனல்வாதம் என்ற நிலையில் சமணர்களை வெற்றிகொண்டு தென்பாண்டிய மண்டலம் முழுமையையும் சைவத்திற்கு மாற்றினார் சம்பந்தர். எண்ணாயிரம் சமணர்கள் தாங்களாகவே கழுவேறி உயிர்துறந்த நிகழ்ச்சி ஞானசம்பந்தரை ஞானவீரராக உலகுக்குக் காட்டின. ஆண்டவனின் அருள்பெற்ற அற்புதத் தலைவராகவும் ஞான வீரராகவும் திருஞானசம்பந்தர் தொண்டர்தம் மத்தியில் உலா வந்தார்.

இதுவரை குறிப்பிட்ட நிகழ்ச்சிகள் திருஞானசம்பந்தரே முன்னின்று தாமே நிகழ்த்தியமை. திருஞானசம்பந்தர் போன்ற ஒப்பற்ற தலைவரை

ஏற்றுக் கொண்ட ஒரு தொண்டர்கூட இதுபோன்ற அற்புதங்களையும் ஞான வீரதீரச் செயலையும் செய்ய முடியும் என்பதைத் தெய்வச் சேக்கிழார் பதிவு செய்கிறார். போதிமங்கை என்னும் ஊரில் திருஞான சம்பந்தரை எதிர்த்த பௌத்தர்களின் தலையில் இடிவிழச் செய்தும், அவர்களின் தலைவனான சாரிபுத்தனை வாதில் வென்றும் புரட்சி செய்கிறார். **சம்பந்த சரணாலயர்** என்ற சீடர். திருஞானசம்பந்தரை முன்னிறுத்திக்கொண்டு அவரின் சீடரே மேற்சொன்ன அற்புதத்தினையும் ஞான வீரத்தினையும் செய்ய முடியும் என்ற வரலாறு திருஞானசம்பந்தரின் ஆளுமையைப் பன்மடங்கு உயர்த்திக் காட்டுவதாகும்.

5. தம்முடைய ஆளுமையை நிலைநிறுத்திக் கொள்வதற்கு ஒரு திட்டப் பாங்கோடு திருஞானசம்பந்தர் பதிகங்களைப் பாடியுள்ளார். திருஞானசம்பந்தரின் பதிகங்களில் முதல் ஏழு பாடல்களில் அவர் பாடிய தலத்தின் (ஊர்) பெருமையையும், அத்தலத்தின் இயற்கை யெழிலையும் பின்னர் அத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவனின் அளப்பரிய அருள்திறத்தையும் எழிலுறப் பாடியிருப்பதைக் காணலாம். எட்டாவது பாடலில் இராவணனின் ஆற்றாமை பேசப்பெறும். குறிப்பாகக் கயிலை மலையை எடுக்க ஆற்றாது அவன் அழுது அரற்றிய நிலை சுட்டப்பெறும். ஒன்பதாவது பாடலில் அடிமுடி தேடிய நான்முகன், திருமால் இருவரின் இயலாமை பேசப்பெறும். பத்தாவது பாடலில் சமண, பௌத்தரைப் பற்றிய பழிப்பு இடம் பெறும். குறிப்பாகச் சமண பௌத்தர்களின் தத்துவக் கருத்துகளைவிட அவர்களின் புறக்கோலமே மிகுதியும் பழிப்பிற்கு இடமாக அமைந் துள்ளது. பதினோராவது பாடலாக அமைந்துள்ள திருக்கடைக்காப்புப் பாடல் மேற்சுட்டிய பத்துப்பாடலையும் படித்ததனால் நிகழும் பயன்பாட்டைக் கூறுகிறது. எம் பாடலைப் படிக்கின்ற ஒவ்வொரு வரும் சிவபதம் பெறுவீர்கள் என்ற உறுதிமொழியை ஆணையிட்டு (ஆணை நமதே) உரைக்கின்றார் திருஞானசம்பந்தர். தம்மையே நம்பியிருக்கும் தொண்டர்களுக்கு உற்சாகத்தையும் நம்பிக்கையையும் ஊட்டி தம்முடைய எதிரிகளை எள்ளியும் பழித்தும் ஒழிப்பது தலைமைத்துவத்திற்குரிய பண்பாகும். அந்த வகையில் ஒரு திட்டப் பாங்கோடும் தலைமைத்துவப் பண்போடும் தம் பதிகங் களைப் பாடியவர் திருஞானசம்பந்தர்.

6. இயக்கத்திற்குத் தலைமையேற்போர் மக்களிடையே நிலவும் சாதி வேறுபாடுகளுக்கு அப்பாற்பட்டவராகத் தம்மைக் காட்டிக் கொள்ள வேண்டும். வாய்ப்பு நிகழும்போது அனைவரும் சமம் என்பதை உறுதி செய்ய வேண்டும். அந்த வகையில் அந்தணராகக் கவுணிய கோத்திரத்தில் பிறந்த திருஞானசம்பந்தர் தாழ்த்தப்பட்ட வகுப்பினராகிய திருநீலகண்ட யாழ்ப்பாணரைத் தம்முடன் இணைத்துக் கொள்ளு

கிறார். தாம் செல்லும் இடங்களுக்கெல்லாம் அவரையும் அவரது துணைவியார் மதங்கசூளாமணியாரையும் அழைத்துச் செல்கிறார். திருஞானசம்பந்தர் பாடும் பாடல்களுக்கு இருவரும் யாழிலே இசைமீட்டி பண்ணமைத்தனர். நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய ஞானசம்பந்தர் திருக்கோயிலின் கருவறையில் நின்று பாட அப்பாடல்களுக்கு இசையமைத்து யாழிலே மீட்ட பெரும்பாணர் திருக்கோயிலின் வெளியிலேயா நின்றிருப்பார்? அவரும் சம்பந்தருடன் உள்ளே உறைந்து உருகி நின்றல்லவா இசையமைத் திருப்பார். 1400 ஆண்டுகளுக்கு முன்னால் திருக்கோயிலுக்குள் அனைவரையும் அழைத்துச் சென்ற முதல் சமுதாயப் புரட்சியாளர் திருஞானசம்பந்தர்.

அந்தணராகிய திருநீலநக்க நாயனாரின் இல்லத்தில் பெரும்பாணரையும் அவரது துணைவியாரையும் தங்க வைத்தது, திருஞானசம்பந்தரின் தலைமைத்துவப் பண்பிற்கும் அவரது ஆளுமைக்கும் கிடைத்த மாபெரும் வெற்றியாகும். அந்தணராகிய திருநீல நக்கரின் இல்லத்தில் திருநீலகண்ட யாழ்ப்பாணரும் அவரது துணைவியார் மதங்கசூளாமணியாரும் நடுக்கூடத்தில் வேள்வித்தீயின் அருகில் படுத்ததும் வேள்வித்தீ முன்பைவிடப் பன்மடங்கு வலம்சுழிந்து எழுந்தது எனத் தெய்வச் சேக்கிழார் குறிப்பிடுகிறார். தலைவராகிய திருஞானசம்பந்தருக்குத் தொண்டராகிய தெய்வச் சேக்கிழார் செலுத்தும் வணக்கமாகிய அங்கீகாரம் இது.

7. தலைமையேற்போர் தம்முன் உள்ள சிக்கலை (பிரச்சனைகளை) எதிர்கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் தலைமைத்துவம் நிலை பெறும். பிரச்சனைகளிலிருந்து விலகி ஓடுபவர் தலைவராக இருக்க முடியாது. பிரச்சனைகளை எதிர்கொண்டு வெற்றி கொள்ளுபவர் தலைவராகிறார். திருவீழிமிழலையில் திருஞானசம்பந்தர் இருக்கும் போது கொடிய பஞ்சம் வந்தது. மக்கள் வறுமையில் வாடினர். ஆட்சித் தலைவனாக இருக்கும் மன்னன் பஞ்சம்போக்கி மக்களின் துயர்துடைக்க கஞ்சித் தொட்டியாவது திறந்திருக்கவேண்டும். ஆட்சித் தலைவன் செய்யாத மக்கள் தொண்டினைச் சமயத் தலைவராகிய திருஞானசம்பந்தர் செய்கின்றார். திருநாவுக்கரசரோடு இணைந்து இறையருளால் பொற்காசினை நாளும் பெற்று பஞ்சம் தீரும்வரை பசியாற்றும் மாபெரும் மக்கள் தொண்டினைச் செய்கின்றார். வறுமையில் வாடிய மக்களுக்கு அருளமுதம் அளித்து அன்புகாட்டிய திருஞானசம்பந்தரின் தலைமைத்துவம் உணரத்தக்கது.

8. தலைமையேற்போர் புலமை நிரம்பியவராகவும் இருத்தல் வேண்டும். புலமைத்துவம் தலைமைத்துவமும் நிரம்பியவர்களே வரலாற்றில்

நிலைத்து நிற்கின்றனர். அந்த வகையில் தமிழில் புதுப்புது யாப்பு வகைகளை உருவாக்கித் தம்மைத் தமிழ்வல்ல ஞானசம்பந்தராகப் புலப்படுத்திக் கொண்டவர் சம்பந்தர். பத்திற்கும் மேற்பட்ட யாப்பு வகைகளையும் மற்றும் 'பா' அமைப்பு முறைகளையும் கையாண்டு சம்பந்தர் பதிகம் பாடியுள்ளார்.

1. திருமொழிமாற்று, 2. திருமாலைமாற்று, 3. வழிமொழித் திருவியமகம், 4. திருஏகபாதம், 5. திருவிருக்குக் குறள், 6. திருவெழு கூற்றிருக்கை, 7. திருஈரடி, 8. திருஈரடிமேல் வைப்பு, 9. நாலடிமேல் வைப்பு, 10. திருவிராகம், 11. திருச்சக்கரமாற்று, 12. வினாவுரை முதலிய புதிய யாப்பு மற்றும் அமைப்பு முறைகளைப் பதிகங்களில் பயன்படுத்தி புலமைத்துவத்தை நிலைநாட்டியவர் திருஞானசம்பந்தர். **முத்தமிழாகரர், முத்தமிழ் விரகர், வண்டமிழ் நாயகர்** எனத் தெய்வச் சேக்கிழாரும் இவரின் புலமைத் திறத்தைப் போற்றியுரைக்கின்றார்.

9. தமிழ் யாப்பில் பல புதிய வகைகளைக் கண்டு தம் புலமைத் திறத்தை உறுதிப்படுத்திய திருஞானசம்பந்தர் இசையிலும் தம் புலமையை உறுதி செய்துள்ளார். புதுப்புது பண்களில் பாடல்கள் பலபாடி தமிழிசைக்குப் புத்துயிர் அளித்தவர். ஒரு கட்டத்தில் பெரும்பாணராகிய திருநீலகண்ட யாழ்ப்பாணரே இசையமைக்க முடியாமல் திணறிய யாழ்மூரிப் பண்ணைப் பாடி இசைத்துறை யிலும் தம் ஆளுமையை - தலைமைத்துவத்தைத் தக்கவைத்துக் கொண்ட முத்தமிழ் வித்தகர் ஞானசம்பந்தர்.

10. இயக்கத்திற்குத் தலைமையேற்போர் தாம் வாழும் நாட்டின் அனைத்து இடங்களையும் நன்கு அறிந்தவராகவும் தம் இயக்கம் சார்ந்தோரை அரவணைத்துச் செல்பவராகவும் இருக்க வேண்டும். அந்த வகையில் நாயன்மார்களில் மிகுதியான தலங்களுக்குச் சென்று பாடிய (224 தலங்கள்) நாயன்மாராகவும் மிகுதியான பதிகங்கள் பாடியவராகவும் (மொத்தப் பதிகம் : 384; மொத்தப் பாடல்கள் - 4158) சம்பந்தர் திகழ்கிறார். தம்மையொத்த அருளாளர் களை அரவணைத்துச் செல்லும் தலைமைப்பண்பு இவரிடம் சிறப்பாகவே காணப்படுகிறது. திருநாவுக்கரசர், முருக நாயனார், திருநீலகண்ட யாழ்ப்பாணர், திருநீலநக்கர், சிறுத்தொண்டர், குங்குலியக் கலய நாயனார், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார், நின்றசீர் நெடுமாறர் ஆகியோரோடு அன்பு பாராட்டியும் தமக்கு முன் வாழ்ந்த நாயன்மார்களான சண்டீசர், கண்ணப்பர், கோச்செங்கட் சோழர், நமிநந்தியடிகள், அமர்நீதி நாயனார், புகழ்த்துணை நாயனார் ஆகியோரைப் போற்றியும் சைவ பக்தி உலகில், தம் ஆளுமையை நிலைநாட்டுகிறார் திருஞானசம்பந்தர்.

11. வடமொழி, பாலி, பிராகிருதம் ஆகிய மொழிகள் செல்வாக்குப் பெற்றிருந்த காலகட்டத்தில் தம்மைத் தமிழ்ப் பற்றாளராகவும் தமிழ்க் காவலராகவும் முதன்மைப்படுத்திக் கொண்டு தமிழைத் தமிழர்களிடமிருந்தே மீட்டெடுத்த சிறப்பும் பெருமையும் தமிழ்த் தலைவர் சம்பந்தர் ஒருவருக்கே உரியது.

தமிழை ஆட்சிமொழியாக்க முயன்றால் எங்கே தமது ஆட்சி பறிபோய்விடுமோ என்று அஞ்சுகின்றனர் இன்றைய ஆட்சியாளர்கள். 1400 ஆண்டுகளுக்கு முன்னால் வேற்றுச் சமயத்தைத் தழுவி, வேற்று மொழிகளைப் போற்றிக் கொண்டிருந்த ஆட்சித் தலைவர்கள் முன்னால் தம்மைத் தமிழோடு இணைத்துப் பேசி அஞ்சாது மொழிப்போரை முன்னின்று நடத்தியவர் சம்பந்தர். **ஞானமிக்க தமிழால் ஞான சம்பந்தன் சொன்ன கோலமிக்க மாலை** (558) என்றும், **தமிழின் விரகன் உரைத்த தமிழ்மாலை** (808) என்றும், **ஞானசம்பந்தன் ஞானத்தமிழ்** (1270) என்றும் **தமிழ்நாதன் ஞானசம்பந்தன்** (3221) என்றும் தம்மைப் பற்றி வெளிப்படையாகக் கூறி (Open Declaration) தமிழை மரபு சிதையாமல் காப்பாற்றிய தனித் தமிழ்த் தலைவர் திருஞானசம்பந்தர்.

12. உலகியல் வாழ்க்கையில் பல்வேறு நிலைகளில் தம் ஆளுமையை நிலைநாட்டிய திருஞானசம்பந்தரின் ஆளுமைத்திறம் மரணமிலாப் பெருவாழ்வு பெறுவதில் முழுமை பெற்று நிறைவெய்துகிறது. **ஆதிபூமி** என்னும் மணவறையில் **அருநிதிப்பாவையின்** கரம் பிடித்தவுடன் திருநல்லூர்ப்பெருமணம் திருக்கோயிலை அடைந்து **கல்லூர்ப் பெருமணம்** எனத் தொடங்கும் பதிகம் பாடினார். ஆதியும் அந்தமுமில்லா **அரும்பெரும் ஜோதி** ஒன்று திருக்கோயிலுள் சுடராக ஒளிர்ந்தது.

**காதலாகிக் கசிந்துகண் ணீர்மல்கி**
**ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது**
**வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது**
**நாதன் நாம நமச்சி வாயவே** (3:49:1)

எனத் தொடங்கும் திருப்பதிகம் பாடி திருமணத்திற்கு வருகை புரிந்த அனைவருடன் சிவஜோதியுள் நுழைந்து பசுபதி ஆயினர்.

அருள்கதியெனவே மாண்டு தம்மையே நம்பி தம்முடனேயே இருந்த அடியார்கள் - அன்பர்கள் அனைவரின் இகவாழ்விற்கும் பரவாழ்விற்கும் பொறுப்பேற்று தம்முடைய இறைமைத்துவத்தையும் நிலைநாட்டியவர் திருஞானசம்பந்தர். ஞானசம்பந்தருக்கு முன்னும் சரி பின்னும் சரி, தோன்றிய அருளாளர்கள் அனைவரும் தாம்

மட்டுமே முக்தி பெற்றனர். ஆனால் திருஞானசம்பந்தரோ **தம்மை நம்பின பேர்க்கு எல்லாம் இருத்தினோம் மீட்பின் திட்டம்** என்பதற்கிணங்க அனைவர்க்கும் சிவபதம் அருளினார். பெருங்கூட்டத்தோடு முக்தி அடைந்த செயல் இறையருள் பெறுவதிலும் திருஞானசம்பந்தர் தனித்த ஆளுமை உடையவர் என்பதைக் காட்டுகிறது. **அருந்தமிழாகரரான** திருஞானசம்பந்தரின் ஆளுமைத்திறம் இகவாழ்விலும் பரவாழ்விலும் மேலோங்கியிருந்ததை உணர்வுடையார் உணர்க.

திருஞானசம்பந்தர் ஒரு சைவ அருளாளர் மட்டுமல்லர்; அவர் ஓர் இயக்கம். **சைவ பக்தி இயக்கம் என்ற பெயரில் மாபெரும் தமிழியக்கத்தைத் தலைமையேற்று நடத்திய தனிப்பெருந்தலைவர்.** தமிழ்மொழி, தமிழிலக்கியம், தமிழிசை, தமிழ் அகத்திணை மரபு, தமிழ் யாப்பு ஆகியவற்றை மீட்டெடுப்பதில் புலமைத்துவமும் தமிழ்ப் பண்பாடு, தமிழர் கலைகள், தமிழ்ச் சைவநெறி, தமிழர் கோயிற்கலை மற்றும் வழிபாட்டு முறைகள், சமூக நீதி ஆகியவற்றிற்குப் புத்துயிர் அளிப்பதில் **தலைமைத்துவமும்,** தம்மை அடியொற்றி வந்த அனைவருக்கும் அருட்பெருஞ்சோதியை தெரிசினையாக்கி அதற்குள் அணைத்துக் கொண்ட தவவல்லபத்தில் **இறைமைத்துவம்** ஒருசேர ஞானசம்பந்தரிடம் நிறைந்திருந்தன. முத்தமிழ் அறிஞராய் முதன்மை பெற்றுச் சிறந்து விளங்கிய திருஞானசம்பந்தரின் ஆளுமைத் திறனை ஆராய்ந்து அறிதல் அறிவுடையார் திறன்.

# 10. சம்பந்தரும், சிவப்பிரகாசரும்

து. இராஜராஜேஸ்வரி, விழுப்புரம்.

பெரியபுராண காலத்திற்குப் பின்னர் 13, 14-ஆம் நூற்றாண்டில் தமிழகத்தை ஆண்ட சோழ, பாண்டியப் பேரரசுகள் மறைந்தன. படைத் தலைவர்கள், சிறுசிறு பகுதிகளைத் தத்தமதாக்கிக் கொண்டு குறுநில மன்னராயினர். எங்கும் குழப்பமும், கொந்தளிப்பும், போரும் நிகழ்ந்தன. இத்தகைய சூழலில் செந்தமிழ் நாடு செய்த தவப் பயனால் ஊனமில் ஞான நல்நெறி காட்டி உலகை உய்விக்கும் மெய்ஞ்ஞானியர்கள் காலந்தோறும் வாழையடி வாழையெனத் தோன்றுகின்ற வரிசையில் பதினேழாம் நூற்றாண்டு குறிப்பிடத்தக்கதாகும். தமிழகத்தின் தென்திசையாம், ஸ்ரீ வைகுண்டத்தில் குமரகுருபரரும் வடதிசைக் காஞ்சியில் சிவப்பிரகாசரும் சிவஞானச் செங்கதிரோனாகத் தோன்றிப் புறச்சமயப் பனி மூட்டத்தைப் போக்கிச் சைவ, வீரசைவ சமய நெறிகளைப் புலப்படுத்தினர்.

**ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள்**

இவ்விருவருள் ஒருவராகிய, வணக்கத்துக்கும் வழிபாட்டுக்கும் உரிய மயிலம் - பொம்மபுர ஆதின அருட்சுடர் கற்பனைக் களஞ்சியம் சிவப்பிரகாச சுவாமிகளின் தோற்றம்.

**'சென்றகா லத்தின் பழுதிலாத் திறமும்**
**இனியெதிர் காலத்தில் சிறப்பும்**
**இன்றெழுந் தருளப் பெற்ற பே றிதனால்**
**எற்றைக்கும் திருவருள் உடையேம்'** (பெரிய. திருஞான - 659)

என்னும் தெய்வச் சேக்கிழார் வாக்கினைச் சொல்லித் துதிக்கும் வகையில் சிறந்து விளங்குகிறது. சிவப்பிரகாசர் எவர்க்கும் மெய்ஞ்ஞான ஜோதி ஈயும் மாணிக்கமாகத் திகழ்பவர் இவரருளிய நூல்களில் காணப்பெறும் கற்பனைச் செறிவையும் நிறைவையும் நோக்கிக் கவிசார்வ பௌமர் என்றும் கற்பனைக் களஞ்சியம் என்றும் போற்றப் பெறுபவர். ''நன்னெறிப் பிரகாசர்'' என்றும் ''வள்ளுவப் பிரகாசர்'' என்றும் துறைமங்கலம் சிவப்பிரகாசர் என்றும் அறிஞர் உலகத்தால் ஒருமனதாகப் போற்றப் பெறுபவர்.

## திருஞானசம்பந்தர்

திருத்தொண்டத்தொகையில் ''எம்பிரான்'' என்று சுந்தரரால் போற்றப் பெறுகின்ற இவர்மீது நம்பியாண்டார் நம்பிகள் ஆளுடைய பிள்ளையார் அந்தாதி, திருச்சண்பை விருத்தம், திரு மும்மணிக் கோவை திருவுலா மாலை, திருக்கலம்பகம், திருத்தொகை என்னும் ஆறு தோத்திர நூல்களைப் பாடியுள்ளார்.

சேக்கிழார் அருளிய 4286 பாடல்கள் கொண்ட பெரியபுராணத்துள் இவர்தம் வரலாற்றை 1256 பாடல்களால் பாடியுள்ளார். அப்புராணத்துக்கே ''பிள்ளைபாதி புராணம் பாதி'' என்னும் பெயர் விளங்குகிறது.

ஒட்டக்கூத்தர், அருணகிரிநாதர், வள்ளலார் ஆகியோர் இவரை ''முருகன் அவதாரமே'' என்று எண்ணிப் போற்றியுள்ளனர். வள்ளலார் தம் குருவாகவே இவரைப் போற்றி உருகுகின்றார். இவ்வாறு சிவப்பிராகாசர் காலத்துக்கு முன்னும் பின்னும் அருளாளர்களால் புகழ் பெற்றுள்ள ஞானசம்பந்தரின் வாழ்க்கைச் சிறப்புகள் திருமுறைப் பெருமை, அற்புதங்கள் முதலானவற்றைக் குறைவிலா வகையில் நிறைவாகவும், கோதிலாநெறியில் அமுதாகவும் வெளிப்படுத்துகின்ற சிவப்பிரகாசரின் செந்தமிழைச் சிந்திப்பது தக்கதாகும்.

## நால்வர் நான்மணிமாலை

நால்வர் நான்மணிமாலையுள் ஞானசம்பந்தரைப் பற்றி வெண்பா யாப்பில் பாடப்பெற்றமைக்கான காரணத்தை நுண்மாண் நுழைபுல மிக்க உரைப்பகுதி உணர்த்துகிறது. வெண்பா உத்தம இலக்கணம் உடையது, வெண்சீரே வருதல் வேண்டும், செப்பலோசையே அமைய வேண்டும் என்னும் உண்மையை நிலைநாட்ட முற்படுவதே திருஞானசம்பந்தர் தேவாரம் .

''முத்து எனப்பெறுவது கறையில்லாத மழைநீர் ஆவணிச் சுவாதியில் சிப்பியின் வயிற்றிற் புகுந்து கட்டித்தன்மையாக ஆன ஒரு பொருள். கறையற்ற தெய்வநலம் ஒன்றே மனிதக் குழந்தையாகி தெய்வ அமுதமே உண்டு, தெய்வ இலக்கணத்தையே பேசியதாகலின், முத்து ஞானசம்பந்தப் பெருமானுக்கு இணைப்புடையதாயிற்று. இறைவன் ஞானசம்பந்தப் பெருமானுக்கு முத்துச் சிவிகையும், முத்துப் பந்தரும் அளித்தமையை ஈண்டு நோக்கி உணர்க''.

## சம்பந்தரின் திருவடி

ஞானசம்பந்தர் தாம் உண்ட ஞானப் பாலினை, உலக நலன் சேர்க்கும் திருமுறைகள் என்னும் செவியமுதமாக வழங்கியவர். இறையருப்

பேற்றுக்கு உதவும் இவ்வமுதப் பாக்களை அருளியதால் ''இவர் திருவடியே வீடு'' என்று முதற் பாடல் மொழிகின்றது.

## ஞானப்பால்

ஞானசம்பந்தருக்கு முன்னைத் தவத்தின் பயன் வந்து மூண்டதால், ''தோணியப்பரைப் பார்த்து'' அம்மையே! அப்பா! என்று அழுது ஞானப் பாலை உண்டதால் ஒப்பற்ற திருமுறைச் செல்வம் உலகுக்குக் கிடைத்தது. இவர் அழுதநிலையைப் படிப்போர், கேட்போர், சிந்திப்போர் ஆகியோரின் ஊன் உருகுமாறு உளம் உருகுமாறு சேக்கிழார் பாடிய பாடல் கல்லையும் கனிவிக்கும் திறமுடையது. அருணகிரிநாதரும் இவர்தம் அழுகையால் உலகு பயன் கொண்டதை,

**''அழுதுலகை வாழ்வித்த கவுணியகு லாதித்த''**

(சமுர முகவேல் - கதிர்காமம்)

என்று பாடுகின்றார்.

ஞானசம்பந்தர் பாலருந்த உதவிய பால்கிண்ணத்தையேனும் கழுவி, அந்நீரைத் தமக்கு வார்க்குமாறு ''அம்மையாரிடத்து உரைப்பாயாக'' என்றும், இன்றெனில் சூலையையேனும் தந்து, பாடுமாறு அருள் செய்வாயாக என்றும் சிவப்பிரகாசர் உள்ளம் உருகச் சிவபெருமானிடம் வேண்டுவதும் சிந்திக்கத் தக்கதாகும். எவ்வாற்றானும் இறைவனின் புகழைத் தமிழால் பாட வேண்டும் என்ற அவர்தம் தணியாத வேட்கையே இவற்றால் புலப்படுகின்றது.

## அம்மையாரின் அன்பு

இறைவன் ஆணையிட்டவுடன் சிவஞானத்தின்னமுதம் குழைத்தருளி ''உண் அடிசில்'' என்று ஊட்டியருளிய உமையம்மை உயர்ந்தவரா? நின் இயல்பை கேட்ட அளவில் மகன்மைக் கேண்மையால் கொங்கை சுரந்த மங்கையர்க்கரசியார் உயர்ந்தவரா? என்று ஞானசம்பந்தரை வினவுகின்றார் சிவப்பிரகாசர். பிள்ளையின் இயல்பைக் கேட்ட அளவில் முலை சுரத்தல் இடையன்பு; அழுதல் கண்டு பிறர் உரைக்க முலை சுரத்தல் கடையன்பு என்னும் முறைமை கொண்டு ஞானசம்பந்தர் அழுதல் கண்டு, இறைவனை ஆணையிட்டபின் ஞானப்பால் அளித்த அம்மையைக் காட்டிலும் சைவந் தழைக்கத் தழைத்த இவர்தம் பெருமையை கேட்டவளவில் முலை சுரந்த மங்கையர்க்கரசியார் தலையன்பினர் என்னும் கருத்தில் பாடப் பெற்றுள்ளது.

## அற்புதங்கள் நான்கு

ஞானசம்பந்தரின் திருப்பாட்டு நிகழ்த்திய அற்புதங்கள் நான்கினைப் 'பயனாகும் நல்லாண் பனைக்கு' என்னும் பாடல் விளக்குகிறது.

திருவோத்தூரை நண்ணிய ஞானசம்பந்தரிடத்து ஆண்டு வாழ்ந்த சிவனடியார் ஒருவர் இறைவனுக்காகத் தாம் வளர்த்த பனைகள் ஆண்பனை என இகழ்வதையும் எள்ளி நகையாடுவதையும் எடுத்துரைத்து இறைஞ்சினார். ஞானசம்பந்தர் இறைவனது திருவடிகளைச் சிந்தித்துப் ''பூத்தேர்ந்தாயன'' என்னும் திருப்பதிகம் பாடிக் குரும்பை ஆண்பனையின் குலைவோத்தூர் என முடிக்கப் பனைகள் யாவும் குலைகளிட்டுப் பெண் பனைகளாயின. காலமுதிர்வில் அப்பனை மரங்கள் முக்தியெய்தின. திருமருகல் தலத்துக் கோயிலுக்குச் சென்ற காலத்து வணிக மகள் ஒருத்தியை மணக்க இருந்த உறவினன் இறக்க அப்பெண்ணின் துயர் தீரச் ''சடையாய் எனுமால்'' எனும் பதிகத்தைப் பாடி அவனை உயிர்ப்பித்து எழ வைத்தருளினார்.

பாண்டியனின் வெப்பு நோய் தீர மங்கையர்க்கரசியாரின் வேண்டுகோளுக்கிணங்கி ''மந்திரமாவது நீறு'' என்னும் திருநீற்றுப் பதிகத்தைப் பாடி திருநீற்றை அவர் உடலில் பூசியருளினார். பாண்டியனின் வெப்பு நோயும் பிறவிக் கூனும் நீங்கியது. மன்னன் சமண சமயம் நீங்கிச் சைவரானதால் நின்றசீர் நெடுமாறரானார்.

மயிலை சிவநேசர் எனும் சிவனடியார்தம் அருமை மகள் பூம்பாவை அரவு தீண்டி இறந்தமையின் அவளுடைய என்பு சேர் குடத்தினை ஞானசம்பந்தர் தாளில் பணிந்து வைக்க, மட்டிட்ட புன்னையங்கானல் என்னும் பதிகம் பாடி உடலும் உயிரும் பெற்று எழுமாறு செய்தருளினார்.

இறைவனேயன்றி, அவன் அடியரேயன்றி அவ்வடியார் திருவாய் மலர்ந்தருளிய பாட்டுகளும் ஐந்தொழில் இயற்றும் ஆற்றல் பெற்றன என்னும் உண்மையை இத்திருப்பாட்டு வாயிலாகச் சிவப்பிரகாசர் உணர்த்துகிறார்.

## முத்துச்சிவிகை, முத்துக்குடை, முத்துச் சின்னங்கள்

திருநெல்வாயில் அரத்துறை அண்ணலை வழிபடக் கொடிய வெயிலில் சென்ற ஞானசம்பந்தருக்கு தம் கனவில் வந்து இறைவன் ஆணையிட்டவண்ணம் அரத்துரை அந்தணர்கள் முத்துச்சிவிகை, முத்துக்குடை, முத்துச் சின்னங்கள் முதலியவற்றை வைத்து வணங்கியருளினர். இறைவன் ஞானசம்பந்தருக்காக நிகழ்த்திய இவ்வற்புதச் செயல், சிவப்பிரகாசரின் இளமைக் காலத்திலிருந்தே அவர் நெஞ்சில் ஆழப் பதிந்திருந்தது என்பதனை அவர் முதன் முதலில் பாடிய சோணசைல மாலைப் பாடல் செப்புகின்றது.

**''முயங்குமா புகழ்பூம் புகலியந் தணர்க்கு**
**முத்துவெண் பந்தர் ஈந்(து) அகல்வான்**
**தயங்குமீன் முத்துப் பந்தர்வாழ் சோண**
**சைலனே கைலைநா யகனே!''** (சோண.28)

## "அனல் வாதம், புனல் வாதம்"

பாண்டியனின் வெப்பு நோய் தீர்க்கும் முயற்சியில் தோல்வியடைந்த சமணர்கள் வாதத்தால் வெற்றிபெற விழைந்து ஞானசம்பந்தரை அனல் வாதத்திற்கு அழைத்தனர். சமணர் தம் சமய உண்மையை ஓலையில் எழுதித் தீயிலிட, அவ்வேடு எரிந்து சாம்பலாயிற்று. ஞானசம்பந்தர் எழுதிய "போகமார்த்த பூண்டு முலையாள்" என்னும் திருநள்ளாற்றுப் பதிகம் எழுதிய ஏடு தீயிலிடப் பெற்றது. சைவத்தின் பெருமையைத் தெரிவித்து வென்றது அவ்வேடு. இவ்வற்புதத்தைத் "தேனுந்து" எனத் தொடங்கும் பாடலால் போற்றுகிறார் சிவப்பிரகாசர்.

புனல் வாதத்தில் வெற்றிபெற எண்ணிச் சமணர்கள் "அத்திநாத்தி" என்னும் தமது சமயக் கொள்கையை வடமொழியில் எழுதி அவ்வேட்டினை வையையாற்றில் இட, அது வெள்ளத்தோடே சென்று கடலில் மறைந்தது. ஞானசம்பந்தர் வாழ்க அந்தணர் எனத் தொடங்கும் செந்தமிழ்ப் பதிகமாகப் பாடி, அப்பாடலை ஏட்டிலெழுதி நீரிலிட அவ்வேடு வெள்ளத்தை எதிர்த்துக் கரையேறியது.

புனல் வாதத்தில் சமண மதத்தினர் தோற்றதை "வெள்ளமிடும் ஏடு ஏறப் பால் குறைந்தது என அழுவரே" என்னும் பாடல் உணர்த்துகிறது.

## வீடுபேறு

சிவநேசச் செல்வரான ஞானசம்பந்தர் பதினாறு ஆண்டெய்தியபோது தம் பெற்றோர் விருப்பத்திற்கிணங்க திருமணத்திற்குட்பட்டார். திருநல்லூரில் வாழ்ந்த சிவனடியார் நம்பியாண்டார் நம்பி என்பவரின் திருமகளை அவ்வூரின்கண் இருந்த "பெருமணம்' என்னும் கோயிலின் மணம் செய்து கொண்டார். மந்திர முறைமையின் வளர்க்கப் பெற்றத் தீயினை வலம் வருகையில் பிறப்பாசம் தீர்தலை விரும்பி வீடு பெற "வம்மின், வம்மின்" என்று அடியார்களை அழைத்தார். "கல்லூர்ப் பெருமணம் வேண்டா" என்னும் பதிகம் பாட இறைவன் சோதியைத் "தோற்றுவித்து காதலியும்" சுற்றமும், காண வந்தோருமாய்ச் சோதியில் கலந்திடுமின் என்று அருள்செய்தான். ஞானசம்பந்தர் காதலாகிக் கசிந்து எனும் திருப்பதிகம் பாடி தீ வலம் வந்தார். திருநீலநக்கர் முதல் திருமணம் காண வந்தோர் யாவரும் சோதியுள் கலந்தனர். ஞானசம்பந்தர் தம் துணையின் கைப்பற்றி சோதியுள் புகுந்து சிவனுடன் கலந்து ஒன்றானார். இந்நிகழ்ச்சியினை சிவப்பிரகாசர்

**"கொள்ளை கொள்ள விடுதவிக் கூற்றைப்
பிடர்பிடித்துத் தள்ளும் திருஞான சம்பந்தா!"**

என்று பாடிப் பரவுகிறார்.

சிவப்பிரகாசர் தம் நூலில் ஞானசம்பந்தரைப் புகழும் வெண் பாக்களுள் முதல் வெண்பாவில் அவர்தம் திருவடியே வீடு என்று கூறி பின் நிறைவுப் பாடலில் சம்பந்தர் திருவடி தொடர்பு உயிர் களுக்கு இகபர நலன்களை அளிக்கும் என்கிறார்.

''சீகாழிப் பொய்கைக் கரையில் ஞானப் பாலுண்டு எம் செவியமுதாம் தேவாரத்தை அருளியது, மங்கையர்க்கரசியார், பாண்டி நாட்டு மதுரையில் ஞானசம்பந்தர் ஞானப்பால் உண்ட செய்தி கேட்டு முலை சுரந்தது. இறைவனைச் சுட்டிக் காட்டிய பெருமை, தந்தையினும் பால் கொடுத்த தாய்க்கு மகிழ்ச்சி மிகுமாறு எதிர்வந்து பாடியது, ஆண் பனையைப் பெண் பனையாகவும், பாம்பு கடித்திறந்த செட்டியை எழுப்பவும், பாண்டியன் நோயைப் போக்கவும், எலும்பைப் பெண்ணாக்கவும் பாடிய செயல், திருமண காலத்து கொள்ளை கொள்ளையாக வந்தவர்க்கெல்லாம் முத்தியை வழங்கியது, மதுரையில் சமணரை வீழ்த்தச் செய்த அனல்வாத புனல் வாதச் செயல்கள், இறைவனிடம் முத்துச்சிவிகை முதலாயின பெற்றது, அவருடைய சிவிகையைத் தாங்குவோர் சிறப்பு அவர் திருவடியை வணங்குவோர் பெறும்பயன்'' ஆகியவைகளை சிவப்பிரகாசரின் வெண்பா பாக்கள் எடுத்தியம்புகின்றன.

திருமுறைப் பாடல்கள் திருவருள் பதிவு என்றும் உள்ளவை, அதனால் அப்பாடல்கள் உயிருள்ளவை, உயிரூட்ட வல்லவை, அற்புதங்கள் நிகழ்த்த வல்லவை என்னும் உண்மையை உலகம் உணர சிவப்பிரகாச சுவாமிகளின் பாடல்கள் உதவுகின்றன.

## திருஞானசம்பந்தரின் திருப்பெயர்கள்

1. திருஞானசம்பந்தர், 2. சிவஞானசம்பந்தர், 3. கொச்சைவயத் தலைவர், 4. வெங்குரு வேந்தர், 5. சிரபுரச் செம்மலார், 6. ஞானபோனகர், 7. ஆளுடைய பிள்ளையார், 8. தோணிபுரத் தோன்றலார், 9. புகலிப் பிள்ளையார், 10. கவுணியன், 11. சண்பையாளி, 12. பூந்தராய் வள்ளல், 13. சைவ சிகாமணி, 14. முத்தமிழ் விரகர், 15. பரசமய கோளரி, 16. பாலறா வாயர், 17. அருந்தமிழாகரர்.

## காலத்திருந்தவரின் பெயர்கள்

1. சிவபாத விருதையர் (தந்தை), 2. பகவதி (தாயார்), 3. நம்பாண்டார் நம்பி (நன்மாமனார்), 4. நெடுமாற பாண்டியன் (அரசன்), 5. மங்கையர்க்கரசி (அரசி), 6. குலச்சிறையார் (மந்திரியார்), 7. நரசிம்ம வர்மன் (பல்லவ மன்னன்), 8. திருநீலகண்ட யாழ்ப்பாணர், 9. மதங்கசூளாமணி, 10. சிவநேசர், 11. பூம்பாவையார், 12. திருநாவுக்கரசர், 13. முருகனார், 14. நீலநக்கர், 15. சிறுத்தொண்டர், 16. குங்குலியக் கலயனார்.

# 11. சம்பந்தரின் சித்திரகவிகள்

அ.மா. இலட்சுமிபதிராஜ், பேரூர்.

கவி, கமகன், வாதி, வாக்கி என்னும் நால்வகைப் புலவர்க்கும், ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, வித்தாரகவி என்னும் நால்வகைக் கவிஞர்களுக்கும் நம் இலக்கண ஆசிரியர்கள் இலக்கணம் வகுத்தனர். எல்லாவற்றானும் எல்லாம் அமையச் செய்யும் சுவடுடையராகி அவ்வத் துறை போயினார் நல்லிசைப் புலவராவார் என்றார் பேராசிரியர். சொல்லால் பொருட்கிடனாக உணர்வின் வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள் என்றார் நன்னூலார். அவ்வகையில் எல்லாம் அமைய உணர்வில் வல்லவராக விளக்கியவர் நானிலம் போற்றும் ஞானசம்பந்தர். அவருடைய பாடல்கள் அம்மை தந்த ஞானத்தால் விளைந்தவை. எனதுரை தனதுரையாக என்று அவரே அருளியுள்ளார்.

சங்க இலக்கியங்களுக்குப் பின் இருண்ட காலம் எனப்பட்ட காலத்தில் தோன்றியவை திருமந்திரமும், காரைக்கால் அம்மையார் பாடல்களும் ஆகும். இவையே பக்தி இலக்கியங்களின் முன்னோடியாக அமைந்தவை எனலாம். அசைவில் செழுந்தமிழ் வழக்கு அயல் வழக்கு களின் துறைவெல்ல ஞானசம்பந்தரின் தோற்றம் அவசியமாயிருந்தது. இறைவனது பேரிரக்கத்தால் தென்திசை சிறப்புறத் தமிழ்வழக்குச் செல்வாக்குப் பெற ஞானசம்பந்தர் தோன்றினார்.

**திருமுறைகள்**

சமண பௌத்த சமயங்களின் செல்வாக்குத் தமிழகத்தில் பரவியதால் தமிழர்தம் பண்டைய சமய உண்மைகளை மறந்து மூழ்கினர். மக்களின் வாழ்க்கையைச் செம்மைப்படுத்தவும், சைவ சமயத்தை நிலை நாட்டவும், சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம் பெற்ற திருஞான சம்பந்தர் இறைவன்மேல் புகழ்ப்பாக்கள் பாடி அற்புதங்கள் பலவற்றை நிகழ்த்தினார். அவரோடு திருநாவுக்கரசரும் துணை நின்று சைவம் வளர்த்தார். பின்பு சுந்தரமூர்த்தி சுவாமிகளும் இவர்கள் வழிநின்றார். 7-ஆம் நூற்றாண்டிலிருந்து 12-ஆம் நூற்றாண்டு வரை சைவ சமய எழுச்சி மிக்கிருந்த காலம். சமயக் குரவர்களால் அருளிச் செய்யப் பெற்ற இத்திருமுறைகளை இறைவி எப்போதும் ஓதுகிறாள் என்கிறார் திருமூலர்.

"ஏடங்கை நாயகி இறைஎங்கள் முக்கண்ணி
வேடம் படிகம் விரும்பும்வெண் தாமரை
பாடும் திருமுறை பார்ப்பதி பாதங்கள்
சூடும்என் சென்னிவாய்த் தோத்திரம் சொல்லுமே"

என்கிறார். சேக்கிழார் பெருமானும் "சாற்று மெய்ப்பொருள் தரும் திருமுறை" என்கிறார். திருமுறை- "முத்தித் திருவுக்கு ஏதுவாகிய உண்மைகளை உரைக்கும் நூல்" என்பார் சிவக்கவிமணி.

## பதிக அமைப்பு

திருஞானசம்பந்தரின் பாடல்கள் பதிக அமைப்பைச் சேர்ந்தவை. பாடல்களைப் பதிக அமைப்பில் பாடப்பெறுவது சங்க காலத்திலேயே இருந்துள்ளது எனலாம். ஒரு பொருளைப் பற்றிப் பலவகையில் வற்புறுத்தும் வகையில் பாடுதல் ஒருவகை. இதனைப் பத்துப்பாட்டில் கூறுவர். இதற்குப் பதிகம் என்று பெயர்.

பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு என்னும் சங்க இலக்கியங்களை இதற்குச் சான்றாகக் கூறலாம். திருக்குறளும் இப்பதிக அமைப்பை உடையதே.

"வற்புறுத்த ஓர்பொருளை வள்ளுவனார் பத்துமுறை
சொற்பொருத்தி ஓதும் துணிவுபோல்"

என்கிறார் செந்தமிழ்ச் சிவப்பிரகாசர்.

ஞானசம்பந்தரின் பதிக அமைப்புக்களுக்கு முன்னோடியாக இருந்தவர் காரைக்கால் அம்மையாரே ஆவார். அவர் அருளிய மூத்த திருப்பதிகங்களே பக்தி இலக்கியத்தில் பதிக அமைப்பை உண்டாக்கியவை.

## திருஞானசம்பந்தரின் யாப்பு வேறுபாடுகள்

பக்தி இலக்கியத்துறையில் பலவிதப் புரட்சிகளைச் செய்தவர் ஞானசம்பந்தர், தமிழ்ஞான சம்பந்தன். பெருகிய தமிழ் விரகினன், தமிழ் விரகன், நற்றமிழ் ஞானசம்பந்தன், தன்ஒளிமிக்குயர்ந்த தமிழ்ஞான சம்பந்தன், தமிழ்க்கிழமை ஞானன், பழுதிலிறை, எழுதுமொழி தமிழ் விரகன் என்று தமிழோடு தன்னைத் தொடர்புப்படுத்திக் கொண்டவர். புதுவகையான யாப்புகளையும், சந்தங்களையும் தமிழில் முதன் முதலில் அமைத்துக் காட்டியவர். சித்திரகவி என்னும் வகைப்பாடல் களைத் தமிழுக்குத் தந்த முதல் தமிழ்க் கவிஞர்.

1. மொழி மாற்று, 2. மாலை மாற்று, 3. வழிமொழி, 4. மடக்கு, 5. சந்தம், 6. இயமகம், 7. ஏகபாதம், 8. இருக்குக்குறல், 9. எழுகூற்றிருக்கை, 10. ஈரடி, 11. ஈரடி மேல்வைப்பு, 12. நாலடி மேல்வைப்பு, 13. முடுகுராகம்,

14. சக்கரமாற்று, 15. ஆவின்பாய்ச்சு ஆகிய சித்திரகவிகளுக்குத் திருஞானசம்பந்தர் பாடியவை மூல இலக்கியங்களாகும்.

சேக்கிழார் பெருமான்:

"செந்தமிழ் மாலை விகற்பச் செய்யுட்களான் மொழிமாற்றும்
வந்த சொற்சீர்மாலை மாற்றும் வழிமொழி எல்லா மடக்குச்
சந்த இயமகம் ஏகபாதம் தமிழ்இருக்குக் குறள்சாத்தி
எந்தைக்கு எழுகூற்றிருக்கை ஈரடி ஈரடி வைப்பு".

"நாலடி மேல்வைப்பு மேன்மை நடையின் முடுகும் இராகம்
சால்பினில் சக்கரம் ஆதி விகற்பங்கள் சாற்றும் பதிகம்
மூலஇலக்கியமாக எல்லாப் பொருள்களும் முற்ற
ஞாலத்துயர் காழியாரைப் பாடினார் ஞானசம்பந்தர்"

என்று சிறப்பித்துள்ளார். இவ்வகைப் பாடல்களுக்குத் தமிழில் மூல இலக்கியமாக அமைந்தவை ஞானசம்பந்தர் பாடல்கள் என்பது சேக்கிழார் கூற்று.

## சித்திர கவிகள்

சித்திர கவிகள் என்பதற்கு வியப்பான பாடல்கள் என்பதே பொருள். இதனை மிறைக்கவி என்றும் கூறுவர். மிறை-கொடுமை, கவி-பாடல். பாடுவதற்குக் கடுமையானது என்பதால் இவ்வாறு கூறப்பெற்றிருக்கலாம். சித்திர கவிகளுக்குப் பிற்காலத்தில் இலக்கணம் வகுக்கப்பெற்றது. "இலக்கியம் கண்டு இலக்கணம் இயம்பல்" என்பார் பன்னருஞ் சிறப்பிற் பவணந்தியார். தண்டியலங்காரம், மாறனலங்காரம் முதலிய அணி இலக்கண நூல்கள் இச்சித்திர கவிகளுக்கு இலக்கணம் வகுத்தன.

"வல்லின மெல்லின இடையினப் பாட்டே
நிரோட்டியம் ஓட்டியும் ஓட்டியநிரோட்டியம்
அக்கரச் சுதகம் அதன் வருத்தனையே
வக்கிரவுத்தி வினாவுத்தரமே
சக்கரபெந்தம் பதுமபெந்தம்
முரசபெந்தம் நாகபெந்தம்
இரத பெந்தம் மாலை மாற்றே
கரந்துறை செய்யுட் காதை கரப்பே
பிரிந்தெதிர் செய்யுட் பிறிதுபடுபாட்டே
சருப்பதோ பத்திரம் கூடசதுக்கம்
கோமூத்திரி சுழிகுளம் திரிபங்கி
எழுகூற்றிருக்கை யொடு இருபானாறும்
பழிதீர் மடக்குடைச் சித்தரப்பாவே"

என மாறனலங்காரம் சித்திர கவிகளை வகைப்படுத்திக் கூறுகிறது. மாறனலங்காரம் 32 வகைகளையும், தண்டியலங்காரம் 12 வகைகளையும் வீரசோழியம் சில வகைகளையும் கூறுகின்றன.

## ஞானசம்பந்தரின் சித்திர கவிகள்

ஞானசம்பந்தர் ஏறக்குறைய 15 வகையான சித்திர கவிகளைப் பாடியுள்ளார். மொழிமாற்றுப் பதிகம் 1, மாலை மாற்று 1, வழிமொழி 1, மடக்கு 4, ஏகபாதம் 1, திருஇருக்குக்குறள் 10, எழுகூற்றிருக்கை 1, ஈரடி 2, ஈரடி மேல்வைப்பு 1, நாலடி மேல்வைப்பு 3, முடுகு இராகம் 42, சக்கரமாற்று 2, ஆவின்பாய்ச்சு 1 ஆகிய பதிகங்களைப் பாடியுள்ளார்.

## மொழிமாற்று

பலவாறு பரந்துபட்டிருக்கும் சொற்களை வேண்டியவாறு ஒன்று சேர்த்தல் மொழிமாற்று. எண்ணங்கள் பலவாகச் சிதறிச் செல்லும், சிதறும் எண்ணங்களை ஒருமுகப்படுத்தி இறைவன்பால் செலுத்த வேண்டும் என்னும் அடிப்படை உடையது இப்பதிகம். பிரமபுரத்துப் பெருமானைப் போற்றுகின்ற இப்பாடல் மொழிமாற்று என்னும் யாப்பு வகையில் அமைந்தது.

**காட தணிகலம் காரர வம்பதி காலதனில்**
**தோட தணிகுவர் சுந்தரக் காதினில் தூச்சிலம்பர்**
**வேட தணிவர் விசயற் குருவம்வில் லும்கொடுப்பர்**
**பீட தணிமணி மாடப் பிரம புரத்தாரே** (1)

காடது பதி, காரரவம் அணிகலம், காதினில் தோடு, காலதனில் தூச்சிலம்பர், வேடது உருவம், விசயற்கு வில்லும் கொடுப்பர் என மொழியை மாற்றிப் பொருள் கொள்ள வேண்டும். பொருள்கோள் வகையில் மொழி மாற்றுப் பொருள்கோள் என்று ஒன்று உண்டு.

## திருமாலை மாற்று

**"ஒரு செயுண் முதலீறு ரைக்கினு மஃதாய்**
**வருவதை மாலை மாற்றெனு மொழிப"**

என மாலை மாற்றுக்கு இலக்கணம் கூறுகிறது மாறனலங்காரம். இவ்வகைப்பாட்டு ஓரடி முன்னிருந்து செல்வதும், ஓரடி பின்னிருந்து செல்வதுமாக அமைந்து அதுவே ஈரடியால் அமைந்த வஞ்சித்துறைப் பாவாகும்.

**"மேலேபோகா மேதேழீ காலாலேகா லானாயே**
**யேனாலாகா லேலாகா ழீதேமேகா போலேமே"**

இது ஞானசம்பந்தரின் மாலை மாற்றுப் பதிகத்தில் அமைந்த ஒரு பாடல். இதனைப் பின்வருமாறு அமைத்துக் கொண்டு பொருள்காண மிகவும் சுவை பயக்கும்.

| | |
|---|---|
| மேலே போகாமே | - மார்க்கண்டன் மேல் காலன் போகாமல் |
| தேழீ - தெழித்தல் | - தெழித்து-தெழி-தேழீ-ஆரவாரித்து |
| காலாலேகால் ஆனாயே | - திருவடியால் அவனுக்குக் காலம் ஆனாய் |
| ஏல்நால் | - ஏல்-ஏற்றுக்கொண்ட, நால் - சனகாதி நால்வர் |
| ஆல் | - கல்லால் |
| ஏலா | - ஏற்றுக்கொண்டவனே |
| காழீதே | - காழி-சீர்காழி, தே-தேவன் காழியில் உள்ள சிவமாம் தன்மை உடையவனே |
| மேகா | - மேகத்தை வாகனமாக உடையவனே. மேகம்-கருமை-திருமால் கருமை திருமாலை நந்தி வாகனமாய் ஏற்றவனே. |
| போலேமே | - நாங்கள் ஆகமாட்டோமா? திருமாலைப் போல நாங்கள் உனக்கு வாகனமாய் ஆக மாட்டோமா? |

**வழிமொழித் திருவிராகம்**

வழிமொழி என்பது ஒவ்வொரு சீரிலும் எதுகை அமையப் பாடுதலாம். இதனை யாப்பிலக்கணம் வழி எதுகை அல்லது முற்று எதுகை என்று கூறும் இதனை வடமொழியில் அனுப்பிரசாதம் என்பர். அடிகள் தோறும் முதல் எழுத்து அளவொத்திருக்க இரண்டாம் எழுத்து ஒன்றி வருவதாம். வழி எதுகையோடு முடுகியல் ஓசையும் வருதல் வேண்டும். தொல்காப்பியர் கலிப்பாவுக்குச் சொல்லுகின்ற அராகம் அடிப்படையில் அமைந்துள்ளது.

**ஒழுகலரி தழிகலியில் உழியுலகு**
**பழிபெருகு வழியை நினையா**
**முழுதுடலில் எழுமயிர்கள் தழுவுமுனி**
**குழுவினொடு கெழுவு சிவனைத்**
**தொழுதுலகில் இழுகுமலம் அழியும்வகை**
**கழுவுமுரை கழுமலநகர்ப்**
**பழுதிலிறை எழுதுமொழி தமிழ்விரகன்**
**வழிமொழிகள் மொழி தகையவே.**

இப்பாடலில் கழுமலநகர் என்பதற்கேற்ப அனைத்துச் சீர்களிலும் இரண்டாம் எழுத்து (எதுகை) ஒன்றி வருமாறு அமைத்து அருளி உள்ளமை காண்க. இவ்வாறே பதிகம் முழுவதும் சீர்காழியின் பன்னிரு பெயர்களுக்கும் பாடியுள்ளமை அறிந்து இன்புறத்தக்கது.

**திருயமகம்**

இவ்வகையில் அமைந்த பதிகங்கள் நான்கு. யமகம் என்பது ஓரடியில் முன்வந்த, சொல்லோ தொடரோ வேறொரு பொருள்பட மீண்டும் அதே அடியில் மடக்கி வருவது. இதனை மடக்கு என்பர். யமகம் என்பது வடசொல். யகரம் தமிழியல் முறைப்படி மொழிக்கு முதலில் வாராதாகையால் இகரத்தை முதலில் பெற்று இயமகம் என வழங்கப்பெற்றது. திரு என்னும் அடைமொழி பெற்றுத் திருயமகம் என வழங்கப் பெற்றது.

**"உற்றுமை சேர்வது மெய்யினையே**
**உணர்வது நின்னருள் மெய்யினையே**
**கற்றவர் காய்வது காமனையே**
**கனல்விழி காய்வது காமனையே**
**அற்றம் மறைப்பதும் உன்பணியே**
**அமரர்கள் செய்வதும் உன்பணியே**
**பெற்றும் உகந்தது கந்தனையே**
**பிரமபுரத்தை உகந்தனையே"**

இப்பாடல் அடிகளில் மெய்யினையே, காமனையே, பணியே, உகந்தனை என்ற சொற்கள் முறையே மடங்கி வந்தமை அறியலாம். அவற்றுள் மெய்யென்பது-உடம்பு, உண்மைத் தன்மை எனவும், காமனை என்பது - கா+மனை-காத்திருந்த மனைவி முதலியன, மன்மதன் எனவும், பணியே என்பது-பாம்பு, பணிவிடை எனவும், உகந்தது கந்தனை என்பது-பெற்று எடுத்தது முருகனை, விரும்பியது எனவும் வேறு பொருளில் பயின்றுள்ளமை உணர்தற்குரியது. இவ்வாறே இப்பதிகங்களிலுள்ள பாடல்களின் அடிதோறும் ஒரு சொல்லோ தொடரோ மடங்கி வந்து இயைபு என்னும் தொடை நலம் பொருந்த யமகம் என்னும் சொல்லணிக்கு உரிய மூல இலக்கியமாய் அமைந்து இன்பம் தருகிறது.

**ஏகபாதம்**

பாடலில் ஒரே அடி நான்கு அடிகளிலும் ஒரே முறையில் வருவது ஏகபாதம். ஏகம்-ஒன்று, பாதம்-அடி. முதல் வரியில் வருகின்ற அடியே நான்கு வரிகளிலும் ஒரே விதமாக வரும். ஒவ்வொரு அடிக்கும் வெவ்வேறு பொருள் அமைந்திருக்கும்.

**சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்**
**சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்**
**சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்**
**சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்**

பொருள் : பேரூழிக் காலத்து எல்லாம் அழிந்தபோது பிரணவமே தோணியாகக் கொண்டு மிதந்தால் தோணிபுரம் எனப் பெயராயிற்று.

வரி 1 : சுடுஅர்மண் இம் ஆளிகை-சுடர் மணி மாளிகை
சுடுகின்ற அரிய மண்ணாலான, ஈம்-இம் எனக் குறுக்கல் விகாரம், ஈம் ஆளிகை - ஈமக்காட்டில் - சுடுகாட்டில் ஆடுதலைத் தொழிலாகக் கொண்டு, தோள் நிபுரத்தவன் - தோள் பெயர்த்து ஆடும்போது மாயாதேகம் இல்லாதவன், ஞானதேகன், புரம் - உடம்பு, நிபுரம் - உடம்பில்லாதவன்.

வரி 2 : சுடர்மணி-மணிசுடர் என மாற்றுக. மணிசுடர் - கிம்புரியின் மணி ஒளிவிடுமாறு, மாளிகை - யானையை மாளுமாறு செய்து, யானையின் கொம்பிலணிந்திருக்கும் பூணுக்குக் கிம்புரி என்று பெயர். தோணி புரத்தவன் - தோள் நிபுரத்தவன்-தோள்-தோள் லகரம் ளகரம் எழுத்து மாற்றம். நீ என்பது நி என்றது குறுக்கல் விகாரம். யானையின் தோலை நீக்கி உடம்பில் அணிந்து கொண்டவன்.

வரி 3 : சுடர் - தோன்றல் - பிறத்தல், மாளி-மாளுதல், இறத்தல், கை-ஒழுக்கம், நெறி-பிறத்தல் இறத்தலை நெறியாகக் கொண்டு வருகின்ற ஆன்மாக்களுக்கு, மணி-அழகிய பஞ்சாட்சரத்தை, தோணி-தெப்பமாக, புரத்தவன்-உபதேசித்தவன். போக்கு வரவு புரிவன ஆன்மாக்கள், பிறவிக்கடலை நீந்த ஐந்தெழுத்தைத் தோணியாக உபதேசிப்பவன் இறைவன்.

வரி 4 :' சுடர்விடுகின்ற மணிகள் பதிக்கப்பெற்ற மாளிகைகளை உடைய தோணிபுரம் என்ற தலத்தை இடமாகக் கொண்ட இறைவன் என்பது பொருள்.

## திருவிருக்குக்குறள்

இவ்வகை யாப்பைப் பத்துப் பதிகங்களில் பயன்படுத்தி உள்ளார். இத்திருப்பாடல்கள் 'இருக்கு' எனப்போற்றப் பெறும் வேத மந்திரங் களைப் போன்று இறைவனைப் போற்றும் மறைமொழிகளான மந்திரங் களாய் அமைந்தமையால் இருக்கு என்ற பெயரும், இரு சீரடிகளாகிய குறளடிகளால் இயன்றமையால் குறள் என்ற பெயரும் பெற்றுத் திருவிருக்குக்குறள் என வழங்கப் பெற்றது.

திருஞானசம்பந்தர் திருவீழிமிழலையில் இறைவனிடம் காசுபெற்று மக்கள் பஞ்சம் தீர்க்கப் பாடிய பாடல் யாப்பை சூழ்நிலையோடு ஒப்பிட்டு மகிழலாம்.

"வாசி தீரவே காசு நல்குவீர்
மாசில் மிழலையீர் ஏசல் இல்லையே"

என்று இறைவனை வேண்டுகிறார். பணம் உடனே கிடைத்தால்தான் பசி தீரும். இவ்விடத்தில் நீண்ட அமைப்புடைய பாடல்களைப் பாடாது குறுகிய பாடல் அடிகளால் பாடியுள்ளமை விரைவு பற்றி என்க.

**எழுக்கூற்றிருக்கை**

"ஒன்று முதலாவோ ரேழீறாச்
சென்ற வெண்ணீரேழ் நிலந்தொறும் திரிதர
வெண்ணுவ தொன்றாம் எழுகூற்றிருக்கை"

என எழுகூற்றிருக்கைக்கு இலக்கணம் கூறுகிறது மாறனலங்காரம்.

ஒன்று இரண்டு ஒன்று, ஒன்று இரண்டு மூன்று இரண்டு ஒன்று என இவ்வாறு ஒன்று முதல் ஏழு முடியப் படிப்படியாக ஒவ்வொன்று ஏற்றியும் இறக்கியும் இங்ஙனம் ஏழு கூறுகளிலும் எண்கள் இருக்க இயற்றப்படும் செய்யுள் வகை எழுகூற்றிருக்கை எனப்படும்.

கூறுகளாக அறைகளைக் கீறும்போது முதற்கூற்றில் மூன்று அறைகளும், இரண்டாம் கூற்றில் ஐந்து அறைகளும், மூன்றாம் கூற்றில் ஏழு அறைகளும், நான்காம் கூற்றில் ஒன்பது அறைகளும், ஐந்தாம் கூற்றில் பதினொரு அறைகளும், ஆறாம் கூற்றில் பதின்மூன்று அறைகளும், ஏழாம் கூற்றில் அவ்வாறே பதின்மூன்று அறைகளும் கீறி அவ்வறைகளில் முறையே.

1-2-1
1-2-3-2-1
1-2-3-4-3-2-1
1-2-3-4-5-4-3-2-1
1-2-3-4-5-6-5-4-3-2-1
1-2-3-4-5-6-7-6-5-4-3-2-1
1-2-3-4-5-6-7-6-5-4-3-2-1

என்ற எண்ணமைந்த சொற்றொடர்கள் பொருந்தி இருக்கும்படி இயற்றப் பெறும் செய்யுளாதலின் எழுகூற்றிருக்கை எனப் பெயரெய்தியது.

எழுகூற்றிருக்கை என்னும் இப்பனுவலைப் பாட்டின் தொடக்க எண் முதல் ஈற்றெண் முடிய அமைந்த எண் வரிசைப்படி ஏழு கூறுகளாக எழுதி, அந்நிரல்கள் ஏழினையும் தேர் ஒன்றின் மேற்பரப்பாகவும், பாட்டின் ஈற்றெண் முதல் தொடக்க எண் வரை அமைந்த எண்களை அவ்வாறே ஏழு நிரல்களாக எழுதி அக்கூறுகள் ஏழினையும்

அத்தேரின் அடிப்பரப்பாகவும் கொண்டு தேர்ப்பந்தம் என்னும் சித்திரகவி அமைப்பர்.

ஞானசம்பந்தர் அருளிய திருவெழு கூற்றிருக்கை என்னும் இப்பனுவல் நாற்பத்தேழு அடிகளால் ஆன இணைக்குறள் ஆசிரியப் பாவாகும். இது ஒருவகையான எண்ணலங்காரமாகும். சங்க காலத்திலும் எண்ணலங்காரமாகப் பாடும் எண்ணமுடையவராய்ப் புலவர்கள் இருந்துள்ளனர். ஏதேனும் இரண்டு எண்களை அடுத்தடுத்துக் கூறும் மரபு இருந்துள்ளது. ஒருநாட் செல்லலம் இருநாட் செல்லலம் (புறம். 101,), ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப அறுவர் பயந்த ஆலமர் செல்வ, இரு பேருருவின் ஒரு பேரியாக்கை. (திருமுருகு) அதனுடைய வளர்ச்சியே எழுகூற்றிருக்கை எனலாம்.

மூல இலக்கியமாக ஞானசம்பந்தர் பாடிய காலத்தில் வாழ்ந்த ''நாலுகவிப் பெருமாள்'' என்ற சிறப்புப் பெயர் பெற்ற திருமங்கை ஆழ்வாரும், கபிலதேவரும், அருணகிரிநாதரும் எழுகூற்றிருக்கை பாடியுள்ளனர்.

### திருவிராகம் (முடுகு ராகம்)

நெகிழ்ந்த ஓசையவாகிய நெட்டெழுத்துக்கள் விரவாது குற்றெழுத்துக் களால் இயன்று இடையறவு படாது பாடல் முழுவதும் தொடர்ந்து முடியும் நிலையில் முடுகிய ஓசையினை உடைய்தாய் வரும் பாடல் அராகம் எனப்படும். இவ்வாறு முடுகியலாய் வரும் பாவின் ஓசை யமைப்பை 'உருட்டு வண்ணம்' என்பார் தொல்காப்பியர். (உருட்டு வண்ணம் அராகம் தொடுக்கும் - தொல்-செய்யுளியல் - 232).

மேன்மை நடையின் முடுகும் அராகம் எனச் சேக்கிழார் கூறியுள்ளமையின் முடுகிய நடையை உடைமை பற்றியே இப்பெயர் பெற்றது. முழுவதும் சந்தத்தால் ஆனது. பிற்காலத்துத் திருப்புகழ் சந்தத்திற்கு இது அடிப்படை.

**''பந்தத்தால் வந்தெப்பால் பயின்றுநின்ற வும்பரப்**
**பாலேசேர்வா யேனோர்கான் பயில்கண முநிவர்களும்**
**சிந்தித்தே வந்திப்பச் சிலம்பின்மங்கை தன்னொடும்**
**சேர்வார்நாணா நீள்கயிலைத் திகழ்தரு பரிசதெலாம்**
**சந்தித்தே யிந்தப்பார் சனங்கணின்று தங்கணாற்**
**றாமேகாணா வாழ்வாரத் தகவுசெய்த வனதிடங்**
**கந்தத்தா லெண்டிக்கும் கமழ்ந்திலங்கு சந்தனக்**
**காடார்பூவார் சீர்மேவும் கழுமல வளநகரே.''**

என்ற பாடல் இதற்குச் சான்றாகும். முடுகியலாகிய அராகமாய் வருதலின் திருவராகம் எனப் பெயர் பெற்றது. திருவராகம் என்ற பெயர்

திருவிராகம் எனத் திரிந்தது. இவ்வகையில் ஈரடி, ஈரடி மேல் வைப்பு, நாலடி மேல்வைப்பு, சக்கரமாற்று, ஆவின்பாய்ச்சு இவற்றைக் கொள்க. விரிப்பிற் பெருகும் என அஞ்சி விடப்பெற்றது.

தமிழில் பலவகையான புதுமையைப் புகுத்தியவர் திருஞான சம்பந்தர். யாப்பு முறையில் புதிய அமைப்பை முதன்முதலில் பாடியவர் ஆவார். யாப்பைப் பலவிதப் பொருள்களுக்கு ஏற்ப அமைத்துக் கொண்டவர். யாழ்ப்பாணரின் வேண்டுகோளுக்கு இணங்க மாதர் மடப்பிடி எனத் தொடங்கும் யாழ்முரியைப் பாடியவர் கழுமலக் கவுணியன் ஆவார். வீழிமிழலையில் வாசி தீரக் காசு வேண்டிப் பாடியது மிக விரைவாகச் செயல்பட்டு அடியாரை அமுது செய்விக்கும் நிலையில் இருக்குக் குறளாகப் பாடினார். இடத்திற்கேற்ப, காலச் சூழலுக்கு ஏற்ப யாப்பு அமையப் பாடிய முறையில் சித்திரகவியை முதன்முதலில் தொடங்கிச் சிறப்பாகப் பாடிய பெருந்தகை ஞானசம்பந்தர் ஆவார். பெரும்பாலான சித்திர கவிகளுக்குக் கழுமலமுது பதியே செழுமை நிறைந்த பொருளாக அமைந்தது.

**புவியதனில் பிரபுவான புகலி வித்தகர்போல**
**அமிர்தகவித் தொடை பாட அடிமை தனக்கு அருள்வாயே**

(திருப்புகழ்)

# 12. சம்பந்தர் காட்டும் வினைக் கொள்கைகள்

க. இளமதி சானகிராமன், புதுவை.

சைவ சமயக் குரவர்கள் நால்வருள் ''வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத்துறை விளங்க''ப் பிறந்தவர் திருஞானசம்பந்தப் பெருமான். இவர்தம் தேவாரப் பதிகங்கள் பல்வேறு செய்திகளைத் தந்து செல்கின்றன. அவற்றுள் 'வினைகள்' பற்றியவையும் அடங்குவன. பதி, பசு, பாசம் என்னும் இம்மூன்றின் உண்மைத் தன்மைகளை எடுத்தியம்பும் சம்பந்தப் பெருமான், பசுக்களாகிய உயிர்களை வினைகள் பற்றுவதன் காரண மாகவே பிறவிகள் தோன்றுகின்றன. அவ்வினைகளை நீக்குபவன் பதியாகிய இறைவனே என்பதைத் தெளிவாகக் குறிப்பிடுகின்றார். இக்கட்டுரை உயிரும் உயிரைப் பற்றும் வினைகள் குறித்தும் விளக்கமாக உரைக்கின்றது.

## உயிர்கள் குறித்தவை

உலகில் உள்ள அனைத்துச் சமயங்களும் உயிர்களைக் குறித்த உண்மைகளை எடுத்தியம்புகின்றன. அவற்றுள் முன் நிற்பவை சைவ சமயக் கருத்துக்கள். உயிர்கள் 'பசு' என்ற சொல்லால் குறிக்கப்பெறுவன. பதியாகிய முதல்வனைப் போன்றே பசுக்களும் அநாதியானவை. நால்வகைத் தோற்றம் எழுவகைப் பிறப்புகளில் எண்பத்து நான்கு இலக்கம் வடிவங்களை உடையன. பல்வேறு பிறவிகளை உடையன.

உயிர்கள் பாசத்தால் பிணைக்கப்பட்டவை. உயிர்கள் பல்வேறு பிறவிகளை உடைய ஒவ்வொரு பிறவியிலும் அவை பெறும் வினைகளே காரணங்களாகும். நல்வினை, தீவினை என்னும் இவ்விரு வினை களோடு சிற்சக்தியும் துணைக் காரணமாகின்றது. மறுபிறவிகள் மாறி அமையும் தன்மையுடையவை. உயிர்கள் சார்ந்ததன் வண்ணமாகும் தன்மையுடையன. ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று மலங்களையுடையன. கேவலம், சகலம், சுத்தம் என்னும் அவத்தை களையுடையன. இவை உயிர்களின் பரிபக்குவ நிலைக்கு ஏற்ப அமைவன. இருவகைச் சக்திகள் உயிர்களைத் தொழிற்படுத்துகின்றன. திரோதான சக்தி உயிர்கள் வினையினை அனுபவித்துக் கன்மம் கழிய உதவுகின்றது. அருட்சக்தி வினையை அனுபவித்து முடிந்த உயிர்கள் இறைவனின் திருவடியை அடைய வழிவகுக்கும். உயிர்களைப் பிணித்

திருக்கும் ஆணவ மலத்தினாலேயே உயிர்கள் இறைவனின் திருவருளை உணராதிருக்கின்றன. பக்குவம் அடைந்த உயிர்களை இறைவன் ஏற்றுக் கொள்வான் என்பதை இருவினை ஒப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் முதலானவை உணர்த்தும்.

இறைவன் உயிர்களின் பரிபக்குவ நிலைக்கு ஏற்ப அவற்றின் குருவாக வந்தும், உள்நின்றும், தெய்வ வடிவில் முன்வந்தும் ஞானம் வழங்குவான் எனும் கருத்துக்களை முன்வைக்கின்றன. இவையனைத்தையும் உள்வாங்கி அவற்றைத் தம் பாடல்களில் அமைக்கின்றார் திருஞான சம்பந்தப் பெருமான்.

**உயிர்கள் அநாதியானவை**

சைவ சித்தாந்தம் உரைப்பது போலவே உயிர்களைப் 'பசு' என்ற சொல்லால் குறிப்பிடும் சம்பந்தர்,

**"விளையாதொர் பரிசில் வரும் பசு"** (1:12:3)

என்ற வரியின் வாயிலாக, தோன்றாத நிலையில் வருகின்ற உயிர்கள் என்னும் கருத்தைப் புலப்படுத்துவர்.

**உயிர்களின் பல்வேறு பிறப்பு நிலை**

அநாதியான உயிர்கள் நால்வகை யோனிகளில் எழுவகைத் தோற்றத்து எண்பத்து நான்கு இலட்சம் பிறவிகளை எடுக்கின்றன என்று சிவப்பிரகாசர் மொழிவது போன்றே, திருஞானசம்பந்தரும்.

**"உரைசேரு மெண்பத்து நான்குநூ றாயிரமாம் யோனி பேத**
**நிரைசேரப் படைத்து"** (1:132:4)

என்று உரைப்பர். இவற்றின் விளக்கமாக, முட்டை, வியர்வை, வித்து, கரு-என்னும் நால்வகை யோனிகளில், தேவர் (11 இலட்சம்) மனிதர் (9 லட்சம்) விலங்கு (10 இலட்சம்) பறவை (10 இலட்சம்) ஊர்வன (15 இலட்சம்) நீர்வாழ்வன (10 இலட்சம்) தாவரம் (19 இலட்சம்) எனப் பிறவிகள் அமைவன என்றுரைப்பது இவண் ஒப்புநோக்கத் தக்கதாகும்.

**தோற்றமும் கேடும்**

திருஞானசம்பந்தர் உயிர்கட்குத் தோற்றத்தையும் அழிவையும் தருபவன் இறைவனே என்பர். இதனை,

**"தோற்றமும் கேடும்வைப் பாருயிர் கட்கெல்லாம்"** (2:267:1)

என்று உரைப்பதால் அறியலாம்.

**வினைகள்**

பாசம் என்ற கட்டுக்குக் காரணமாக இலங்குவன வினைகளே. இவ்வினைகளையே 'பாசம்' என்றுரைப்பாருமுளர். இவ்வினைகள்

உயிர்கள் பிறவிகளை எடுப்பதற்குக் காரணங்களாகின்றன. பதி, பசுவைப் போலப் பாசமும் அநாதியானதே. இதனைத் திருஞானசம்பந்தர்,

**"விளையாததொர் பரிசில் வரும் பசுபாசம்"** (1:12:3)

என்பதாலும் அறியலாம்.

திருஞானசம்பந்தரால் உயிர்கள் எவ்வாறு ஆருயிர் ஆவி (3:363:3) இன்னுயிர் (3:363:1) என்றெல்லாம் பேசப்பெறுகின்றனவோ அதனைப் போன்றே வினைகளும் அருவினை (1:1322:4) உருவினை (1:1313:4) நல்வினை (1:1091:4) தீரா வினை (1:917:3) என்றெல்லாம் பேசப் பெறுகின்றன. உயிர்களைப் பற்றுகின்ற வினைகள் 'மலங்கள்' என்று கூறப்பெறுவன. இம்மலங்கள் ஆணவம், கன்மம், மாயை என்னும் மூவகைப்படும். இவற்றை மும்மலங்கள் என்று குறிப்பர். இவற்றில் மூல மலமாய் இருப்பது ஆணவமே. அறிவிற்குத் தடையாய் இது உயிரோடு தோன்றுகின்ற காரணத்தால் சகசமலம் என்றும் கூறுவர். சிவப்பிரகாசர்,

**"மூலமலமாய் அறிவு முழுதிறனையும் மறைக்கும்"**

என்பர் இவ் ஆணவ மலத்தை ஞானசம்பந்தர் "இருள்" (1:38:3) என்றே குறிப்பிடுவர். நெல் தோன்றியபோது அதனிடத்து உமியும் செம்பு தோன்றிய போது அதனிடத்துக் களிம்பும் தோன்றியது போன்றே உயிர்களுக்கும் இம் மூன்று மலங்கள் உள்ளன. ஞானசம்பந்தர், இறைவனின் அடியவர்களை

**'மலனொடு மாசு மில்லவர்'** (1:42:4)

என்று குறிப்பிடுவதால் அறியலாம். இறைவனின் திருநாமத்தை எப்பொழுதும் கூறுவதால் மூலமாகிய ஆணவ மலத்தினை அழித்த திருநீற்றினையுடைய அடியவர்கள் என்று குறிப்பிடுவர். இதனை,

**"மூலமுண்ட நீற்றர்......"** (1:53:9)

என்று குறிப்பிடுவதால் அறியலாம்.

ஆணவமலச் சேர்க்கையால் உயிர்கள் செய்யும் வினைகளின் தொகுப்பே 'கன்ம மலம்' எனப்படும். இம்மல உண்மை, உயிர்கள் அடையும் உடல் வேறுபாடு, உயிர்கள் உடலில் தங்கியிருக்கும் கால வேறுபாடு, உயிர்கள் அனுபவிக்கும் நுகர்ச்சி வேறுபாடு என்னும் மூன்று வகைகளில் மெய்ப்பிக்கப் பெறுகின்றது. இவை, அகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் என்று குறிக்கப்பெறும். இவற்றை எதிர்வினை, வருவினை, மேல்வினை என்று ஞானசம்பந்தர் குறிப்பர். (2:212:11)

## மறு பிறவி

உயிர்கள் தாம் ஒரு பிறவியில் செய்கின்ற நல்வினை, தீவினைகட் கேற்ப மறு பிறவிகளை அடைகின்றன. அவ்வாறு பிறக்கும்போது வேறு

வேறு உடலை எடுக்கின்றன. இவ்வாறு வேறு உடலை எடுப்பதையே ''அச்சுமாறிப் பிறத்தல்'' என்பர். திருஞானசம்பந்தர்,

**''சிலந்தி செங்கட் சோழனாகச் செய்தான்''** (2:199:7)

என்று பாடுவதின்வழி, ஒரு பிறவியில் சிலந்தியாகப் பிறந்து சிவபிரான் மீது எச்சங்கள் விழாதவாறு மேலே வலைக் கட்டித் காத்தமையால் அச்சிலந்தி, தான் செய்த நல்வினையின் பயனாகப் பின்னர் 'கோச் செங்கட் சோழன்'' - என்னும் அரசனாகப் பிறந்தது. அரசனாகப் பிறந்தவன் பின்னர் சிவபிரானுக்காகப் பல கோயில்களைக் கட்டினான் என்றும் மறுபிறவிக் கதை குறிப்பாக வெளிப்படுகின்றது. எனவே நல்வினைகள் செய்பவர்கள் இறையடி சார்வர் என்பது தெளிவுப்படுத்தப் பெறுகின்றது. ஒரு பிறவியில் ஒன்றாகவும் அடுத்தப் பிறவியில் செய்த வினைக்கு ஏற்ப அச்சுமாறியும் பிறப்பர் என்பதும் பெறப்படுகின்றது.

தொடர்ந்து வருகின்ற நல்வினை, தீவினை என்னும் இரண்டினாலும் உயிர்கள் இன்பங்களையும் துன்பங்களையும் அனுபவித்து படுகின்றன. தீவினையால் அனுபவிக்கின்ற துன்பங்கள் உயிர்களை மிகுதியும் வாட்டுகின்றன. ஞானசம்பந்தர்,

**''இடரினும் தளரினும் எனதுறு நோய்**
**தொடரினும் உன்கழல் தொழு தெழுவேன்''** (3:262:1)

என்பதின் வழி இடர்வந்தாலும், தளர்வு வந்தாலும், நோய்கள் தொடர்ந்து வந்தாலும், உன் திருவடிகளையே வணங்கி எழுவேன் என்று உரைப்பவர், தீவினைகள் இவ்வாறு தொடர்வதைக் குறிப்பால் உணர்த்துகின்றார் எனலாம். இம்மூன்று நிலைகளையும் 'முந்தி நின்ற வினைகள்'' (1:27:1) என்று குறிப்பிடும் ஞானசம்பந்தர் இவை நீங்குதல் வேண்டுமெனில் திருப்புன்கூர் சிவபிரானைச் சிந்திக்க வேண்டும் என்பார்.

## வினை நீக்கம்

உயிர்கள் பாசக் கட்டுக்களில் இருந்து விடுதலை பெறவேண்டியது இன்றியமையாததாகும். வினை நீக்கம் பெற வேண்டுமேல் அதனை இறைவன் ஒருவனே நல்க முடியும். எனவே சிவபிரானைச் சிந்தியுங்கள்; போற்றுங்கள்; துதியுங்கள் என்று வேண்டுவர்.

உயிர்கள் பல்வேறு பிறவிகளை அடைவதற்குக் காரணம் அவை செய்கின்ற வினைகளேயாம். இவ்வினைகள் பிறவிகள்தோறும் தொடர்ந்து வருதலை,

**''தொடர்ந்து நம்மேல் வருவினை''** (2:250:7)

என்று ஞானசம்பந்தர் குறிப்பதால் அறியலாம். இவ்வினைகள் அவ்வளவு எளிதில் தீருவன அல்ல. எனவே இவை 'தீரா வினைகள்'. இவற்றைத் தீர்ப்பவன் நந்தி ஒருவனே என்பதை,

**"தீரா வினை தீர்க்கும் நந்தி"** (1:917:3)

என்று கூறுவதால் அறியலாம். சிவபிரான் ஒருவரே வினைப்பற்று அறுப்பவர் என்பதனை.

**"பற்றுமனம் உடையார் வினைப்பற்று அறுப்பாரே"** (1:948:4)

என்று உரைப்பதால் அறியலாம். அக இருள் (ஆணவ மலம்) நீங்க வேண்டுமேல் ஞானப் பொருளாக விளங்கும் பெருமானை மனதில் இடைவிடாமல் தியானித்துத் திருவடிகளை வணங்குதல் வேண்டும். (1:38:3) சிவபிரானாரின் மீது முழுமையாக நம்பிக்கை வைத்து வணங்குபவர்கட்கு எவ்விதத் தீயவினையும் தீண்டா என்பனவற்றைத் "திருநீலகண்டப் பதிகத்தின்" மூலம் விளக்குவர். எனவே தாம் செய்கின்ற வினைகட்கு ஏற்ப உயிர்கள் வினைப்பயனை அனுபவிக்கின்றன. இறையின் மீது முழுமையாக நம்பிக்கை வைத்து அன்போடு வழிபடும் போது அவ்வினைகள் நீங்கப் பெறுகின்றன என்பவை பெறப்படுகின்றன.

# 13. சம்பந்தரும் வள்ளலாரும்

தவத்திரு ஊரன் அடிகளார், வடலூர்.

ஞானசம்பந்தரை வள்ளலார் வழிபடு குருவாகக் கொண்டார். திருவாசகத்தை வழிபடு நூலாகக் கொண்டார். சமயகுரவர் நால்வரிடத் திலுமே வள்ளலார் மிகப் பெரிதும் ஈடுபாடு கொண்டவர். நால்வரைப் பற்றி வள்ளலார் பாடிய நான்கு அருள்மாலைகள் வள்ளலாரின் திருவருட்பாவிற் சேர்ந்துள்ளன. ஞானசம்பந்தரைப் பற்றிப் பாடியது ஆளுடைய பிள்ளையார் அருள்மாலை. அப்பரைப் பற்றிப் பாடியது ஆளுடைய அரசுகள் அருள்மாலை. சுந்தரரைப் பற்றிப் பாடியது ஆளுடைய நம்பிகள் அருள்மாலை. மாணிக்கவாசகரைப் பற்றிப் பாடியது ஆளுடைய அடிகள் அருள்மாலை. இவ்வாறு நால்வருக்கும் நான்கு தனி மாலை களைப் பாடிய வள்ளலார் திருவருட்பாவில் ஆங்காங்கே பல இடங் களில் பல பாடல்களில் நால்வரைப் போற்றிப் புகழ்ந்து பாடியிருக்கிறார். அவை திருவருட்பா முதலைந்து திருமுறைகளில் ஆங்காங்கே பரவிக் கிடக்கின்றன. திருவருட்பா ஆறாம் திருமுறையிலும் ஒரோவிடத்து ஞானசம்பந்தரைப் பற்றிய குறிப்பு உண்டு. பொதுவாக நால்வரிடத்திலும் வள்ளலார் ஈடுபாடு கொண்டிருப்பினும் சம்பந்தரிடமும் மாணிக்க வாசகரிடமும் கொண்டிருந்த ஈடுபாடு தனிச் சிறப்பானது.

ஞானசம்பந்தரைக் குருவாகக் கொள்ளும் வள்ளலார் ஞானசம்பந்தரை முருகன் அவதாரமாகக் கூறுகிறார். ஞானசம்பந்தரின் அற்புதச் செயல்கள் பலவற்றைப் போற்றிப் பாடுகிறார். தம்முடைய ஐயங்களை ஞானசம்பந்தர் நீக்கியருளியதாகவும் பல அனுபவ நிலைகளை விளக்கியருளியதாகவும் பாடுகிறார். வாய்ப்பு நேரும் போதெல்லாம் ஏற்ற இடங்களிலெல்லாம் சம்பந்தர் புகழை ஏத்துகிறார். சம்பந்தரைப் பற்றி வள்ளலார் கூறுவன வற்றையெல்லாம் தொகுத்து வகுத்து விரித்து விளக்கினால் அது ஒரு நூலாகவே அமையும். அவ்வளவு விரிவுக்கு ஈண்டு இடமின்றாதலின் சிறு குறிப்பு முறையில் சில செய்திகளை மட்டும் சுருங்கக் கூறுவோம்.

### வள்ளலார் சம்பந்தரைக் குருவாகக் கொள்ளல்

வள்ளற்பெருமான் இளமையில் ஒன்பதாம் அகவையில் முருகப் பெருமானால் ஆட்கொள்ளப்பெற்றார். பன்னிரண்டாம் அகவையில் முறையான ஞானவாழ்வைத் தொடங்கினார். ஞான சாதனையைத்

தொடங்கிய அவ்விளம்பருவத்திலேயே தமக்கென ஒரு வழிபடு கடவுள் (உபாசனாமூர்த்தி), தமக்கென ஒரு வழிபடு குரு (உபாசனா குரு), தமக்கென ஒரு வழிபடு நூல் (உபாசனா நூல்) என்ற ஒரு நல்ல அமைப்பை ஏற்படுத்திக் கொண்டார். வள்ளலார் கொண்ட வழிபடு கடவுள் யார்? வழிபடு குரு யார்? வழிபடு நூல் யாது? வழிபடு கடவுள் - முருகன். வழிபடு குரு - திருஞானசம்பந்தர். வழிபடு நூல் - திருவாசகம். இம்மூன்றும் வள்ளலாரை ஆளாக்கின. பின்னாளில் பெருமான் பெற்ற பெரும் பேறுகளுக்கெல்லாம் இவையே அடிநாள் முயற்சியாக அமைந்தன.

ஞானசம்பந்தரைக் குருவாகக் கொண்ட வள்ளலார் ஆளுடைய பிள்ளையார் அருள்மாலையுள்

**"ஞானசம்பந்தத் தெள்ளமுதாம் சிவகுருவே"** (3226)

**"ஞானபந்தன் என்றோங்கு சற்குருவே"** (3227)

**"ஞானசம்பந்தச் செல்வமே எனது சற்குருவே"** (3228)

**"ஞானசம்பந்தன் என்னும் என்சற்குரு மணியே"** (3229)

**"ஞானசம்பந்த உத்தம சுத்த சற்குருவே"** (3230)

**"எனக்கருள் புரிந்த சற்குருவே"** (3233)

**"என்உயிர்க்கு உயிர்எனும் குருவே"** (3234)

எனப் போற்றுவது, சம்பந்தரைக் குருவாகக் கொண்டதற்குரிய அகச் சான்றுகள் ஆகும்.

ஞானசம்பந்தரை வழிபடு கடவுளாகக் கொண்டது ஏன்?

1. முருகனின் அவதாரமாக வந்தவர்
2. அருள்நெறி முதல்வர் (சமயகுரவர் நால்வரில் முதல்வர்)
3. மூவாண்டில் ஞானப்பால் உண்டவர்
4. முதல் நாளே கட்வுட் காட்சியைக் கண்டவர்
5. ஓதாது உணர்ந்தவர்
6. சாதனம் இன்றியே சாதித்தவர்
7. பலருக்கும் தம்மோடு முத்தி அளித்தவர்

இத்தகைய காரணங்களால் வள்ளற்பெருமான் ஞானசம்பந்தரைக் குருவாகக் கொண்டார். வள்ளலாரைப் போன்றே மற்றும் சில ஞானி களும் ஞானசம்பந்தரைக் குருவாகக் கொண்டுள்ளனர். வள்ளலார் இராமலிங்கருக்கு முன் விளங்கிய கண்ணுடைய வள்ளலார் என்பவர் (சீர்காழி வள்ளலார் ஆதீனத்தின் நிறுவனர், குருமுதல்வர், ஒழிவில்ஒடுக்கம் என்ற அருமையான ஞான நூலை அருளிச்செய்தவர்) ஞானசம்பந்தரைக்

குருவாகக் கொண்டவர். தேவார, திருவாசகங்களைத் தொகுத்துத் திருமுறைகளாக வகுத்த நம்பியாண்டார் நம்பிகளும் சம்பந்தரைக் குருவாகப் பாவித்தவரே. பதினோராம் திருமுறையில் சம்பந்தரைப் பற்றி ஆறு பிரபந்தங்களை நம்பிகள் பாடுகிறார். இது அவருக்குச் சம்பந்தரின் மீதுள்ள தனித்த ஈடுபாட்டைக் காட்டுகிறது.

**சம்பந்தரை முருகனாகக் கூறல்**

சம்பந்தர் முருகனின் அவதாரம் என்ற ஒரு கொள்கையை முதன் முதலில் தோற்றுவித்தவர் ஒட்டக்கூத்தர். அவரது காலம் 12-ஆம் நூற்றாண்டு. ஒட்டக்கூத்தர் பாடிய தக்கயாகப் பரணியில் முருகனே சம்பந்தராக வந்தார் என முதன் முதலாகக் கூறப்பெறுகிறது. ஒட்டக் கூத்தரைப் பின்பற்றிப் பின்வந்த அருணகிரிநாதர் (15-நூ.), திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் (17-நூ.), வள்ளலார் இராமலிங்க சுவாமிகள் (19-நூ.) இன்னும் பகழிக்கூத்தர் முதலியோரும் சம்பந்தரை முருகன் அவதாரமாகக் கூறலாயினர்.

வள்ளற்பெருமான் பாடியருளிய திருவருட்பாவில் முருகனைச் சம்பந்தராகவும், சம்பந்தரை முருகனாகவும் கூறிப் போற்றிப் பாடியுள்ள இடங்கள் பல. வள்ளலார் சென்னை கந்தக்கோட்டத்து முருகனைப் பாடிய கந்தர் சரணப்பத்தில் "நந்தா உயர் சம்பந்தா சரணம்" என்று முருகனைச் சம்பந்தராகக் குறித்துப் போற்றுகிறார். "சைவ நாயக சம்பந்தன் ஆகிய தமிழ் அருட்குன்றே" (228), "வஞ்சச்சமண வல்இருளை மாய்க்கும் ஞானமணிச் சுடரே" (474), "ஆருகச் சமயக் காட்டை அழித்த வெங்கனலே போற்றி" (512), "சைவந் தழைக்கத் தழைத்தாண்டி ஞானசம்பந்தப் பேர் கொண்டழைத்தாண்டி" (534) என்பன வள்ளலார் முருகன் மீது பாடிய பாடல்களின் தொடர்கள். இவற்றில் முருகனைச் சம்பந்தராகக் கூறுகிறார் வள்ளற்பெருமான்.

வள்ளலார் ஞானசம்பந்தரைப் பற்றிப் பாடிய பாடல்கள் பல வற்றிலும் "சீரார் சண்பைக் கவுணியர்தம் தெய்வமரபில் திகழ்விளக்கே" என்ற பன்னிருசீர் விருத்தம் மிகவும் புகழ்பெற்றது. மறைமலையடிகள் சொற்பொழிவுத் தொடக்கத்தில் இதனைக் கடவுள் வாழ்த்தாகப் பாடுவதுண்டு. இப்பாடலில் "காரார் மிடற்றுப் பவளமலைக் கண்ணின் முளைத்த கற்பகமே" என்று வள்ளலார் பாடுகிறார். காரார்மிடறு-நஞ்சுண்டு கறுத்த கண்டம். காரார் மிடற்றுப் பவளமலை-சிவபெருமான். அப்பவள மலைக் கண்ணின் முளைத்த கற்பகம் - முருகப்பெருமான். ஞானசம்பந்தரைப் பாடிய இப்பாடலில் வள்ளற்பெருமான் ஞானசம்பந்தரைச் சிவபெருமானது கண்ணில் முளைத்த கற்பகமாக, நெற்றிக் கண்ணில் தோன்றிய முருகனாகக் கூறிப் போற்றுகிறார்.

சம்பந்தர் முருகன் அவதாரமா? என்ற ஆராய்ச்சியை இங்கு விரிக்கவேண்டுவதின்று. பெருமான் முருகன் பிறவான் இறவான் என்பதே உண்மை. இப்படிக் கூறிய அருணகிரிநாதரே முருகனைச் சம்பந்தராகக் கூறுகிறார். ஒட்டக்கூத்தர் தொடங்கி வைத்த இம்மரபு வள்ளலார் வரை வந்துவிட்டது. சம்பந்தர் முருகனின் நேர் அவதாரமன்று, அம்சாவதாரம் என்ற ஒரு விளக்கமும் அறிஞர்களாற் கூறப்படுகிறது. சமயகுரவர் நால்வரில் சம்பந்தர் ஒருவரைத் தவிர ஏனைய மூவரையும் இவ்வாறு தெய்வ அவதாரமாகக் கூறும் வழக்கமில்லை. சம்பந்தருக்கே உரிய தனிச்சிறப்புகளுள் இது ஒன்று என்று கூறலாம்.

## அருள்நெறி முதல்வர்

சமயகுரவர் நால்வரில் முதல்வர் சம்பந்தர். ''அருள்நெறியில் முதல் அரசு இயற்றிய துரையே'' என்று வள்ளலார் சம்பந்தரைப் போற்றிப் பாடுகிறார். (3231).

## சம்பந்தர் வள்ளலாரின் ஐயங்களை நீக்கி அருளல், அனுபவ நிலைகளை உணர்த்தி அருளல்

சம்பந்தரைக் குருவாகக் கொண்டதால் வள்ளற்பெருமான் பெற்றபயன் மிகுதி. தமது தேவாரப் பாசுரங்களைக் கொண்டும், தாமே வள்ளற் பெருமானது உள்ளத்தில் அதிட்டித்தும் வள்ளற்பெருமானது ஐயங்கள் பலவற்றைச் சம்பந்தர் நீக்கியருளினார். அனுபவ நிலைகள் பலவற்றை உபதேசித்தருளினார்.

உயிர் அனுபவம், அருள் அனுபவம், சிவ அனுபவம் என மூன்று அனுபவ நிலைகள் சம்பந்தரால் வள்ளற்பெருமானுக்கு உணர்த்தப் பெற்றன. (3227; 3228; 3229; 3220; 3231). சிவத்தின் அடி எது? முடி எது? என்ற பலகாலம் வருந்திக் கொண்டிருந்த வள்ளலாருக்குச் சம்பந்தர் எழுந்தருளிக் கடைக்கணித்து அடியும் முடியும் உனக்குள் விளங்குவன என்று அருளிச் செய்தார் (3232). முன்புஉறுநிலை எது? பின்பு உறுநிலை எது? என்று வள்ளலார் உளமயக்குற்றபோது, சம்பந்தப்பெருமான் திருநெறித் தமிழ்கொண்டு ஐயநீத்தருளினார் (3234). வள்ளற்பெருமான் இவ்விடத்தில் சம்பந்தர் தேவாரத்தைத் ''திருநெறித் தமிழ்'' என்று குறிக்கிறார். பல கற்ப காலங்கள் முயன்றாலும் கிடைத்தற்கரிய திறங்களை யெல்லாம் தம் குருவாகிய ஞானசம்பந்தப் பெருமான் ஒரு பகற்பொழுதில் தமக்குக் கிடைக்கச் செய்தருளினார் என வள்ளற்பெருமான் பாடுகின்றார். (3235).

ஒரு சமயம் சிவபெருமானே திருஞானசம்பந்தர் தேவாரத்தால் வள்ளலாருக்குத் தமது திருவுளத்தைக் காட்டியருளினானாம். அப்போது வள்ளலார் அதனைத் தெரிந்துகொள்ளவில்லையாம். பின்ஒருசமயம்

சிவபெருமான் வள்ளலாரின் திருவுளத்தில் எழுந்தருளிப் பெருநெறியைக் காட்டியபோது, பிழைபடாத் தெய்வமறை இது எனப் பின்பு உணர்ந்தாராம்.

திருநெறிமெய்த் தமிழ்மறையாம் திருக்கடைக்காப் பதனால்
திருவுளங்காட் டியநாளில் தெரிந்திலன்இச் சிறியேன்
பெருநெறிஎன் உளத்திருந்து காட்டியநாள் அறிந்தேன்
பிழைபடாத் தெய்வமறை இதுவெனப்பின் புணர்ந்தேன்
ஒருநெறியில் எனதுகரத் துவந்தளித்த நாளில்
உணராத உளவைஎலாம் ஒருங்குணர்ந்து தெளிந்தேன்
தெருணெறிதந் தருளும்மறைச் சிலம்பணிந்த பதத்தாள்
சிவகாம வல்லிமகிழ் திருநடத்தெள் ளமுதே.

(திருஅருட்பா - 2802.)

திருநெறிமெய்த் தமிழ்மறையாம் திருக்கடைக்காப்பு அதனால் என்று வள்ளற்பெருமான் குறிப்பிடுகிறார். திருக்கடைக்காப்பு என்பது ஞானசம்பந்தர் தேவாரத்திற்கு உரிய ஒரு சிறப்புப் பெயர். ஞானசம்பந்தரின் தேவாரத்தைக் கொண்டு, ஞானசம்பந்தர் சிவபெருமான் ஆகிய இருவருமே வள்ளலாருக்குத் திருவுளங்காட்டியருளியிருக்கிறார்கள். ''திருநெறி மெய்த்தமிழ்'' என்றும் ''பிழைபடாத் தெய்வமறை'' என்றும் வள்ளலார் சம்பந்தர் தேவாரத்தைப் போற்றுகிறார்.

## சம்பந்தர் தேவாரத்தைப் பொன்மொழி எனப் போற்றல்

.............................................. இறையோன்
புலனைந்தும் என்றருளும் பொன்மொழியை மாயா
மலமொன்றி அந்தோ மறந்தாய் - நிலனொன்றி 1965 (470)

... ... ... ... .... ...
... ... ... ... .... ...
... ... ... .... ..... -சம்பந்தர்

அற்றவருக் கற்றசிவ னாமெனுமப் பொன்மொழியை
மற்றைமொழி போன்று மறந்தனையே - சிற்றுயிர்க்குக் 1965 (525)

என்பது வள்ளலார் பாடிய நெஞ்சறிவுறுத்தல். இதனுள் புலனைந்தும் என்றருளும் பொன்மொழி என்றது ''புலனைந்தும் பொறிகலங்கி'' என்ற தொடக்கத்தை உடைய திருவையாற்றுத் தேவாரமாம். அற்றவருக்கு அற்ற சிவனாம் என்றது ''வெற்றவே அடியார் அடிமிசை வீழும்'' என்று தொடங்கும் திருவாலவாய்த் தேவாரமாம். இத்தேவாரப் பாக்களை வள்ளலார் தம் நெஞ்சுக்கு அறிவுறுத்தலாகப் பாடிய நெஞ்சறிவுறுத்தலில் தம் நெஞ்சுக்கு எடுத்துக் காட்டுகிறார். அற்றவருக்கு அற்ற சிவன் என்ற சம்பந்தர் பொன்மொழியைத் தாயுமானவரும் எந்நாட் கண்ணியுள், ''அற்றவர்கட்கற்றசிவன் ஆம் என்ற அத்துவித முற்றுமொழி கண்டருளில் மூழ்குநாள் எந்நாளோ'' எனப் போற்றுகிறார்.

**சம்பந்தர் அற்புதங்களைப் போற்றி புகழ்தல்**

ஞானசம்பந்தப் பெருமானது அருள்வாழ்வில் நிகழ்ந்த அற்புதங்களை யெல்லாம் வள்ளற்பெருமான் எண்ணி எண்ணி அனுபவித்துப் போற்றிப் புகழ்கிறார். சம்பந்தரின் அற்புதங்கள் பலவற்றிலும் வள்ளற்பெருமான் ஈடுபாடு கொள்ளினும், என்பு பெண்ணாக்கிய அற்புதம், திருமணங்காண வந்தார் அனைவருக்கும் முத்திப்பேறு வழங்கியருளிய அற்புதம் ஆகிய இரண்டிலும் வள்ளற்பெருமான் கொண்ட ஈடுபாடு மிகுதி.

இறைவா! உன்னுடைய சீரைச் சம்பந்தர் சொல்ல எலும்பு பெண்ணானது என்பர், அது பெரிதன்று, சைவ வடிமான ஞானசம்பந்தரின் சீரைச் சொன்னால் சாம்பல்கூடத் தெய்வ வடிவமாகி விடும் என்று வள்ளலார் பாடுகின்றார்.

**பண்ணாலுன் சீரினைச்சம் பந்தர்சொல வெள்ளெலும்பு**
**பெண்ணான தென்பார் பெரிதன்றே - அண்ணாஅச்**
**சைவவடி வாஞான சம்பந்தர் சீருரைக்கில்**
**தெய்வவடி வாஞ்சாம்பர் சேர்ந்து.** (திருஅருட்பா - 2008.)

சம்பந்தரை சைவவடிவான ஞானசம்பந்தர் என்கிறார். இறைவன் புகழ்பாட எலும்பு பெண்ணானது, அது பெரிதன்று, சம்பந்தர் புகழ் பாடினால் சாம்பல் தெய்வமாகும் என்று பாடுவது எப்பேர்ப்பட்ட ஈடுபாடு கொண்டது.

சம்பந்தர், எலும்பைப் பெண்ணாக்கிய நாளில் அதைக் கண்ட வானம் தேவர்களைப் பார்த்து சிரித்ததாம். வள்ளலார் பாடுகின்றார்.

**நல்லமு தம்சிவை தான்தரக் கொண்டுநின் நற்செவிக்குச்**
**சொல்லமு தந்தந்த எங்கள் பிரான்வளஞ் சூழ்மயிலை**
**இல்லமு தந்திகழ் பெண்ணாக என்பை எழுப்பியநாள்**
**சில்லமு தம்பெற்ற தேவரை வானஞ் சிரித்ததன்றே.**

(திருஅருட்பா - 2301.)

தேவர்களைப் பார்த்து வானம் ஏன் சிரித்தது? எலும்பு பெண்ணாக்கிய அற்புதத்தைக் கண்ட தேவர்கள் வானத்திலிருந்து பூமாரி பொழிந்தார்கள். அதைக் கண்டு வானம் சிரித்தது! ஏன் சிரித்தது? தேவர்கள் சாகாமையைத் தரும் அமிர்தம் உண்பவர்கள். தேவருலகில் வசிப்பவர்கள். அமிர்தம் உண்ணும் தேவலோக வாசிகளால் செத்தாரை எழுப்ப இயல்வதில்லை. அரிசிச்சோறு உண்ணும் பூலோக வாசியாகிய ஞானசம்பந்தர் எலும்பைப் பெண்ணாக்கி விட்டார். அதைக் கண்ட தேவர்கள் (வெட்கமின்றிப்) பூமாரி பொழிகிறார்கள். கையாலாக தேவர்களே, பூமாரி பொழிவது உங்களுக்கு வெட்கமாக இல்லையா?! என்று வானம் சிரிக்கிறதாம்.

ஞானசம்பந்தரின் திருமண அற்புத நிகழ்வை வள்ளற்பெருமான் நினைந்து பார்க்கிறார். அந்தோ! அந்நாளில் நாம் இருக்கவில்லையே! அந்நாளில் நாம் பிறந்திருந்து, சம்பந்தரின் திருமணத்திற்கு நாம் சென்றிருந்தால், முக்கிய உறவினராக, நண்பராகச் சென்றிருக்க வேண்டாம், தாம்பூலத்தட்டு, சந்தனக் கிண்ணம் முதலிய ஏதோ ஒரு பொருளைச் சுமந்து தொண்டாற்றும் ஒரு ஆளாக, தொண்டனாகச் சென்றிருந்தால், எல்லாரும் முத்தி அடைந்ததைப் போல நானும் எளிதில் முத்தியடைந்திருப்பேனே, அந்நாள் பிறந்திராமல் தடைபட்டேன், ஆதலின் இந்நாள் நான் உன் திருவடிகள் வருந்த வேண்டுகிறேன், உனக்கும் கஷ்டம், எனக்கும் கஷ்டம் என்று, சம்பந்தர் காலத்தில் தாம் பிறந்திராத குறையை எண்ணி ஏங்குகிறார். அவ்வேக்கத்தில் அருளிய பாடல்

**எங்கோவே யான்புகலி எம்பெருமான் தன்மணத்தில்**
**அங்கோர் பொருட்சுமையாள் ஆனேனேல் - இங்கேநின்**
**தாள்வருந்த வேண்டேன் தடைபட்டேன் ஆதலினிந்**
**நாள்வருந்த வேண்டுகின்றேன் நான்.** (திருஅருட்பா - 2009.)

**சம்பந்தர் போன்றே வள்ளலாரும் ஆணையிற் கிளத்தல்**

''ஆணை நமதே'' என்று சம்பந்தர் தம்மீது ஆணையிட்டுரைக்கும் பாடல்கள் தேவாரத்துள் நான்கு உள்ளன. ''நனிபள்ளி உள்க ஆணை நமதே'' (திருநனிபள்ளிப் பதிகம் 2-84-11; 2387), ''வானில் அரசாள்வர் ஆணை நமதே'' (கோளறு திருப்பதிகம் 2-85-11; 2398), ''அந்த உலகெய்தி அரசாளும் அதுவே சரதம் ஆணை நமதே'' (திருவேதிகுடிப் பதிகம் 3-78-11; 3645), ''வானிடை வாழ்வர் மண்மிசைப் பிறவார் மற்றிதற் காணையும் நமதே'' (திருக்கழுமலப் பதிகம் - 3-118-11; 4078) என்பன அவை. பதிகத்தின் ஈற்றுப் பாடலைப் பலன்கூறும் பாடலாகப் பாடுதல் சம்பந்தருக்கு வழக்கம். அதுவும் ஆணையிட்டுப் பாடுதல் வழக்கம். இவ்வழக்கம் மற்றவர்களிடம் இல்லை. சம்பந்தர் இவ்வாறு ஆணையிட்டுரைப்பது நம்பியாண்டார் நம்பிகளை மிகவும் கவர்ந் திருக்கிறது. அதனாற்போலும் நம்பிகள் ஆளுடைய பிள்ளையார் திருத்தொகையுள் சம்பந்தரை, ''முத்திப் பகவ முதல்வன் திருவடியை அத்திக்கும் பக்தர் எதிர் **ஆணை நமதென்ன வலான்**'' என்று போற்று கின்றார். **''ஆணை நமதென்ன வலான்''** என நம்பிகள் கூறுவது போன்றே கல்வெட்டுகளிலும் **''ஆணை நமதென்ற பெருமாள்''** என்று சம்பந்தர் குறிப்பிடப் பெறுகிறார்.

தான் கூறுவனவற்றை ஆணையிட்டுக்கூறும் வழக்கம் வள்ளலாரிடமும் காணப்பெறுகிறது. இவ்வழக்கம் சம்பந்தரிடமிருந்து வள்ளலாருக்கு வந்ததாகலாம். தன்மீது ஆணையிடல், இறைவன் மீது ஆணையிடல்,

ஒரு முறைக்கு மேலும், இருமுறை, மும்முறை ஆணையிடல்போன்று பல்வேறு வகையாக ஆணையிடும் வழக்கம் வள்ளலாரிடம் உள்ளது. இறைவன் தன்மீது ஆணையிட்டு வள்ளலாருக்கு உரைத்தலும் உண்டு.

**எல்லாம் செயல்கூடும் என்ஆணை அம்பலத்தே**
**எல்லாம் வல்லான் தனையே ஏத்து** (3267)

என்னும் திருஅருட்பா அனைவரும் அறிந்தது. வள்ளலார் ஆணையிட்டுரைக்கும் இக்குறள்வெண்பா திருஅருட்பா ஆறாம் திருமுறையின் முதற் செய்யுளாகக் காப்புப் போன்று வைக்கப்பெற்றுள்ளது. சன்மார்க்கச் சொற்பொழிவாற்றுவோர் பொழிவுத் தொடக்கத்தில் அருட்பெருஞ்ஜோதி மந்திரத்தின் பின் இதனை மங்கல மொழியாகக் கூறித் தொடங்குவது பழைய வழக்கம். வள்ளலார் ஆணையிட்டுரைக்கும் வண்ணத்தைத் திருவருட்பாவிற் பலவிடத்தும் பலவகையாகக் காணலாம். அவையெல்லாம் சம்பந்த குருவின் சாயல், சம்பந்த குருவின் தாக்கம் எனக் கூறலாம்.

## சம்பந்தரைப் போன்றே வள்ளலாரும் எனதுரை தனதுரை எனல்

ஞானசம்பந்தர் போன்ற பெருஞானிகளின் உரைகள் இறைவனது உரைகளே ஆகும். திருஇலம்பையங்கோட்டூர் பதிகத்தில் ''எனதுரை தனதுரையாக'' எனச் சம்பந்தப் பெருமான் பாடியருளுகின்றார். சம்பந்தரின் உரைகளெல்லாம் சிவபெருமானது உரைகளாகவே திகழுகின்றன. ''எனது உரை தனது உரை ஆக'' எனச் சம்பந்தப் பெருமான் பாடியது போன்றே வள்ளற்பெருமானும் பாடுகின்றார். இன்னும் வலிவாக, விரிவாக, வெளிப்படையாகப் பாடுகின்றார்.

**''தன்இயல் என்இயல் தன்செயல் என்செயல்**
**என்ன இயற்றிய என்தனித் தந்தையே**
**தன்உரு என்உரு தன்உரை என்உரை**
**என்ன இயற்றிய என்தனித் தந்தையே''**

என்பன வள்ளற்பெருமான் பாடியருளிய அருட்பெருஞ்ஜோதி அகவல்அடி (1147-1150)

**''நான்உரைக்கும் வார்த்தையெலாம் நாயகன்சொல் வார்த்தை''** (5504)

**''நாயகன் தன் வார்த்தை''** (5594)

என்று வள்ளற்பெருமான் பாடுகிறார்.

**''நின்வார்த்தை யாவும் நமது நீள்வார்த்தை யாகும்''** (3679)

என்று இறைவனே கூறியருளியதாகவும் பாடுகிறார். திருவருட்பாவில் இவ்வாறு வருமிடங்கள் பற்பல. இவையெல்லாம் ஞானசம்பந்த குருவின்

அருளால் வள்ளற்பெருமான் இளமைக் காலந் தொடங்கியே பெற்ற ஏற்றங்கள்.

சம்பந்தரைக் குருவாகக் கொண்ட வள்ளலார் சம்பந்தரின் நிலைக்கு உயர்ந்தார். சம்பந்தர் வள்ளலாரைத் தம் நிலைக்கு உயர்த்தினார். சம்பந்தர் தேவாரத்தைக் கொண்டு இறைவனே வள்ளலாருக்குத் திருவுளங் காட்டியருளினான்.

தெய்வதரத்தில் தட்சிணாமூர்த்தம் குருபீடமாதல் போன்று, ஞானிகள் தரத்தில் ஞானசம்பந்தரும் குருபீடம். ஞானசம்பந்தரைக் குருவாகக் கொண்டு உயர்ந்தோர் பலர். அவருள் வள்ளலார் சிறந்த ஒருவர், குறிப்பிடத்தக்க ஒருவர். சம்பந்தரையும் வள்ளலாரையும் குருவாகக் கொண்டு வழிபட்டால், அதாவது அவர்கள் வழியில் நடந்தால், நாமும் அவர்களைப் போன்று ஆகலாம். உடனே இப்பிறப்பில் ஆகாவிடினும் அடுத்த அடுத்த பிறப்புகளில் கூடிய விரைவில் ஆகலாம்.

**சம்பந்த குருவே நம!**
**வள்ளலார் கழல் வாழ்த்தல் வாழ்வாவதே!!**

# 14. தேவாரமும் திருக்குறளும்

அர. கமலதியாகராசன், தஞ்சாவூர்.

சைவத் திருமுறைகள் பன்னிரண்டில் முதல் ஏழு திருமுறைகளும் தேவாரம் எனப்படும். இவை சிவபெருமானைப் போற்றிப் பாட பட்டவை ஆகும். தேவாரம், தமிழ் வேதம் எனப் புகழ்ந்துரைக்கப் படுகிறது. இதன் காரணமாகவே விழாக்காலங்களில் வேதத்துடன் தேவாரமும் தெய்வ மணம் கமழ ஓதப்படுகிறது.

**பொருள்**

தேவாரம் என்னும் சொல்லுக்குப் பல பொருள்கள் கூறப் படுகின்றன. தேவாரம் என்பதைத் தே ஆரம் என்றும், தே வாரம் என்றும் இருவகையாகப் பிரித்துப் பொருள் காணலாம்.

தே - கடவுள் (தேவன்)
ஆரம் - மாலை (பாமாலை)
வாரம் - அன்பு

**விளக்கம்**

தேவனிடத்து (சிவபெருமானிடத்து) வாரத்தை விளைவிப்பது, சிவபெருமானிடம் பற்று உருவாக்குவது, சிவபெருமானை ஆரம்போல அலங்கரிப்பது, தெய்வத்தன்மை பொருந்திய மாலை, சிவபெருமானுக்கே உரிமை உடையது, இறைத்தன்மை வாய்ந்த வாரமாயுள்ளது எனத் தேவாரம் பலவாறாகப் போற்றப்படுகிறது.

**ஞானசம்பந்தர்**

இத்தகைய சிறப்புப் பெற்ற தேவாரப் பாடல்களைப் பாடியவர் களுள் ஒருவர் திருஞானசம்பந்தர் ஆவார். தமிழ்நாட்டில் சைவ சமயம் தழைத்தோங்கத் தோன்றிய பெருமகனாரில் திருஞானசம்பந்தர் குறிப்பிடத்தக்கவர். ஏழு திருமுறைகளுள் முதல் மூன்று திருமுறைகள் ஞானசம்பந்தர் அருளியவை ஆகும்.

**பிறப்பு**

திருஞானசம்பந்தர், சோழ நாட்டில் சீர்காழி என்னும் ஊரில் அந்தணர் குலத்தில் தோன்றியவர். இவர்தம் தந்தையார் சிவபாத

இருதயரும், தாயார் பகவதி அம்மையாரும் ஆவர். சம்பந்தர் ஞானப்பால் பருகிய உடனேயே சிவஞானம் வரப்பெற்றமையால் திருஞானசம்பந்தர் என வழங்கப்பட்டார்.

## ஒப்பீடு

தமிழ் வேதமாகிய தேவாரமும் தமிழர்களின் வாழ்க்கை நெறி காட்டியாக விளங்கும் திருக்குறளும் இரு வெவ்வேறு இலக்கியப் படைப்புகளாயினும் சில ஒத்த கருத்துக்களை உள்ளடக்கியவை. இவை ஒப்புநோக்கி இன்புறத் தக்கன. அவற்றுள் குறிப்பிடத்தக்க சிலவற்றை மட்டும் இங்குக் காணலாம்.

### (அ) அகர முதல்

**''அகர முதல வெழுத்தெல்லாம் ஆதி**
**பகவன் முதற்றே யுலகு''** (குறள்-1)

### பொருள்

ஒவ்வொரு மொழியிலும் ஒலி அமைப்பில் முதல் இடம் பெறவது 'அ' என்னும் ஓசையே ஆகும். அதேபோல் சமுதாயம் என்னும் அமைப்பு, ஆதிநாதனாம் கடவுளிடமிருந்து தொடங்குகிறது. அவனைத் தொழுவதே அதாவது அவனை முன்மாதிரியாகப் பற்றிக் கொண்டு வாழ்வதே அறிவுடைமை என்பது இதன் உட்கருத்தாகும்.

நாவினைப் படுக்க வைத்து வாயைத் திறந்தால் வெளிவருவது 'அ' என்னும் ஒலியே ஆகும். வாயையும், நாவையும் வெவ்வேறு விதமாக மாற்றுவதாலேயே பல்வேறு எழுத்துக்களுக்கு உரிய ஒலிகள் உண்டாகின்றன. எனவே 'அ' என்பது அடிப்படை ஒலி எனக் குறிப்பிடுகிறார் பரிமேலழகர்.

''கடவுள், எங்கும் நிறைந்த பரம்பொருளாக உள்ளான்; அதுபோல அனைத்து எழுத்துக்களின் ஒலியிலும் 'அ' ஒலியும் உள்ளது'' எனச் சிறப்பிக்கிறார் நச்சினார்க்கினியர்.

''எழுத்துக்களில் நான் அகரமாக உள்ளேன்'' என்பது கீதையில் கண்ணன் வாக்கு.

### தேவாரப் பதிகப் பாடல்

**''தகர மணியருவித் தடாமல் வரைசிலையா**
**நகர மொருமூன்று நலங்குன்ற வென்றுகந்தான்**
**அகர முதலானை யணியாப்ப னூரானைப்**
**பகரு மனமுடையார் வினைபற் றறுப்பாரே''** (தேவாரம்-88-5)

**பதிக விளக்கம்**

திருப்பரங்குன்றத்தை வணங்கியபின் திருஞானசம்பந்தப் பிள்ளையார், திருஆப்பனூரை அடைந்து வணங்கி 'முற்றுஞ் சடைமுடி' என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார்.

**பொருள்**

தகரம் அணியருவி - மயிர்ச்சாந்தணிந்த அருவி; நகரம் ஒரு மூன்று - முப்புரம்; இதில் 'அகர முதலானை' என்பது 'அகர முதல எழுத்தெல்லாம்' என்னும் குறளின் கருத்தை ஒட்டியது.

**ஒப்பீடு**

திருக்குறளின் 'அகர முதல' என்னும் தொடரும், தேவாரத்தின் 'அகர முதலானை' என்னும் தொடரும் ஒப்புநோக்கத் தக்கன. மேலும் சம்பந்தர் தம் பாடல்களின் 'பகவன்' என்னும் சொல்லைப் பரமேட்டி, பகவன் என்றும் ஆதி என்னும் சொல்லை ஆதி தேவன், ஆதிப்பிரான், ஆதிப் பெருமான், ஆதி முதல், ஆதி முதல்வர், ஆதி மூர்த்தி, ஆதியாய் நின்ற பெம்மான், ஆதியாய அடிகள், ஆதியாய பரமன், ஆதியான் என்றும் வெவ்வேறு பதிகங்களில் பயன்படுத்தியுள்ளார்.

**(ஆ) எண்ணும் எழுத்தும்**

**"எண்ணென்ப வேனை யெழுத்தென்ப இவ்விரண்டும்**
**கண்ணென்ப வாழும் உயிர்க்கு"** (குறள்-392)

**பொருள்**

எண் என்பது கணிதம். 'எண்' என்பதை அறிவியல் மொழி என்பர். மொழியியலிலும் கணிதத்தின் பயன்பாடு காணப்படுகிறது.

எழுத்து என்பது மொழியும், இலக்கியமும் ஆகும். மொழியை ஊடகமாகக் கொண்ட அரசியல், பொருளாதாரம், தத்துவம் முதலியனவும் இதில் அடங்கும்.

**தேவாரப் பதிகப் பாடல்**

**"எண்ணு மொரெழுத்தும் இசையின் கிளவி தேர்வார்**
**கண்ணு முதலாய கடவுட்கிடம தென்பர்**
**மண்ணின்மிசை யாடிமலை யாளர்தொழு தேத்திப்**
**பண்ணினொலி கொண்டு பயில்கின்றபழு வூரே"**

(தேவாரம்-180-4)

**பதிக விளக்கம்**

திருப்பழுவூர் சேர்ந்த மலைநாட்டு அந்தணர் புரிந்த பணிகளைப் பாராட்டித் திருஞானசம்பந்தர் பாடியருளியது இத்திருப்பதிகம்.

**பொருள்**

எண்ணும், எழுத்தும் கண்கள் எனச் சிறப்பிக்கப்படும். மேலும் முழுமுதற் பரம்பொருள் தங்கியிருப்பதற்கு அதுவே ஏற்ற இடமும் ஆகும் என்பது இதன் பொருளாகும்.

**ஒப்பீடு**

திருக்குறளில் உள்ள ''எண்ணென்ப ஏனை எழுத்தென்ப'' என்னும் தொடரும், தேவாரத்தில் உள்ள 'எண்ணும் ஓர் எழுத்தும்'' என்னும் தொடரும் ஒருங்கிணைந்து வருவதறியலாம்.

**(இ) புலன் அடக்கம்**

''உரனென்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து'' (குறள்-24)

**பொருள்**

அங்குசத்தால் யானையை அடக்கும் பாகனைப் போல, ஐம்புல விருப்புகளை நெஞ்சுரத்தோடு கட்டுப்படுத்துவோன், சொர்க்கத்தின் வயல்களில் செழித்து வளரக்கூடிய விதை போன்றவனாவான். வரன் என்பது மேன்மையைக் குறிக்கும். இங்குச் சொர்க்கம் என்னும் பொருள் தரும். வைப்பு என்பது நிலத்தைச் சுட்டும்.

**தேவாரப் பதிகப் பாடல்**

''தொண்டர் அஞ்சு களிறும்மடக்கிச் சுரும்பார்மலர்
இண்டைகட்டி வழிபாடு செய்யும் இடமென்பரால்
வண்டுபாட மயிலாட மான்கன்று துள்ளல்வரிக்
கெண்டைபாயச் சுனைநீல மொட்டலருங் கேதாரமே''
(தேவாரம்-250-1)

**பதிக விளக்கம்**

வடகயிலை வணங்கிப் பாடித் திருக்கேதாரம் தொழுது இசை திருந்தப் பாடி அருளியது இப்பதிகம் ஆகும்.

**பொருள்**

திருக்கேதாரத்தில், ஐம்புலன்களை அடக்கிய அறவோர் வழிபடும் திறத்தினைத் திருஞானசம்பந்தர் மேற்காணும் பாடலில் புகழ்ந்து பாடியுள்ளார். இங்கு 'அஞ்சு களிறும்' என்பது ஐம்புலன்களாகிய ஆண் யானைகளைக் காட்டும்.

**ஒப்பீடு**

திருக்குறளில் உள்ள 'ஓரைந்துங் காப்பான்' என்னும் தொடரும், தேவாரத்தில் உள்ள 'அஞ்சு களிறும்' என்னும் தொடரும் தம்முள் ஒப்புமைச் சிறப்புடையன.

**(ஈ) நோய் தீர்க்கும் மருந்து**

"பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்" (குறள்-6)

**பொருள்**

மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்புலன்கள் வழியாக எழும் தூண்டல்களைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் உடைய கடவுள் அருகதேவன் ஆவான். அவனுடைய மெய்யான ஒழுக்கத்தைத் தழுவிப் புலனடக்கம் பேணுவோர் நீண்டகாலம் நோயின்றி வாழ்வர். இதுவே இக்குறள் காட்டும் கருத்தாகும்.

**தேவாரப் பதிகப் பாடல்**

"அஞ்சொண் புலனும் மவைசெற்ற
மஞ்சன் மயிலா டுதுறையை
நெஞ்சொன் றிநினைந் தெழுவார்மேற்
றுஞ்சும் பிணியா யினதானே" (தேவாரம்-38-4)

**பதிக விளக்கம்**

திருமயிலாடுதுறை அந்தணர்கள், அடியார்கள் இவர்களோடு சென்று மானேந்திய பெருமானை வணங்கியபோது இப்பதிகத்தைத் திருஞானசம்பந்தர் அருளினார்.

**பொருள்**

பொறிவாயில் ஐந்தவித்த வீரன் மேவிய மயிலாடுதுறையை மனமொன்றித் தியானிப்பவர்களின் பிணிகள் அழியும் என்பது சம்பந்தரின் கருத்து.

அஞ்சு ஒண் புலனும்- தத்தமக்கேற்ற பொறிகளைக் கவரும் ஒள்ளிய ஐந்து புலன்களையும்; செற்ற - கெடுத்த; மஞ்சன்-மைந்தன் என்பதன் போலி, (இதற்கு வலிமையுடையவன் என்பது உட்பொருள்). நினைந்து எழுவார் - துயில் விட்டு எழும்போதே தியானித்து இருப்பவர்கள்; பிணி-பிறவியாகிய நோய்.

**ஒப்பீடு**

திருக்குறளில் உள்ள 'பொறிவாயில் ஐந்தவித்தான்' என்னும் தொடரும், தேவாரத்தில் உள்ள 'அஞ்சொண் புலனும்' என்னும் தொடரும் ஒப்புநோக்கி மகிழத்தக்கன.

**(உ) கற்றலின் பயன்**

"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்" (குறள்-2)

### பொருள்

தூய்மையான, முழுமையான, அறிவுக்கு இருப்பிடமாக விளங்கும் இறைவனின் பாதத்தைப் பணியாதவருக்குத் தாம் கற்ற கல்வியால் பயன் ஒன்றுமில்லை என்பது இக்குறளின் கருத்தாகும்.

### தேவாரப் பதிகப் பாடல்

**"முற்றலாமையிள நாகமோடேன முளைக்கொம்பவை பூண்டு**
**வற்றறோடுகல னாப்பலிதேந்தென துள்ளங்கவர் கள்வன்**
**கற்றல்கேட்டலுடை யார்பெரியார்கழல் கையாற்றொழு தேத்தப்**
**பெற்றமூர்ந்தபிர மாபுரமேவிய பெம்மானி வனன்றே"**

(தேவாரம் -1-1)

### பதிக விளக்கம்

திருத்தோணிமலையில் வீற்றிருந்த அம்மையார் ஊட்டிய ஞானப்பாலை உண்டதால் உள்ளம் நிறைந்து வழிந்த உயர்ஞானத் திருமொழியால் திருப்பிரமபுரத்தில் இத்திருப்பதிகத்தை ஞானசம்பந்தர் பாடினார்.

பெரியோர்க்கெல்லாம் அருள் வழங்கப் பெருமான் இடபத்தை ஊர்ந்தே இருக்கிறார் என்பதாம். பெற்றம் - இடபம்.

### பொருள்

முற்றல் ஆமை - வயது முதிர்ந்த ஆமை; ஆமை என்பது இங்கு அதன் ஓட்டினைச் சுட்டும்; இளநாகம் என்பது இளமை கழியாத நாகம்; ஏனம்-பன்றி; ஆதிவராகம். வற்றல் ஓடு-சதை வற்றிய மண்டை ஓடு; கலன்-பிச்சை ஏற்கும் பாத்திரம்; பலி-பிச்சை.

பெரியோருக்கு இலக்கணம், கற்றலும், கேட்டலுமே ஆகும். கற்றல், கேட்டல் உடையார் பெரியார்; ஆதலின் சிந்தித்தல், தெளிதல் முதலியனவும் கொள்ளப்பெறும்.

### ஒப்பீடு

திருக்குறளில் உள்ள 'கற்றதனாலாய பயனென்' என்னும் தொடரின் கருத்தும், 'கற்றல் கேட்டலுடையார் பெரியார்' என்னும் தேவாரத் தொடரின் கருத்தும் ஒப்பிட்டு இன்புறத் தக்கன.

திருக்குறளின் ஆசிரியரான திருவள்ளுவரும் தேவார ஆசிரியர் களில் ஒருவருமான திருஞானசம்பந்தரும் சமகாலத்தைச் சேர்ந்தோர் அல்லர். எனினும் அறிஞர்கள் ஒருசேரச் சிந்திப்பர் (Great Men think Alike) என்னும் பொன்மொழிக்கு இப்பெரியோர்களின் சில கருத்துக்கள் வலிமையூட்டுகின்றன.

# 15. சம்பந்தர் காட்டும் வினைக் கொள்கைகள்

மா. களஞ்சியம்மாள், குற்றாலம்.

தமிழ்நாட்டில் சமண பௌத்த சமயங்கள் செல்வாக்குப் பெற்றிருந்த காலத்தில் பிறந்தவர் ஞானசம்பந்தர். வேதநெறி தழைத்தோங்க, மிகு சைவத்துறை விளங்கத் தோன்றியவர். புறச்சமயங்களால் ஈர்க்கப் பட்டிருந்த மக்களை மீண்டும் வைதீக நெறிக்கு மாற்றுவதற்காக, சிவபெருமானின் பெருமைகளையும், சைவசமயத்தின் மேன்மைகளையும் எடுத்துரைத்து, மாபெரும் சமயப்புரட்சி செய்தார். உயிர்களின் இயல்புகள் குறித்தும், அவற்றின் இன்ப துன்பங்களுக்குக் காரணமான வினைகள் பற்றியும், அவற்றிலிருந்து விடுபடுவதற்குரிய விதிமுறைகள் பற்றியும் தம் பாடல்கள் வாயிலாக மக்கள் உணரும்படி செய்தார். வினைகள் பற்றி அவர் கூறும் கருத்துக்களை ஆய்ந்து கூறுவது இக்கட்டுரையின் நோக்கமாகும். கட்டுரையின் பக்க வரையறை காரணமாக அவருடைய முதல் திருமுறை மட்டும் ஆய்விற்காக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது.

**வினையும் அதன் பயன்களும்**

வினை என்பது செயல் அல்லது கருமம் எனப்படும். சைவ சித்தாந்தத்தின்படி வினையும் அதன் பயன்களும் கருமம் என்று கருதப்படுகிறது. நல்வினை, தீவினை என்று வினைகள் இரண்டு வகையாக அமைந்துள்ளன. உயிர்களுக்கு இயல்பாக அமைந்துள்ள விருப்பு வெறுப்பு என்னும் பண்புகளுக்கு ஏற்ப, அவற்றின் பயனாக வினைகள் வளருகின்றன. ஓர் உயிர் ஒரு பிறப்பில் செய்த புண்ணியம், பாவம் ஆகியவற்றின் அடிப்படையில் அவற்றின் பயனாகிய இன்ப-துன்பங்களை மறு பிறப்பில் அனுபவிக்கின்றது என்பது சைவ சித்தாந்தக் கொள்கை. செய்யும் உழவுத் தொழிலுக்குத் தக்க பயனை அத்தொழில் தருவதில்லை. வயல்தான் தருகிறது. அதுபோல் வினையின் பயனை அவ்வினையே தருவதில்லை. இறைவனே உயிர்கள் வினைப்பயனை நுகரும்படி செய்கிறான் என்கிறார் மெய்கண்டதேவர்.

**“...................................................வள்ளலவன்**
**செய்பவர் செய்திப் பயன் விளைக்கும் செய்யே போல்**
**செய்வன்; செயல் அணையா சென்று”**

(சிவஞான போதம்; 2-ஆம் சூத்திரம், 2 -ஆம் அதிகரணம்)

நல்வினை, தீவினை என்ற வினைகள் இரண்டு வகைப்படும் என்ற கருத்துடையவர், ஞானசம்பந்தர் என்பதனை அவருடைய பாடல்கள் வழி அறிய முடிகிறது.

"வீழும்மிழலை தெருள் செய்தவர் தீவினை தேய்வே" (1.35.9)

என்றும்

"மூவருமாகி இருவருமாகி முதல்வனுமாய் நின்ற மூர்த்தி
பாவங்கள் தீர்தர நல்வினை நல்கி" (1.42.2)

என்றும் கூறுவதிலிருந்து இருவினைகள் பற்றிய அவருடைய கருத்தை உணர முடிகின்றது.

### வினைகளின் மூன்று நிலைகள்

புண்ணியம், பாவம் என்று சொல்லப்படுகின்ற வினைகளை மூன்று நிலைகளாகப் பகுத்து விளக்குகிறது சிவஞானபோதம்.

1. சஞ்சித வினை
2. பிராரத்த வினை
3. ஆகாமிய வினை

ஓர் உயிர் முற்பிறப்பில் செய்த வினை சஞ்சித வினை எனப்படும். இது தொல்வினை என்றும், பழவினை என்றும் கூறப்படுகிறது. இவ்வினையே அவ்வுயிருக்கு உடம்பினைத் தோற்றுவிக்கிறது. அவ்வுடம்பில் பொருந்தி உயிரானது வினைகளின் பயனை நுகர்கின்றது என்பது சைவ சித்தாந்த நெறி.

"உள்ளதே தோற்றஉயிர் அணையும்; அவ்வுடலின்
உள்ளதாம் முற்செய்வினை உள்ளடைவே"

(சிவஞான போதம், 2-ஆம் சூத்திரம், 2-ஆம் அதிகரணம்)

என்கிறார் மெய்கண்ட தேவர். உயிர்கள் தத்தம் கருமங்களுக்கு ஏற்ப அடுத்த பிறப்பில் அனுபவிக்கும் இன்ப துன்பங்கள் பிராரத்த வினை எனப்படும். அவ்வுயிர்களுக்கு ஏற்படும் மறுபிறப்பே ஆகாமிய வினை என்று கூறப்படுகிறது

முற்பிறப்பில் ஓர் உயிர் செய்த வினைகளின் தன்மைகளுக்கு ஏற்ற வகையில் அவற்றின் பயன்களை அவ்வுயிர் நுகரும்படி இறைவன் மறுபிறப்பை உண்டாக்குகிறான் என்பது இதனால் புலனாகின்றது.

### வினைப்பயனும் ஞானசம்பந்தரும்

விதி, ஊழ், நியதி, பால் என்பன ஒரு பொருள் குறித்த சொற்களாகும். "ஊழ்வினை உறுத்து வந்து ஊட்டும்" என்பது இளங்கோவடிகளின் கொள்கையாகும். 'முற்பகல் செயின் பிற்பகல் விளையும்' என்பது

சைவப் பெருமக்களின் நம்பிக்கையாகும். 'தினை விதைத்தவன் தினை அறுப்பான்' 'வினை விதைத்தவன் வினை அறுப்பான்' என்ற கூற்று ஒவ்வொருவரும் தாம் தாம் ஆற்றிய வினைகளுக்குரிய விளைவு களைப் பெறுவர் என்பதனைத் தெளிவுப்படுத்துகிறது. 'தலைவிதி தடுக்கற் பாற்றன்று' என்று கூறப்படுவதற்கெதிராக 'விதியையும் மதியால் வெல்லலாம்' என்ற மறுப்புரையும் வழங்கப்படுகிறது.

''ஊழ் பெருவலி யாவுள'' என்ற ஊழின் வலிமையினை எடுத்துக் காட்டிய வள்ளுவரும் பின்பு ''ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவு இன்றித் தாழாது உஞற்றுபவர்'' (குறள்-620) என்றும் கூறத் தவறவில்லை.

அருணகிரிநாதர் ''தம் தலையில் பிரமன் எழுதிய எழுத்து முருகப்பெருமானின் கால் பட்டு அழிந்தது'' என்று பெருமிதத்துடன் பேசுகின்றார். மேலும் அவர் இறையடியார்களுக்கு வினைகளால் எவ்வித இன்னல்களும் வந்து சேரா என்பதனை,

**''நாளென் செயுங்கொடுங் கூற்றென் செயுங்கும ரேசரிரு**
**தாளுஞ் சிலம்பும் சதங்கையுந் தண்டையுந் சண்முக முந்**
**தோளுங் கடம்பு மெனக்குமுன் னேவந்து தோன்றிடினே''**

(கந்தரலங்காரம், பாடல்-38)

என்ற பாடல்வழிப் புலப்படுத்துகின்றார்.

நாளும் இன்னிசையால் இறைவனின் புகழ் பாடும் ஞானசம்பந்தரும் பரமசிவனைப் பணிந்து அவன் பணி செய்யும் பக்தர்களுக்கு வினை களால் எவ்விதப் பாதிப்பும் நிகழாது என்ற கொள்கையுடையவர் என்பதனை அவருடைய திருமுறைகளின் வழி அறிய முடிகிறது. அதனால் தான், பாண்டிய நாட்டில் சைவ ஒளி பரப்பச் செல்கின்ற பொழுது கோள் களின் நிலையை எடுத்துக்காட்டி, நாவுக்கரசர் தடுக்க முற்பட்டதையும் பொருட்படுத்தாது 'நல்லவர்க்கில்லை நாளும் கோளும்' என்னும் பொருள்பட ஒரு பதிகத்தைப் பாடினார். இப்பதிகத்தை ஓதுபவர் களுக்குக் கிரக நிலை ஒன்றும் செய்யாது என்று சைவப் பெரியோர்கள் நம்புகின்றனர்.

**''வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்**
**மிக நல்ல வீணை தடவி**
**மாசறு திங்கள் கங்கை முடிமேலணிந்தென்**
**உளமே புகுந்த வதனால்**
**ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி**
**சனிபாம் பிரண்டுமுடனே**
**ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல**
**அடியார் அவர்க்கு மிகவே''**

என்று மாதொரு பாகன் தம் மனத்திலே தங்கியிருப்பதனால் மற்றைய கோள்களால் தமக்குத் துன்பங்கள் அணுகாது என்றுரைக்கின்றார். மணிவாசகரும் இக்கருத்தை விளக்கும் வகையில்,

**"பக்தி நெறி அறிவித்து பழவினைகள் பாறும் வண்ணம்**
**சித்தமலம் அறிவித்துச் சிவமாக்கி எனைஆண்ட"**

(திருவாசகம், அச்சோபதிகம், செய்யுள்-1)

என்று பாடியுள்ளார்.

**"தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள்**
**முன்னை வினையும் முடிச்சை யவிழ்ப்பார்கள்**
**பின்னை வினையைப் பிடித்துப் பிசைவார்கள்**
**சென்னியில் வைத்த சிவனரு ளாலே"**

(திருமந்திரம் 2611-ஆம் பாடல்)

என்ற திருமூலரின் கருத்தும் இங்கு ஒப்புநோக்கத்தக்கது. அடியடைந்தார் பற்று அறுக்கும் பரமனின் அன்பர்களைப் பழவினைகளால் ஒன்றும் செய்ய முடியாது என்பதே ஞானசம்பந்தரின் கோட்பாடு என்பதனை இதன் மூலம் அறிய முடிகிறது.

## வினைகளிலிருந்து விடுபடுதற்குரிய வழிகள்

கோனற் பிறையான் மீது குறைவில்லாத அன்பு கொண்டு இறைப்பணி செய்தலே வினைகளின் கோரப்பிடியிலிருந்து விடுபடுவதற்குரிய வழியாகும் என்பதனை சம்பந்தர் தம் பாடல்கள் வழி தெளிவு படுத்துகின்றார்.

## இறைப்பணி செய்யும் விதம்

இறைப்பணி என்பது மனம், வாக்கு, காயம் என்னும் மூன்று நிலைகளிலும் ஒன்றிச் செய்யப்பட வேண்டி செயலாகும். மனதால் அமையும் கருமம் மானதம் என்றும் வாக்கால் அமையும் கருமம் வாசிகம் என்றும் காயத்தால் ஆற்றும் கருமம் காமியம் என்றும் சித்தாந்தம் குறிப்பிடுகிறது. மனம் சிவனின் அருள்தன்மையினை நினைக்க வேண்டும் வாக்கு அவன் புகழை வழுத்த வேண்டும். உடல் அவனுக்குத் திருத்தொண்டு செய்ய வேண்டும். இம்மூன்று நிலைகளிலும் இறைவனை வழிபடும் முறையினை சம்பந்தர் சுட்டிக் காட்டுகின்றார்.

**"முந்தி நின்ற வினைகள் வைபோகச் சிந்தி"** (1.27.1)

என்று மனதால் இறைவனை, இடையறாது சிந்தித்தல் வேண்டும் என்கிறார்.

**"நாதாஎனவும் நக்காஎனவும் நம்பாஎன நின்று**
**பாதந்தொழுவார் பாவம் தீர்ப்பார் பழன நகராரே"** (1.67.1)

**"ஈசா என்ன நில்லா இடர்களே"** (1.25.10)

என்று எம்பெருமானின் நாமங்களை நவில வேண்டும் என்கின்றார்.

"கடவுளை மெய்யால் வணக்க மேவா வினைகளே" (1.25.7)

என்பதன் வழி கடவுளை வணங்கும் முறையை எடுத்தியம்புகின்றார்.

## கிரியை நெறியில் இறைத் தொண்டு

வாழ்வின் நெறிமுறைகளுக்கீடாக உயர்நிலையை அடைதல் சாத்திய மாகும் என்று சித்தாந்தம் போதிக்கின்றது. இவ்வகையில் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்கள் கூறப்படுகின்றன. கிரியா பாதத்தில் நின்று இறைப்பணியாற்றியவர் சம்பந்தர்.

கிரியை முறையானது உள்ளன்போடு இறைவனை நினைத்து, வேதாகம விதிப்படி சிவனுக்குத் திருமஞ்சனஞ் செய்து, நல்ல மலர்களால் அர்ச்சித்து பூசனைகள் ஆற்றி, அன்னமளித்து, அன்புடன் தொகுது துதித்தலாகும். இம்முறை அகச்செயல், புறச்செயல் என்ற இரண்டு நிலை களிலும் சிவனின் அருவுருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடாகும். தாம் மேற்கொண்ட கிரியா நெறியில் இறைத்தொண்டு ஆற்றுபவர்களுக்கு வினைப்பயன்கள் வந்து அணுகாது என்கின்றார்.

"போதும் சாந்தும் புகையுங் கொடுத்தவர்க்
கேத மெய்துத வில்லையே" (1.57.3)

"பொன்னடியே பரவி நாளும் பூவொடுநீர் சுமக்கும்
நின்னடியா ரிடர் களையாய்" (1.53.3)

என்ற பாடலடிகளின் வழி கிரியை நெறி நின்று இறைவனை வழிபடும் வகைகளை வகுத்துக் காட்டுகின்றார்.

## திருவடி நினைத்தல்

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீத்தார்
இறைவனடி சேரா தார்" (குறள்-10)

என்கின்றார் வள்ளுவர்.

"ஒருமையுடன் நினது திருமலரடி நினைக்கின்ற
உத்தமர் தம்உறவு வேண்டும்"

என்கிறார் இராமலிங்க அடிகள்.

வினைகளின் தொடர்பால் உயிர்களுக்குப் பிறவிகள் தொடர்கின்றன. அதற்குக் காரணமாக விளங்குவது உலகப் பற்றே. அப்பற்றினை ஒழிப்பதற்குப் பற்றற்றவனாகிய பரம்பொருளின் திருவடிமீது பற்றுக் கொள்ளுதல் வேண்டும் என்பதனையே இப்பெருந்தகையோரின் உள்ளக் கருத்தாகும். சம்பந்தரும் வினைகளின் சம்பந்தத்திலிருந்து விடுபடுவதற்குச் சங்கரனின் திருவடி நினைத்தல் வேண்டும் என்கிறார்.

''கறையார் கண்டத்தீசன் கழல்களை
நிறையால் வணங்க நில்லா வினைகளே'' (1.25.6)

என்று அறிவுறுத்துக்கின்றார்.

''இவையார் திரிசூலப் படையான் கழல்நாளும்
நிலையா நினைவார் மேல்நில்லா வினைதானே'' (1.84.8)

என்று கறைக் கண்டத்தான் கழல்கள் உயிர்களைச் சேர்ந்தே பிராரத்த வினைகளைக் களையும் தன்மையினைக் குறிப்பிடுகின்றார்.

**திருத்தல வழிபாடு**

மாலும் அயனும் அறிய முடியாத அண்டர் நாயகன், தன் மீது அன்புள்ள அடியவர்கள் கண்டு வழிபடுமாறு நிலவுலகில் எளியனாய் வந்து ஆங்காங்கே எழுந்தருளியிருக்கின்றான். அத்தலங்களுக்குச் சென்று கண்ணாரக் கண்டு வழிபட்டால் கடிய வினைகள் அகன்றோடும் என்கிறார் சீர்காழிக்கோன்.

''அண்ணாமலை தொழுவார் வினைவழுவா வண்ண மறுமே'' (1.10.1)

ஆலந்துறை தொழுவார் தமை யமையா வினை தானே''

என்று திருத்தல வழிபாட்டின் மூலம் ஆகாமிய வினை அகலும் என்று உணர்த்துகின்றார்.

**இறைவனை வழிபடாதவர்களுக்கு வரும் கேடு**

நாயினும் கடையனாய்க் கிடந்த அடியார்க்கும் தாயிற் சிறந்தவனாக, ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி உவப்பில்லா ஆனந்தத்தைத் தருபவன் சிவன் என்பதனை எடுத்துக்காட்டும் சம்பந்தர், அவனை வழிபடாதவர்கள் அடையும் அவலங்களையும் சுட்டிக்காட்டுகின்றார்.

''கருவார் கண்டத் தீசன் கழல்களை
மருவாதவர் மேல்மன்னும் பாவமே'' (1:25:1)

''ஏரார் புரிபுன்சடையெம் ஈசனைச்
சேராதவர்மேல் சேரும் வினைகளே'' (1.25.2)

என்ற பாடலடிகள் சிவனை எண்ணாதவர்கள் எய்தும் இடர்ப்பாடுகளைக் காட்டுவனவாகும்.

உயிர்கள் செய்யும் கருமங்களுக்கேற்ப அவற்றிற்கு மீண்டும் மீண்டும் பிறப்பு இறப்பு நிகழ்கின்றன. இறைவனிடம் அகலாத அன்பு கொண்டு இறைப்பணி ஆற்றும் அடியவர்களுக்கு வினையினால் எவ்விதக் கேடுகளும் வந்து சேராது என்பதனை ஞானசம்பந்தர் தம் தேவாரப் பாடல்கள் வழி எடுத்துக் காட்டுகின்றார்.

# 16. சம்பந்தர் பக்தியின் பெருமை

பா. கீதா, புதுவை.

சிவமாம் செம்பொருளை வழிபடும் சைவ சமயம் 'உலகிலேயே பழமையும் பெருமையும் மிக்க சமயம் ஆகும்'. இன்னாரால் இந்தக் காலத்தில் நிறுவப்பட்டது எனப் பிற சமயங்களைச் சொல்லுதல் போல சைவத்தைச் சொல்ல முடியாது. மனித வாழ்வைத் தூய்மைப்படுத்து வதற்கும் பண்படுத்துவதற்கும் பேணிக்காப்பதற்கும் என்று தோன்றுகின்ற இயக்கங்கள் பல. சமுதாயத்தில் நிலவுகின்ற எந்த ஒரு இயக்கமும் மனிதனைப் பண்படுத்தப் பயன்பட வேண்டும். அவ்வாறு மனித வாழ்வைத் தூய்மைப்படுத்துவதற்கும், இனிமைப்படுத்துவதற்கும் தோன்றிய இயக்கங்களில் ஒன்றே பக்தி இயக்கம். இவ்வாறு "திருஞானசம்பந்தரின் பக்திநெறி" என்ற தலைப்பை எடுத்துக் கொண்டு சில கருத்துக்களைத் தெளிவாக விளக்க முற்படுகின்றது இக்கட்டுரை எனலாம். திருஞான சம்பந்தரின் மூன்று திருமுறைகளில் பக்திநெறி எவ்வாறு நிலவிற்று என்பதை இக்கட்டுரை ஆய்கிறது.

**திருஞானசம்பந்தரின் வரலாறு**

திருஞானசம்பந்தர் சீகாழியில் அந்தணர் குலத்தில் பிறந்தவர். இவருடைய தந்தையார் சிவபாத விருதயரென்றும், தாயார் பகவதியாரென்றும் கூறுவர். இவர் கவுணிய கோத்திரத்தைச் சேர்ந்தவர். திருஞானசம்பந்தர் பெற்றோர் சிவன்பால் மிக்க அன்புடையவர். ஞானசம்பந்தர் பிறந்து வளரும்போதே சிவன்பால் பேரன்புண்டாக்கத் தக்க சூழ்நிலையை அவர் தாயார் உண்டு பண்ணினார். ஞானசம்பந்தர் தந்தைபால் பிரியாத அன்பு கொண்டவர். ஒருநாள் தந்தையார் ஞானசம்பந்தரைக் குளத்திற்கு அழைத்துச் சென்றார். பிறகு நீராடச் சென்றுவிட்டார். தந்தையைக் காணாத பிள்ளை அழுதார். அவ்வழுகையைக் கண்ட சிவபெருமான் உமையம்மையாகிய தம்முடைய தேவியாரை நோக்கி நின்மார்பிற் பாலைப் பொன்கிண்ணத்தில் கறந்து குளக்கரையில் அழுத குழந்தைக்கு ஊட்டுக எனப் பணித்தருளினார். தேவியாரும் அவ்வண்ணமே செய்து விட்டு வந்தார். சிறிது போதில் நீராடி முடித்த சிவபாதவிருதயர் பிள்ளையாரிடம் வந்தார். அவர் திருவாயில் பால் வடிந்திருந்தது. அது கண்டதும், அவர் உனக்கு இப்பால் தந்தவர் யார்? என வினவினார். பிள்ளையார் வாளா இருக்க, தந்தையார் சினங்கொண்டு சிறுகோலொன்றைக் கையில் எடுத்து ஓங்கினார். இதன் பிறகு சம்பந்தர் தமது வலக்கையால்

காட்டி ''தோடுடைய செவியன்'' எனத் தொடங்கும் பாட்டைப் பாடலானார். இவ்வாறு அவர் பிறப்பும் அவர் குழந்தை வயதிலேயே பாடல் பாடிய முறையும் அமைகின்றது எனலாம்.

### பக்தியின் விளக்கம்

சிவன்மேல் கொண்ட அன்பைத்தான் பக்தி என்கிறோம். பக்தி என்பது புலன்களை அடக்கி இறைவன் மேல் செலுத்துவதினால் அந்த அன்பு மனிதனைத் தூய்மைப்படுத்த உதவும். அறவழியில் செயல்பட ஒவ்வொரு மனிதனையும் அழைப்பது இந்தப் பக்தி ஒன்றுதான் என்று சொல்லலாம். இவ்வகையில் ஞானசம்பந்தர் பாணியில் பக்தி என்பது சரியை, கிரியை, யோகம், ஞானம் எனலாம். இதில் சரியை நிலையைக் கடைப்பிடித்தவர் இவர். தலங்கள் தோறும் சென்று இறைவனைப் பாமாலைகளால் பாடித் துதித்துப் பரவினார்.

### திருநீற்றுப் பதிகம்

மதுரையில் சம்பந்தரின் வருகையுணர்ந்த அளவிலேயும், நேரில் கண்ட அளவிலேயும் பாண்டிய அரசனின் துன்பம் சிறிது தணிந்தது. அரசன் உடலின் இடப்பாக வெப்பு நோயைத் தீர்க்கச் சமணர்கள் முயன்றனர். மயிற்பீலி கொண்டு தடவினர். நோய் மேலும் அதிகரித்தது. திருமுறைத் திருப்பதிகங்களில் மிகவும் புகழ் பெற்றதும், மிகவும் சிறப்புற்றது மாகும் திருநீற்றுப் பதிகம். இத்திருப்பதிகத்தைத் திருஞான சம்பந்தர் பாண்டிய வேந்தனுடைய வெப்பு நோயைத் தீர்க்கும் பொருட்டு மதுரையம்பதியிலே பாடியருளினார், திருநீற்றுப் பதிகம்.

**''மந்திரம் ஆவது நீறு வானவர் மேலது நீறு**
**தந்திரம் ஆவது நீறு சமயத்தில் உள்ளது நீறு**
**சுந்தரம் ஆவது நீறு துதிக்கப்படுவது நீறு**
**செந்துவர் வாய்மைபங்கன் திருவாலவாயான் திருநீறே''**

என்று தொடங்கும் திருநீற்றுப் பதிகம் பாடியருளினார். திருநீறே மருந்தும் மந்திரமும் ஆகி எல்லாப் பிணிகளையும் போக்கவல்லது என்னும் கருத்தோடு அரசன் மேனியில் திருநீறு கொண்டு பூசினார். அந்நிலையில் வலப் பாகத்தின் வெம்மை நீங்கியது. பின் அரசன் வேண்ட திருநீறு பூசி இடப்பாக வெம்மையும் தீர்த்தருளினார். எனவே சிவன்மேல் கொண்ட பக்தியே இதற்கு முதன்மையான மருந்தாக அமைகின்றது.

### பாம்பு தீண்டிய பூம்பாவையை உயிர்ப்பித்தல்

பூம்பாவை நாள்தோறும் தன் வீட்டின் பின்புறத்து உள்ள பூந் தோட்டத்தில் மலர்கொய்து மாலை கட்டிச் சிவபெருமானுடைய ஆலயத்துக்கு அனுப்பும் வழக்கம் உடையவள். தன்னை அலங்கரித்துக் கொள்ளவும் பூப்பறிப்பது வழக்கம். அப்பொழுது பாம்பு அப்பெண்ணைத் தீண்டியது.

வலியால் மயங்கிய பூம்பாவை என்ற பெண் இறந்த பிறகு தந்தையாகிய சிவநேசர் அவளுடைய எலும்புகளைக் குடத்தில் இட்டு நாள்தோறும் உபசரித்துக் கன்னிமாடத்தில் வைத்திருக்கும் செய்தியை அடியார்கள் கூறத் திருஞானசம்பந்தர் கேட்டார். மயிலைக்கு வந்தபோது அக்குடத்தைக் கோவிலின் மதிற்புறத்தே வாயிலுக்கு அருகில் கொண்டு வருக எனப் பணித்தார். திருஞானசம்பந்தர் அந்தக் குடத்தினைக் கண்டு, சிவபெருமானை நினைத்து வழிபட்டார். "இந்த மண்ணுலகத்தில் பிறந்தவர் அடையக் கூடிய பயன், சிவனடியார்களுக்கு அமுது செய்வித்தல், அவர்களுடைய விழாக் கோலத்தைக் கண்ணினால் காணுதல் ஆகிய இவை உண்மை எனில் பூம்பாவையே உன் வடிவத்தோடு உலகர் கண்முன் வருவாயாக" என உரைத்தார்.

**"மண்ணி னிற்பிறந் தார்பெறும் பயன்மதி சூடும்**
**அண்ண லாரடி யார்தமை யமுதுசெய் வித்தல்**
**கண்ணி னாலவர் நல்விழாப் பொலிவு கண்டார்தல்**
**உண்மை யாமெனில் உலகர்முன் வருகென உரைப்பார்"**

"காணாதே போதியோ பூம்பாவாய்" என்ற பதிகம் பாடினார். குடத்தினுள் இருந்த எலும்புகள் ஒன்றுகூடி வளரத் தொடங்கியது. அந்தப் பதிகம் பாடி முடிந்தவுடன் குடம் உடைந்தது. பூம்பாவை பன்னிரெண்டு வயதுடைய பெண்ணாய் எழுந்து நின்றாள். எழுந்து நின்ற பெண்ணைக் கண்டவர்கள் யாவரும் வியப்பு அடைந்தனர். எனவே சிவனின் அருளால் திருஞானசம்பந்தர் பாட பக்தியின் மேம்பாட்டினால் இறந்த பெண் உயிர் பெற்றாள் எனலாம். பக்தியால் எதையும் மீட்டுத் தரமுடியும். ஆனால் பக்திக்குத் தேவை பொறுமை எனலாம்.

### திருஞானசம்பந்தர் விடம் தீர்த்தல்

திருமருகல் என்ற ஊரில் சிவபெருமானை நினைத்து அழுத பெண்ணின் அழுகை ஒலியைக் கேட்டார் திருஞானசம்பந்தர். திருக்கோயிலுக்குச் செல்லுகின்ற வழியில் மடத்தின் அருகே சென்று வினவினார், அந்த வணிகப் பெண் தன் வரலாற்றையும் வணிகன் பாம்பு கடித்து மயங்கிக் கிடத்தலையும் கூறினாள். மந்திரம் ஒன்றும் பலிக்காததால் தன் வாழ்வும் முடிந்தது என்று புலம்பினாள், அப்பொழுது சம்பந்தர் பெண்ணே நீ அஞ்சற்க, இத்துயரச் செய்தியைக் கேட்டு நெஞ்சங் கலங்கிய காழிப்பிள்ளையார், "அஞ்சற்க உனக்கு எல்லாம் நன்மை யாகவே முடியும்" என்று சொல்லி திருமருகலில் கோயில் கொண்டு எழுந் தருளியிருக்கும் பெருமானைப் பணிந்து சடையாய் எனுமால் என்ற முதற் குறிப்புடைய திருப்பதிகம் பாடி இறைவனை வழிபடுகிறார்.

**"வழவாள் பெருமான் கழல்வாழ் கவெனா**
**எழவாள் நினைவாள் இரவும் பகலும்**
**மழவா ளுடையாய் மருகற் பெருமான்**
**தொழவாள் இவளைத் துயராக் கினையே"**

இந்த நிலையில் அவன் உயிர் பெற்று எழுந்தான். சம்பந்தர் திருமருகற் பெருமானை நோக்கி, ''சடையானே விடையேறுஞ் சங்கரனே'', என்றதும் பிறகு அடியார்கள் சிவனை வாழ்த்தி ஆரவாரம் செய்தனர். வணிகனும் அப்பெண்ணும் திருஞானசம்பந்தரை வணங்கி நின்றனர். இறந்துப்போன உயிரை மீட்ட இவ்வரலாறும் பக்தியின் வல்லமையைப் புலப்படுத்தும்.

**அடைப்பட்ட கதவு திறத்தல்**

திருமறைக்காட்டில் நீண்டகாலம் கதவுகள் அடைக்கப்பட்டிருந்தன. இதனைத் திறக்க சிவன்மேல் பக்தி கொண்டு இதற்குக் காரணம் என்ன என்பதனைப் பக்தியால் ஆராய்ந்தனர். நாயனார் இருவரும் இறைவன் கோவிலுக்குச் சென்றனர். வேதங்களால் மூடப்பட்ட நேர்க்கதவுகள் திறக்கப்படாமல் பல ஆண்டுகள் இருந்தன. அவ்வூர் மக்கள் வேறு வாயில் வைத்து உள்சென்று பூசித்து வந்தனர். இதனை அறிந்த திருஞான சம்பந்தர் அப்பரை நோக்கிக் கதவம் திறக்கும்படி திருப்பதிகம் பாடுக என்றார். 'பண்ணினேர் மொழியாள்' என்னும் திருப்பதிகம் பாடினார். பதினோராவது பாடலை மனம் உருகிப் பாடினார், உடனே கதவம் திறந்தது. பிறகு இறைவனை வழிபட்டனர்.

**''திறக்கப் பாடிய என்னினும் செந்தமிழ்**
**உறைப்புப் பாடி அடைப்பித்தார் உள்நின்றார்**
**மறைக்க வல்லரோ தம்மை திருவாய்மூர்ப்**
**பிறைக்கொள் செஞ்சடை யாரிவர் பித்தரே''**

எனவே திருநாவுக்கரசரும், திருஞானசம்பந்தரும் சிவனின் பற்றுதலால் பதிகம் பாடும்போது கதவுகள் திறக்கப்பட்டன என்றால் ஞானசம்பந்தர் அருள் திறத்தை மக்கள் புகழ்ந்து பாடினர்.

**ஆண்பனை பெண்பனையாதல்**

திருஞானசம்பந்தர் பல தலங்களை வணங்கி தொண்டை நாட்டில் திருவோத்தூரை அடைந்தார். அங்குச் சிவனடியார் ஒருவர் அடியார் களுக்கென வளர்த்த பனை மரங்கள் யாவும் ஆண்பனைகளாகிக் காய்த்தில, சமணர்கள் இதனைக் கண்டு ஏளனம் பேசினர். இதனை அவ்வடியவர் பிள்ளையாரிடம் முறையிட்டார். அவ்விறைவன் மீது பதிகம் பாடிய அளவிலே அங்கிருந்த ஆண்பனைகள் பெண்பனை களாக மாறின. ஞானசம்பந்தர் திருக்கடைக்காப்பில்,

**''குரும்பை யாண்பனை யீன்குலை யோத்தூர்**
**அரும்பு கொன்றை அடிகளைப்**
**பெரும்புகலி யுள்ஞானசம்பந் தன்சொல்**
**விரும்பு வார்வினை வீடே''**

என முடித்த அளவில் அங்கிருந்த ஆண்பனைகளெல்லாம் பெண்பனை களாக மாறிக் குரும்பை யீன்று காய்க்கின்றன. இத்திருவருள் நிகழ்ச்சியை

நேரில் கண்ட சமணர்கள் பலரும் தமது சமயத்தை வெறுத்துச் சிவநெறியைத் தழுவிப் பிள்ளையாரை வணங்கினார்கள் என்பது வரலாறு. பக்தியால் ஏளனம் செய்யும் மக்களையும் தன் வசப்படுத்த முடியும்.

## அனல்-புனல் வாதம் சமணர்களுடன்

பக்தி இயக்கத்தைச் சமுதாயத்தில் பரப்பி வளர்க்கும் பெரும் பணியைச் செய்த சான்றோர்களுள் சமயக்குரவர் நால்வரே முதன்மை பெற்றவர்கள். இவர்கள் பிறசமயப் பெரியார்களுடன் போட்டியிட்டும், வாது புரிந்தும் பக்தியியக்கத்தைப் பரப்பி வெற்றி கண்டவர்களாவர்.

திருஞானசம்பந்த சுவாமிகள் சமணர்களோடு நிகழ்த்திய அனல்-புனல் வாதம் புகழ்பெற்றவை. புனல் வாதத்தில், பக்தி உள்ளம், பரந்த உள்ளம், உயர்ந்த உள்ளம், அருளுள்ளம் என்பதைப் புலப்படுத்தும் வகையிலும், பக்தர்கள் மண்ணுயிர் நம்பி வாழும் மாண்புடைய வாழ்வினர் என்பதனை விளக்கும்.

**"வாழ்க அந்தணர் வானவர் ஆண்இனம்**
**வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக**
**ஆழ்க தீயது எல்லாம் அரன் நாமமே**
**சூழ்க வையக மும்துயர் தீர்கவே"**

பரமனிடத்தே பக்தி செய்து வாழ்ந்தால் இவ்வுலகில் நல்லபடியாக இன்புற்று வாழலாம். நாள்தோறும் எண்ணில்லாத நல்ல பேறுகளுக்கு யாதொரு குறையும் இல்லை எனத் தெளிவுபடுத்துகிறார். எவ்வாறு பக்தி செய்ய வேண்டும் என்பதனை,

**"காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி**
**ஓது வார்தமை நன்னெறிக்கு உய்ப்பது"**

என மூன்றாவது திருமுறையில் கூறுகின்றார். மனம் நெகிழ்ந்து கண்களில் நீர் நிறைந்து, பக்தியுடன் இறைவனைத் தியானம் செய்தால் சந்தோஷம் அடையலாம்.

திருஞானசம்பந்தரின் பக்தி பாண்டியனின் வெப்பு நோயைத் தீர்த்து வைத்தது. பிறகு சமணர்களுடன் வாதம் புரிந்த இவர் வெற்றியும் கண்டார். உலகத்தில் நடக்க முடியாத நிகழ்ச்சிகளை ஞானசம்பந்தர் தம்முடைய பதிகங்களால் பூம்பாவைக்கு உயிர்ப்புத் தந்தது, இறந்த வணிகனின் விடத்தை நீக்கியது. இப்படியே பக்திமூலம் அடுக்கிக் கொண்டே செல்லலாம்.

ஞானசம்பந்தர் பாடிய ஒவ்வொரு பதிகமும் பக்தி என்ற பெயரில் மனிதர்களின் துன்பங்களை அவ்வப்போது தீர்த்து வைத்தன. சமணர் களைப் பல்வேறு நிலைகளில் தோல்வி அடைய வைத்த சிறப்பும் இவருக்கு உண்டு எனலாம்.

# 17. புரட்சியாளர் பார்வையில் சம்பந்தர்

கென்னடி, மாமல்லபுரம்.
ஆ. வேலுசுவாமி சுதந்திரன், தஞ்சாவூர்.

ஒருவருடைய கருத்துக்கள் மக்களிடம் சென்று அதனால் ஒரு புதுமை ஏற்படுமேயானால் அவரை புரட்சியாளர் என்று சமுதாயம் ஏற்றுக் கொள்ளும். உலக வரலாற்றில் புரட்சியாளர்கள் பலருண்டு. தத்துவத்திலே புதுமைத் தத்துவங்களை உலகுக்குத் தந்தவர்கள் அரிஸ்டாட்டில், பிளாட்டோ மற்றும் சாக்கிரட்டீஸ். பிரஞ்சுப் புரட்சிக்கு அடிகோலியவர்கள் வால்டேர், ரூஸோ மற்றும் மான்டெஸ்கியூ. ஜெர்மனியை இணைத்து புரட்சியைப் படைத்தவர் ஒட்டோவான் பிஸ்மார்க். ரஷ்யப் புரட்சிக்கு அடிகோலியவர் லெனின். இனப் பிரச்சனையைத் தீர்த்து புரட்சியை ஏற்படுத்தியவர் நெல்சன் மண்டேலா. அடிமைத்தனம் ஒழிய புரட்சி செய்தவர் ஆபிரகாம் லிங்கன். இந்திய சமய வரலாற்றில் புரட்சியாளர்கள் பலருண்டு. இராஜாராம் மோகன்ராய், சுவாமி தயானந்த சரசுவதி, இராமகிருஷ்ண பரமாத்மா, சுவாமி விவேகானந்தர், அன்னிபெசன்ட் போன்றோர்கள் இந்து சமயத்தில் புரட்சியை ஏற்படுத்தியவர்கள்.

மேற்குறிப்பிட்ட புரட்சிகளுக்கும் தமிழகத்தில் நடந்த புரட்சிகளுக்கும் வேறுபாடுண்டு. தமிழகத்தில் சமயப் புரட்சிக்கு அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் போன்றோர்கள் காரணமாவார்கள். சம்பந்தர் பெருமான் பாடல்களில் இறை வடிவங்கள் மூலமாக சமயப் புரட்சிக் கருத்துக்களை கண்ணுறலாம். சம்பந்தர் பாடல்களில் இடம்பெறும் இறை வடிவங்கள், சோழர் காலத்தில் கல் திருமேனிகளாகவும் செப்புத் திருமேனிகளாகவும் மாற்றம் பெற்றன. சமயப் புரட்சியோடு கலைப்புரட்சியும் செய்த மூவரில் சம்பந்தரின் கலைப்புரட்சி மட்டுமே இக்கட்டுரையில் இடம்பெறுகிறது. சம்பந்தரைக் கலைப்புரட்சியாளர் என்ற கண்ணோட்டத்தில் பார்ப்பதற்கு அவருடைய பாடல்களே துணை நிற்கின்றன.

**அர்த்தநாரீசுவரமூர்த்தி**

சங்க இலக்கியங்களில், புறநானூறு, ஐங்குறுநூறு, பரிபாடல், திருமுருகாற்றுப்படை, கலித்தொகை போன்ற நூல்களில் இம்மூர்த்தி குறித்த செய்திகளுண்டு. சிலப்பதிகாரத்தில் ''உமையவளொரு திறனாக வோங்கிய இமையவன்'' என்ற சிலப்பதிகார வரிகள் இம்மூர்த்தியைக் குறிப்பிடுகிறது.

மேற்குறிப்பிட்ட பாடல்களின் தாக்கத்தால் பல்லவர்கள் காலத்தில் கற்சிற்பங்கள் சில தோன்றின. தருமராஜரதத்தில் முதல் தளத்தில் உமையொருபாகன் சிற்பம் இடம்பெறுகிறது.

சம்பந்தரின் பாடல்களில் எண்ணிக்கையில் அதிகமாக அர்த்தநாரீசுவரர் குறிப்புகள் இடம்பெறுகிறது. 'மங்கையோர் பங்குடையான்', 'பந்தணவும் விரலாளொருபாக மமர்ந்தருளி', 'மலைமகள் கூறுடையான்', 'ஏலமலர்க் குழலாளொடு பாகமேர்ந்தருளி', 'பணைத்தோளியோர் பாகமாக', 'நன்னுதன் மங்கை தன்மேனிப் பாகமுகந்தவர்', 'தையல் பங்கன்', 'மாறிலா மாதொரு பங்கன்', 'தனமணி தையறன் பாகன்', 'உமையொரு கூறனார்', 'பண்ணினேர் மொழியாளையோர் பாகனார்', 'மாதொர் கூறனை', 'மலைமலிமங்கை பாகம் மகிழ்ந்தான்', 'முலைபங்கையுந்தானும்', 'அங்கோல் வளையாளை யொர் பாகமமர்ந்து', பணைமுலையுமையொரு பங்கரென்னார்', 'பெருநல முலையினை செய்த பெருமான்', 'மலைமகள் முலையினை மருவிய வடிவினர்', 'ஏரார்ந்த மேகலையாள் பாகம் கொண்டீர்', 'குயிலாருமென் மொழி யாளொரு கூறாகி', 'ஒருத்தி யுமையோடு மொரு பாகமதுவாய்', 'பண்ணமருமென் மொழியினாளை யணைவிப்பான்', 'பெண்புனை கூறடையானை', 'தேவியோர் பாகமேனி', 'மருவமர் குழலுமைபங்கர்', 'மைப்புரை கண்ணுமை பங்கன்', 'மங்கை பங்காளர், 'வேய்த் தோளி பாகமமர்', 'கருவார் குழலி மாதோர் பாகமாய்', 'வாரார் கொங்கை பாகமாய்', 'மழுவாளேந்தி மாதோர் பாகமாய்', 'துடியிடியாளையொர் பாகமாகத் துதைந்தார்', 'பாகம் பெண் ஆக்கினான்', 'தோடுடையான் குழையுடையான்', 'மையினார்மலர் நெடுங்கண் மலைமகளோர் பாகமாம்', 'மொழித்தேவி பாகமாயினான்', முத்தினை முறுவல் செய்தாளொர் பாகமாய்', 'பந்தன விரலாள் பாகமாக', 'மலைபுரிந்த மன்னவன் நன்மகளையோர்பான் மகிழ்ந்தாய்', 'மானின் விழி மலைமகளோடொரு பாகம் பிரியார்', 'உமைநங்கையைப் பங்கமாவுள் கினனோர்', 'ஏவிளங்கும் நுதலாளையும் பாகமுரித்தனவர்', 'வேய்புரைதோளி, தங்குமா திருவுருயுடையானை', 'மடவரலாளையொர் பாகம் வைத்து', 'முரன்முறுவல் வெண்ணகையுடையாளொடு பாகம்', 'அரிவையோடொரு பகலமர்ந்த பிரான்', 'மங்கையோடொரு பகலமர்ந்த பிரான்', 'மங்கைமுலை மாதொரு பாகமாயவன்', 'நீலநெடுங்கணிபாக மாயவன்', 'மடந்தையொர் பாகமாயவன்', 'வண்டமர் பூங்குழன் மங்கையொர் பாகமாயவன்', 'சந்தவார் குழலாளுமை தன்னொரு கூறுடை', 'தேனை வென்ற மொழியாளொடு பாகம்', 'பூணார் முலையாள் பங்கத்தானை', 'மங்கை கூறமர் மெய்யான்', 'மார்பிற் பெண்ணொரு பாகமமர்ந்தார்', 'பெண்டான் பாகமாகப் பிறைச்சென்னி', 'மயிலார் சாயன் மாதோர் பாகமர்', 'கூடும் மலையாளொடு பாகமமர்ந்தார்', 'சுணங்கும் முகத்தம் முலையாளொரு பாகம்', 'இறை நின்றிலங்கு

வளையாளினை யாளொரு பாலுடையார்', 'பண்ணார் பாடலாடலருத பசுபதி யீசனோர் பாகம் பெண்ணாணாயவார்', 'பெண்ணினார் திருமேனியான்', 'ஊதியல் பாகங் கொண்டங்குடனே யுமைநங்கை யொடும்', 'வண்டார் குழலரிவையொடு பிரியாவகை பாகம்', 'பெண்டான் மிக்கவாணான்', 'அணங்கெழுவு பாகமுடையாக முடையன்', 'பெண்ணுறு மார்பினர்', கொம்பன்ன மின்னிடையாளொர் கூறன்', 'மெய்வரையான் மகள் பாகன்', 'ஓடவரையான் மகள் பாகன்', 'கோங்கன்ன குவிமுலையாள் கொழுபேணைத் தோட்கொடி யிடையைப் பாங்கென்ன வைத்துகந்தான்', 'ஒண்மதிய நுதலுடையோர் கூறுகந்தான்', 'பெண்ணமர் மேனியெம் பிஞ்ஞகனாரே', 'நடைமட மங்கையொர் பாக நயந்து', 'ஏலமலர்க் குழலாளொரு பாகமமர்ந்த ருளிக்' போன்ற வரிகளால் சம்பந்தர் அர்த்தநாரீசுவரர் வடிவத்திற்குப் பெருமைச் சேர்க்கிறார். இவ்வரிகளின் தாக்கத்தால் சோழர் காலத்தில் எண்ணற்ற அர்த்தநாரீசுவரர் செப்புத் திருமேனிகள் தோன்றின. இதுபோன்று திரிபுராந்தகர், இராவணன் அனுக்கிரகமூர்த்தி, கஜசம்ஹாரமூர்த்தி, இலிங்கோத்பவமூர்த்தி, நீலகண்டன், சந்திரசேகரமூர்த்தி, கங்காதரமூர்த்தி வடிவங்கள் குறித்தும் பல வரிகள் சம்பந்தர் தேவாரத்தில் இடம் பெறுகிறது.

**திரிபுராந்தகர்**

இருக்கு வேதத்தில் இம்மூர்த்தியைக் குறித்து செய்தியுண்டு. ''ஒரு காளையினை யொப்பவும் புரங்களைப் பொடி செய்தனை'' என்பது இருக்கு வேத வரியாகும். இக்குறிப்பே அர்த்தநாரீசுவர வடிவத்திற்கு மூலமென்று கருதுகின்றனர். ''மூவகை ஆரெயி லோரழலம்பின் முனிய' என்று பரிபாடலும் (5:25), 'கடந்தடு முன்பொடு முக்கண்ணான் மூவெயிலும்' என்று கலித்தொகையும் (2:4), 'இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை யந்தணன்' என்ற பிறிதொரு கலித்தொகை வரியும் (38:1), 'மூவெயின் முருக்கிய முரண்மிகு செல்வனும்' என்று திருமுருகாற்றுப் படையும் (154) இவ்வடிவத்தைக் குறிப்பிடுகிறது. திருவதிகை வீரட்டானேசுவரர் ஆலயத்தில் பல்லவர் காலத்துச் சிற்பம் இடம் பெறுகிறது. இருப்பினும் சோழர் காலத்தில் எண்ணற்ற திரிபுராந்தக செப்புத் திருமேனிகள் தோன்றின. அதற்குக் காரணமாக அமைந்தது சம்பந்தரின் பாடல் வரிகளாகும். 'மும்மதிலெய்த பெருமான்', 'எரியார் கணையா லெய்தவனே', 'திணி கொண்ட மூன்று புரமெய்தவில்லி', 'புறங்கண் மூன்றும் பொடி வெய்தவன்', 'வாணார் திரிபுர மூன்றெரி யுண்ணச்சிலை தொட்டான்', 'ஒன்னார் புரமூன்றுமெரித்த வொருவன்', 'செருவிடை முப்புரந்தீயெரித்த சிவலோகனும்', 'பற்றலர் தமுப்புரமெரித்தடி பணிந்தவர்கண்', 'பன்னிய புரமுகங் களிந்த தொன்மையார்', 'தருக்கிய திரிபுரத்தவர் கடாமுகப் பெருக்கிய சிலைதனைப் பிடித்த பெற்றியர்',

'மேருவில்லாகவே வாளரக்கர், புரமெரித்தான்', 'புரம் பொன்று வித்தான் புனிதன்', 'இணையாவெயின் மூன்றுமெரித்த விறைவர்', 'அவுணர் புரமூன்றும் சீறாவெரி செய்தேது முனிந்தார்', 'சிலைதனான் முப்புரஞ் செற்றவன்', 'திரிபுரம் எரியச் செய்த செல்வர், புரம் மூன்றும் பொடி செய்தான்', 'புரங்களை மறித்த மாண்பினர்', 'பற்றலர் திரிபுர மூன்றும் வேவச் செற்றவன்', 'கோலச்சிலையினாற் செற்றவர் புரஞ்செய்த செந்தழலாக்கியை' போன்ற சம்பந்தர் வரிகளின் தாக்கத்தால் சோழர் காலத்தில் கலையழகு வாய்ந்த செப்புத் திருமேனிகள் தோன்றின.

## இராவணன் அனுக்கிரகமூர்த்தி

சங்க இலக்கியங்களில் இவ்வடிவம் இடம் பெற்றிருக்கிறதென்பதற்கு போதிய ஆதாரங்கள் இல்லை. சம்பந்தர் தேவாரத்தில் ஒவ்வொரு பதிகத்திலும் பெரும்பாலும் எட்டாம் பாட்டில் இக்கதை இடம் பெறுகிறது. 'எடுத்த வல்லரக்கன் முடிதோளிற அடர்ந்து கந்துருள் செய்தவர்', 'அடலெயிற்றரக்கனார் நெருக்கி மாமலையெடுத்த உடல்கெடத் திருவிரலூன்றி னாருறை விடமொளி', 'ஒருமலையெடுத்த விரதிறலரக்கன் விறல்கெடுத்தருளினை புறவம் புரிந்தன்னை', 'எறியார் கடல் சூழிலங்கைக் கோன்றனை முறியார் தடக்கையடர்த்த மூர்த்தி', 'தென்றிசையிலங்கை யரையன் திசைகள் வீரம்விளைவித்து வென்றிசை புயங்களை யடர்த் தருளும் வித்தகன்', 'மலையெடுத்த வாளரக்கனஞ்சவொரு விரலால் நிலையெடுத்த கொள்கையானே', 'இலங்கு பூண்வரை மார்புடையிரா வண்னெழில் கலங்கச் செய்தலுங்கண்டு தங்கழலபு நெரிய வைத்தருள் செய்தார்', 'பருத்த தோள்கெடப் பாதத் தொரு விரல் பொருத்தினார்' 'எடுத்தனன் கயிலையையியல் வலியினால் அடர்த்தனர் திருவிரலால லறிடப்', 'வரையொன்ற தெடுத்த வரக்கன சிரங்கறெரித்தவர்' போன்ற சம்பந்தர் பாடல் வரிகளால் சோழர் காலக் கோயில்களில் கற்சிற்பங்கள் இடம்பெறுகிறது. சிறந்த உதாரணங்களாக தாராசுரம், கங்கைகொண்ட சோழபுரம் ஆலயங்களைக் குறிப்பிடலாம். இவ்வடிவத்தைக் காட்டும் செப்புத் திருமேனி கள ஆய்வில் காணப்படவில்லை எனலாம்.

## கஜசம்ஹாரமூர்த்தி

இம்மூர்த்தியின் செப்புத் திருமேனிகளும் சோழர் காலத்தில் தோன்றி யதற்குக் காரணம் சம்பந்தர் பாடல் வரிகளாகும். வழுவூர், கஜசம்ஹாரம் நடந்த வீரட்டானத் தலமாகும். இங்கு சோழர் கால செப்புத் திருமேனி இடம்பெறுகிறது. 'முத்தன வெண்முறு வல்லுமையஞ்ச மூரி வல்லானை யினீருரி போர்த்த வித்தகர் வேதமுதல்வர்', 'வேழமதுரித்த வெண்காடு மேவிய', 'கடந்தாங்கிய கரியையவர் வெருவ வுரிபோர்த்துப் பயந்தாங்கிய வரவக்குழை பரமேட்டி', 'கடியகரியின்றோல் மயிலார்ந்த சாயன்', 'யானையின்றோல் சுழறிகழ் மேனியிலணிந்தவனே', 'மத்தக்களிற்றுரி

போர்க்கக் கண்டு மாதுமை பேதுறலு', 'போதகத்துரி போர்த்தவன்', 'மத்தயானை யுரியும் போர்த்து மங்கையொடும்முடனே சித்தர் வந்து பணியும்', 'சாதகவுருவியல் கானிடையுமைவெருவுறவிடுபோத கவுரியதன் மருவின', 'மும்மதத் திருக்கோட்டொரு கரி யீடழித்துரித்தனை', 'வேனலானை வெருவவுரி போர்த்துமையஞ்சவே கரியுரி மூடிய வொருவன்', 'அத்தியினுரிதனை யழகுறப் போர்த்தவன்' போன்ற சம்பந்தர் வரிகள் இம்மூர்த்தியைக் குறிப்பிடுகிறது.

## இலிங்கோத்பவ மூர்த்தி

சோழ மன்னன் பராந்தகன் காலம் முதல் மூன்றாம் இராஜராஜன் காலம் வரையுள்ள பெரும்பாலான கோயில்களில் கருவறையின் பின் சுவற்றில் இச்சிற்பம் இடம்பெறும். 'மாலுஞ்சோதி மலரானுமறிகிலா வாய்மையான்', 'மாலுநான்முகன் தேடியுங்காண்கிலா மலரடியினை', 'திருவார்தரு நாரணனான் முகனும் மருவாவெருவாவழலாய் நிமிர்ந்தார்', 'செங்கண் மாறிகழ் தருமலருறை திசைமுகன் கங்கை யாற்றெழுதெழத் தழலுருவாயினான்', 'மாலுமாமலரானுமருவி நின்று கலிய மனத்தாற் பாலுங் காண்பரிதாய பரஞ்சுடர்', 'மாலினோடு நான்முகன் மதித்தவர்கள் காண்கிலா நீலமேவு கண்டனார்', 'ஆற்றலுமைவரியும் பிரமனும் தோற்றம் காணா வென்றிக்காழியார்', 'மானாயுலகங் கொண்ட மாலு மலரோனுங் காணாலுண்ண மெரியாய் நிமிர்ந்தான்', 'திசைமுகனுந்திசை மேலளந்த கருவரையேந்திய மாலுங் கைதொழ நின்றலு மல்லார் அருவரை யொங்க வெடுத்த', 'கரியானு நான்முகனுங் காணாமைக் கனலுருவாய் அரியானாம் பரமேட்டி' போன்ற சம்பந்தர் வரிகளே சோழர்காலச் சிற்பங்களின் தோற்றத்திற்குக் காரணமாகும் எனக் கருதலாம். செப்புத் திருமேனியிலமைந்த இலிங்கோத்பவ மூர்த்தி எந்தக் கோயிலிலும் இடம் பெறவில்லையெனலாம்.

## நீலகண்டன்

இம்மூர்த்தியை சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகிறது. 'நஞ்சுண்டதால் கறுத்த கண்டத்தை உடையவன்', 'மணி மிடற்றந்தணன்' (பரி.9:7), 'மறுமிடற்றண்ணல்' (பரி.8:127), 'கணிச்சியோன் மணிமிடற்றணி' (கலி. 105:13), 'மணிமிடற்று மாண்மலர்க் கொன்றையான்' (கலி. 142:27-28), காரியுண்டிக் கடவுள்' (மலை. 83), 'கறைமிடற்றண்ணல்' (புறம். 55:4), 'மணிமிடற்றோன்' (புறம். 56:2), 'நீலமணிமிடற்றொருவன்' (புறம். 91:6) போன்ற சங்க இலக்கிய வரிகள் சங்க காலத்தில் இம்மூர்த்தி வழிபாடு சிறப்புப் பெற்றிருந்ததை எடுத்துக் காட்டுகிறது. இரட்டைக் காப்பியங்களில் அதிகமான செய்திகள் இடம்பெறவில்லை. ஆனால் சம்பந்தர் பாடல் வரிகள் இம்மூர்த்தியைக் குறிப்பிடுகிறது. இதன் காரணமாக இம்மூர்த்தியின் வடிவங்கள் சோழர் காலத்தில் தோன்றின.

'ஒளியார் விடமுண்டவொருவன்', 'நஞ்சமுண்ட கடவுள்', 'கறைகொள் கண்டமுடையவர்', 'கறையார் கண்டத்தீசன்', 'கறுமலர் கண்டமாக விடமுண்ட காளை', 'கடலிடை நஞ்சமுண்டு கனிவுற்ற கண்டன்', 'வேலர் வேலை விடமுண்டிருள்கின்ற மிடற்றினர்', 'கரிய கண்டத்தர்', 'கறை கொண்ட கண்டத்தான்', 'விடமல்கு கண்டத்தான்', 'கறையணி கண்டன்', 'கலமார் கடனஞ்ச முதுண்ட கருத்தர்', 'கறை கண்டன்', 'நஞ்சினை யுண்டிருள் கண்டனார்', 'நஞ்சமுது செய்த மணிகண்டனமை யாருடைய ஞான முதல்வன்', 'கரிய கண்டர்', 'மறிகடனஞ்சையுண்ட இறைவன்' போன்ற சம்பந்தர் வரிகள் இம்மூர்த்தியின் சிறப்பிற்குக் காரணமாகும்.

## சந்திரசேகர மூர்த்தி

'பிறைநுதல் விளங்கு மொருகண்' (புறம். 55:5), 'பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி' (புறம். 91:5), 'மிக்கொளிர் தாழ்சடை மேலரும் பிறைநுதல்' (கலி.104:11) போன்ற வரிகள் சிவன், பிறை போன்ற நெற்றியையுடையவன் என்பதைக் குறிப்பிடுகிறது. ஆனால் பிறையை தலையில் சூடியவன் என்பதைச் சம்பந்தர் வரிகள் குறிப்பிடு கின்றன. இப்பாடல் வரிகளின் தாக்கத்தால் சோழர் காலத்தில் எண்ணற்ற செப்புத் திருமேனிகள் உதயமாயின.

'தண்மதி சூடிய சென்னி', 'பிறையணி படர் சடைமுடியிடை பெருகிய புனலுடையவன்', 'வான்மதியஞ் சடையிடை வைத்த படிறனார்', 'தழன்மதி சடை மேற்புனைந்தானை', 'வெண்பிறை புங்கு சடைமுடியார்', 'வெண்மதி வைத்து கந்தான்', 'ஒளிதரு வெண்பிறை சூடி', 'வெண்மதி சடைமேல் சூட்டினார்', 'இளம்பிறை சுமந்தது விளங்க', 'சடைமேல் பிறையுமுடையார்', 'வெண்பிறை சூடுமொருவனார்', 'மதிசூடிய மைந்தனார்', 'திங்கள் சூடினான்', 'பிறை செஞ்சடைம் மிசை வைத்ததும்', 'மறைசூடன்', 'பிறையணி செஞ்சடையான்', 'பிறைச் சென்னி பெருமான்', 'மதிசெஞ்சடை வைத்த பிரான்', 'திங்களொடரவணி திகழ்முடியன்', 'மதிசேர் சடையார்', 'பிறையுடையார் சென்னி தன்மேல்', 'பனிமதி சடைமிசைச் சூடினார்', 'மதியும் வைத்த பொறையவன்', 'மதிசேர் செஞ்சடையான்', 'செஞ்சடை மதியக் கண்ணியான் கண்ணுதலான்' என்பன சம்பந்தர் வரிகளாகும்.

## கங்காதரமூர்த்தி

இம்மூர்த்தியை 'ஈர்ஞ்சடை அந்தணன்' என்று கலித்தொகை (38:1) குறிப்பிடுகிறது. கங்கை முடிக் கணிந்தவன்' என்று சிலப்பதிகாரம் (12:9) காட்டும். சம்பந்தரின் பல வரிகள் இம்மூர்த்தியைக் குறிப்பிட்டதால் சோழர் காலத்தில் இச்செப்புத் திருமேனிகள் அதிகம் தோன்றின. 'கங்கை தரித்தவர்', 'கங்கைதனைக் கரந்த', 'கங்கையைச் செஞ்சடை

சூடினானும்', 'நதி பொங்கரவு தங்கு புரிபுன் சடையினன்', 'அலைபுனற்கங்கை தங்கிய சடையார்', 'கங்கை தங்குசடை யாரவர்', 'புனற் கங்கையை யொரு சடைமேல்', 'கங்கை செஞ்சடை வைத்து', 'செஞ்சடையிடைப்புனல் கரந்த சிவலோகன்', 'திகழ்கண்டங் கங்கை சடையிற் கரந்தார்', 'நீடும் புனற்கங்கையுந் தங்க முடிமேல்', 'கங்கை தங்கு மவிர் சடையார்', 'கங்கையாளைக் கமழ்சடை மேல் கரந்தார்', 'கங்கையார் சடையினான்', 'கங்கைப்புனலுடையான்', 'சூடுவர் சடையிடைக் கங்கை நங்கையை', 'கங்கை சேர்வார் சடையான்', 'கங்கையோர் வார்சடை' போன்றவை சம்பந்தர் வரிகளாகும்.

பல பாடல் வரிகளால் அற்புதக் கலைப் படைப்புகளைத் தந்த சம்பந்தர் ஒரு கலைப்புரட்சியாளராக என்றும் தமிழக வரலாற்றில் இடம்பெறுகிறார்.

# 18. சம்பந்தரின் சமூகத் தொண்டு

க. கொன்றையாண்டி, ஸ்ரீவில்லிபுத்தூர்.

**வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்**
**பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத**
**சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்**
**பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்.**

இப்பாடலில் சேக்கிழார் பெருமான் திருஞானசம்பந்தப் பெருமான் வரலாற்றைத் தொடங்கும் போதே "அவர் புனிதவாய் மலர்ந்து அழுதது பூதபரம்பரை பொலியவும் திருத்தொண்டு (சமுதாயத் தொண்டு) செய்யவுமே என்று தொடங்குகிறார். எனவே மூன்று வயதில் ஞானப் பாலுண்டு பதினாறு வயது வரை வாழ்ந்த பெருமான் ஞானத் தொண்டோடு சிவபெருமான் திருவருளால் பல சமூகத் தொண்டும் செய்தார் என்பதை எடுத்துக் கூறுவதே இக் கட்டுரையின் நோக்கமாகும்.

தம் புனிதவாய் மலர்ந்து அழுது ஞானப்பால் உண்டு சிவஞானம் பெற்றுப் பல தலயாத்திரைகள் சென்று ஆங்காங்கே எழுந்தருளிய இறைவனைப் பாடி மகிழ்ந்ததோடு ஆங்காங்கே சமுதாயத்திற்கு ஏற்பட்ட பல தொல்லைகளையும் துன்பங்களையும் போக்கிச் சமூகத் தொண்டு செய்த பெருமையை எண்ணிப் பார்ப்போம். அந்தக் காலத்தில் சாதி ஆச்சாரங்களும் சமுதாய வேறுபாடுகளும் மண்டிக் கிடந்தன. என்றாலும், திருஞானசம்பந்தர் முதல் தலயாத்திரையின் போதே பாணர் சமுதாயத்தில் பிறந்து வளர்ந்த பெரும்பாணரோடு நட்புக் கொண்டு அவரையும் தில்லைவாழ் அந்தணர்கள் வாழும் சிதம்பரத்திற்குப் போகும்போது உடன் அழைத்துச் சென்றதும் வழிபாடு செய்ததும் அவர்தம் முதல் சமுதாயப் புரட்சியாகும். திருஞானசம்பந்தப் பெருமான் நடந்தும் தந்தையார் தோளில் அமர்ந்தும் தலங்கள் தோறும் சென்று சிவபெருமானைப் பாடுவதற்கும் அங்குள்ள தம் அடியார்கட்கும் ஏழை எளிய மக்களுக்கும் விரைந்து பணி செய்ய வாய்ப்பாக திருவரத்துறையில் முத்துச்சிவிகை, முத்துக்குடை, முத்துச் சின்னங்கள் கொடுத்தருளினான். இன்றும் தன்னார்வச் சேவை நிறுவனங்கட்கு அரசும் மற்றவர்களும் முதலில் வாகன வசதிகள் செய்து தருவதை அறியலாம்.

திருப்பாச்சிலாச்சிரமம் என்ற நகரில் கொல்லி மழவன் மகள் முயலகன் என்னும் கொடிய நோயால் துன்புற்றாள். திருஞானசம்பந்தப் பெருமான் வழிபாட்டிற்கு வந்தபோது விபரம் கூறினான். இறை வழிபாடே தம் குறிக்கோளாக வந்தாலும் அந்நிலையிலும் அடுத்தவர் படும் துன்பம் துடைத்தல் தம் கடமை என்பதை நிலைநாட்டத் திருஞான சம்பந்தர் அப் பெண்ணை இறைவன் சன்னிதானத்திற்கு அழைத்துச் சென்று திருப்பதிகம் பாடி நோய் நீக்கினார்.

பிள்ளையார் தம் யாத்திரையின் போது திருச்செங்குன்னூரில் அடியார்களையும் மக்களையும் பனியின் கொடுமை தாக்கியது. அனைவரும் பனியால் வருந்துவதைக் கண்ட பிள்ளையார் சமுதாயத்தின் துன்பம் துடைத்தலே தம் கடமை என்பதைக் காட்ட ''அவ்வினைக்கு இவ்வினை'' என்ற பதிகம் பாடிப் பனிநோயினை நீக்கினார். இதேபோல் திருவலஞ்சுழியில் வேனில் காலத்தில் வேனிலின் கொடுமையை நீக்கிச் சமுதாயம் இன்பமாக வாழச் செய்தார்.

அந்தக் காலத்தில் ஆரியர்களின் ஆதிக்கத்தாலும், சமண பௌத்த மதங்களின் ஊடுருவலாலும் வருணாச்சிரம தர்மங்களும் சாதி வேறுபாடும் தலைவிரித்தாடின. ஆனால் திருஞானசம்பந்தர் தம் இளம் வயதிலேயே பெரும்பாணரோடு நட்புக் கொண்டும், நாவுக்கரசர், நீலநக்கர், சிறுத்தொண்டர், முருக நாயனார், குங்குலியக் கலயர் போன்ற பல் வேறு சமுதாயப் பெருமக்களோடு தம் யாத்திரையின் போது நட்புக் கொண்டும், உடனுண்டு உறைந்தும் மிகப் பெரிய சமுதாயப் புரட்சி செய்தார். திருஞானசம்பந்தர் தம் யாத்திரையின் போது திருமருகல் என்னும் தலத்தில் தங்கியிருந்து அதிகாலையில் அடியார்களுடன் திருமருகல் பெருமானை வழிபடப் புறப்பட்டார். அப்போது ஒருநாள் ஒரு வணிகன் தன் மாமன் மகளை உடன் போக்காக அழைத்துக் கொண்டு வந்தவன் இரவாகி விட்டதால் திருமருகல் கோயில் மண்டபத்தில் தங்கியிருந்தான். அப்போது வணிகனைப் பாம்பொன்று தீண்டி இறந்து விட்டான். இன்னும் இருவரும் திருமணம் செய்யாமையால் ''உன்னைத் தொட்டு அழும்பாக்கியம்கூட இல்லையே'' என்று திருக்கோயில் சந்நிதியை நோக்கிக் கதறி அழுதாள். அந்தப் பெண் சிவபெருமான் அருளினையே சிந்தித்துத் துதித்தழும் ஓசையை திருமருகல் பெருமானை வழிபடும் பொருட்டு அடியார் கூட்டத்துடன் எழுந்தருளிவரும் திருஞான சம்பந்தப் பெருமான் கேட்டு அவர் திருவுள்ளத்தில் கருணை மிகக் கொண்டு அப்பெண் இருக்கும் இடம் நோக்கி அடியவர்களுடன் வந்தார். அவள் வரலாற்றினைக் கேட்டறிந்தார். காழிவேந்தராகிய பிள்ளையார் திருமருகல் பெருமானை நோக்கி ''சடையாய் எனுமால்'' என்ற திருப்பதிகம் பாடினார். விடம் தீண்டி இறந்த வணிகன் விடந்தீர்ந்து எழுந்து நின்றான்.

அவர்கள் இருவரையும் மணம் புணர வைத்து இன்புடன் வாழ வாழ்த்திச் சென்றார். இவ்வாறு திருஞானசம்பந்தப் பெருமான் தம் தலயாத்திரையின் போது சமுதாயத்திற்கும் தனிப்பட்டவர்கட்கும் ஏற்பட்ட துன்பந்துடைத்துப் பெருந்தொண்டு செய்து வந்தார்.

திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசு சுவாமிகளும் திருவீழி மிழலையில் தங்கியிருக்கும் போது பெரும் பஞ்சம் ஏற்பட்டிருந்தது. மக்களும் உலகுயிர்களும் உணவின்றி வருந்தின. திருக்கோயில் பூசைகள் தடைப்பட்டன. பெரும்பசியின் கொடுமை எங்கும் பரவியது. இருபெரு மக்களும் அந்நிலை கண்டு மிகவும் வருந்தினர். அப்பொழுது இறைவன் திருஞானசம்பந்தப் பெருமானுக்குக் கிழக்கு வாசற்படியிலும் திருநாவுக்கரசருக்கு மேற்கு வாசற்படியிலும் ஒவ்வொரு பொற்காசு வழங்கினார். அக்காசினைக் கொடுத்து உணவுக்கு வேண்டி பொருள் களைப் பெற்று அடியார்கட்கு உணவளித்து உபசரித்தார்கள். நாம் வழிபாட்டிற்குச் செல்லும் இடங்களில் ஏதாவது பொருள் கிடைக்கா விட்டால் விரைவில் அத்தலத்தை வணங்கிவிட்டு வேறு தலத்திற்குச் செல்வதுதான் இயல்பு. ஆனால் இரு பெருமக்களும் அடியார்கள்படும் துன்பம் போக்கிச் சமயச் சார்புடைய சமுதாயத்தினருக்கு இறைவன் துணைகொண்டு உதவ வேண்டும் என்ற சமுதாயத் தொண்டுள்ளத்தை இதன் மூலம் அறியலாம்.

அதேபோல் இரண்டு பெருமக்களும் தம் தலயாத்திரையைத் தொடரும் போது திருமறைக்காடு சென்று வழிபடச் சென்றனர். கவுணியர் பெருமானும் அப்பர் சுவாமிகளும் ஒருசேர எழுந்தருளி வருவதை அறிந்த அடியார்கள் மகிழ்ச்சியோடு எதிர் கொண்டனர். பிள்ளையாரும் அப்பரும் திருக்கோபுரத்தின் முன் சென்று உள்ளே போக எண்ணிய போது அங்கே வேதங்கள் வழிபாடு செய்து திருக்காப்பிட்டு (அடைக்கப் பட்டிருந்த) வாயிலைக் கண்டனர். இதுவரை வாசல் திறக்கப்படாமல் இருந்தமையால், அங்குள்ள மக்கள் உள்ளே சென்று வழிபட வேறு ஒரு வாயில் அமைத்து அதன் வழியே வழிபட்டு வரும் தன்மையினைக் கண்டனர். அப்போது பிள்ளையார் அப்பரை நோக்கி நாம் எவ்வகை யினும் இந்த வாயிலைத் திறந்து உள்ளே சென்று திருமறைக் காடரை வழிபட வேண்டும். ஆகையால் இத்திருவாயில் திருக்கதவம் திறக்குமாறு தமிழ்ப் பதிகம் பாடியருள வேண்டும் என்று வேண்டினார்கள். திருநாவுக்கரசு சுவாமிகள் "பண்ணினேர் மொழி" என்ற திருப்பதிகம் பாடினார். திருக்கதவம் திறந்தது. அனைவரும் நேர் வழியில் சென்று வழிபட்டு மகிழ்ந்து வெளியே வந்தனர். அப்போது அப்பர் சுவாமிகள் காழிவேந்தரை நோக்கி, இக்கோயில் திருக்கதவம் இன்று முதல் திறத்தலும் அடைத்தலுமாகிய செயல்கள் என்றும் நடைபெறும்

பொருட்டு நீர் அடைக்கும்படி பாடியருளும் என்றார். ஞானசம்பந்தப் பெருமான் ''சதுரம்மறை'' என்று தொடங்கும் திருப்பதிகம் பாடித் திருக்கதவம் அடைக்கும்படி செய்தார். எனவே இரு பெரும் மக்களும் எல்லோரும் போல் நாமும் இருக்கும் வாயில் வழியாகச் சென்று வழிபட்டு யாத்திரையைத் தொடரலாம் என்று கருதாமல் சைவ சமய சமுதாயம் திருக்கோபுர வாசல் வழியேதான் சென்று முறையாக வழிபட வேண்டும் என்னும் சமுதாய நோக்கம் கொண்டு இந்த அற்புதச் செயல்களைச் செய்தார்கள் என்பதை அறியலாம்.

ஒரு காலத்தில் பாண்டிய நாட்டில் நன்னெறி குன்றி சமண சமயம் மிக்கு இருந்தது. பாண்டிய மன்னனும் முற்பிறவியில் செய்த தீவினையின் பயனாலே சமண நெறியையே பின்பற்றினான். நாட்டில் சைவ நெறியும் ஒழுக்கமும் குன்றியது. பாண்டிய நாட்டில் எங்கும் சமணர் பாழிகளும் பள்ளிகளும் மிகுந்து விளங்கின. பாண்டிய மன்னன் உய்யும் பொருட்டாக அவன் மனைவி மங்கையர்க்கரசி அம்மையாரும் அமைச்சர் குலச்சிறையாரும் சைவநெறி தவறாது பாண்டியன் அறியாதபடி ஒழுகி வந்தவனர். அவ்விருவரும் ஞானசம்பந்தப் பெருமானும் திருநாவுக்கரசு சுவாமிகளும் திருமறைக்காட்டில் தங்கியிருப்பதை அறிந்து, திருஞானசம்பந்தப் பெருமானைப் பாண்டி நாட்டிற்கு அழைத்து வருமாறு பரிசனங்களை அனுப்பினார்கள். மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் அழைத்ததற்கேற்பவும் பாண்டிய நாடு சிவராாசதானியாக விளங்கவும் சம்பந்தப் பெருமான் புறப்பட்டார். அப்பொழுது ஆளுடைய அரசு புகலிப் பிள்ளையாரை நோக்கி சமணர்களின் வஞ்சகத் தன்மையையும் தற்காலக் கோள்நிலை சரியில்லாமையையும் தம் அனுபவத்தால் எடுத்துக் கூறினார்கள். அப்பொழுது அருளிச் செய்த கோளறு திருப்பதிகம் இன்றும் சைவ சமய மக்கள் சமுதாயத்திற்குப் பெரிதும் பயன்படுவதை அறியலாம். சில ஆண்டுகட்கு முன்பு அஷ்டக் கிரகச் சேர்க்கையால் உலகத்திற்கும் மக்களுக்கும் பெருந்தீமை விளையும் என்று அனைவரும் அஞ்சினார்கள். அப்போது காஞ்சி காமகோடி பீடாதிபதி பெரியவனாகிய ஞானிகள் எல்லோருடைய வீட்டிலும் கோயில்களிலும் கோளறு திருப்பதிகத்தை ஓதுமாறு அருளிச்செய்து தீமை போக்கியமையை அனைவரும் அறிவர். மதுரைக்கு அண்மையில் வரும்போதே,

''மங்கையர்க்கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக்கை மடமாணி
பங்கயச் செல்வி பாண்டிமாதேவி
பணிசெய்துநா டொறும் பரவப்
பொங்கழல் உருவன் பூதநாயகன் நால்
வேதமும் பொருள்களும் அருளி

அங்கையற்கண்ணி தன்னொடும் அமர்ந்த
ஆல்வா யாவதும் இதுவே''

என்ற திருவாலவாய்ப் பெருமானை வழிபட்டுக் கொண்டே மதுரையை அடைந்தார்கள். அரசியாரும் அமைச்சரும் வணங்கி வரவேற்றனர். அரசியார் திருஞானசம்பந்தப் பெருமான் தங்குவதற்குரிய திருமடத்தைக் காட்ட, அடியார்களுடன் அங்குச் சென்று பிள்ளையார் அமர்ந்தருளினர். மதுரை மாநகரம் எங்கும் சிவனடியார் கூட்டமும் திருநீற்றொளியும் விளங்கக் கண்ட சமணர்கள் பாண்டிய மன்னனிடம் போய்க் கோள் சொன்னார்கள். பிள்ளையாரையும் சிவனடியார்களையும் மதுரையை விட்டகலச் செய்ய வேண்டிய சூழ்ச்சியைக் கூறினார்கள். மன்னன் அனுமதியளித்தான். அதன்படி தம் போலி மந்திரத்தால் பிள்ளையாரும் அடியார்களும் தங்கியிருந்த திருமடத்தில் தீப்பற்றுமாறு ஏவினர். ஆனால் ஐந்தெழுத்து மந்திரம் ஓதிய உறைவிடமாம் திருமடத்தில் தீப்பற்ற வில்லை. எனவே அவர்களே தீ வைத்து எரியூட்டினர். அடியார்கள் விழித் தெழுந்து தீயை அணைத்துவிட்டுப் பிள்ளையாரிடம் முறையிட்டனர். பிள்ளையார் சிறிது வருந்தி, இத்தீமைக்குக் காரணன் அரசனேயாவான் என்றுணர்ந்தவராய், சிவபெருமானை எண்ணியவராய்,

''செய்யனே திரு ஆலவாய் மேவிய
ஐயனேயஞ்சல் என்றருள் செய்யெனைப்
பொய்யராம் சமணர்கொளுவு ஞ்சுடர்
பையவே சென்று பாண்டியற்காகவே''

என்று பாடினார்.

உடனே சமணர் வைத்த தீ நோயாகிப் பாண்டியன் உடலைப் பற்றியது. தாம் ஏவிய காய்ச்சல் முழுமையாகப் பாண்டியனைப் பற்றினால் பாண்டியன் இறந்துவிடுவான் அது மங்கையர்க்கரசியின் மாங்கல்யத்திற்கு இடையூறாகும். எனவே 'பையவே' என்று பாடினார். உடனே படுக்கையில் கிடந்த பாண்டியன் காய்ச்சலால் பற்றப்பட்டுத் துடியாய்த் துடித்தான். அதை அறிந்த அரசியாரும் அமைச்சரும் நடுங்கி அஞ்சி அரசனை வந்தடைந்தனர். சமணர்களும் ஓடிவந்து தம்மணி, மந்திரங்களால் வெப்பு நோய் நிற்க மயிற்பீலிகையால் தடவினார். அரசன் மீதிருந்த வெம்மையால் (சூட்டால்) மயிற்பீலி எரிந்து சாம்பலாயின. மந்திர நீரைத் தெளித்தனர். அது நெருப்பில் நெய் வார்த்தது போல அரசன் மேல் வெம்மை மிகுந்தது. அரசன் வெப்பு நோயால் துன்புற்றுச் சினம் கொண்டு ''ஓடுங்கள் என் பக்கத்தில் நிற்க வேண்டாம்'' என்று சமணர் களை விரட்டினான். பாண்டிமாதேவியாரும் அமைச்சரும் அரசரிடம் சென்று ''திருஞானசம்பந்தர் எழுந்தருளியிருந்த திருமடத்தில் சமணர்கள் தீ வைத்தனர். அதனால் இக்காய்ச்சல் ஏற்பட்டது. அவர் வந்தால் இந்

நோய் தீர்ந்துவிடும்'' என்று கூறினர். திருஞானசம்பந்தர் என்ற சொல் செவியில் பட்டவுடனேயே வெம்மை தணிந்ததை அரசன் உணர்ந்தான். நம்பிக்கை ஏற்பட்டது. அழையுங்கள் என் பிணி தீர்ப்பார் பக்கம் சேர்வேன் என்றான். அரசியாரும் அமைச்சரும் அளவிலா மகிழ்ச்சி யடைந்து பிள்ளையாரைச் சென்று கண்டார்கள். அவர்கள் பிள்ளையாரைக் கண்ட காட்சியைச் சேக்கிழார் பெருமான்,

> **''ஞானத்தின் திருவுருவை நான்மறையின் தனித்துணையை**
> **வானத்தின் மிசையன்றி மண்ணில் வளர்மதிக் கொழுந்தைத்**
> **தேனக்க மலர்க்கொன்றைச் செஞ்சடையார் சீர்தொடுக்கும்**
> **கானத்தின் எழுபிறப்பைக் கண்களிப்பக் கண்டார்கள்''**

என்று மிக அழகாகக் கூறுகின்றார். இவ்வாறு பிள்ளையாரைக் கண்டு வணங்கி ''யாங்கள் உய்ய அரண்மனைக்கு வந்து சமணர்களை வென்றால் அரசனும் பிழைப்பான், சைவமும் தழைக்கும்'' என்று வேண்டினர். பிள்ளையார் ஆலவாய் அண்ணல் திருக்கோயிலுக்குச் சென்று ஞாலம் நின்புகழே மிக வேண்டும் தென் ஆலவாயில் உறையும் எம் ஆதியே என்று வேண்டி சிவனருள் பெற்று அரண்மனைக்குப் புறப்பட்டார். அரசனைக் கண்டார். மன்னன் மகிழ்ந்தான். ஆனால் சமணர்கள் பிள்ளையாரை நெருங்கி உங்கள் சமயக் கோட்பாடுகளைக் கூறும் என்று கத்தினார்கள். அரசன் இரு திறத்தாரையும் நோக்கி, நான் வெப்பு நோயால் தவிக்கின்றேன். உங்கள் சமய உண்மைகளை என் காய்ச்சலைப் போக்குவதில் காட்டுங்கள். என் நோயைப் போக்கியவரே வென்றவர் ஆவார் என்றான். சமணர்கள் ''பாண்டியன் உடம்பின் இடப் பக்கத்து நோயைத் தீர்ப்போம்'' என்று கூறி மயிற்பீலியை மந்திரத்தோடு இடப்பால் உடம்பில் தடவினார்கள். ஆனால் அரசன் வெப்பு நோய் மிகுந்ததைக் கண்டு அவன் பிள்ளையாரை நோக்கினான். அவர் ''மந்திரமாவது நீறு'' என்ற பதிகத்தைப் பாடிக் கொண்டே உடம்பில் திருநீறு பூசினார். வலப்பக்கம் திருநீறு பூசப் பட்டவுடன் அதுவும் சேர்ந்து இடப்பக்கம் சேர்ந்தது போல வெம்மை கூடியது. மன்னன் வேதனையால் மீண்டும் வேண்டப் பிள்ளையார் இடப்பக்கத்திலும் திருநீறு பூசினார். மன்னன் முழுநலம் பெற்று மகிழ்ச்சி யோடு எழுந்து பிள்ளையார் திருவடிகளில் வீழ்ந்து பணிந்தான். இதனால் மன்னன் நோயைத் திருநீற்றால் போக்கிச் சைவ சமயத்தையும் சமூகத்தையும் மற்றவர்களையும் திருநீற்றின் பெருமையை உணரச் செய்தார். இதன் பிறகு நடந்த அனல் வாதம் புனல் வாதம் இரண்டிலும் திருஞானசம்பந்தப் பெருமானே சிவனருள் கொண்டு வென்றார். ஆகையால்தான் இன்றும் மதுரை மாநகரமும் பாண்டிய நாடும் சிவராசதானியாகக் காட்சியளித்து வெளிநாட்டாரும் பிற சமயத்தாரும் கண்டு வியக்கும் வண்ணம் விளங்குகிறது. அன்று பிள்ளையார் இவ்வாறு சைவ சமயத்தை நிலை

நாட்டாவிட்டால் இன்று மதுரையும் பாண்டிய நாடும் சமணர்கள் வாழும் பாழிகளும் பள்ளிகளும் குகைகளுமாகவே காட்சிதரும். எனவே திருஞானசம்பந்தப் பெருமானின் சமுதாயத் தொண்டின் சிறப்பை உணரலாம். இதனால் தமிழ்நாட்டில் இயற்கைச் சமயமாம் மக்கள் வாழ்வாங்கு வாழ வழிகாட்டும் வான் பெருஞ்சமயமாய் விளங்கிய சிவநெறி ஓங்கித் திருநீற்றின் ஒளிவிளங்கச் செய்த பெருமை திருஞானசம்பந்தப் பெருமானுக்கே உண்டு என்பதையும் அறியலாம்.

திருஞானசம்பந்தர் திருவண்ணாமலையை ''அண்ணாமலை தொழுவார் வினை வழுவார் வண்ணம் அறுமே'' என்று பாடித் தொழுதுவிட்டுத் திருவோத்தூர் என்னும் பதியினை அடைந்தார். திருவோத்தூர் இறைவனைக் காலங்கள் தோறும் சென்று வணங்கித் துதித்து அங்கே தங்கியிருந்தார். அப்போது விவசாயப் பெருங்குடிமக்கள் சம்பந்தப் பெருமானை வந்து வணங்கி தாங்கள் வைத்து வளர்க்கும் பனை மரங்கள் எல்லாம் ஆண்பனை மரங்களாகிக் காய்க்காமல் இருப்ப தாகவும், அதனைக் கண்ட சமணர்கள் மிகவும் எள்ளி நகையாடி சைவத்தை இழிபடப் பேசுவதாகவும் கூறினார்கள். அதனைக் கேட்ட பிள்ளையார் சிவனடியார்களாகிய வேளாண் பெருமக்கள் மீது இரக்கங் கொண்டும் சைவத்தின் சிறப்பை உணர்த்தவும் எண்ணியவராய் ஒத்தூர் கோயிலுக்குள் சென்று சிவபெருமானுடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கி ''பூத்தேர்ந்தாயன'' என்று தொடங்கிக் ''குரும்பை ஆண்பனை ஈன்குலை ஒத்தூர்'' என்று பதிகம் பாடினார். ஆண்பனைகள் நிறைந்த குலைகளோடு கூடிய பெண் பனைகளாயின. சமணர்கள் பிள்ளையாரின் செய்கை கண்டும் சிவபெருமான் திருவருளை எண்ணியும் அந் நாட்டைவிட்டே ஓடினார்கள். இவ்வாறு விவசாயம் பெருமக்களாகிய சமுதாயத்தினை வாழவைத்தார்.

இவ்வாறு சமுதாயத் தொண்டாற்றியும் பக்தியை வளர்த்தும் செந்தமிழ்ப் பதிகங்கள் பாடியும் தம் யாத்திரையைத் தொடர்ந்து திருவொற்றியூரில் எழுந்தருளியிருந்தார் திருஞானசம்பந்தப் பெருமான். அப்போது திருமயிலாபுரிப் பதியில் பெருவணிகர் குடியில் சிவநேசர் என்னும் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் தம் ஒரே மகளாகிய பூம்பாவையை திருஞானசம்பந்தப் பெருமானுக்கே அர்ப்பணித்து வளர்த்து வந்தார். அக்குழந்தை தம் தோழியருடன் பூப்பறிக்கப் பூந்தோட்டத் திற்குச் சென்றபோது பாம்பு தீண்டி இறந்துவிட்டது. அவன் பூத உடலைத் தகனஞ் செய்து, அவள் எலும்பையும் சாம்பலையும் பிள்ளையார் வரும்வரை குடத்தில் வைத்துப் பூசித்து வந்தார். பிள்ளையார் திருவொற்றியூர் வந்திருப்பதை அறிந்தார் சிவநேசர். ஞானசம்பந்தப் பெருமான் திருவொற்றியூர் இறைவனை

வணங்கித் திருமயிலாபுரியை நோக்கிச் சிவனடியார் கூட்டத்துடன் எழுந்தருளினார். சிவநேசர் அவரை நிலத்தில் வீழ்ந்து வணங்கினார். அடியார்கள் சிவநேசர் மகள் பூம்பாவைக்கு நிகழ்ந்ததைக் கூறினார்கள். ஆளுடைய பிள்ளையார் மயிலாபுரியில் திருக்கபாலீச்சரம் என்னும் கோயிலை அடைந்து வணங்கித் திருக்கோயிலின் புறத்தேவந்தருளினார். ஆளுடைய பிள்ளையார் சிவநேசர் மகளுக்கு முன்னே நிகழ்ந்ததை திருவுள்ளத்தில் கொண்டு சிவநேசரை நோக்கி அவருடைய மகளின் எலும்பு நிறைந்த குடத்தை திருக்கோயிலின் மதிப்புற வாயிலின் முன் கொண்டுவருமாறு அருளிச் செய்தார். அக்குடத்தை எடுத்து பாலீசர் அடி முகத்திலே வைத்து வணங்கினார். திருவருள் நோக்கத்தினாலே ''பூம்பாவாய்'' என்று அவர் பெயர் சொல்லி அழைத்தார்.

> **''மண்ணி னிற்பிறந்தார் பெறும் பயனை மதிசூடும்**
> **அண்ணலாரடியார் தமைய முதுசெய்வித்தல்**
> **கண்ணினால் அவர் நல்விழாப் பொலிவு கண்டார்தல்**
> **உண்மையாமெனில் உலகவர் முன்வருக''**

என்றுரைத்தார்.

சிவபெருமானை வணங்கி ''மட்டிட்ட புன்னை'' என்று தொடங்கும் திருப்பதிகத்தை அருளிச் செய்தார். ''போதியோ'' என்ற மெய்த்திரு வாக்காகிய அக்குடத்தினுள்ளே எலும்பிற்பொருந்த வந்து வந்து உருவமாய்க் கூடி பன்னிரண்டு வயது வளர்ச்சியினை அடைந்து திருக்குடத்தை உடைத்துக் கொண்டு திருமகளைப் போல் எழுந்து நின்றாள். சிவனடியார்கள் எல்லோரும் சிவபெருமான் திருவருட் சிறப்பினைக் கண்டு மகிழ்ந்தனர். தேவர் பூமழை பொழிந்தனர். சமணர்கள் முதலிய புறச் சமயத்தார்கள் எல்லோரும் அற்புதம் கண்டு ஏங்கித் தள்ளாடி வீழ்ந்தனர். பிள்ளையார் சிவநேசனைப் பார்த்து இனி உமது மகளை அழைத்துக் கொண்டு வீட்டிற்குச் செல்லலாம்'' என்று கூற, சிவநேசர் ஞானசம்பந்தருடைய திருவடிகளை வணங்கி, அடியேன் பெற்றெடுத்த இப்பூம்பாவையைத் தாங்கள் திருமணம் செய்தரு வேண்டும் என்று வேண்டினார். சீர்காழிப் பிள்ளையார், ''நீர் பெற்ற பிள்ளை பாம்பு தீண்டி இறந்தது கபாலீசர் கருணையினால் மீண்ட இக் குழந்தை என் மகளாவாள். ஆகையால் நீர் சொல்வது தகாது'' என்று மறுத்தருளினார்.

ஞானசம்பந்தர் பல தலங்களை வழிபட்டுச் சீர்காழிக்கு வந்தருளினார். பெற்றோரும் சுற்றத்தாரும் திருஞானசம்பந்தரிடம் திருமணத்திற்குரிய காலம் வந்தமையால் ஒரு கன்னியைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று விண்ணப்பித்தனர். அதற்குப் பிள்ளையார் இசைய வில்லை. மறையவர்கள் பின்னும் வணங்கி, ''வேதநெறி தழைத்தோங்க

வந்த தாங்கள் அவ்வேத விதிப்படி திருமணம் செய்யத் திருவுள்ளங் கொண்டருதல்'' வேண்டும் என்று மீண்டும் வேண்டினார். மறைகள் வாழவும் மறையவர்கள் ஒழுக்கம் ஓங்கவும் பிள்ளையார் உடன் பட்டார். திருமணம் நடக்க இருந்த நல்லூர்ப்பெருமணம் வந்து சேர்ந்தார். திருமணச் சடங்குகள் நிறைவுற ஞானசம்பந்தர் மணமகள் கையினைப் பற்றிக்கொண்டு, ''இவளோடும் இப்போதே ஈசன் திருவடி சேர்வேன், அதற்குற்றகாலம் இதுவே'' என்று துணிந்தவராய் நல்லூர்ப் பெருமானை வணங்கி நமச்சிவாயப் பதிகம்பாடி கோயிலில் தோன்றிய ஜோதியில் புகுந்தார். எல்லோரும் இப்பேரொளியில் புகுவீர்களாக'' என்று ஆணையிட்டருளினார். திருமணத்திற்கு வந்தவர்களும் பணியாட் களும் ஜோதியில் புகுந்து வீடுபேறு அடைந்தனர். திருஞானசம்பந்தப் பெருமான் தம் பேரருளால் திருமணத்திற்கு வந்தவர்களும், பல்லக்குச் சுமந்தவர்களும் பணியாட்களும் அனைவரும் வீடுபேறடையச் செய்தார்.

இவ்வாறு திருஞானசம்பந்தப் பெருமான் உயர்ந்த குலத்தில் பிறந்தாலும் பல்வேறு சமுதாய மக்களோடு நட்புக் கொண்டு சமுதாயப் புரட்சி செய்தார். திருக்கோயில் வழிபாட்டையும் ஆங்காங்குள்ள இறைவனை தன் தமிழால் பதிகமாக பாடுவதையுமே குறிக்கோளாகக் கொண்டு தலயாத்திரை சென்றாலும் ஆங்காங்கே அடியார்கட்கும் சமுதாயத்திற்கும் ஏற்பட்ட பனியின் கொடுமை வெம்மையின் கடுமைகளைப் போக்கிச் சமுதாயத்தின் துன்பம் துடைத்தார். படிக்காசு பெற்றுப் பஞ்சம் போக்கினார். தாம் இறைவனால் செய்த உபகாரத்திற்குப் பிரதியுபகாரமாக எதையும் பெறக்கூடாது, கொடுத்தாலும் மறுத்துவிட வேண்டும் என்பதை சமுதாயத்திற்கு எடுத்துக் காட்டவே பூம்பாவையை மணக்க மறுத்தார். இறைவன் திருவருளால் தாம் முத்தி பெறும் நிலையில் தம் திருமணத்திற்கு வந்த ஞானிகளும் அடியார்களும் ஜோதியில் கலந்து முக்தியடையச் செய்ததோடு அடிமட்டத் தொண்டர்களையும் பணியாட் களையும் பரிசனங்களையும் ஜோதியில் கலந்து முக்தியடையச் செய்த பெருங்கருணைத்திறம் கண்டின்புறுவோமாக. எனவே திருஞான சம்பந்தப் பெருமான் சைவ சமயத்திற்கும் சமுதாயத்திற்கும் பெருந் தொண்டாற்றியமையை அறியலாம்.

# 19. திவ்வியதம்பதியினர் போற்றிய சிவன்

த. கோகிலா திருவேங்கடம், சென்னை

திருஞானசம்பந்தர் கையில் தாளம் ஏந்திப் பாடிச் சிவனை வழிபட்டவர். தமிழ்நாட்டில் சிவன் கோயில்கள் பலவற்றிற்கும் இவரது பாடல்கள் உள்ளன. மறைந்த பாடல்கள் போக இப்போது உள்ள பாடல்கள் 'தேவாரம்' என்று தொகுக்கப்பட்டு, அன்று முதல் இன்று வரை இசையோடு இன்ன பண் என்று குறித்துப் பாடப்பட்டும் வருவது சிறப்பானதாகும்.

ஒவ்வொரு தலத்தின் அமைப்பையும், அழகையும், சிறப்பையும், அத்தலத்தில் வீற்றிருக்கும் சிவனது சிறப்பையும் விளக்கும் பதிகங்கள் அருமையானவை. ஒவ்வொரு பதிகமும் பதினொரு பாடலைக் கொண்டிலங்குபவை. ஒவ்வொரு பதிகத்திலும் ஏழு பாடல்கள் தலத்தையும், தலத்துறை சிவனையும் பற்றி அமைந்திருத்தல் இயல்பு. எட்டாம் பாடலில் இராவணன் கைலை மலையைத் தூக்கி எடுக்க முயன்று துன்பப்பட்டதைப் பற்றியும், சிவபக்தன் ஆனது பற்றியும் குறிப்பிடுவார். ஒன்பதாம் பாடலில் பிரமனும், திருமாலும் தேடிக் காணமுடியாத பெருமை உடையவர் சிவபெருமான் என்று கூறுவார். பத்தாம் பாடலில் சமண பௌத்தத் துறவிகளின் போலி வாழ்க்கையை எள்ளியும், கடிந்தும் குறிப்பிடுவார். பதினொன்றாம் பாடலில் தம் பெயரைப் பெருமிதத்துடன் குறிப்பிடுவார்.

சிவனார், 'லட்சுமிபுரிசுவரர்' ஆகவும், 'மகாலட்சுமி நாதராகவும்' 'மால் வணங்கீசராகவும்' பெயர் பெற்று வழிபடப்படும் தலங்களாகிய, 'திருநின்றவூர்', 'திருமாற்பேறு' ஆகியவற்றைக் குறித்துத் திருஞானசம்பந்தர் பதிகங்கள் புலப்படுத்தும், 'மால்வணங்கீசராகவும் மகாலட்சுமி நாதராகவும்' சிவனார் அருளிய திறம் குறித்து இக்கட்டுரையில் அறிமுகமாக்கப்படுகிறது.

'திருமகள் சிவனை வழிபட்டு நிலைபேறு எய்திய தலம் 'திருநின்றியூர்' ஆகும். மயிலாடுதுறையில் இருந்து சீர்காழி செல்லும் கல்பாதையில் சுமார் ஆறு மைல் தூரத்தில் இருப்பது 'திருநின்றியூர்' தலம் ஆகும். இத்தலத்துறைச் சிவனாரின் பெயர், 'லட்சுமிபுரிசுவரர்' என்றும், 'மகாலட்சுமிநாதர்' என்றும் அழைக்கப்படுகிறது. அம்மையின் பெயர் 'உலகநாயகி' ஆகும். இத்தலத்தின் தீர்த்தம், 'மகாலட்சுமி தீர்த்தம்' என்று வழங்கப்படுகிறது. 'சூலம்படை' என்று தொடங்கும் பதிகம் தேவாரத்தில் பதினெட்டாம் எண் பதிகமாக அமைந்துள்ளது. இப்பதிகத்திற்குரிய பண், 'நட்டபாடை' ஆகும்.

"சூலம் படை சுண்ணப்பொடி சாந்தம் சுடுநீறு;
பாலம் மதி பவளச்சடை முடிமேலது பண்டைக்
காலன் வலி காலின்னொடு போக்கிக் கடிகமழும்
நீலம் மலர்ப் பொய்கை நின்றியூ ரின்னிலையோர்க்கே"

(தேவாரம் - 18. 1-4)

காலனின் வலிமையைச் சிவன் போக்கி அருளினார். எனவே சிவனடியார் மேல் செல்லும் முனைப்பற்று இருக்கிறான். அத்தகு சிறப்புடையது திருநின்றியூர். அங்கிருக்கும் சிவனது சூலம் படை; சுண்ணப்பொடி சாந்தம் சுடுநீறு; மதி முடிமேலது; திருமகள் வழிபட்டு நிலைபேறு எய்திய தலம்; அங்கு வழிபடுவோர் நிலைபேறுதலை உடையோர்.

"அச்சமிலர் பாவமிலர் கேடும் இலர் அடியார்
நிச்சம்முறு நோயும்மிலர் தாமும் நின்றியூரில்
நச்சம்மிட றுடையார் நறுங்கொன்றை நயந்தாளும்
பச்சம்முடை யடிகடிருப் பாதம் பணிவாரே"

(தேவாரம், முதல் திருமுறை - 18.2.1-4)

நின்றியூரில் அடிகள் திருப்பாதம் பணியும் அடியார் அச்சம் முதலியன இலராவர். ஏனென்றால், அவர்கள் தமக்கு உறுதுணையாவார் ஒருவரைப் பெற்றமையால் அச்சம் இலர். அப்பர் இந்த நிலையை, 'சுண்ணவெண் சந்தனச் சாந்தும்' எனும் பதிகத்தில்,

"அஞ்சுவது யாதொன்றுமில்லை
அஞ்ச வருவதுமில்லை"

என்று கூறுவார். பாவம் இலர்; இவர்கள் இது செய்தார்கள். நான் இது செய்வேன் என்றெல்லாம் அவர்கள் பிறரோடு போட்டி போட்டு எதையும் செய்வதில்லை. எனவே வினைக்கு வித்தாகும் பாவம் இலர்; எனவே அப்பாவத்தின் காரணமாக வரும் கேடும் இலராவர். துன்பங்கள் இல்லை. நஞ்சு இலர்; நறுங்கொன்றையை நயந்து விரும்பி அன்போடு சாத்தும் அடியவர்களை ஆளுகின்ற சிவனாரது பாதங்களை அவர் எப்போதும் பணிபவர்கள் என்று சிறப்புரைக்கப்படுகிறது.

- **சோழன் ஒருவன் திருவிளக்கிட்டுத் தினமும் வழிபட்டு வந்தான். அவன் கொண்டுவந்த திரி ஒருநாள் நின்று விடுகிறது. அப்போது சிவலிங்கத்திலிருந்து ஒரு சோதி தோன்றி அவனது வழிபாட்டுக்கு இடையூறு இல்லாமல் உதவியது. அதனால், 'திரிநின்றவூர்' என்றாயிற்று.**
- **பரசுராமன் நின்றியூர் உறை இறைவனுக்குப் பக்கத்தில் உள்ள 360 வேலி நிலத்தை வேதியர்க்குத் தந்து வழி பட்டான். இதை சுந்தரர் தேவாரத்தின், 'தக்கேசி' மூன்றாம் பாடல் கூறுகிறது.**

- இத்தலத்தில் பசு பால் சொரிந்து இறைவனை அபிடேகித்து வந்ததாகவும் கூறப்படுகிறது.

'திருமால்பேறு' எனவும், 'ஹரிசக்ரபுரம்' எனவும் வழங்கப் படும் மற்றொரு தலத்தில் சிவனார் திருமாலுக்கு அருள் செய்தது சொல்லப்படுகிறது. திருமால் ததீசி முனிவருடன் போர் செய்யும் போது அவரது சக்கரம் வாய் மடிந்து போயிற்று. சலந்தரனைக் கொன்ற சக்கரம் சங்கரனாரிடம் இருப்பதை அறிந்த திருமால் இத்தலத்துக்கு நேரே வந்து இறைவனாரை ஆயிரம் தாமரை கொண்டு அர்ச்சனை செய்கிறார். இறைவனாரோ ஒருநாள் ஒருமலரை மறைத்துவிடுகிறார். திருமால் அந்த மலருக்குப் பதிலாகத் தமது கண்ணை இடந்து அர்ச்சிக்கிறார். இதனால் திருமாலுக்குச் சக்கரம் மட்டும் கிடைத்ததோடு அல்லாமல், 'பதுமாக்கன்' என்னும் பெயரும் கிடைத்தது இந்தத் தலத்தில்தான்.

''மன்னி மாலொடு சோமன் பணிசெய்யும்
மன்னுமாற் பேறடிகளை''

என்னும் தேவாரத்திலும்,

**''பெருமாற் றின்படை வேண்டி நற்பூம்புனல்
வருமாற் றின்மலர் கொண்டு வழிபடும்
கருமாற் கின்னருள் செய்தவன்''**

என்றும் திருக்குறுந்தொகையிலும் உள்ளது. இத்தலம் பளூர் இரயில் நிலையத்திலிருந்து தென்மேற்கே இரண்டு கல் தொலைவில் உள்ளது. இத்தலத்தில் இருக்கும் ஈசனின் பெயர்,

**''மால் வணங்கீசர்
மணி கண்கடசர்''**

என்பது. இறைவியின் பெயர், 'கருணைநாயகி', 'அஞ்சனாட்சியம்மை' என்பது. இத்தலத்தைச் செழுமை செய்யும் தீர்த்தம், 'பாலாறு' ஆகும். குலோத்துங்க சோழனின் கல்வெட்டில் (271 of 1906) 'திருமால்பேறு' என்று இத்தலத்தின் பெயர் குறிப்பிடப் பட்டுள்ளது. இறைவனாரின் பெயரோ, 'திருமால் பேறுடையார்' என்றே கல்வெட்டில் குறிக்கப் பட்டுள்ளது. அங்கிருக்கும் விட்டுணு ஆலயத்தில் உள்ள இறைவன் பெயர், 'கோவிந்தபதியில் நின்றருளிய பெருமான் அடிகள்' என்பதாகும்.

தேவாரத்தில் 55-வது பதிகமாக, 'திருமால்பேறு' பதிகம் இடம் பெற்றுள்ளது. 'பழந்தக்க ராகம்' எனும் பண்ணில் அமைந்துள்ளது. 'ஊறியார் திரு' என்று தொடங்கும் இப்பதிகம், 'மொழிமாலை' என்று சேக்கிழாரால் சிறப்பிக்கப்படுகிறது.

**''ஊறியார் தரு நஞ்சினை யுண்டுமை
நீறுசேர் திருமேனியர்**

**சேறுசேர் வயல் தென்திரு மால்பேற்றின்**
**மாறிலா மணிகண்டரே''** (முதலாம் திருமுறை - 55.1-4)

நஞ்சை உண்டவர்; நீற்றை அணிந்தவர்; உடலின் சரிபாதியை மனைவிக்குத் தந்தவர். தன்னை, 'தொடையார் மாமலர் கொண்டு இருபோதும் வழிபட்டால் அவர்கள் விரும்பியதை அளிக்கும் கருணை வள்ளலை வணங்கித் திருமாலும், மகாலட்சுமியும் பயன் பெற்றதில் சிறப்புண்டு.

**''சால மாமலர் கொண்டு சரணென்று**
**மேலை யார்கள் விரும்புவர்**
**மாலி னார்வழி பாடுசெய் மாற்பேற்று**
**நீல மார்கண்ட நின்னையே''** (முதலாம் திருமுறை-55.4.1-4)

இறையனார் தன்மையை உரையாதார் இல்லை. பரவாதார் இல்லை நாளும்; திருமால் பேற்றில் இருக்கும் சிவனாரது அருள் வேண்டுவோர் அனைத்தும் அடையப் பெறுவர் என்று ஞானசம்பந்தர் விதந்தோதுவார்.

'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய ஞானசம்பந்தர் சைவம் தழைக்கப் பாடுபட்டவர். தனிநபர் வழிபாட்டைக் குழுவாகச் சேர்ந்து வழிபடும் கூட்டு வழிபாடாக மாற்றியவர். உள்ளம் உருகிக் கண்களில் நீர் தோய இறைவன்முன் கண்மூடி நின்று கைகூப்பி, மனத்துள் வழி படுவது இன்றைய வழிபடு முறை எனில், பண்ணோடு, பாக்களைப் பலர் கூடி இசைத்து, இறைவனது அருள்செயல்களில் மனம் தோய்ந்து வழிபடும் வழிபாடு, இறைவனது அருள்செயல்களைப் பாடிப் பரவசம் உறுவதை மையமிட்டது. பிராகிருதம், வடமொழி போன்ற மொழிகளும், களப்பிரர், பல்லவர் போன்ற அயல் புறத்தவரும், சமணம், பவுத்தம் என்ற அயன்சமயங்களும் காலூன்றி இருந்த அற்றைத் தமிழகத்தில், 'சாமானியன் நாவிலும் தமிழ்ப்பனுவல்கள் புழங்கவும், மன்னர் உள்ளிட்ட பிரமுகர்களைத் தமிழ் நாட்டத்தினராக்கவும், சைவ, வைணவம் போன்ற அகச்சமயங்கள் தழைக்கவும் பாதை வகுக்கும் பணி ஞானசம்பந்தரால் செவ்வனே நிறைவேற்றப்பட்டது.

- **சரண் அடைந்தோர் இன்னல் தீர்த்து அருளும் இறைவன் சிவன்.**
- **மாலுக்கும், திருமகளுக்கும் அருள் செய்தவன்.**
- **அவனைத் தொழுதால் அச்சமின்றி உலகில் வாழமுடியும்.**
- **சிவனடியாரை நெருங்கக் காலனே அஞ்சுவன்.**

என்று உறுதியான பாதுகாப்பை ஏற்படுத்தி மனிதருக்கு மாண்பமைந்த காப்பாக, அரணாக, புகலிடமாக, திருத்தவத்துறை இறைவன் திகழ்வதை உறுதி செய்யும் ஒப்பற்ற ஆவணங்கள் ஞானசம்பந்தரின் தேவாரப் பதிகங்கள் எனலாம்.

# 20. சம்பந்தர் பாடிய தலங்கள்

இரா. கோபி சுகுணா, புதுவை.

இலக்கியம் என்பது மக்களின் வாழ்க்கையை பிரதிபலிக்கின்ற கருவியாக இருந்து வருகின்றது. சங்க காலத்தில் காதலும், வீரமும் இலக்கியத்தைத் தன்வயப்படுத்திக் கொண்டு இருந்தது. சங்க மருவிய காலமாகிய இடைக்காலத்தில் காதலும், வீரமும் குன்றிய நிலையில் பக்தி என்பது தலைதூக்க ஆரம்பித்தது. காதலையும், வீரத்தையும் மேற்கொண்டு வாழ்க்கையில் துன்பங்களை அனுபவிப்பதை விடப் பக்தியின் மூலம் தானம், தருமம் போன்ற அறச்செயலை செய்து, வாழ்க்கையில் துன்பம் இல்லாத பேரின்பப் பெருவாழ்வு வாழலாம் என்ற முடிவுக்கு மக்கள் வந்தனர். பிறருக்கு உதவி செய்ய முடியா விட்டாலும், தம்மால் இயன்ற அளவு துன்பத்தையாவது செய்யாது இருக்க வேண்டும், என்ற கொள்கையுடன் வாழ்க்கையை நடத்தினர். செங்கல், மரம், சூரியன், வருணன் போன்ற இயற்கை தெய்வங்களை வணங்கிய சூழலில், பல்லவர் காலத்தில் சைவமும், வைணவமும் மக்களிடம் மூழ்க ஆரம்பித்தது. இதனால் பக்தி என்பது இயக்கமாக மாறியது. சைவம் உயர்ந்து பின் தாழ்ந்தது. இதனை மேலும் வளர்த் தெடுக்க வேண்டும் என்ற முயற்சியுடன் பல சைவ பெரியார்கள் ஈடுபட்டனர். மக்கள், மன்னர் இடையே உள்ள இடைவெளியை தவிர்த்து இருண்ட காலத்தை ஒழித்தது. மன்னனை பாடும் முறை மாறி இறைவனை பாடும் முறையும், பல கோவில்களும் உருவானது. பல சாதியினர் ஒன்றாயினர். ஆன்ம நேயத்தால் சிற்றின்பக் காதல் பேரின்பமாக மாறியது. தெய்வ அனுபவங்களையும், செயல்களையும், கதைகளாக எளிய பாடல் களாக உருவாக்கி மக்கள் விரைவில் புரிந்துக்கொள்ளும் நிலையில் பல நூல்களைப் படைத்துக் காட்டியுள்ளனர். இவர்களுள் குறிப்பிடத் தக்கவர்களாக இருப்பவர்கள் சைவ சமயக் குரவர் நால்வர். இவர்களுள் முதல்வராக கருதப்படும் ஞானசம்பந்தர் பாடிய பதிக தலங்களோடு திருக்கடைக்காப்புத் தலங்கள் சிலவற்றையும் எடுத்துக் காட்டுவதே இக்கட்டுரையின் முக்கிய நோக்கமாகும்.

**ஞானசம்பந்தர்**

சிவபாத இருதயாருக்கும், பகவதி அம்மையாருக்கும் மகனாகப் பிறந்து இவர் தம்முடைய 3-வது வயதிலேயே உமைஅம்மையாரின்

ஞானப்பாலைக் குடித்து முழுமையான நிலையில் ஞானத்தைப் பெற்றார். திருமறைக்காட்டில் நாவுக்கரசரும், சம்பந்தரும் சந்தித்தபோது நீண்ட நாட்களாக மூடியிருந்த கோவிலை நாவுக்கரசர் பல பாடலைப் பாடித் திறக்க, தம்முடைய ஒரே பாடலினால் கதவினை மூடச் செய்தவர். ''தோடுடைய செவியன்'' என்ற சொல்லையே முதலாகக் கொண்டு சிவனைப் பற்றிப் பல பாடல்களை இயற்றியுள்ளார். வெண்மையான காளையை உடையவனாகவும் அழியாத வீடுபேற்றினைத் தருபவனாகவும், சிவனை நினைக்கும்போது என் உள்ளம் குளிருமே என்பதை

**''நன்றுடையானை, தீயதிலானை, நரைவெள்ளேறு,**
**ஒன்றுடையானை உமையொருபாகம் உடையானை**
**சென்றடையாத திருவுடையானை சீராப்பள்ளி**
**குன்றுடையானை கூற என் உள்ளம் குளிருமே''**

(திருக்கடைக்காப்பு-3)

எனக் கூறுவதன் மூலம் பக்திநிலை புலனாகிறது.

சம்பந்தன், ஞானசம்பந்தன், ஞானன், வந்தன் போன்ற பல பெயர்களில் தம்மைக் குறித்துள்ளார். அவர் இருந்த ஊர் காரணமாக அழகு, அறிவு, குணம், தமிழ் ஞானம், நல்லார் முதலிய காரணங்களால் அழகர் ஞானசம்பந்தன், அணிகொள் நந்தி, சம்பந்தன், இசைஞான சம்பந்தன், கலைஞான சம்பந்தன் போன்ற வேறு பெயர்களையும் கூறியுள்ளார்.

**''மந்தம் அன பாவங்கள் மேவிய**
**பந்தனையவர் தாமும் பகர்வரேல்**
**சிந்தும் வல்வினை செல்வமும் மல்குமால்**
**நந்தி நாமம் நமச்சிவாயவே''** (திருக்கடைக்காப்பு-25)

சிவபெருமானின் பக்தி நிலையினை முழுவதும் உணர்ந்த பின்பு ஒரு நொடிப் பொழுதேனும் அவர் நினைவு இல்லாது தன் மனம் சாந்தி அடையாது என்ற நிலைக்கு மாறிய பின்பு சிவபெருமானை ''எம்மான் எனக்கு எந்தை'', ''என் அப்பன்'', ''என் கடவுள்'', ''எங்கள் பிரான்'', ''எம் அண்ணல்'', ''என் பொன்'', ''நம் பெருமான்'', ''என் மணி'' போன்றவற்றினைக் கூறியுள்ளார் என்பது புலனாகின்றது.

**''எந்தை ஈசன் எம்பெருமான்**
**ஏறமர் கடவுளென்று ஏத்திச்**
**சிந்தை செய்பவர்க்கு அல்லால்''** (திருக்கடைக்காப்பு-13)

இறைவனின் அற்புதச் செயல்களை எடுத்துக் கூறுவதோடு ''யாம் ஆணையிட்டு கூறுகின்றேன்'', ''ஈசனை சேராதவர் மேல் வினைகள் சேரும்'', ''காழியை மருவாதவர் வான் மருவார்'', ''எம்பெருமான்

பாதத்தை பற்றுவாரை பாவம் பற்றாது'' என உலகோருக்கு சில கருத்துக் களை திறம்பட எடுத்துக் கூறியதால் கற்றோரெல்லாம் இவரை இறைவனாகக் கருதி வணங்க ஆரம்பித்தனர். இவருக்குச் செய்யும் பணிவிடைகள் எல்லாம் இறைவனையே சென்று சேரும் என்ற நம்பிக்கையுடன் இவர் பெயரில் அறக் காரியங்கள் செய்ய மக்கள் துணிந்தனர். ஆதி சங்கரர் 'திராவிட சிசு' என்று இவரைப் போற்றினார். இவர் பாடிய பாடல்களைத் தேவாரத்தில் மூன்று திருமுறைகளாக தொகுக்கப் பட்டுள்ளது. இது 16,000 பாடல்களைக் கொண்டது.

**பதிகம் என்றால் என்ன?**

சங்க காலத்திலேயே பதிகம் என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பது நினைவு கூரத்தக்க ஒன்றாக உள்ளது. ஒரு பொருளைக் குறித்துப் பத்து செய்யுளால் பாடுவது. இது பதிகம் என பொருள்படும். எட்டுத்தொகை நூல்களுள் புறப்பாடலாக உள்ள பதிற்றுப்பத்து என்ற நூலில், ஒவ்வொரு பத்தின் இறுதியிலும் அப்பத்தினைக் கூறும் வரலாற்றினைக் கொண்ட பதிகம் காணப்படுகிறது. அப்பதிகத்தில் பாடினார் தம் பெயர், பத்து செய்யுள்களின் பெயர், பாடினார் பெற்ற பரிசின் அளவு அவ்வரசர் ஆண்ட கால அளவு ஆகியவற்றைக் கொண்டுள்ளது. இது கல்வெட்டுகளிலும், செப்பேடுகளிலும் காணப்படும் மெய்க்கீர்த்திகள் போல இப்பதிகம் அமைந்துள்ளது. இதற்கு மாறாக ஞானசம்பந்தர் ஒவ்வொரு தலத்திலும் பதினோரு பதிகம் பாடியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

**ஞானசம்பந்தர் பாடிய தலங்கள்**

சைவ சமயம் வீழ்ச்சியுற்ற காலத்தில் மேலும் வளர்த்தெடுக்க வேண்டும் என்ற எண்ணத்திலும் பல தலங்களுக்குச் சென்று தன் புகழைப் பாட வேண்டும் என்று கூறிய ''இறைவனின்'' வேண்டுகோளுக்கிணங்கவும், யான்பெற்ற இன்பம் இவ்வையக மக்கள் அனைவரும் பெற வேண்டும், அதற்குரிய வழிமுறைகளைக் கூறவேண்டும் என்பதற்காகவும், இறைவன் வீற்றிருக்கின்ற தலங்களின் சிறப்புக்களையும், இந்த இந்தத் தலங்களுக்குச் சென்று இறைவனை நினைத்து மனதால் உருகினால் இந்த இந்தக் குறைகள் நீங்கி நிறைகள் அடைவீர்கள், என்ற கருத்தினைக் கூறுவதற்காகவும், பல தலங்கள் தோறும் சென்று இறைவனின் புகழைப் பரப்பினார்.

இதில் முதலாவதாகக் ''காழி'' நாதரைச் சிறப்பித்துத் தம் பதிகத்தில் கூறும்போது காழி நாதரே தன் உள்ளத்தைக் கவர்ந்த கள்வர் என்கிறார். (பதிகம்-1) ''நனிபள்ளி'' என்ற ஊரில் சுவாமிகள் ''பாலை நிலத்தை நெய்தல் நிலமாக'' பாடிய இடம்,

**''முத்திலங்கு மணல் சூழ் கிடக்கை''**

என்ற குறிப்பால் உணரலாம். இந்தத் தலப்பதிகத்தை அனைவரும் எளிதில் கேட்பதற்குத் தந்தையின் தோள்மேலிருந்து பாடினார். (பதிகம் - 220-7, 11) இவ்வுலகில் எதுவும் நிலையில்லாத தன்மையில் அழியக் கூடியவை. மனித உடலில் இருக்கும் ஆசையை அழித்து வீடுபேற்றினை அடைய ''திருக்கோடிக்கா'' என்ற ஊரில் இருக்கும் இறைவனின் திருமுடியை வணங்க வேண்டும்.

**''இன்று நன்று நாளை நன்று என்று நின்ற இச்சையால்**
**பொன்று கின்ற வாழ்க்கையைப் போகவிட்டுப் போது மின்**
**மின் தயங்கு சோதியான் வெண்மதி விரிபுனல்**
**கொன்றைதுன்று சென்னியான் கோடிக்காவு சேர்மினே''**

(திருக்கடைக்காப்பு)

''திருவெண்காடு'' என்ற ஊரில் மூன்று குலத்தைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். (பதிகம் - 184) தில்லையில் வாழ்கின்ற அந்தணர்களின் வாழ்வு நிலை, சிவனின் வாழ்வு நிலை போன்று உள்ளது என்பதை,

**''நீலத்தார் கரிய மிடற்றார்''**

என்னும் பதிகத்தில் பாராட்டியுள்ளார். (பதிகம் - 259) ''திருமுதுகுன்று'', ''திருநாரையூர்'', ''கருவூர் திருமறைக்காடு'' போன்ற - ஊர்களுக்கு நேரில் சென்று இறைவனைக் கைதொழுது வணங்கினார் என்பது புலப்படுகின்றது. ''திருநல்வாயில்'' தலத்துப் பதிகத்தில் இறைவன் திருவருள் (உள்ளத் தூய்மை, தன்னை உணரும் நிலை) (பதி 292 - 11) யாருக்குக் கிடைக்கும் என்பதையும், இறைவன் தனக்கு ''முத்துச் சிவிகை'' தந்தருளினார் என்பதையும் கூறியுள்ளார். பழுவூர் தலத்துப் பதிகத்தில் மலையாள அந்தணர் பூசையைச் சிறப்பித்துள்ளார் (பதி. 226). சேய்நல்லூர் பதிகத்தில் சண்டேசுர நாயனாரது வழிபாட்டைப் பாடியுள்ளார் (பதி 170-4). சீர்காழி என்பது சுவாமிகளின் சொந்த ஊராதலால் இத் (பதி 48-7) தலத்தில் ஈசனையே முழுமுதற் கடவுளாகக் கொண்டு தம் உடலை வருத்திப் பக்தியினை வெளிப்படுத்துகின்ற அன்பர்களுக்கு உதவுமாறு ஐயனின் பாத கமலங்களைப் போற்றிப் பாடியுள்ளார். ''கொடிமாடச் செங்குன்றார்'' என்பது திருச்செங்கோட்டைக் குறிக்கும் இவ்வூரில் வீற்றிருக்கும் திருநீலகண்டரிடம், பக்தர்களை வினைகள் பற்றக்கூடாது என்ற வேண்டுகோளினை முன்னிறுத்தி ''திருநீலகண்ட காப்பீட்டு'' பதிகத்தைப் பாடினார். மேலும் இப்பதிகத்தால் அடியார்களுக்கு உற்ற பிணிநோய் நீங்கிற்று என்ற செய்தியும் கூறப்பட்டுள்ளது (116). சம்பந்தர் தம்முடைய சொல் வன்மையினை ''திருநனா'' என்ற ஊரில் உள்ள தலத்தில் காட்டியுள்ளார். இறப்பு, பிறப்பு இல்லாத நிலையில் உள்ள சிவனையே முழுமுதற் கடவுளாக உணர்த்தி மூவேந்தர்களையும் வழிபடச் செய்த ஊர் ''மூக்கீச்சரம்'' (பதி 256-11)

''தந்தையார் போயினார்! தாயாரும் போயினார்!
தாமும் போவார்!
கொந்த வேல் கொண்டொரு கூற்றத்தார்
பார்க்கின்றார் கொண்டு போவார்,
எந்த நாள் வாழ்வதற்கே மனம் வைத்தியால்
ஏழை நெஞ்சே?
அந்தண் ஆரூர் தொழுது உய்யலாம்
மையல் கொண்டு அஞ்சல் நெஞ்சே''(திருக்கடைக்காப்பு)

மண்ணை விரும்பாதார் பேரின்பம் அடைவார், துன்பம் அவர்களை அணுகாது. விண்ணுலகத்தை விட மேம்பட்டதாக கருதப்படும் சிவலோகத்தை சேர்வர். இதை சம்பந்தர்,

விண்புகார் எரிவேண்டா; வெண்மாட நெடுவீதித்
தண்புகார்ச் சாய்க்காட்டு எம் தலைவன் தாள்சார்ந்தரே
(பதி. 159)

மேலும் கோச்செங்கட் சோழனைச் சிறப்பித்தும் ''திருஆணைக்கா'' என்ற தலத்தில் பாடியுள்ளது சிறப்புக்குரியதாக உள்ளது (பதி. 159-5). இறைவனின் திருச்சபை சிறப்பினைத் ''திருநறை'' தலத்தில் கூறியுள்ளார் (பதி 29). புகழ்துணை நாயனார் ஒவ்வொரு நாளும் காசு பெற்ற செயலையும், இறைவனின் திருவிளையாடலையும் ''அரிசிற்கரைப் புத்தூரில்'' பாடினார். (பதி. 199-7).

எமக்குக் கொடுப்பதற்கு ஒன்றும் இல்லையோ, இதுதான் எனை ஆளும் முறையோ என ''திருவிடை மருதூரில்'' வீற்றிருக்கும் இறைவனிடம் வாதிட்டார் ''சாத்த மங்கை'' தலத்தில் உள்ள பதிகத்தில் திருநீலநக்கரைச் சிறப்பித்துள்ளார். நல்லார்கள் முன்னிலையில் எம்பெருமான் பற்றிய பாடலை ''நானகக் காழோணம்'' என்ற தலத்தில் பதிகத்தைப் பாடினார். (252-11)

சிறுத்தொண்ட நாயனாரின் தொண்டு சிறப்பையும், சிவன் இவரிடம் நடத்திய திருவிளையாடலையும், ''திருச்செங்காட்டங்குடி'' என்ற ஊரில் உள்ள தலத்தில் இப்பதிகத்தை பாடினார்.

''திருப்புகலூரில்'' முருக நாயனார் பூசையைச் சிறப்பித்துக் கூறியுள்ளார். ''தேவூர்'' தலத்தில் தமிழ்க்கலை தெரிந்தவர் பெரும்பாலோர் உள்ளனர் என்பதையும், தேளும், பாம்பும் தெருவில் அதிகமாக இருந்த செய்தியையும் தெரிவித்துள்ளார். (பதி. 218-7) ''திருமறைக்காட்டில்'' சிவபெருமானின் கதவை மூடுவதற்கு பதிகப் பாடலை பாடியுள்ளார். பல்வீழ்ந்து நாத் தளர்ந்து, பழிவந்து சேரும், இவ்வாழ்க்கையிலிருந்து நீங்க திருப்பெண்ணாகடம் என்ற ஊரில் உள்ள தூங்கானைமாடம் என்னும் கோவிலில் வந்து தொழுங்கள் எனப் பதிகத்தில் பாடியுள்ளார்.

**பல்வீழ்ந்து நாத்தளர்ந்து மெய்யில்வாடிப்**
**பழிப்பாய் வாழ்க்கை ஒழியத்தவம்**
**கல்சூழ் இடம் கருதிநின் றீரெல்லாம்**
**........................................**
**தொல்சீர்க் கடந்தைத் தடங்கோயில் சேர்**
**தூங்கானை மாடம் தொருமின்களே** (திருக்கடைக்காப்பு)

ஞானசம்பந்தர் அனைத்துப் பாடல்களையும் தமிழிலேயே பாடியிருக்க, ''திருப்பூவணம்'' என்ற தலத்தில் பகைவர் அஞ்சும்படியாகப் பாடலைத் தமிழில் இயற்றியுள்ளார் என்ற செய்தி அனைவரும் சிந்திக்கக் கூடிய ஒன்றாக உள்ளது. பிறைசூடிய தோற்றத்தையும், (பதி. 64-11) தன் உடம்பில் ஒருபாகமாக உமாதேவி அமர்ந்த செய்தியையும், சம்பந்தர் ''திருப்பாதளீச்சுரம்'' என்ற தலத்தில் பாடியுள்ளார். ஓடம் செலுத்தி அது கரையை நோக்கி அடைவதற்குக் ''கொள்ளம் பூதூர்'' என்ற தலத்தில் பதிகம் ஒன்று பாடினார். (பதி. 264-6) ''திருவீழிமிழலை'' என்ற தலத்தில் இறைவா, என்னையும் சிறிது மதித்து, நான். தேவரை வாதத்தில் வெல்லவும், புத்த சமணரை அழிக்கவும் உதவி செய்தாய் என இறைவனை புகழ்ந்து கூறியுள்ளார். (பதி. 374 -10).

அம்பிகை பாட, இறைவன் ஆடிய நிலையும், எம்பெருமான் தன் ஊர்தியில் ஏறி கனவில் வந்து துயர் செய்தார் எனவும் ''திருவாய்மூர்'' தலத்தில் பதிகத்தைப் பாடினார். ''திருவதிகை'' ஊரில் இறைவனின் நடன தரிசனத்தைக் கண்டதாகக் கூறியுள்ளார். ''திருவாலங்காட்டுத்'' தலத்தைப் பாட மறந்தபோது தம் நெஞ்சத்துக்கு நினைவுபடுத்திய இறைவனை நினைத்துப் பாடினார். ''காளத்தி'' என்ற ஊரில் கண்ணப்பனார் வழிபாட்டு முறையினை பாடியுள்ளார். தாம் நேரில் சென்று காண முடியாத காலத்தில் தம் அறிவினால் ''கேதாரத்தை ஆய்ந்து கொள்ள அருந்தமிழ்கள் பத்தும்'' என்ற பாடலை அருளினார். ''திருவான்மியூரில்'' இறைவனருள் செய்தபடி வினாவுரை கொண்ட பாடலைப் பாடி, ''சீகாழி'' என்ற வளர்த்தலத்தில் இனி என்னை உன் பாதத்தின் அடியில் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று வேண்டினார். (பா. 261-9).

**''குறையுடையார் குற்றம் ஓராய்! கொள்கையினால் உயர்ந்த**
**நிறையு டையார் இடர்களையாய், நெடுங்களமே யவனே''**
(திருக்கடைக்காப்பு)

திருமணக்கோலம் பூண்ட சுவாமிகள், என் பாடலில் உண்மை நிலை பெற வேண்டும் என்றும், அன்பர்கள் மெய்யாகக் கொள்ளுதல் வேண்டும் என்றும், ''நல்லூர்த் திருகோவிலிற்'' குடிகொண்டிருந்த

பெருமானே! உனது திருவடியை கூறக் கருதி இப்பதிகத்தை இத்தலத்தில் பாடினேன், எனக்கு அருள் செய்வீராக என வேண்டி நின்றார். (பதி. 383-1, 8.11).

''........................................

அந்தமில் குணத்தார் அவர் போற்ற
அணங்கினொடு ஆடல்புரி
எந்தை மேவிய கெம்பம் தொழுதேத்த
இடர்கெடுமே''

என்ற பாடலாலும் அறியலாம்.

**ஞானசம்பந்தர் அருளிய பெண்நிலை**

பதிகம் பாடிய தலங்களில் பெண்களின் நிலை, துயர் போக்கு வதற்காகத் தனித்த நிலையில் சில பாடல்களை இயற்றியுள்ளார். சோகம் அடைந்த ஒரு பெண்ணின் நிலைக்காக ''பாச்சிலாச்சிராமம்'' என்ற ஊரில் உள்ள தலத்தில் பாடினார். முக்கடவுளில் முழுமுதற் கடவுளான உங்களை அன்றி வேறு சக்தியை நினைவாலும் நினைக்க மாட்டாள் என்பதை,

**''மூவரிலும் முதலாய் நடுவாய்**
**மூர்த்தியை யன்றி மொழியாள்''** (பதி. 44).

என்று கூறியுள்ளார்.

''திருவாலவாய்'' தலத்தில் மங்கையர்க்கரசியாரையும், குலச்சிறை நாயனாரையும் சிறப்பித்துப் பாடியுள்ளார். ''திருமயிலை'' என்ற ஊரில் உள்ள தலத்தில் திருவிழாக்களை காணாது போகிறாயே பூம்பாவையே, என பூம்பாவையைப் பாடினார். (பதி. 183-11)

உலகத்தாருக்கும், பெண்களுக்கும், அடியார்களுக்கும் மட்டும் அல்லாது இயற்கையை கொண்டும் பாடலை பாடினார். எம்பெருமான் வீற்றிருக்கும் பல தலங்களுக்கு சென்று பக்தி நிலையினை பரப்பினார் என்பது நாம் அனைவரும் அறிந்த ஒரு செய்தியே என்றாலும் பதிகம் மற்றும் திருக்கடைக்காப்பு போன்றவற்றில் உள்ள சில தலங்களையும், அதில் கூறப்பட்டுள்ள செய்திகளையும் இக்கட்டுரையில் குறிப்பிடப் பட்டுள்ளது.

# 21. சம்பந்தர் தேவாரத்தில் அறக்கருத்துக்கள்

'கோமதி சூரியமூர்த்தி, மதுரை.

வேதநெறி தழைத்தோங்க, மிகுசைவத்துறை விளங்க அவதரித்தவர் திருஞானசம்பந்தர். அவரின் மூவாண்டிலே, உமையம்மையார் தம் திருமுலைப்பாலைக் கறந்து சிவஞானத்தைக் குழைத்துப் பொற்கிண்ணத்தில் வைத்து ஊட்ட, அதனைத் தன் நாவால் மறித்து, உலகோர் உய்ய அவர்களின் செவிக்கினிய அருட்பாடல்களை அருளிச் செய்தார் திருஞானசம்பந்தர். அவருடைய அருட்பாடல்கள் சைவத் திருமுறைகளில் முதல் மூன்று திருமுறைகளாக விளங்குகின்றன. அவை படிப்போரிடத்துப் பக்திச்சுவையை எழுப்பி இறை நம்பிக்கையை ஊட்டுவன. இலக்கிய இன்பம் பயப்பன. சைவ சித்தாந்தக் கருத்துக்கள் பலவற்றுக்கு அடிப்படைக் கருவூலங்களாகத் திகழ்வன. அதுமட்டுமல்லாமல் பூக்களால் தொடுக்கப் பட்ட மாலைக்குள் இழைநார் ஊடுருவிச் செல்வதுபோல, அப்பக்திப் பாடல்களில், மனிதனை முறைப்படுத்தி அவனது உள்ளத்தைப் பண்படுத்தும் உயரிய அறக்கருத்துக்கள் பல மிளிர்கின்றன. திருஞானசம்பந்தர் தேவாரத்தில் காணப்படும் அறக்கருத்துக்களை எடுத்துக்காட்டுவதே இக்கட்டுரையின் நோக்கம் ஆகும்.

**அன்புடைமை**

அன்பு என்பது அல்+பு என்பதன் புணர்ச்சியாகும். அல்பு என்பது அல்லாமை எனப்படும். அதாவது தன் அல்லாமை - தான் அற்று நிற்கும் நிலையே அன்பு. அன்பு அனைவருக்கும் இருக்க வேண்டிய அவசியமான பண்பு. மனிதனை மனிதனாக வாழச் செய்வது அன்பு. மனிதனை மற்ற உயிரினங்களிலிருந்து பிரித்து உயர்த்திக் காட்டுவது அன்பு. அனைவரும் அன்பு என்னும் பண்பு கொண்டு ஒழுகவேண்டும் என்பதை அடியவர்கள் செயல் மூலம்,

"தொழுது பொழுது தோத்திரங்கள் சொல்லித் துதித்து
நின்று அழுது நக்கும் அன்பு செய்வார்" (1:73:11)

"அகனமர்ந்த அன்பினராய்" (1:132:6)

"அன்புற்று சிந்தையராக அடியவர்" (3:383:3)

என்று ஞானசம்பந்தர் அறிவுறுத்துகின்றார்.

"செல்வன் கழல் நேசமாக்கும் திறத்தார் அறத்தார் நெறிப் பாலரே"
(2:255:4)

என்பதால் இறைவன் திருவடிகளைப் பணிந்து அன்புடன் ஏத்தும் பாங்குடையவர்கள் அறத்தின் வழி நிற்பவர்கள் என்பதைத் திருஞான சம்பந்தர் உணர்த்துகின்றார். அன்பு என்னும் பண்பினால் அறம் என்னும் பயன் உண்டாகும். இறைவனை வழிபடும் தொண்டர்கள் தீயனவற்றை மனத்தாலும் அறியார் என்பதை,

"...................... நல்லூர்ப் பெருமானை
ஏம மனத்தாராய் இகழாது எழுந் தொண்டர்
தீப மனத்தார்கள் அறியார் தீயவே" (1:86:8)

என்பதால் ஞானசம்பந்தர் அறிவுறுத்துகின்றார். திருப்பட்டீச்சரப் பதிகப் பாடல் ஒன்றில்,

"இறைவனடி முறை முறையின் ஏத்துமவர்
தீத்தொழில்கள் இல்லர் மிகவே" (3:331:6)

என்பதால் இறைவனைப் போற்றுபவர்கள் தீய செயல்கள் செய்யார் என அறிவுறுத்துகின்றார். திரு இன்னம்பர் தலப் பதிகப் பாடலில்,

" உமைத் தொழுபவர் கூர்த்த நற்குணமுடையோரே" (3:353:8)

என்கிறார், திருமுதுகுன்றப் பதிகப் பாடலில்,

" உமைக் கருதுவார் சிட்டர்கள்" (3:357:10)

என்கின்றார்.

சிட்டர்கள் என்றால் நல் ஒழுக்கத்தினர் எனப் பொருள். எனவே மனம், வாக்கு, காயத்தால் தீமை செய்யாது நற்குண, நல்லொழுக்கத்துடன் ஒருவன் திகழ வேண்டுமானால் இறைவனிடம் அன்பு செலுத்தி வழி படுதல் இன்றியமையாததாகும். "இறைவனிடத்தும் அடியவர்களிடத்தும் அன்பில்லாதவர்கள், பிறவுயிர்கள் யாவற்றினும் அன்பில்லாதவர்களாய், தம் மேலுமே அன்பில்லாதவராவர். இத்தகையோர் உயிரோடிருந்தும் அறிவில்லாத பிணங்கள் ஆவர்" என்று அருணந்தி சிவாச்சாரியார் கூறுவதும் (சிவஞான சித்தியார் சுபக்கம், 323) இங்கு நினைவுகூரத்தக்கது.

**காமத்தையும், கடுஞ்சொல்லையும் நீக்குக**

"கள்ளம் ஒழிந்து வெய்ய
சொல்லை யாறித் தூய்மைசெய்து காமவினை அகற்றி"
(1:50:1)

என்ற திருஞானசம்பந்தர் பாடலடிகள் உயிர்கள் காமத்தை நீக்கி, கடுஞ்சொல் கூறுவதைத் தவிர்க்க வேண்டும் என்பதை அறிவுறுத்தும்.

அறம் என்று சொல்லப்படுவது பொறாமை, **ஆசை,** சினம், **கடுஞ்சொல்** ஆகிய நான்கையும் நீக்கி நடைபெறுவதாகும் என்ற வள்ளுவர் கூறுவது (குறள்-35) இங்கு நினைவுகூரத்தக்கது.

**புறங்கூறாமை**

தம்மிடமுள்ள குற்றத்தை மறந்தும், மறைத்தும் பிறரிடம் குற்றம் காண்பதும், அதைப் பெரிதுபடுத்திப் பலரிடமும் பேசுதலும் மனிதனுக்குரிய இயல்புகளுள் ஒன்று. பிறரைப் பற்றிக் கூறும் கோட்சொல் காற்றோடு கூடிய தீயைப் போல விரைந்து பரவும் என்பார் ஔவையார் (கொன்றைவேந்தன் - 24). ஒருவன் அறத்தைப் போற்றாது தீய செயல் களைச் செய்தொழுகுபவனானாலும், அவன் **புறங்கூறாதவன் என்று மற்றவர் சொல்லும்படி நடத்தல் நல்லது** என்கின்றார் வள்ளுவர் (குறள்-181). ஒருவன் பிறரால் பெருமதிப்புப்பெற வேண்டுமானால் மற்றவர்களின் நற்செயல்களைப் பிறரறியச் சொல்ல வேண்டும். அவர்களின் சிறுமையைப் பிறரிடம் சொல்லாது காக்க வேண்டும் என்று குமரகுருபரர் அறிவுறுத்துவார் (நீதிநெறி விளக்கம்-19). நல்லவர்கள் ஒருவனுடைய நற்செய்கைகளையே பேசுவர். பொல்லாதவர்களே புறங்கூறுவர் என்பதையும், அறியாமையுடையவர்கள் அதனைப் பலரிடமும் பரப்பிப் பழி உண்டாக்குவதையும்,

**'' நல்லார் அறஞ்சொல்லப் பொல்லார் புறங்கூற**
**அல்லார் அலர் தூற்ற''** (1:84:10)

என ஞானசம்பந்தர் குறிப்பிடுகின்றார். இங்கு அறம் என்றது நற்செய்கை களைக் குறித்தது. புறம் பேசுதல் எவ்வளவு தவறோ, அவ்வளவு தவறு புறங்கூறுதலைக் கேட்பதும். இதனைத் திருஞானசம்பந்தர், **''செவித் தொளைகளால் யாவும் கேளார் அவன் பெருமை அல்லால் அடியார்கள் தாமே''** (2:251:4) என்பதால் குறிப்பாகப் புலப்படுத்துகின்றார் எனலாம்.

**பயனில சொல்லாமை**

பயனில்லாத சொற்களைப் பலமுறையும் பேசுகின்றவனை மனிதன் என்று சொல்லாதீர்கள். அவன் மக்களுள் பதர் எனக் குறிப்பிடுகின்றார் வள்ளுவர் (குறள்-196).

**''பேச்சினால் உமக்கு ஆவது என் பேதைகாள்''** (2:142:2)

என்பதால், சிவசம்பந்தமில்லாத அவப்பேச்சால் ஒரு பயனுமில்லை. அவ்வாறு பேசுபவர்கள் அறிவிலிகள் என அறிவுறுத்துகின்றார் திருஞானசம்பந்தர்.

**''சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க**
**சொல்லிற் பயனிலாச் சொல்''** (குறள்-200)

என்று வள்ளுவர் கூறுகின்றார்.

"பெற்றம் அமரும் பெருமானை அல்லால்
பேசுவது மற்றோர் பேச்சிலோமே" (1:5:9)

என்பதால் மெய்யுணர்வு பெற்றவர்கள் இறைவனைப் பற்றிய பேச்சு அல்லாமல் வேறு பயனில்லாத வீண் பேச்சுப் பேச மாட்டார்கள் எனத் திருஞானசம்பந்தர் அறிவுறுத்துகின்றார்.

**வாய்மை**

ஒருவன் பொய் பேசாமையாகிய அறத்தை இடைவிடாது செய்து வந்தால் அவன் மற்ற அறங்களைச் செய்ய வேண்டியதில்லை என்கின்றார் வள்ளுவர் (குறள்-297). திருமூலர் பஞ்சமா பாதகங்களுள் ஒன்றாகப் பொய்கூறலைக் கூறுகின்றார். (திருமந்திரம்-207). **"உண்மை சொல்பவன் இம்மையில் பொருளையும், மறுமையில் புண்ணிய லோகத்தையும் அடைவான். சத்தியமே மேலான தானமும், தவமும், தருமமுமாம். எவனுடைய புத்தி சத்தியத்திலே நிற்குமோ, அவன் இகத்திலே தெய்வத் தன்மையை அடைவான். சத்தியத்தின் மேலான தருமமும், அசத்தியத்தின் மேலான பாவமும் இல்லை"** என்கிறார் ஆறுமுக நாவலர் (பெரியபுராண வசன சூசனம், ப.29) **"பொய்யும், பொறாமையுடன் புன்சொல்லும் கூறும் நா, முதுமையில் கண்டத்தில் கோழை கட்டி மூச்சிரைக்கும்"** என்கிறார் திருஞானசம்பந்தர் (2:233:8). மனம், வாக்கு, செயல் மூன்றிலும் பொய்மை இல்லாது மெய்மை மிளிர வேண்டும் என்பதை,

**"பொய்யிலா மனத்தார் பிரியாது பொருந்தும் புகலூரே"** (1:2:5)

**"பொய்யா மொழியார் முறையால் ஏத்திப் புகழ்வார்"** (1:67:7)

**"நாள்தொறும் பொய்யிலா அடிமை புரிந்தார்க்கு அருளாயே"** (2:189:7)

என்று அடியார் பண்பு மூலம் அகிலோர்க்குத் திருஞானசம்பந்தர் அறிவுறுத்துகின்றார்.

**வஞ்சம் கூடாது**

ஒழுக்கக் கேட்டிற்குப் பிறர்பால் கொள்ளும் பொறாமையும், வஞ்சமும் காரணமாய் அமையும். இவை தவிர்க்கப்பட வேண்டும் என்பதை,

**"கள்ள நெஞ்சே வஞ்சகக் கருத்தை விட்டு"** (2:237:6)

என உணர்த்துகின்றார் திருஞானசம்பந்தர். இறைவனை இடையறாது நினைக்கும் நெஞ்சில் அவனருளால் வஞ்சம் உண்டாகாது. அபிராமி அம்மையின் கடைக்கண் பார்வை **"நெஞ்சில் வஞ்சமில்லா இனம் தரும்"** (அபிராமி அந்தாதி-69) என்கின்றார் அபிராமிபட்டர்.

**"நெஞ்சினுள் வஞ்சமொன்று இன்றித் தேறுவார்கள் சென்று ஏத்தும்
சீர் திகழ் காழி நன்னகரே''** (2:232:6)

என்று திருஞானசம்பந்தர் எடுத்துரைக்கின்றார்.

**அறுபகையை அறுத்தல்**

புறத்தேயுள்ள பகையைப் போன்று மனிதர்களின் அகத்திலும் மெய்யுணர்விற்குப் பகைகள் உள. அவை காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் என ஆறாகும். இவை தம்மை உடையாரை அழிக்கும் தன்மையுடையனவாதலால் **"செறுபகை"** எனப்படும். இச்செறு பகையை வெல்ல வேண்டும். வெல்ல வழியாது? இறைவனை வணங்கி அவனருளால் வெல்ல முயல வேண்டும்.

**''வலையம் வைத்த கூற்றமீவான் வந்து நின்ற வார்த்தை கேட்டுச்
சிலையமைத்த சிந்தையாலே திருவடி தொழுதுய்யினல்லால்
கலையமைத்த காமச் செற்ற குரோத லோப மதவருடை
உலையமைத்திங்கு ஒன்றமாட்டேன் ஓணகாந்தன் தளியுளீரே"**
(7:5:8)

என்று சுந்தரர் குறிப்பிடுவது இங்கு நினைவுகூரத்தக்கது. அவ்வாறு அறுபகை செற்றவர்கள் உள்ளத்தில் அரன் அகலாது இருப்பன். இதனை, ஞானசம்பந்தர்,

**''அகனமர்ந்த அன்பினராய் அறுபகை செற்று
ஐம்புலனும் அடக்கி ஞானப்
புகலுடையோர் தம்முள்ளப் புண்டரிக்கத்துள்
இருக்கும் புராணர்''** (1:132:6)

எனக் குறிப்பிடுகின்றார். தூசும், தும்பும், ஒட்டடையும் படிந்த வீட்டில் யாரும் குடியிருக்க விரும்பார். நாம் குடியிருக்கும் வீட்டைத் தூய்மையாக வைத்துக் கொள்வது போல, இறைவன் எழுந்தருளும் நம் உள்ளத்தை அறுபகையை அகற்றித் தூய்மையாக வைத்துக் கொள்ள வேண்டும்.

**ஐம்புலனடக்கம்**

மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகள் வாயிலாக நுகரப்படும் ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை என்னும் விடயங்கள் ஐம்புலன்கள் எனப்படும். ஐம்பொறிகள் யாரையும் கெடுக்கவில்லை. அவற்றின் புலன்வழிச் செல்கின்ற ஆசையே அனைவரையும் கெடுக்கின்றது. எனவே புலனடக்கம் என்பதற்கு ஐம்புல ஆசையை அடக்குதல் எனப் பொருள். புலனடக்கம் ஏன் தேவை? அவற்றை அடக்காமல் போனால் அவை ஒருவனை தீ நெறிக்கண் செலுத்தி அழிவுக்கு வழிவகுக்கும். புலனடக்கம் இல்லாதவனிடம் அகப்பகையாகிய அறுவகைக் குற்றங்களும்

உண்டாகும்.

"அஞ்சும் அடக்கு அடக்கு என்பர் அறிவிலார்
அஞ்சும் அடக்கும் அமரரும் அங்கிலை
அஞ்சும் அடக்கில் அசேதனமாம் என்றிட்டு
அஞ்சும் அடக்கா அறிவறிந்தேனே" (திருமந்திரம்- 2033)

என்கின்றார் திருமூலர். இந்திரியங்கள் ஐந்தையும் அடக்க வேண்டும் என்று வற்புறுத்திச் சொல்வார்கள் அறிவிலாதவர்கள். அவ்வாறு ஐந்தையும் அடக்கிவிட்டால் அறிவற்ற சடப்பொருளாகும் என்று கருதி, ஐந்தையும் அடக்காது இயங்கச் செய்கின்ற உபாயத்தை அறிந்து கொண்டேன் என்கின்றார் திருமூலர். அந்த உபாயம் யாது? புலன்களை மடைமாற்றம் செய்ய வேண்டும். அதாவது உலகவழி நோக்கிச் செல்ல விடாது இறைவழி நோக்கித் திருப்ப வேண்டும். இதனைத் திருஞானசம்பந்தர், ஆலவாய் அடியார்கள் செயல் மூலம் நமக்கு அறிவுறுத்துகின்றார்.

"புலன்கள் செற்றுப் பொறியை நீக்கிப் புந்தியிலும்
நினைச் சிந்தை செய்யும்
அலங்கல் நல்லார்கள் அமரும் கூடல்" (1:7:8)

என்கின்றார். பொறிகளால் பெறப்படும் புலன்களை மனம் பற்றிப் புந்திக்குத் (புத்திக்கு) தெரிவிக்கும். நாம் புத்தியை இறைவனைச் சிந்திக்கும்படிச் செய்ய வேண்டும். புலன்களின் மடைமாற்றம் மனிதர் களை மனம், மொழி, மெய்களால் நன்நெறியில் ஒழுகச் செய்யும்.

**மெய்யுணர்தல்**

ஐம்புலன்களையும் அடக்கித் தம் வசப்படுத்தியவர்க்கும் மெய்யறிவு இல்லையென்றால் அதனால் பயனில்லையாகும் என்று வள்ளுவர் கூறுகின்றார் (குறள்-354).

"புலந்தாங்கி ஐம்புலனும் செற்றார் வாழும் பூம்புகலி" (2:190:6)

என்பதில் 'புலந்தாங்கி' என்றது மெய்யுணர்வு பெறுதலை உணர்த்தும். மற்றொரு பாடலில்,

"பொய்யகத்து ஐயுணர்வு எய்தி மெய்
தேறினார் வழிபடும் தென்குடித் திட்டையே" (3:293:6)

என்கின்றார் திருஞானசம்பந்தர். இங்கு, "**பொய்யகத்து ஐயுணர்வு எய்தி**" என்றது பொய்ப் பொருட்கள் மீது - நிலையில்லாத உலகப் பொருட்கள் மீது செல்லும் ஐம்புல அவாவை அடக்கி எனப் பொருள். "**மெய் தேறினார்**" என்றது சிவனே பரம்பொருள் எனத் தெளியும் மெய்யுணர்வை உணர்த்திற்று.

ஞானசம்பந்தர் தம் பாடல்கள் மூலம் மக்களிடையே இறை நம்பிக்கையை ஊட்டி இறையுணர்வை எழுப்புகின்றார். இறையுணர்வு ஒன்றுதான் மக்களை நல்வழிப்படுத்தும். ஒழுக்கமுள்ளவர்களாக ஆக்கும். எனவே தான் அக்காலச் சான்றோர் **"இரை தேடுவதோடு இறைவனையும் தேடு"** என்றனர். இக்காலத்தில் மக்கள் அறவழியில் செல்லாமல் அதர்ம வழியில் செல்வதற்குக் காரணம் இறையுணர்வு இல்லாமையே ஆகும்.

### பொருளீட்டலில் அறம்

பொருளீட்டுவோர் அதனை வஞ்சனை பொருந்திய தீயவழியில் ஈட்டுதல் கூடாது. அவ்வாறு ஈட்டினால், பச்சை மண்கலத்தில் ஊற்றப்பட்ட நீர் நில்லாததோடு அம்மண்கலத்தையும் அழித்துவிடுவது போல், அப்பொருள் நிலையாது போதலுடன் ஈட்டியவனையே அழித்துவிடும் என்று வள்ளுவர்,

**''சலத்தாற் பொருள் செய்தே மார்த்தல் பசுமட்**
**கலத்துள் நீர் பெய்திரீஇ மற்று''** (குறள்-660)

என்று கூறுகின்றார். தீயவழியில் பொருளீட்டக் கூடாது என்பதை ஓமாம்புலியூர் சான்றோர் செயலால்,

**''சலத்தினால் பொருள்கள் வேண்டுதல் செய்யாத்**
**தன்மையார் நன்மையால் மிக்க**
**உலப்பில் பல் புகழார் ஓமாம் புலியூர்''** (3:380:5)

என்று திருஞானசம்பந்தர் அறிவுறுத்துகின்றார்.

### ஈதலறம்

**''செல்வத்தின் பயன் ஈதல்''** (புறம் - 189)

என்று புறநானூறு கூறுகின்றது. ஈதல் அறநெறியை,

**''விண்பொய் அதனால் மழை விழாது ஒழியினும்**
**விளைவுதான் மிக உடை**
**மண்பொய் அதனால் வளம் இலாது ஒழியினும்**
**தமது வண்மை வழுவார்**
**உண்ப கரவார்''** (3:333:7)

என்று திருச்சண்பை நகர்வாழ் அடியார் பண்பு மூலம் உலகோர்க்குத் திருஞானசம்பந்தர் அறிவுறுத்துகின்றார். வானம் பொய்த்து அதனால் மழை பொழியாமலும், நிலம் வறட்சி கொண்டு வளமை இல்லாது போனாலும், தமது வள்ளல் தன்மையிலிருந்து சண்பைநகர் அடியார் வழுவார். அடியவர்கட்கு அமுது செய்விப்பதிலும் தவறார் என்கின்றார் ஞானசம்பந்தர். அருளாளர்கள் தம் செல்வத்தை வறியவர்களுக்குக் கொடுத்து, அதனால் அவர்கள் அனுபவிக்கும் இன்பத்தினைக் கண்டு

தாமும் மகிழ்வர். இவ்வாறு ஈவதால் எய்தும் இன்பத்தினை **"ஈத்துவக்கும் இன்பம்"** என்பர். இதனை,

**"இன்மையாற் சென்றிரந்தார்க்கு இல்லை என்னாது ஈந்துவக்கும்**
**தன்மையார் ஆக்கூரில் தான் தோன்றி மாடமே"** (2:178:9)

என்று ஆக்கூர் அருளாளர்களின் ஈகைச் சிறப்பைப் போற்றுவதன் மூலம், நாமும் ஈதல் வேண்டும், அதனால் இன்பம் பெறுதல் வேண்டும் எனத் திருஞானசம்பந்தர் நமக்கு அறிவுறுத்துகின்றார்.

மேலும் மற்றொரு பாடலில்,

**"இரந்தோர்க்கு எந்நாளும் காலம் பகராதார்"** (1:81:9)

என்று சீகாழிவாழ் மக்கள் பண்பு மூலம், எப்போதும் காலம் தாழ்த்தாது தான, தருமம் செய்ய வேண்டும் என ஈவோருக்கு ஞானசம்பந்தர் அறிவுரை கூறுகின்றார். மேலும், **"கரப்பவர் வீடுகளின் கடைவாயில் தோறும் சென்று கால் கடுக்க நின்று யாசிக்காதே"** என்று (2:236:2) தம் நெஞ்சுக்கு அறிவுறுத்துவது போல இரப்போர்க்கு அறிவுரை பகர்கின்றார் ஞானசம்பந்தர்.

## இல்லறம் என்னும் நல்லறம்

ஒரு நாமம் ஒருருவம் ஒன்றுமில்லா ஒப்பற்ற பரம்பொருளை அம்மையப்பராக, அர்த்தநாரீசுரராக வழிபடுகின்ற சைவ சமயம், இல்வாழ்வார் கணவன் மனைவியராய் அன்புடன் வாழ்வதே சிறந்த வாழ்வு என்ற அறநெறியை உணர்த்துகின்றது. கழுமலநகரில் இறைவன் பெண்ணோடு காட்சியளிப்பது, மண்ணில் நல்ல வண்ணம் மக்கள் இல்லற வாழ்வு வாழ்ந்து சிவகதி அடைய என்று கூறுவது (3:282:1) இல்லறம் போற்றப்பட வேண்டிய நல்லறம் என்பதை உணர்த்தும். பொருளீட்டலில் அறம் பின்பற்றப்படுவது போல இன்பம் துய்ப்பதிலும் அறம் பின்பற்றப்படவேண்டும்.

**"செப்ப நெஞ்சே நெறிகொள் சிற்றின்பம்**
**துப்பன் என்னாது அருளே துணையாக"** (1:25:1)

என்பதால் உலக இன்பம் இறையருளை நினைந்து நுகரப்பட வேண்டும் என ஞானசம்பந்தர் அறிவுறுத்துகின்றார். இதனைத் திருநள்ளாறும் திருவாலவாயும் என்ற பதிகப் பாடலிலும்,

**"போகமும் நின்னை மனத்து வைத்துப் புண்ணியர் நண்ணும்"** (1:7:6)

என்று ஞானசம்பந்தர் அறிவுறுத்துகின்றார்.

**கல்வியும் கேள்வியும்**

கற்பனவெல்லாம் கல்வியாகா. மெய்ந்நூற்கல்வியே கல்வியாம். **''கற்கக் கசடறக் கற்பவை''** (குறள்-391) என்பதில் **'கற்பவை'** என்றது சிறப்பாக அருள் நூல்களையே குறிக்கும். **'கற்றல் கேட்டல் உடையார் பெரியார்'** (1:1:2) என்பதில் கற்றல் என்றது இறைவனின் பொருள் நூல்களையும், கேட்டல் என்றது அப்பெருமானின் புகழைக் கேட்டலையும் உணர்த்தும்.

> **''ஊனம் இலராகி உயர் நற்றவம் மெய்கற்றவை உணர்ந்த அடியார்**
> **ஞானம் மிக நின்று தொழ''** (3:329:3)

என்று ஞானசம்பந்தர் கூறுவதில் ''மெய் கற்றவை'' என்றது ஞானநூல்களைக் கற்றலை உணர்த்தும். அவற்றைக் கற்றவர்களே மெய்யுணர்வு பெற்று இறைவனை வழிபடுவர். திருமூலர்,

> **''நிலையுடையான் கழல் கற்கின்ற செய்மின்''**
> (திருமந்திரம்-292)

என்று கூறுவது இங்கு நினைவுகூரத்தக்கது.

**கல்வியின் பயன்**

> **''கற்றவர் தாம் தொழுது ஏத்த நின்றான்''** (1:5:8)

என்பதால் கற்றதனால் ஆய பயன் இறைவனைத் தொழுதல் என்பதை ஞானசம்பந்தர் அறிவுறுத்துகின்றார். இறைவனது நற்றாளைத் தலையால் வணங்குபவர்களே தலைசிறந்த மக்களாவர் என்பதை,

> **''கலையார் தொழுதேத்திய காழி**
> **தலையால் தொழுவார் தலையாரே''** (1:34:6)

என ஞானசம்பந்தர் அறிவுறுத்துகின்றார். மேலும் அப்பெருமானின் திருவுருவினைக் காணாத கண்களும், அவன் புகழைக் கூறாத நாவும், அப்புகழுரைகளைக் கேளாத செவிகளும் பயனற்றவையே (2:180:4,7,8) என ஞானசம்பந்தர் அறிவுறுத்துகின்றார்.

இவ்வாறு ஞானசம்பந்தர் பாடல்களில் பொதிந்து கிடக்கும் பல அறக்கருத்துக்களை நாம் உணர்வதோடு மட்டுமல்லாமல் அதனைப் பின்பற்றி ஒழுகுதலும் வேண்டும். நாள்தோறும் ஞானசம்பந்தரின் அருள்பாடல்களில் ஒரு சிலவற்றை நாம் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்க ஓதினால் அவை நம்மை நன்னெறியில் உய்விக்கும். அவ்வாறு ஓதுதலே நாம் ஞானசம்பந்தர்பால் காட்டும் பக்தியும், நன்றியும் ஆகும்.

# 22. சம்பந்தர் பற்றிய நூல்கள்

குரு. கோவிந்தராசன், வேலூர்.

சைவ சமயக் குரவர்களுள் முதற்கண் வைத்துப் போற்றப்பெறும் திருஞானசம்பந்தர் சீகாழிப்பதியில் சிவபாதவிருதயர், பகவதியார் ஆகியோர்க்கு வேதநெறி தழைக்கவும் மிகுசைவத்துறை விளங்கவும் மகவாய்த் தோன்றிக் குளக்கரையில் பசித்தழுத நிலையில் உமையம்மை அளித்த ஞானப்பாலுண்டு பாடி, பதிகநெறி பரவுமாறு செய்தார். இப்பெருமானின் வரலாறு சுந்தரர், நம்பியாண்டார் நம்பி, சேக்கிழார் ஆகியோரால் முறையே தொகுத்தும் வகுத்தும் விரித்தும் விளக்கி யுள்ளதனைத் தமிழுலகு நன்கறியும். கடந்த பத்தொன்பதாம் நூற்றாண்டில், துறைசையாதீனத் துறைந்து தமிழ் பரப்பிய மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் தாம் பாடிய நூல்களில் சிவனடியார்களைப் போற்றியுள்ளார். புராணம் பல பாடிய பிள்ளையவர்கள் தாமியற்றிய அனைத்துப் பிள்ளைத்தமிழ் நூல்களிலும் ஞானசம்பந்தரைப் போற்றிப் பாடியதோடு இப்பெருமான் மீது பதிற்றுப்பத்தந்தாதியும் ஆனந்தக் களிப்பும் இயற்றி மகிழ்ந்தார்.

திருஞானசம்பந்தர் உமையூட்டிய ஞானப்பாலுண்ட செய்தியினை,

''உமையளித்த வள்ளநிறை பரஞான முண்டாய்''

எனப் பதித்துப்பத்தந்தாதியிலும்,

''கூடும் பருவமோர் மூன்றில் - அம்மை
கொங்கை சுரந்த கொழுஞ்சுவைத் தீம்பால்
நாடுபொன் வள்ளத்தி னூட்ட - உண்டு
ஞானசம்பந்த ரெனப்பொலிந் தாரால்''

என ஆனந்தக் களிப்பிலும் கூறுகின்றார்.

'நீர்மருவி நியமங்கள் முடித்தெழுந்த தந்தையார்
பேருணர்வில் பொலியும் தம் மகனை நோக்கி
யாரளித்த பாலடிசி லுண்டது நீ'

என வெகுண்டபோது விண்ணில் காட்சி தந்த உமையொருபாகனைச் சுட்டிப் பதிகம் பாடியதை,

''ஐய வயனா னெடுமா லளந்து காணாப் பரம் பொருளைத்
துய்ய வொருகை விரலாலே சுட்டிக்காட்டுஞ் சம்பந்தா''

என அந்தாதியிலும்,

''சொல்லு மயனரியாலு - மென்றுஞ்
சுட்டி யறியப் படாத பொருளை
யொல்லுஞ்செந் தாமரை யன்ன - செங்கை
யோர் விர லாற்சுட்டிக் காட்டி நின்றாரால்''

''வைதிக சைவந் தழையப் - பெரு
மண்ணுல காதி மகிழ்சிறந் தோங்க
வுய்திற மாந்தமிழ் வேதந் - தோ
டுடைய செவியனென் றாரம்பித் தாரால்''

என ஆனந்தக் களிப்பிலும் பாடுகின்றார். ஞானசம்பந்தர் திருக்கோலக்கா எனும் பதியடைந்து பதிகம் பாடும்போது இறைவன் திருவைந்தெழுத்துப் பொறித்த பொற்றாளம் தந்த செய்தியினைப் பிள்ளையவர்கள் தம் அந்தாதியில் ''பொற்றாளம் ஏந்து கையும்'' எனச் சிறப்பித்தும் '' ... திருக்கோலக்காவில் ஐந்தெழுத்தும் பொறித்த பொற்றாளம் பெற்றாரால்'' எனத் தாம் பாடிய ஆனந்தக் களிப்பிலும் கூறுகின்றார்.

இறைவன் திருவுளப்பாங்கின்படி முத்தின் சிவிகையும் மணிக்குடையும் திருவரத்துறையில் பெற்ற செய்தியினையும் வெயில் வெப்பந்தணிப் பதற்குத் தரளப்பந்தர் பட்டீச்சரத்தில் பெற்ற வரலாற்றினையும் பிள்ளையவர்கள் சுட்டுகின்றார். இதனை,

''அறிவுருவ னாலவா யாண்டகைமுத் தமிழாளி
செறிநிழல்செய் மணிமுத்தின் சிவிகைகுடை செழும்பந்தர்
பறிதலைய ரூற்றைவாய்ப் பதகர்முதற் பரசமய
வறியருக்கு வேனில் வெயில் வயங்குதலொத் திருக்குமால்''

என அந்தாதியிலும்,

''மும்மை புலகும் புகழச் - செழு
முத்தின்சிவிகை குடைதிருச் சின்னஞ்
செம்மை யரத்துரை மேய - தேவ
தேவ னருளச் சிறப்பிற்பெற் றாரால்''

''தாவில்பட் டீச்சரத் தையர் - நன்கு
தந்த மணிமுத்துப் பந்தர் விரும்பி''

என ஆனந்தக் களிப்பிலும் கூறுகின்றார்.

திருவீழிமிழலைத்தலத்தில் தம் அடியார் பசி போக்கப் பீடிகை மேற்காசு பெற்ற செய்தியினை,

''காமரு வீழிமிழலை- யமர்
கண்ணுத லாரடி யார்க்கமு தாக
மாமரு வோர்செம்பொற் காசு - தினம்
வைக்கப்பெற் றார்சண்பை வந்த விரகர்''

என ஆனந்தக் களிப்பில் போற்றுகின்றார்.

திருமறைக்காட்டில் நெடுங்காலம் பூட்டியிருந்த கோயிற்கதவினை அப்பரடிகள் பதிகம் பாடித் திறந்து வழிபட்டபின், சம்பந்தர் ஒரு பாட்டால் கதவம் மூடச் செய்தனர். இதனை,

''பொருந்து திருமறைக் காட்டிற் புகல் சதுர மறைப்பாடல்
வருந்துமனப் பரசமயர் வாயடைத்த பாட்டன்றோ''

என அந்தாதியிலும்,

''மன்னிய மாமறைக் காட்டிற் - சண்பை
வந்த கவுணியர் வாய்திற வாமுன்
துன்னிக் கதவ மடைத்த - திறஞ்
சொல்லி ஏனவரே வியப்படை யாதார்''

என ஆனந்தக் களிப்பிலும் கூறுகின்றார். சதுரப்பாடல் பாடிக் கதவடைக்க எண்ணிய போதே இறையருள் நிகழ்த்தமையைப் பிள்ளையவர்கள் சுட்டுகின்றார்.

ஞானசம்பந்தர் காலத்தில் தென்பாண்டி நாடு சமணம் சார்ந்திருந்தது. சமணத்துறவிகள் சூழலால் பாண்டிய மன்னனும் சமணத்துறைந்தான். பாண்டிமாதேவியும் அமைச்சர் குலச்சிறையாரும் நாளும் சிவபெருமானை எண்ணிக் கலங்கினர். வாழ்வு நெறிக்கு ஒவ்வாத பரசமயக் கோட்பாடுகளால் மக்கள் துயருற்று மயங்கினர். அமைச்சரும் அரசியாரும் விரும்பியதற்கிணங்கச் சம்பந்தப் பெருமானார் பாண்டிய நாட்டுக் கேதினார். பெருமான் நகர்ப்புறத்திருந்த மடத்திற் தங்கியிருந்த போது சமணர் இம்மடத்தில் தீயிட்டனர். ஏற்கனவே கூனோடிருந்த மன்னனுக்கு இவ்வெப்பும் பரவிற்று. ஞானசம்பந்தர் மன்னனின் வெப்பையும் கூனையும் போக்கி அருள் செய்தார். சமணரோடு அனல் வாதமும் புனல் வாதமும் செய்து சிவத்தை நிலைநாட்டினார். பாண்டி நாடு சமணத்தினின்று சைவம் சார்ந்து மகிழ்வுற்றது. இவ்வரிய வரலாற்று நிகழ்ச்சிகளைப் பிள்ளையவர்களும் தம் நூல்களில் குறிப்பிட்டுப் பாடுகின்றார்.

வாதில் தோற்ற சமணர் அனைவரும் கழுவேறி மாய்ந்ததும், எதிர்த்த புத்தத் துறவிகள் மாறிச் சைவந்தழுவியதும் வரலாற்றுச் சிறப்புடையன.

''மாமேவு திருவால வாய்ஞான சம்பந்தர்
பூமேவு திருக்கரத்தால் புரிந்தளித்த திருநீறு
கோமேவு வழுதியுடல் குளிர்தரச் செய்து...''

என அந்தாதியிலும்,

''செம்மையில் கூனொடு வெப்பு - நின்ற
சீர்நெடு மாறற்கு நீங்கப் பொலிவு
வெம்மை யமணர்க்கு நீங்க - ஐயர்
மேதகு நீறு திருக்கைதொட் டாரால்''

எனக் களிப்பிலும் காணமுடிகின்றது. சமணரோடு அனல் வாதமும் புனல் வாதமும் புரிந்து சம்பந்தர் வென்ற நிகழ்ச்சியினை, ஆனந்தக் களிப்பில்,

''அருகர் முகமு மனையா - ரழல்
ஆங்கிட்ட வேடு மொருங்கு கருகப்
பெருகிய சைவர் முகமு - மையர்
பேரழ லேடும் பசந்தன காணாய்''

என்றும்,

''அண்ணுங் கொடிய வமண - ரோரெண்
ணாயிர ருங்கொடுங் கூர்ங் கழுவேற
வெண்ணு முயிர்களீ டேற - வையை
யாற்றிட்ட வேடெதி ரேறிய தம்மா''

என்றும் பாராட்டுகின்றார்.

தொண்டை நாட்டுத் திருவோத்தூரில் காய்க்காத ஆண்பனையைப் பெண்பனையாக்கிக் குரும்பை கண்டும், திருமயிலையில் என்புக்குடத் தினின்று பெண்ணை எழுப்பியும் பல அற்புதச் செயல்களைச் சம்பந்தர் ஆற்றினார். இதனை,

"அழகிய மயிலை யத்தியைப் பூவையரசு செய்தனை உதவாமை
பழகிய பெண்ணை பலவுமின் குரும்பை பலகொளப் பாடினை"

எனத் தாம் பாடிய பதிற்றுப்பத்தந்தாதியிலும்

''.................. திரு
வோத்தூரில் யார்க்கும் அதிசய மேவ
ஐயர் திருவருள் வாக்கால் - பல
ஆண்பனை பெண்பனை யாயின மாதோ''

எனவும்,

''தூவு மெலும்பு பெண்ணாக - அருள்
சொல்லின் அதிசய மல்லதெ னுண்டாம்''

எனவும் தாம் பாடிய ஆனந்தக் களிப்பிலும் போற்றுகின்றார்.

ஞானசம்பந்தர் திருப்பெருமணநல்லூரில் திருமணம் செய்தபோது, காண வந்த அனைவரையும் தம்மோடு சிவனருட்சோதியுள் கலக்கச் செய்த நிகழ்ச்சியினையும் பாராட்டிப் பாடுகின்றார்.

பிள்ளையவர்கள் பத்துக்கம்பன் எனப் பாராட்டப் பெற்றவர். புராணம் பாடும் புலவராகத் திகழ்ந்த இப்பெரியார், தாம் பாடிய அனைத்து நூல்களிலும் சிவனடியார்களைப் போற்றியுள்ளார்.

தேவாரம் தந்த மூவரும், நாளும் சிவபெருமானைத் தலந்தோறும் சென்று சைவந்தழைக்கப் பாடிப் பரவினர். செத்தாரை எழுப்பும் அற்புதப் பெருஞ்சித்தர் தம் செயலைப் புரிந்துள்ளனர். வாணாள் முழுமையும் உலகியல் துன்பம் சூழாது வாழ்ந்த திருஞானசம்பந்தர் பரசமய இருளில் கிடந்துழன்ற பாண்டி நாட்டை மீட்டுச் சைவந்தழைக்கச் செய்தவர். இவர் தம் அருட்செயல்களுள் இந்நிகழ்ச்சியே குறிப்பிடத்தக்கது. சேக்கிழார் சுவாமிகள் இவர்தம் வாழ்வை 1256 பாடல்களில் விவரித்துப் பாடி மகிழ்ந்தனர். பிள்ளையவர்கள் தாம் பாடிய பதிற்றுப்பத்தந்தாயிலும் ஆனந்தக் களிப்புக் கண்ணிகளிலும் சுருங்கச்சொல்லி ஞானசம்பந்தரின் வாழ்வுதனைப் பாடிப் போந்தனர். சம்பந்தப் பெருமான் மதுரையிலிருந்து ஆற்றிய அருஞ்செயல்களை எண்ணியே மதுரைத் திருஞானசம்பந்தர் எனப் பன்முறை போற்றியுள்ளார். மதுரையில் நிகழ்ந்த அற்புதச் செயல் களை வியந்த பிள்ளையவர்கள், தாம் பாடிய பெருந்திருப் பிராட்டியார் பிள்ளைத் தமிழிலும்,

**''தெளியா வமண்கைய ருள்ளம்வெப் பேறவும்**
**தென்னர்கோன் வெப்பொழியவும்**
**தீயிலவ ரேடுமுக முங்கருக வுந்தமது திருவேடுசெழுமையுறவு**
**நறியார் புனற்கணே டெதிரேற வும்மவர்க ணடுகழுத் தறியேறவு**
**நறுமுலைப் பான்மணம் கமழ்வாய் மலர்ந்தசிவ**
**ஞானபானுவை யுள்குவாம்''**

எனப் பாராட்டிப் பாடுகின்றார்.

திருப்பூந்துருத்தியில் தொண்டாற்றி வந்த அப்பரடிகள், தம்மைக் காணவரும் சம்பந்தரை எதிர் சென்று இறைஞ்ச எண்ணி, எதிர்வந்த சம்பந்தரின் சிவிகையினைத் தாமும் சுமக்கின்றார். இந்நிகழ்ச்சியினைப் பிள்ளையவர்கள் தம் பதிற்றுப் பத்தந்தாதியில் குறிப்பிடவில்லை. இது போன்று, திருவீழிமிழலையில் சம்பந்தப் பெருமான் படிக்காசு பெற்று அடியவரைப் புரந்தபோது, அப்பரடிகளும் உடனிருந்து படிக்காசு பெற்றனர். பெரியபுராணம் கூறும் இச்செய்தியினையும் பிள்ளையவர்கள் தாம் பாடிய அந்தாதியில் குறிப்பிடவில்லை. திருமறைக்காட்டில் ஞானசம்பந்தர் திருக்கதவம் மூடப்பாடும் முன் அத்திருக்கதவம் அப்பர் பதிகத்தால் திறந்த அற்புதச் செயலையும் தம் பதிற்றுப் பத்தந்தாதியில் கட்டவில்லை. பிள்ளையவர்கள் உளப்பாங்கு எண்ணத்தக்கதாம்.

# 23. சம்பந்தரைப் போற்றும் நூல்கள்

மோ.கோ. கோவைமணி, தஞ்சை.

சமயக்குரவர் நால்வருள் ஒருவராக விளங்கும் திருஞானசம்பந்தர் திருவாய் மலர்ந்தருளிய தேவாரத்திற்குப் பிறகு அவரைப் பற்றியும், அவரது திருப்பதிகங்களைப் பற்றியும், அவரது திருச்செயல்களைப் பற்றியும் பல நூல்கள் எழுந்திருக்கின்றன. திருஞானசம்பந்தர் காலத்திற்குப் பிறகு அவரைக் குறித்து எழுந்த நூல்களையே 'சம்பந்தரைப் போற்றும் நூல்கள்' என்கின்றோம். இவ்வகையில் எழுந்த நூல்களை இரண்டு நிலைகளாகப் பகுக்கலாம். அவை,

1. சம்பந்தரைப் போற்றும் தனிநூல்கள்
2. சம்பந்தரைப் போற்றும் நூற்பகுதிகள்

என அமையும்.

### 1. சம்பந்தரைப் போற்றும் தனிநூல்கள்

திருஞானசம்பந்தப் பெருமானின் வரலாறு - சிறப்பு - பெருமை - அற்புதச் செயல்கள் போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டு அந்தாதி, ஆனந்தக்களிப்பு, உலா, கலம்பகம், தாலாட்டு, நாமாவளி, மும்மணிக் கோவை, பிள்ளைத்தமிழ், விருத்தம் ஆகிய சிற்றிலக்கிய வகைகளில் நூல்கள் எழுந்திருக்கின்றன. குறிப்பாக, ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி, திருஞானசம்பந்த சுவாமிகள் ஆனந்தக்களிப்பு, ஆளுடையபிள்ளையார் திருவுலா மாலை, ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம், திருஞானசம்பந்த சுவாமிகள் திருத்தாலாட்டு, சிவபக்த நாமாவணி - திருஞானசம்பந்த மூர்த்திநாயனார், ஆளுடையபிள்ளையார் திருமும்மணிக்கோவை, திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ், ஆளுடையபிள்ளையார் திருச்சண்பை விருத்தம், ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை போன்ற நூல்களைக் குறிப்பிடலாம்.

### அ. ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி

நம்பியாண்டார் நம்பிகளின் 'ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி' அந்தாதித் தொடையில் அமைந்த 101 பாடல்களால் ஆனது. திருஞான சம்பந்தப் பெருமானின் பெருமைகளைப் பலவாறாகப் போற்றும் இந்நூல் பதினோராம் திருமுறையில் இடம்பெற்று உள்ளது.

### ஆ. திருஞானசம்பந்த சுவாமிகள் ஆனந்தக்களிப்பு

மகிழ்ச்சியின் மிகுதியால் பாடப்பெறும் ஒருவகைப் பாடல் அமைப்பு 'ஆனந்தக் களிப்பு' ஆகும். காழியம்பதியில் திருஞானசம்பந்தப் பெருமான் அவதரித்தது முதல் அவர்தம் வாழ்வில் நிகழ்த்திய திருவிளையாடல்கள் வரையுள்ள நிகழ்ச்சிகளின் தொகுப்பாக அமைந்தது 'திருஞானசம்பந்த சுவாமிகள் ஆனந்தக்களிப்பு' ஆகும். இந்நூலை மகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள் யாத்துள்ளார். இது, பல்லவி ஒன்றும், தாழிசை 38-ம் கொண்டதாகத் திகழ்கின்றது.

''ஆனந்த மானந்தந் தோழி - திரு
வாளர்சம் பந்த ரருள்விளை யாடல்
ஆனந்த மானந்த தோழி''

எனும் பல்லவியுடன் தோழியை முன்னிலைப்படுத்திப் பாடுவதாக இந்நூல் அமைந்துள்ளது. இந்நூல் 'மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் பிரபந்தத்திரட்டு' எனும் தொகுப்பு நூலில் இடம் பெற்றுள்ளது.

### இ. ஆளுடையபிள்ளையார் திருவுலாமாலை

நம்பியாண்டார் நம்பிகளின் 'ஆளுடையபிள்ளையார் திருவுலாமாலை' 143 கலிவெண்பாவாலானது. திருஞானசம்பந்தப் பெருமான் வீதி உலா வருவதைக் கண்ட பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் ஆகிய ஏழு பருவ மகளிர் ஆளுடையாரின் தெய்வீகப் பேரொலியில் மயங்கிக் கூறுவதாக இந்நூல் அமைந்துள்ளது.

### ஈ. ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம்

நம்பியாண்டார் நம்பியின் 'ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம்' எனும் நூலில் இன்று 49 பாடல்களே கிடைத்துள்ளன. திருஞானசம்பந்தர் 'தேவாரம்' அருளிய சிறப்பினையும் தமிழின் பெருமையினையும் எடுத்துக் கூறுவதாக இந்நூல் அமைந்துள்ளது.

### உ. திருஞானசம்பந்த சுவாமிகள் திருத்தாலாட்டு

காழிக்கண்ணுடைய வள்ளலாரின் 'திருஞானசம்பந்த சுவாமிகள் திருத்தாலாட்டு' காப்பு 1, நூல் 30 கலித்தாழிசைகளாலானது. திருஞான சம்பந்தப் பெருமானின் வாழ்க்கை வரலாற்றைத் தாலாட்டு முறையில் இந்நூல் சுருக்கமாகக் கூறுகின்றது. காட்டாக இரண்டு பாடல்கள் பின்வருமாறு அமைந்திருப்பதைக் காணலாம்.

''தாரையோ தாதுணர்ந்த சம்பந்தன் வந்தானென்
றேர்பெருக வூத வெழுந்தருளி வந்தாரோ'' (பா.10)

''காயாப் பனையையன்பர்க் காக்காய்க்கப் பண்ணுவித்து
வீயாம லப்பனைக்கு வீடு மளித்தாரோ'' (பா.25)

### ஊ. சிவபக்த நாமாவளி - திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார்

சொக்கலிங்கச்செட்டியார் அவர்கள் திருஞானசம்பந்த சுவாமிகள் மீது சிவபக்த நாமாவளி ஒன்றைப் பாடியுள்ளார். இது காப்பு வெண்பா 1-ம், 44 கண்ணிகளாலும் ஆனது. சம்பந்தப் பெருமானின் திருச்செயல்களின் சிறப்பை எடுத்துக் கூறுவதாக இந்நூல் அமைந்துள்ளது. காட்டாக, இரண்டு பாடல்கள் பின்வருமாறு அமைந்திருப்பதைக் காணலாம்.

''சுதைவளந் தருமிகு தூமணிமேல்
தோடுடை பாடிய நாமணியே'' (பா.8)

''நந்தியை யேவியச் சோதியிலே
வந்துற யாவரும் ஓதினனே'' (பா.35)

### எ. ஆளுடையபிள்ளையார் திருமும்மணிக்கோவை

நம்பியாண்டார் நம்பியின் 'ஆளுடையபிள்ளையார் திருமும்மணிக்கோவை' ஆசிரியப்பா, வெண்பா, கட்டளைக்கலித்துறை ஆகிய மூன்று வகையான பாக்கள் கோவைபட அமையப் பெற்ற 30 பாடல்களால் ஆனது. ஆளுடையபிள்ளையாராகிய ஞானசம்பந்தர் சிவபெருமான் திருவருள் பெற்று செய்தருளிய அற்புதச் செயல்களை இந்நூல் விரித்துரைக்கின்றது.

### ஏ. திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ்

திருஞானசம்பந்தரின் பேரில் பலர் பிள்ளைத்தமிழ் நூல்களை யாத்துள்ளனர். குறிப்பாக, காரைக்குடி ராம. சொ. சொக்கலிங்கச் செட்டியார், துறைசை ஸ்ரீ மாசிலாமணி தேசிக சுவாமிகள், கூனம்பட்டி மாணிக்கவாசக ஞானதேசிக சுவாமிகள், வ.சு. செங்கல்வராய பிள்ளை ஆகியோரின் பிள்ளைத்தமிழ் நூல்களைக் குறிப்பிட்டுச் சொல்லலாம். இந்நூல்கள் எல்லாம் ஞானசம்பந்தப் பெருமானைக் குழந்தையாகப் பாவித்துப் பத்துப் பருவங்களில் பெருமானது சிறப்பினை நன்கு எடுத்துரைப்பதாக அமைந்துள்ளன எனலாம்.

காரைக்குடி ராம. சொ. சொக்கலிங்கச் செட்டியாரின் 'திருஞான சம்பந்தர் பிள்ளைத்தமிழ்' காப்பு 1, நூல் 103 பாடல்களால் ஆனது. காப்புப் பருவம் 12, சிறுதேர் பருவம் 11, ஏனைய பருவங்கள் 10 என இந்நூலின் பாடலமைப்பு அமைந்துள்ளது. துறைசை மாசிலாமணி தேசிக சுவாமிகளின் 'திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ்' விநாயகர் வணக்கம் 1, நூல் 100 பாடல்களாலானது. காப்புப் பருவம், வாராணைப் பருவம் ஆகிய இரண்டு பருவங்களும் முறையே பதினொரு பாடல்களையும்; முத்தப்பருவம், சிறுபறைப்பருவம் ஆகிய இரண்டு பருவங்களும் முறையே 9 பாடல்களையும்; ஏனைய பருவங்கள் பத்துப் பாடல்களையும் கொண்டதாக இந்நூல் அமைந்துள்ளது. கூனம்பட்டி மாணிக்கவாசக ஞானதேசிக சுவாமிகளின் 'திருஞானசம்பந்தர் பிள்ளைத்

தமிழ்' பருவத்திற்குப் பத்துப் பாடல்கள் வீதம் 100 பாடல்களாலானது. வ.சு. செங்கல்வராய பிள்ளையின் 'திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ்' பருவத்திற்கு ஒரு பாடல் வீதம் பத்துப் பாடல்களாலானது.

### ஐ. ஆளுடையபிள்ளையார் திருச்சண்பை விருத்தம்

நம்பியாண்டார் நம்பியின் 'ஆளுடையபிள்ளையார் திருச்சண்பை விருத்தம்' 11 பாடல்களாலானது. திருஞானசம்பந்தப் பெருமானின் சிறப்பைக் கூறும் இந்நூல், ஒவ்வொரு பாடலின் ஈற்றிலும் 'சண்பையர் காவலன் சம்பந்தனே' என்று அமைந்துள்ளது.

### ஒ. ஆளுடையபிள்ளையார் திருத்தொகை

நம்பியாண்டார் நம்பியின் 'ஆளுடையபிள்ளையார் திருத்தொகை' கலிவெண்பாவால் ஆன 65 அடிகளைக் கொண்டதாகத் திகழ்கின்றது. திருஞானசம்பந்தரின் வரலாற்றைத் தொகுத்துக் கூறுவதாக இந்நூல் அமைந்துள்ளது. அதாவது, திருஞானசம்பந்தர் ஞானப்பாலுண்டது முதல் அவர் திருநல்லூர்பெருமணத்தில் சிவசோதியில் கலந்தது வரையுள்ள வரலாற்றுச் செய்திகளை இந்நூல் நிரல்படுத்திக் கூறுகின்றது.

### 2. சம்பந்தரைப் போற்றும் நூற்பகுதிகள்

திருஞானசம்பந்தப் பெருமானின் வரலாறு, சிறப்பு, பெருமை, அருளிச் செயல்கள் ஆகியவற்றில் தேர்ந்தெடுத்த சில நிகழ்ச்சிகளை வெளிக்காட்டும் நோக்கில் பல்வேறு நூல்களுக்கிடையே சுட்டிச் செல்லும் நிலையில் பல நூல்கள் எழுந்திருக்கின்றன. குறிப்பாக, திருத்தொண்டத் தொகை, திருத்தொண்டர் திருவந்தாதி, பெரியபுராணச் சாரம், இருபுராண விருத்தம், திருத்தொண்டர் சதகம், பெரியபுராண சார வெண்பா, பசவ புராணம், திருத்தொண்டர் மாலை போன்ற நூல்களைக் குறிப்பிடலாம்.

சுந்தரமூர்த்தி நாயனார் அருளிச்செய்த தேவாரத் திருமுறை களில் இடம்பெற்றுள்ள 'திருத்தொண்டர் தொகை'யில் திருஞான சம்பந்தரைப் பற்றி,

**''வம்பறா வரிவண்டு மணம்நாற மலரும்**
**மதுமலர்நற் கொன்றையான் அடியலாற் பேணா**
**எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்''** (பா.3:1-2)

என்ற குறிப்பு காணப்படுகிறது. நம்பியாண்டார் நம்பி அவர்களின் 'திருத்தொண்டர் திருவந்தாதி'யில் இரண்டு பாடல்கள் இடம்பெற்றுள்ளன. அவை,

**''வையம் மகிழயாம் வாழ அமணர் வலிதொலைய**
**ஐயன் பிரம புரத்தாற் கம்மென் குதலைச்செவ்வாய்**
**பைய மிழற்றும் பருவத்துப் பாடப் பருப்பதத்தின்**
**தையல் அருள்பெற் றனன்என்பர் ஞானசம் பந்தனையே".** (பா.33)

''பந்தார் விரலியர் வேள்செங்கட் சோழன் முருகன்நல்ல
சந்தார் அகலத்து நீலநக் கன்பெயர் தான்மொழிந்து
கொந்தார் சடையர் பதிகத்தில் இட்டடி யேன்கொடுத்த
அந்தாதி கொண்ட பிரான்அருட் காழியர் கொற்றவனே'' (பா.34)

ஆகியவையாகும். உமாபதி சிவாச்சாரியாரின் 'பெரியபுராணச்சாரம்' ஞானசம்பந்தரைப் பற்றி இரண்டு பாடல்கள் விவரிக்கின்றது. அவை,

''காழிநகர்ச் சிவபாத விருதயர் தந்த கவுணியர்கோன்
அமுதுமையாள் கருதியூட்டும்
ஏழிசையின் அமுதுண்டு தாளம்வாங்கி இலங்கிய
நித்திலச் சிவிகை இசையஏறி
வாழுமுயலகன் அகற்றிப் பந்தர் ஏய்ந்து, வளர்
கிழிபெற்று, அரவின்விடம் மருகல்தீர்த்து,
வீழிநகர்க் காசுஎய்தி, மறைக்கதவம் பிணித்து,
மீனவன் மேனியன் வெப்பு விடுவித்தான்''.

''ஆரெரியிட்டு எடுத்த ஏடு அவை முன்னேற்றி
ஆற்றிலிடும் ஏடெதிர்போய் அணைய ஏற்றி
ஓரமணர் ஒழியாமே கழுவில் ஏற்றி, ஓது
திருப்பதிகத்தால் ஓடம் ஏற்றிக்
காருதவும் இடிபுத்தன் தலையில் ஏற்றிக்
காயாத பனையின் மூதுகனிகள் ஏற்றி
ஈரமிலா அங்கம் உயிர் எய்த ஏற்றி,
இலங்கு பெருமணத்து அரனை எய்தினாரே''

என்பனவாகும். திருத்தொண்டர்களின் வரலாற்றுச் செய்திகளையும் திருவிளையாடற் புராணச் செய்திகளையும் இணைத்து அமைந்ததே 'இருபுராண விருத்தம்' எனும் நூல். இதில் திருவிளையாடற் புராணத்தில் இடம்பெற்றிருக்கும் நாகமெய்த படலச் செய்தியையும் திருஞான சம்பந்தரின் பாண்டிநாட்டுச் செய்திகளையும் இணைத்து,

''செஞ்சாலி முத்துதிர்க் கும்பொன்னி நாட்டுளே
சீர்காழி வேதர் குடியிற்
சென்மித் தருந்தமிட் பதிகமு முரைத்தென்பு
திருமினென் வரவ ழைத்தே
யஞ்சாத சமணிரு ளறுத்துவெண் பூதியங்
கவனிமுழு தினும்வி ளங்க
வருள்செய்த திருஞான சம்பந்தர் பாதமல
ரகநினைக் கீனுமுய் குவே
னஞ்சார புயங்கத்தை யவுணரோ மத்தி
நலஞ்செய்து வரவ ழைத்து

நகரும்வழு தியுமழிவு செயெனவிட வருமரவை
நாடியம் பாற்று ணிந்து
மஞ்சார களித்தரச னந்தகுண னைக்காத்த
மதுரையா னுதவு புதல்வா
வளைசிந்து தரளங்க ளாயர்சந்த வரையின்கண்
வளர்செந்தில் வடுவே லேன'' (பா.28)

எனும் பாடல் அமைந்துள்ளது. திருப்பாண்டிக் கொடுமுடி மலைக் கொழுந்து நாவலரின் 'திருத்தொண்டர் சதகம்' எனும் நூலில் சம்பந்தர் குறித்து ஒரு பாடல் இடம்பெற்றுள்ளது.

''சிரபுரம் தனின்மறைச் சிவபாத இருதயர்தம்
தேவிபக வதியார் அருட்
செல்வர்கவு ணியர்நீல வல்லிஅமு துண்டுபண்
சேர்ந்துநல் தாளம் ஏந்தித்
தரளநிரை சேர்சிவிகை ஏறிமுய லகன்நோய்
தவிர்த்துஇனிய பந்தல் மேவி
தக்ககிழி பெற்றிசையின் யாழ்முறித்து ஆலம்
தவிர்த்துஎழில் கதவு மூடிப்
புரவலன் சுரம்விடுத்து அமணர்நிலை போக்கிஇடி
புத்தனார் தலையில் ஏற்றிப்
பூவாத பெண்ணைகனி காய்த்துஅங்கம் மங்கையாய்ப்
புகழ்நம்பி ஆண்டார் தரும்
மருமலர்க் குழலிடின் திருமணம் செய்திடமுன்
வந்தடிமை கொண்ட கயிலை
வாசனே இராசலிங் கேசனே சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே'' (பா.39)

என்பதே அப்பாடல். வல்லி.ப. தெய்வநாயக முதலியாரின் 'பெரிய புராண சார வெண்பா' எனும் நூலில் சம்பந்தரைப் பற்றி இரண்டு பாடல்கள் இடம்பெற்றுள்ளன. அவை,

''காழிக் கவுணியர்கோன் கௌரிமுலைப் பாலருந்தி
வாழுநித்தி லச்சிவிகை வண்பந்தர் - ஏழிசைக்காம்
தாளம் கிழிகாசு தான்கொடும றைக்கதவின்
தாளடைத்தார் சம்பந்தர் தான்''. (பா.35)

''விடமுயல கன்மன்னோய் வெப்பகற்றிப் புத்தன்
படப்பனை பெண்ணாகப் பாடிச் - சுடுகனனீர்
ஏடிட்டெ டுத்தமண்டீர்த் தென்பணங்காக் கண்டொருங்கு
வீடுமண நாளிலுற்றார் மெய்'' (பா.36)

என்பவையாகும். பசவபுராணத்துள் இடம்பெற்றுள்ள சுந்தரப் பெருமான் நாயனார் புராணத்துள் திருஞானசம்பந்தரைப் பற்றி ஒரு பாடல் இடம் பெற்றுள்ளது. அவை,

"மண்ட ழைக்கச் சமணர் வலிகெட
வந்து செந்தமிழ் பாட உமைமுலைக்
கண்ட ரும்பயம் உண்டு புகலிமுக்
கண்ண னைத்துதித் தங்கம்பெண் ணாகவும்
பண்டு நீங்கு கதவம் அடைக்கவும்
பாலை நெய்தலாய்ப் பாம்ப திறக்கவும்
மிண்டு புத்தர் கெடஇடி வீழவும்
மிக்கபாச் செய்த சம்பந்தர்க் கடியேன்" (பா.17)

என்பதாகும்.

குமாரபாரதியின் 'திருத்தொண்டர் மாலை'யில் நான்கு பாடல்கள் இடம்பெற்றுள்ளன. அவை,

பண்ணார் பசுந்தமிழ்ச் 'சம்பந்தனா'ரதிர வந்தமணர்
எண்ணாயிரங் கழுவிலேறினார் - ஒண்ணாது,
"வில்லேருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லேருழவர் பகை" (பா.37)

முத்தமிழ் ஞானத்தலைவர் முன்னம் பழகைசாரி
புத்தனெதிர் நின்றிடியிற் பொன்றினான் - இத்திறமென்
"கூற்றத்தைக் கையால் விளித்தற்றால், ஆற்றுவார்க்
காற்றா தாரின் செயல்" (பா.38)

எறியவோடக் கோலிசை ஞானி செந்தமிழால்
ஆறுகடந்தார் தோணியார் மதனர் - வீறடங்கா"
"வெள்ளத்தனைய மலர்நீட்ட மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு" (பா.39)

கணவனெனக் காதலியைக் 'காழியூரர்' கைப்பற்றி
மணவறையி லீசன் கழலாய் வாழ்ந்தார் - குணமே,
"தலைப்பட்டார் தீரத்துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்" (பா.40)

போன்ற பாடல்களாகும். இப்பாடல்களில் முதல் இரண்டடி திருஞான சம்பந்தரின் சிறப்பினையும் பின்னிரண்டடி அதற்குத் தக்க திருக்குறளையும் இணைத்து அமையப்பெற்று இருப்பதைக் காணமுடிகிறது.

திருஞானசம்பந்தரைப் பற்றிய தனிநூல்களையும், நூற் பகுதிக்குள் இடம் பெற்றுள்ளதையும் பார்க்கும்போது, சம்பந்தப் பெருமான் மீது மக்கள் கொண்டிருந்த ஈடுபாட்டையும், அவரின் அருளிச் செயல்களின் மீது கொண்டிருந்த நம்பிக்கையையும் இது காட்டுகின்றது என்றால் அது மிகையாகாது.

# 24. சம்பந்தரின் வருணனைத் திறன்

எஸ். கௌசல்யா, கும்பகோணம்.

''வேதநெறி தழைத்தோங்க மிகு சைவத்துறை விளங்க''

என்று சேக்கிழாரால் சிறப்பிக்கப்படும் திருஞானசம்பந்தர் ''செந்நெறி தழைத்தோங்கவும், தென்னாடு சிறக்கவும் தமிழ் ஆக்கமுறவும் தோன்றி யவர். இச்சான்றோர் தமிழ்மொழிக்கு ஆற்றியுள்ள பணிகள் எண்ணற்றவை. திருத்தோணிபுரத்து ஈசன் அருள்பெற்று, சிவபெருமானின் திருவருள் வண்ணமாகக் காணும் பொருள் யாவற்றையும் கண்டு களித்துக் கவிதை பொழிந்தவர். அதிகமான சந்த வேறுபாடுகளுடன் கூடிய திருப்பதிகங்களைப் பாடியுள்ளார்''. ''சிவமணத்துடன் செந்தமிழ் மணமும் குழைந்திட, சங்ககாலத்தின் பின்னே அத்தமிழ் மரபுக்கேற்பவும், புதிய மரபுகளைத் தோற்றியும், பழைய தொன்மரபுக்குப் புது உருவம் ஆக்கியும் இச்சான்றோர் செய்துள்ள அரிய தொண்டுகள் போற்றத்தக்கன. இவரது பதிகங்களில் அமைந்துள்ள வருணனைத் திறத்தை விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**பண்ணும் பதிகங்களும்**

திருஞானசம்பந்தர் திருப்பதிகங்கள் முதல் மூன்று திருமுறைகளாக வகுக்கப் பெற்றுள்ளன. முதல் திருமுறையில் நட்டபாடை, தக்கராகம், பழந்தக்கராகம், தக்கேசி, குறிஞ்சி, வியாழக்குறிஞ்சி, மேகராகக் குறிஞ்சி என்னும் ஏழு பண்களுக்குரிய 135 திருப்பதிகங்களும், யாழ்மூரிப் பதிகம் ஒன்றும் ஆக 136 திருப்பதிகங்கள் உள்ளன. இரண்டாம் திருமுறையில் இந்தளம், சீகாமரம், காந்தாரம், பியந்தைக் காந்தாரம், நட்டராகம், செவ்வழி என்னும் ஆறு பண்களுக்குரிய 122 திருப்பதிகங்கள் உள்ளன. மூன்றாம் திருமுறையில் காந்தார பஞ்சமம், கொல்லி, கொல்லிக் கௌவாணம், கௌசிகம், பஞ்சமம், சாதாரி, பழம் பஞ்சுரம், புறநீர்மை, அந்தாளிக் குறிஞ்சி என்ற ஒன்பது பண்களுக்குரிய 125 திருப்பதிகங்கள் உள்ளன.

**இயற்கை வருணனை**

இயற்கை நலம் மனித உள்ளத்தை ஈர்க்க வல்லது. மனிதர்கள் எல்லோருக்கும் இயற்கையின் மீது ஈடுபாடு அதிகம். கடல், மலை பச்சைப்பசேலென்று காணப்படும் வயல்வெளிகள், நிலவு, விண்மீன்கள் என்று இயற்கையின் எழிலில் மனம் ஒன்றிவிடுகிறது. இயற்கை அழகு,

இறைவனின் அழகு, இறைவனின் அருள் என்று தெய்வீகக் கவிஞர்கள் உணர்ந்தனர். அதனால் இயற்கையின் வனப்பினைத் தம் பாடல்களில் வருணிக்கின்றனர்.

சங்க காலத்தில் இயற்கையின் எழிலில் இறைவனைக் கண்டு வழிப்பட்டனர். திருமுறைக் காலத்தில் இறைவனை இயற்கையினிடத்தும், தனித்தும் கண்டு போற்றினர். நக்கீரர் திருமுருகாற்றுப்படையில், இழுமென இழிதரும் அருவியை வருணிப்பதுடன், இறைவனது அருள் வெள்ளத்தையும் அதன் வேகத்தையும் உணர்த்துகின்றார். கபிலரின் இயற்கை ஈடுபாட்டை அவர் தம் 'குறிஞ்சிப்பாட்டில்' காணமுடிகின்றது.

திருமுறை ஆசிரியர்கள் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் தலங்கள் தோறும் நடந்தே சென்று இறைவனைப் போற்றி வழிபட்ட துடன், வழியில் கண்ட இயற்கை வளங்களையும் தமது பாடல்களில் இடம்பெறச் செய்துள்ளனர். "இயற்கையில் இறையொளியையே கண்டு வழிபடுவது ஒரு நெறி. இயற்கை இறைவன் வீற்றிருக்கும் இடமாக விளங்குவது, இயற்கை உடல் எனின் இறைவன் உயிர், இயற்கையின் இயக்கம் இறைவனின் இயக்கம்".

## இயற்கை வருணனையும் திருஞானசம்பந்தரும்

சங்க கால இலக்கியங்களில் ஒவ்வொரு திணையையும் ஒவ்வொரு புலவர்கள் சிறப்பித்துப் பாடியுள்ளனர். அகவாழ்க்கையையும் புற வாழ்க்கையையும் பாடிய புலவர்கள் இயற்கையுடன் இணைத்தே எழுதியுள்ளனர். மனித உணர்வுகளையும், இயற்கையின் எழில்களையும் தொடர்புபடுத்திக் காட்டினர்.

இயற்கைக் காட்சிகளை வருணிப்பதில் சிறந்து விளங்கும் திருஞானசம்பந்தர், குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்திணை வளங்களும் இடம்பெறுமாறு சிறப்பித்துப் பாடியுள்ளார். இச்சான்றோரின் இயற்கை வருணனையைத் திணை வரிசையாக விளக்கலாம். இங்கு ஒவ்வொரு திணைக்கும் ஒரு எடுத்துக்காட்டு மட்டும் தரப்படுகின்றது.

### குறிஞ்சி

திருவண்ணாமலையின் திருத்தலத்தில் இடம் பெறும் ஒரு காட்சி. உயர்ந்த மலை, விண்ணை முட்டும் சிகரங்கள், மேகங்கள் உச்சி மலையை முத்தமிட்டு நிற்கின்றன. காட்டு மரங்கள் மலைக்கு அழகு செய்வன போன்று நிமிர்ந்து, பூவும் கிளையுமாகப் பொலிவுடன் காணப்படுகின்றன. அந்த மரக்கிளைகளில் ஓர் ஆண் குரங்கு ஓடித் தாவி, உச்சிக் கிளைக்குச் சென்று உச்சிக் கிளையிலிருந்து ஓர் உந்து

உந்தி மற்றொரு கிளைக்குத் தாவுகிறது. மரக்கிளையில் கனிந்திருந்த கனி ஒன்று சிக்கிக் கொள்கிறது. இழுத்துவிட்ட மாங்கொம்பு உச்சிமலையைத் தொட்டுக் கொண்டிருக்கும் மேகத்தை அசைக்கிறதாம். சூல்கொண்ட மேகம் மழையைப் பொழிகிறதாம். காட்டில் உள்ள பெண்மான்கள் மழைத்துளிக்கு மனந்தடுமாறி மலைச்சோலைகளில் ஓடித் திரிகின்றன. இக்குறிஞ்சிக் காட்சியினைத்

''தேமாங்கனி கடுவன் கொளவிடு கொம்பொடு தீண்டித்
தூமாமழை துறகல் மிசை சிறு நுண்துளி சிதற
ஆமாம் பிணை அணையும் பொழில் அண்ணாமலை அண்ணல்''
(10-2)

என்று சித்தரித்துள்ளார். இதுபோலப் பல இடங்களில் குறிஞ்சி நில வருணனையைக் காணலாம்.

**முல்லை**

திருவண்ணாமலைச் சாரலில் ஆயர்கள் மாடுகளை மேய்க்கிறார்கள். மாலைப்பொழுது வந்தவுடன் மாடுகளை ஓட்டிக் கொண்டு ஊர் திரும்ப எண்ணுகிறான் ஆயன். எருமைமாட்டைக் காணாமல் தன் வேய்ங்குழலை எடுத்து இசைக்கிறான். ஆயன் குழலோசை கேட்டதும் மாடுகளெல்லாம் திரளுகின்றன.

''கனைத்தமேதி காணாதாயன் கைம்மேற் குழலூத
அனைத்தும் சென்று திரளும் சாரல்'' (69-6)

என்று இசையின் ஆற்றலை முல்லை நில வருணனையில் காண முடிகின்றது.

**நெய்தல்**

திருமறைக்காடு, திருவெண்காடு, சண்பை நகர், திருமுல்லைவாயில் போன்ற திருத்தலங்கள் கடற்கரையில் அமைந்துள்ளன. அத்தலங்கள் பற்றிய பதிகங்களில் நெய்தல் நில வருணனை இடம் பெறுகின்றது. சான்றாக,

''வங்கமேவு கடல்வாழ் பரதர் மனைக்கேறுனை மூக்கின்
சங்கம்ஏறி முத்தம் ஈனும் சண்பை நகராரே'' (66-1)

என்ற பாடல் வரிகளில் நெய்தல் நிலக்காட்சி இழையோடுகின்றது. (திணை மயக்கப் பாடல்களும் உள்ளன.)

**மருதம்**

திருஞானசம்பந்தப் பெருமானாரின் மருதத் திணைப் பாடல்களில், வண்டு பண்ணிசைத்தல் அதிகமாக இடம்பெறுகின்றது. வயல்

வளமும் சோலை எழிலும், செங்கழுநீர்ப் பூக்கள் சிவந்து மலர்ந்திருக்கின்ற அழகும், தாமரைகள் பூத்த தடாகங்களும் அழகு பெறுகின்றன. திருவீழிமிழலையில்,

**"வரை சேரும் முகில் முழவ**
**மயில்கள், பல நடமாட வண்டுபாட**
**விரை சேர் பொன்னிதழிதர**
**மென் காந்தள் கையேற்கும் மிழலையாம்"** (132-4)

இம்மருத நிலக்காட்சியில் பெருமானின் கற்பனை வளத்தினை உணர முடிகின்றது.

இங்கு விளக்கப்படும் பதிகங்களில் மருத வளம் இடம்பெறுகிறது.

## தல வருணனை

திருஞானசம்பந்தர் இறைவனை நேரில் கண்டு இறைவனது திருவருள் திறத்தை, அமுதொடு கலந்து பருகியவராதலின், தம் கண்ணால் கண்டு இன்புற்ற அப்பெருமான் திருவுருவத்தைத் தமது பாடல்களில் வருணித்துள்ளார். திருவீழிமிழலை, திருவாஞ்சியம், திருப்பெருவேளூர், திருக்காறாவில், திருத்தேவூர், திருநெல்லிக்கா ஆகிய தலங்கள் பற்றிய விளக்கங்களும், அப்பதிகங்களில் இடம்பெறும் தல வருணனையும் இங்கு விளக்கப்படுகின்றன.

## திருவீழிமிழலை தல விளக்கம்

காவிரித் தென்கரைத் தலங்கள் 127-இல் இது 61-ஆவது திருத்தலம். மூவர் பாடல் பெற்றது. இத்தலத்தின் வேறு பெயர்களாவன, பூ கைலாசம், கல்யாணபுரம், பஞ்சாக்கரபுரம், தட்சிணகாசி, சம்மங்களஸ்தலம், சுவேதகாவனம், ஆகாச நகரம், பனசாரண்யம், நேத்திரார்ப்பணபுரம், தேஜி நீவனம் என்பன. திருமால் தனது கண்ணை இழந்து அருச்சித்துச் சக்கராயுதம் பெற்ற திருத்தலம். சுவாமி வீற்றிருக்கும் இடம், விண்ணிலிருந்து திருமாலால் கொண்டு வரப்பெற்ற விண்ணிழி விமானம் என்று சொல்லப்படுகிறது. இரதிதேவி, வசிஷ்டர், காமதேனு, மனு முதலானோர் பூசித்துப் பேறு பெற்றது. மிழலை ஊர்ப்பெயர், வீழி - செடியின் பெயர், சுவாமி உமையம்மையை மணம்கொண்ட பதி. திருஞானசம்பந்தருக்குச் சீர்காழியில் உள்ள திருக்கோலத்தைக் காட்டிய தலம், இது. இங்குத் திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் படிக்காசு பெற்று அடியவர்களுக்கு அமுது அளித்தனர்.

படியளக்கப் பெற்ற காசுகளைக் கொண்டு பொருட்களை வாங்கிய கடைத்தெரு, ஐயன்பேட்டை என வழங்கப்படுகிறது. அங்கு வீற்றிருக்கும் சுவாமி செட்டியப்பர் எனவும், அம்பிகை படியளந்த நாயகி எனவும்

வழங்கப்படுகிறது. திருவீழிமிழலையில் எழுந்தருளியிருக்கும் சுவாமி, நேத்திரார்ப்பணேசுவரர், வீழியழகர், அம்பிகை சுந்தர குசாம்பிகை, தலமரம் வீழிச்செடி, தீர்த்தம் விஷ்ணு தீர்த்தம், பண் காந்தார பஞ்சமம்.

**தல வருணனை: விரிபொழில் வீழி**

சேற்றில் விளங்கும் கரிய ஆமையின் வயிறு போன்ற சந்திரனும், யானையின் கொம்பு போன்ற தாழையும் விளங்கும் விரிந்த பொழில் மேவும் திருவீழிமிழலை. இதனை,

> ''அள்ளற்கார் ஆமை அகடு வான்மதியம்
> ஏய்க்கமுள் தாழைகள் ஆனை
> வெள்ளைக் கொம்பீனும் விரிபொழில்வீழி'' (1279)

என்ற வரிகளில் விளக்குகின்றார்.

அடியவர்கள் பக்திப் பெருக்கால் மலர் தூவி இறைவனைப் போற்றுகின்றனர். தேவர்கள் பொற்றாமரை மாலைகளைச் சாற்றுகின்றனர். மலர்களும், கயல்களும் திகழும் கழனிகளில் அரிந்த கதிர்களிலிருந்து அன்பர்கள் தூற்றும் நெல்லானது வானத்திலிருந்து உதிர்வன போன்று, வளம் பெருக விளங்கும் வீழிமிழலையைக்

> ''கழனி அலர்கயன் முதலோடு
> அடுத்தரிந்து எடுத்தவான் அம்மை
> விசும்பு தூர்ப்பன போல் விம்மிய வீழி
> மிழலையான் எனவினை கெடுமே''

என்று சிறப்பிக்கின்றார்.

**வெயிற் புகா வீழி**

பாக்கு, தென்னை, செண்பகம், பலா, இலுப்பை, வேங்கை, மகிழம், ஆல் ஆகிய மரங்கள் செறிவாகக் காணப்படுவதால் அங்குள்ள பொழில் குளுமையாகக் காணப்படுகின்றது.

> ''தேங்கொள் பூங்கமுகு தெங்கிளங் கொடிமாச்
> செண்பகம் வண்பலா இலுப்பை
> வேங்கைபூ மகிழால் வெயிற் புகாவீழி'' (1282)

**பொழில் தேன் துவலை சேர் வீழி**

ஆடுகின்ற பாம்பினை அரையில் கட்டியிருப்பவராகிய சிவபெருமான், நறுமணம் கமழும் புன்னை, முல்லை, செங்கழுநீர் மலர் ஆகிய மணங்கமழும் மலர்களில் தென்றல் கலந்து வீசும் பொழில்களிலிருந்து தேன் துளிகள் சிதறுமாம் திருவீழிமிழலையில். இதனை,

''வாசமாம் புன்னை மௌவல் செங்கழுநீர்
மலரணைந்து எழுந்தவான் தென்றல்
வீசுமாம் பொழிற்றேன் துவலை சேர்வீழி மிழலை'' (1283)

இவ்வடிகளில் இனிமையுறப் பாடுகிறார்.

**நான்மறை கேட்டப் பைங்கிளிகள்**

கயிலை மலையை எடுத்த இராவணன் கரமும் சிரமும் நெரிந்து அலறத் திருவைந்தெழுத்து ஓதி, ஈசனிடமிருந்து நெடிய வாளைப் பெற்றான். அத்தகைய மறைகளைக் கற்றுணர்ந்த வேதியர்கள் ஓதக்கேட்ட கிளிகள் அப்பதங்களை ஓத விளங்கும் விரிந்த பொழில்களை உடையது திருவீழிமிழலை. இதனை,

''நான்மறை கேட்டு இருந்த பைங்கிளிகள்
பதங்களை ஓதப் பாடிருந்த
விடைக்குலம் பயிற்றும் விரிபொழில் வீழி''

என்று தமது கற்பனைத்திறம் வெளிப்பட வருணித்துள்ளார்.

**அன்னமும் அரசும்**

தாமரை மலரின் மீது அன்னப்பறவைத் தனது பெடையுடன் வீற்றிருக்க, நெற்கதிர்கள் கவரி வீசுகின்றதாம்.

''...முத்தைத்
தளையவிழ் கமலத் தவிசின்மேல் அன்மை
தன்னிளம் பெடையொடும் புல்கி
விளைகதிர்க் கவரிவீச வீற்றிருக்கும்''

முத்துத் தோன்றும் இடங்களுள் தாமரையும் ஒன்று. இத்தன்மையில், தாமரை மலரின் பெருமையானது, முத்தைத் தளையவிழ் கமலம் எனச் சிறப்பித்துள்ளார்.

இதுபோல் அமைந்த வருணனையை மற்றொரு பதிகத்திலும் காணலாம். அன்னம் அரசு வீற்றிருக்கின்றதாம். மன்னனுக்கு மாணிக்கத் தவிசாக தாமரையும், குடையாக இலையும் விளங்குகின்றன. பக்கத்தில் நெற்கதிர்கள் கவரி வீசுகின்றன. இளஅன்னம் இளவரசனாக வீற்றிருக் கின்றது. இதனை விளக்கும் அடிகளைக் கீழே காணலாம.

''செறிஇதழ்த் தாமரைத் தவிசில் திகழ்ந்தோங்கும்
இலைக் குடைக்கீழ்ச் செய்யார் செந்நெல்
வெறிகதிர்ச் சாமரையிரட்ட இளவன்னம்
வீற்றிருக்கும் மிழலையே'' (132-2)

### மஞ்சுசேர் பொழில் வீழி

உயர்ந்து ஓங்கிய வாழைக் கனிகள், மதிலின் மீதுவிழ, அது கமுகின் குலையோடு விழ, உயர்ந்த தென்னையில் மேகம் பதியும் வீழிமிழலை,

"இஞ்சிக்கே, கதலிக் கனிவிழக் கமுகின்
குலையொடும் பழம் விழத்தெங்கின்
மிஞ்சுக்கே மஞ்சுசேர் பொழில் வீழி" (1288)

### மணம் செய்யும் மிழலை

நீர்வளமும் நிலவளமும் அமைந்த திருவீழிமிழலையிலுள்ள வயல்களில் தாமரைகள் பூத்திருக்கின்றன. சங்குகள் அங்குமிங்கும் அலைந்து மிதக்கின்றன. வயலுக்கு அருகில் புங்க மரமொன்று பொலிவுற்று நிற்கின்றது. புங்க மரத்தின் பூக்கள் பொரிபோன்று பூத்திருக்கின்றன. தாமரைப் பூக்கள் தீப்பிழம்பைப் போல காணப்படு கின்றது. காற்றில் புங்க மரம் வளைந்து ஆடுகிறது. அதன் பூஞ்சினை களிலிருந்து பொரிபோன்ற பூக்கள் தீயைப் போல மலர்ந்த தாமரையில் உதிர்கின்றன. அருகில் சங்குக் கூட்டங்கள். இதனைத் திருமணக் காட்சி யாகக் கண்டு களிக்கின்றார் திருஞானசம்பந்தர் தாமரை மலரை அக்கினி குண்டமாவும், புங்க மலர்களைப் பொரியாகவும், சங்குகளைச் சுற்றத்தார் களாகவும் உருவகப்படுத்தி,

"தகவுடையீர் மணித்தலத்துச் சங்குள
வர்க்கம் திகழச் சலசத்தீயில்
மிகவுடைய புன்குமலர்ப் பொரியட்ட
மணம் செய்யும் மிழலையாமே" (132-6)

என்று இங்ஙனம் கற்பனைத் திறம் மிளிரப் பாடுகின்றார்.

### பண்பாடும் மிழலை

திருவீழிமிழலையில் மற்றொரு காட்சி. செங்கழுநீர்ப் பூக்கள் சிவந்து மலர்ந்திருக்கின்றன. ஒய்யெனப் பறந்து வந்த வண்டு அச்செங் கழுநீரைச் சூழ்ந்து, வாசம் துதைந்தாடித் தாழ்ந்து மதுருகர்ந்து தாதருந்தியதாம். சிவந்த மகரந்தத்திற் படிந்த வண்டு அதன் கருநிறம் நீங்கிச் செந்நிறம் பெற்று, செவ்வழிப் பண்ணை இசைக்கிறதாம்.

"சேறாடு செங்கழுநீர்த் தாதாடி
மதுவுண்டு சிவந்த வண்டு
வேறாய உருவாகிச் செவ்வழிநற்
பண்பாடும் மிழலையாமே"

### மயில் நடம்புரியும் மிழலை

முகில்களின் இடிமுழக்கம் முழவுபோல் ஒலிக்கின்றன. அதற்கேற்ப மயில்கள் ஆடுகின்றன. வண்டுகள் பாடுகின்றன. இக்கலைகளுக்குப் பரிசு வழங்க நினைக்கின்றதாம். கொன்றை, பொன்போல்ப் பூக்கும் கொன்றை மலர்கள் உதிர்கின்றன. அம்மலர்களைக் காந்தள் கையேந்தி வாங்குகிறதாம். இக்காட்சியை விளங்கும் பாடல்,

"வரைசேரும் முகில்முழவ
மயில்கள் பல நடமாட வண்டுபாட
விரைசேர் பொன்னிதழி தர
மென்காந்தள் கையேற்கும் மிழலை"

இங்ஙனம் திருவீழிமிழலையின் வளத்தினை உள்ளுதொறும் உவகை பயப்ப வருணித்துள்ளார் திருஞானசம்பந்தர்.

### திருவாஞ்சியம் தல விளக்கம்

காவிரித் தென்கரைத்தலம் திருமால், இலக்குமி தம்முடன் அன்பாக இருக்க வேண்டுமென்று புசித்த தலம். இயமன் வழிபட்டது. பிரமன், இந்திரன், பராசரர், அத்திரி முதலியோர் வழிபட்ட தலம். இத்தலத்தின் வேறு பெயர்கள், வாஞ்சியம்பதி, சந்தனவனம், ஜாந்தாரண்யம், பூ கைலாசம் என்பன. காசிக்குச் சமமாகச் சொல்லப்படுவது. இங்கு எழுந்தருளியுள்ள சுவாமி வாஞ்சிநாதேஸ்வரர், வாஞ்சிலிங்கேஸ்வரர், அம்பிகை, மங்கள நாயகி, வாழவந்த நாயகி. தலமரம்: சந்தனம், தீர்த்தம், : குப்த கங்கை, இயமதீர்த்தம்.

### தல வருணனை

திருவாஞ்சியத்தில், வரிவண்டுகள் இசையை எழுப்புகின்றன. ஒளி பொருந்திய மாடங்கள் நிறைந்துள்ளன. சிறப்புத் தன்மையும், புகழும் அங்கு நிலைபெற்றுள்ளன. பொழிலில் தென்றல் வந்து அணைகின்றன எனத் திருவாஞ்சியத்தை வருணித்துள்ளார். இதனை வெளிப்படுத்தும் பாடலடிகள்,

"தென்ன வரிவண்டு இசைசெய் திருவாஞ்சியம்"
"மதி மாடம் மன்னும் திருவாஞ்சியம்"
"சீலம் மேவு புகழலால் பெருகும் திருவாஞ்சியம்"
"வண்டு கெண்டி மருவும் பொழில் திருவாஞ்சியம்"
"தென்றல் துன்றுபொழில் சென்று அணையும் திருவாஞ்சியம்"
(பதி.எ:143)

### திருப்பெருவேளூர் தல விளக்கம்

காவிரித் தென்கரைத்தலம். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகிய இருவரின் பாடல் பெற்றது. மணக்கால் ஐயன்பேட்டை என

வழங்கப்படுகிறது. முருகப்பெருமான் பிருங்கி முனிவர், கௌதம முனிவர், கோச்செங்கட் சோழன் வழிபட்ட திருத்தலம். மோகினி வடிவம் எடுத்த திருமால் அதன் நோக்கம் நிறைவடைந்ததும் வழிபட்ட தலம். சுவாமி: பிரியநாதர் அபிமுகேஸ்வரர், அம்பிகை : ஏலவார் குழலி, அபின்னாம்பிகை, தலமரம்: வன்னி, தீர்த்தம் : சரவணப்பொய்கை.

**தல வருணனை**

திருப்பெருவேளூரில் பொன்னும் மணிகளும், கனிகளும் சிறந்து விளங்குகின்றன. பொன்னாலாகிய அழகிய அணிகளை அணிந்த நங்கையர்கள் அங்கே காணப்படுகின்றனர். இதனைப்

**"பைம் பொன்சீர் மணிவாரிப் பலவும் சேர்கனியுந்தி**
**அம்பொன் செம்மர்வரலார் அணிமல்கு பெருவேளூர்"**
(681)

என்ற அடிகளில் விளக்குகின்றார். இப்பதிகத்தில் இறைஉரு வருணனை பெரிதும் இடம் பெறுகின்றது.

**திருவிளமர் தல விளக்கம்**

காவிரித் தென்கரைத்தலம். பதஞ்சலி முனிவர் வழிபட்டது. சுவாமி: பதஞ்சலி மனோகரர். அம்பிகை: யாழினும் மென்மொழியம்மை தீர்த்தம்: அக்கினி தீர்த்தம்.

**தல வருணனை**

விரிந்த பொழில் சூழ்ந்த வளம் மிக்க நகராகவும், வண்டினம் இசைக்க, நறுமலர் விளங்கும் பொழில் உடைய நகரமாகவும் திருவிளமர் தலத்தை வருணித்துள்ளார். இப்பதிகத்தில் அதிகமாக இறைஉரு வருணனையும், இறை அருள் சிறப்பும் இடம் பெற்றுள்ளன.

திருஞானசம்பந்தரின் பாடல்களில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்திணை வளங்களும் வருணிக்கப்பட்டுள்ளன. இப்பெருமகனாரின் வருணனையில் காட்டுமரங்களும் பூவும் கிளையுமாகப் பொலிவுடன் திகழ்ந்து மலைக்கு அழகு செய்கின்றன. ஆயர்களின் வேய்ங்குழலோசையைக் கேட்க முடிகின்றது. கடற்கரையில் முத்துக்களை அள்ள முடிகின்றது. வயல்களும், சோலைகளும், செங்கழுநீர்ப் பூக்களும், தாமரைகளும், தடாகங்களும் அழகு பெறுகின்றன. திருவீழிமிழலையில் கிளிகள் வேதம் ஓதுகின்றன. அன்னம் அரசோச்சுகின்றது. வண்டுகளும் செவ்வழிப் பண்ணை இசைக்கின்றது. கொன்றை மலர்கள் பரிசளிக்கின்றன. இயற்கையோடு இயைந்த திருமணக்காட்சியினைக் கண்டுகளிக்கின்றார் திருஞானசம்பந்தர். இவரது பாடல்களில் இறைஉருவருணனை அதிகமாக இடம் பெற்றுள்ளன. இங்கு ஒரு சில பதிகங்களில் அமைந்துள்ள இயற்கை வருணனை மட்டும் விளக்கப் பட்டுள்ளன. இங்ஙனம் இச்சான்றோரது தமிழ், தமிழ்மொழியை வளப்படுத்துகின்றது.

# 25. சித்தாந்த நெறியில் சம்பந்தர்

சு. சண்முகசுந்தரம், மதுரை.

சைவ நன்னெறிப்படி மக்கள் மண்ணில் நல்ல வண்ணம் வாழ்ந்த மாதோர் பாகன் மலரடி சார்வதற்கு மக்களை முறைப்படுத்துகின்ற அருள் அனுபவ நூற்கள் திருமுறைகளுள் முதல் திருமுறைக்குரியவர் சைவ சமயத்தின் நெருக்கடியான காலக்கட்டத்தில் அவதரித்துச் சைவம் விளக்கிய சிறிய பெருந்தகையார் திருஞானசம்பந்தர்.

''ஞாலம் நின்புகழே மிகவேண்டும்'' என்று பாடிச் சைவ நெறியை ஞால நெறியாக உலக நெறியாக ஆக்கிய சாதனையாளர். அவர் காலத்தில் அவர் ஆற்றிய பணியினை அவர் வழிவழி வந்த சமயச் சான்றோர் களால் ஏற்றுப்போற்றி வணங்கப்பெற்றவர். இயற்கையில் இறைவனைக் கண்டவர். சுட்டியறிய முடியாத பரம்பொருளைச் சுட்டிக்காட்டிய சித்தாந்த வித்தகர்.

இவர் மதுரையில் பாடிய திருப்பாசுரம் சைவ சித்தாந்தக் கருவூல மாகும். இதற்குச் சேக்கிழார் இருபத்திரண்டு செய்யுட்களில் உரை யெழுதியதோடு, அதனை 'மெய்ப்பாசுரம்' எனப் போற்றியுள்ளார்.

சைவ மக்களால் அருணந்தி சிவாசாரியார் இதனை ''மெய்ஞ்ஞானம்'' என விதந்து கூறியுள்ளார். இவர் பாடிய ஒவ்வொரு பதிகத்துக்குரிய தலத்தின் இயற்கை வனப்பு, இறைவன் ஆற்றல், எளிமை முதலிய திருவருட் பண்புகளின் பொலிவு விளக்கமுற அமைந்திருக்கக் காணலாம்.

## ஐந்தொழில்

**"தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண் மதிசூடிக்**
**காடுடைய சுடலைப் பொடிபூசி யென்னுள்ளங்கவர் கள்வன்**
**ஏடுடைய மலரான்முனை நாட்பணிந்தேத்த வருள்செய்த**
**பீடுடைய பிரமா புரமேவிய பெம்மான் இவனன்றே"**

இத்திருப்பாட்டில் இறைவன் உயிர்கட்குச் செய்யும் ஐந்தொழில் களில் ''படைப்பு'' ஊழிக்காலத்து இறைவனை அடைந்து பிறப்பில்லாத என்றுமுள்ள தன்மையை வேண்டிய அறக்கடவுளை வெள்ளிடையாகப் படைத்து ஊர்தியாகக் கொண்டருளினான் என்னும் வரலாற்றாலும், ''திதி'' தக்கனால் அடைந்த தனது பெருஞ்சாபம் எவ்வெத் தேவர்களாலும்

நீக்கப்பெறாத சந்திரன் இறைவனைச் சரண்புக அவ்விறைவன் அச்சாபத்தை நீக்கி அச்சந்திரனைத் தனது திருமுடியில் அணிந்து காத்தருளினான் என்னும் வரலாற்றானும், சங்காரம் சர்வமும் அழிக்கும் கடவுள் தானே ஆகும் வரலாற்றானும், திரோதானம் இறைவன் எல்லா உயிர்கள் பாலும் நீக்கமற நிறைந்திருந்தும், அதனை அவை அறியாதவாறு வினைப்போகப் புசிப்பின் பொருட்டு அவற்றிற்கு மறைந்து நிற்கும் வரலாற்றானும், அனுக்கிரகம் தம்மை வழிபடும் அனைவர்க்கும் அருளும் வரலாற்றாலும் அறியப்பெறும்.

தோடு இச்சொல்லில் ஓகாரம் புணர்ந்துள்ளது. அன்றியும் ஆளுடைய பிள்ளையாரது முதல் திருமுறை முதல் பதிகம், முதல் அடி, முதல் மொழி, முதல் எழுத்தாகிய ஒகரம் பன்னிரண்டாம் திருமுறையான திருத்தொண்டர் புராணத்தில் ஈற்றுச் சருக்கத்தில் ஈற்றுச் செய்யுளில் ஈற்றடியில் இறுதிச்சொல்லில் ஈற்றெழுத்தாகிய மகரத்தோடு புணர்ந்து ஓம் என முடிந்து தமிழ் வேதமாகிய திருமுறைகள் பன்னிரண்டும் பிரணவத்தில் தோன்றி அடங்கி நிற்கும் தன்மையை இத்திருப்பாட்டு உணர்த்தும்.

இப்பாடல் ஆளுடைய பிள்ளையார் முன்னைப் பிறவியில் இறைவனை வழிப்பட்டமை காரணம் பற்றி இப்பிறவியில் அருள் செய்யப் பெற்றமையை அவரே ''பாவனாய்த் தொண்டு செய்து பண்டும் இன்றும் முன்னமே'' எனவும், ''என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே இருங்கடல் வையத்து முன்னே நீ புரி நல்வினைப் பயனிடை'' எனவும் ''மயங்குமாறு இலாத என்னை மையல் செய்து இம்மண்ணில் பிறக்குமாறு காட்டினாய்'' எனவும் கூறுமாற்றால் அறியலாம்.

செவியன், விடையேறி, மதிசூடி என்பவற்றால் உருவத் திருமேனியும், பொடிப்பூசி பிரமாபுர மேவிய பெம்மான் என்பவற்றால் அருவுருவத் திருமேனியும் ''என்னுள்ளங்கவர் கள்வன்'' என்பதால் அருவத் திருமேனியும் கொள்ளப்பெறும் 'தோடுடைய செவியன்' என்பதனால் பேரருளுடையமையும் (தூய உடம்பின்னாதலும் அடங்கும்) விடையேறி என்பதனால் தன்வயமுடைமையும் ''மதிசூடி'' என்பதனால் முற்றுணர் வுடைமையும் ''பொடிபூசி'' என்பதனால் 'வரம்பில் இன்பமுடைமையும்' 'உள்ளங்கவர் கள்வன்' என்பதனால் இயல்பாகவே பாசங்களின் நீங்குதலும் (இயற்கை வுணர்வின்னாதலும் அடங்கும்) ''பிரமாபுர மேவிய பெம்மான்'' என்பதனால் அளவிலாற்றலுடைமையும் பெறப்படும். இவை சத்துச்சித்தாய இறைவனது இயல்பாகும்.

இத்திருப்பாடலில் பிள்ளையார் காணமுடியாத கடவுளைக் கண்டு கடவுள் ஒருவன் உளன் என உலகுக்கு உணர்த்தியுள்ளார். இவன்

என்பது இறுதிச்சொல் அன்றே என்பது அடைநிலை. இவன் என்பது அண்மைச்சுட்டு. இறையடையாளம் காட்சியைத் தெளிவுபடுத்தும். இதில் ''விடையேறி என்பது படைத்தலலையும் ''தூயவெண் மதிசூடி'' என்பது காத்தலையும் ''காடுடைய சுடலைப் பொடிபூசி'' என்பது அழித்தலையும், ''உள்ளங்கவர் கள்வன்'' என்பது மறைத்தலையும், ''அருள்செய்த'' என்பது அருளையும் குறிக்கும் என்பர். இவ்வுண்மையினைச் சிவஞான சித்தியார்,

**''அழிப்பு இளைப்பாற்றல் ஆக்கம் அவ்வவர் கன்மம் எல்லாம்**
**கழித்திடல் நுகரச் செய்தல் காப்பது கன்ம வொப்பில்**
**தெழித்திடல் மலங்கள் எல்லாம் மறைப்பருள் தெய்தி தானும்**
**பழிப்பொழி பந்தம் வீடு பார்த்திடில் அருளே யாகும்''** (57)

**அத்துவிதம் - சம்பந்தர்**

**''ஈறாய் முதல் ஒன்றாய் இரு பெண்ஆண் குணம் மூன்றாய்**
**மாறா மறை நான்காய் வருபூதம் அவை ஐந்தாய்**
**ஆறறார் சுவை ஏழோசையோடு எட்டுத்திசை தானாய்**
**வேறாய் உடன் ஆனான் இடம் வீழிமிழலையே''**

என்பது (1-2) திருவீழிமிழலை.

அத்துவிதமாவது - இரண்டல்லாமை. அதாவது பிரிவின்மை. பிரிவின்மை எனவே பொருள் இரண்டு என்பது பெறப்படும். இரண்டாயினும் வேறுவேறாய் நில்லாது ஒன்றியே நிற்கும். இரண்டாய் இருந்தே இரண்டல்லவாய் நிற்கும். எனவே இவ்வத்துவிதத் தொடர்பில் மூன்று தன்மை காணப்பெறும். அவையாவன ஒன்றாதல், வேறாதல், உடனாதல் என்பன.

1. இறைவனும் உலகமும் ஒன்றி நிற்றல்
2. உலகின் தன்மை வேறு இறைவன் தன்மை என வேறுபட்டு நிற்றல்
3. உலகை இறைவன் தொழிற்படுத்தலேயன்றி அதன்பொருட்டு உடன் தொழிற்பட்டும் நிற்றல்.

எனவே இம்மூன்றிற்கும் பொதுவாய் நிற்கும். அத்துவிதம் என்பர். இறைவன் இவ்வத்துவித நிலையினன் என்பதைப் பல நூற்றாண்டுகட்கு முன்பே திருஞானசம்பந்தப் பெருந்தகையார் திருவீழிமிழலைத் திருப்பதிகத்துள் கூறியுள்ளார். (7-ஆம் நூற்றாண்டு)

இதனைத் திருக்களிற்றுப்படியார் என்னும் ஞானநூலும் குறிக்கும். இந்நூல் சித்தாந்த சாத்திரங்களுள் காலத்தால் முந்தியது. மெய்கண்டார் இயற்றிய சிவஞானபோதமென்னும் ஞானநூலுக்கு முற்பட்டது.

''ஈறாகி அங்கே ஒன்றாய் ஈங்கிரண்டாய்
மாறாத எண்வகையாய் மற்றிவற்றின் - வேறாய்
உடனாய் இருக்கும் உருவுடைமை என்றும்
கடனாய் இருக்கின்றான் காண்''

என்பது திருக்களிற்றுப்படியார்.

இறைவன் உலகத்தோடு ஒன்றாய், வேறாய், உடனாய், இருக்கின்றான் எனும் இக்கருத்து ''திருக்களிற்றுப்படியார்'' எனும் ஞான நூலிலும் இடம்பெற்றுள்ளமையை அறியலாம். இக்கருத்தினைத் தெளிவுபடுத்தி உள்ளார்.

''அவையே தானே ஆயிரு வினையின்
போக்கு வரவு புரிய ஆணையின்
நீக்கமின்றி நிற்கு மன்றே''

என்பது. இதன் கருத்தினை மெய்கண்டார் முதல் மாணவர் அருணந்தி சிவாச்சாரியார்.

''உலகெலாமாகி வேறாய் உடலுமாய் ஒளியாய் ஓங்கி
அலகிலா வுயிர்கள் கன்மத்து ஆணையின் அமர்ந்து செல்லத்
தலைவனாய் இவற்றின் தன்மை தனக்கு எய்தல் இன்றித்தானே
நிலவுசீர் அமலனாகி நின்றனன் நீங்காது எங்கும்''

(சிவஞான சித்தியார் - 91)

என்றும் கூறுவர்.

**தடத்த இலக்கணம் சம்பந்தர்**

தெய்வப்புலவர்கள் இறைவனின் தடத்த நிலையைத்தான் பாடினர். மிகச்சிலரே இறைவனின் இயற்கை நிலையைப் பாடியுள்ளனர். ஒரு பெயர், ஒரு வடிவம், ஒரு அணி, இல்லாதவனுக்கு ஆயிரம் பெயர், ஆயிரம் வடிவம், ஆயிரம் அணி அமைத்தனர். இது பக்தியின் முதிர்ந்த நிலையைக் காட்டும்.

ஞானசம்பந்தப் பிள்ளையார் தோடுடைய செவியன், விடையேறி யவன், உள்ளங்கவர்ந்தவன் என்று பாடியுள்ளார். இப்பாடலில் கூறப் பெறும் தோடு, விடை, மதியம், பொடி முதலியன இயற்கையில் இறைவனுக்கு இல்லை. இவை அனைத்தும் வந்தேறிகளே தடத்தமாகும்.

இறைவனுக்குச் சொரூப நிலையில் இவை யாவுமில்லை. எனவே இறைவன் நிர்க்குணன். அவன் சகுனனாக வந்தபோது ஞானப்பிள்ளையார் ''மங்கைபங்கமும் அங்கத் தோடொன்றிய மாண்பு ஏன்'' என்பர். ஒன்றுமில்லாத நீ இங்ஙனம் வேடம் கொண்டதேன் என்பர். இதற்குச்

சித்தியார் இறைவன் கொள்ளும் முக்கோலமும் நம் கருமேனி கழிக்க வந்த கருணையின் வடிவு எனும் சித்தியார் இறைவனுடைய தடத்த இலக்கணத்திலிருந்து சொரூப இலக்கணத்தைத் தெரிந்து கொள்க எனும். ''உருமேனி (தடத்தம்) தரித்துக்கொண்டது என்றலும் உருவிறந்த அருமேனியதுவும் கண்டோம். அருவுருவானபோது திருமேனி உபயம் பெற்றோம்'' என்று திறம்படப் பேசும்.

இறைவன் உருவம் மேற்கொண்டான் என்றால் உருவற்ற நிலையொன்று இருக்க வேண்டும் என்னும் சாத்திரம். இறைவன் கோலங்களைப் பாடுவது எளிது. கோலங்கடந்த நிலையைப் பாடுவது கடினம். ஞானப்பிள்ளையார் முதல் பாட்டில் தனக்காக இறைவன் கோலம் கொண்டு அம்மையப்பராகத் தோன்றியமையைப் புலப்படுத்தியுள்ளார்.

**''கறையணி வேளவர் போலும்**
**கபாலம் தரித்திலர் போலும்**
**மறையும் நவீனநீர் போலும்**
**மாசுணம் ஆர்த்திலர் போலும்**
**பறையும் சுரத்திலர் போலும்**
**பாசம் பிடித்தவர் போலும்**
**பிறையும் உடைக்கிலர் போலும்**
**பிரமா புரமமர்ந் தாரே''** (பிரமபுரம் -2-1)

இப்பாடல் போன்று சுமார் நாற்பது பாடல்களில் எதிர்மறை முகத்தால் இறைவனின் (சொரூப) நிலையைப் பரவியுள்ளார்.

சித்தாந்த நெறியில் திருமுறைகளும் அறிஞர் தம் ஆய்வுப் பொருளாகவே இருந்துவிடாமல் அன்பர்களின் வாழ்க்கை நெறியாக மாறவேண்டும். ''யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்'' என்று அருளிய திருமூலரின் சிந்தனை இதுவேயாகும். ''இறவாத இன்ப அன்பு'' பூண்டு அடியார்கள் வாழ்ந்த அன்றைய வாழ்க்கை முறை இன்றைய இளஞ்சிவநெறிச் செல்வர்களுக்கு எவ்வாறு பயன்படும் என்று ஆராய வேண்டும். இன்று நம்மவர்கள் எதிர்நோக்கும் சமூக, ஆன்மிக வாழ்க்கை, சைவ சித்தாந்தம் எவ்வாறு வழிகாட்ட முடியும் என்றெல்லாம் ஆய்வுகள் வரவேண்டும். கற்றவர் கல்லாதவர் எல்லோருக்கும் பொதுவில் நடமிடும் இறைவர் சிவபெருமான். அவர்தம் நெறியும் எல்லோரும் பயன்பட வேண்டும். அறிஞர் உலகம் இதைச் சிந்திக்க வேண்டும்.

**''மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்''.**

# 26. சம்பந்தரின் நற்றமிழ்ப் பற்று

மு. சதாசிவம், ஈரோடு.

'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தர்' தமிழில் அளவிலாப் பற்றுடையவர். அவர் பாடிய பல பதிகங்களிலும் 'தமிழ் ஞானசம்பந்தன்' என்று தம் பெயரைத் தமிழோடு சேர்த்துச் சொல்லி யுள்ளார். இவர் வடமொழி பேணும் நான்மறையாளர் குலத்தில் தோன்றிய வராயினும் வடமொழியில் பாடாது தமிழில் மட்டுமே பாடியுள்ளார். அத்துணைப் பாடல்களும் தமிழிசைப் பாடல்கள்; ''பண்ஆர் இன் தமிழ்ப் பாடல்கள்'' 'சந்தம் மலி பண்ணிசைப் பாடல்கள்.

தமிழ் இலக்கிய வரலாற்றில் ஓர் இருண்ட காலத்திற்குப் பிறகு உதய ஞாயிறாகத் தோன்றியவர் திருஞானசம்பந்தர். இவரால் சைவ சமயம் மறுமலர்ச்சி அடைந்தது போலவே தமிழும் மறுமலர்ச்சியடைந்தது. அதுவரை பண்டிதர்கள் மட்டுமே உரிமை கொண்டாடி வந்த தமிழ் எளிமையும் இனிமையும் பொருந்தி எல்லோருடைய நாவிலும் நடமாடும்படி செய்தவர் நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தரே யாவர்.

இவருடைய தமிழ்ப் பற்றினை இவர் பாடிய இன்தமிழ்ப் பாடல் களே பறைசாற்றிக் கொண்டிருக்கின்றன. தமிழில் அதுவரை தோன்றியிராத புதிய புதிய சந்தங்கள், யாப்புகள், பண்கள், வடிவங்கள் முதலியவற்றைத் தமிழில் முதன் முதலாகப் புகுத்திய பெருமை இவருக்கே உரியது. திருக்கோயில்களில் வடமொழியன்றித் தமிழிலேயே பாடல்கள் பாடி வழிபட்டு இறைவன் அருளைப் பெறமுடியும் என்று வழிகாட்டினார். வடமொழியில்தான் மந்திரங்கள் உள்ளன என்று மக்கள் கருதி வந்ததை மறுத்துத் தமிழிலும் மந்திரங்கள் உள்ளன என்று நிறுவினார். தமிழ்ப் பாடல்கள் மூலம் எலும்பைப் பெண்ணாக்கியது. இறந்த வணிகனை உயிர்பெற்றெழச் செய்தது முதலிய பல அற்புதங்களை நிகழ்த்தினார். தமிழில் 'வேதங்கள்' இல்லாத குறையைப் போக்கும் வகையில் தமிழ் வேதங்களென மதிக்கத்தகும் பதிகங்களைப் பாடியருளினார். இவரால் முன்பு மங்கிக் கிடந்த தமிழ் புத்துணர்ச்சி பெற்றது. புதுமை உற்றது; மறுமலர்ச்சி அடைந்தது; மக்கள் தமிழாக மலர்ந்தது. இவரால் இசைத் தமிழும் ஏற்றம் பெற்றது.

முதலாவதாக, மதுரையில் தமிழ்ச் சங்கத்தைத் தோற்றுவித்தவர் சிவபெருமானே என்று கூறுகிறார். 'அந்தண் மதுரைத் தொகை ஆக்கினானும்''

(312-11) என்கிறார். இவருக்குச் சிவபெருமான் தமிழாகவே காட்சி யளிக்கிறார். 'பல ஓசைத் தமிழவையும் உண்ணின்றதொர் சுவையும்.. முழுதானான்'' (11-4) என்று பாடுகிறார். சிவபெருமான் திருவடியில் தமிழ் தங்கியுளது என்கிறார்.

**''தம்மலர் அடியொன்று அடியவர் பரவத்**
**தமிழ்ச்சொலும் வடசொலும் தாள்நிழற் சேர''** (74-7)

மேலும், இசையுடனும் இசைக் கருவிகளுடன் தமிழ்ப்பாடல் பாடும் இடத்தைவிட்டுச் சிவபிரான் நீங்க மாட்டார் என்கிறார்:

**''தமிழின் நீர்மை பேசித்**
**தாளம் வீணை பண்ணி நல்ல**
**முழவம் மொந்தை மல்கு பாடல்**
**செய்கை இடம் ஓவார்''.** (73-8)

ஞானசம்பந்தர் தமிழின்பால் எத்துணை ஈடுபாடு கொண்டிருந்தார் என்பதை அவர் தமிழுக்குத் தரும் பின்வரும் அடைமொழிகளே புலப் படுத்தும். அவை வருமாறு: அணியார் செந்தமிழ்கள்; அருந்தமிழ் (கள்); ஆரா அருந்தமிழ்; இசைமலி தமிழ்; இன்தமிழ்; இன்புறுந் தமிழ்; உருவாரும் ஒண்டமிழ்; உரைசெய் தமிழ்; ஊறு பொருளின் தமிழியற் கிளவி; ஊறும் இன்தமிழ்; எழுதுமொழி தமிழ்; ஏரினார் தமிழ்; ஏறு பல்பொருள் முத்தமிழ்; ஒண்டமிழ்; ஒண்டமிழ்கள்; ஒளிர் பூந்தமிழ்; கலைமலி தமிழ்; கலைமுத்தமிழ்; குலமார் தமிழ்; குலவேந்தர் செந்தமிழ்; குற்றமில் செந்தமிழ்; குன்றாத் தமிழ்; சங்கமலி செந்தமிழ்கள்; சந்தநிறை தண்டமிழ்; சந்தமார் தமிழ்; சந்தமார்ந்தழகாய தண்டமிழ்; சந்தமின் தமிழ்கள்; சந்துலாந் தமிழ்; சீர் இன்புறுந் தமிழ்; சீர்மிகுத்த தமிழ்; சீரார் தமிழ்; சீரின்மலி செந்தமிழ்கள்; செந்தண்டமிழ்; செந்தமிழ்; செந்தமிழ்கள்; செந்தமிழ்க் கீதம்; செந்தமிழ்ப் பயன்; செப்பரிய தண்டமிழ்; செறிவண்டமிழ்; சொல்லார் தமிழ்; சொற்றமிழ்; ஞாலமல்குந் தமிழ்; ஞாலமிக்க தண்டமிழ்; ஞானசம்பந்தன் வாய் நவிற்றிய தமிழ்; ஞானசம்பந்தன் தமிழ்; ஞானத் தமிழ்; தக்கதென் தமிழ்க்கலை; தகுதமிழ்; தகைமலி தண்டமிழ்; தண்டமிழ்; தமிழ் இயற்கிளவி; தமிழ்க்கலை; தமிழ்க்கிளவி; தமிழ்ச்சொல்; தமிழ் ஞானம்; தலமார்தரு செந்தமிழ்; தவமல்கு தமிழ்; திருநெறிய தமிழ்; துளங்கில் தமிழ்; தென்சொல்; தென்தமிழ்க்கலை; தேனேரார் தமிழ்; நல்ல செந்தமிழ்; நல்ல தமிழ்; நல்லவாய இன்தமிழ்; நல்ல மொழி; நலங்கொள் தமிழ்; நற்றமிழ்; நாடவல்ல தமிழ்; நாடிய தமிழ்க்கிளவி; படமலி தமிழ்; பண்ணாருந் தமிழ்; பண்ணியல் தமிழ்; பண்ணுலாம் அருந்தமிழ்; பண்பொலி செந்தமிழ்; பந்தமார் தமிழ்; பல்பொருள் முத்தமிழ்; பலஓசைத்தமிழ்; பாமரு செந்தமிழ்; பாரின் மலிகின்ற புகழ் நின்ற தமிழ்; பாரினார் தமிழ்; புகழ் நின்ற தமிழ்; புகழ் வண்டமிழ்;

பூந்தமிழ்; பெருகிய தமிழ்; பேரியல் இன்தமிழ்; மருவிய தமிழ்; மறைவளருந் தமிழ்; மிகுதலை தமிழ்; முடிவி லின்தமிழ்; முத்தமிழ்; வடமார் தமிழ்; வண்டமிழ்; வார்தேனேரார் தமிழ்; விலையுடை அருந்தமிழ்.

இக்காலத்தில் கர்நாடக சங்கீதம் என்பது தமிழிசையே என்பது ''பண்ணும் பதம் ஏழும், பலஓசைத் தமிழவையும்'' (11-4) என்று அவர் பாடுவதிலிருந்து அறியப்படும்.

தமிழரைச் செந்தமிழர் (338-4) செந்தமிழோர்கள் (6-9) என்று வாய் மணக்கக் குறிப்பிடுகிறார்.

பிற்காலத்தில் கீர்த்தனங்கள் (இசைப்பாடல்கள்) பாடுவோர் தம் கீர்த்தனப் பாடல்களின் ஈற்றில் தம் பெயரைப் பதித்து வந்திருப்பதைப் பார்க்கிறோம். தெலுங்கிசை மாமன்னர் தியாகராசர் ஒவ்வொரு கீர்த்தனை யிலும் தம் பெயரைப் பதிவு செய்துள்ளார். (வாழ்நாள் முழுதும் தமிழ்நாட்டிலேயே வாழ்ந்த அவர் தமிழில் ஒரு பாடல் கூடப் பாட வில்லை என்பது குறிப்பிடத் தக்கது). தெலுங்கில் வேமன்னகவியும் ஒவ்வொரு நாலடிப் பாடலின் ஈற்றிலும் தம் பெயரைக் குறிப்பிட்டுள்ளார். இவர்களுக்கெல்லாம் முன்னோடியாக இருந்தவர் ஞானசம்பந்தரே. இவர்தாம் முதன் முதலாக ஒவ்வொரு பதிகத்தின் கடைசிப் பாடலிலும் தம் பெயரைத் தவறாது குறிப்பிட்டுள்ளார். திருநாவுக்கரசர் அவ்வாறு ஒவ்வொரு பதிகத்திலும் தம் பெயரைப் பதிவு செய்யவில்லை. அதனால் தான் 'சம்பந்தர் தன்னைப் பாடினார்; அப்பர் சிவனைப் பாடினார்; சுந்தரர் பொன்னுக்குப் பாடினார்' என்ற வழக்குமொழி எழுந்தது போலும்!

இக்காலத்தில் அவையில் 'தன்னறிமுகம் செய்தல்' என்ற சடங்கு நடைபெறுகிறது. முதன் முதலில் இலக்கியத்தில் 'தன்னறிமுகத்தைத்' தொடங்கி வைத்தவர் திருஞானசம்பந்தரேயாவர். அவர் தன்னறிமுகம் செய்யும்போது தமிழோடு தம்மை இணைத்துக் கூறுவதிலிருந்து அவருடைய நற்றமிழ்ப் பற்றுத் தெற்றெனப் புலப்படுகிறது. தாம் தமிழே முற்றுமானவர் என்பதைக் குறிப்பிடும்போது 'அருந்தமிழ் சுற்றும் முற்றும் ஆயினான்' (234) என்று கூறுகிறார். பின்வரும் தொடர்கள் தமிழோடு அவர் தம்மை இணைத்துக் கூறுவனவாகும்.

''அருந்தமிழ் சுற்று முற்று மாயினான்; அருந்தமிழ் ஞானசம்பந்தன்; உரை செய்தமிழ் ஞானசம்பந்தன்; ஏறுபல்பொருள் முத்தமிழ் விரகன்; சம்பந்தன் செந்தமிழ்; சம்பந்தன் பெரிதுந் தமிழ் சொல்ல; சீரார் தமிழ் ஞான சம்பந்தன்; செந்தமிழ் இசைந்த.. பந்தன்; செந்தமிழ் ஞானசம்பந்தன்; செந்தமிழான்; செந்தமிழின் சம்பந்தன்; செந்தமிழின் விரகன்; ஞானசம்பந்தன் உரைசெய் சங்கமலி செந்தமிழ்கள்; ஞானசம்பந்தன் உரைசெய்த நிகரில்லன தமிழ் மாலைகள்; ஞானசம்பந்தன் ஊறும் இன் தமிழால்... சொன்னபத்து;

தகுதமிழ் ஞானசம்பந்தன்; தமிழ்க் கிழமை ஞானன்; தமிழ்கெழுவிரகினன்; தமிழ் ஞானசம்பந்தன்; தமிழ் ஞானம் மிகு பந்தன்; தமிழ்நாடு ஞானசம்பந்தன்; தமிழ் நாதன் ஞான சம்பந்தன்; தமிழ் விரகன்; தமிழ் விரகினன்; தமிழாகரன்; தமிழார் விரகன்; தமிழின் விரகன்; தமிழொடு விரகினன்; நண்ணிய செந்தமிழால் மிகு ஞானசம்பந்தன்... பாடல்; நல்ல செந்தமிழ் வல்லவன் ஞானசம்பந்தன்; நல்ல வாய இன்தமிழ் நவிலும் ஞானசம்பந்தன்; நற்றிழ்க் கின்றுணை ஞானசம்பந்தன்; நற்றமிழ் ஞானசம்பந்தன்; நாடிய தமிழ்க்கிளவி யின்னிசை செய் ஞானசம்பந்தன்; பாரினார் தமிழ் ஞானசம்பந்தன்; பெருகிய தமிழ் விரகினன்; பேரியலின் தமிழ்; மிகுதலை தமிழ்கெழு விரகினன்; முத்தமிழ் (நான்மறை) ஞானசம்பந்தன்; முத்தமிழ் விரகன்; வித்தகமறைமலி தமிழ் விரகன்.

தமிழ்ஞான சம்பந்தர் தமிழில் முதன் முதலாகத் தோற்றுவித்த சந்தங்கள், பாவினங்கள், இசைப் பண்கள் முதலியவற்றை விரித்துரைக்க ஈண்டு இடம் போதாது. அவர் தமிழுக்குச் செய்த அளப்பரிய தொண்டு களை நோக்குழி அவர் தம்மைப் பற்றிக் கூறிய தன்னறிமுக உரைகள் உண்மையே; அவை புனைந்துரையல்ல என்பதை எவரும் உணர்ந்தின்புற முடியும்.

# 27. திருநீற்றின் பெருமை

வை. சந்திரலேகா, சென்னை.

திருஞானசம்பந்தர் மதுரையில் ஒரு மடத்தில் தங்கியிருந்த போது சமணர்கள் அம்மடத்திற்குத் தீ வைத்தார்கள். இத்தீயை, ''பையவே சென்று பாண்டியற்காகவே'' என்று சம்பந்தர் ஆணையிட்டார்; கூன்பாண்டியன் தீராத வெப்பு நோயால் வருத்தமுற்றான். இந்நோயைத் தீர்க்க எவ்வளவு முயன்றும் சமணர்களால் முடியவில்லை. பின்னர் சம்பந்தர், பதிகம் ஒன்றை ஓதித் திருநீறு அளித்தார். அதனால் இப்பதிகத் திற்குத் திருநீற்றுப் பதிகம் என்றே பெயர். பாண்டிய மன்னனும் நோய் நீங்கிப் பேரின்பம் பெற்றான்.

## திருநீற்றின் பெருமை

திருநீற்றின் பெருமையினை உரைப்பதாக, பூசப் பூசப் பொன்னிறம் தின்னத் தின்னத் தன்னிறம் என்ற கூற்றும், நீறிலா நெற்றிபாழ், நெய்யில்லா உண்டி பாழ் என்ற கூற்றும் விளக்குகின்றன. திருநீற்றினை உடம்பில் பூசப் பொன்னிறம் பெறும் என்றும் அதை அணிய வேண்டும் என்றும் வலியுறுத்தப்படுகிறது. சம்பந்தரும்,

**'கவினைத் தருவது நீறு'**

என்றும்

**'பூச இனியது நீறு'**

என்றும் திருநீற்றினை அணிவதின் பெருமையினைக் கூறுகிறார்.

## திருநீற்றின் உண்மை

இவ்வுலகில் உள்ள பொருள்கள் அனைத்தும் அழிந்து போகக் கூடியன; சாம்பலாகக் கூடியன என்பதை உணர்த்துவதே திருநீற்றின் உண்மைக் கருத்தாகும். இந்நிலையாமையின் உண்மையினை உணர்த்த உணர, அணிவிக்க அணியப் பெறுவதே திருநீறாகும்.

நிலையாமை தோன்றுமாயின் 'நான்' 'எனது' எனும் ஆணவ மலம் ஒடுங்கும். இதனால் ஏற்படும் பூசல் நீங்கும். நல்வினையே நிகழும். இதனால் இன்பம் துய்க்கலாம். ஆணவம் அழிந்தாலே மற்ற இருமலங்கள் தாமாகவே நீங்கும். அதனின்று விடுபடலாம். அதனால்தான் கைவிரல்கள்

ஐந்தில் நடுவிரலினை ஆணவமலம் என்று குறிக்கிறார்கள்; மற்றவை முறையே, கன்மம் மாயை ஆக விளங்குவன. இம்மூன்றையும் நீக்கினால் இறைவனை எளிதில் அடையலாம்; இதன்கண் ஆள்காட்டி விரலினைக் கட்டைவிரலின் அடிப்பகுதியில் சேர்க்க வேண்டும். கட்டை விரலும் தாமாக வந்து சேரும். இது, இறைவனும் வந்து அவ்வுயிரை அணைந்து கொள்வான் என்பதைக் காட்டுகிறது. இதனைக் குறிப்பதே சின் முத்திரையாகும்.

## சைவர்களின் அடையாளச் சின்னம்

சைவர்களின் அடையாளச் சின்னமாக, சிவ சின்னங்களில் ஒன்றாக விளங்குவது திருநீறு. அது குளிர்ந்த தன்மையுடையது, வெம்மையைத் தீர்ப்பது.

## திருநீற்றின் சிறப்பு

கூன்பாண்டியன் வெப்பு நோய் தீர்த்த திருநீறு என்பதை 'வருத்தந் தணிப்பது நீறு' என்று சம்பந்தர் கூறுகிறார். மந்திரம், தந்திரம், தந்திரமாக விளங்குவது திருநீறு. வாயினால் சொல்லப்பெறும் துதிப்பாடலாகவும், நூலாகவும் படித்தால் விளைவிக்கக் கூடிய பயனைத் திருநீறு தருகிறது என்பதை மந்திரம், தந்திரம் என்ற சொல்லால் வழங்குகின்றமை விளக்கும்.

வானவராலும், முனிவராலும், இராவணனாலும் அணியப் பெற்றது திருநீறு. இது சிறப்புடையது; இதை அணிந்த தேவர்கள் இடர்தீர்ந்து இன்பமும் அடைந்ததை,

**"மேலுறை தேவர்கள் தங்கள் மெய்யதுவெண்பொடிநீறு**
**ஏலவுடர்பிடம் தீர்க்கும் இன்பம் தருவது நீறு"**

என்று கூறுவதால் அறியலாம்.

பெருந்தவத்தினரும், புண்ணியரும் பூசக் கூடியது திருநீறு. தவத்தோரின் ஆசையினைக் கெடுத்து இவ்வுலக வாழ்வு நிலையில்லாதது என்பதையும் காட்டும் வண்ணமாக விளங்குவது என்பதை,

**....... பெருந்தவத்தோர்களுக் கெல்லாம்**
**ஆசை கெடுப்பது நீறு; அந்தம தாவது நீறு**

என்று கூறுகிறார், சம்பந்தர். அந்தம் - முடிவு; வாழ்வாவது மாயம், மண்ணாவது திண்ணம் என்ற தத்துவத்தை விளக்குவதாக 'அந்தமதாவது திருநீறு' என்ற தொடர் அமைந்துள்ளது.

திருநீறு, துயர் தீர்ப்பது என்ற பொருளில் 'புன்மை தவிர்ப்பது, அவலமறுப்பது, எத்திசைக் கண்ணும் இருப்பவர் பாவமறுப்பது முதலான சொற்களில் இடம் பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

தக்கோரால் புகழப்படுவதும், பரவுவதற்கு இனிமையானதும் போற்றும் சிறப்புடையதும் திருநீறு. இதை அணிந்தால் பெருமையும், மதியும், புண்ணியமும், தூய்மையும் பெறலாம். மாண்பினையும் பாதுகாப்பையும் தரவல்லது இத்திருநீறு.

முத்தநாதன் திருநீற்றினை அணிந்து சிவ சின்னங்களைத் தரித்துக் கொலையும் செய்து தப்பித்தமை திருநீறு அணிந்ததனால்தானே! தரித்தது வேடமாயினும் அணிந்தது திருநீறு என்பதனால் பாதுகாப்பாக அவன் ஊர்ப்புறம் சென்றான். அவனுக்குப் பெருமையும் திருநீறு பூசியதினால் தான் கிடைத்தது. இதைச் சம்பந்தர், 'பேணியணிபவர்க்கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு' என்று கூறுகிறார்.

### திருநீற்றுப் பதிகத்தில் இடம்பெறும் வரலாற்றுக் குறிப்பு

கூன் பாண்டியன் மன்னனாக இருந்தபோது சமணர்கள் தம் சமயத்தை அவனிடம் திணித்தனர்; மன்னனும் சமண சமயம் மேற் கொண்டார். சைவ சமயத்தினின்று மங்கையர்க்கரசியார் சமணத்திற்கு மாறவில்லை. தம் மணாளன் சைவ சமயமே மீண்டும் தழுவ வேண்டும் என்று விரும்பினார். சம்பந்தரின் வருகை இதனை நிறைவேற்றியது. இதனால் ஏற்பட்ட ஒன்றே கூன்பாண்டியனுக்கு ஏற்பட்ட வெப்புநோய். சமணரால், சம்பந்தருக்கு வைக்கப்பட்ட தீயே தென்னவனுக்குப் போய்ச் சேர்ந்தது. ஞானசம்பந்தப் பெருமான் திருநீற்றுப் பதிகம் ஓதி, திருநீறு பூசி, தென்னவன் வெப்புநோய் தீர்த்தார் என்ற வரலாற்றுக் குறிப்பு,

**ஆற்றல் அடல்விடை ஏறும் ஆலவாயின் திருநீற்றைப்**
**போற்றிப் புகலி நிலாவும் பூசுரன் ஞானசம்பந்தன்**
**தேற்றித் தென்னன் உடல் உற்ற தீப்பிணியாயின தீரச்**
**சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர் தாமே**

என்ற திருநீற்றுப் பதிகத்தின் இறுதிப் பாடலால் தெரிய வருகிறது.

சமணர்கள் கூடிச் சம்பந்தருக்குத் தீங்கிழைக்க அது தென்னவனைப் போய்ச் சேர, அவர் நோயைச் சம்பந்தர் தீர்த்ததைக் கண்டு கண் விழிப் பிதுங்கி நின்றனர். இவ்வரலாற்று உண்மையும், சம்பந்தரின் தேவாரத்திலே காணக் கிடக்கிறது. அப்பாடல்வரி,

**'குண்டிகைக் கையர்களோடு சாக்கியர் கூட்டமும் கூடக்**
**கண்திகைப்பிப்பது நீறு'**

என்பதாகும்.

### திருநீற்றுப் பதிகத்தில் இடம்பெறும் புராணக் குறிப்பு

சிவபெருமானின் திருவடியையும், திருமுடியையும் காண்பதற்கு, முறையே திருமாலும் நான்முகனும் செல்லக் காணப்பெறாமல் போனது.

ஆனால் நான்முகன் மட்டும் வழியிடைக்கண்ட சிவபெருமானின் சடை முடியிலிருந்து வருவதாகக் கூறிய தாழம்பூவினைப் பொய் சாட்சி சொல்ல வைத்து, தாம் சிவபெருமானின் திருமுடியினைக் கண்டதாகக் கூறிய புராண நிகழ்வு திருநீற்றுப் பதிகத்தில் இடம் பெறுகிறது. இதனால் நான்முகனுக்குச் சிறப்பாகக் கோயில் இல்லையென்பதும், சிவபெருமானுக்குத் தாழம்பூ சூட்டப்பெறுவதில்லை யென்பதும் அறிந்த ஒன்று. இப்புராணச் செய்தி,

**'மாபெரும் அயன் அறியாத வண்ணமும் உள்ளதுநீறு'**

என்ற திருநீற்றுப் பதிக வரியால் அறியலாகும்.

## திருநீற்றினால் கிடைக்கப்பெறும் பயன்

திருநீறு இம்மைக்கு மட்டுமன்றி மறுமைக்கும் பயனளிக்கும் என்பதை,

**"இருமைக்கு முள்ளது நீறு"**

என்பதனால் அறியலாம். பத்தியும், சித்தியும், முத்தியும் தரவல்லது திருநீறு; பத்தி இறைவனைப் பலவாறு புகழ்ந்துரைத்துப் போற்றித் தொண்டு செய்வது இதைத் தாசமார்க்கம் என்பர். இத்தகு தொண்டினைப் புரிந்தவர் திருநாவுக்கரசர்.

சித்தி என்பது அறிவு; தோழமை மனப்பான்மையுடன் இறைவனுடன் கலந்துறவாடிப் பெறும் தன்மையுடையது; இதைச் சகமார்க்கம் என்பர். இத்தகு தோழமை நெறி கொண்டவர் சுந்தரர்.

முத்தி என்று கூறப்பெறுவது ஞானம். அறிவுக்கு அப்பாற்பட்ட நிலை. இம்மார்க்கத்தினை ஞானமார்க்கம் என்பர். இந்த நிலையினையும் தரும் திருநீறு. இந்நிலையினை அடைந்தவர் மாணிக்கவாசகர்.

சற்புத்திரமார்க்கத்தைக் கொண்டவரான சம்பந்தர், தம்மைத் தவிர்த்து மற்ற மூவரையும் சிறப்பித்துக் கூறுவதாக இப்பதிகப் பாடல் அமைகிறது. அப்பாடல்,

**முத்தி தருவது நீறு, முனிவரணிவது நீறு**
**சத்தியமாவது நீறு தந்தோர் புகழ்வது நீறு**
**பத்தி தருவது நீறு பரவ இனியது நீறு**
**சித்தி தருவது நீறு திருவால வாயான் திருநீறே**

என்பதாகும்.

**திருநீறு பூசுவதால் கிடைக்கும் பலன்**

நெற்றியில் விபூதி பூசுவது ஐஸ்வர்யம் அளிக்கும். பாவங்களில் இருந்து விலக்கி பரிசுத்தமாக்கும். எல்லாவிதமான தொல்லைகளையும் இடர்களையும் அகற்றி எல்லா நலனையும் கொடுக்கும்.

பூத, பிரேத, பிசாசு, அரக்ககண துன்பங்களின்று முழுமையாகக் காப்பாற்றி வீடுபேறு அளிக்கும். நாம் பூசும் திருநீற்றிலே நான்கு வகை உண்டு அவை, கல்பம், அணுகல்பம், உபகல்பம், அகல்பம்.

**கல்பம்**

நோயில்லாத கன்றுடன் கூடிய பசுவின் சாணத்தைப் பூமியில் விழாது தாமரை இலையில் வாங்கி உருண்டையாக்கி, பஞ்சபிரம்ம, மந்திரங்களால் சிவாக்கினியில் எரித்து எடுப்பது;

**அணுகல்பம்**

காடுகளில் கிடைக்கும் பசும் சாணத்தைக் கொண்டு சிவாக்னியில் ஆகித்து தயாரிப்பது.

**உபகல்பம்**

மாட்டு தொழுவங்களிலும் மாடுகள் இருக்கும் இடங்களிலிருந்தும் எடுத்த சாணத்தைக் காட்டுத் தீயில் எரித்து அதையே மறுபடியும் சிவாக்னியில் எரிப்பது.

**அகல்பம்**

மந்திரமில்லாமல் எல்லோராலும் சேகரித்த சாணத்தைக் கொண்டு சுள்ளிகளால் எரித்து எடுப்பது.

தென்னவனின் வெப்புநோயைக் குணப்படுத்திய பதிகம் ‘திருநீற்றுப் பதிகம்’. இதில் திருநீற்றின் பெருமை, உண்மை, சிறப்பு, இப்பதிகத்தில் இடம் பெறும் வரலாற்றுக் குறிப்புகள், புராணக்குறிப்பு, தத்துவம் முதலியன எடுத்துரைக்கப்பட்டன.

திருநீறு அணிவதால் ஏற்படும் பயன், தீயன நீங்கி நல்லன பெருகும் என்பதும் இதனால் அறியப்பெறும். இருக்கமுத்தி காஞ்சியிலும், நினைக்கமுத்தி திருவண்ணாமலையிலும், தரிசிக்கமுத்தி சிதம்பரத்திலும், மரிக்கமுத்தி காசியிலும் கிடைக்க வழியாக இருப்பது திருநீறேயாகும்.

# 28. திருக்குற்றாலம் – பதிக, கோயில் வரலாறுகள்

சொ. சந்திரவாணன், குற்றாலம்.

நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தர் அருளிச் செய்த தேவாரப் பதிகளில் பாண்டி நாட்டுப் பதிகள் பதினான்கினுள் ஒன்று திருக்குற்றாலம். இப்பதிக்கென்று முதல் திருமுறையில் ஒன்றும், இரண்டாம் திருமுறையில் ஒன்றுமாக இரண்டு பதிகங்களைப் பாடியுள்ளார். அப்பதிகங்களின் வரலாற்றையும் பதிகச் சிறப்பு பெற்ற திருக்குற்றாலக் கோயில் வரலாற்றையும் இனிக் காண்போம்.

**திருக்குற்றாலப் பதிகம்**

திருக்குற்றாலத்திற்கென்று இரண்டு பதிகங்கள் கிடைத்துள்ளன. அதில் 'வம்பார் குன்றம்' எனும் பதிகம் முதல் திருமுறையுள் 99-ஆவது பதிகமாகவும் 'திருமந்தமதிசூடி' எனும் திருக்குறும்பாலப் பதிகம் இரண்டாம் திருமுறையுள் 71-வது பதிகமாகத் தொகுக்கப்பட்டுள்ளது. பண்முறையில் முதலாவது பதிகம் குறிஞ்சிப் பண்ணாகவும் இரண்டாம் பதிகம் காந்தாரப் பண்ணாகவும், அமைந்துள்ளது.

வம்பார் குன்றம் எனத் தொடங்கும் இப்பதிகம் சைவ சமய அடியவர் பெருமக்களை நோக்கி அன்புடன் விளித்து தலப்பெருமை யினையும், சிவபெருமானின் பெருமையினையும் வெளிப்படுத்துவது போல அமைந்துள்ளது. நமது அடியவர்களே எனும் பொருள் தரும் 'நமரங்காள், அடியீர்காள், சிறுத்தொண்டீர், பெரியீர்காள், தொழுவீர்காள், பணிவீர்காள்' என விளித்துப் பாடியது சிறப்பினது.

**இயற்கை வருணனை**

முதல் பாடலிலேயே திருக்குற்றாலத்தின் எழில்மிகு காட்சியினை நமக்கு வெளிப்படுத்துகின்றார்.

**'வம்பார் குன்றம் நீடுயர் சாரல் வளர்வேங்கை**
**கொம்பார் சோலைக் கோலவண்டுயாழ் செய் குற்றாலம்'**

எனும்போது குளிர் சாரல் குற்றாலத்தை இயற்கை அழகோடு வெளிப் படுத்துகின்றார். ஆயிரத்து நானூறு ஆண்டுகளாக குற்றாலம் சாரலுக்குப் பெயர் பெற்று வந்துள்ளது. கண்கூடாகத் தெரிகின்றதல்லவா! அது மட்டுமல்ல திருநீறு பூசிய அடியார்கள் குழுமிப் பின்செல்லக் கொடிகள்

தோரணங்களோடு நாள் விழா நடைபெறும் குற்றாலம் எனும் போது சிறப்போடு பூசனை முட்டாது இங்கு நடைபெற்றது என்பதை வெளிப் படுத்துகின்றார்.

### நீர்வளம் – நிலவளம்

செல்வம் மல்கு செண்பகம் வேங்கை, கொல்லை முல்லை, பக்கம் வாழை, பலா, மா முதலிய மரங்கள் கனிகள் நிறைந்திருக்க மலையில் வளரும் கோட்டுப் பூக்கள் நிறைந்திருந்த பான்மையை ஒவ்வொரு பாடலிலும் எடுத்து இயம்புகின்றார். சாரல் பற்றிக் கூறும் போது 'மலையார்சாரல், மைம்மா நீலக்கண்ணியர் சாரல், போதும் பொன்னும் உந்தியருவிக் கூதல் மாரி நுண் துளி தூங்கும் சாரல் குற்றாலம், பெருந்தண் சாரல் என்று கூறுவது நீர்வளம் மிக்கது இப்பகுதி என்பதைக் காட்டுகின்றார்.

### இறைவன் புகழும் பதிகப் பயனும்

இவ்வியற்கை அழகோடு இறைவன் புகழ் ஒத்திருப்பதைக் கூற வந்த காழீயர் கோன் 'ஆடல் அமர்ந்தான் நமக்கு அருள் செய்ய இந்நன்னகர் அமர்ந்தார்' என்றும் முப்புரங்களை வில்லால் எய்து அழித்த செய்தியினையும் 'எலும்பு, பாம்பு, ஆமை' முதலானவற்றைப் பூண்டு அனல் ஏந்திக் கோவண ஆடை தரித்து ஆடும் எம்பிரான் இவன்' என்றும், 'வேழம் உரித்த பிரான்' என்றும் 'காலன் தன்னைக் காலால் உதைத்த சூலபாணி என்றும், 'மூதூர் இலங்கை முட்டிய கோனை நெருக்கி வருத்திய நாதன் இவன்' என்றும் 'பிரம்மனோடு மாலறியா பெருமையுடைய எம் பரமனே' என்றும், 'இருந்துணவு கொள்ளும் தேரரும் நின்றுணவு கொள்ளும் சமணரும் ஏற்று நுகர்ந்து மகிழ்தற்கு அரியவனான நம் பரமா' புகழ் பாடுகின்றார்.

இறுதிப் பாடலில், மாடவீதிகளும் வளம் பெருகும் நீர்நிலைகளும் உடைய காழீப்பதியில் விளங்கும் வேந்தனாகிய கோடல் எனப்படும் செம்மையான பூக்களைத் தந்து உச்சிகூம்பி விளங்குதலை உடைய குற்றால நாதனை நாடிப் போற்றி உரைத்த நற்றமிழ் ஞானசம்பந்தனின் திருப்பதிகத்தை பாட நம் பாவம் விலகிச் செல்லும் எனப் பதிகப் பயன் கூறி நின்றார்.

### குறும்பலாப் பதிகம்

இரண்டாம் திருமுறையில் 71–ஆவது பதிகமாகப் பாடப்பட்ட குறும்பலாப் பதிகம் குற்றாலத்தின் தல விருட்சமான பலா மரத்தினடியில் வீற்றிருந்தருளிய பரமனின் புகழ்பாடும் பதிகமாகும். பலா மரத்தினைத் தல விருட்சமாகக் கொண்ட திருவீழிமிழலை, உறையூர், பெரும்பன்றியூர்,

திருக்கோளக்குடி போன்ற பதிகளின் திருப்பதிகங்களில் இல்லாத சிறப்பு குற்றாலக் குறும்பலாவிற்கு உண்டு. அது குறும்பலாப் பதிகம் என்ற சிறப்பேயாகும். குறும்பலாவின் கீழமர்ந்த குறும்பலா ஈசனார்க்குத் திருந்தமதிசூடி எனத் தொடங்கும் பதிகப் பாமாலை சூட்டி மகிழ்ந்தார் ஞானசம்பந்தப் பெருமான்.

இப்பதிகத்தில் பிறவாயாக்கைப் பெரியோனின் திருவுருவத்தினை வியந்து கூறுகின்றார். பிறைச்சந்திரனைப் பொருந்துமாறு சூடித் தெளிந்த நீராகிய கங்கையைச் சடைமுடியில் கரந்து உமாதேவியைப் பாகமாகத் தம் திருமேனியில் கொண்டு இடுகாட்டில் இருக்கத் தகுந்த திருவேடத்தைக் கொள்ளாதவராகி விளங்கும் செல்வர் வீற்றிருந்த இடம் யாது எனக் கேட்பீராகில் நறுமணம் கமழும் சோலைகளில் வண்டுகள் யாழ் போன்று இசையெழுப்பவும் குருந்த மலர்கள் நல்மணம் பரப்பவும் குன்றின்பால் சூழ்ந்த குளிர்ச்சியான சாரலில் திகழும் குறும்பலா எனும் தலம் இதுவேயாகும் எனக் கூறுகின்றார் பிள்ளையார்.

இப்பதிகத்தில் ஐந்து பாடல்களில் உமையம்மையோடு இறைவன் எழுந்தருளியிருக்கும் 'அம்மையப்பர்' உருவினை விளக்கும் ஞானப் பிள்ளையார் ஆணும் பெண்ணுமாகி வருகின்ற யானை, குரங்கு, பன்றியினையும் இறைத்திருவுடன் ஒப்பு நோக்குகின்றார். 'அரவின் அணையானும் நான்முகனும் காண்பரிய அண்ணல்' உறையும் இடம் குறும்பலாவின் கீழேயாகும் என்று கூறுகின்றார்.

துவராடையணிந்த சாக்கியர்களும், சமணர்களும் தாம் கொண்ட கொள்கை ஈடேறாதவாறு செய்த ஈசன் வீற்றிருக்கும் இடம் இஃதெனச் சுட்டுகின்றார். இறுதிப் பாடலில் பதிகப்பயன் கூறுமிடத்து பூஞ்சோலைகள் கொண்டு விளங்கும் குறும்பலா என்னும் தலத்தின்கண் எழுந்தருளி யுள்ள இடபவாகனத்தை உடைய அண்ணலாகிய ஈசன் திருவடியைப் பரவும் நான்மறை வல்ல ஞானசம்பந்தர் சொன்ன பேரின்பம் நல்கும் இத்திருப்பதிகத்தை ஓதுபவர்களும் சொல்லக்கேட்டு மகிழும் அன்பர்களும் தம்பாலுள்ள தீவினைகள் யாவும் விலகிச் செல்ல நல்வினைகள் பெருகப் பெறுபவர்களாவர் என்றும் கூறி முடிக்கின்றார்.

## அப்பர் சுந்தரர் தேவாரத்தில் குற்றாலம்

ஞானசம்பந்தரைப் போல அப்பரும், சுந்தரரும் குற்றாலத்தைப் பற்றிப் பாடினாலும் தனிப்பதிகமாகப் பாடவில்லை. பிற ஊர்ப்பதிகங் களில் குற்றாலத்தைப் பற்றிய குறிப்பினைத் தெரிவிக்கும் பாடல் வரிகள் கீழ்க்கண்டவாறு அமைந்துள்ளன.

**'குற்றாலத் தமர்ந்துறையும் குழகன்றன்னை'**

— கோவில் — அப்பர்

'கொங்கிற் கொடுமுடியார் குற்றாலத்தார்' – கோயில் – அப்பர்

'குற்றாலத் தமர்ந்துறையும் கூத்தன்கண்டாய'
– திருக்கோடிக்கா – அப்பர்

'குரவங்கமழும் குற்றாலர் தாமே' – திருப்பழனம் – அப்பர்

'கொல்லியான் குளிர்தூங்கு குற்றாலத்தான்'
– திருநெய்த்தானம் – அப்பர்

'குற்றாலங் கோகரண மேவியானை'
– திருப்பூந்துருத்தி – அப்பர்

'கூர்ந்தவனே குற்றாலமேயக் கூத்தர்'
– திருச்சோற்றுத்துறை – அப்பர்

'கொங்குவார் மலர்கண்ணிக் குற்றாலன்காண்'
– திருஆரூர் – அப்பர்

'சிற்றேமமும் பெருந்தண் குற்றாலமும்' – திருவதிகை – அப்பர்

'குரங்கணின் முட்டங் குறும்பலாவும்' – திருவதிகை – அப்பர்

'குறும்பலா நீடுதிரு நற்குன்றம்' – பொது – சம்பந்தர்

'குற்றாலத்துறை கூத்தனல்லால் நமக்கு உற்றார் ஆருளரோ'
– பொது – அப்பர்

'குழலார் கோதை வரைமார்பிற் குற்றாலத் தெங்கூத்தனை'
- பொது – அப்பர்

'கொடுமுடி குற்றாலம் கொள்ளம் புதூர்' – பொது – அப்பர்

'கோல நீற்றான் குற்றாலம் குரங்கனின் முட்டமும்'
– பொது – அப்பர்

'கொங்கிற் குறும்பிற் குரக்குத்தளியாய் குழகா குற்றால'
– பொது – அப்பர்

என வருதலைக் காணலாம். இதைப் போன்று மாணிக்கவாசகரும்

'குற்றாலத் தமர்ந்துறையும் வத்தா உன் குறைகழற்கே
கற்றாவின் மனம் போலக் கசிந்துருக வேண்டுவனே'.

என்று பாடுகின்றார். கி.பி. 15–ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் எனக் கருதப்படும் அருணகிரிநாதர் தம் திருப்புகழில் குற்றாலத்து முருகப் பெருமானை மூன்று பாடல்களால் பாடியுள்ளார். அவற்றில் ஒன்று,

'சிற்றாறு தனற் களித்திடு
குற்றாலரிடத்திலுற்றருள் பெருமானே'

எனப் பாடினார். இதனை அடுத்துக் கி.பி. 18 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த திரிகூடராசப்ப கவிராயர் குற்றாலத்தை மையமாக வைத்துப் பல சிற்றிலக்கியங் களையும், தலபுராணத்தையும் செய்தளித்தார். பட்டினத்தார் பாடலிலும்,

**'காலன் வருமுன்னே கண் பஞ்சடையு முன்னே**
**பாலுண் கடைவாய்ப் படுமுன்னே – மேல் விழுந்தே**
**உற்றாரழு முன்னே யூரார் சுடுமுன்னே**
**குற்றாலத் தானையே கூறு'**

எனக் குற்றாலம் பற்றிய செய்தி காணப்படுகின்றது. உமாபதி சிவத்தின் இன்புறு குற்றாலம் என்ற வரியாலும் 'அத்திரிகூட வெற்பென்றறை திருக்குற்றாலத்தில் சித்திர சபையிற் செய்வோம் திரிபுரதாண்டவம்' எனும் திருப்புத்தூர் தலபுராணத்திலும் பாடப் பெற்றது இக்குற்றாலத்தலம் எனில் அது மிகையாகாது.

## தல வரலாறு

திருநெல்வேலி மாவட்டம், தென்காசி வட்டத்துள் அமைந்துள்ள ஒரு சிற்றூர் திருக்குற்றாலம். இயற்கை எழில் கொஞ்சும் தென்பொதிகை மலைச்சாரலில் பாய்ந்து வீழருவி பாயும் குற்றாலம் தனக்கென்று ஒரு தனி வரலாற்றைக் கொண்டது. செப்பருஞ்சீர் குள்ளச் சிறுமுனி குற்றாலம் வந்து தமிழாய்ந்தார் என்றும் இப்பதியில் தங்கி வழிபட்டார் என்பதும், புராணக் கதையாகும்.

## வரலாற்றுக்கு முந்தைய காலம்

எழுத்துச் சான்றுகளில்லா ஏகாந்த காலமாகிய வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்து இன்றுவரை ஒரு தொடர்ச்சியான வரலாற்றுப் பின்னணியைத் தன்னகத்தே கொண்டுள்ளது குற்றாலம். பழைய குற்றாலப் பகுதிக்கு அருகில் அழுத கண்ணீர் ஆற்றின் கரையில் காணக் கிடைக்கின்ற நுண்கற் கருவிகள் இதன் காலத்தைப் பத்தாயிரம் ஆண்டு காலப் பழமையை வெளிப்படுத்துகின்றன என்பர் தொல்லியலார். இவ்வூருக்கு அருகில் கிடைத்த இக்கற்காலப் பண்பாடு சுமார் 6,000 ஆண்டு காலம் பழமை உடையது என்பர்.

இவ்விரு பண்பாட்டையும் அடுத்து வருவது பெருங்கற்காலப் பண்பாடாகும். இப்பண்பாட்டுக் கூறுகள் சங்க காலத்திற்கு முன்பிருந்தே கிடைத்து வருகின்றது எனலாம். இறந்தவர்களைத் தாழியிற் கவிக்கும் வழக்கம் இருந்ததை மணிமேகலை,

**"சுடுவோர் இடுவோர் தொடுகுழிப்**
**படுவோர் தாழ்வயின் அடைப்போர்**
**தாழியிற் கவிப்போர்"**

எனக் கூறுகிறது. அவ்வாறு காணப்படும் தாழிகள் முதுமக்கள் தாழிகள் என்று அழைக்கப்படும். அத்தகு தாழிகள் இவ்வூரைச் சுற்றிலும் கிடைத்து வருகின்றன. இவற்றைக் கொண்டு கி.மு. 8–ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 2–ஆம் நூற்றாண்டு வரையுள்ள காலம் இதுவெனக் கணித்துள்ளனர் தொல்லியலார்.

## வரலாற்றுக் காலம்

குற்றாலத்து மலையுச்சியில் சன்யாசிப் புடவு என்ற பகுதியில் காணப்படும் மலைப் பாறைக் கல்வெட்டு முதன் முதலில் எழுதப்பட்ட எழுத்துச் சான்றாகும். இன்றளவும் படித்தறிய ஒன்னாத இக்கல்வெட்டு கருத்தெழுத்துக்கும், ஒலியெழுத்துக்கும் முன்பு எழுதப்பட்டிருக்க வேண்டும் என்பது அறிஞர்களின் கருத்தாகும். இதன்பின்னர் முதன் முதலில் கி.பி. 7–ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சம்பந்தர் தேவாரத்தில்தான் இவ்வூர் பற்றிய குறிப்பு காணப்படுகின்றது. அதனைத் தொடர்ந்து பல சான்றுகள் இவ்வூரின் வரலாற்றை எடுத்துக் கூறுகின்றன.

## நகர் அமைப்பும், சிறப்பும்

இறைவன் உறையும் கோயிலை மையமாக வைத்தோ, அன்றி மன்னன் வாழும் அரண்மனையை வைத்தோ, நகர் அமைப்பது தமிழர்தம் மரபு. அவ்வகையில் மதுரை மாநகர் கோயிலை மையமாக வைத்து அமைக்கப்பட்ட நகர். இது தாமரை மலர் போல அமைந்திருந்தது என்பர். மதுரை வீதிகள் தாமரை இதழ்களாகவும் நடுவேயுள்ள கோயில் தாமரைப் பூவின் மொக்கு போலவும் இருந்ததாக உருவகிப்பர் புலவர்கள். ஆனால் குற்றால நகரமோ, திருச்சங்கின் வடிவமாக உள்ளது. சங்கின் வாய்ப் பகுதியாகச் சிவன் கோயிலும் சங்கின் விளிம்புகளாகத் திருவீதி களும் கூர்முனைப் பகுதியாகப் பிள்ளையார் கோயிலும் அமையப் பெற்றிருப்பது கண்டு இன்புறத் தக்கது. இவ்வமைப்பே சங்கநகர் வீதி எனத் திரிகூடராசப்ப கவிராயரால் மகிழ்ந்து பாடப்பட்டது. திருக்குற்றாலம் கோயிலும் சங்கின் வடிவானது எனக் கூறுவாருமுளர்.

பாண்டிய மன்னர்களுக்குப் பெருமை சேர்த்த நகர்கள் பதினான்கு, அவற்றுள் ஒன்று குற்றாலம். அம்மன்னர்கள் தம் பெயரோடு இணைத்துக் கொண்ட நகர்கள் ஐந்து. அவற்றுள் ஒன்று பொதிகை. 'பொதிகை வெற்பண்', 'பொதிகைப் பொருப்பன' என முறையே சூடாமணி நிகண்டும், திவாகர நிகண்டும் கூறுகின்றதைக் காணலாம்.

பொதிகைமலை அடிவாரத்தில் மிகப் பொலிவுடன் அமைந்துள்ள திருக்குற்றாலத்தின் திருப்பெயர்கள் இருபத்து ஒன்று. அவற்றுள் பதின்மூன்று பெயர்கள் புராணத்தை அடியொற்றியும், மீதமுள்ள

எட்டுப் பெயர்கள் இயற்கையை ஒட்டியும் அமைக்கப்பட்டனவாம். இத்தனை பெயர்கள் இருந்தாலும் மக்கள் மத்தியில் அன்றும், இன்றும் நிலை பெற்றது என்னவோ திருக்குற்றாலம் என்னும் பெயரேயாம்.

## பெயர்க் காரணம்

குற்றாலம் என்ற பெயரை குறு + ஆலம் எனப் பிரிப்பர். இதற்குச் சிறிய ஆலமரம் எனப் பொருள் கூறி அம்மரத்தை அடிப்படையாகக் கொண்டு இவ்வூர்ப் பெயர் அமைந்தது என்றுக் கூறுவர். கல்லாலின் புடையமர்ந்து நால்வர்க்கு உபதேசித்த வள்ளல் சிவபெருமான் வீற்றிருந்த கல் ஆலமே குறுஆலம் ஆகும். இக்குறு ஆலம் நிறைந்த மலையாதலால் இஃது குற்றாலம் ஆயிற்றென்பர். ஆலம் என்பதற்கு குளிர்ந்த நீர் என்ற பொருளும் உண்டு. (எ.கா. ஆலங்கட்டி மழை) குன்றிலிருந்து விழும் ஆலமே குன்று ஆலம் எனக்கொண்டு 'ன்', 'ற்' றாகி குற்றாலம் ஆயிற்று எனலாம்.

## கோயில் அமைப்பும் காலமும்

பாய்ந்து வீழருவியாம் பேரருவிக்கு வடகிழக்கில் அமைந்துள்ளது குற்றால நாதர் கோயில் பல்வேறு மன்னர்கள் காலத்தில் கட்டப்பட்ட பல பரிவாரக் கோயில்களைத் தன்னகத்தே கொண்டு பல தலப் பெருமைகளைப் பறைசாற்றி நிற்கின்றது இக்கோயில்.

கோயிலின் வெளிக் கோபுரம் மூன்று நிலைக் கோபுரமாக அமைந் துள்ளது. பல்வேறு சுதை உருவங்கள் காணப்படுகின்ற இக்கோபுரத்தை அடுத்து வலப்புறம் யாகசாலைக் குறட்டையும், அலங்காரக் குறட்டையும், உள்ளடக்கிய பல தூண்களால் ஆன பெருமண்டபம் காட்சியளிக்கிறது. இரண்டாம் நுழைவாயிலில் நுழைவாயிற் தெய்வங்களாகிய அமர்ந்த நிலையில் பிள்ளையாரும் நின்ற நிலையில் ஆறுமுக நயினாரும், சிறு கருவறையுள் காட்சி தருகின்றனர். இந்நுழைவாயில் மரத்தாலான கோபுரத்தால் அழகு படுத்தப்பட்டுள்ளது. கண்கவர் சிற்பங்களுடன் கட்டிடக் கலைக்குரிய அழகுடன் காட்சியளிக்கின்றது.

## கொடிமர மண்டபம்

இதனை அடுத்தமைவது கொடிமர மண்டபம். இதன் நடுவில் கிழக்கிலிருந்து மேற்காகப் பலிபீடம், கொடிமரம், நந்தி ஆகியவை இடம் பெற்றுள்ளன. கொடிமரத்தை ஒட்டியுள்ள தென்புறத் தூண்களில் இம்மண்டபத்தை உருவாக்கிய வடகரை ஆதிக்கம் செம்புலித்தேவர், சின்னனஞ்சாத் தேவர் ஆகியோரின் உருவங்கள் கூப்பிய கரங்களுடன் காணப்படுகின்றன. கொடிமர மண்டபத்தின் வடமேற்கு மூலையில் உயரமான நாற்கால் குறடு மண்டபம் உள்ளது. இதில் திருவிழாக் காலங்களில் குற்றாலக் கூத்தனை எழுந்தருளச் செய்து வழிபடுவது வழக்கம்.

கொடிமர மண்டபத்தை அடுத்தமைவது சிவன் கோயில் திருச்சுற்று நுழைவாயில் மண்டபம். இதில் வாயிற் தெய்வங்களாக விநாயகரும், முருகனும், இடம் பெற்று உள்ளனர். வாயிற் காப்போரான துவார பாலகர் சிற்பங்கள் மிக்க அழகுடன் (கி.பி.9 ஆம் நூற்றாண்டினது) காட்சி தருகின்றனர். இச்சிற்பங்களைக் கொண்டு இக்கோயில் முற்காலப் பாண்டியர் காலத்திலேயே இருந்தது எனத் தெரிகின்றது.

**சிவன் கோயில்**

சிவன் கோயில், கருவறை, அறைமண்டபம், மாமண்டபம் என்ற முறையான கட்டிடக் கலை அமைப்புடன் காணப்படுகின்றது. கருவறை வெளிச்சுவர்ப் பகுதியில் உள்ள கோட்டப் பகுதிகளில் (மாடப் பகுதிகள்) உள்ள சிற்பங்கள் உபபீடக் கோட்டங்களில் அமைந்துள்ளது. அக் கோட்டங்களில் தென்முகக் கடவுள், மேற்கில் அமர்ந்த நிலையில் திருமால் சிற்பமும், வடக்கில் நான்முகனின் சிற்பமும் காணப்படுகின்றன.

கருவறையின் உள்ளே குற்றால நாதர் அருரூபமான இலிங்க உருவில் காணப்படுகின்றார். ஆவுடையார் சிற்பியின் கைத் திறனில் வெளியான ஒன்று. அதன் மீது அமைந்துள்ள லிங்கத் திருவுரு இயற்கையாக அமைந்த சுயம்பு உருவமாகும். மாமண்டபத்தில் ஆடல் வல்லானின் திருமேனியும், மற்ற தெய்வங்களின் திருமேனிகளும் காணப்படுகின்றன. திருச்சுற்றைச் சுற்றி திருச்சுற்று மாளிகை அமைந்துள்ளது. இதில் ஐயனார், நான்முகன், திருமால், சாமுண்டி (மூதேவி) சுரதேவர், யோகநரசிம்மர் ஆகிய சிலைகள் மிக அழகான முக அமைப்புடன் உருவாக்கப்பட்டுள்ளன. இவை கி.பி. 8,9, ஆம் நூற்றாண்டிலேயே இக்கோயில் இருந்திருக்க வேண்டும் என்பது உறுதி. இத்திருச்சுற்றின் தென்மேற்கில் கன்னி மூலையில் கன்னிமூல விநாயகரும், வடமேற்கில் வள்ளி தெய்வானையுடன் முருகனும் காட்சி தருகின்றனர்.

**காலம்**

குற்றால நாதர் கோயில் பாடல் பெற்ற தலமாக இருந்தாலும், மாறஞ்சடையன், இராசராசன் போன்ற பாண்டிய, சோழ மன்னர் களின் கல்வெட்டுகளைக் கொண்டிருந்தாலும், கி.பி.8,9-ஆம் நூற்றாண்டுச் சிலைகளைக் கொண்டு விளங்கினாலும் தற்போதுள்ள கோயில் என்னவோ, பிற்காலத்தியதாகும். முதலாம் இராசராசனின் கல்வெட்டு ஒன்று, 'திருமலை ஜீர்ணிக்கையில் ஜீர்ணோத்தாரணம் பண்ணிணவிடத்து திருமலையில் கல்வெட்டு வட்டமாகலால் தமிழாகப் படியெடுத்து வெட்டினபடி' எனக் கூறுவதால் இம்மன்னன் காலத்தில் இக்கோயில் ஒரு திருப்பணிக்கு ஆட்பட்டது எனலாம். இச்செய்தியைக் கூறும்

கல்வெட்டு இவன் காலத்தியது ஆனாலும் எழுத்தமைதியைக் கொண்டு காணும் போது கி.பி. 13 ஆம் நூற்றாண்டினது என்பதை அறிய முடிகின்றது. மேலும், பராக்கிரம பாண்டியன் (கி.பி. 1387) இக்கோயிலைத் தான் எடுப்பித்தாகக் கூறுவதாலும் சோழர்களுக்குப் பின்னர் இவன் காலத்திலும் கோயில் கட்டட அமைப்பில் மாற்றம் ஏற்பட்டதை அறியலாம்.

கட்டியது திருநெல்வேலி பராக்கிரம பாண்டியனாக இருந்தாலும் வழிபாட்டு வளமையடையச் செய்தது தென்காசிப் பாண்டிய வமிசத்தைத் தோற்றுவித்த பராக்கிரம பாண்டியனின் வழித் தோன்றலாகிய ஸ்ரீவல்லபனான அதிவீரராம பாண்டியன் ஆவான். இவன் காலக் கல்வெட்டு கோயில் மாமண்டபத்தின் அதிட்டானப் பகுதியில் காணப்படுகின்றது. எனவே, குற்றால நாதர் கோயில் இரண்டு முறை கால வெள்ளத்தால் அழிவுற்று பராக்கிரம பாண்டிய மன்னனால் கி.பி. 1387-ல் கட்டப்பட்டு இன்றளவும் நம் கண் முன்னே காட்சி தருகின்றது.

## நன்னகரப் பெருமாள் கோயில்

தென் திருச்சுற்றில் அறுபத்து மூவர் சன்னதிகளுக்கு அருகில் காணப்படும் நன்னகரப் பெருமாள் கோயில் ஒன்றுள்ளது. நின்ற கோலத்தில் காணப்படும் திருமால் நாற்கரங்களுடன் மேலிரு கரங்களில் சங்கு சக்கரம் ஏந்த கீழிருகரங்களில் (அபயம்) காக்கும் கரம் ஒன்றாகவும், இடையில் வைத்த இடக்கரம் ஒன்றாகவும் காட்சி தருகின்றார். இத்திருவுருவம் கி.பி. 8-ஆம் நூற்றாண்டினது. இவை தவிர பல பரிவார ஆலயங்கள் திருச்சுற்றில் காணப்படுகின்றன. உத்தாலக வனம் என்று அழைக்கப்படும் திருக்குற்றாலத்தில் ஆதியில் கருவறையில் திருமால் நின்ற கோலத்தில் சேவை சாதித்து வந்தார் என்றும், இவ்வூருக்கு வந்த குள்ளச் சிறுமுனியாம் அகத்தியர் சிவநெறிவழுவாது சிவபூசை செய்துவந்த அவரைக் கோயிலினுள் அனுமதிக்க மறுத்ததாகவும், அதனால் வெகுண்ட அகத்தியர் வைணவ வேடம் தரித்துக் கோயிலினுள் புகுந்து திருமாலின் தலையில் கை வைத்து 'குறு குறு குற்றாலம்' என்று கூறி அழுத்தியதனால் சிவலிங்கத் திருவுருவாயிற்று என்றும், புராணக் கதைகள் கூறி மகிழ்கின்றனர். இதில் ஏதும் வரலாற்று உண்மை இருப்பதாக எந்தவித எழுத்துச் சான்றுகளுமில்லை.

## சித்திர சபை

தமிழகத்துள் ஆனந்தக் களிநடனம் புரிகின்ற தில்லைக் கூத்தனின் திருச்சபைகள் எட்டு. அவை 'தில்லையுள் பொன்னம்பலம், வையைப் பதியாம் நான்மாடக் கூடலில் வெள்ளியம்பலம், தண் பொருந்தப் பேராற்றங்கரையில் பெப்பம்பலம்' பாய்ந்து வீழருவி குற்றாலத்தில்

கண்கவர் ஓவிய அம்பலம், ஆடினார் காளிகாண ஆலங்காட்டடிகள் ஆடிய திருவாலங்காட்டில் ரத்ன அம்பலம், சதுரம் மறைதான் துதிசெய்து வணங்கும் திருமறைக்காட்டில் மறையம்பலம், சுசீந்திரத்தில் வேரம்பலம், அரவாடச் சடைதாழ அங்கையில் அனலேந்தி இரவாடும் பெருமான் உறையும் கச்சியுள் வானம்பலம்' என எட்டும் இறைவன் மகிழ்ந்தாடிய தலங்களாகும். இவற்றுள் திருமறைக்காடு, சுசீந்திரம், காஞ்சிபுரம் தவிர ஏனைய ஐந்தும் பஞ்ச சபைகள் எனப் பெயர் பெற்றது. இவ்வைந்துள் மூன்று சபைகள் பாண்டி நாட்டிலுள்ளன. இதில் மக்களால் சிறப்பித்துக் கூறப்படும் ஓவிய அம்பலம் எனும் சித்திர சபை குற்றாலத்துச் சிறப்பு களுள் ஒன்றாகும்.

**அமைப்பும், காலமும்**

சித்திர சபை சபாமண்டபம், உள்திருச்சுற்று, வெளித் திருச்சுற்று, முன் மண்டபம், தூண் மண்டபம் என்ற அமைப்புடன் திகழும் இம்மண்டபம் கால் முதல் தோள்வரை கருங்கல்லாலும் கூரைப்பகுதி செப்பேடுகள், வேயப்பட்டும் காணப்படுகின்றது. சபையின் உட்பகுதியிலும் உள் திருச்சுற்றிலும் எள்ளளவும் இடமில்லாது எழில் ஓவியங்கள் பல வண்ணக் கலவைகளால் தீட்டப்பட்டுள்ளன. சித்திர சபையின் தென்கிழக்குச் சுவரில் இச்சபையை உருவாக்கிய மன்னனுடைய கல்வெட்டு தமிழிலும் வடமொழியிலும் வெட்டி வைக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டு தற்போது சுண்ணப்பூச்சில் மறைந்துள்ளது. இதன் காலம் கி.பி 16-ஆம் நூற்றாண்டின் தொடக்கமாகும். கி.பி-1891-ஆம் ஆண்டு இச்சித்திரசபை செப்பணிடப்பட்டுள்ளது.

1. வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்து (தொல் பழங்காலத்தில்) தொடர்ச்சியான வரலாற்றைத் தன்னகத்தே கொண்டது குற்றாலம்.
2. எழுத்துச் சான்றுகள் கிடைக்கக் கூடிய சங்க இலக்கியங்களில் குறிப்பாகக் குறிப்பிடப்படும் குற்றாலத்தைப் பற்றி ஒரு தெளிவான வரலாற்றுக் குறிப்பினை முதன் முதலில் தருவது ஞானசம்பந்தரின் தேவாரப் பாடல்களாகும்.
3. சைவக் கொழுந்தாம் சம்பந்தரின் பாடல்கள் மூலம் அறியலாகும் புராணச் செய்திகள் அமண் பவுத்த மதச் செய்திகள், மாலறியா நான்முகனும், காணாத அண்ணலின் பெருமை, வீட்டின்பப்பேறு தரும் பதிகப் பயன் ஒரு அழியாத அகச்சான்றாகும்.
4. கால வெள்ளத்தால் அழிவுற்ற நன்னகரப் பெருமாள் கோயில், தற்போது சிவன் கோயில் தென்திருச்சுற்றில் பரிவார ஆலயமாக அமைக்கப்பட்டது. இச்செயல் சமயப் பொறையினை வெளிப்படுத்து வதாக அமைந்தது எனலாம்.

5. கந்தபுராணத்துள்ளும், குற்றாலத் தலபுராணத்துள்ளும் கூறப்படும் திருமாலை அகத்தியர் சிவலிங்கமாக மாற்றிய புராணக் கதைக்கு எந்த அகச்சான்றும் இல்லை.

6. கயிலை மலையைப் பெயர்த்தெடுத்த இராவணன் பற்றிய செய்தியினைத் தம் பதிகள் தோறும் சொல்லும் காழியர் கோன் சங்கப் புலவரான அகத்தியரின் இப்புராணக் கதையை குறிப்பாகவேனும் சொல்லாதது ஏன் எனும் வினா எழுவது இயற்கை.

7. நாளும் இன்னிசையால் சைவம் தழைத்ததைப் பொறாத வீணர்களின் புனைந்துரைக்கப்பட்ட கதையினை செந்தமிழ்க் குள்ளச் சிறுமுனி அகத்தியன்பால் ஏற்றிக் கூறுவது ஏன் எனத் தெரியவில்லை.

ஞானசம்பந்தப் பிள்ளையாரின் திருவாக்கிலிருந்து பல அரிய செய்திகளை நாம் அறிந்து கொள்ள முடியும். எண்ணுந்தொறும், நினைக்கும்தொறும் பண்ணிசைப் பாடல்கள் அனைத்தும் படிப்பினைப் பல உணர்த்தி நிற்கும். பதிகப் பயனை முழுமையாகப் பெறவேண்டிடில் சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார் செல்வர் சிவபுரத்தே என்பது கண்கூடு எனில் அது மிகையாகாது.

# 29. சம்பந்தரின் சமூகத் தொண்டு

ரா. சம்பத், சென்னை.

சிறுவயதிலேயே அற்புதம் நிகழ்த்திய திருஞானசம்பந்தரின் சமூக நோக்கை இக்கட்டுரையில் காணலாம். அப்போது சீர்காழியில் திருநீலகண்ட யாழ்ப்பாணர் என்றவர் யாழ் இசை மீட்டுவதில் வல்லவர் என்றும் அவர் மனைவி மதங்க சூளாமணியார் இறைவனைப் புகழ்ந்து இன்னிசையால் பாட வல்லவர் என்றும் அறிந்து சிவனடியார்கள் கூட்டத்தோடு திருஞானசம்பந்தர் கோயிலுக்குச் சென்றார்.

சாதியால் திருநீலகண்ட யாழ்ப்பாணர் தாழ்ந்த சாதியினர்; திருஞானசம்பந்தர் மறைக் குலத்து நெறிவந்த காழிக்கவுணிய மரபினர். ஆயினும் உயர்ந்தது, தாழ்ந்தது என்பது பிறவியில் கிடையாது என்று அனைவரும் உணரும் வண்ணம் திருஞானசம்பந்தர் அவர்களை எதிர்கொண்டு அழைத்தார். திருஞானசம்பந்தரின் ''மக்கள் எல்லோரும் ஓர் குலம்'' என்று எண்ணும் எண்ணம் நமக்குத் தெளிவாகத் தெரிகிறது.

ஊர் ஊராகச் சென்று திருஞானசம்பந்தர் நிகழ்த்திய சில அற்புதங் களை அதாவது சமுதாய மேம்பாட்டிற்கு வழி வகுத்ததை நாமும் சற்று உற்று நோக்குவோம். திருஞானசம்பந்தர் திருப்பாச்சிலாச்சிராமத்தில் தங்கிவிட்டுப் பின் திருச்செங்கோடு சென்றார். இன்றைய திருச்செங்கோடு அந்நாளில் ''திருக்கொடிமாடம்'' என்று அழைக்கப்பட்டது. அச்சமயம் அவ்வூரில் கடுமையான விஷ ஜுரம் பரவி மக்களை வேதனை உள்ளாக்கியிருந்தது. மருத்துவர்களால் கூட குணப்படுத்த முடியாத நிலையில் அந்த விஷ ஜுரம் மிகவும் வேகமாகப் பரவியது. அப்போது கடும்பனி வேறு அந்த ஊரில் மக்களை வாட்டியது.

தங்கள் ஊருக்குத் திருஞானசம்பந்தர் வருவதை அறிந்த ஊர் மக்கள் தங்களுக்கு விடிவுகாலம் வந்துவிட்டது என நம்பினர். ஊர் மக்களின் துன்பம் கேட்ட திருஞானசம்பந்தர் மனமிளகி ''கவலை வேண்டாம், இந்த விஷ ஜுரத்திலிருந்து விடுதலைப் பெற இறைவனை வேண்டிக் கொள்கிறேன்''. என்று கூறி அவ்வூரில் குடி கொண்டுள்ள அர்த்த நாரீசப் பெருமானை நோக்கி, ''அவ்வினைக்கிவ்வினை'' என்ற பதிகத்தைப் பாடினார். அப்பாடல் வருமாறு.

**"அவ்வினைக்கு இவ்வினை ஆம்என்று சொல்லும் அஃதறிவீர்**
**உய்வினை நாடாது இருப்பதும் உந்தமக்கு ஊனமன்றே**

**கைவினை செய்து எம்பிரான் கழல் போற்றுதும் நாமடியோம்**
**செய்வினை வந்து எமைத்தீண்டடப்பெறா திருநீலகண்டம்"**

இப்பாடலின் பொருள் யாதெனில் "சரியை முதலிய தொண்டுகளைக் கூட "நான்" என்ற முனைப்போடு செய்யக்கூடாது. அப்படிச் செய்தால் அது தொண்டு ஆகாது. அந்தத் தொண்டின் பலனாக இறைவனை அடைய முடியாது என்பதே உள்கருத்து. கடவுளிடம் பேரம் பேசும் தன்மையாக "நான் இதைச் செய்தால் நீ அதைச் செய்வாயா?" என்று கேட்கக் கூடாது. இந்தப் பொருள்படவே திருஞானசம்பந்தர் கைவினை, செய்வினை, உய்வினை என்ற மூன்று பதங்களைக் கையாண்டார்.

பதிகம் முடிந்தவுடன் ஊர் மக்களின் விஷ ஜுரம் போன இடம் தெரியாமல் போய்விட்டது. மக்களின் மனமகிழ்ச்சிக்கு சொல்லவா வேண்டும்! "திருமருகல்" என்ற ஊரை திருஞானசம்பந்தர் அடைந்தபோது அவ்வூர்க் கோயிலில் ஒரு பெண்ணின் அழுகுரல் கேட்டு, திடுக்கிற்றுத் திருஞானசம்பந்தர் விளக்கம் கேட்டார். வணிக இளைஞன் ஒருவன் தன் காதலியுடன் பெற்றோர்கள் சம்மதம் கிடைக்காததால், அந்த ஊருக்குத் திருமணம் செய்து கொள்ள வந்தனர். அவர்கள் இரவில் ஓய்வு எடுத்துக் கொண்டிருந்த போது, வணிக இளைஞனைப் பாம்புக் கடித்து, அவன் இறந்துவிட, காதலி ஈசனிடம் முறையிட்டு அழுது கொண்டிருந்தாள்; இந்த விவரம் தெரிந்தவுடன் திருஞானசம்பந்தர் அப்பெண்ணுக்கு வாழ்வளிக்க நினைத்துத் திருமருகல் தலத்து ஈசனான மாணிக்கவண்ண மகேசுவரரை நினைத்து "சடையாய் எனமுரல்" என்று தொடங்கும் பாசுரத்தைப் பாடினார். அப்பாசுரம் பின்வருமாறு:

**"சடையாய் எனுமால் சரண் நீ எனுமால்**
**விடையாய் எனுமால் வெருவா விழுமால்**
**மடையார் குவளை மலரும் மருகல்**
**உடையாய் தகுமோ இவள் உள்மெலிவே"**

இப்பாசுரம் கூறும்பொருள் 'சடை உடைய சிவபிரானே, நீதான் எனக்குச் சரண். "நீ எருதுமேல் வருவதால் நான் பயப்படுகிறேன்" என்று அந்தப் பெண் குமுறுவது உனக்கே நியாயமாக இருக்கிறதா?" என்று இறைவனிடம் திருஞானசம்பந்தர் முறையிடுவது "மக்கள் துயர் தீர்ப்பதே மகேசன் பணி" என்று நினைக்கும் அவரது பரந்த உள்ளம் நமக்கு புரிகிறது. ஈசன் அவ்விளைஞனின் உடலில் பரவி இருந்த விஷத்தை, திருஞானசம்பந்தரின் வேண்டுகோளுக்கிணங்கி, நீக்க, இளைஞன் துள்ளி எழுந்து உட்கார்ந்தான். திருஞானசம்பந்தரே அவ்விருவருக்கும் ஆலய மண்டபத்தில் மணமுடித்து வைத்து" 'இன்றுபோல் என்றும் வாழ்வீராக" என்று வாழ்த்தி அருளினார்.

திருஞானசம்பந்தர் திருவீழிமிழலை வந்தபோது, தன்னை சந்திக்கத் திருநாவுக்கரசர் வருவதை அறிந்து, ஒரு மடத்தில் தங்கினார். பிறகு

இருவரும் சந்தித்து மகிழ்ந்தனர். அப்பகுதியில் மழை பெய்யாததாலும், காவிரி வறண்டு போனதாலும் கடும்பஞ்சம் ஏற்பட்டிருந்தது. திருநாவுக்கரசரும், திருஞானசம்பந்தரும் அந்த ஊர் ஈசனைத் துதித்து, பஞ்சம் போக்கிக் காத்தருளும்படி வேண்டிப்பாடி உறங்கப் போய்விட்டார்கள். இருவர் கனவிலும் ஈசன் தோன்றி, ''பஞ்சத்தினால் இடர்ப்படும் மக்களின் துயரத்தை உணர்ந்தேன். அடியார்களின் துன்பம் நீங்க, அவர்களுக்குப் பஞ்சப்படியாகப் பொற்காசுகள் வழங்க முடிவு செய்துள்ளோம். கோயிலின் கிழக்கு வாயில் பலிபீடத்திலும், மேற்கு வாயில் பலிபீடத்திலும் தினமும் ஒரு பொற்காசு காணப்படும். அதைக் கொண்டு பொருள்கள் வாங்கி சிவனடியார்களின் பசியாற்றி மகிழ்வீர்களாக. பஞ்சம் நீங்கி சுபிட்சம் ஏற்படும் வரை தினமும் இப்படிப் பொற்காசுகள் உங்களுக்குக் கிடைக்கும்'' என்று கூறினார். திருநாவுக்கரசர் மேற்குக் கோபுரவாசல் பலிபீடத்தில் மறுநாள் ஒரு பொற்காசு இருப்பதைக் கண்டார். அதே போல் திருஞானசம்பந்தரும் கிழக்கு கோபுரவாசல் பலி பீடத்தில் ஒரு பொற்காசு இருப்பதைக் கண்டார். ஈசன் ஆணைப்படி அவற்றிற்கு பொருள்கள் வாங்கிச் சிவனடியார்கள் பசி ஆற்றப்பட்டது.

பிறர் இன்னல் துடைக்க இறைவனை இறைஞ்சிப்பாடி அருள் பெறுவதால் தான் திருஞானசம்பந்தர் ''அருளாளர்'' எனக் கருதப் பட்டார். சமுதாய நோக்கு இல்லாவிட்டால் அவர்கள் இறைவனை வேண்டிப் பதிகம் அல்லது பாசுரம் பாட வேண்டிய நிர்ப்பந்தம் இருக்காது.

சைவம் தான் உலகில் சிறந்தது என்பதை நிரூபிக்கப் பாண்டிய அரசனின் சூலை நோயை நீக்கினாலும், அரசனாய் இருந்தாலும் ஒரு மனிதனின் வேதனையைத் தீர்க்க மனித நேயம்'' வேண்டும் என்பதை வலியுறுத்தவே அவ்வாறு செய்தார் என்பது திருஞானசம்பந்தரின் வாழ்க்கையைப் படிக்கும் போது நம் நெஞ்சமும், கண்களும் ஆனந்தக் கண்ணீர் விடுப்பதை நம்மால் உணர முடிகிறது.

''திருச்சண்பை விருத்தம்'' என்ற நூலில் - நான்காம் பாடலில்,

**''கள்ளம் பொழிய நனிபள்ளித் தடம்கடம் ஆக்கி அஃதே**
**வெள்ளம் பணி நெய்தலாக்கிய வித்தகன்''**

என்றும்,

''திருவந்தாதி''-17-ஆம் பாடலில் நம்பிகள் கூறிய

**''நாதன் நனிபள்ளி சூழ்நகர் கானகமாக்கி, அஃதே**
**போதின் மலிவயலாக்கிய கோன்''**

8-ஆம் பாடலும் சேக்கிழார் திருஞானசம்பந்தர் பாலையை எவ்வாறு ஒரு நெறியைக் கடைபிடிப்பதன் மூலம் கடற்கரைச் சோலையாக மாற்றினார் என்பதைக் கூறுகிறார்.

இது காணும் திருஞானசம்பந்தர் சமூகத்துக்கு ஆற்றிய தொண்டு, ''தன்நலம் கருதாது பிறர்நலம் கருதிச் சமுதாயத்தை முன்னேற்ற வேண்டும்'' என்ற எண்ணத்தை இளம் மனதில் விதைக்க பாடுபட்டது நமக்கு ஒரு படிப்பினையாக இருக்க வேண்டும். ஒவ்வொரு தனி மனிதனும் தன் முன்னேற்றத்திற்கு பாடுபடும் போது அடுத்தவர் மனம், விஷயம் என்பவை சிறிதும் மாசு படாமல் உழைக்க வேண்டும். இதுதான் சமுதாய சிந்தனை- அந்நாளில் திருஞானசம்பந்தர் போன்றோர் ''அருளாளர்களாக'' அவதரித்து நமக்கு வழிகாட்டியுள்ளார். இன்னும் பல ஆண்டுகள் வாழ்ந்து சமுதாயத்தை மேற்படுத்த திருஞானசம்பந்தர் விரும்பிய போதும் ஈசன் தன்னிடத்தில் ஈர்த்துக் கொண்டார் என்றால், "GOD ALSO WANTS GOOD PEOPLE IN HIS KINGDOM"

அதாவது ''கடவுள் நல்ல மனிதர்களையே தன்னுடைய அரசாட்சிக்கு உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ள அனுமதி கொடுக்கிறார்'' என்பது அவர் வாழ்க்கை வரலாற்றைப் படிக்கும் தோறும் ஒவ்வொருவர் மனத்திலும் வரும் சிந்தனையாக இருக்க வேண்டும் என்று நமக்குத் தெரிகிறது என்பதில் எள்ளளவும் ஐயம் இல்லை. மூன்று வயது முதல் மூப்பு வரை ''நாம் சமுதாயத்திற்கு என்ன செய்தோம்?'' என்ற கேள்வியை ஒவ்வொருவரும் தனக்குள் கேட்கவேண்டிய பொருள் பதிந்த வாழ்க்கையை நமக்கு வாழ்ந்து காட்டியவர் திருஞானசம்பந்தர் என்றால் அது மிகையாகாது. ''மூன்றிலிருந்து பன்னிரண்டு வரை வாழ்ந்து காட்டிய அருளாளர் திருஞானசம்பந்தரின் வாழ்க்கையை நாமும் பின்பற்றிச் சமுதாயத்திற்கு நம்மால் ஆன சிறு உதவிகளைச் செய்வோம் என்று கூறி எல்லாம்வல்ல ஈசன் அனைவருக்கும் பலத்தையும், அருளையும் தருவார் என்ற நம்பிக்கையுடன் வாழ்ந்து காட்டுவோம்'' என்று கூறி இக்கட்டுரையை சிவன் பாதத்தில் சமர்ப்பிக்கிறேன்.

# 30. சம்பந்தரும் சிவப்பிரகாசரும்

பி. சரவணக்குமார், புதுவை.

நேற்றைய நிகழ்வுகள் இன்றைய வரலாறு என்பது வழக்கு. வரலாறுகளைப் பதிவு செய்தல் என்பது ஒரு நாட்டின் பண்பாடு களையும், நாகரீகங்களையும் பின்வரும் வழித்தோன்றல்கள் தெரிந்து கொள்வதற்கும் தங்களது அடையாளங்களை இனம் கண்டு கொள்வதற்கும் உள்ள ஒரு வழிகாட்டி. இதனையே நமது வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபும் செய்துள்ளது.

சைவ சமயத் திருத்தொண்டர்களை வணங்கினால் வாழ்வில் வளம் பெற முடியும் என்ற கருத்தைச் சைவ சமய அடிப்படை உண்மை களுள் ஒன்றாக அமைத்துக் காட்டவும் வேண்டும் என்ற திருத்தொண்டினை முதன் முதல் தொடங்கிய அருளாளர் நம்பியாரூரர் எனப் பெறும் சுந்தரமூர்த்தி சுவாமிகளே ஆவார். இவரைப் பின்பற்றி நாரையூர் நம்பியும் தொண்டர்சீர் பரவும் சேக்கிழாரும் மேலும் பல அருளாளர் களும் தொண்டாற்றினர். இதிலும் சேக்கிழார் திருவாக்கினுக்குப் பின் வேறொருவர் நினைத்து ஆய்ந்து சொல்லச் செய்தி இல்லை என்பது சைவ இலக்கிய மரபு ஆயினும், சேக்கிழாருக்குப் பின் கி.பி. பதினேழாம் நூற்றாண்டில் கற்பனைக் களஞ்சியம் சிவப்பிரகாச அடிகளும், பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றிய இராமலிங்க அடிகளும் சைவ சமய நாற்பெருங் குரவர்களாகிய நான்கு அருளாளர் பெருமக்களின் வரலாற்று நுட்பம், அருளியல் அனுபவ விளக்கம் ஆகியவற்றைத் தத்தம் ஆய்வுக் கோணங்களில் நின்று விளக்கியுள்ளமை சைவ மரபு நன்கு அறிந்த ஒன்றே.

''மானிடரைப் பாடேன்'' என்ற கோட்பாடுடையவர் சிவப்பிரகாசர் என்பதைச் ''சினவிடைய வர்க்கே சாத்தும் சிவப்பிரகாசன்'' என்னும் சொற்களால் அறியலாம். மேற்கூறிய கருத்துக்களில் இருந்து சிவப்பிரகாசர் உமையொரு பாகமாகிய இறைவனை மட்டுமே துதித்திருக்க வேண்டும். ஆனால் அவனருள் பெற்ற அடியார்களையும் தமது இலக்கியங்களில் புகுத்திக் காட்டியிருப்பது. ''ஆண்டவனைக் காட்டிலும் அவன் அருள் பெற்ற அடியவர்கள் உயர்ந்தோர்'' என்பதை வலியுறுத்த வந்த திருக்கூட்ட மரபில் சிவப்பிரகாசரும் ஒருவர் என்பதைச் சுட்டிக் காட்டும்.

சிற்றிலக்கியங்கள், காப்பியம், வீரசைவ சித்தாந்தம் என மொத்தம் 34 நூல்களைச் சிவப்பிரகாசர் படைத்தருளியுள்ளார். தமிழையும் சைவத்தையும் வளர்த்த சிவப்பிரகாசர் தமது படைப்புகளில் அடியவர் களைப் பற்றிய செய்திகளைப் பதிவு செய்வதில் சேக்கிழாரைப் பின்பற்றி முன்னணியில் உள்ளார்.

இப்பகுதியில் சிவப்பிரகாசர் தம் படைப்பான சோணசைலமாலை, திருவெங்கைக் கலம்பகம் ஆகிய நூல்களில் உள்ள ஞானசம்பந்தர் பற்றிய குறிப்புகளைக் கருதிப் பார்க்கலாம்.

சைவம் செய்த தவப்பயனால் சைவமும், தமிழும் தழைக்கத் தோன்றிய ஞானக்குழந்தை திருஞானசம்பந்தர். இவர்தம் பாடல்கள் தமிழையும், சைவத்தையும் வளம் பெறச் செய்தன என்றால் அது மிகையாகாது. இவர் ஏறக்குறைய 67 திருப்பதிகங்கள் அருளியுள்ளார்.

வேதநெறி தழைத்தோங்கவும், சைவத்துறை விளங்கவும் தோன்றிய திருஞானசம்பந்தர் வரலாற்றைச் சேக்கிழார் தாம் பாடிய மொத்தம் 4286 செய்யுட்களில் 1256 செய்யுட்களைத் திருஞானசம்பந்தருக்கே படைத்துள்ளமை இங்கு எண்ணிப் பார்க்கத்தக்கது. இதனால்தான் ''பிள்ளைபாதி புராணம்பாதி'' எனும் பழமொழி உண்டாயிற்று. இவரைப் பின்பற்றிய சிவப்பிரகாசரும் தமது இலக்கியங்களில் திருஞான சம்பந்தரைப் பற்றி எடுத்து மொழிகிறார்.

**வீட்டின்பம்**

**''வினை அரும் புகலிக்(கு) இறைமணப் பந்தர்**
**விருந்தினுக் குதவிலேன் முந்திற்(று)**
**உனைஇரந் திடுவான் வந்தனன் பத(ம்) நீ**
**உதவியென் துயரொழித் தருளாய்**
............................'' (சோணசைலமாலை, பா.எ.26)

வினைகள் நீங்கிய திருஞானசம்பந்தர் தம் திருமணப் பந்தரில் அனைவருக்கும் முக்தியாகிய வீடுபேற்றினை அருளினார். அவ்வாறு அருளிய காலத்தில் ''நான் பிறவியெடுக்கவில்லை. அதனால், நான் இப்போது அத்தகைய வீடுபேற்றினை உம்மையாசித்துப் பெற வந்துள்ளேன். நீ உம் பதமுத்தி கொடுத்து என்துன்பத்தைத் தீர்த்தருள்வீராக'' என்று குறிப்பிடுகின்றார். இதே செய்தியைத் திருவெங்கைக் கலம்பகத்திலும் இவர் பாடியுள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

**''வாட்டுபவம் கொல் புகலி**
**வண்புலவன் பேரின்ப**
**வீட்டுபவம் கொள்ளை கொள**
**விட்ட நாள் - கேட்டு வராது**

எப்பிறப்பில் எங்ஙன் இருந்
தேது புரிந் தெய்தேனோ
ஒப்பிறப்பில் வெங்கை
யுடை யோய்" (திருவெங்கைக் கலம்பகம், பா.எ.75)

மேற்குறிப்பிட்ட செய்திகள் இரண்டும் வீட்டின்பத்தை ஞானசம்பந்தர் பெற்ற முறையையும், மற்றவர்கள் அவ்வின்பத்தைப் பெறக் கருவியாக இருந்த நிலையையும் கூறியுள்ள இடங்களில் அடங்கும்.

**ஞானப்பால்**

ஞானசம்பந்தர் பெறற்கரிய பேறு பெற்ற ஞானப்பால் பெற்ற செய்தியைத் தமது இலக்கியத்தில் ஒன்றன் தொடர்ச்சியாக மற்றொன்றைப் படைத்துள்ளார் சிவப்பிரகாசர்.

"யாவுமாம் உமையுண் ணாமுலை முலைப்பால்
ஈந்துபா டச்செயாய் எனினும்
............................" (சோண.மாலை, பா.எ.32.)

என்பது எல்லாச் சிறப்புக்களுக்கும் இடனாகிய உமாதேவியாகிய உண்ணாமுலையம்மையின் திருமுலைப்பாலை எனக்களித்துப் பாடச் செய்யா விடினும் என்ற பொருட்பட அமையும்.

"...................................
கழுமணிப் பசும்பொன் குலவுபால் கிண்ணம்
கழுவுநீர் வார்பதற் குரையாய்
............................" (சோண.மாலை, பா.எ.45)

மேலும், சம்பந்தர் பெருமான் முன்பு உண்டருளிய மணிகள் பதித்த பொன்னாலான பாற்கிண்ணத்தைக் கழுவிய நீரை, அடியேனுக்கு வார்க்கும்படி உரைத்தருள்வீராக என்று குறிப்பிடுகின்றார்.

"தேக்குறு கருணைப் பெரியநா யகிதன்
திருமுலை சுரந்தபால் மதுர
வாக்குறும் அழகன் ஞானசம் பந்த
வள்ளல்உண் டிடஅவன் கடைவாய்ப்
போக்குற ஒழுகும் திவலையொன் றடியோன்
புண்ணிய வசத்தினாற் கிடைப்பின்
தாக்குறு புலன்வென் றுன்னடி யவருள்
தங்குவன் வெங்கைகா வலனே"
(திருவெங். கல. பா.எ.61)

சம்பந்தர் உண்டு வாயில் ஒழுகும் பாலில், ஒரு துளி அடியேனுக்குக் கிடைப்பின், யான் புலன்களை வென்று அடியவர் கூட்டத்தில் ஒருவனாகத்

தங்குவேன் என்பது பொருள். மேற்குறிப்பிட்ட பாடல்களில் இருந்து சிவப்பிரகாசர் இரண்டு கருத்துக்களை முன் வைக்கின்றார். ஒன்று ஞானசம்பந்தர் போல் தமிழ்ப்பற்றைப் பெறுவது; இரண்டு ஞான வாழ்வைப் பெறுவது.

**ஆகாயக் குடை**

"முயங்குமா புகழ்ப்பூம் புகலிஅந் தணர்க்கு
முத்துவெண் பந்தரீந் தகல்வான்
தயங்குமீன் முத்துப் பந்தர்வாழ் சோண
சைலனே கைலைநா யகனே"

(சோண. மாலை, பா.எ.28.)

வெண்முத்துப்பந்தரை ஞானசம்பந்தருக்கு அளித்த இறைவன் தமக்கு நட்சத்திரங்களாகிய முத்துக்கள் தங்கும் வானமாகிய பந்தரைக் குடையாகக் கொண்டான் என்ற பொருளமைய வரும் வரிகள் எண்ணத் தக்கன.

**பயணம்**

"..........................................
பூம்பொழிற் புகலிக் கிறைவனா ணிலம்சேர்
புண்ணியத் தலங்களி னைடந்து
தாம்புனை பதிகம் தொறும்புகழ் சோண
சைலனே கைலைநா யகனே" (சோண. மாலை, பா.எ.58)

இதுபோன்ற பாடல்களில் ஞானசம்பந்தரின் அருளிச் செயல்கள் நினைக்கப்படுவதைக் காணலாம். ஞானசம்பந்தரின் மீது சிவப்பிரகாசர் காட்டும் மதிப்பையும் இப்பாடல்கள் காட்டும்.

**தந்தையானவன்**

"படத்தினிற் பொதித்த குடத்துவெள் எலும்பு
பரிந்து பெண் ஆக்கவும் அறியா
......................"

(வெங். கல. பா.எ.46)

என்ற வரிகளில் மயிலையில் எலும்பான பூம்பாவையை வரவழைத்த அருளியல் செயல் குறிப்பிடப்படுகின்றது.

**சமயத்தை வென்றவன்**

"கூடற் பதியில் சமண இருளைக்
குலைத்துத் திருவெண் ணீற்றதொளி

கொடுத்துக் கருத்திற் குடிபுகுந்தென்
குலத்தைத் தொழும்பு கொளுங்கோவும்
.................................'' (மேலது, பா. எ. 58)

சமணர்களை அனல், புனல் வாதங்களில் வென்று மதுரையம்பதியில் சைவத்தைத் தழைத்தோங்கச் செய்த அருளியல் செயல் இவ்வரிகளில் குறிப்பிடப்படுகின்றது.

இவ்வாறு ஞானசம்பந்தரையும் அவரின் அருளியல் கொள்கைகளையும் சுட்டும் சிவப்பிரகாசர் அவரின் இலக்கியக் கொள்கைகளையும் தமது இலக்கியங்களில் புகுத்தியுள்ளார். 'புலனைந்தும் பொறிகலங்கி நெறி மயங்க' என்னும் ஞானசம்பந்தரின் பாடல் கருத்தைப் பின்வரும் பாடல் அடிகளில் சிவப்பிரகாசர் குறிப்பிடுகின்றார்.

''.....................................
பின்போதும் அமையத்தோ எமக்குமணி
வாய்மருந்து பெறஅ ளிப்பீர்
பொன்போல வடிவுபடைத்து இரும்புபோல்
மனம்படைத்த பொருவில் மாதோ''
(வெங். கல.பா.எ.37)

ஞானசம்பந்தருக்கு இறைவனால் அருளப்பட்ட அருளியற் கொள்கைகளையும், ஞானசம்பந்தரால் அடியவர்களுக்கு அருளப்பட்ட அருளியற் கொள்கைகளையும் சிவப்பிரகாசர் தம் இலக்கியங்களில் எடுத்துரைக்கக் காணமுடிகின்றது.

# 31. சம்பந்தரும் திருத்தொண்டர்களும்

இரா. சாம்பசதாசிவம், கோவை.

செந்தமிழும் சிவநெறியும் தழைத்திட ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் சீர்காழியில் தோன்றிய குழந்தை மூன்றாவது ஆண்டில் குளக்கரையில் அம்மையின் திருமுலைப்பால் உண்டு அறிவுச்சுடராகிய திருஞானசம்பந்தர் ஆனார். பல பதிகளுக்கு (தலம்)த் தொண்டர் குழாத்துடன் சென்று சிறந்த பண்களில் அரிய பல யாப்பமைப்பில் பல்லாயிரக்கணக்கான பாடல்களால் இறைவனைப் பாடி நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பினார். பல்லாயிரம் பாடினாலும் தற்சமயம் நமக்கு கிடைத்தது 385 பதிகங்களே. பொற்றாளம், முத்துச்சிவிகை பொற்கிழி முதலியன இறைவனால் அருளப் பெற்றார். இடைக்காலத்தில் புறச்சமயத் தாக்கத்தாலும் பண்பற்ற மக்கள் கலப்பாலும் தமிழகம் நிலை தடுமாறியது. திருவருள் துணை கொண்டு பல அற்புதங்கள் நிகழ்த்தினார். தமிழ்க் கலைகளும், பண்பாடும் மீட்கப்பட்டு அரன் நாமம் ஐந்தெழுத்தின் பெருமையையும், திருநீற்றின் மகிமையையும் ஒளிபெறச் செய்தார். சிறிய பெருந்தகையாகிய ஞானசம்பந்தப் பெருமானால் மக்கள் விழிப்புணர்வு பெற்றனர்.

தொண்டர்கள் என்பவர் யான் எனது என்ற செறுக்கை நீக்கிய வர்கள்; மாசிலா மனத்தினர்; தமக்கென வாழாதவர்கள்; சீலமும் அன்பும் நிறைந்தவர்கள்; கேடும் ஆக்கமும் கெட்ட திருவினர் ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்கும் பண்பினர் என்று சேக்கிழார் பெருமான் அவர்களைக் கூறுவார். குரு, லிங்கம், சங்கமம் என்ற வழிபாட்டு முறைகளில் ஒன்றில் நின்று கொள்கைபிடிப்புடன் தொண்டாற்றி இறையருள் பெற்ற மேன்மக்களே சிறந்த அடியார்கள். சுந்தரமூர்த்திநாயனார் இவர்களைத்தான் திருத்தொண்டத்தொகையில் போற்றி அடியார்க்கு அடியேன் என்று சிறப்பித்துள்ளார்.

இந்தத் தொண்டர்களில் ஞானசம்பந்தர் காலத்தில் வாழ்ந்த பத்து அடியார்களைப் பற்றியும் அவர் காலத்து முற்பட்ட அவரால் நினைக்கப் பெற்ற மற்றும் திருமுறையில் போற்றப்பட்ட ஏழு அடியார்களைப் பற்றியும் சிந்திப்போம்.

## முதல் பாகம்

### 1. திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார்

இவர் சோழ நாட்டில் எருக்கத்தம் புலியூரில் பாணர்குடியில் பிறந்தார். சிவபெருமானின் புகழை யாழிலிட்டு வாசிப்பது இவர் தம் திருத்தொண்டாகும். ஞானசம்பந்தப் பெருமான் சிறப்பைத் தெரிந்து அவரை அணுகி விரும்பி அவருடன் சேர்ந்து பல பதிகளுக்கும் உடன் சென்று அவரது பாடல்களை யாழில் இசைத்து மனநிறைவு பெற்றார். ஞானசம்பந்த பெருமானின் திருமணவிழாவில் கலந்து கொண்டு சிவசோதியில் மூழ்கி முத்திப் பேறு பெற்றார். ஞானசம்பந்தப் பெருமான் தமது திருமுறையில் இவருக்கு அளித்த புகழுரை:

**அ. தானு எனை ஆளுடையான் தன் அடியார்க்கு அன்புடைமை
பாணன் இசைபத்திமையால் பாடுதலும் பரிந்தளித்தான்**
1-62.9

**ஆ. தக்க பூமனைச்சுற்றச் சுருளோடே தாரம் உய்ந்தது
பாணற்கருளொடே** 3-115.6

### 2. திருநாவுக்கரச நாயனார்

மருள்நீக்கியார் திருமுனைப்பாடி நாட்டில் திருவாமூரில் வேளாளர் குடியில் ஞானசம்பந்தருக்கு முன்னதாகவே பிறந்தவர். பெற்றோரை இழந்த நிலையில் சமணம் சார்ந்து அச்சமயத்தில் மேம்பட்டு தரும் சேனர் என்று பட்டம் பெற்று வாழ்ந்து வந்தார். அவரது தமக்கையார் பிரார்த்தனைக்கு இரங்கி இவருக்கு இறைவன் சூலை நோயைக் கொடுத்துத் தடுத்து ஆண்டு கொண்டார். திலகவதியார் அளித்த திருவாளன் திருநீறு பெற்று அதிகை வீரட்டானம் சென்று துதித்து நலம் பெற்றதுடன் திருநாவுக்கரசு என்ற பெயரும் பெற்றார். பின்னர் பல பதிகளுக்கும் சென்று தரிசித்துப் பாடல்கள் பாடி இறைபணியும், உழவாரப்பணியுடன் சமுதாயப் பணியும் சிறப்பாகச் செய்து வந்தார். சமணம் நீங்கிச் சைவம் திரும்பியது பொறாது சமணர்கள் பல்லவ மன்னனின் துணை கொண்டு இவருக்குப் பல தொல்லைகள் கொடுத்தனர். இறுதியாக இவரைக் கல்லில் கட்டிக் கடலில் போட்டனர் இறையருளால் அதனின்றும் விடுபட்டார்.

ஞானசம்பந்தப் பிள்ளையாரின் சிறப்பையும் புகழையும் கேட்டு அவரைக் காணச் சீர்காழி சென்றார். நாவரசரை நன்கு வரவேற்று இருவரும் பல தலங்களுக்குச் சென்று பணிந்து தொண்டு செய்து வந்தார்கள். ஞானசம்பந்தர் நாவரசரை அப்பரே என்று விளித்து பெருமை செய்தார். இருவரும் பலமுறை சந்தித்து நலம்பேணி வந்தார்கள். ஒருசமயம் திருப்புகலூரில் இருவரும் முருகநாயனார் திருமடத்தில் தங்கி ஆலய வழிபாடு மேற்கொண்டனர்.

சோழ நாட்டிலேயே பஞ்சம் ஏற்பட்ட காலத்தில் திருவீழிமிழலையில் இருவரும் தனித்தனி மடம் அமைத்து இறைவனிடம் படிக்காசு பெற்றுப் பஞ்சம் தீரும் வரை முரசறைந்து மக்களுக்கு உணவு படைத்து வந்தனர்.

திருமறைக்காட்டில் பலகாலமாக அடைக்கப்பட்டிருந்த ஆலயக் கதவை அப்பர் திறக்கப் பாடவும் சம்பந்தர் அடைக்கப் பாடியும் நேர் செய்து மக்கள் வழிபாட்டிற்கு உதவி செய்தனர். அவ்வேளையில் பாண்டிய நாட்டிற்கு வரவேண்டிச் சம்பந்தருக்கு அழைப்பு வந்தது. அப்பர் பெருமான் சம்பந்தரை நோக்கிச் சமணர்கள் பொல்லாத வர்கள் என்று தனது அனுபவத்தைக் கூறி, போகவேண்டாம் என்று தடுத்து, தாம் போவதாகக் கூறினார். மேலும் நாளும் கோளும் சரியாக இல்லை என்றார். அதற்குச் சம்பந்தப் பெருமான் இறைவன் உள்ளத்தில் துணை இருக்கும்போது எதற்கும் பயப்படத் தேவையில்லை என்று தெரிவித்து ''கோளறு பதிகம்'' பாடி முடித்துப் புறப்பட்டார்.

சம்பந்தர் மதுரை சென்று பாண்டியனது வெப்பு நோயை நீக்கிச் சமணர்களோடு அனல் வாதம், புனல் வாதம் செய்து அவர்களை வென்று பாண்டிய நாட்டில் சைவத்தை நிலைநிறுத்தினார்.

மதுரையிலிருந்து சம்பந்தர் வருவது அறிந்து அப்பரடிகள் திருப்பூந்துருத்தியில் அவரை எதிர்கொண்டு அவரது சிவிகையைத் தாங்கி வந்தார். அதுகண்டு சம்பந்தர் பதைபதைத்து இறங்கி அவரடி பணிந்தார். அப்பரும் அவரை வணங்கி மதுரை வெற்றிப் பயணம் குறித்துக் கேட்டு மகிழ்ந்தார்.

சம்பந்தப் பெருமான் பாண்டியனைத் திருத்திச் சைவத்தை நிலைநிறுத்தியது போல் அப்பரடிகள் பல்லவ மன்னனைத் திருத்தி அவனையே ஆலயம் எடுப்பிக்கச் செய்து வடபுலத்தில் சைவத்தை நிலை நிறுத்தினார்.

### 3. திருநீலநக்க நாயனார்

இவர் சோழ நாட்டில் சாத்தமங்கை என்ற ஊரில் அந்தணர் மரபில் பிறந்தார். சிவபெருமானுக்கும் சிவனடியார்களுக்கும் தொண்டு செய்வதையே குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்தவர். திருஞான சம்பந்தரின் புகழ்கேட்டு அவரையும் அவருடன் வரும் தொண்டர் களையும் சிறப்பாக வரவேற்று அவர்களுடன் பலபதிகளையும் வழிபட்டு வந்தனர். ஒரு சமயம் அந்த அடியார்களில் தீண்டத்தகாதவராகக் கருதப்பட்ட திருநீலகண்ட யாழ்ப்பாணரும் அவரது துணைவியார் மதங்கசூளாமணியாரும் ஓர் இரவு தங்குவதற்கு அந்தணராகிய

நீலநக்கர் தமது நடுமனையில் வேதிகைக்கு அருகில் ஏற்பாடு செய்து கொடுத்தார். ஞானசம்பந்தர் திருமணவிழாவில் பங்குகொண்டு சிவசோதியில் கலந்து இறைவனடி சேர்ந்தார்.

ஞானசம்பந்தர் பாடலில் இவரைப் பற்றிய குறிப்பு

**அ. கடிமணம் மல்கிநாளும் கமழும் பொழில் சாத்தமங்கை**
**அடிகள் நக்கன்பரவ அயவந்தி அமர்ந்தவனே** (3-58-2)

**ஆ. நிறையினார் நீலநக்கன் நெடுமா நகர் என்று தொண்டர்**
**அறையும் ஊர் சாத்தமங்கை அயவந்தி** (3-58-11)

## 4. சிறுத்தொண்ட நாயனார்

இவர் சோழ நாட்டில் திருச்செங்காட்டன்குடியில் மாமாத்திரர் குலத்தில் பிறந்தவர். சிறந்த கல்விமான். படைத்தொழிலில் பயிற்சி பெற்றவர். சோழமன்னனின் அமைச்சராகப் பரஞ்சோதியார் என்ற பெயரில் வடபுலத்தில் படை எடுத்துச் சென்று வெற்றி கண்டவர். சிவனடியார் என்று தெரியவந்ததும் அரசன் இவருக்கு விடுப்பு நல்கிச் சிவப்பணிபுரிய அனுமதித்தான். சிவவழிபாட்டோடு அடியார்க்கு அமுது படைத்தலையும் கொள்கைப் பிடிப்போடு செய்து வந்தார். இவரது செயல் திறத்தையும் மன உறுதியையும் உலகறியச் செய்ய இறைவன் பிள்ளைக்கறி கேட்டு இவரிடம் நடித்த நாடகம் மிகப்பெரியது. அதில் வெற்றி பெற்றார். அந்தப்பகுதிக்கு அடியார் குழாத்துடன் சம்பந்தர் வருவது தெரிந்து அவர்களை வரவேற்று அவர்களுடன் கூடிப் பல தலங்களைத் தரிசித்து மகிழ்ந்தனர். ஞானசம்பந்தர் பாடிய 3-வது திருமுறையில் 63-வது பதிகம் முழுவதிலும் சிறுத்தொண்டரைப் பலவாறு புகழ்ந்துரைத்துள்ளார். அவற்றுள் சில சிறுத்தொண்டன் பணிசெய்ய வெங்காட்டுள் அனலேந்தி விளையாடும் பெருமானே 3-63-1 சிட்டன்சீர் (சிறுத்தொண்டன்) தேனமர்ச்சீர், சிருலாஞ், கணபதிச் சரம்மேய, செறுவடிதோய, சீராளன், சிறப்புலவாள், வெந்தநீறணிமார்பன் என்று பலவாறு சிறுத்தொண்டருக்கு அடைமொழி கூறியிருக்கிறார்.

## 5. முருக நாயனார்

.சோழ நாட்டில் திருப்புகலூரில் வேதியர் குலத்தில் பிறந்தவர். சிவபத்தியிலும் அடியார்பத்தியிலும் சிறந்து விளங்கினார். பூத்தொண்டே பணியாகக் கொண்டார். ஞானசம்பந்தரும் அப்பர் பெருமானும் இவர் மடத்தில் தங்கி வழிபாடு செய்தனர். ஞானசம்பந்தர் திருமண விழாவில் கலந்துகொண்டு சிவசோதியில் அடியார்களோடு சேர்ந்து முத்தி பெற்றார்.

ஞானசம்பந்தர் இவரைக் குறித்துத் தமது திருமுறையில் புகழ்ந்து பாடினார்.

> ''தொண்டர் தன்கயம் மூழ்கித் துணையலும் சாந்தமும் புகையும்
> கொண்டு கொண்டு அடிபரவிக் குறிப்பறி முருகன் செய்கோலம்
> கண்டு கண்டு கண்குளிரக் களிபரந்து ஒளிமல்கு கள்ளார்
> வண்டு பண்செய்யும் புகலூர் வர்த்தமானீச்சரத்ததாரே''
>
> (2-92-3)

### 6. குங்குலியக் கலய நாயனார்

சோழ நாட்டில் திருக்கடவூரில் அந்தணர் மரபில் வந்தவர். கோயிலில் குங்குலியத் தூபமிடுவதும் அடியார்களுக்கு அமுது செய்விப்பதும் கடமையாகக் கொண்டவர். ஒருசமயம் திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும் இவரால் வரவேற்கப்பட்டு சேர்ந்து வழிபாடு மேற்கொண்டனர். வறுமையிலும் கொள்கைபிடிப்பாகத் தொண்டு ஆற்றிவந்தவர். ஒருநாள் மக்கள் பசி கண்டு இரங்கி அவரது துணைவியார் தமது திருமாங்கல்யத்தைக் கொடுத்து உணவுப்பொருள் வாங்கிவரக் கேட்டுக்கொண்டார். வாங்கச் சென்றவர் வழியில் இறை பணிக்குரிய குங்குலியப் பொதியைக் கண்டதும், வீட்டை மறந்து குங்குலியத்தை வாங்கிக் கோயில் பணியில் ஈடுபட்டார். இறைவன் திருவருளால் நலம் பெற்று அவனடி சேர்ந்தார்.

### 7. மங்கையர்க்கரசியார்

இவர் சோழமன்னனின் மகள் பாண்டியன் நெடுமாறனின் மனைவியார். மன்னனும் மக்களும் சமணம் சார்ந்ததால் நாடு நலமிழந்து தரம் தாழ்ந்து வந்தது. அதிலிருந்து விடுபட அரசியார் மறைவாக அமைச்சர் குலச்சிறையாரின் துணைகொண்டு ஞானசம்பந்தப் பெருமானைச் சோழ நாட்டிலிருந்து அழைத்துவரச் செய்தார். ஞானசம்பந்தர் வந்து மன்னனின் வெப்பு நோயை நீக்கி, அனல் வாதம் புனல் வாதங்களால் சமணர்களின் செல்வாக்கைத் துடைத்து அவர்கள் தமக்குத்தாமே தண்டனை பெற்றுக் கொள்ளுமாறு செய்தார். பாண்டியனுக்கு ஏற்பட்டிருந்த ஊனமாகிய கூனையும் நிமிர்த்தி உள்ளப்பிணியாகிய சமணச்சார்பையும் அறவே நீக்கி அவரை நின்றசீர் நெடுமாறன் ஆக்கியதோடு நாயனார் ஆகும் தகுதியையும் பெறச்செய்தார்.

ஞானசம்பந்தப் பெருமான் தமது 3-ம் திருமுறையில் 120-வது பதிகமாகிய ஆலவாய் பதிகத்தில் 1,3,5,7,9,11 ஆகிய ஆறு பாடல்களிலும் மங்கையர்க்கரசியாரைப் பாராட்டிச் சிறப்பித்துள்ளார்.

**8. குலச்சிறை நாயனார்**

இவர் பாண்டிய நாட்டில் மணமேற்குடியில் பிறந்தார். பாண்டிய மன்னன் நெடுமாறனின் முதல் அமைச்சர் சிவனடியார்களிடத்தில் பேரன்பு கொண்டவர். அரசி மங்கையர்க்கரசியாரின் திருத்தொண்டுக்குத் துணைபுரிந்தார். சோழ நாட்டிலிருந்து சம்பந்தப் பெருமானை அழைத்து வந்து அவரைப் பாதுகாத்து போற்றியவர். தோற்ற சமணர்களைக் கழுவேறச் செய்தவர்.

ஞானசம்பந்தப் பெருமான் மேலே கூறிய ஆலவாய் பதிகத்தில் 2, 4, 6, 8, 10, 11 ஆகிய ஆறு பாடல்களிலும் குலச்சிறையாரைப் பாராட்டிப் புகழ்ந்துள்ளார்.

**9. நின்றசீர் நெடுமாற நாயனார்**

இவர் பாண்டிய மன்னன் சமணம் சார்ந்ததால் தமிழர் கலைகளும் பண்பாடும் நலிவுற்றன. அரசியாரின் முயற்சியால் மதுரை வந்து தங்கிய ஞானசம்பந்தர் திருமடத்திற்குச் சமண குண்டர்கள் தீ வைத்தனர். அரசிபேரில் உள்ளப் பரிவால் அந்தத் தீ வெப்பம் பையவே சென்று பாண்டியற்கு ஆகவே என்று சம்பந்தர் தமது 3-வது திருமுறையில் 51 பதிகத்தில் இறைவனை வேண்ட அது அவருக்கு வெப்புநோயாக ஆயிற்று. பின்னர் திருநீற்றுப்பதிகம் பாடி (2-66) நீங்கியதும் பாண்டியன் சைவனாக மாறி நாயனாராகவும் ஆயினார்.

**10. அப்பூதியடிகள்**

இவர் சோழ நாட்டில் திங்களூரில் அந்தணர் மரபில் வந்தவர் திருநாவுக்கரசரையே வழிபடு மூர்த்தியாகக் கருதிச் சிறந்த பணிகள் செய்து உயர்வடைந்தார். ஞானசம்பந்தர் காலத்தில் வாழ்ந்தவர் என்றாலும் அவருடன் தொடர்பு பற்றிய ஆதாரம் எதுவும் திருமுறைகளில் கிடைக்கவில்லை.

**இரண்டாம் பாகம்**

இனி சம்பந்தருக்கு முற்பட்ட காலத்தில் வாழ்ந்த அடியார்களிடம் அவர் கொண்ட ஈடுபாட்டைச் சந்திப்போம்.

**1. காரைக்கால் அம்மையார்**

சோழ நாடு காரைக்கால் வணிகர் குலம் அடியார்களை உபசரித்தவர். இறையருளால் மாங்கனி பெற்று இல்லறம் துறந்து பேய்வடிவம் பெற்று முதலாவதாகப் பதிகம் பாடியவர். திருவாலங்காட்டில் தலையாலேயே நடந்து இறைவனடியை வேண்டிப் பெற்றவர். ஞானசம்பந்தர் திருவல்லம், திருவிற்கோலம், திருவூறல் முதலிய பதிகளை

வணங்கிவிட்டுத் திருவாலங்காட்டை அணுகினார். இத்திருப்பதி காரைக்கால் அம்மையார் தலையால் நடந்த தலம் என்று மிதிக்க அஞ்சிப் புறத்தே இரவு தங்கிக் காரைக்கால் அம்மையாரை நினைந்து போற்றியுள்ளார். இந்த நிகழ்ச்சியைச் சேக்கிழார் பெருமான் ''அம்மை திருத்தலையாலே நடந்து போற்றும் அம்மையப்பர் திருவாலங்காடாம் என்று தம்மையுடையவர் மூதூர் மிதிக்க அஞ்சிச் சண்பை வரும் சிகாமணியார் சாரச்சென்று'' என்று தமது திருத்தொண்டர் புராணத் (திருஞா..1008) தில் தெரிவித்துள்ளார்.

**2. கண்ணப்ப நாயனார்**

தொண்டைநாடு உடுப்பூர் வேடர் பெயர் திண்ணனார். அன்பின் முதிர்ச்சியால் காளத்திமலையில் குடுமித்தேவரின் கண்ணில் குருதி கண்டு திண்ணன் தனது வலக்கண்ணை அப்பிநலம் செய்தான். மீண்டும் இடக்கண்ணில் குருதிவர இடக்கண்ணையும் தோண்டி எடுக்க முயற்சிக்கும்போது இறைவன் நில்லு கண்ணப்பா என்று கையைத் தடுத்து அருள் செய்தார். ஞானசம்பந்தர் திருமுறை பாடல்:

அ. **கான லைக்கும் வன் கண் இடந்து அப்பநின்**
**வானலைக்கும் தலத்தேவு வைத்தான்** (3-35-7)

ஆ. **வாய்கலசமாக வழிபாடு செயும் மலராகுநயனம்**
**காய்கனை யினால் இந்து ஈசனடி கூடு காளத்தி மலையே**
(3-69-4)

இ. **கண்ணப்பருக்கு அருள் செய்த கயிலை யெங்கள்**
**அண்ணலாரும் ஆதி ஆனைக்காவே** (3-109-7)

ஈ. **ஈண்டு துயவமரப்பின்னே இருங்கண்**
**இடந்து அடி அப்பினனே** (3-113-8)

**3. சண்டேசுர நாயனார்**

சோழ நாடு சேய்ஞலூர் மறையவர் பெயர் விசாரசருமர். பசுக்களை மேய்த்துப் பாலைக் கறந்து மணல் லிங்கத்தை வழிபட்டார். அதற்கு இடையூறு செய்த தந்தையின் காலைச் சிதைத்துச் சண்டேசுரபதம் பெற்றவர். அவரைப் பற்றிச் சம்பந்தர் பாடியது,

அ. **பீரடைந்த பாலது ஆட்டப் பேணாதவன் தாதை**
**வேரடைந்து பாய்ந்த தாளை வேர்த்தடிந்தான் தனக்குத்**
**தாரடைந்த மாலை சூட்டித் தலைமை வகுத்ததென்னே**
**சீரடைந்த கோயில் மல்கு சேய்ஞலூர் மேயவனே**
(1-48-7)

ஆ. வந்தமணலால் இலிங்கம் மண்ணியின்கண்
பாலாட்டும் சிந்தைசெய்வோன் (1-62-4)

இ. அண்டர்தொழுசண்டிபணிகண்டு அடிமை கொண்ட சிறை (3-68-10)

### 4. கோச்செங்கட் சோழ நாயனார்

முற்பிறவியில் சிலந்தியாக இருந்து திருவானைக்காவலில் இறை பணி செய்ததால் சோழ மன்னனுக்கு மகனாகப் பிறந்தார். முற்பிறவியில் தனது மரணத்திற்குக் காரணமாக இருந்த யானை புகமுடியாதபடி மாடக்கோயிலாக இறைவனுக்கு எழுபது கோயில்கள் அமைத்தார். தில்லை அந்தணருக்கு திருமாளிகை கட்டிக்கொடுத்தார். சம்பந்த மூர்த்தியின் பாராட்டு:

அ. சிலந்தி செங்கட்சோழனாகச் செய்தான் ஊர் 2-63-7

ஆ. செய்ய கண் வளவன்முன் செய்த கோயிலே 3-18-2

இ. செம்பியன் கோச் செங்கணான் செய் கோயிலே 3-18-4

### 5. புகழ்த்துணை நாயனார்

சோழநாடு செருவிலிபுத்தூர் ஆதிசைவர் சிவபெருமானுக்கு முறையாக வழிபாடு இயற்றி வந்தார். நாட்டில் பஞ்சம் ஏற்பட்டது. அதனால் மெலிவும் தளர்ச்சியும் ஏற்பட்டது. ஒருநாள் திருமஞ்சன மாட்டும் போது பசிக் கொடுமையால் கை தளர்ந்து குடம் பெருமான் திருமுடி மீது கவிழ்ந்திடதானும் மயங்கி வீழ்ந்தார். அவரது நற்றொண்டு கண்டு மெச்சி இறைவன் பஞ்சம் தீறும் வரை அவருக்கு தினம் ஒரு காசு கொடுத்து அருள் செய்தார். அவர் திறம் பாடிய திருமுறை.

"அவந்த அடியான் அற்றைக்கு அன்று ஓர் காசு
எய்திப்புலர்ந்த காலை போற்றும்புத்தூரே" (2-63-7)

### 6. அமர்நீதி நாயனார்

சோழநாடு பழை,யாரை, வணிகர் சிவனடியார்களுக்கு திருஅமுது செய்வித்து கந்தை, கீழ் ஆடை, கோவணம் கொடுத்து வருவதை முறையாகப் பலகாலம் செய்து வந்தார். இவரது மனஉறுதியை உலகறியச் செய்ய, இறைவன் அந்தண பிரமச்சாரியாக வந்து ஒரு கோவணத்தை இவரிடம் கொடுத்து பாதுகாத்துத் தரும்படி கூறிச் சென்றார். அதனை மறைக்கச் செய்துவிட்டு சில நாட்கழித்து வந்து கேட்க இவரால் கொடுக்க இயலவில்லை. அதற்கு ஈடாக நாயனாரது முழு உடைமைகளும் குடும்பமும் ஆகும் என்பதைத் தராசு முனையில் மெய்ப்பித்து மழவிடைமேல் உமையம்மையுடன் தமது

திருக்கோலக்காட்சி நல்கி இறைவர் மறைந்தார். இந்த நாடகத்தை ஞானசம்பந்தர் தமது திருமுறையில் இவ்வாறு சித்திரிக்கிறார்.

**கொடிறனார் யாதும் குறைவிலார் தாம் போய்க் கோவணம்**
**கொண்டு கூத்தாடும் படிறனார் (3-121-1)**

## 7. தில்லைவாழ் அந்தணர்

தில்லை கூத்தப் பெருமானுக்குத் திருத்தொண்டு செய்யும் அந்தணர் அடியார்களில் சிறந்தவர் என்பதைச் சுந்தரருக்குத் திருவாரூரில் இறைவனே எடுத்துக் காட்டியதைத் திருத்தொண்டத் தொகையின் முதலடி நமக்குத் தெளிவாகக் காட்டுகிறது. அந்தச் சிறப்பை ஞானசம்பந்தர் வாக்காலும் அறியலாம்.

**அ. கற்றாங்கு எரியோம்பி கலியை வாராமே**
**செற்றார் வாழ்தில்லை சிற்றம்பலம் மேய (1-80-1)**

**ஆ. ஆடினாய் நறு நெய்யொடுபால் தயிர்**
**அந்தணர் பிரியாத சிற்றம்பலம் (3-1-1)**

திருத்தொண்டர் தம் திருத்தாள் போற்றி.

# 32. சம்பந்தரின் சமூகத் தொண்டு!

ச. சாம்பசிவனார், மதுரை.

''பூவான் மலிமணிநீர்ப் பொய்கைக் கரையினியற்
பாவான் மொழிஞானப் பாலுண்டு - நாவான்
மறித்தெஞ் செவியமுதாய் வார்த்தபிரான் தண்டை
வெறித்தண் கமலமே வீடு'' (நால்வர் நான்மணிமாலை-1)

என்பது சிவப்பிரகாசர் அருள்வாக்கு. ''சீகாழித் திருப்பதியிலே செந்தாமரை மலர்களோடு முத்துக்களும் நீரும் செறிந்த பிரமதீர்த்தக் கரையினிலே, பிராட்டியார் அருளிய ஞானப்பாலை இனிதருந்தி, அதனை நாவினால் தடுத்து, எமது செவியமுதமாக இயற்பாவினால் ஒழுக்கிய ஆளுடைய பிள்ளையாரது செந்தாமரை மலர் போன்ற திருவடிகளே எமக்குப் புகலிடம்'' என்பது இதன் பொருள். ''சம்பந்தரின் திருவடிகளே எமக்கு முத்தி (வீடு) தரும்'' என்ற பொருளும் கொள்ளும்படி இப்பாடலின் இறுதியடி அமைந்துள்ளது. இத்தகு பெருமை பெற்ற திருஞானசம்பந்தர் செய்த சமூகத் தொண்டுகள் குறித்து ஒரு சிறிது ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

**சம்பந்தர் காலத்திற்கு முன்!**

சங்க காலத்திற்குப் பின், இத்தமிழ்நாடு, ஏறத்தாழ முந்நூறு ஆண்டுகள், ஓர் இருண்ட காலத்தில் மூழ்கிக் கிடந்தது. இது குறித்து வரலாற்றாசிரியர் கே.கே. பிள்ளை கூறுவது வருமாறு:

''சங்ககாலம் முடிவடைந்த பிறகு, சுமார் முந்நூறு ஆண்டுக் காலம் தமிழகத்தில் என்ன நேர்ந்தது என்று அறிய முடிய வில்லை! தமிழக வரலாற்றில் ஓர் 'இருண்ட காலம்' என்று குறிப்பிடுவதுண்டு!.. அவ்விருண்ட காலத்தில் களப்பிரரால் ஏற்பட்ட அரசியல் புரட்சிக்கு வேள்விக் குடிச் செப்பேடுகள் சான்று பகர்கின்றன. அக்களப்பிரர் காலத்தில் சமண, புத்த சமயங்கள் தமிழகத்தில் மிகப் பெருமளவு வளர்ச்சி யுற்றன.. களப்பிரர் காலத்தில் தமிழ் மொழிக்குத் தாழ்வும், பிராகிருதத் துக்கும் பாலி மொழிக்கும் அரசாங்கச் செல்வாக்கும் கிடைத்தன!'' (தமிழக வரலாறு - மக்களும் பண்பாடும். பக்.51;174).

களப்பிரர்களை ஒடுக்கிய பல்லவர்களும், தமிழை ஆதரிக்காதவர்களே! வடமொழியை வளர்க்க அவர்கள் வடநாட்டிலிருந்து வேதியர்களை வரவழைத்து இத்தமிழ்நாட்டில் குடியேற்றிக் 'கடிகைகள்' வைத்து அம்மொழியை வளர்த்தனர்! அது மட்டுமன்று; இங்கு வந்த ஸ்மிருதி நூலாரும் புராண தரும சாஸ்திர விரிவுரையாளர்களும், இத்தமிழ் நாட்டில் சாதிக் கட்டுப்பாட்டிற்கும், 'தீட்டு' களுக்கும், மென்மேலும் விதிமுறைகளைப் பெருகச் செய்தனர்.

'அரசர், அந்தணர், வணிகர், வேளாளர்' என்னும் நால்வகைக் குலங்களே இருந்த தமிழகத்தில், மேலே கூறிய வந்தேறிகளால், நாற்பது சாதிகளாகி, நானூறு சாதிகள் என்று சொல்லுமளவுக்குக் கிளைத்தன. இதனால், தமிழர்களே சாதிச் சண்டைகளிட்டும், தம் தாய் மொழியைப் பேணாதொழிந்தும், தொன்மைச் சமயமாகிய சைவத்தை நெகிழ விட்டும் வாழ்ந்து வந்தனர்!

**சம்பந்தர் திரு அவதாரம்**

இத்தகு சூழ்நிலையில்தான் திருஞானசம்பந்தர், கி.பி. ஏழாம் நூற்றாண்டில் திருஅவதாரம் செய்தார். ''வேதநெறி தழைத்தோங்க; மிகு சைவத்துறை விளங்க; பூத பரம்பரை பொலிய; பர சமயத் தருக்கு ஒழிய; தொண்டர் மனம் களி சிறப்ப; தூய திருநீற்று நெறி எண்டிசையும் தனிநடப்ப; வண்டமிழ் செய் தவம் நிரம்ப; மாதவத்தோர் செயல் வாய்ப்ப; திசையனைத்தின் பெருமை எலாம் தென்திசையே வென்றேற; அசைவில் செழுந்தமிழ் வழக்கே அயல் வழக்கின் துறை வெல்ல; இசை முழுதும் மெய்யறிவும் இடங்கொள்ளும் நிலை பெருக; ஆளுடைய திருத்தோணி அமர்ந்த பிரான் அருள் பெருக; புல்லறிவின் அமண் முதலாம் பரசமயப் பவம் பெருக்கும் புரைநெறிகள் பாழ்பட'' - 'சிவம்பெருக்கும் பிள்ளையார் திருவவதாரம் செய்தார்!' என்பது சேக்கிழார் வாக்கு.

'இறைவன்தான் **அவதாரம்** எடுத்தான்' என்று சொல்வது மரபு, ''திருமால், **பத்து அவதாரங்கள்** (தசாவதாரம்) எடுத்தான்'' எனும் கூற்றுப் பலரும் அறிந்ததே. சேக்கிழார், 'சம்பந்தர் **திருவவதாரம்** செய்தார்' என்று கூறுவது எண்ணத்தக்கது.

இத்தகு மேம்பட்ட திருஞானசம்பந்தர், செய்த புரட்சிகள் பலவாகும். அவற்றுள் ஒன்று 'சமூகத் தொண்டு' எனப்படும் 'சமுதாயப் புரட்சி!'

பெரியபுராணத்தில் பேசப்படும் தனி அடியார்கள் அறுபத்து மூன்று பேர். இவர்கள் பல்வேறு சாதியினர்; பல்வேறு தொழிலினர். முழுமுதற் பரம்பொருளாகிய சிவபெருமானை வழிபடுவோர்

எக்குலத்தவரேயாயினும், எச்சாதியினரே யாயினும் அவரனைவரும் ஒன்றே என்பது சைவ சமயத்தின் கொள்கை. இதனால்தான், 'ஆதி சைவ அந்தணர் குலத்' தைச் சார்ந்த சுந்தரரும்; 'தீண்டடத்தகாதோர்' என்று அக்காலத்தில் ஒதுக்கப்பட்ட 'திருநாளைப் போவாரு'ம் (நந்தனார்) அறுபத்து மூவர் பட்டியலில் இடம்பெற்றுப் போற்றப்படுவாராயினர்! சைவத் திருக்கோயில்களில் இத்தகு நாயன்மார்களின் திருவுருவங்களைச் சாதி வேறுபாடு கருதாமல் அனைவரும் வணங்கி வருதல் கண்கூடு!

இவ் அறுபத்து மூவரில், 'திருநீலகண்ட யாழ்ப்பாணரு'ம் ஒருவர். இவர், சம்பந்தரது காலத்தில் வாழ்ந்தவர். அக்காலத்தில், பாணர்களும், தீண்டத் தகாதோர் பட்டியலில் இடம்பெற்றவர்களே! சம்பந்தரது பெருமையைக் கேள்வியுற்று, அவரைக் காணும் பொருட்டுத் திருநீலகண்ட யாழ்ப்பாணர், தம் துணைவியார் மதங்கசூளாமணி யாருடன், சீகாழிப் பதிக்கு வந்தார். அவர்களின் வருகையை அறிந்த சம்பந்தர், ''யாமே உயர் குலத்தவர்; இறைவன் திருவருள் பெற்றுள்ளோம்; வருபவர்கள், பாணர் குலத்தினர்தாமே!'' என்று கிஞ்சித்தும் எண்ணாமல், தாமாக வலியச் சென்று, அவர்களை எதிர்கொண்டு அழைத்தார். அவர்கள் இருவரும் சம்பந்தரது திருவடியில் வீழ்ந்து வணங்கினர். அப்போது சம்பந்தர், ''**ஐயரே!** நீவீர் இவண் வந்தமையால், நாங்கள் உறுதிப் பொருளைப் பெற்றவர்களானோம்!'' என்று திருவாய் மலர்ந்தார். இதனைச் சேக்கிழார்,

**''அளவிலா மகிழ்ச்சியினார் தமைநோக்கி, 'ஐயர்நீர்**
**உளமகிழ இங்கு அணைந்த உறுதியுடையோம்!''**

என்று சம்பந்தர் கூறியதாகச் சுட்டுவர்.

பாணரை நோக்கி 'ஐயரே' என விளித்தது ஒரு புரட்சி! இவ்வாறு சம்பந்தர் கூறுதற்கும் ஒரு காரணம் உண்டு. சீகாழி வேதியர்கள், சாதியிலே உயர்ந்தவர் - தாழ்ந்தவர் எனும் வேறுபாடு கருதுபவர்கள்; சம்பந்தரோ முற்றிலும் மாறுபட்டவர். தாம் 'ஐயரே' என்று கூறியதால், ஏனைய வேதியர்களும், பாணரை இழிவாகக் கருதாமல் உயர்வாக எண்ணுவர் என்பது கருத்து.

யாழ்ப்பாணரது வேண்டுகோளுக்கிணங்கச் சம்பந்தர், தாம் செல்லும் இடமெல்லாம் தம்முடனேயே அவரையும் அவர்தம் துணைவியாரையும் அழைத்துச் சென்றார்; சம்பந்தர் பாடும் தேவாரத் திருப்பதிகங்களுக்கு ஏற்ப, யாழ் மீட்டி இசைத்து மகிழ்ந்தார் பாணர். இதைவிட ஓர் அருஞ்செயலையும் செய்து காட்டினார் சம்பந்தர்.

வேதியர்கள் மிகுதியாக வாழ்ந்த ஊர் - சாத்தமங்கலம். அவ்வூரில், 'முத்தீ' வளர்த்து, நாளும் வேள்வி செய்வதும், சிவபெருமானையும்

சிவனடியார்களையும் வழிபாடு செய்வதும் ஆகிய இவற்றைத் தம் கடமையாகக் கொண்டு ஒழுகி வந்தவர் 'திருநீல நக்கர்'. சம்பந்தர், அவ்வூருக்கு வந்த போது, அவரை வணங்கித் தமது இல்லத்துக்கு வருமாறு வேண்டினார். அவ்வாறே சம்பந்தரும், அவருடன் திருநீலகண்ட யாழ்ப்பாணர், மதங்கசூளாமணியார், சிவனடியார்கள் எனப் பலரும் சென்றனர்.

சம்பந்தருடன் வரும் அடியார் கூட்டம் முழுவதுமே - ஆடவர்களின் ஈட்டம். ஆனால் திருநீலகண்ட யாழ்ப்பாணர் ஒருவர் மட்டுமே, தம் துணைவியாருடன் வருபவர். இதனால் சம்பந்தப் பெருமானுக்கு ஓர் இன்றியமையாத கடமை ஏற்பட்டது. செல்லும் இடமெல்லாம், அவர்கள் இருவரும் தங்குதற்கு இடம் அமைத்துக் கொடுக்க வேண்டும். இப்போது திருநீலநக்கரது வீட்டில் தங்குகை; அடியவர் கூட்டம் உணவு உண்டு மகிழ்ந்தது. திருநீலநக்கரைச் சம்பந்தர் தனியே அழைத்துத், ''திருநீலகண்ட யாழ்ப்பாணரும் அவர்தம் துணைவியாரும் தங்குதற்கு ஓர் இடம் அமைத்துத் தருக'' என்று கூறினார்.

திருநீலநக்கர், தாம் வேதியராகிய உயர்ந்த சாதியாயிற்றே; பாணரோ நம்மால் தீண்டப்படாத தாழ் குலத்தவராயிற்றே; எவ்வாறு இடம் கொடுப்பது; அப்படியே கொடுத்தாலும், தம் இனத்தார் என்ன கூறுவர்? என்ற சிந்தனை சிறிதுமின்றிச் சம்பந்தரது எண்ணத்தை நிறைவேற்றுபவராய், 'முத்தீ' வளர்க்கும் வேதிகையின் அருகே, அவ்விருவரும் தங்க இடமளித்தார். அவர்கள் தங்கியிருந்தபோது, அந்த ஓம குண்டத்திலிருந்த செந்தீ, வலமாகச் சுழன்று, முன்னைவிட ஒருபடி உயர்வாக ஒளிவீசியது!

இதனைச் 'சம்பந்தரின் சமூகத் தொண்டு' என்று கூறுவதைவிடச் 'சமூகப்புரட்சி' எனலே சாலும்.

சம்பந்தரின் சமூகத் தொண்டுகளுக்கு மேலும் சில சான்றுகள் காட்டலாம்:

'திருப்பாச்சிலாச்சிராமம்' என்ற நகருக்குச் சம்பந்தர் எழுந்தருளிய காலை, ஆங்கு ஓர் நிகழ்ச்சி. மழ நாட்டின் அரசன் 'கொல்லி மழவன்'; அவனுடைய மகள் - கன்னிப்பெண்; 'முயலகன்' என்ற கொடிய நோயினால் படாதபாடுபட்டுக் கொண்டிருந்தாள். கொல்லி மழவன், சம்பந்தரது திருவடியில் வீழ்ந்து வணங்கி முறையிடச், சம்பந்தர் அருள் உளம் கொண்டு 'துணிவளர் திங்கள்' எனும் திருப்பதிகம் பாடி, அவளின் நோயைக் குணப்படுத்தினார்.

அவ்வாறே திருச்செங்குன்றூருக்குச் சம்பந்தர் சென்ற போது, அவருடன் வந்த சிவனடியார்கள் உட்பட ஊர் மக்கள் அனைவருமே 'நளிர் சுரத்' தால் அவதியுற்றனர். மனம்பொறாத சம்பந்தர் 'அவ்வினைக்கு இவ்வினையாம்' எனும் பதிகம் பாடினார்; சிவனடியார்களுக்கு மட்டு மன்றி, அவ்வூர் மக்கள் அனைவர்க்குமே 'நளிர் சுரம்' நீங்கியது.

'வைப்பூர்' என்ற ஊரில் வாழ்ந்த 'தாமன்' என்ற வணிகனுக்கு ஏழு பெண்கள்; அவன், தன் உறவினனான மருமகனுக்குத் தன் மகளைத் திருமணம் செய்து கொடுப்பதாகக் கூறியவன், பணத்தாசை யால் ஒவ்வொரு மகளையும் வேறொருவனுக்கு மணமுடித்துக் கொடுத்தான். மனத்துயர் கொண்ட அம்மருமகனின் நிலைக்கு இரங்கிய, கடைசி ஏழாவது மகள், அவனுடன் யாரிடமும் சொல்லாமல் 'உடன் போக்கு' மேற்கொண்டாள். செல்லும் வழியில் 'திருமருகல்' என்ற ஊரில், இரவில், திருக்கோயிலையடுத்த மடத்தில் தங்கியிருந்தனர். அப்போது, அவனை அரவு ஒன்று தீண்ட, அவன் மாண்டு போனான். திருமணம் ஆகாத நிலையில், அவனைத் தீண்டுதல் தகாது என்ற உயர் பண்பினால் தனியே அழுது புலம்பினாள் அக்கன்னிப் பெண்ணாள்; இறைவனை நோக்கி 'அருள் செய்யாயோ?' என மன்றாடிக் கொண்டிருந்தாள் அவளின் அழுகுரல் கேட்டார், 'திருமருகல்' ஊருக்கு எழுந்தருளிய சம்பந்தர். அவரது உள்ளம் இரங்கியது; உண்மை அறிந்தார். 'சடையாயெனுமால்' என்ற பதிகம் பாடினார். இறைவனருளால், நஞ்சு நீங்கி உயிர் பெற்றெழுந்தான் அவ்வணிக இளைஞன். சம்பந்தப் பெருமான் அம்மட்டோடு நின்றாரிலர்; அவ்விருவர்க்கும் திருமணமும் செய்வித்து அவர்கள் மனமகிழ்வோடு வாழ வழிவகுத்தார்.

கடல் வாணிபத்தில் பெரும் பொருளீட்டியவர் 'சிவநேசன்' என்பவர்; மயிலையில் வாழ்ந்தவர். அவருக்குப் 'பூம்பாவை' என்ற மகள்! சம்பந்தரின் அற்புதச் செயல்களைக் கேள்வியுற்ற சிவநேசர், ''என் மகளையும், என் செல்வத்தையும் என்னையுங்கூட, சம்பந்தப் பெருமானுக்கே அர்ப்பணித்து விட்டேன்'' என்ற முடிவில் இருந்தார். எதிர்பாராத விதமாகப் பூம்பாவை, அரவு தீண்டி மாண்டு போனாள்; சிவநேசர், அவளது உடலை எரித்து, அந்தச் சாம்பலையும் எலும்பு களையும் ஒரு புதுக்குடத்தில் பாதுகாப்பாக வைத்திருந்தார். சம்பந்தர் திருமயிலை வந்தபோது, உண்மை உணர்ந்தார்; 'மட்டிட்ட புன்னையங் கானல்' என்ற பதிகம் பாடினார்; எலும்புக்குடம் உடைந்தது; பூம்பாவை உயிர்பெற்றெழுந்தாள். சிவநேசர், தம் மகளைத் திருமணம் செய்து கொள்ளுமாறு சம்பந்தரை வேண்ட, 'இவள் எனக்கு மகள் ஆவாள்' என்ற பொருள்படக் கூறிமறுத்து விட்டார்.

சம்பந்தரும் அப்பரும் சேர்ந்து திருத்தல வழிபாடு செய்தலும் உண்டு. ஒருமுறை, இவர்கள், திருவீழிமிழலையில் தங்கியிருந்தனர். அப்போது நாடு முழுதும் பெரும் பஞ்சம். இதனால் சிவனடியார்களும் துன்புற்றதில் வியப்பேதுமில்லை. இறைவன் இவர்களது கனவில் தோன்றி, ''நீவிர், நும் பொருட்டுத் துன்புறமாட்டீர்! ஆனால் அடியார்கள் பொருட்டுத் துன்புறுவீரன்றோ? அவர்களது பசி போக்க யாம் பொருள் தருகின்றோம்'' என்று கூறி, நாள்தோறும் இவ்விருவர்க்கும் 'படிக்காசு' வழங்கினான். இக்காசுகள் கொண்டு உணவு ஆக்கச் செய்தனர். ''சிவனடியார்கள் மட்டுமன்றிப் **பசியால் வாடும் அனைவருமே வந்து, நமது பசியைப் போக்குக!** என்று, **காலை, மாலை என்ற இரண்டு நேரமும்,** பறை **அறைவித்து,** அனைவர்க்கும் உணவு வழங்கினர் என்றால், இவர்களின் சமுதாயத் தொண்டு எத்தகைய உயர்வினது என்பதை அறிந்து கொள்ள முடியும்.

சம்பந்தர் ஆற்றிய சமூகத் தொண்டுகளில் எல்லாம் மேலானதாகக் கருதத்தக்கது. பாண்டி நாட்டில், சமணர்களை வென்று, தமிழ் மக்களைச் சிவநெறியாகிய சைவ நெறிக்கு மீண்டும் திருப்பியதாகும்.

கி.பி. ஏழாம் நூற்றாண்டில் இத்தகைய சமூகத் தொண்டுகளை ஆற்றியமையால் தான், இத்தமிழகத்தில், சைவமும் தமிழும் புத்துயிர் பெற்றன எனலாம்.

> **''தமிழ் இனம் முழுவதும் யாராவது ஒருவருக்குக் கடமைப்பட்டிருந்தது என்றால், அந்த ஒருவர் ஞானசம்பந்தப் பிள்ளையாரே என்பதை உணர்ந்த சேக்கிழார் 63+9 பேரைப் பாடவேண்டிய கடப்பாடுடைய தம் நூலில் ஒருவருக்கு மட்டும், மூன்றில் ஒருபங்கு வழங்கித் தம் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறார்!'' (பெரியபுராணம் - ஓர் ஆய்வு, பக்.137, 138)**

என்று அ.ச. ஞானசம்பந்தன் கூறுவது மிக மிகப் பொருத்தம் எனலாம்.

# 33. மூவர் தேவாரத்தில் முதற்பதிகங்கள்

ச. சிவகாமி, சென்னை.

''மூவாத பேரன்பின் மூவர் முதலிகளும் தேவாரம் செய்த திருப் பாட்டும்'' என ஏகாம்பர நாதருலாவில் இரட்டையரால் போற்றப்படும் பெற்றியது மூவர் தேவாரம். சைவ இலக்கிய வரலாற்றில் 'மூவர்' என ஒன்றாகப் பிணைத்து வழங்கப்படும் சிறப்புடையோர் திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆவர். இவர்கட்கு முன்பும் (காரைக்காலம்மையார்) பின்பும் எண்ணற்ற பதிகங்கள் தமிழை வளப்படுத்தியுள்ளன. எனினும் இவர்தம் பதிகங்கள் மட்டுமே 'தேவாரம்' என ஒருங்கே புகழப்படுகின்றன. பன்னிரு திருமுறை களுள்ளும் முதலேழு திருமுறைகளாக இடம்பிடித்துள்ளன. இறைவனின் திருவருட் துணையால் பாடலிசைக்கத் தொடங்கிய வராதலின் அம்முதற் பதிகங்களிடையே ஒப்பு நோக்குதல் மூவரின் பெருமையை ஒருங்கே உணர்தற்கு இடமாகும் என்ற உணர்வில் இக்கட்டுரை அமைந்துள்ளது.

இறைவனின் திருவருள் மூன்று விதமாக வெளிப்படுவதும் சிந்தனைக்குரியது. பால்மணம் மாறா பிள்ளைமை மனத்தினராக ஒருவர் அமையும் பொழுது இறைவன் தானே முன்வந்து அருள்மழை பொழிகிறான்; மனம் இன்பத்தில் மூழ்கிக் கடமையை மறக்கும் பொழுது இறைவன் அறிவுறுத்துகிறான்; தவறிழைக்கும் பொழுது அதற்குரிய தண்டனை வழங்கிப் பின் அருள் தருகிறான் என்பன குறிப்பாக உணர்த்தப்படுவதாகக் கருதலாம்.

அறியாமை, இன்பத்தில் திளைத்தல், நோய் என்பன இறைவனை அடைதற்குரிய தடைகற்கள்; பிள்ளைமை, இளமை, முதுமை என்பன இவற்றின் குறியீடுகள். அறியாமை நீக்க ஞானப்பால் வழங்கப்படுகிறது; தவறான பாதை சான்றோரால் சீர் செய்யப்படுகிறது; நோய்த்துன்பம் இறைவனிடம் அடைக்கலமாவதால் ஒழிகிறது என்பன இவை புலப்படுத்தும் உண்மைகள் எனவும் கொள்ளலாம். இறைவன் தானே அடியவரை நாடிவரலும் உண்டு (சம்பந்தர், சுந்தரர்); அடியவர் அழைக்க வருதலும் உண்டு (நாவுக்கரசர்) அறியாமை அகற்றி, உலகியலுள் மூழ்கிவிடாது இறைவனிடம் அடைக்கலமாவதே மானிடர்

கடமை என்பதனை இம்மூவரும் இணைந்து அறிவிக்கின்றனர் எனலாம். மூவரின் முதற்பதிகங்களின் பின்புலம் இவ்வெண்ணத் திற்கு அடிப்படையாகும்.

**பதிகங்களின் பொதுவியல்பு**

சம்பந்தரின் பதிகம் பதினொரு பாடல்களுடன் அமைய மற்றவர் பதிகங்கள் பெயர்க்கேற்ப பத்துடன் நிறைவடைந்துள்ளன. அவை யிரண்டும் முன்னிலைப் பரவலாக அமைய சம்பந்தர் பதிகம் தலைவி கூற்றாக, அகப்பாடலாகப் பொருந்தியுள்ளது. மூன்று வயது குழந்தை சம்பந்தர் இறைவனோடு ஒன்றிய நிலையில் பாடத் தொடங்கி யிருப்பது நோக்கத்தக்கது. இறைவனே அடியெடுத்துக் கொடுக்க பாடும் பணியைச் சுந்தரர் தொடங்குவது அவரது தனிச்சிறப்பாகிறது. நோயின் கொடுமையில் துடிக்கும் நாவுக்கரசர், அதனின்றும் தம்மை விடுவிக்க வேண்டும் விண்ணப்பத்தைத் தம் பதிகமாக்கியுள்ளார்.

**பெருநெறிய பிரமாபுரம் மேவிய பெம்மானிவன் தன்னை**
**ஒரு நெறிய மனம் வைத்து உணர் ஞானசம்பந்தன் உரை செய்த**
**திருநெறிய தமிழ் வல்லவர் தொல்வினை தீர்தல் எளிதாமே**

எனச் சம்பந்தர் (11) மட்டுமே தம் பதிகப் பயன் கூறியுள்ளார். இதுவே இவரது பதிக எண்ணிக்கை கூடியதற்குக் காரணமாகும். தமது பாடல்கள் இறைவனை அடைவதற்குரிய வழிகாட்டி என மதிப்பிடும் சம்பந்தர் 'திரு நெறிய தமிழ்' என உரைத்துத் தம் மொழிப் பற்றையும் வலியுறுத்தியுள்ளார். மருணீக்கியாரின் முறையீட்டில் மனங் குளிர்ந்த இறைவன் அவருக்கு 'நாவுக்கரசர்' எனப் பட்டமளித்ததும் இங்குக் குறிக்கத்தக்கது.

'என் உள்ளங்கவர் கள்வன் பிரமாபுரம் மேவிய பெம்மான்' எனச் சம்பந்தர் உரைக்க, 'உனக்கு ஆளாய் இனி அல்லேன் எனலாமே' எனத் தான் இறைவனின் அடிமை எனச் சுந்தரர் அறிவிக்கிறார். 'உடலுள்ளுறு சூலை தவிர்த்தருள்வாய்' என நாவுக்கரசர் வேண்டியமை கிறார். இவையே இவர்தம் பதிகங்களின் பொதுப்பண்பாக ஒளிர் கின்றன.

**முதற்சொல்**

'தோடுடைய செவியன்' என ஞானப்பாலுண்ட குழந்தை இறை வருணனையைத் தன் முதற்சொல்லாகத் தருகிறது. இறைவனை நேரில் கண்ட காட்சியில் அவன் எழில் தோற்றத்தில் தம்மை இழந்ததை இதனால் சம்பந்தர் முன்னுணர்த்துகிறார். அணி அலங்காரம் சுட்டித் தம் பிள்ளைமை நிலையைப் பிரதிபலிக்கிறார்.

'கூற்றாயினவாறு விலக்ககலீர்' எனக் கதறுகிறார் நாவுக்கரசர். நோயின் கடுமையை, தம் உடற்றுன்பத்தைத் தம்மால் தாங்கிக் கொள்ள இயலாமையை இதில் புலப்படுத்தியுள்ளார். உடல் நோய் சுட்டித் தம் உளநோய்க்கும் மருந்து வேண்டுவதனை இங்குக் குறிப்பாக உணர்த்துகிறார் எனவும் கொள்ளலாம்.

'பித்தா பிறைசூடிப் பெருமானே அருளாளா' என இறைவனை அழைக்கிறார் சுந்தரர். தன்னை ஏசிடினும் அடியவரைக் காக்கும் அருளாளனாகிய பெரியவனே இறைவன் என்பதை உலகுக்குப் புலப்படுத்துவதாக அவர் மொழி அமைகிறது. இறைவன் யார் என்பதைச் சம்பந்தர் காட்ட, அவன் எத்தகையவன் எனச் சுந்தரர் அறிவிக்க, அவனிடம் அடைக்கலமாதலை நாவுக்கரசர் வேண்டுகிறார். இனிப் பொருட் பகுப்பாய்வு நோக்கில் இவர்தம் முதற்பதிகங்களை ஒப்பிடலாம்.

**இறைவிளி**

சம்பந்தர் பதிகம் தலைவி கூற்றாதலின் இறைவனை விளித்தற்கு, கூவி அழைப்பதற்கு இடனில்லை. சுந்தரரும் நாவுக்கரசரும் முன்னிலைப் பரவலாகத் தம் பதிகங்களை அமைப்பதால் இறைவனை அழைத்தல் சிறப்புறுகிறது. தம்மை இறைவனே நேரில் வந்து தடுத்தாட் கொண்டமையால் பெற்ற மகிழ்ச்சிப் பெருக்கில் இறைவனைப் பலவிதமாக அழைத்துப் பரவுவதைச் சுந்தரரில் பார்க்கலாம். பித்தா, அருளாளா, ஆயா, அன்னே, மன்னே, ஆதீ, அண்ணா, அடிகேள், பெருமானே என ஒற்றைச் சொல்லில் அழைப்பது மிகுதியாயினும் பெற்றம் ஊர்தீ, செக்கர் வான்நீர் ஏற்றாய் என வருணித்தழைப்பதும் காணப்படுகிறது. எப்படி அழைப்பினும் மன நிறைவுறாத நிலையில் 'மழுவாள் வலன் ஏந்தீ, மறை ஓதீ, மங்கைபங்கா, அழகா' (சுந். 9) எனப் பலவாறு அடுக்கி மொழிதல் குறிக்கத்தக்கது.

ஏற்றாய், அம்மானே, அடிகேள் என நாவுக்கரசரும் ஒற்றைச் சொல்லால் அழைத்திடினும், 'பணிந்தாரன பாவங்கள் பாற்ற வல்லீர், படுவெண்டலையிற் பலி கொண்டுழல்வீர்...பிணித்தார் பொடி கொண்டு மெய் பூசவல்லீர், பெற்றம் ஏற்றுகந்தீர், சுற்றம் வெண்டலை கொண்டு அணிந்தீர் (நா.3) என உருவ வருணனை மற்றும் அருட் செயல்களுடன் இணைத்தே அழைத்தல் இவரின் தனிச்சிறப்பாகிறது. நோய் தரும் வேதனை; அதனைத் தீர்க்கும் மருத்துவன் இறைவனே என உள்ளத்தால் உணர்ந்த நிலையின் வெளிப்பாடாக இது பொருந்துகிறது.

## இறை வருணனை

சம்பந்தர் பாடல்களில் தனியிடம் கொள்வது இறை வருணனை யாகும். தம் உள்ளம் கவர்ந்தவர் யார்? ஏன் என்பனவற்றை வெளிப்படுத்த இது தேவையாகிறது, விடையினைத் தன் ஊர்தியாகக் கொண்ட சிவன் தோடுடைய செவியன், கங்கை நீர் வழியும் சடையன், அதில் பிறை சூடியவன், கொன்றைமலர் மாலையுடன் ஆமை ஓடு, பன்றியின் கொம்பு, பாம்பு முதலானவற்றையும் தன் மார்பில் சூடியவன், தன் உடம்பின் ஒரு பாதியைப் பெண்ணுக்கு அளித்தவன், மழுவினைக் கையில் ஏந்தியவன், சுடுகாட்டில் உள்ள சுடலைப் பொடியைத் தன் மேனி முழுவதும் பூசிக் கொள்பவன், ஆடலிலும் வல்லவன் என்பனவாக இவர்தம் வருணனைகள் அமைகின்றன.

ஓரளவு முழுமை பெற்ற சிவனுருவினைச் சம்பந்தர் அளிக்க, நாவுக்கரசர் 'சங்க வெண்குழைக் காதுடை எம் பெருமான்' (8) எனவும் சுந்தரர் 'தண்ணார் மதி சூடி தழல் போலும் திருமேனி' (6) எனவும் அருகியே இதனைக் கையாண்டுள்ளனர். சிவனின் தோற்றம் மற்றிருவரை விட, குறிப்பாகச் சுந்தரரைவிட சம்பந்தரையே மிகுதியும் ஈர்த்துள்ளது எனலாம். இவ்விருவரும் முதற்கண் இறைவனைக் கண்ட பின்பே பாடத் தொடங்கினர் என்பதனையும் இணைத்துப் பார்க்க இக்கருத்து எழுந்துள்ளது.

## இறையியல்பு

இறைவனுடைய தனித்தன்மைகளை, அவனது போற்றற்குரிய பெரும் குணங்களை 'எடுத்துரைப்பது இறையியல்பு ஆகிறது. இதில் சுந்தரர் பெருவிருப்பு காட்டுகிறார். இறைவன் உலக உயிர்கள் அனைத்திலும் நிறைந்திருப்பவன்; எங்கும் எதிலும் காணக் கூடியவன் என்பதனை 'ஊனாய் உயிர் ஆனாய் உடல் ஆனாய் உலகு ஆனாய் வானாய் நிலன் ஆனாய் கடல் ஆனாய் மலை ஆனாய்' (சுந். 7) எனப் பேசுகிறார். தம்மைப் பணிந்தவரின் பாவங்களைத் தீர்த்து வைப்பவன் இறைவன் எனும் நாவுக்கரசர் (3) 'தன்னை அடைந்தார் வினை தீர்ப்பதன்றோ தலையாயவர் தம் கடன் ஆவது தான்' (4) என வினா வடிவிலும் அதனை வலியுறுத்துகிறார். இதனையே சுந்தரரும் 'தொழுவார் அவர் துயர் ஆயின தீர்த்தல் உன தொழிலே' (8) என மொழிந்துள்ளார்.

'மதயானையின் தோல்லை உடையாகப் போர்த்திக் கொண்டமை யால் பித்தன் போலும்' எனத் தம் ஐயத்தை மட்டுமே உருவ வருணனை கொண்டு சம்பந்தர் எழுப்புகிறார். இதுவே பின்னாளில் சுந்தரரை, 'பித்தா' எனப் பேசவைத்தது போலும். இறைவன் காட்சி

தந்த வியப்பில் தம்மை இழந்த நிலையில் சம்பந்தருக்கு அவரது உருவ வருணனையிலேயே உளம் பதிந்து மேற்செல முடியாத தன்மையை இது காட்டுவதாகவும் கொள்ளலாம். அவரது மூன்று வயது குழந்தைப் பருவமும் இதற்கு அடிப்படையாகலாம்.

**தல வருணனை**

இறைவனைத் தலைவனாகக் கொண்டு எழும் பக்தியிலக்கியங்கள் அவன் எழுந்தருளியிருக்கும் தலத்தினையும் சிறப்பிப்பதை மரபாகக் கொண்டுள்ளன. அவ்வகையில் தேவார மூவரும் தமக்கு அருள் கிட்டிய தலங்களைத் தம் பதிகத்துள் போற்றியுள்ளனர். இதில் சம்பந்தர் மிகுந்த ஆர்வங்காட்டியுள்ளார். தமக்கு இறைவன் அருள் செய்த பீடுடைய இடம் பிரமாபுரம், உலகம் தோன்றிய நாள் முதல் உள்ளது; உலகில் உள்ள ஊர்களில் எல்லாம் முதன்மை வாய்ந்தது என்ற புகழுடையது (3), உலக முடிவில் கடல் கொள்ளினும் தான் தனித்து நிலைக்கும் பெருமையுடையது (5) எத்தனை ஊழிகள் தோன்றினும் அத்தனையிலும் சிறப்படையும் பெற்றியது (8) என இறைவனோடு இணைத்து அதற்கும் நிலைபேறு அளிக்கிறார். அழகிய சோலைகளும் குளிர் கானலும் சூழ்ந்த இயற்கையெழில் மிகுந்த இடமாகவும் காட்டி இது 'உலகோர் போற்றித் துதிக்கும் பெருநெறிய பிரமாபுரம்' (சம் 9, 11) எனப் பேசி மகிழ்கிறார். சம்பந்தரின் இத்தனி மகிழ்ச்சிக்குப் பிரமாபுரம் அவரது பிறந்த ஊராகிய சீர்காழி என்பது காரணமாகலாம்.

சுந்தரர் தமக்கு இறையருள் முதற்கண் அமைந்த வெண்ணெய் நல்லூரைச் சிறப்பிக்க அதனை வளப்படுத்தும் பெண்ணையாற்றையே முழுமையாகப் பயன் கொண்டுள்ளார், 'வேயார் பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூர் அருள் துறையுள்' (சுந். 2), 'காரூர் புனல் எய்திக் கரைகல்லித் திரைக்கையால் பாரூர் புகழ் எய்தித் திகழ் பன்மாமணி உந்திச் சீரூர் பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூர் அருள் துறையுள்' (சுந். 10) எனும் பகுதிகளைச் சான்றாக் கலாம். சம்பந்தர்க்குச் சீர்காழி பெருநெறிய பிரமாபுரம்' ஆனதுபோல் சுந்தரருக்குத் திருவெண்ணெய் நல்லூர் 'அருள்துறை' யாவதையும் அறிய முடிகிறது. பத்துப் பாடல்களிலும் இக்குறிப்பமைவது சுட்டத்தக்கது. தான் அருள் பெற்ற தலமாதலின் இங்ஙனம் கூறுகிறார்.

பதிகங்கள் பாடும் பொழுது இறைவனுடன் இணைத்து அவன் எழுந்தருளியுள்ள தலமும் போற்றுப்படல் வேண்டும் என்ற மரபுக்காக மட்டுமே நாவுக்கரசர் அதிகையைக் குறிப்பிடுவதாகத் தோன்றுகிறது. 'அதிகைக் கெடில வீரட்டானத்துறை அம்மானே' என்ற பொதுக்

குறிப்பே பதிகம் முழுவதும் காணப்படுகிறது. இறைவனுடைய அருள் வேண்டி இரங்கி நிற்றலே அவரது முதல் நோக்காதலின் இந்நிலை எனக் கொள்ளலாம்.

**புராணங்கள்**

இறைமையோடு புராணங்கள் இணைவது இயல்பாதலின் மூவர் பதிகங்களிலும் இவற்றைக் காணலாம். இதிலும் பாலறாவாயர் சம்பந்தர் தம் ஈடுபாட்டை வெளிப்படுத்தியுள்ளார்.

இறைவன் முப்புரம் எரித்ததைச் சம்பந்தர் (சம். 3), சுந்தரர் (சுந். 6,8) மட்டுமே மொழிகின்றனர். இருமுறை இதனை நவிலும் சுந்தரர் இத்தொன்மம மட்டுமே சுட்டியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. நாவுக்கரசர் இறைவனின் இவ்வீரச்செயல் நிகழ்ந்தவிடம் அதிகையாகக் கருதப்படுதலின் இதனைத் தனித்துரைக்கவில்லை என எண்ணலாம். இறைவன் மண்டையோட்டில் பலியேற்றதை மூன்று பாடல்களில் (2, 4, 10) சம்பந்தர் பாடியிருப்பதும் கருதத்தக்கது. தன்னருட் பசி தீர்த்த இறைவன் பிச்சையேற்றல் அவருக்கு வியப்பானதாக அமைந்திருக்கலாம். எனவே தம்முள்ளம் கவர்ந்த அக்கதையை ஒரே பதிகத்துள் மும்முறை காட்டியுள்ளார். இப்புராணத்தை நாவுக்கரசரும் (3) சுட்டியுள்ளார்.

இறைவன் யானையின் தோல் போர்த்தது (சம். 10, நா. 10), இராவணன் கயிலையைத் தூக்க முனைந்து துன்புற்றது (சம். 8, நா. 10) என்பனவும் சம்பந்தர், நாவுக்கரசர் இருவராலும் போற்றப் பட்டுள்ளன. பிரமன் இறைவனை வணங்கியது (சம். 1), பிரமனும் திருமாலும் சிவனின் அடிமுடி தேடியது (சம். 9) என்பன சம்பந்தர் பேசும் பிற புராணச் செய்திகளாம். புறங்காட்டில் இறைவன் நடன மாடியதை நாவுக்கரசர் (10) பாடுகிறார். இவர் ஒரே பாடலில் (10) பல புராணச் செய்திகளை இணைத்திருப்பது அறியத்தக்கது.

சம்பந்தரது பருவம் கதை கேட்பதில் பெருவிருப்புடைய பருவ மாதலின் தம் பதிகத்துள் அதற்கு மிகுந்த சிறப்பளித்துள்ளார் எனக்கருத இடனுண்டு.

**தற்குறிப்பு**

பக்திப் பொருண்மையின் பொருட் கூறுகளுள் இதுவும் ஒன்றாகும். பக்திப் பாவலர்கள் தம்மைப் பற்றியும் தமக்கு இறைவன் அருளியது பற்றியும் இறைவனிடம் தாம் வேண்டுவது பற்றியும் தம் படைப்பு களில் வெளிப்படுத்துகின்றனர். இறை பக்தியை உலகத்தவரிடையே பரப்புதலும் அவர்தம் நோக்கமாதலின் அதற்குரியதோர் வழியாக இவற்றைக் கையாளுகின்றனர்.

'என் உள்ளங் கவர் கள்வன்' என்ற ஒரே தொடரில் சம்பந்தர் தம்மை பற்றிய குறிப்பினை நிறைவு செய்கிறார். தாம் இறைவனுக்கு ஆட்பட்டவர், இறைவனருள் பெற்றவர் என்பன இதில் பொதிந் துள்ளன. இதற்கு மேல் இங்கு இடம் பெறாமைக்குக் காரணம் அது அகப்பொருள் கொண்டதும் அவரது பிள்ளைமை நிலையும் எனத் துணியலாம்.

நோயின் கொடுமையால் துன்புறும் நாவுக்கரசரின் முதற்பதிகம் முழுவதும் தன்னிரக்கமாக அமைகிறது. இத்துன்பத்திற்குக் காரண மாகும் கொடுமை பல செய்தனவற்றை நான் அறியேன் (1), நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன் நினையாது ஒரு போதும் இருந்தறியேன் (2) சலம் பூவொடு தூபம் மறந்தறியேன் தமிழோடு இசைபாடல் மறந்தறியேன் நலம் தீங்கிலும் உன்னை மறந்தறியேன் (6) எனப் பலவாறாகத் தாம் மனம் மாறி இறைவனிடம் சரண் புகுந்ததைத் தெளிவாக்குகிறார். தம் அறியாமையால் செய்த பிழை உணர்ந்ததாக அலறுகிறார் (7, 8) தம்மை நோய் எப்படித் தாக்கித் துன்புறுத்துகிறது என்பதனை இப்பதிகத்தின் அனைத்துப் பாடல்களிலும் சுட்டி இறையருள் வேண்டி நிற்கிறார். 'வயிற்றோடு துடக்கி முடக்கியிட நஞ்சாகி வந்து என்னை நலிவதனை' (2), வேர்த்தும் புரண்டும் விழுந்தும் எழுந்தால் என் வேதனை (10) எனத் தம் நோவினை அவர் உணர்த்துவது கல் நெஞ்சையும் கரைக்கும் பான்மையது. எனவே தம் நோய் தீர்த்தலையே விண்ணப்பமாக்கி இப்பதிகம் அமைத்துள்ளமையால் சம்பந்தரிடமிருந்து முற்றிலும் மாறுபட்ட தன்மையை இவண் காண்கிறோம். அடியார் தம் வேதனையை, இறைவன் தன் அன்பின் மிகையால் களைவான் என்பதற்குத் தாம் சான்றாகும் என அறிவிப்பதும் (9) கூறத்தக்கது.

வெண்ணெய் நல்லூரில் தாம் இறையருள் பெற்றதை 'பெறலாகா அருள் பெற்றேன்' எனச் செம்மாந்து உரைக்கிறார் சுந்தரர். நாயேன் (2), பல நாளும் போய்த் திரிந்து எய்த்தேன் (2) அறிவிலி (5) பொய்யே உரைப்பேன் (4) என்றெல்லாம் தம்மை இழித்து மொழிந் திடினும், ஆரூரன் எம்பெருமாற்குத் தாம் இனி அடிமை என்பதைப் பதிகத்தின் ஒவ்வொரு பாடலிலும் பதிய வைத்துள்ளார். தம்மையும் ஒரு பொருட்டாக ஏற்றுக் கொண்டு (4), பாதம் பணிவார்கள் பெறும் பண்டமாகிய பிறவாப் பேரின்பம் அது தருவாய் (5) என்பது சுந்தரரின் வேண்டுதலாகிறது.

இறையருள் பெற்று உய்ந்தவர் நிலைக்குச் சுந்தரரும், இறையருள் பெற ஏங்குபவர் தன்மைக்கு நாவுக்கரசரும் இங்குச் சான்றாகின்றனர்.

## இலக்கிய இன்பம்

ஒரு பொருள் பற்றி நான்கு வரிகளில் பத்துப்பாடல்களில் அமையும் பதிகங்களிலும் இலக்கிய நயம் தரும் இன்பம் நிறைந்திருப்பது பாராட்டத்தக்கதாம். அழகிய சொற்களும் சொற்றொடர்களும் இங்குக் குறிப்பிடத்தக்கனவாய் மூவரிடமும் அமைகின்றன. சம்பந்தர் என்றால் உள்ளங் கவர் கள்வன், உள்ளங்கவர் கள்வன் என்றால் சம்பந்தர் என்று கூறுமளவிற்குப் பெருமைபெற்ற தொடர் இம்முதற் பதிகத்திலேயே அமைந்து சிறக்கிறது. மதிலின் உயரத்தினை உணர்த்த 'விண் மகிழ்ந்த மதில்' (சம். 4), இறைவனின் சடையில் கங்கை வீற்றிருப்பதைச் 'சடை முயங்கு புனலன்' (சம். 7), ஒரு பக்கம் உமையை ஏற்றிருப்பதை ஒருமை பெண்மை உடையன் (சம். 5) என அமையும் சொற்றொடர்கள் கவிநயம் காட்டிக் களிக்கச் செய்கின்றன. மண்டையோடு வற்றலோடு (சம். 2), அரசன் அரையன் (சம். 8), ஆடுபவர் ஆடலர் (சம். 6), நீளுதல் நீணுதல் (சம். 9) எனும் சொல்லாட்சிகளும் அறிந்து இன்புறத்தக்கன. 'முற்றல் ஆமை இள நாகம்' (சம். 2), 'பெரியார் கழல் கையால் தொழுது ஏத்த' (சம். 2 ) என முரணின்பம் தருதலும் உண்டு. மற்றிருவரை நோக்கச் சம்பந்தரிடம் சொல்லாட்சித்திறன் இப்பதிகங்களின் அடிப்படையில் மிகுந்திருக்கக் காணலாம்.

நாவுக்கரசர் தம் நிலையை நீர்ச்சுழலில் சிக்கித் தவிப்பதற்கு ஒப்பிடுகிறார் (நா.8). இறைவன் திருமேனி பொன்போல் ஒளிர்வதாகக் கூறும் இவர் பாடல்களிலும் அனைவரிலும் பெரியோரைத் 'தலையாயவர்' (4), இறந்தவரைப் 'பிணிந்தார்' (3) உயர்வாகக் கருதுதலை 'உயர்ந்தேன்' (7), போன்றவர்கள் என்பதைப் போலிகள் (9), சுடுகாட்டினன் 'புறங்காடு' (10) என்பனவாகச் சுட்டும் சொல்லின்பம் காணப்படுகிறது. அஞ்சேலும் என்னீர் (2) என்பது போன்ற சொற் சுருக்கங்களும் சுட்டத்தக்கன. 'தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்' (6), 'நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன் நினையாது ஒருபோதும் இருந்தறியேன்' (2) எனும் தொடர்கள் இன்றும் இவரை நினைவூட்டுவனவாகும். தாம் இனி செய்யவிருப்பதை ஏற்கெனவே செய்து கொண்டிருப்பதாகப் பேசும் திறமும் எண்ணிச் சுவைத்தற் குரியது.

**சலம் பூ வொடு தூபம் மறந்தறியேன்**
**தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்**
**........நலம் தீங்கிலும் உன்னை மறந்தறியேன்**
**உன் நாமம் என் நாவில் மறந்தறியேன்** (6)

என்பதாக அது அமைகிறது.

சுந்தரரிடம் இத்தகையன குறைவாகவே தென்படுகின்றன. 'தண்ணார் மதிசூடி தழல் போலும் திருமேனி' என முரணின்பம்

இவரிடமும் உண்டு. இறைவனை 'அழகா' என விளித்தல் (9), மூப்படையாமையை மூவேன் (4), பிறவாப் பேரின்ப நிலையைப் பண்டம் (5) என்பனவாகச் சுட்டுதல் அறியத்தக்கது. இவர் தம்மைத்தாமே ஊர்ப் பெயரால் 'ஆரூரன்' (10) எனச் சுட்டிக் கொள்வதும் கூறத்தக்கது. இவரது முதற்சொல்லான 'பித்தா' இன்றுவரை இவரை இனங்காட்டு வதாக அமைதலும் உணர்த்தற்பாலது.

**தொகுப்புரை**

சம்பந்தர் பாடல்கள் இறை வருணனை முற்பகுதி தல வருணனை பிற்பகுதி என்ற இரண்டு கூறுகளில் நிறைவு பெறக் காண்கிறோம். பதிகந்தோறும் எட்டாம் பாடலில் இராவணனின் வலி அடக்கியது; ஒன்பதாம் பாடலில் பிரமனும் மாலும் சோதிவடிவில் அடிமுடி தேடியது; பத்தாம் பாடலில் சமண, பௌத்தரை எதிர்த்துரைப்பது என்ற வரன்முறை இம்முதற் பதிகம் தொட்டே அமைகிறது.

அரக்கர்களை அழிப்பது திருமால் அவதாரமாக மிகுதியும் பேசப் படுதலின்; இராமனால் அழிக்கப்பட்ட இராவணன் ஏற்கெனவே சிவனால் வலி ஒடுக்கப்பட்டன் எனக் காட்டித் திருமாலினும் உயர்ந்தோன் சிவன் என்பதை வலியுறுத்தற்காகவே அதனை அமைத் துள்ளாரோ என்ற ஐயமும் எழுகிறது. புறச்சமயத்தவரை அடக்கிச் சைவ சமயப் புத்தெழுச்சிக்கு வலுவூட்டியவர் என உரைக்கப்படும் இவரின் வரலாறு நோக்க, தம் சமயப் பரப்புதற்கு இதனை ஓர் உத்தியாகக் கொண்டார் போலும்.

புறச்சமயத்தைத் தாம் சார்ந்திருந்ததற்காக வருந்தும் தன்மை நாவுக்கரசரின் பதிகத்தில் வெளிப்பட்டுள்ளது. குறிப்பாக 4, 5, 7, 8 ஆக அமையும் பாடல்கள் இதனை நன்கு காட்டியுள்ளன. இறையடியவர் துன்பத்தின் போது எவ்வாறெல்லாம் துடிப்பர் என்பதற்கு இவர் பதிகம் சான்று. உளவியலாய்விற்கு உட்படுத்தக் கூடிய சிறப்புடைய தாகும் இது இறைவனை எதிர்த்து வழக்காடியதை எண்ணிக் கவலுதலைச் சுந்தரர் பதிகத்தில் உணரலாம்.

சிவனைப் பாடுதல் என்ற நிலையில் மூவரும் ஒன்று படினும் பாடல் எழுந்த சூழ்நிலையால் பாடற் பொருண்மையில் மாற்றம் காட்டுகின்றனர், 'முதல்' என்பது அனைவரையும் கவரக் கூடியது. எனவே அதற்கேற்ற சிறப்புடன் அமைதல் வேண்டத்தக்கது. இதில் இம்மூவரும் வெற்றி கண்டுள்ளதை இக்கட்டுரை நிறுவுகிறது.

**சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும் எம் சுந்தரனும்**
**சிற்கோல வாதவூர்த் தேசிகனும் - முற்கோலி**
**வந்திலரேல் நீறெங்கே மாமறைநூல் தானெங்கே**
**எந்தைபிரான் ஐந்தெழுத் தெங்கே** (பழம்பாடல்)

# 34. சம்பந்தரின் 'தமிழ்' அடையாளம்

மு. சுதர்சன், புதுவை.

'தமிழ் ஞானசம்பந்தன்' என நூற்றுக்கும் மேற்பட்ட இடங்களில் திருஞானசம்பந்தர் தம்மைத்தாமே அடையாளப்படுத்திக் கொள்வது குறிப்பிடத்தக்கது. இதற்கான காரணங்களும் சொற்பொருட் பின்புலங் களும் இக்கட்டுரையில் ஆராயப்படுகின்றன.

சங்க காலத்திலிருந்து சம்பந்தர் காலம் வரை தமிழ்மொழி அல்லது தமிழ்ப் பிணைப்பு பற்றிய தொடர்கள் சம்பந்தர் பதிகங்களில் இடம் பெற்ற அளவு இடம்பெற்றதில்லை; அதிலும் தனியொருவர் படைப்பு முழுக்க இவ்வளவு அழுத்தத்துடன் வெளிப்பட்டதில்லை. இதுபற்றிய பின்னணி ஆய்வு தமிழக வரலாற்றில் நேர்ந்த ஒருபெருந் திருப்பு முனையைக் காட்ட வல்லது.

சைவநெறி திருஞானசம்பந்தருக்கும் முந்தைய நெறி. சமகாலத் தவராயினும் சம்பந்தருக்கும் முன்பே மக்களையும் சிவத்தொண்டையும் இணைத்து இயக்கம் நடத்தியவர் திருநாவுக்கரசர். திருநாவுக்கரசருக்கும் முன்னவராகக் காரைக்காலம்மையார் காணப்படுகிறார். சிவனைப் பதிக அமைப்பில் தலங்குறிப்பிட்டுப் பாடிய முதல்வர் காரைக்காலம்மையாரே. தமிழில் புதிய இலக்கிய வடிவங்களை வழங்கிய காரைக்காலம்மை யாருக்கும் திருநாவுக்கரசருக்கும் இல்லாத தமிழ் அடையாளம் திருஞானசம்பந்தருக்கு வாய்த்திருக்கிறதென்றால் அதற்குச் சிறப்புக் காரணங்கள் இருக்கவேண்டும்.

கி.பி. இரண்டாம் நூற்றாண்டிலிருந்தே தமிழகத்தில் சமண, புத்த சமயங்கள் அரச சமயங்களாக உயர்ந்து செல்வாக்குப் பெறத் தொடங்கின. மணிமேகலை மற்றும் கீழ்க்கணக்கு நூல்கள்வழி இதனை அறியலாம். 5-ஆம் நூற்றாண்டினரான காரைக்காலம்மையார் ''பல கடவுளரில் யார் பரம்பொருள்? எது உங்கள் இறையுரு? கண்டதுண்டா? காட்டமுடியுமா?'' என்ற புறச்சமயிகளின் வாதுக்களுக்காக இயக்கம் தொடங்காவிட்டாலும் கவன்றிருக்கிறார் (வை. இரத்தின சபாபதி, திருஞானசம்பந்தர் - ஓர் ஆய்வு - முதற்பகுதி. 2000: 16). சமணம் சென்று மீண்ட திருநாவுக்கரசர் புறச்சமயக் குறைகளை எடுத்தோதியதோடு இயக்கமும் கண்டார். சம்பந்தரின் திருத்தொண்டு குழந்தைப் பருவ

முதலே அற்புதத்திலேயே தொடங்கியதாலும் கவுணியர் மரபில் இருந்தே தமிழில் ஒலித்ததாலும் பேரெழுச்சியை உருவாக்கியது.

'தாய் எட்டடி பாய்ந்தால் குட்டி பதினாறடி பாயும்' எனும் முதுமொழியைத் திருஞானசம்பந்தர் செயற்படுத்திக் காட்டினார். காரைக்காலம்மையாரின் பதிக நெறியையும் அப்பர்தம் புறச்சமய அனுபவங்களையும் களமாக்கிப் புதிய சைவ எழுச்சியைச் சமைத்தார், 'தோடுடைய செவியன்' பதிகம் மூலம் ''இவர் இறைவர்; உரு இது; இவ்வாறு அருளினர்; இன்னே கண்டனனென்; நீவிரும் காண்மின்'' எனப் பதிலிறுத்தார். திருநாவுக்கரசரை வருத்திய சமண புத்தரைப் பத்தாம் பாடல்தோறும் குறிப்பிட்டதோடு அனல் வாதம், புனல் வாதம் ஆகியவற்றிலும் வென்று காட்டினார். திருஞானசம்பந்தரின் தனிச்சிறப்பு 'வேதநெறி, சைவத்துறை, தமிழ்' ஆகியவற்றை ஒருங்கிணைத்ததில் நிறைந்துள்ளது; இதுவே அவரைச் சைவ இயக்கத் தலைவராகவும் ஆக்கியது.

திருஞானசம்பந்தர் கவுணிய மரபினர்; கவுணிய முன்னோரைப் பற்றிப் ப்ரஹதாரண்ய உபநிடதம் (2.5.20) ''கௌண்டின்யரிடமும் அக்னிவேஸ்ய என்பவரிடமும் மாணாக்கராய் இருந்த 'கௌண்டின் யாயனா' எனும் வேதகால ஆச்சாரியர் (மேற்கோள்: அ.ச. ஞான சம்பந்தன், பெரியபுராணம்-ஓர் ஆய்வு, 1994:86) என்று குறிப்பிடு கிறது. பூஞ்சாற்றூர் பார்ப்பான் கவுணியன் விண்ணந்தாயன் (ஆவூர் மூலங்கிழார், புறம். 166) பற்றிய செய்தி சங்க இலக்கியத்தில் இடம் பெறுகிறது. அதில் சிவபெருமானை முதன்மைப்படுத்தும் வேள்வியை விண்ணந்தாயன் செய்த தகவல் பதிவாகியுள்ளது. கி.பி. 14-ஆம் நூற்றாண்டினரான பாரத்வாஜ கோத்திரத்து நச்சினார்க்கினியர் எல்லாத் தெய்வத்திற்கும் அந்தணர் அவி கொடுக்குங்கால், அங்கி ஆதித்தன் கட்கொடுக்கும் என்பது வேதமுடிபாகலின்'' (தொல் அகந். நூ.5. நச். உரை) என்று வேதமரபு கூறல் இங்கே ஒப்பிடத்தக்கது. எனவே சங்ககாலக் கவுணியர் ஒருவர் சிவபெருமானை முதன்மைப் படுத்துதல் வேதமரபினரிடை நிகழ்ந்த மாறுதலைப் பதிவு செய்கிறது. இதன் மூலம் திருஞானசம்பந்தரின் கவுணிய மரபு அவருக்குச் சற்றேறக்குறைய எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்பே வேதக் கருத்தி யலுக்கும் முந்தைய தொல்சைவ நெறியை ஏற்றுக் கொண்டு மற்ற வருக்கும் உணர்த்தியமை புலப்படுகிறது. இந்த எண்ணூறு ஆண்டுக் கால இடைவெளியில் சிவபாத இருதயரின் பரம்பரையில் குடும்ப மொழியாகத் தமிழ் நிலைபேறு பெற்றுவிட்டது. திருஞானசம்பந்தர் பால்மணம் மாறாப் பாலகராக இருந்தபோதே தமிழில் திருவாய் மலர்ந்தமையே இதற்குத் தக்க சான்று. இவ்வகையில் கவுணியமரபு

'வேதப்பயிற்சி - சமஸ்கிருதம் - சைவம் - தமிழ்' எனும் இவற்றின் இணைப்பு மையமாக மாறிவிட்டமை அங்கை நெல்லிக்கனி.

மொழி வழியாகவும் சாதியின் பெயராலும் புறச்சமயங்களாலும் ஆட்சியாளராலும் பல்வேறு பிரிவினராய்ச் சிதறிக்கிடந்த தமிழக மக்களை ஆன்மிக உய்திக்காகச் சைவ அணியில் திரட்டும் கடப்பாடு திருஞானசம்பந்தருக்கு இருந்தது. அதற்காகவே வேதநெறி, தமிழ் இரண்டையும் விதந்தோதியுள்ளார். ''மாமறை நான்கினொ டங்க மாறும் வல்லவன் (358:11)'' எனும் அறிவிப்பு வேதியர்மத்தியில் தமிழையும் சைவத்தையும் புகுத்தவும் 'தமிழ் ஞானசம்பந்தன்' எனும் இணக்கமொழி தமிழரை இணக்கப்படுத்தவும் பயன்பட்டது. இது ஏதோ இயக்க உத்தி எனும் ஐயம் எழக்கூடாதென்பதற்காகவே

**''தமிழ்ஞான சம்பந்தன்**
**பண்ணாருந் தமிழ்வல்லார் பரலோகத் திருப்பாரே''** (323:11)

என உறுதிமொழி தருகிறார். இதற்கும் மேலாக,

**''அந்தவுல கெய்தியர சாளுமது**
**வேசரத மாணைநமதே''** (336:11)

என்று ஆணையிட்டு நிச்சயப்படுத்துகிறார்.

இதனால்தான் நம்பியாண்டார் நம்பி,

**ஆறது ஏறுஞ் சடையான் அருள் மேவ அவணியர்க்கு**
**வீறது ஏறுந் தமிழால் வழி கண்டவன்**
(ஆளுடைய. திருச்சன். விருத்.5)

எனவும் சேக்கிழார்,

**வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத்துறை விளங்க..**
**புனிதவாய் மலர்ந்தழுத**
**புகலித் திருஞானசம்பந்தர்** (பெரிய. 1004)

எனவும் ஆமோதிப்புச் செய்துள்ளனர்.

சமணமும் பௌத்தமும் இலக்கண இலக்கிய ஆக்கத்தின் மூலம் தம்மைத் தமிழோடு இயைபுபடுத்திக் கொண்டனர்.

இந்நிலையில் தமிழுக்கும் சிவனுக்குமான இயையு, வடமொழிக்கும் தமிழுக்குமான இணக்கம் ஆகியவற்றைச் சைவ அடிப்படையில் நிறுவவேண்டிய கட்டாயம் திருஞானசம்பந்தருக்கு இருந்தது. கலிங்கத்துப்பரணி 'உபய (இரு) குலசேகரன்' என்று மூன்றாம் குலோத்துங்கனைச் சித்திரிப்பது இங்கே ஒப்பிடத்தக்கது.

பிற்காலச் சோழராட்சி மகள் வயிற்று வாரிசுக்குப் பட்டம் கட்டியபோது அவன் 'தமிழ்வழியில் வந்தவனல்லன்' எனும் கருத்து அரசியலில் பகையரசர்களால் பரப்பப்பட்டது. அதனை எதிர்கொள்ளவே கலிங்கத்துப் பரணியின் இராசபாரம்பரியம் படைக்கப்பட்டது. கி.பி. 7-ஆம் நுற்றாண்டிலும் இதுபோன்ற ஒரு சூழல் சமயத் துறையில் எழுந்திருக்கவேண்டும், திருஞானசம்பந்தரின் கால்வழி பற்றிய எதிர்க்கருத்து புறச்சமயிகளால் எழுப்பப்பட்டிருக்கலாம். இச்சூழலில்தான் திருஞானசம்பந்தர் தம்முடைய இருமரபும் இணைந்த பாரம்பரியத்தை உயர்த்திப் பிடித்துள்ளார், சுருங்கக் கூறுவதானால், எதிரிகள் பலவீனம் என்று தூற்றிய காரணியைத் தம்முடைய பலமாக்கிச் சாதித்தவர் திருஞானசம்பந்தர்.

திருஞானசம்பந்தரின் தமிழ் பற்றிய சொல்லாட்சிகளும் பொருண்மைகளும் மேலே கூறப்பட்ட கருத்துக்களைப் பொதிந்து வைத்திருப்பதையும் அதற்கும் அப்பால் தமிழ் மூலம் அவர் காட்டிய அடையாளத்தையும் இனிக் காணலாம்.

**சமஸ்கிருதமும் தமிழும் இணையானவை**

தக்க தென்தமிழ்க்கலை (218-7), தென்தமிழ்ச்சொல் (228-7) எனும் திருஞானசம்பந்தரின் சொல்லாட்சிகள் வடகலை, வடமொழி என்பவற்றுக்கு இணைநிலையின.

மறைவளருந் தமிழ் (203) எனும் சொல்லாட்சி வேதம் படைத்த சமஸ்கிருதத்திற்கு இணையாகச் சிவபெருமான் மறை வளர்க்கும் மொழி தமிழ் என்று பிள்ளையாரால் உணர்த்தப்படுகிறது. எழுது மொழி தமிழ் (325-12) எனும் வாக்கு வடமொழி எழுதாமறை உடையது; தமிழ் எழுதுமறை உடையது எனும் குறிப்பை அறிவிக்கிறது.

**தம்மல ரடியொன் றடியவர் பரவத்**
**தமிழ்ச் சொலும் வடசொலும் தாள்நிழற்சேர** (77-4)

எனும் அடிகள் சிவபெருமானுக்கு இருமொழியும் சமம் என்பதை வலியுறுத்துகின்றன.

**சிவனும் தமிழும் ஒன்று**

தமிழ் சிவபெருமானின் படைப்பு எனத் தொன்மங்கள் கூறுகின்றன. தமிழைச் சங்கமமர்ந்து காத்தவர் சிவபெருமான் என்பது தலைச்சங்க வரலாறு.

**அற்றன்றி அந்தண் மதுரைத் தொகையாக்கினானும்** (312:11) எனச் சம்பந்தர் ஆமோதிக்கிறார்.

**தமிழினீர்மை பேசித் தாளம் வீணை பண்ணி**
**நல்லமுழவம் மொந்தை மல்குபாடல் செய்கை இடமோவார்** (73-8)

எனும் வரிகள் தமிழ்ப்பாடல் ஒலிக்குமிடமெல்லாம் சிவன் இருக்குமிடம் என்கின்றன.

**பலஓசைத் தமிழவையும் உண்ணின்றதொர் சுவையும்**
**முழுதானான்** (11-4)

பாடல் அடி 'தமிழ்ச்சுவை சிவமே' என்கிறது. சிவபெருமான் தமிழில் அத்வைதமாகி நிற்கிறான் என்ற கருத்து பிள்ளையாரால் வைக்கப் படுதல் கருதத்தக்கது.

**சொல்லும் பொருண்மையும்**

சம்பந்தரின் தமிழ் பற்றிய சொற்பொருளாட்சி தமிழின் சொற் பொருள் நோக்கில் குறிப்பிடத்தக்கது. சம்பந்தர் காலத்திற்கு முன்பு தமிழ் எனும் சொல் மொழி,

(தமிழ்கூறு நல்லுலகு), நாடு (தமிழ்முழுதாண்ட உரவோர்), அகம் ('களவு' - ஆரியவரசன் பிரிகத்தனுக்குத் தமிழ் அறிவித்தற்குக் கபிலர் பாடியது) எனும் பொருள்களில் வழங்கியுள்ளது.

மொழி எனும் பொதுப்பொருளில் தமிழை ஆளும் திருஞான சம்பந்தர் இயல், இசை என்பவற்றுக்கும் அப்பால் 'திருப்பதிகப்பாடல்' எனும் சிறப்புப் பொருளை உருவாக்கி உள்ளார். இது அவருடைய தனிமுத்திரையைக் காட்டும். இதுவே பிறகு ஆண்டாள் முதலியோரின் திருப்பாசுரங்களுக்கும் நீள்கிறது.

**நற்றமிழ் ஞானசம் பந்தன்சொன்ன தமிழ்** (269:11)

என்பதில் முன்னையது 'மொழி' எனும் பொருளிலும் பின்னையது பதிகப்பாடல் எனும் பொருளிலும் பயின்று, வருகின்றன.

**ஞானசம் பந்தன செந்தழ்** (282:11)

**செந்தமிழ்கள்** (331)

எனும் பன்மைக் குறியீடுகள் தமிழ் பாடல் பொருளில் பயின்று வருவதை அறிவிப்பன. ''நானுரைத்தன செந்தமிழ் பத்துமே'' (3-373:11) எனும் சம்பந்தரின் தன்மைக்கூற்று பதிகப் பாடல் பொருண்மையை அறிவிக்கும். மொழிக்கு மட்டுமே சேர்க்கப்பட்ட முத்-, செந்-, பூந்-, தண்-, வண், ஒண்-, இண்-, அருந்- ஆகிய அடைகளைப் பதிகப் பாடலுக்கும் தந்துள்ளமை புதுமையே. அடைமேல் அடையையும்

(ஆரா அருந்தமிழ் (89), ஏரினார் தமிழ் (288)) பயன்படுத்தும் திருஞானசம்பந்தர் **செந்தண்டமிழ்** (172) என்பது அருகிய வழக்கே. இத்தகைய அடைப்பயன்பாடு தமிழ் உரிமைக் கோரிக்கை ஆகியன அக்காலத் தமிழின் தடைநிலைகளுக்கு மேலான எழுச்சியையே காட்டுகின்றன.

'இந்திரர் விருந்தமிழ்தம் எனினும் வேண்டற் பாற்றன்று; தமியர் உண்டலும் இலமே' எனும் தமிழ்ப்பண்பாட்டை விண்பேற்றுக்கும் பொருத்தியவர் திருஞானசம்பந்தர். அவர் இவ்வகையில் மறை மொழியை வெளிப்படுத்திய இராமாநுசருக்கும் முன்னோடியாகிறார். எவ்வாறெனில் தமிழ் அடையாளம் என்பதே மறைவெளிப்படுத்த மாகும், எழுதாக்கிளவி அந்தணர் விரைத்து, தமிழ் அதற்கு மறுதலைப் பட்டது. எழுதுமொழி - எல்லோருக்கும் அறிவிப்பது. ஆயினும் தமிழ் மறைவினரும் மொழி என்பதையும் உறுதிப்படுத்திவிட்டார். எனவே திருஞானசம்பந்தரின் 'தமிழ்' அடையாளம் சிவனருளைப் பொதுமைப்படுத்துவதையும் குறியீடாக உணர்த்துகிறது.

எனவே திருஞானசம்பந்தரின் தமிழ் அடையாளம் 'தமிழ் = அன்பு = சிவம்' என்பதையே உணர்த்துகிறது. கபிலரின் களவியல் பொருள் 'உள்ளம் கவர் கள்வன்' மூலம் வெளிப்படுகிறது எனலாம்.

# 35. காழிவேந்தரின் வாக்கும் சேக்கிழாரின் நோக்கும்

கு. சுந்தரமூர்த்தி, தருமபுரம்.

இற்றைக்கு இருக்கும் சமயங்களுள் காலப் பழமைக்கு எட்டாத சமயம் சைவ சமயமே ஆகும். இவ்வருஞ் சமயம் யாண்டும் பரந்தும் விரிந்தும் நிலவி நின்றது. கி.பி. 2-ஆம் நூற்றாண்டு முதல் இதற்குத் தொய்வு ஏற்பட்ட நிலையில், கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் தமிழகத்திலேயே பெரிதும் இதன் வளர்ச்சி குன்றுவதாயிற்று.

**''வரிசிலைத் தென்ன வன்தான் உய்தற்கு வளவர் கோமான்**
**திருவுயிர்த் தருளும் செய்வப் பாண்டிமா தேவியாருங்**
**குரைசுழல் அமைச்ச னாராங் குலச்சிறை யாரும் என்னும்**
**இருவர்தம் பாங்கு மன்றிச் சைவமங் கெய்தா தாக''**

எனவரும் சேக்கிழார் கூற்றால் இவ்வுண்மை அறியப்படும். இந்நிலை தமிழகம் முழுமையும் இருந்தமையால் தான், சீர்காழியில் வாழ்ந்து வந்த சிவபாத இருதயர், பரசமயம் நிராகரித்து நீறாக்கும் புனை மணிப்பூண் காதலனைப் பெறப்போற்றும் தவம் புரிந்தார். இத்தவ நிலையாலேயே, கருத்து முடிந்திடப்பரவும் அவர்தம் காதலியாராம் பகவதியார்தம் மணிவயிற்றில், தாவில் சராசரங்கள் எல்லாம் சிவம் பெருக்கும் பிள்ளையார் (திருஞானசம்பந்தர்) திரு அவதாரம் செய்வாராயினார். இவர் தோன்றிய காலத்திலேயே திருநாவுக்கரசரும், குங்குலியக்கலயனார், சிறுத்தொண்டர் உள்ளிட்ட அடியவர்களும் தோன்றுவாராயினர். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகிய இவ்விரு பெருமக்கள் வாயிலாகவே, கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் பெருமான் வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத்துறை விளங்கச் செய்தருளினன்.

திருஞானசம்பந்தப் பெருமான் அருளிய பதிகங்கள் 49,000 ஆகும். எனினும் இன்று கிடைத்திருக்கும் பதிகங்கள் 275 ஆகும். சோழ நாட்டின் மாண்புமிகு அமைச்சராகவும், மன்னிய சீர்த்தொண்டராகவும் விளங்கிய சேக்கிழார் பெருமான், தொகை, வகை, விரி என அமையும் யாப்பு வகையில், விரிநூலாகத் திருத்தொண்டர் புராணத்தை அருளிச் செய்தார். திருஞானசம்பந்தர் வரலாற்றை 1,256 பாடல்களில் விரித்துரைத்துள்ளார். எடுக்கும் மாக்கதை என அருளியதற்கு ஏற்பச்,

சம்பந்தர் பெருமான் வரலாறும் மாக்கதையாகவே விளங்குகிறது. சேக்கிழார் நூலாசிரியர் மட்டுமல்லர்; திட்பமும் நுட்பமும் அமைய உரை வகுக்கும் உரையாசிரியரும் ஆவர். இவ்வகையில் ஞானசம்பந்தர் அருளிய திருநெறிய தமிழ்த் திருமறைக்கு எவ்வகையானெல்லாம் உரை கண்டுள்ளார் என்பதை ஒருசிறிது காண்போம்.

**1. 'தோடுடைய செவியன்'**

இத்தொடக்கமுடைய திருப்பதிகமே சம்பந்தப் பெருமானின் முதல் திருப்பதிகம் ஆகும். திருக்குளத்தில் நீராடி மேல்வந்த தந்தையார், மூன்றாண்டு வயதினராக நின்றருளும் சம்பந்தரின் திருவாயில், பால் வடிதலைக் கண்டு ''யாரளித்த பாலடிசில் உண்டது நீ?'' என வினவுகின்றார். அதற்கு விடையாகத் தந்த திருவாக்கே.

**''தோடுடைய செவியன்விடை யேறியோர் தூவெண்மதிசூடி**
**காடுடையசுட லைப்பொடிபூசியென் னுள்ளம்கவர் கள்வன்**
**ஏடுடையமல ரான்முனைநாட்பணிந் தேத்தவருள் செய்த**
**பீடுடையபிர மாபுரம் மேவிய பெம்மானிவனன்றே''.**

என்பதாகும். இத்திருவாக்கில் அமைந்துள்ள முதற்றொடர், ''தோடுடைய செவியன்'' என்பதாகும். உரை காண்போர் எவரும் 'தோட்டினை அணிந்திருக்கும் உமைஒரு கூறனாகிய சிவபெருமான்' என உரைகாணும் அளவிலேயே நின்று மேற்செல்வர். ஆனால், சேக்கிழாரோ, இத்தொடரின் முதல் எழுத்தாய 'தோ' எனும் உயிர்மெய் எழுத்தைத் திருஉளந்து எண்ணி, அவ்வெழுத்து எல்லையிலா மறைமுதல் மெய்யுடன் எடுத்த எழுத்தெனக் குறித்துக் காட்டுகின்றார். எனவே, த்+ஓ = 'தோ' எனவரும் உயிர்மெய் எழுத்தில், மறைகளின் முதல் எழுத்தாக வரும் ஓங்காரமே 'த்' எனும் மெய்யெழுத்துடன் இணைந்து இவ்வாறு வந்துள்ளது எனக்கூறும் அருமை எண்ணற்குரியது ஆகும். ஓங்காரம் பிரணவம் ஆகும். மறையின் முதலெழுத்துமாகும். இது இறைவனைக் குறிப்பதாகும். ''த்'' என்பது அருளது வடிவாகும். அவ்வாறாய வடிவு நம்போன்ற உடற்கூறாய வடிவன்று; அருளது வடிவமாகும். 'அருளது சத்தியாகும் அரன்தனக்கு' என்னும் ஞானநூலும். எனவே, அம்மையப்பரது திருக்கோலத்தைக் காட்டி நிற்பதே தகர ஒற்றுடன் கூடிய ஓங்காரமாகும். தந்தையாரின் வினாவிற்கு இம்முதல் எழுத்தே, குறிப்பாகத் தரும் விடையாக அமைய, மேல்வரும் தொடர்கள் எல்லாம் அதற்கு மேலும் விளக்கம் தரும் தொடர்களாக அமைந்துள்ளன என்பது சேக்கிழார் திருவுள்ளமாகும்.

இனி அப்பெருமான் எழுந்தருளி வந்தருளிய பாங்கை,

'விடையேறி', 'தூவெண்மதிசூடி', 'காடுடைய சுடலைப் பொடிபூசி',

என் உள்ளம் கவர்கள்வனாய் வந்தருளினன் எனக் குறித்துக் காட்டுகின்றார் பிள்ளையார் என நமக்கு விளக்கி அருளுகின்றார் சேக்கிழார். 'பிரமபுரம் மேவினார் தம்மை அடையாளங்களுடன் சாற்றி' என்னும் தொடரால் இவ்வுண்மையை நாம் அறிய இயலு கின்றது. தந்தையார் யாரளித்த பாலடிசில் உண்டது? எனக் கேட்ட வினாவிற்கு, நிறைவான விடையாக அமைந்த தொடரே ''பீடுடைய பிரமாபுரம் மேவிய பெம்மான் இவனன்றே'' என்பதாம் எனவும் குறித்துக் காட்டுகின்றார் சேக்கிழார்.

**''எல்லையிலா மறைமுதல்மெய் யுடன்எடுத்து எழுதுமறை**
**மல்லல்நெடுந் தமிழால்இம் மாநிலத்தோர்க்குரை சிறப்பப்**
**பல்லுயிருங் களிகூரத் தம்பாடல் பரமர்பால்**
**செல்லுமுறை பெறுவதற்குத் திருச்செவியைச் சிறப்பித்து''**
**செம்மைபெற எடுத்ததிருத் ''தோடுடைய செவியன்'' எனும்**
**மெய்ம்மை மொழித் திருப்பதிகம் பிரமபுரம் மேவினார்**
**தம்மை அடையாளங்க ளுடன்சாற்றித் தாதையார்க்கு**
**எம்மையிது செய்தபிரான் இவனன்றே'' என இசைத்தார்''.**

எனவரும் அவர்தம் திருவாக்கால் இத்துணை அருமையையும் அறிய இயலுகின்றது.

ஞானசம்பந்தப் பெருமான் தம் திருப்பதிகங்களில் எட்டாவது பாடல்தொறும் இராவணனது செயல் பற்றியும், ஒன்பதாவது பாடல்தொறும் பாடல்தொறும் இறைவனின் அடிமுடி காணாமால், அயனாரின் பெற்றிமையையும், பத்தாவது பாடல்தொறும் புத்தர் சமணர்நெறி நெறியல்ல எனும் கருத்தமைவையும் காட்டி மகிழ்விப் பதைச் சேக்கிழார் தம் நுண்மாண் நுழைபுலம் மிக்க திருவாக்கால் விளக்கிக் காட்டியருளுகின்றார்.

இராவணன் தன் தேரில் செல்லுங்கால் கயிலை எதிர்ப்படத், தன் வலிமிகுதி ஒன்றையே கருதியவனாய், அம்மலையை எடுக்கலுற்றான். இறைவன் அவ்வாறு எடுத்தற்கு ஏதுவாய தோள்களை நெறிதரச் செய்ய, அத்துன்பத்தைப் பொறுக்கலாற்றாத நிலையில், தன் தவறுணர்ந்து பெருமானின் திருவருளை வேண்டப், பெருமானும் அவனை மன்னித்தருளி நல்வாழ்வு தந்தனர். இதுவே எட்டாவது பாடல்தோறும் வரும் இராவணனைப் பற்றிய கருத்தாகும்.

ஓருயிர் தவறுசெய்தவழித் தண்டித்தும், தன் உண்மை உணர்ந்து திருந்தித் தன்னை வழிபட்டு அவ்வுயிரை இறைவன் மன்னித்தும்

அருளுவன் என்பதே இத்திருவாக்கின்வழி நாம் அறியத்தக்க கருத்தாகும் எனச் சேக்கிழார் அருளுகினறார். இவ்வாறு மன்னித்தருளும் செயலைத், தம் சமயத்திற்கே உரியதெனக்கூறிப் பிற சமயத்தவரைத் தம் சமயத்திற்கு ஈர்க்கும் நிலையை இன்றைய நிலையில் கண்டு வருகிறோம். ஆனால் நம் பெருமான், தவறு செய்தோர், பின்னும் தவறு செய்யாது உண்மையாகத் திருந்தி, தன் அருள்வழி நிற்கும் பொழுதே மன்னிப்பன்; தொடர்ந்து தவறுசெய்யப் பெருமானும் தொடர்ந்து மன்னித்தருளுவான் அல்லன் என்பதும் ஈண்டு அறியத்தக்கது ஆகும்.

**''மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் வந்தடையின்**
**கண்ணுதலான் பெருங்கருணை கைக்கொள்ளும் எனக்காட்ட**
**எண்ணமிலா வல்லரக்கன் எடுத்து முறிந் திசைபாட**
**அண்ணலவற் கருள்புரிந்த ஆக்கப்பாடருள் செய்தார்''**

என்பது சேக்கிழார் திருவாக்காகும்.

இனி ஒன்பதாவது பாடல்தொறும், இறைவனின் அடியையும் முடியையும் மாலும் அயனும் தேடிக் காணாத பெற்றிமையைக் கூறி மகிழ்விப்பர் சம்பந்தர். இதற்குரிய விளக்கத்தையும் சேக்கிழார் விளக்கியருளுகின்றார். 'காண்பார்யார் கண்ணுதலாய் காட்டாக்காலே' எனும் அருள்மொழிக்கு இணங்கப் பணிவும் கனிவும் கொண்டு தன்னைக் காணவிழைவோர்க்கே இறைவன் தன்னைக் காட்டி அருளுவன்; அவ்வாறன்றி யான் எனதென்னும் செருக்குடன் தன்னைக் காணவேண்டுமென்று கருதின், இறைவன் அரியனாகுவனன்றி எளியனாகுவன் அல்லன் என்பதே இப்பாடலின் உட்கருத்தாகும் என்பர் சேக்கிழார்.

**''தொழுவார்க்கே அருளுவது சிவபெருமான் எனத்தொழார்**
**வழுவான மனத்தாலே மாலாய மாலயனும்**
**இழிவாகும் கருவிலங்கும் பறவையுமாய் எய்தாமை**
**விழுவார்கள் அஞ்செழுத்தும் துதித்துய்ந்த படிவிரித்தார்''.**

என்பது அவர் திருவாக்காகும்.

இனிப் பத்தாவது பாடல்தோறும் புத்தர் சமணர்நெறி நெறியல்ல எனக் கூறுவர் பிள்ளையார். காரணம் ஊழிதோறூழி முற்றும் உயர் பொன்னொடித்தான் மலையில் வீற்றிருந்து அருளும் சிவபெருமானே, யார்க்கும் எஞ்ஞான்றும் தலைவனாவான். பிறவாயாக்கைப் பெரியோனாய பெருமானின் சிவநெறியே தலையாய நெறியாகும். நிலையான நெறியுமாகும். இந்நெறியல்லாத பிறநெறிகளெல்லாம் பெருமானைக் காண்டற்குரிய நெறியன்றாம். இவ்வருமையை விளக்கவே இவ்வகையில் அருளினார் - என விளக்குவர் சேக்கிழார்.

"வேதகா ரணராய வெண்பிறைசேர் செய்யசடை
நாதன்நெறி அறிந்துய்யார் தம்மிலே நலங்கொள்ளும்
போதம்இலாச் சமண்கையர் புத்தர்வழி பழியாக்கும்
ஏதமே எனமொழிந்தார் எங்கள்பிராமண சம்பந்தர்"

என்பது அவர் திருவாக்காகும்.

இனித் தம்மொடு வாதிட்ட சமணர் தோற்கவும், சிவனெறியே தலையாயதும், நிலையாயதுமாம் எனும் கருத்தை யாவரும் உணரவும், அருளிய பதிகமே "வாழ்க அந்தணர் வானவர் ஆணினம்" எனும் தொடக்கமுடைய திருப்பதிகமாகும். இப்பதிகம் பன்னிரண்டு பாடல்களை உடையதாகும். திருப்பாசுரம் என அழைக்கப் பெறுவதாகும்.

"உலகியல் வேதநூல் ஒழுக்கம் என்பதும்
நிலவுமெய்ந் நெறிசிவ நெறியது என்பதும்
கலதிவாய் அமணர்காண் கிலார்கள் ஆயினும்
பலர்புகழ் தென்னவன் அறியும் பான்மையால்"

'வாழ்க அந்தணர்' எனத் தொடங்கி அருளும் முதற்பாடற்கு 5 பாடல்களானும், 'அரியகாட்சியர்' எனத் தொடங்கும் இரண்டாவது பாடற்கு மூன்று பாடல்களானும், 'வெந்த சாம்பல்' எனத் தொடங்கும் மூன்றாவது பாடற்கு நான்கு பாடல்களானும், 'ஆட்பாலவர்க்கு' எனத் தொடங்கும் நான்காவது பாடற்கு இரண்டு பாடல்களானும், 'ஏதுக்களாலும்' எனத் தொடங்கும் ஐந்தாவது பாடற்கு நான்கு பாடல்களானும், 'ஆடும்' என்பது முதல் 'அற்றன்றி' எனவரும் 6, 7, 8, 9, 10, 11 ஆகிய ஆறு பாடல்களுக்கும் ஆறு பாடல்களானும் விளக்கம் தந்துள்ளார் சேக்கிழார்.

எடுத்துக்காட்டாக முதற்பாடற்கு அமைந்துள்ள விளக்கத்தை மட்டும் காண்போம்.

"வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே".

இப்பாடலில் அமைந்துள்ள ஆறு வகையான கருத்துக்களையும் தனித்தனியே விதந்து எடுத்து விளக்கம் தந்துள்ளார் சேக்கிழார்.

"அந்தணர் தேவர்ஆன் இனங்கள் வாழ்க" என்
றிந் தமெய்ம் மொழிப்பயன் உலகம் இன்புறச்
சந்தவேள் விகள்முதற் சங்க ரர்க்குமுன்
வந் தஅர்ச்சனை வழிபாடு மன்னவாம்".

''வேள்வி நற்பயன் ''வீழ்புன'' லாவது
நாளும் அர்ச்சனை நல்லுறுப் பாதலால்;
ஆளும் ''மன்னனை வாழ்த்திய(து)'' அர்ச்சனை
மூளும் மற்றிவை காக்கும் முறைமையால்''.

''ஆழ்க தீய'' தென் றோதிற் றயல்நெறி
வீழ்க என்றதுவே ''றெல்லாம் அரன்பெயர்
சூழ்க'' என்றது தொல்லுயிர் யாவையும்
வாழி அஞ்செழுத் தோதி வளர்கவே''.

சொன்ன ''வையக மும்துயர் தீர்கவே''
என்னும் நீர்மை இகபரத் தில்துயர்
மன்னி வாழுல கத்தவர் மாற்றிட
முன்னர் ஞானசம் பந்தர் மொழிந்தனர்.

என்பன அவர் திருவாக்காகும். இவ்வருமை எண்ணி மகிழ்தற்குரியதாம்.

இவ்வாறு கருத்தமைவுபட வரும் தொடர்களைத் தனித்தனியே விதந்தும் எஞ்சிய பாடல்களை முழுமையாகக் கருதியும் விளக்கம் தந்துள்ள சேக்கிழார், தமது பணிவும் எளிமையும் தோன்ற,

''வெறியார் பொழிற்சண் பையர் வேந்தர் மெய்ப்பாசுரத்தைக்
குறிஏ றியஎல்லை அறிந்துகும் பிட்டேன் அல்லேன்
சிறியேன் அறிவுக் கவர்தம்திருப் பாதம் தந்த
நெறியே சிறிதியான் அறிநீர்மை கும்பிட்டேன் அன்பால்''.

என அருளியிருக்கும் பாங்கு, அவர்தம் அருமையில் எளிய அழகினைக் காட்டுவதாகும்.

ஆலவாய்ப் பெருமானை வழிபட்டு, மதுரையில் இருந்ததொரு திருமடத்தில் ஞானசம்பந்தர் எழுந்தருளியிருக்க, அந்நிலை கண்டு பொறாத அருகர்கள், அம்மடத்திற்குத் தீ வைக்க, அதுகண்ட பிள்ளையார், என்பொருட்டு அவர் செய்த தீங்காயினும் இறையோன் அன்பருக்கு எய்துமோ? எனத் திருவுளம் கொண்ட நிலையில், அத்தீயைப் 'பையவே சென்று பாண்டியற்கு ஆகவே' எனப் பணித்தார். இவ்வருஞ் செயலில், அமணர் தீங்கிழைக்க அரசருக்கு ஊறுபாடு தந்தது ஏன்? எனக் கேட்கப்படும் வினாவிற்கு விடையும், 'பையவே செல்க' எனப் பணித்தமைக்கு வழங்கியிருக்கும் விளக்கமும் குறித்தற்குரியது ஆகும்.

''வெய்ய தீங்கிது வேந்தன்மேற் (று) எனும்விதி முறையால்
''செய்ய னேதிரு வாலவாய்'' எனுந் திருப்பதிகம்
''சைவர் வாழ்மடத் தமணர்கள் இட்டதீத் தழல்போய்ப்
பைய வேசென்று பாண்டியற் கா'' கெனப் பணித்தார்.

என்பது முதற்கருத்திற்கு அவர் வழங்கியருளியிருக்கும் விளக்கமாகும்.

**பாண்டிமா தேவியார் தமது பொற்பில்**
**பயிலுநெடு மங்கலநாண் பாது காத்தும்**
**ஆண்டகையார் குலச்சிறையார் அன்பி னாலும்**
**அரசன்பால் அபராதம் உறுத லாலும்**
**மீண்டுசிவ நெறியடையும் விதியி னாலும்**
**வெண்ணீறு வெப்பகலப் புகலி வேந்தர்**
**தீண்டியிடப் பேறுடைய னாத லாலும்**
**தீப்பிணியைப் ''பையவே செல்க'' என்றார்.**

என்பது இரண்டாவது கருத்திற்கு அவர் வழங்கியருளியிருக்கும் விளக்கமாகும்.

திருமயிலாப்பூரில் சிவநேசச் செட்டியார், தம் மகளை ஞானசம்பந்தருக்கு மணம் செய்து கொடுப்பதற்கென நினைத்திருந்த அமையத்து, அத்திருமகளாரை அரவு தீண்டிவிட, அவர் இறக்க, இறுதிக்கடன் செய்த காலை, அபபெண்ணின் எலும்பையும், சாம்பலையும் சேமித்து வைத்திருந்த நிலையில், திருஞானசம்பந்தர் அப்பதிக்கு எழுந்தருளிய காலத்து, அவர் ஆணையின் வண்ணம் அவ்வெற்புக் குடத்தைக் கொணரச் செய்து, அதன்கண் திருநோக்கு அருளியவாறு பெருமானைத் திருவுளத்தெண்ணி, அருளிய பதிகமே ''மட்டிட்ட புன்னையம்கானல்'' எனத் தொடங்கும் திருப்பதிகமாகும்.

இப்பதிகத்தில் வரும் முதற்பாடல் உருத்திரபல் கணத்தார்க்கு அமுது வழங்கியருளும் திருக்குறிப்பு உடையதாகும். அடுத்துவரும் ஒன்பது பாடல்கள் ஐப்பசித்திங்கள் முதல், அடுத்துவரும் புரட்டாசித் திங்கள் வரை திருக்கோவில்களில் நிகழத்தகும் சிறப்பு விழாக்களைக் குறித்தருளுவதாகும். இவ்விரு புண்ணியங்களையும் செய்தும், கண்டும் மகிழ்வதே மண்ணினிற் பிறந்தார் பெறும் பயன் என்பது வாய்மையாயின், இவ்வெற்புக் குடத்தினின்றும் அப்பெண் எழுவாளாக என அருள அப்பெண்ணும் எழுந்தனள். பாடல்தொறும் இப்புண்ணியச் செயல்களுக்கு ஆட்படாது போதியோ? எனவரும் குறிப்பு, நீ போகாய், வந்து விடுவாய் எனும் குறிப்பு உடையதாகும்.

**''மண்ணி ணில்பிறந் தார்பெறும் பயன்மதி சூடும்**
**அண்ண லார்அடி யார்தமை அமுதுசெய் வித்தல்**
**கண்ணி னால்அவர் நல்விழாப் பொலிவுகண் டார்தல்**
**உண்மை யாமெனில் உலகர்முன் வரு'' கென உரைப்பார்''.**

என்பது சேக்கிழார் திருவாக்காகும்.

இத்தகைய அரும்பேற்றால் அக்குடத்தினின்றும் பூம்பாவை எழுந்தருளிய பாங்கை நிழற்படம் எனக் காட்டும் அருமையும், அத்திருமகளாரை அயனும், பிள்ளையாரும் காணும் நிலையில் அவ்விருவர்தம் உள்ளத்தும் நிகழ்ந்த நெஞ்சப் பாங்கையும் சேக்கிழார் காட்டியிருப்பதும் அறியத்தக்கதாகும்.

**எடுத்த பாட்டினில் வடிவுபெற் றிருநான்கு திருப்பாட் (டு)**
**அடுத்த அம்முறைப் பன்னிரண் டாண்டஎ வணைந்து**
**தொடுத்த வெஞ்சமண் பாட்டினில் தோன்றிடக் கண்டு**
**விடுத்த வேட்கையர் திருக்கடைக் காப்புமேல் விரித்தார்.**

**எண்ணிலாண் டெய்தும் வேதாப்**
**படைத்தவள் எழிலின் வெள்ளம்**
**நண்ணுநான் முகத்தால் கண்டான்**
**அவளினும் நல்லாள் தன்பால்**
**புண்ணியப் பதினாறாண்டு**
**பேர்பெறும் புகலி வேந்தர்**
**கண்ணுதல் கருணை வெள்ளம்**
**ஆயிர முகத்தால் கண்டார்.**

இவ்வருமைப்பாடுகள் எண்ணி மகிழ்தற்குரியனவாம்.

திருநல்லூர்ப் பெருமணத்தில் பிள்ளையார் நிறைவாக அருளிச் செய்த பதிகங்கள் இரண்டாம். ஒன்று ''கல்லூர்ப் பெருமணம் வேண்டா'' எனத் தொடங்கும் பதிகமாகும். இரண்டாவது ''காதலாகி'' எனத் தொடங்கும் நமச்சிவாயத் திருப்பதிகமாகும். இவற்றுள் முன்னைய பதிகத்தின் கருத்து, தீதுறு பிறவிப் பாசந் தீர்த்தல் செம்பொருளாகக் கொண்டிருப்பதாகும். இவ்வரிய கருத்து இத்திருப்பதிக முதற் பாடலைத் திருவுளம் கொண்டு அருளியதாகும். இரண்டாவது பதிகம், ஐந்தெழுத்தின் அருமையையும், அதுபொழுது அங்கிருந்த அனைவரும் ஈனமாம் பிறவிதீர அப்பேரொளியில் புகுந்தருளுதற்கு ஏதுவாக அமைந்தமையையும் விளக்குவதாகும்.

**''ஞானமெய்ந் நெறிதான் யார்க்கும் நமச்சிவாயச் சொலாம் என்று**
**ஆனசீர் நமச்சிவ வாயத் திருப்பதி கத்தை அங்கண்**
**வானமும் நிலனும் கேட்க அருள்செய்து இம்மணத்தில் வந்தோர்**
**ஈனமாம் பிறவிதீர யாவரும் புகுக என்ன''**

என்பது அவர் திருவாக்காகும்.

''திருச்சிற்றம்பலம்''

# 36. நாவுக்கரசர் ஞானசம்பந்தர் தோழமை

தி. சுந்தராம்பாள், விருதுநகர்.

"ஒருவர் ஒருவரிற் கலந்த உணர்வு தோழமை" பெருகிய அன்பினில் விளைவது தோழமை. இருவர் தம்முள் கருத்து ஒருமித்து, ஒத்த அன்புடையவராய் இவரது உணர்ச்சியுள்ளே அவரது உணர்ச்சியும் அவரது உணர்ச்சியுள் இவரது உணர்ச்சியுமாகக் கலத்தல் தோழமை ஒத்த அன்பினால் தழுவிக் கொண்டு பேணுதல் தோழமைக்குரியது. "அன்புடைமையும் நண்புடைமையும் வெவ்வேறு நிலைகள். அன்பு முற்றி நண்பனாக விளையும். அது மேலும் முதிரக் காதலாக முதிரும்" என்பர். திருநாவுக்கரசர் திருஞானசம்பந்தர் என்ற இருபெருமக்களும் தம்முள் பழகிய முறையில் நண்பு முதிர்ந்த காதல் இடம் பெறுகின்றது என்னும் மெய்ம்மையைத் தெளிவுறுத்துவது இக்கட்டுரையின் நோக்கம்.

1. "காழிவரும் பெருந் தகைசீர் கேட்டலுமே அதிசயமாங் காதல் கூர"
2. "பழுதில்பெருங் காதலுடன் அடிபணிய"
3. "உள்ளநிறை காதலினால் ஒருவர் ஒருவரிற் கலந்த"
4. "மருவியநண் பறுகேண்மை அற்றை நாள்போல் வளர்ந்தோங்க"

என்னும் சேக்கிழார் பாடல் வரிகள், திருநாவுக்கரசர் திருஞானசம்பந்தர் என்னும் இருவரிடையே நண்ப முதிர்ந்த காதல் பொருந்தியுள்ளமை யைத் தெளிவுறுத்துகின்றன.

## இருபெருமக்கள் சந்திப்பு

நாவுக்கரசர் தில்லையில் தங்கி உழவாரப் பணியும் பாடற்பணியும் செய்து கொண்டிருக்கின்றார். அந்நாளில் சீர்காழியில் அம்பிகையின் ஞானப்பாலை உண்டு "இவன் எம்மான்" என்று இறைவனைச் சுட்டிக் காட்டிய ஞானக் கன்றாகிய சம்பந்தரின் பெருமையைப் பற்றி அடியார்கள் கூறுகின்றார்கள். கேட்டவுடன் நாவரசருக்குச் சம்பந்தரைக் கண்டு வணங்க வேண்டும் என்ற ஆர்வம் பொங்குகிறது. உடனே தில்லையை விட்டுப் புறப்பட்டுச் சீர்காழியை நெருங்குகிறார்.

நாவுக்கரசர் வருகை அறியும் சம்பந்தர் அடியார் குழாத்துடன் அவரை எதிர்கொள்ள வருகிறார். நாவுக்கரசர் அளவற்ற காதலுடன்

சம்பந்தர் திருவடிகளில் வீழ்ந்து பணிகிறார். சம்பந்தர் நாவுக்கரசரது கரங்களைத் தமது கரங்களால் பற்றி எடுத்து வணங்கி எனது தந்தையாதே என்று பொருள் படும்படி ''அப்பரே'' என்கிறார். '' அடியேன்'' என்கிறார் நாவுக்கரசர்.

இனி, நாவுக்கரசர் சம்பந்தர் என்னும் இவ் இருபெரு மக்கள் கடும் நிகழ்வுகள் வாயிலாக, சேக்கிழார் படைக்கும் சம்பந்தர் கருத்தில் பரவும் தொண்டர் திருவேடம் ஒத்த அன்புடைய இருவர். ஒருவர் ஒருவரில் கலத்தல், சம்பந்தர் நாவுக்கரசரிடம் கொண்டுள்ள அன்பின் ஆழம் இருபெரு மக்களின் பழுதிலாக் காதல் திறம் என்னும் செய்திகள் இங்கு விரித்துரைக்கப்படுகின்றது.

**சம்பந்தரின் கற்பனைத் தொண்டர் வடிவம்**

சம்பந்தர் நாவுக்கரசரைப் பற்றி மிகுதியும் கேள்விப்பட்டிருக் கின்றார், என்றாலும் அவரை இதுவரை நேரே சம்பந்தர் பார்த்தில்லை என்ற உண்மையை மிக நுட்பமாகச் சேக்கிழார் புலப்படுத்துகிறார். ''சம்பந்தர் நாவுக்கரசரை அடையாளம் கண்டு கொண்ட விதத்தைச் சேக்கிழார் படைத்துக் காட்டும் முறை வியப்பைத் தருவதாக உள்ளது. ''சம்பந்தர் தம் மனத்தோடு பழுத்த சிவனடியார் ஓவியம் ஒன்றை வரைந்து வைத்திருக்கிறார். அந்த ஓவியத்தை ஒத்த அடியாரை சம்பந்தர் இதுவரை கண்டதில்லை. இப்பொழுது நாவுக்கரசரைக் கண்டவுடன் சம்பந்தரின் மனத்தில் தோன்றிய எண்ணம் என்ன தெரியுமா? அவருடைய கற்பனையில் ஒரு பழுத்த சிவனடியார் இப்படித்தான் இருப்பார் என்ற ஓவியம் இருந்ததில்லவா? அந்த ஓவியம் இப்பொழுது உயிர் பெற்றுத் தம் எதிரே திருமேனி தன்னில் அசைவோடு வருகிறது என்பதுதானாம்'' சம்பந்தர், நாவுக்கரசரைத் தம் ஊர் எல்லையில் (சீர்காழி எல்லையில்) வரவேற்க வந்த போது நாவுக்கரசர் நிலையையும், அவரைச் சம்பந்தர் அடையாளம் கண்டு கொண்ட விதத்தையும்,

**''சிந்தை இடையறா அன்பும் திருமேனி தனில் அசைவும்**
**கந்தை மிதையாம் கருத்தும் கைஉழ வாரப் படையும்**
**வந்திழி கண்ணீர் மழையும் வடிவிற் பொலி திருநீறும்**
**அந்தமிலாத் திரு வேடத் தரசும் எதிர்வந் தணைய''**

**''கண்ட கவுணிய கன்றும் கருத்திற் பரவுமெய்க் காதல்**
**தொண்டர் திருவேடம் நேரே தோன்றிய தென்று தொழுதே**
**அண்டரும் போற்ற அணைந்தங் கரசும் எதிர்வந் நிறைஞ்ச**
**மண்டிய ஆர்வமும் பெருகமதுர மொழிஅருள் செய்தார்''**

என்று விரித்துரைக்கிறார் சேக்கிழார். நாவுக்கரசரைச் சம்பந்தர் கண்ட நிலையை ஓவியம் போலச் சித்திரித்துக் காட்டும் சேக்கிழார் கலித்தறம்

எண்ணத்தக்கது. மற்றும் சம்பந்தர் நாவுக்கரசரை முதன் முறையாகச் சந்திக்கும் வேளையில் நாவுக்கரசர் எழுபது வயதுடைய முதிர்ந்த பருவத்தினராய் திருமேனியில் உள்ள உறுப்புகள் ஓரளவு நடுங்கும் நிலையில் இருக்கிறார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

### ஒருவர் ஒருவரில் கலத்தல்

இருவரும் சிவனருள் பெற்ற சிவனருள் செல்வர்கள். ஒன்று போலச் சிறப்புடையவர்கள். சம்பந்தர் நாவுக்கரசரைக் கண்டு தொழுத படியே வருகிறார். அங்ஙனம் அவர் வருவதைப் பார்க்கும் நாவுக்கரசரும் அன்பின் பெருக்கினால் உள்ளுருகி அளவிடற்கரிய காதலுடன் தொழுத கரத்துடன் சம்பந்தர் திருவடி வணங்க வருகிறார். இங்ஙனம் இவ் இருவரும் கடும் கட்டத்தினைக் கூறவரும் சேக்கிழார், நாவுக்கரசர் சம்பந்தரோடு கூடிய கூட்டம் என்றோ, சம்பந்தர் நாவுக்கரசரோடு கூடிய கூட்டம்'' என்றோ கூறாமல் ''எம் பெருமக்களும் இயைந்த கட்டம்'' என்று புனைந்துரைக்கின்றார். (கூட்டம் கூடிய நிகழ்ச்சி, இயைதல் உணர்ச்சியில் ஒன்றாய் நயந்து கலத்தல்) இக்கருத்தையே தொடர்ந்து ''ஒருவரொருவரிற் கலந்த உண்மை'' என்று பாராட்டும் திறமும் அறியப்படுகிறது. எனவே எழுபது வயதுடைய முதியவராகிய நாவுக்கரசர், மிக இளம் பிராயத்தனராகிய சம்பந்தரை வணங்குவதா? என்ற கேள்விக்கோ, எண்ணத்திற்கோ இடம் இல்லை. இப்பெருமக்களின் அன்பின் உண்மை நிலை உணராதவர்களே இப்படிப்பட்ட வினாக்களை எழுப்பக் கூடும், எண்ணக் கூடும். இருவரும் நம்மால் ஒன்று போல் மதித்து வணங்கப் பெறும் சிறப்புடையவர். இச்செய்தி,

> **''பாடலங் காரப் பரிசில்கா சருளிப் பழுத்தசெந் தமிழ்மலர்குடி**
> **நீடலங் காரத் தெம்பெரு மக்களொஞ்சினு ணிறைந்து நின்றானை''**

என்று இவ்விருவரையும் போற்றும் சேந்தனார் திருவாக்கினாலும் விளக்கம் பெறுகிறது.

### 'அப்பர்'– ' அடியார்'

சம்பந்தர் தம் அடிகளில் வீழ்ந்து பணியும் நாவுக்கரசரின் கரங் களைத் தமது கரங்களால் பற்றி எடுக்கும் பரிவுமிக்க செயல் சம்பந்தரின் அன்பின் அளவளாலும் அருமைப் பாட்டினைப் புலப்படுத்துவதாகிறது. பாண்டிநாடு சமணர்களால் நிலைகுலைந்து சைவ சமயத்திற்கு இடர் வந்த போது பாண்டிமாதேவி மங்கையர்க்கரசியாரும், அமைச்சர் குலச்சிறையாரும் தூதுவர் வழியாக விண்ணப்பம் செய்தமையை ஏற்றுச் சம்பந்தர் பாண்டி நாடு வருகின்றபோது அவரது அடிகளிற் பணிந்த குலச்சிறையாரையும், மங்கையக்கரசியாரையும் இங்ஙனமே சம்பந்தர் தம் கைகளால் பற்றி எடுத்த பாங்கினைக் ''கரமலர்கள் பற்றியே எடுப்ப'' என்றும் இன்னருட் பெருஞ் சிறப்பொடுந்

திருக்கையால் எடுத்தார்'' என்றும் கூறும் இடங்களிலும் சம்பந்தரின் பரிவு கலந்த அன்பினைக் காண முடிகிறது.

அடுத்து நாவுக்கரசரின் கரங்களைப் பற்றி எடுத்துச் சம்பந்தர் 'அப்பரே' என்கிறார். நாவுக்கரசர் அடியேன் என்கிறார் என்ற நிகழ்விற்கு,

''நாவுக்கரசரைச் சம்பந்தர் அருமையுற அழைத்தமையால் நாவுக்கரசருக்கு ''அப்பர்'' என்ற பெயர் அமைகின்றது. இப்பெயரே பயின்று வழங்கப்படுதல் இதன் அருமைப் பாட்டினையும் சம்பந்தர் அப்போது கொண்ட அன்பின் ஆழத்தினையும் புலப்படுத்துகிறது. அப்பரே! ஏகாரம். நீவிர் அப்பரேயன்றோ? ஆதிலின் அடிபணிதல் தகாது என்ற கருத்துக் காட்டுவதாகும். அப்பர் என்றால் ஐயர், தலைவர், தந்தை போன்றவர் என்று பொருள்''.

நாவுக்கரசர் 'அடியேன்' என்கிறார். அப்பராந்தன்மையில் வைத்து நீர் அருளினாலும் நான் அடியேன் என்கிறார் ''என்ற உரை விளக்கமும்'' திருநாவுக்கரசர் என்றும் உமது அடியவனேயாம். ஆதலின் அடிபணிதிலே எனக்குத் தகுதி என்னும் பொருள்பட நாவுக்கரசர் தொண்டர்கள் நாயகம் என்று சொல்லத் தக்க அளவில் சைவ மெய்த் தொண்டர்களாகிய நாயன்மார் வரிசையில் தலைமை இடத்தில் இருப்பவர். அதன் காரணமாகவே சம்பந்தப் பெருமானும் அவரை 'அப்பர்' என்று அழைக்க, அவரோ 'அடியேன்' என்று எதிர்மொழி கூறி அருளினார். 'அப்பர் அடிமை' 'அடியேன்' என்ற சொல் அடிமைத் திறத்தைக் காட்டும் போது 'அப்பர்' என்பது தலைமைப் பண்பை உணர்த்த வந்த சொல்லாகக் கொள்வதில் தவறு இல்லை. எனவே தொண்டர்கள் நாயகமாகத் திகழ்ந்தே திருஞான சம்பந்தர் அப்பரை அங்கீகரிக்க அப்பர் தம்மைத் தம் தலைமைப் பண்பால் இறுமாந்து விடாமல், பணியுமாம் என்றும் பெருமை என்பதற்கேற்றபடி 'அடியேன்' என்றார் என்னும் அறிஞர் கருத்தும் சம்பந்தர் நாவுக்கரசர் பால் கொண்டிருக்கும் அன்பின் ஆழத்தையும் நாவுக்கரசரின் பணிவுடைமையும் தெளிவுறுத்துகின்றன.

'அப்பரே!', ''அடியனே'' என்றும் இரண்டே சொற்களில் சம்பந்தரின் அன்பின் ஆழம், நாவுக்கரசரின் பணிவு என்னும் இருபெரும் பண்பு களை உள்ளுறுத்தி இன்பக் காட்சியாக இருபெரும் மக்கள் கூடிய நிகழ்வினைப் படம்பிடித்துக் காட்டும் சேக்கிழாரின் கவித்திறம் எண்ணத்தக்கது.

**பழுதில் பெருங்காதல்**

முதன்முறையாகச் சீகாழியில் நாவுக்கரசரும், சம்பந்தரும் கூடிய போது அப்பெருமக்கள் கொண்ட காதல் என்றும் குறையாமல் ஓங்கி

யிருக்கிறது. இந்நிலையையே சேக்கிழார் ''பழுதில் பெருங்காதல்'' என்று சுட்டுகிறார். சீகாழியில் தொடங்கிய தோழமை பின்னர் இவ் இருபெருமக்களும் திருப்புகலூரில் கூடி, திருவீழிமிழலை திருமறைக்காடு சென்று காணும் நிகழ்ச்சிகள் வரை இடம்பெறும் இரண்டாவதுகட்டத்தில் வளர்கிறது. பின்பு, திருப்பூந்துருத்தி நிகழ்ச்சியில் ஓங்குகின்றது. 'மருவிய நண்புறு கேண்மை அற்றைநாள் போல் வளர்ந்து ஓங்க'' பெருகன்பு நண்பும் பொங்கிய காதலிற் கும்பிட்டு உணருஞ் சொன்மாலைகள் சாத்தியுடன் மகிழ் வெய்தியுறைந்தார்'' என்றும் சேக்கிழார் மொழிகள் இருபெருமக்கள் கொண்ட தோழமை என்றும் குறையாமல் வளர்ந்து விளங்கிய பாங்கினை அரண் செய்கின்றன. பழுதில் பெருங்காதல் இவ் இருபெருமக்களின் 'பழுதில் பெருங்காதல்' திறம் இப்பெருமக்கள் திருப்புகலூர், திருமுறைக்காடு, திருப்பூந்துருத்தி என்னும் மூன்று தலங்களில் கூடிய போது நிகழும் நிகழ்வுகள் வாயிலாகத் தெளிவுறுத்தப் பெறுகின்றது.

**திருப்புகலூர் நிகழ்வு**

நாவுக்கரசர் திருவாரூர் தியாகேசப் பெருமானை வழிபட்டு அங்கிருந்து, புறப்பட்டுத் திருப்புகலூர் எல்லையை அடைகிறார். அப்போது சம்பந்தர் சீகாழியிலிருந்து புறப்பட்டுப் பல திருப்பதிகளை வணங்கித் திருப்புகலூர் வந்து முருகநாயனாரது மடத்தில் தங்கியிருக் கிறார். நாவுக்கரசர் திருப்புகலூர் வருகிறார் என்னும் செய்தி கேட்டதும் சம்பந்தர் உள்ளத்தில் நாவுக்கரசரைக் காணும் ஆசை பெருகுகின்றது. அவரை எதிர்கொண்டு அழைக்க அடியார் கூட்டம் புடை சூழப் புறப்பட்டுச் செல்கிறார். சம்பந்தர் தம்மை எதிர்கொள்ள வருகிறார் என்று அறியும் நாவுக்கரசர் எல்லையில்லாத மகிழ்ச்சி கொள்கிறார். இருவரும் கடுகின்றனர். ஒருவருக்கொருவர் தமது அன்பின் முறைமையினாலோ எதிர் தாழ்ந்து வணங்குகின்றனர். பின்னர் இருவரும் சீகாழியிற் கூடிப் பிரிந்த பின்னர் அதுவரை இருவர் பாலும் நிகழ்ந்த திருவருளின் மங்கல நிகழ்ச்சிகளை நீ கேட்டு மகிழ்கின்றனர். பின்பு, சம்பந்தர் நாவுக்கரசுகளை நோக்கி, அப்பராகிய தாங்கள் இங்கு வரப்பெற்றமை பேரருளினால்யாம் பெற்ற பேறு ஆகும் என்று மொழிந்து, 'தங்கள் சேவித்த திருவாரில் நிகழும் திருவாதிரைத் திருநாளின் சிறப்பை எனக்கு எடுத்துரைப்பீரா' என்று கேட்கிறார். திருவாருரில் நிகழும் திருவாதிரைத் திருநாளின் சிறப்பை நான் என்னென்று எடுத்துரைப்பேன் என்று கூறி, ஆதிரைத் திருநாளின் சிறப்பை, ''முத்துவிதமான மணிப்பொன் கவர்'' என்று தொடங்கும் பதிக வாயிலாக எடுத்து மொழிகிறார் நாவுக்கரசர்.

மேலே விவரிக்கப்பட்ட செய்தியை,




மெய்திரு ஞானசம்பந்தர் வாக்கின்
வேந்தரை நோக்கி ''விருப்பினாலே
அப்பரை யிங்கணையப் பெறும்பே
ரருளுடை யோமியோ மந்தணாளூர்
எப்பரி சாற்றொழு துய்ந்த? ''தென்று
வினவிட வீறில் பெருந்தவத்தோர்
செப்பிய வண்டமிழ் மாலையாலே
திருவாதிரை நிகழ் செல்வஞ் சொன்னார்''

என்று கூறுகிறார் சேக்கிழார்.

இங்குச் சம்பந்தர், நாவுக்கரசரை 'அப்பரை' - அப்பராகிய தேவரீர் என்று தாம் நாவுக்கரசருக்கு இட்டழைத்த அப்பெயராலே விளிக்கின்ற பாங்கு சிந்திக்கத்தக்கது. உடனிருக்கும் தமது தந்தை சிவபாத கிருதயராகிய 'அப்பர்' இருக்கவும் சம்பந்தர் இங்கு நாவுக்கரசரையே 'அப்பர்' என மகிழ்கிறார். இச்செயல் ''அப்பரை இங்கு அணையப் பெறும் பேரருளுடையோம்'' என்னும் அவரது கூற்றாலும் விளக்கம் பெறுகின்றது. இந்நிகழ்வு இரு பெரு மக்களிடையே சீகாழியில் தொடங்கிய தோழமை அன்று போல் என்றும் செழித்து ஓங்குவதைக் காட்டவதாக உள்ளதல்லவா?

## திருமறைக் காட்டு நிகழ்வு

இரு பெருமக்களுக்கும் திருமுறைக் காட்டில் தங்கியிருக்கும் போது, சைவம் தழைக்க திருஞானசம்பந்தரை அழைத்து வருமாறு பாண்டிமதேவியார் மங்கையர்க்கரசியாரும், அமைச்சர் குலச்சிறையாரும் அனுப்பிய ஏவலர் சம்பந்தர் திருவடியில் வணங்கி, 'வைதிக சைவ நெறியை விடுத்து வழக்கு நெறியை அடுத்த சமணர்கள் புரியும் கொடுமைகளை இனி எங்களால் பொறுக்க முடியாது. தேவரிர் அங்கு வந்தருள வேண்டும்'' என்று விண்ணப்பம் செய்கின்றனர். '' அந்தச் சமணரது பொய்ந்நெறியை மாற்றிச் சைவ மெய்ந்நெறியை ஏற்றி இடர் களைவோம்'' என்று சம்பந்தர் தெய்த் திருநீற்றை நினைத்து எழுகிறார். ''உடனே நாவுக்கரசர் தடுக்கிறார். ஏன்? நாவுக்கரசர் சமணர்களால் பெரிதும் துன்புற்றவர். எனவே, அரசியாரின் ஏவலர்கள் சம்பந்தரை அழைத்த போது நாவுக்கரசர் குழந்தையைக் காக்கும் தாய் போல் நடந்து கொள்ளும் முறை குறிப்பிடத்தக்கது. நாவுக்கரசர் சம்பந்தரின் பேராற்றலை அறிந்தவர். சம்பந்தர் தலைமகனாக விளங்குபவர் என்பதை உணர்ந்தவர். தாயன்பின் முன் இலை மறக்கப்படுதல் போல நாவுக்கரசர் இவற்றையெல்லாம் மறந்து பேசுகிறார் என்பதைச் சேக்கிழார் காட்டும் பாங்கு அற்புதமானது.

வந்தவர்கள் சம்பந்தரை அழைக்கின்றனர். சம்பந்தரும் செல்லத் துணிகிறார். ''பிள்ளையாய்! தூய்மையும் வாய்மையும் இல்லாத சமணர்கள் மாயையில் சால வல்லவர்கள். அவர்கள் எனக்குச் செய்த தீங்குகள் பல. ஆதலால் நீர் அங்கு செல்ல நான் இசைய மாட்டேன் என்று கூறித் தடுக்கும் செய்தியை,...........

**''............................... பிள்ளாய்**
**அந்த அமன் கையர் வஞ்சனைக்கோர் அவதியில்லை**
**உரை செய்வது னது உறுதுகோள் தானும் தீய**
**எழுந்தருள உடன்படுவது ஒண்ணாது''**

என்று சேக்கிழார் கூறுகிறார்.

அஞ்சுவது யாதொன்றுமில்லை; அஞ்ச வருவதும் இல்லை என்று பாடிய நாவுக்கரசர் இப்பொழுது தடை செய்வது ஏன்? அது தான் தலையாய தாயன்பு. தான் எத்துணைத் துன்பத்தையும் தாங்கிக் கொள்வான். ஆனால் தன் குழந்தை துன்புற எந்தத் தாயும் விரும்ப மாட்டான் அல்லவா?

## திருப்பூந்திருத்தி நிகழ்வு

திருமறைக்காட்டில் நாவுக்கரசரிடம் விடைப்பெற்றுச் சென்ற சம்பந்தர் பாண்டி நாட்டின் தலைநகரமாகிய மதுரையில் சமணர்களை வென்று பாண்டியனது கூனை நிமிர்த்தியருளித் தென்னாடெங்கும் திருநீற்றின் ஒளி பரப்பி அங்கிருந்து மீண்டு சோழ நாட்டுத் திருத் தலங்களை வழிபட்டுக் கொண்டு வருகிறார். இந்நிலையில் ''வாசீக மாமுனிவர் எந்நகரில் எழுந்தருளினார்'' என்று கேட்கவும் 'பூந்துருத்தியில் உள்ளார்' என்று அடியார்கள் மறுமொழி கூறுகின்றனர். திருப்பூந் துருத்தியில் நாவுக்கரசர் இருக்கின்றார் என்பதை அறியும் சம்பந்தர் அவரைக் காண்பதற்காக வருகிறார். தான் மதுரைக்குச் சென்றால் எத்தகைய தீங்கு விளையுமோ என்று அஞ்சிச் செல்லக் கூடாது என்று தடுத்த தந்தை உறவு கொண்டவரை வெற்றியுடன் திரும்பி வரும் பிள்ளை காண வேண்டும் என்ற எண்ணுவது முறை தானே?

சம்பந்தர் திருப்பூந்துருத்தி அருகில் வந்து கொண்டிருக்கின்றார் என்பதைக் கேள்வியுறும் நாவுக்கரசர் சம்பந்தரை எதிர்கொண்டு போற்ற விரும்புகிறார். ''நந்தமை ஆளுடையாரை நாம் எதிர்சென்று இறைஞ்சுவது முந்தை வினைப்பயன்'' என்று புறப்பட்டுச் செல்கிறார். தம்மை இன்னாரென்று ஒருவரும் இனம் கண்டு கொள்ளாத முறையில் வந்து அடியார்கள் கூட்டத்தில் கலந்து கொண்டு, சம்பந்தர் அமர்ந்து வரும் சிவிகையைத் தாங்கி வருகிறார். அந்நிலையில் மைந்தனார் சம்பந்தர்,

"அப்பர் தாம் எங்குற்றார் இப்பொழுது என்று அருள்செய்யச்
செப்பரிய புகழ்த் திருநாவுக் கரசர் செப்புவார்
ஒப்பரிய தவஞ்செய்தேன் ஆதலினால் உம்மடிகள்
இப்பொழுது தாங்கி வரப்பேறு பெற்றுய்ந்தேன் யான்என்றார்"

இவ்வார்த்தை கேட்கும் சம்பந்தர் உள்ளப் பதைப்புடன் சிவிகையிலிருந்து விரைந்து இறங்கி, "இவ்வாறு செய்தருளிற்று என்னாம்?" என்று இறைஞ்சுதலும் செவ்வாறு மொழி நாவர், திருஞானசம்பந்தர்க்கு எவ்வாறு செயத் தருவது?" என்று எதிரே இறைஞ்சுகிறார். இந்நிகழ்வு கண்ட அடியார்கள் எல்லோரும் உளம் உருகித்தொழுது போற்றுகின்றனர்.

சம்பந்தர் சிவிகையில் அமர்ந்து வர, நாவுக்கரசர் தொண்டர் கூட்டத்துடன் தாமும் சுமந்து வரும் இந்நிகழ்வு நாவுக்கரசர் சம்பந்தரிடம் கொண்டிருக்கும் பேரன்பினைப் புலப்படுத்துவதாக உள்ளது. இந்நிகழ்வு குறித்துக் "குழந்தையைத் தூக்கித் தோளில் வைத்துக் கொள்ள ஆசைப்படாத தந்தையும் இவ்வுலகில் உண்டோ? பிள்ளையாய் என்று எந்த உரிமையுடன் அழைத்தாரோ அதே உரிமையுடன் தந்தையார், மகனார் வரும் பல்லக்கைச் சுமப்பதில் இன்பம் காணுகிறார்" என்னும் கருத்து, மேலே காட்டிய மெய்ம்மைக்கு வலுவூட்டுவதாகும்.

நாவுக்கரசரும் சம்பந்தரும் பழகிய முறையை எடுத்து மொழிவதன் வாயிலாகச் சேக்கிழார் விரித்துரைக்கும் இவ் இரு பெருமக்களின் தோழமை உணர்வுகள் செயல்கள் என்பன இன்றைய சமய உலகிற்கும் சமுதாயத்திற்கும் முன்னுதாரணங்களாக அமைகின்றன. ஊர்கள் தோறும் சென்று சிவபெருமானை வழிபடும் பொருட்டு இவர்கள் தலயாத்திரை மேற்கொள்ளும் போது, இவர்கள் உடலால் பிரிந்து இருந்தாலும் உள்ளத்தால் ஒன்றுபட்டுள்ளனர். ஒருவர் ஒருவரில் கூடிய காதலை நினைவு கூர்கின்றனர். கூடிப்பிரியும் நிலையில் இனி இப்போது சந்திப்போம் என்று பிரியாவிடை கொள்ளுகின்றனர்.

ஒட்டுமொத்தமாகக் கருதிப் பார்க்கும் போது இவ் இருபெருமக்களின் தோழமைத் திறம்,

"புணர்ச்சி பழகுதல் வேண்டா; உணர்ச்சி தான்
நட்பாம் கிழமை தரும்" - குறள் 496

"உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்" - குறள் 468

என்னும் வள்ளுவர் சிந்தனைக்கு இலக்கியமாகத் திகழ்கின்றது.

# 37. சம்பந்தர் வளர்த்த ஞானத்தமிழ்

கோ. சுப்பிரமணியனார், திருவையாறு.

''பொன்மாலை மார்பன் புனற்காழி சம்பந்தன்
தன்மாலை ஞானத் தமிழ்''

உலகெலாம் உணர்ந்து ஓதற்கரிய சிவபரம்பொருளும் - செந்தமிழும் ஒன்றே - வேறு - வேறல்ல. சிவத்திற்குரிய படைத்தல், காத்தல், அழித்தல், அருளல், மறைத்தல், ஆகிய ஐம்பேராற்றலும் தமிழ்க்குண்டு. எனவே, சிவமும் தமிழும் ஒன்றை ஒன்று பின்னிப் பிணைந்து பிரிக்க முடியாத அளவிற்குத் தமிழக மக்களின் உள்ளங்களில் குடியமர்ந்து அவர்களுக்கு வாழ்வளித்து வருகின்றன. இதனைச் சைவமும் - தமிழும் பேணிக்காத்தத் தோன்றிய அருளாளப் பெருமக்கள் வழிக்காணலாம். அவர்களுள் கி.பி. ஏழாம் நூற்றாண்டில் தோன்றிய சைவசமய ஆசாரியப் பெருமக்களுள் முதன்மையானவரான திருஞானசம்பந்தர் வழிக்காண்போம்.

**காலமும் - சூழலும்**

''ஆயிரம் ஆண்டுகட்கு ஒரு முறை ஓர் அறிஞன் தோன்றுவான்'' - என்பது ஆங்கிலப் பழமொழி. அம்முறையில் எப்பொழுதெல்லாம் நாட்டுநலன்களில் சமயத்திற்கோ கலைக்கோ, மொழிக்கோ, பண்பாட்டிற்கோ இழுக்கு - இடுக்கை நேரிடும்போல் தோன்றுகின்றதோ, அப்பொழுதெல்லாம் நாட்டு மக்களின் நலன் காக்க இறைவன் ஒரு தெய்வீக மனிதரை - ஓர் அருளாளரை அனுப்பி வைப்பது வழக்கம் - அம்முறையில் தமிழகத்தே - பல்லவர் ஆட்சிக் காலத்தே, வடமொழிக்கும்,- சமணத்திற்கும் ஏற்றம் வந்துற்றபொழுது, தமிழ் மொழியையும், தமிழ்ச்சமயத்தையும், தமிழ் மரபையும் காக்கவல்ல அருளாளர் தேவைப்பட்டார்: பழமை வாய்ந்த தமிழுக்கும், சைவ சமயத்திற்கும் பாதிப்பு ஏற்படாத வகையில் எதிர்த்துப் பாதுகாக்க வல்ல அருளாளர் ஒருவரைச் சிவபரம்பொருள் அனுப்பி வைத்தது. அதுவும் எத்தகையவரை,...?

உலகில் இதுவரை எங்கும் - எவரும், கண்டறியாத, கேட்டறியாத வகையில் ஒரு குழந்தையைச் சீர்காழிப்பதியில் தோற்றுவித்து மூன்று வயதிலேயே இறையருள் ஞானத்தோடு கூடிய இசைத்தமிழ்ப் பாமாலை களைப் பாடும் அறுபுதம் காட்டி, உலக மக்களையே வியப்பிலாழ்த்தியது. இதனையே...

"திசை அனைத்தின் பெருமைஎலாம் தென்திசையே வென்றுஏற
மிசை உலகும் பிறஉலகும் மேதினியே தனிவெல்ல
அசைவுஇல்செழும் தமிழ்வழக்கே அயல்வழக்கின் துறைவெல்ல
இசைமுழுதும் மெய்அறிவும் இடம்கொள்ளும் நிலைபெருக"...
(24)

...."சிவம்பெருக்கும் பிள்ளையார் திருஅவதாரம் செய்தார்"-
(26)

-எனச் சேக்கிழார் பெருமான் தம் திருத்தொண்டர் புராணத்தே அருளிச் செய்வார்.

### ஞானக் குழந்தை

கி.பி. 638 - 654 - இக்காலம் ஞானக்குழந்தை பிறந்து வளர்ந்த பொற்காலம். மூன்று வயதில் அன்னை அளித்த அமுதப் பாலுண்டு, ஞானத்தமிழ் கொண்டு, ஞாலம் வலம் வந்தது. அக்குழந்தை சிவணுறையும் தலங்கள்தோறும் நடந்து சென்று, தேனமுதத் தீந்தமிழ் இசைப்பாடல்களாற் பரமனைப் பாடிப்பரவி வந்தது. பார்த்தவரெல்லாம் பரவசமடைந்தனர். இவ்வயதில் இப்படி ஒரு விந்தையா? இறையருட்டிறத்தை எண்ணி வியந்தனர் - மக்கள் தாமும் இணைந்து சிவம்பேணினர், சைவம் பரப்பினர், ஞானசம்பந்தக் குழந்தை பாடிய ஞானத்தமிழால் சைவ சமயம் தழைத்தோங்கத் தொடங்கியது; உலகே போற்றிப் புகழ்ந்தது.

### ஞானத்தமிழ்

திருஞானசம்பந்த சுவாமிகள் தோன்றிப் பதினாறு ஆண்டு காலந்தான் வாழ்ந்தார்கள் என்றாலும், அவர் பாடிய ஞானத்தமிழ்ப் பாடல்கள் பதினாறாயிரம் என்பர். (கிடைத்துள்ள பதிகங்கள் மூன்னூற்று என்பத்து நான்கு) அம்ம ! அம்ம ! என்னே அவர்தம் ஆற்றல்.

ஞானக்குழந்தை பாடிய தமிழ்ப்பாக்கள் அத்தனையும் இயற்றமிழோடு இசைத்தமிழ் இணைந்து சந்நப்பாடல்களாகவே வெளிவந்தன. இதனை, இசைத்தமிழ் நூல் வழி ஆயும்பொழுது இதனை **"வாரப்பாட்டு"** என்பர்.

**"வாரம் என்பது வகுக்கும் காலை
நடையிலும் ஒலியினும் எழுத்தினும் நோக்கி
தொடையமைத்து ஒழுகும் தொன்மைத் தென்ப...."**

என்பது சிலப்பதிகாரம் அரும்பத வுரைக்காரர். அடியார்க்கு நல்லார் காட்டும் இசைத்தமிழ் பற்றிய பழஞ்சூத்திரமாகும். எனவே, தெய்வம் சுட்டிவரும் வாரப்பாட்டு - தேவாரமாதலின் - ஞானசம்பந்தரின்

பாடல்களும் உலக - வழக்கில்''தேவாரம்'' என்றே வழங்கி வருவதனை நாம் அறிவோம். மேலும். தலம் தோறும் பாடிவரும் பாடல்கள் பத்துக் கொண்டதனை ''பதிகம்'' என்பர். இவரது பாடல்கள் கடைக்காப்புடன் பதினொன்னறாயிலங்கும்

## ஞானத் தமிழ் மூலம் முத்தமிழ் வளர்ச்சி

சங்க காலந்தொட்டுத் தமிழை, இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என முக்கூறுபடுத்தி ''முத்தமிழ்'' என்றே கூறிவந்தனர். தமிழன்னை ஔவைப்பிராட்டியார் விநாயகரிடம் ''நீ எனக்கு சங்கத் தமிழ் மூன்றும் தா''- எனப்பாடுவார். வேறு எந்த மொழிக்குமில்லாத தனிச்சிறப்பு - உயர்தனிச்செம்மொழியாகிய தமிழுக்குண்டு. இக்காலத்தே பள்ளி கல்லூரிகளில் நம் வீட்டுப்பிள்ளைகள் தமிழ்வழிப்பயின்று வரும், அறிவுக் கலைகள்தான் எத்தனை எத்தனை? சரிதத்தமிழ், வரலாற்றுத் தமிழ் என்பதோடு புவியியல்,கணிதஇயல், தொழில்நுட்ப இயல் அத்துடன் இன்று அதிநுட்பத்திறன் வாய்ந்த கணிணிஇயல் - எனப் பலவகைக் கலைகள் உருவாகி தமிழ்வழி விரிவாக்கம் பெற்றுள்ளதனை அறிவோம், என்றாலும் இவையனைத்தும் இயற்றமிழ் வழியதேயாகும் என்றாலும், ஞானசம்பந்தப்பெருமானின் தமிழோ - இயல், இசை, நாடகமென்னும் ''முத்தமிழ்'' வழி இயங்கும். அதனால் தான் ஞானசம்பந்தர் தம்மை, ''முத்தமிழ்வீரகர்'' - என்றே அறிமுகப் படுத்திக்கொள்வார். இதற்கு திருவையாற்றுப் பதிகங்களே தக்க சான்றாயமைகின்றன.

## இயற்றமிழ்

ஞானசம்பந்தர் ஐயாற்றெம்பெருமானிடம் பொதிந்துள்ள ஒப்பற்ற தனிப்பெரும் ஆற்றலை அவர்தம் அருட்கண்ணால் அறிந்துணர்ந்தவாறு பாடகின்றார். இதோ பாருங்கள்

**''புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி**
**அறிவழிந் திட்டைம் மேலுந்தி**
**அலமந்த போதாக அஞ்சேலென்**
**றருள்செய் வான்அமருங் கோயில்**
**வலம்வந்த மடவார்கள் நடமாட**
**முழவதிர மழையென் றஞ்சி**
**சிலமந்தி அலமந்து மரமேறி**
**முகில்பார்க்கும் திருவையாறே''** (13)

இக்கோயிலில் வலம்வரும் மடந்தையர் முழவு முழங்க நடனமாடி வரும் அழகைக் கண்டார்; வியந்தார்; மகிழ்ந்தார்; பாடினார் - அருமையான கற்பனையுதமாகிறது. பக்கவாத்திய முழவு அதிரும்

ஒலிகேட்டு மந்திகள், மழைவரப்போகிறது, இதோ இடி இடிக்கிறதே என அஞ்சி மரத்தின் உச்சியில் ஏறிக்கொண்டு மழை மேகமூட்டம் உளதா என வானத்தில் மேகத்தைப் பார்த்து ஏமாறுமாம். அத்தகைய வளம் செறிந்த திருவையாறு - என அருமையாக இயற்கை வளத்தோடு இணைந்துப் பாடுவார்.

**இசைத்தமிழும் - நாடகத் தமிழும்**

ஞானசம்பந்தர் ஐயாற்றுத் திருவீதி வழி வருகிறார். ஆங்கே, வீடுகளில் இளம்மகளிர் தாமே பாடலுக்கு இசையமைத்துப் பாடும் அளவிற்கு இசைஞானம் பெற்றிருப்பதைக் காண்கிறார். காரிகையார் காந்தாரப் பண்ணில் தாமே இமையமைத்துப் பாடுவதையும், அதற் கேற்பச் சேயிழையார் நடமாடுவதையும் தாமே நேரில் கண்டு பாடி மகிழ்கின்றார். மகிழ்வதோடு அவர்கள் எப்படி ஆடுகிறார்கள் என்பதை ''தரணதீம் தோம் தாம்'' எனும் அலாரிப்புடன் ஆடுவதைத்தம் ஆடற்கலை - ஞானத்தோடு நமக்கு அறிவிக்கவும் செய்கிறார்.

**''காந்தாரம் இசையமைத்துக் காரிகையார்**
**பண்பாடக் - கவினார் வீதித்**
**தேந்தாமென் றரங்கேறிச் சேயிழையார்**
**நடமாடுத் திருவையாறே;''-** (6)

''நட்டுவாங்கம்'' எவ்வாறு நடைபெறுகிறது என்பதை அப்படியே படம்பிடித்துக் காட்டுகிறார். நட்டவனார் அவிநயக் கோல்கோண்டு ஆட்டுவதற்கேற்ப வளையணி மகளிரும், நகையணி மகளிரும் நடனமாடுகின்றனராம் - இதனை,

**''கோலாடக் கோல்வளைமார் கூத்தாடத்**
**குவிமுலையார் முகத்தினின்று**
**சேலோடச் சிலையாடச் சேயிழையார்**
**நடமாடுத் திருவையாறே''-**

என அற்புதமாகப் பாடுவார். அதுமட்டுமல்ல. ஐயாற்றெம்பெருமானே ஆடற்கலை வித்தகன் - தக்க பக்க வாத்தியங்களுடன் **''பாண்டரங்கம்''** என்ற கூத்தை அவன் எவ்வாறு ஆடுகிறான் என்பதை, அச்சந்தத்துடன் பாடும் அழகே அழகு அவரோடு நம்மையும் பாடி ஆட வைக்கிறார்.

''பாடல் - வீணை முழவம் குழல் மொந்தை பண்ணாகவே
ஆடுமாறு வல்லானும் ஐயாறுடை ஐயனே''-

''கட்டுவட மெட்டுமுறு வட்டமுழ வத்தின்
கொட்டுகர மிட்டவொலி தட்டும்வகை நந்திக்
கிட்டழிக நட்டமவை யிட்டவ ரிடஞ்சீர்
வட்டமதி லுட்டிகழும் வண்திருவை யாறோ''

என, ஐயாற்றண்ணல் தம் அற்புதச் சிறப்பை, ஆடலழகை ஞானத் தமிழ்வழிக்கண்டோம்.

**தமிழ்க்காதலன்**

திருஞானசம்பந்தப் பெருமான் தமிழ் மாட்டுத்தாம் கொண்டிருந்த அன்பை, பக்தியை, தனியாத காதலைப் பதிகந்தோறும் வெளிப்படுத்திக் காட்டும் அருமையே அருமை.

தம்பெயர்மீது ''தமிழ்ஞானசம்பந்தன்'' - என்றும், ''நற்றமிழ்க்கின் துணை ஞானசம்பந்தன்'' (1-76-11) என்றும் 28 இடங்களில் தம்மை அடையாளம் காட்டிக்கொள்வார்.

இதனால் இவர் தமிழில் வல்லவர், புலமைமிக்கவர் என்பதனை நாம் அறிந்து கொள்வதற்காகவே இம்முறையைக் பின்பற்றுவதாகக் கொள்ளலாமன்றோ? மேலும் இவர் தமிழ் முழுதுமறிந்த தமிழராக **''தமிழாகரர்''** ஆகத் திகழ்கிறார்.

> **''முத்தமிழ் நான்மறை ஞானசம்பந்தன்'' ''தமிழ் விரகன்'',**
> **''தமிழ்க் கிழமை ஞானன்", "அருந்தமிழ் கற்று முற்றுமாயினான்",**
> **''ஞாலம் மல்கும் தமிழ்ஞானசம்பந்தன்'', ''புகலிக்குமன்'',**
> **''தமிழ் நாதன் ஞானசம்பந்தன்'', ''தமிழ்க்கிளவி இன்னிசை**
> **செய்ஞான சம்பந்தன்'', ''சந்தமொடு செந்தமிழ் இசைத்த**
> **புகலி பந்தன்,''**

என்றெல்லாம் கூறி, ''சந்தையால் தமிழ் ஞான சம்பந்தன் (சந்தை - சந்தசு - வேதம் - திராவிடவேதம்) என திருக்கடைக்காப்பில் வெளியிடுவது மூலம் இறைஞானத்தை வடமொழியில் மட்டுமே தரமுடியும் என்ற நிலையிருந்ததனை மாற்றி சம்பந்தர்தான் தமிழிலும் தரமுடியும் என்று நிலைநிறுத்திக் காட்டினார்.

நற்றமிழ், செந்தமிழ், ஒண்டமிழ், அருந்தமிழ், தண்தமிழ், திருநெறியதமிழ், முத்தமிழ், ஞானத்தமிழ், இன்தமிழ், வண்தமிழ், புகலித்தமிழ், மறைஇலக்குதமிழ், இசைமலிதமிழ், சங்கமலிதமிழ், செந்தண்தமிழ், சந்தாமார்தமிழ் என தமிழுக்குரிய அடைமொழிகள் பதினாறனை, தம் பதிகங்கள் பதித்துள்ளது கொண்டும் - இவரைச் சிறந்த **''தமிழ்க்காதலன்''** - என்றே வழங்கி மகிழலாமன்றோ?

**கவிமரபின் புதிய உத்தி**

தமிழை - இவர் காலத்திற்கு முன், எவரும் செய்தறியாத அனவிற்கு செயற்பாடு உடையதாக ஆக்கினார். புதிய - புதிய இலக்கிய

உத்திகள் - யாப்பில் புதுமை, தமிழ்இசை மரபில் புதுமை, புதிய சந்த தாள ஒழுங்கில் புதுமை, அத்துடன் எண்ணலங்காரம், சித்திரக்கவிமரபு என்று பல்வேறு தளங்களில் புதுமை காட்டி மூல முதல்வராக ஞானசம்பந்தர் விளங்குகிறார். திருஎழு கூற்றிருக்கை ஒன்று முதல் ஏழு வரை ஏறுமுகமாகவும், இறங்குமுகமாகவும் பயன்படுத்தும் என்னலணங்காரம். திருவியமகம் மாலை மாற்று, சக்கரமாற்று, நாலடி மேல்வைப்பு, ஈரடிமேல்வைப்பு என்ற கவிமரபில் ஞானசம்பந்தர் காட்டும் புதிய உத்திகள் அவரது சிறந்த சாதனையாகும்.

**ஞானத்தமிழ் காட்டும் நன்னெறிகள்**

சைவ சமையத்தின் உயிர்ப்புக் கொள்கையாகிய சைவசித்தாந்தக் கருத்துப் பழிவினை இவரது தேவாரத்தே பல்லிடத்தும் காணலாம்.

இவ்வாறே, புராண இதிகாச சரிதக் கருத்துகளை, தமிழுக்குத் தெய்வத்தன்மை ஏற்றிட, தொன்மக் கதைகளை பதிகந்தோறும் எட்டு, ஒன்பது பாடல்களில் காணமுடிகிறது.

அடுத்து, ஞானசம்பந்தர் பதிகம் என்றாலே அத்தல இயற்கை வளத்தினை வனப்பினை அழகுறப் படம்பிடித்துக் காட்டுவது - இவருக்குக் கைவந்த கலை என்பதற்குச் சான்று:

**''வண்டினம் துத்தம் நின்று பண்செயும்**
**சூழ் பொழில் துருத்தி''** - என்பதாம்

தமிழிசைப்பண்களை - இசை நுட்பத்துடன் அழகுற - இனிமை ததும்பப் பாடுவது பாராட்டிற்குரியது. அத்துடன்,

ஞானசம்பந்தரின் பாடல்களில், அக்கால நாட்டின்நிலை, மக்கள்நிலை, மக்களது பழக்க ஒழுக்கங்கள், பக்திநெறி போன்ற பல செய்தியை அறிந்து மகிழ்கிறோம்.

**''சங்கத் தமிழ்''** - என்று தமிழைச் சங்கத்துடன் இணைத்துக் காட்டும் இயுல்பும், இலக்கிய வளமும், அக்த்துறைப் பாடலினிமையும் - செய்யுள் நயத்துடன் அவர் காட்டும் அருமையே அருமை.

**ஞானத்தமிழ் செய்த அற்புதங்கள்**

''தமிழுக்கு அமுதென்று பெயர்'' - அமுதத்தின் தன்மை இனிமை யுடையது. மட்டுமல்ல; சாவா - மூவாத் தன்மையதாம், இன்றே போல் என்றும் இருக்கச் செய்வது; அதுபோலத்தமிழ் - தெய்வத் தன்மை வாய்ந்தது மட்டுமல்ல; தெய்வம் செய்யும் அத்தனையும் ஆற்றி தெய்வத்தமிழாய இலங்குவது. தமிழ்-சார்ந்தார் தாமும் தெய்வீக ஆற்றல் மிக்கோராய் இருப்பாராயின் சொல்லவும்

வேண்டுமா? 'பொன்மலர் நாற்றமுடைத்தாதல் போன்று - ஆதிபரா சக்தியாம் அன்னை அளித்த அமுதப்பாலுண்ட மூன்று வயதுக் குழந்தை - ஞானக்குழந்தை ஆயிற்றே அக்குழந்தை வாயிலிருந்த வந்த சொல்லனைத்தும், ஞானமயமாய் இசைமயமாய் தெய்வமணம் பரப்பியதே! எடுத்த எடுப்பிலேயே ''தோடுடைய செவியன்'' - நட்டப் பாடைப் பண்ணில் பாடி உலகையே வியப்பிலாழ்த்திடவில்லையா?

அடுத்து சில நாட்களில், சீர்காழிக்கருகில் உள்ள **திருக் கோலக்காவைத்** தரிசிக்க விரும்பி, தந்தையார் தோளில் அமர்ந்து சென்ற - கோலக்கா அண்ணலாரைத் தக்கராகப் பண்ணில் - ''மடையில் வாளை பாயமாதரார்'' என்ற அருமையான பதிகத்தை கைத்தாளம் போட்டுப்பாடியதும் - இதனைக் - கேட்டு மகிழ்ந்த இறைவன், குழந்தையின் கை வலிக்குமே என மனமிரங்கி பஞ்சாக்கரம் பதித்த பொற்றாளம் இரண்டை வழங்கினாரான்றோ?

சிதம்பரம் தரிசித்து, **திருநெல்வாயிலரத்துறையை** அடையும் பொழுது, தந்தையார் தோளினின்றும் இழிந்து நடந்து சென்றார். 3-4 வயதிருக்கும் களைப்புற்ற பிள்ளையாருக்கு இரங்கிய பெருமான் திருக்கோயில் முத்துச்சிவிகை, குடைச்சின்னங்களை வழங்கியதும் ஞானக்குழந்தை, பியந்தைக்காந்தாரப் பண்ணில் ''எந்தை ஈசனெம் பெருமான்'' – பதிகம் பாடி மகிழ்ந்ததும் ஒப்பற்ற ஒன்றாம்.

தம் உபநயனச் சடங்கிற்கு வந்த மறையோர்க்கு 'துஞ்சலும் துஞ்சலிலாத போழ்தினும்'' – எனும் பஞ்சாக்கரப் பதிகத்தை ஓதி அருளுபதேசமாக வழங்கியதும் பெருமைக்குரியதே.

**''திருப்பாச்சிலாச்சிரமம்''** – என்ற தலத்தே கொல்லிமழவன் என்ற மன்னன் மகள் **''முயலகன்''** எனும் கொடிய நோயினால் அவதியுறுவது கண்டு, தக்கராகப் பண்ணில் – ''துணிவளர் திங்கள் துளங்கி விளங்க'' – பதிகம் பாடி அந்நோயைத் தீர்த்து அற்புதம் காட்டியதும் மேலாய ஒன்றாம்.

இவ்வாறே தம், பதினாறு ஆட்டைக் காலத்திற்குள் செய்த அற்புதங்கள் அளவிலாதன – விரிக்கில் பெருகும். எனவே அவை யனைத்தையும் **திருஞானசம்பந்தர் திருவுலாமாலை** வழிக்காண்போம்:

**''ஞானத்தின் ஏறிய மன்னுநனி பள்ளியது**
**பாலைதனை நெய்தலாக்கியும் – காலத்து**
**நீரெதிர்ந்து சென்று நெருப்பிற் குளிர்ப்படைத்தும்**
**பாரெதிர்ந்த பல்விடங்க டீர்த்துமுன் – னேரெழுந்த**
**யாழைமுரித்து மிருங்கதவந் தானடைத்துஞ்**
**சூழ்புனலி லோடத் தொழில் புரிந்துந் – தாழ்பொழிற்**

கொங்கிற் பனிநோய்ப் பரிசனத்தைத் தீர்ப்பித்துந்
துங்கப் புரிசைத் தொருமிழலை – யங்கதனி
னித்தன் செழுங் காசு கொண்டுநிவா நல்வாயின்
முத்துச் சிவிகை முதல்கொண்டு – மத்தகுசீர்
மாயிரு ஞாலத்து மன்னாவடு துறைபுக்கு
காயிரஞ் செம்பொனது கொண்டு – மாய்வரிய
மாண்புதிகழ் பெருமான் மன்னுதிரு லோத்தூர்ப்புக்
காண்பனைகள் பெண்பனைக ளாக்கியும் – பாண்பரிசிற்
கைப்பாணி யொற்றிக்காழிக் கோலக்கா விற்பொற்
சப்பாணி கொண்டு தராதலத்து – னெப்பொது
நீக்கரிய வின்பத் திராக மிருக்குக்குற
ணோக்கரிய பாசுரம் பல்பத்தோடு – மாக்கரிய
யாழ்முரி சக்கரமாற் றீரடி முக்காலும்
பாழிமையாற் பாரகத்தோர் தாமுய்ய – வூழி
புரைப்பமரும் பல்புகழா லோங்கவுமை கோனைத்
திருப்பதிகம் பாடவல்ல சேய்... ... ...”

–திருஞானசம்பந்தர் திருஉலாமாலை

ஞானப்பாலுண்ட ஞானக்குழந்தைதம் ஞானத்தமிழால், சைவ சித்தாந்தத்தின் விழுப்பொருள்கள், புராண இதிகாச சரிதக் கருத்துக்கள், அக்கால நாட்டின் நிலை, மக்கள் நிலை, பக்தி நெறி போன்றவற்றுடன் தமிழை, சங்கத்தமிழுடன் இணைத்துக் காட்டும் இயல்பும், இலக்கிய வளமும், அகத்துறைப் பாடலினிமையும், செய்யுள் நயத்துடன் காட்டும் திறனாய்வும் அருமையினும் அருமை. அவருக்கு நிகர் அவரே.

# 38. சம்பந்தரின் தமிழ்ப் பற்று

ச.வே. சுப்பிரமணியன், தமிழூர்.

**தமிழ்** என்ற சொல்லுக்கு இனிமை, நீர்மை, முத்தமிழ், மொழி, நூல், தமிழ் மக்கள், தமிழ்நாடு, தமிழின் சிறப்பாகிய அகப்பொருள் போன்ற பல பொருள்களைச் சுட்டும். தமிழ் என்ற சொல்லில் த–வல்லினம், மி–மெல்லினம், ழ்–இடையினம். இவ்வாறு தமிழ் என்ற சொல்லில் மூன்று இனங்களும் உள்ளன. அதோடு த–என்ற எழுத்தின் த்–தகர ஒற்றும், அ–என்ற உயிர் எழுத்தும் உள்ளன. மி–என்பதில் ம்–என்ற ஒற்றும், இ–என்ற உயிரும் உள்ளன. உயிர் எழுத்துக்களில் மிக முக்கியமானவை அகர இகர உகரம், இம்மூன்றில் அ,இ தமிழில் உள்ளன.

தமிழ் பற்றி ஏறத்தாழ 60 அடைகளுக்கு மேல் கூறித் தமிழின் பெருமையை ஞானசம்பந்தர் உணர்த்துகிறார்.

**தமிழ்** – இலங்கு வெண்பிறையானை ஏத்திய தமிழ் இவைவல்லார். (2496)

1. **அருந்தமிழ்** 1. கற்றுமுத்தினார் தொழும் கழுமலத்து அருந்தமிழ் (2538), 2. ஆய்ந்து சொன்ன அருந்தமிழ்கள் பத்தும் (2713), 3. பன்னிய அருந்தமிழ்ப் பத்தும் வல்லார் (2833), 4. விலையுடை அருந்தமிழ் (2844), 5. சொல்லிய அருந்தமிழ் பத்தும் வல்லார் (2964), 6. அருந்தமிழ் ஞானசம்பந்தன் செந்தமிழ் விரும்புவார் அவர்கள் போல் விண்ணுலகு ஆள்வரே (3062), 7. ஞானசம்பந்தன் சொன்ன **அருந்தமிழ்** மாலைகள் பாடிஆட கெடும் அருவினையே (3798).

2. **ஆறா அருந்தமிழ்** 1. ஆறா அருந்தமிழ் மாலை இவை வல்லா (968).

3. **இசைமலித் தமிழ்** 1. இசைமலித் தமிழ் ஒருபதம் வலவர் உலகினில் எழில் பெறுவரே (238).

4. **இன்தமிழ்** 1. பத்தன் ஞானசம்பந்தனது இன்தமிழ் பத்தும் பாடிப் பரவுமே (611), 2. பெண்ணார்மேனி எம் இறையை பேரியல் இன் தமிழால் (700), 3. முடிவில் இன்தமிழ் செடிகள் நீக்குமே

(1024), 4. நன்றுணர் ஞானசம்பந்தன் சொன்ன இன்தமிழ் இவை சொல இன்பமாமே (1206), 5. நலமலி ஞானசம்பந்தனது இன்தமிழ் (1303).

5. **இன்புறும் தமிழ்** 1. இன்புறும் தமிழால் சொன்ன ஏத்துவார் வினை நீங்கிப்போய் (2323).

6. **உருவாரும் ஒண்தமிழ்** 1. உருவாரும் ஒண்தமிழ் மாலை இவை வல்லால் (1622).

7. **எழுதுமொழி தமிழ்** 1. பழுதில் இறை எழுதுமொழி தமிழ்விரகன் வழிமொழிகள் மொழிதகையவே (3525).

8. **ஏரினார் தமிழ்** 1. ஏரினார் தமிழ் வல்லார்க்கு இல்லையாம் பாவமே (3128).

9. **ஏறுபல்பொருள் முத்தமிழ்** 1. ஈனஞானிகள் தம்மொடு விரகனே ஏறுபல்பொருள் முத்தமிழ் விரகனே (4045).

10. **ஒண்தமிழ்** 1. ஒளிகொள் சம்பந்தன் ஒண்தமிழ் பத்தும் வல்லார்கள் போய் மலிகொள் விண்ணிடை மன்னிய சீர்பெறுவார்களே. (1535), 2. தணிகொண்ட சிந்தையவர் காழி ஞானமிகு சம்பந்தன் ஒண்தமிழ்களின் அணிகொண்ட பத்தும் இசைபாடு பத்தர் அகல் வாணம் ஆள்வர் மிகவே (2431), 3. ஞானசம்பந்தன் ஒண்தமிழ் மாலைகொண்டு (2822) 4. உரைதெரிந்து உணரும் ஞானசம்பந்தன் ஒண்தமிழ் வல்லார். நரைதிரி இன்றியே நன்னெறி சேர்வரே (3158), 5. உறும்பொருளாற் சொன்ன ஒண்டமிழ் வல்லார்க்கு அரும்பழி பாவம் அவலம் இலரே (4147).

11. **ஒளிர்பூந்தமிழ்** 1. ஒளிர்பூந்தமிழ் மாலை உரைத்த பாடல் இவை வல்லார் (2101).

12. **கலைமலி தமிழ்** 1. கலைமலி தமிழ் இவை கற்றுவல்லார் (1303).

13. **கலைவல தமிழ்** 1. தன்னியல் கலைவல தமிழ் விர கனதுறை (1336).

14. **குலமார் தமிழ்** 1. குலமார் தமிழ் கூறுவர் கூர்மையரே. (1654).

15. **குலவேந்தன் செந்தமிழ்** 1. கொந்தணவும் பொழில்புடைசூழ் கொச்சைமேவு குலவேந்தன் செந்தமிழின் சம்பந்தன் (2091).

16. **குற்றமில் செந்தமிழ்** 1. குற்றமில் செந்தமிழ் கூறவல்லார் (1227).

17. **குன்றாத் தமிழ்** 1. குன்றாத் தமிழ் சொல்ல குறைவின்றி நிறை புகழே (194).

18. **சங்கமலித் தமிழ்** 1. சங்கமலி செந்தமிழ்கள் பத்துமிவை வல்லவர்கள் சங்கையிலரே (3602).

19. **சந்தநிறை தண்தமிழ்** 1. சந்தநிரை தண்தமிழ் தெரிந்துணரும் ஞானசம்பந்தனது சொல் (3634).

20. **சந்தம் இன் தமிழ்** 1. சந்தமின் தமிழ்கள் கொண்டு ஈத்தவல்லார். (1236).

21. **சந்தமே பாடவல்ல தமிழ்** 1. சந்தமே பாடவல்ல தமிழ் ஞானசம்பந்தன் (1600).

22. **சந்துலாந் தமிழ்** 1. சந்துலாந்தமிழ் மாலைகள் வல்லவர் தாங்குவார் புகழாலே (2658).

23. **சந்தமாலைத் தமிழ்** 1. சந்தமாலைத் தமிழ் பத்தி வைத்தரித் தார்கள்மேல் (2790).

24. **சந்தமார் தமிழ்** 1. சந்த மார்தமிழ் கேட்ட மெய்ஞ் ஞானசம்பந்தன் (3308).

25. **சீர்இன்புறும் தமிழ்** 1. சீர்இன்புறும் தமிழால் சொன்ன (2323)

26. **சீர்மிகுந்த தமிழ்** 1. சீர்மிகுந்த தமிழ்வல்லார் சிவலோகஞ் சேர்வாரே (655).

27. சீரின் மலி செந்தமிழ்கள் 1. பாரின்மலிகின்ற புகழ் நின்றதமிழ் ஞானசம்பந்தன் உரைசெய் சீரின்மலி செந்தமிழ்கள் செப்புமவர் சேர்வர் சிவலோக நெறியே (3613).

28. **செந்தமிழ்** 1. நார்மலிந்தோங்கு நான்மறைஞான சம்பந்தன் செந்தமிழ் வல்லார் (447), 2. பாமரு செந்தமிழ் மாலை பத்திவை பாடவல் வார்கள் (469), 3. சண்பை ஞானசம் பந்தன செந்தமிழ் (622), 4. பரவிய செந்தமிழ் பத்தும் வல்லார் (1184), 5. குற்றமில் செந்தமிழ் கூறவல்லார் (1227), 6. திறம்பையில் ஞானசம்பந்தன செந்தமிழ் பத்தும் வல்லார் (1258), 7. செல்வன் ஞானசம்பந்தன செந்தமிழ் (1458), 8. செந்தமிழ் தசிங் கடல் தரும புரம்பதியைப் (1469), 9. நாடி ஞானசம்பந்த செந்தமிழ் கொண்டிசை (1546), 10. நன்றுகாளி மறைஞான சம்பந்த செந்தமிழ் (1546), 11. சந்தமாற் சொன்ன செந்தமிழ் வல்லவர் (1557), 12. திருஞான சம்பந்தன செந்தமிழ்கள் (1687), 13. தலமார் தருசெந்தமிழின் விரகன் (1730), 14. பந்தனுரை செந்தமிழ்கள் பத்தும் இசைகூர (1785), 15. தேனமர் பூம்பாவைப் பட்டாகச் செந்தமிழான் (1981), 16. ஞான சம்பந்தன் செந்தமிழ் உரை (2003), 17. செந்தமிழின் சம்பந்தன் சிறைவண்புனல் சூழ் திருந்நலூர் (2091), 18. ஞானசம்பந்தன்

செய்த செந்தமிழ் பத்தும் சிந்தையில் சேர்க்க வல்லார் (2463), 19. பரவுசம்பந்தன் செந்தமிழ் வல்லவர் பரமனைகப் பணிவாரே. (2582), 20. நாடி ஞானசம்பந்தன் செந்தமிழ் (2691), 21. செல்வரராக நினையும்படி சேர்த்திய செந்தமிழ் (2779), 22. ஞானசம்பந்தன் செந்தமிழ் பாடியாடக் கெடும் பாவமே (2888), 23. ஞான சம்பந்தன் பண்ணிய செந்தமிழ் பத்தும் வல்லார் (2986), 24. நண்ணிய செந்தமிழ் ஞானசம்பந்தன் சொல் (3095), 25. ஞானமார் ஞானசம்பந்தன செந்தமிழ் (3180), 26. திருத்தமான் திகழ்காள் காழிஞானசம்பந்தனின் செப்பிய செந்தமிழ் (3210), 27. சிந்தை யால் சொன்ன செந்தமிழ் வல்லவர் (3276), 28. குலவு ஞானசம்பந்தன் செந்தமிழ் (3297), 29. நண்ணிய செந்தமிழால் மிகு ஞானசம்பந்தன் (3470), 30. எந்தையடி வந்துஅணுகு சந்தமொடு செந்தமிழ் இசைத்த புகலிப்பந்தன் (3536), 31. அணி ஆர் செந்தமிழ்கள் கொண்டிளிது செப்பவல தொண்டர்வினை நிற்பதிலவே (3591), 32. பந்தன் மலி செந்தமிழ் மாலைகொடு வேதிகுடி ஆதிகழலே (3645), 33. நலமல்கு ஞானசம்பந்தன செந்தமிழ் (3841), 34. நாடிய ஞானசம்பந்தன் செந்தமிழ் (3871), 35. நானுரைத்தன செந்தமிழ் பத்துமே வல்லவர்க்கு இவை நற்றமிழ் பத்துமே. (4045), 36. கன்னலம் பெரிய காழியுள் ஞானசம்பந்தன் இவைகொண்டு (4100), 37. உற்றசெந்தமிழார் மாலை இறைந்தும் உரைப்பவர் கேட்பவர் உயர்ந்தோர். கற்றமும் மாகித் தொல்வினை அடையார் தோன்றவர் வானிடைப் பொலிந்தே (4130).

29. **செப்பரிய தன்தமிழ்** 1. செப்பிய தண்டமிழால் தெரிந்த பாட இவைவல்லார் (2058).

30. **செரிவண்டமிழ்** 1. செரிவண்டமிழ் செய்மாலை செப்ப வல்லார்கள் (2156).

31. **சொல்லார் தமிழ்** 1. சொல்லார் தமிழ்மாலை செவிக்கினிதாக (331).

32. **சொற்றமிழ்** 1. சொற்றமிழ் இன்னிசை மாலை சோர்வின்றிக் கற்றவர் கழல் அடி காண வல்லரே (2975).

33. **ஞானசம்பந்தன் தமிழ்** 1. தம்மான் ஒன்றிய ஞானசம்பந்தன் தமிழ் கற்போர்க் கோர்தாமே (2279), 2. அந்தணர் புகலியுள்ளர் ஆய கேள்வி ஞானசம் பந்தன தமிழ்வல்லார் பாவமான பாறுமே (2549), 3. நாறு பூம்பொழில் காழியுள் ஞானசம்பந்தன தமிழ்மாலை கூறுவாரையும் கேட்கவல்லாரையும் குற்றங்கள் குறுகாவே, (2593) 4. ஞானசம்பந்தன் தமிழ் கெழுபாடல் பத்திவை சிந்தை

செய்பவர் சிவலோகம் சேர்வரே (2997), 5. ஞானசம்பந்தன தமிழே (3852).

34. **ஞானசம்பந்தன் சொன்னதமிழ்** 1. அந்தமில்லா அனலாடலானை அணி ஞானசம் பந்தனை சொன்ன தமிழ்பாடி ஆடக் கெடும் பாவமே (2724), 2. பாங்கனை ஞானசம்பந்தன் சொன்ன பத்திவை (2877), 3. புகலியுள் ஞானசம்பந்தன் சொன்ன தமிழ் குந்தியால் அகலிடம் எங்கும் ஏத்தவல்லார்க்கு இலை அல்லலே (2909), 4. நற்றமிழ் ஞானசம்பந்தன் சொன்ன தமிழ் நன்மையால் அற்றமிழ் பாடல் பத்து ஏத்தவல்லார் அருள்சேர்வரே (2920).

35. **ஞானசம்பந்தன் பண்ணிய தமிழ்** 1. நண்ணிய அருமறை ஞானசம்பந்தன் பண்ணியதமிழ் சொலப் பறையும் பாவமே (3019).

36. **ஞாலமல்குந் தமிழ்** 1. ஞாலமல்குந் தமிழ் ஞானசம்பந்தன் (2309).

37. **ஞானத்தமிழ்** 1. நல்லுரை ஞானசம்பந்தன் ஞானத் தமிழ் நன்குணரச் சொல்லிடல் கேட்டல் வல்லோர் தொல்லை வானவர் தங்களொடும் செல்குவர் சீர் அருளால் பெறலாம் சிவலோகம் அதே (1270)

38. **தண்டமிழ்** 1. நகைமலி தன்பொழில் சூழ்தருகாழி நற்றதமிழ் ஞானசம்பந்தன் தகைமலி தண்தமிழ் கொண்டிஇவை ஏத்த சாரகி வினைதானே (480), 2. சந்தமார்ந்து அழகாய தண்டமிழ் மாலைவல்லோர் போய் முந்தி வானவரோடு புகவலர் முனைகெட வினையே, (2441), 3. தங்குசீர்திகழ் ஞானசம்பந்தன் தண்டமிழ் பத்தும் எங்கும் ஏத்தவல்லார்கள் எய்துவர் இமையவர் உலகே (2474), 4. சந்தமாயின பாடல் தண்டமிழ் பத்தும்வல்லார்மேல் பந்த மாயின பாவம் பாறுதல் தேறுதல் பயனே (2485), 5. சந்தமிவை தண்டமிழின் இன்னிசை எனப்பரவு பாடல் உலகில் பந்தனுரை கொண்டு மொழிவார்கள் பயில்வார்கள் உயர் வான் உலகமே (3623), 6. பாடியத் தண்தமிழ் மாலைபத்தும் பரவித் திரிந்தாக வாடிய சிந்தையினார்க்கு நீங்கும் அவலக்கடல்தானே (3955).

39. **தலமார்தரு செந்தமிழ்** 1. தலமார் தரு செந்தமிழ் விரகன் (1730).

40. **தவமல்கு தமிழ்** 1. கவுணியர் குலபதி காழியர்கோன் தவமல்கு தமிழிவை சொல்லவல்லார் நவமல்கு சிவகதி நண்ணுவரே (1217).

41. **திருநெறியதமிழ்** 1. ஒரு நெறியமனம் வைத்தஉணர் ஞான சம்பந்தன உரைசெய்த திருநெறியதமிழ் வல்லவர் தொல்வினை தீர்வெனிதாமே (11).

42. **துளங்கில் தமிழ்** 1. தளங்கொண்டதோர் புகலித்தகு தமிழ் ஞானசம்பந்தன் துளங்கில்தமிழ் பரவித்தொழும் அடியார் அவர் என்றும் விளங்கும்புகழ் அதனோடு உயர்விண்ணும் உடையாரே (140).

43. **நல்ல செந்தமிழ்** 1. நல்ல செந்தமிழ் வல்லவன் ஞானசம்பந்தன் (2366).

44. **நல்ல தமிழ்** 1. நாடுபல நீடுபுகழ் ஞானசம்பந்த உரை நல்ல தமிழின் பாடலோடு பாடமிசை வல்லவர்கள் நல்லபரலோகம் எளிதே (3547).

45. **நலம்கொள் தமிழ்** 1. ஞானத்துயர் சம்பந்தன நலம்கொள் தமிழ் வல்லார் ஊனத்தொடு துயர்தீர்ந்துல உலகத்து ஏயினோரே (151).

46. **நற்றமிழ்** 1. நண்ணிய சீர்வளர் காளி நற்றமிழ் ஞானசம்பந்தன் (425), 2. நல் உயிர் நான்மறை நாவின் நற்றமிழ் ஞானசம்பந்தன் (436), 3. நகைமலிதண் பொழில் சூழ்தருகாழி நற்றமிழ் ஞானசம்பந்தன் (436), 4. நற்றமிழ் ஞானசம்பந்தன் சொன்ன குற்றமில் செந்தமிழ் கூறவல்லார்பற்றுவர் ஈசன் பொற்பாதங்களே (1277), 5. நல்ல அறுமறையான் நற்றமிழ் ஞானசம்பந்தன் (2080), 6. நறைவளரும் பொழில் காளி நற்றமிழ் ஞானசம்பந்தன் (2199), 7. நலம்கொள் பூம்பொழிற் காழி நற்றமிழ் ஞான சம்பந்தன் (2496), 8. நல்ல ஞானசம்பந்தன் நற்றமிழ் பத்து (2506), 9. நலம்கொள் வாழ்பொழில் காழியுள் ஞானசம்பந்தன் நற்றமிழ் மாலை (2647), 10. நற்றமிழ் ஞானசம்பந்தன் (3041), 11. ஞான சம்பந்தன் சொல்லிய நற்றமிழ் (3265), 12. நடமார் ஞானசம்பந்தன் நற்றமிழ் (3830), 13. ஞானசம்பந்தன நற்றமிழ் சொல்ல வல்லவர் நல்லவரே (4011), 14. நானுரைத்தன செந்தமிழ் பத்துமே வல்லவர்க்கிவை நற்றமிழ் பத்துமே (4045), 15. ஞானசம்பந்தன நற்றமிழ் மாலை நன்மையால் உரைசெய்து நல்வார். ஊனசம்பந்தத்து உறுபிணி நீங்கி உள்ளமும் ஒருவழிக்கொண்டு வானிடை வாழ்வர் மண்மிசைப் பிறவார் மற்றிதற்கு ஆணை நமதே (4078), 16. நல்லிசையாழன் புல்லிசைக் கேளா நற்றமிழ் ஞானசம்பந்தன். (4110).

47. **நாடவல்ல தமிழ்** 1. நாடவல்ல தமிழ் ஞானசம்பந்தன் பாடவல்லார் களுக்கு இல்லை பாவமே (3051), 2. நாடவல்ல தமிழ் ஞானசம்பந்தன் பாடல் பத்தும் வல்லார்க்கு இல்லையாம் பாவமே (3073).

48. **படமலி தமிழ்** 1. படமலி தமிழ் இவை பரவல்லார் வினை கெடமலி புகழொடு கிளரொளி யினரே. (1314).

49. **பரவிய தமிழ்** 1. பரவிய தமிழ் சொல்ல பறையுமெய்ப் பாவமே (3117).

50. **பாடலாய தமிழ்** 1. பாடலாய தமிழ் இவை ஈர்ஐந்தும் மொழிந்து உள்கி ஆடும் அடியார் அகல்வானுலகம் அடைவாரே (2145).

51. **பண்ணாருந் தமிழ்** 1. பண்ணாருந் தமிழ் வல்லார் பரலோகத் திருப்பாரே (3502).

52. **பண்ணுலாம் அருந்தமிழ்** 1. பண்ணுலாம் அருந்தமிழ் பாடுவார் ஆடுவார் பழியுலரே (3777).

53. **பலந்தருதமிழ்** 1. பலந்தருதமிழ் கிளவி பத்தும் இவை கற்று (1870).

54. **மறையலி தமிழ்** 1. வித்தக மறையலி தமிழ் விரகன் மொழி (1347).

55. **மன் தமிழ்** 1. தக்கசீர் புகலிக்கு மன்தமிழ் நாதன் ஞானசம்பந்தன் வாய் ஒக்கவே உரைசெய்த பத்தும் உரைப்பவர்க்கு இடர் இல்லையே (3221)

56. **மனத்தால் உரைத்த தமிழ்** 1. தாழும் மனத்தால் மனத்தாலும் உரைத்த தமிழ்கள் இவை வல்லார் வாழி நீங்கா வானோர் உலகில் மகிழ்வார் (2112).

57. **முடிவில் இன்தமிழ்** 1. முடிவில் இன்தமிழ் செடிகள் நீக்குமே (1024).

58. **முத்தமிழ்** 1. ஓங்கும் தன்மையன் முத்தமிழ் நான்மறை ஞானசம்பந்தன் ஒண்தமிழ் மாலைகொண்டு (2822).

59. **வடமார் தமிழ்** 1. வடமார் தமிழ் வல்லவர் நல்லவரே (1709)

60. **வண்தமிழ்** 1. வம்பமருந் தண்காழிச் சம்பந்தன் வண்டமிழ் கொண்டு இன்பம் மர வல்லார்கள் எய்துவர்கள் ஈசனையே (677), 2. வல்லவாரே புனைந்து ஏத்தும் காரோணத்து வண்டமிழ் சொல்லுவார்க்கும் இவைகேட்பவருக்கும் துயர் இல்லையே (2735), 3. மண்ணிய புகலியுள் ஞானசம்பந்தன வண்தமிழ் சொன்னவர் துயரிலர் வியனுலகு உறுகதி பெறுவரே (3722).

61. **வேதியன் விரும்பு தமிழ்** 1. வித்தகனை வெங்குருவில் வேதியன் விரும்புதமிழ் மாலைகள் வலார் (3667).

இவ்வாறு தமிழ் அரியது, அருமையானது என்பதை அருந்தமிழ் என்பதில் குறிக்கிறார். தமிழ் வழியாக இருக்கிறது. அதோடு குறையாத நிலையை, தாழ்வு வராத நிலையில் இருப்பதால் ஆறா அருந்தமிழ் என்கிறார். தமிழ் இசைக்கு எல்லையில்லை தொல்காப்பியம்

தமிழுக்கு இருபது வண்ணங்களைக் கூறுகிறது. அதோடு இசையில் எல்லா நுணுக்கங்களையும் கொண்டுள்ளது. தமிழ் திருமுறைகளுக்குப் பண் அமைத்துள்ளதை நாம் அறிவோம் அதனால் இசைமலி தமிழ் ஆகின்றது. கேட்க சொல்ல, இனிக்கின்றது தமிழ் அதனால் இன்தமிழ் ஆகின்றது. தானும் இன்புற்று பிறரையும் இன்புறச்செய்வது தமிழ் அதனால் இன்புறுதமிழ் ஆகின்றது. வடிவங்களை அமைக்கின்ற அதே நேரத்தில் ஒளியையும் உடையதாக இருக்கின்றது. தமிழ் உருவாரும் ஒண்தமிழ் என்று கூறுகிறார். உலகில் எத்தனையோ மொழிகள் இன்றும் எழுத்து வழக்கில்லாமல் இருக்கின்றன. தமிழ் தொல்காப்பியர் காலத்திலேயே எழுத்து வழக்குக்கு வந்துவிட்டது. அதனால் எழுதுமொழி தமிழ் என்கிறார். மிக அழகாகவும் இனிமையாக இருப்பதால் ஏரினார் தமிழ் என்று சொல்கிறார். தமிழால் கூறமுடியாத பொருளே கிடையாது. எல்லாப்பொருள் பற்றியும் தமிழால் சொல்ல இயலும் அதனால் ஏறுபல்பொருள் முத்தமிழ் என்கிறார். கவிஞர்கள் பெண்மையை வருணிக்கும்போது மெல்லின எழுத்துக்களைக் கொண்டு வருணித்தல் அதனால் பூப்போன்று மென்மையான தமிழ் ஆகின்றது. அதோடு ஒளியுடையதாகவும் இருக்கின்றது. அதனால் ஒளிர்பூந்தமிழ் ஒண்மை என்ற சொல்லுக்கு விளக்கம், இயற்கை அழகு, நன்மை, ஒழுங்கு, மிகுதி, நல்லறிவு போன்ற பல பொருள்கள் உள்ள இவை அனைத்தையும் அடைக்கியது தமிழ் அதனால் ஒண்தமிழ் என்கிறார். ஆய கலைகள் அறுபத்து நான்கையும் உணர்த்த வல்லது தமிழ் அதனால் கலை மலிதமிழ் என்கிறார். அதோடு கலை வல்ல தமிழ் என்றும் கூறுவார். குலம் என்பது நற்குடிப்பிறப்பையும், நன்மையையும், அழகினையையும், இனத்தினையையும், ஒரு குழுவினையையும் தரும். திராவிட மொழிகள் என்ற இனத்திற்கு தலைமை தாங்குவது தமிழ் அதனால் குலமார் தமிழ் என்று பேசுவார். மூவேந்தர்கள் தமிழை வளர்த்தனர். அதனை அடிப்படையாக அமைத்து குலவேந்தன் செந்தமிழ் என்றும் பேசுவார். நெற்றிக்கண் எரித்தாலும் குற்றம் குற்றமே என்று வாதித்த நக்கீரர் வளத்த தமிழ் அதனால் குற்றமில் செந்தமிழ் என்பார். தமிழ் தோன்றிய காலத்தில் இருந்து இதுவரை எத்தனையோ எதிர்ப்புக்களுக்கிடையில் வாழ்ந்துகொண்டு இருக்கிறது. இதைக் கருதி குன்றாத்தமிழ் என்பர். பழங்காலத்தில் முச்சங்கங்கள் இருந்தன. நான்காம் சங்கமாக தமிழ் சங்கத்தை பாண்டித்துரைத் தேவர் கடந்த நூற்றாண்டில் தோற்றுவித்தார். இதனை அடிப்படையாகக் கொண்டு சங்கமலி தமிழ் என்பர். அருணகிரி நாதர் பாடல்கள் சந்த ஓசைகள் நிறைந்தன. அதனால் சந்தம் இன்தமிழ் என்று பேசுவார். அதோடு எந்த சந்தத்திலும் பாட இயலும் அதனால் சந்தமே பாடவல்ல தமிழ், சந்துலாந் தமிழ்,

சந்தமாலைத் தமிழ், சந்தமார் தமிழ் என்றெல்லாம் பேசுவார். சிறப்பும் இனிமையும், கொண்டுள்ளது தமிழ் அதனால் சீர் இன்புறும் தமிழ், சீர் மிகுந்த தமிழ் சீரின் மலி செந்தமிழ்கள் என்றெல்லாம் கூறுவர். தமிழ் செம்மையானது என்பதில் யாருக்கும் ஐயமில்லை. அதனால் செந்தமிழ் என்பதை ஏறத்தாழ முப்பத்தி ஏழு இடங்களில் குறிப்பிடு கின்றார். தமிழின் பெருமையை சொல்முதற்கு மிக அறிது செப்பரிய தண்தமிழ், செரிவண்டதமிழ், சொல்லார் தமிழ், சொற்றமிழ் என்றெல்லாம் கூறுவார். திருஞானசம்பந்தர் அவருக்கெனத் தனிவழியை வகுத்துக் கொண்டதால் ஞானசம்பந்தன் தமிழ், ஞானசம்பந்தன் சொன்ன தமிழ், ஞானசம்பந்தன் பண்ணிய தமிழ் என்றெல்லாம் பேசுவார்.

ஞாலம் அளந்தது அனைத்தும் அளந்திடு வண்மொழி வாழியவே என்று பாரதி பாடினான். அதற்கு வழிவகுத்தவர் ஞானசம்பந்தர். ஞாலமல்கும் தமிழ் என்று சம்பந்தர் கூறினார். ஞானத்தமிழ் என்றும் கூறினார். திருமந்திரத்தில் இருந்து அவ்வைக் குறள் வரை நமக்கு ஞானத்தை ஊட்டுவது தமிழ் தான். தமிழ் எப்போதும் குளிர்ச்சி யுடையது. நாம் வெப்பமான நாட்டில் வாழ்வதால் குளிர்ச்சியை விரும்புகிறோம். அதனால் தண்தமிழ் என்ற தொடர் அமைகிறது. தலங்கள் தோறும் சென்று தமிழைத் தவமாக நினைத்து வளர்த்தான் அதனால் தலமார்தரு செந்தமிழ், தவமல்கு தமிழ் என்று பேசுவார். செல்வத்தையும் ஒழுக்கத்தையும், சிறப்பையும் தருவது தமிழ், அதனால் திருநெறிய தமிழ் என்று கூறுவார். தமிழ்நாட்டில் எத்தனையோ மொழிகள் வந்து, வளர்ந்துள்ளன. மொழிகளுக்கும் ஆயுள் உண்டு என்பதை நாம் அறிவோம். இலத்தீன், கீரிக், சமஸ்கிருதம் போன்ற மொழிகள் பேச்சுவழக்கற்று அழிந்து விட்டன. சூழ்நிலைகளால் அசைந்தன. இந்தியாவில் உள்ள எல்லா மொழி களுக்கும் க, ச, த, ப போன்ற எழுத்துக்களுக்கு வர்க்க எழுத்துக்கள் அதாவது நான்கு க, நான்கு ப, நான்கு த என்றெல்லாம் உண்டு ஆனால் தமிழுக்கு மட்டும் ஒரு க, ஒரு ப, ஒரு த இந்த ஒன்று நான்கு ஒலிகளையும் தருகிறது. அதனால் அசைக்க முடியாத தமிழாகிறது. இதனை மனத்துள் கொண்டு துளங்கில் தமிழ் என்று கூறுவார். தமிழ் நல்லது என்பதை நாம் அறிவோம் அதனால் நல்ல தமிழ், நல்ல செந்தமிழ், நலம்கொள் நற்றமிழ் என்றெல்லாம் பேசுவார். தமிழை நாடினால் நமக்கு எல்லாம் வந்துசேறும் என்று கருதி நாடவல்ல தமிழ் என்று கூறுவார். உலகம் முழுவதும் பரவிய தமிழ் அதனால் பரவிய தமிழ் என்றும் ஏற்கனவே இசைமலி தமிழ் என்று கூறியவர் பண்ணின் இனிமையை மிகுதியாக உணர்ந்ததால் பண்ணாருந்தமிழ், பண்ணியல் தமிழ்பண்ணுலாம் தமிழ், பலஓசைத் தமிழ், பலபொருள்

முத்தமிழ் என்றெல்லாம் பேசுவார். அதோடு பாம்பன் சுவாமிகள் சண்முக கவசம் என்ற ஒன்றை எழுதினார். அதில் முப்பது பாடல்கள் தமிழில் உயிர் எழுத்துக்கள் பன்னிரெண்டு, மெய் எழுத்துக்கள் பதினெட்டு. மொத்த எழுத்துக்கள் முப்பது, முப்பது எழுத்துக் களுக்கும் முப்பது பாடல்கள் பாடினார். தினந்தோறும் சண்முக கவசம் படித்தால் இயல்பாகவே பலம் வந்துவிடும். அதனால் ஞானசம்பந்தர் பலந்தரும் தமிழ் என்று கூறினார். பாரின் மலிகின்ற, புகழ்கின்ற தமிழ் புகழ் வண்தமிழ், பூந்தமிழ், பேரியல் இன்தமிழ், மறைவளரும் தமிழ், என்றெல்லாம் கூறி என்றும் தமிழ் நின்று நிலைபெறும் என்பதால் மன்தமிழ் என்றும் கூறுவார். மனத்தால் உரைத் தமிழ் என்று கூறி தமிழுக்கு முடிவே கிடையாது என்பதால் முடிவு இல் இன்தமிழ் என்று பேசுவார். முத்தமிழ் வண்தமிழ் என்று கூறியவர். இவ்வாறு தமிழின் பெருமைகளை அறுபதுக்கு மேற்கொண்ட அடைகளைக் கொண்டு பெருமைப்படுத்தியவர் திருஞானசம்பந்தர்.

# 39. சம்பந்தர் பதிகங்களில் இயற்கை

ச. செந்தில்குமார், அண்ணாமலைநகர்.

இயற்கை மனித வாழ்க்கைக்கு நலம் தருவது. உடலுக்கு ஆரோக்கியமும் உள்ளத்திற்கு அமைதியும் இயற்கையால் தான் கிடைக்கின்றன. எனவே, இயற்கையை ஒவ்வொரு புலவரும் தத்தம் நூல்களில் பாடி மகிழ்ந்தனர். தம் நூல்களுக்குப் பெருமை சேர்த்தனர்.

பண்டைப் புலவர்கள்-சிறப்பாகச் சங்கநூற் புலவர்கள் இயற்கையை வருணித்துக் காப்பியச் சுவையைப் பெருக்கினர். இயற்கை வருணனை இல்லாத அகப்பாடல்களே சங்க நூல்களில் இல்லை. பிற்காலத்தில் பக்தி இலக்கியங்கள் அம்முறையைப் பின்பற்றின. பக்திப் பாடல் களில் இயற்கைக்கு முதலிடம் தந்து பாடியவர் திருஞானசம்பந்தர். அவர் பாடியுள்ள ஒவ்வொரு தலப் பாடல்களிலும் இயற்கை மணம் கமழ்வதைக் காணலாம்.

கைபடாதது எதுவோ அது இயற்கை. இயற்கை அழகுமிக்கது. இயற்கையின் பேரழகை,

**"கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பு"**

எனப் பாடுவர் நக்கீரர்.

மக்களால் புனைந்து செய்யப்படாத பாங்கில் அவர்களைச் சுற்றி உலக முழுவதும் விளங்கும் பொருள்கள் அனைத்தும் 'இயற்கை' என்று கூறலாம். எனவே, இயற்கை என்பது ஒருவரால் ஆக்கப் படாமல் தானே முகிழ்ப்பது என்பது பெறப்படும். அது வானும் காற்றும் கடலும் மலையும் கதிரும் நிலவும் மரம் செடி கொடிகளும் என உலக முழுவதும் தானேயாய் நிறைந்து நிற்பது.

''பண்டைய தமிழ் மக்கள் இயற்கைவழி வாழ்வு செலுத்தி, அதற்கு அடிப்படையான அழகுண்மை கண்டு, அவ்வழகால் இயற்கையை வழிபட்டு முழுமுதற் பொருட்கு 'அழகு' என்னும் பொருள்பட 'முருகன்' என்னும் பெயரணிந்தார்கள்'' என்னும் கலியாணசுந்தரனாரின் கூற்று இதனைப் புலப்படுத்தும்.

## இயற்கையும் கவிதையும்

இயற்கையைப் பாடாத கவிஞர் இல்லை. இயற்கைப் பொருள் களில் இறைவன் உறைகின்றான். எனவே, இயற்கை கடவுளின் ஆலயமாக விளங்குகின்றது. பக்திப் பாடல்களைப் பாடிய புலவர் பலர் தமது இறைமைப் புனைவுகளை இயற்கையின் அடிப்படையில் அமைத்தனர் என்பது கருதத் தக்கது. நீலமயில் ஏறிவரும் கோலக் குமரனது கண்கவர் தோற்றத்திற்கு,

**"உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு**
**பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு"**

எனக் காலைக் கடலில் கதிர்விரித் தெழும் இளஞாயிற்றினை உவமை கூறி மகிழ்ந்தார் சங்கப்புலவர் நக்கீரர். இம்மரபை ஒட்டித் திருஞான சம்பந்தர் தமது தேவாரப் பதிகங்களில் இயற்கைக் காட்சிகளை மிகுதியும் புனைந்து பாடியுள்ளார்.

பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பொருளான சிவனை, உமையம்மையார் அளித்த ஞானப்பாலைப் பருகியதால் பெற்ற பதிஞானத்தாலே நேசமொடும் நேரே காணப் பெற்றவர் திருஞானசம்பந்தர். அவர் பாடியுள்ள திருப்பதிகங்கள் ஒவ்வொன்றிலும் இயற்கை வருணனைகள் சுவைபட அமைந்துள்ளன.

''திருஞானசம்பந்தர் பிள்ளையார் அருளிய திருப்பதிகங்களில் இயற்கைப் பொருள்களின் எழில் நலங்கள் நன்கு விரித்துரைக்கப் பெற்றுள்ளன'' என்பார்.

## திருக்குற்றாலக் காட்சி

குற்றாலமலை இயற்கை எழில் மிக்கது. குறும்பலா ஈசர் கோயில் கொண்டுள்ள தலம். இதனை,

**"வானரங்கள் கனிகொடுத்து மந்தியோடு கொஞ்சும்,**
**மந்திசிந்து கனிகளுக்கு வான்கவிகள் கெஞ்சும்"**

எனப் பாடுகிறது குற்றாலக் குறவஞ்சி.

திருஞானசம்பந்தப் பிள்ளையார் தாம் நேரில் கண்டு மகிழ்ந்து பாடிய திருக்குற்றாலத்தின் இயற்கையழகை,

**"வம்பார் குன்றம் நீடுயர் சாரல் வளர் வேங்கைக்**
**கொம்பார் சோலைக் கோலவண் டியாழ்செய் குற்றாலம்"**

என ஓவியப்படுத்திக் காட்டுகின்றார்.

மற்றும் இயற்கை சொரியும் மலைச்சாரல் புனையப்படுகிறது. நீண்டுயர்ந்த பெருங்குன்றம் வானளாவி நிமிர்ந்து நிற்கிறது. காணக் கண்குளிரும் பசுஞ்சோலைகளில் செண்பக மரங்களிலும் வேங்கை மரங்களிலும் தழுவிப் படர்ந்து முல்லைக் கொடிகள் அரும்பீன்று மணம் கமழ்கின்றன.

**"செல்வம்மல்கு செண்பகம் வேங்கை சென்றேறிக்**
**கொல்லை முல்லை மெல்லரும் பீனும் குற்றாலம்"**

என்ற பாடலில் இதைக் காண முடிகிறது.

வாழைமரக் குலைகளில் பழங்கள் பழுத்துக் குலுங்குகின்றன. பலாப்பழங்கள் வெடித்துத் தேனோடு வடிய சுளைகள் சிதறுகின்றன. பெரு மரக்கிளைகளில் மாங்கனிகள் பழுத்துத் தொங்குகின்றன. மலைச்சாரல்களில் மகவோடு வந்த இனமந்திகள் அப்பழங்களை உண்டு மகிழ்கின்றன.

**"பக்கம் வாழைப் பாய்கனி யோடு பலவின் தேன்**
**கொக்கின் கோட்டுப் பைங்கனி தூங்கும் குற்றாலம்!**
**மலையார் சாரல் மகவுடன் வந்த மடமந்தி**
**குலையார் வாழைத் தீங்கனி மாந்தும் குற்றாலம்"**

என்று பாடுகிறார். இவ்வியற்கைக் காட்சிகளில் மந்திகளும் யானைகளும், மயில்களும், கிளிகளும் பங்குபெறுகின்றன.

**திருக்கற்குடி**

திருக்கற்குடித் தலத்தின் பெருமையை இயற்கை வளத்தோடு இணைத்துப் பாடுவது குறிப்பிடத்தக்கது. குறிஞ்சி நிலத்தில் வாழும் குறமகளிர் கையில் வளரும் இளஞ்சிறார்களின் குழந்தையுள்ளமும், விளையாட்டும்,

**"சங்கமதார் குறமாதர் தங்கையில் மைந்தர்கள் தாவிக்**
**கங்குலின் மாமதி பற்றும் கற்குடி மலையாரே"**

என்ற பாடலில் புனையப்படுகின்றன.

குறிஞ்சி நிலத்தில் வாழும் களிறு, தன் காதல் மடப்பிடியான பெண்யானைக்கு மூங்கில் முளைகளைப் பறித்து அன்புடன் ஊட்டுவதை,

**"மருங்களியார் பிடிவாயில் வாழ்வெதிரின் முளை வாரிக்**
**கருங்களி யானை கொடுக்கும் கற்குடிமா மலையாரே"**

என்ற பாடல் ஓவியப்படுத்துகிறது.

## திருக்கேதாரம்

திருக்கேதாரம் குறிஞ்சிநிலத் தலம். அத்தலத்தைப் புனையும் போது அதன் இயற்கைக் காட்சிகள் சுட்டப்பெறுகின்றன.

திருக்கேதார மலையில் வேங்கை மரங்கள் பூத்துக் குலுங்கு கின்றன. வேங்கைப்பூ புலியின் நிறம் போன்றதென்பதை,

**"உறுபுலி உருவேய்ப்பப் பூத்த வேங்கை"**

எனவரும் குறிஞ்சிக்கலிப் பாடலடியால் அறியலாம்.

இவ்வாறு புலியினைப் போன்று பூத்துள்ள வேங்கை மரத்தின் பூக்கள் அம்மரத்தின் கீழ் துறுகல்லாக அமைந்த பாறைமேல் உதிர்ந்து கிடக்கும் தோற்றம் புலியின் குட்டியை ஒத்துக் கண்டார்க்கு அச்சமூட்டுகின்றது.

**"உடைந்த காற்றுக்கு உயர் வேங்கை**
**பூத்துதிரக் கல்லறைகண் மேல்**
**கிடந்த வேங்கை சினமாமுகம்**
**செய்யும் கேதாரமே"**

என்று உள்ளத்தில் கற்பனை செய்து பாடுகின்றார். பெருங்காற்றினால் வேங்கை மலர்கள் உதிர்கின்றன. அவ்வாறு உதிர்ந்து பூக்கள் கீழுள்ள துறுகல்லை மூடுகின்றன. துறுகல்லைத் தனக்குப் பகையாகிய வேறு ஒரு புலி என்றெண்ணி அங்குப் படுத்துறங்கும் புலியானது விழித்துப் பார்த்து வெகுளும் தோற்றமுடன் விளங்குவது திருக்கேதாரமலை என்பது இத்தேவாரப் பாடலின் பொருள். கண்டார்க்கு அச்சந்தரும் இக்காட்சியை,

**"கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்**
**இரும்புலிக் குருளையின் தோன்றும் காட்டிடை**
**எல்லி வருநர் களவிற்கு**
**நல்லை அல்லை நெடு வெண்ணிலவே"**

என்னும் குறுந்தொகைப் பாடலில் நெடுவெண்ணிலவினார் புனைந்து கூறுவது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

திருக்குற்றாலம், திருக்கற்குடி, திருக்கேதாரம் எனும் திருதலச் சிறப்பை உணரும் வண்ணம் இயற்கை எழில் கொஞ்ச திருஞானசம்பந்தர் பாடிய திறம் நாம் நேரே அத்தலங்களைக் காண்பது போன்ற தோற்றத்தை ஏற்படுத்துகிறது. மனதில் மகிழ்ச்சியை உண்டாக்குகிறது.

# 40. சம்பந்தரும் பிற அடியார்களும்

மு.செல்வராசு, தூத்துக்குடி.

திருஞானசம்பந்தர் இளம் வயதில் கோலம் நிறை இறைக் கவிதைகளைப் பாடியவர். சிவபெருமானருள் பெற்ற அருளாளர். இவர் பாடிய பாடல்கள் முதல் மூன்று திருமுறைகளாகத் தொகுக்கப் பட்டுள்ளன.

திருஞானசம்பந்தரும் பிற அடியார்களும் என்ற கட்டுரைத் தலைப்பினை இருவழிகளில் பார்க்கலாம். முதலாவதாகத் திருஞான சம்பந்தர் பாடிய பாடல்களின் அடிப்படையில் பிற அடியார்கள் எவ்வாறு குறிக்கப்படுகின்றனர்? என்று பார்க்கலாம். இரண்டாவதாக ஞானசம்பந்தர் பற்றியும் பிற அடியார்கள் பற்றியும் மற்ற அருளாளர்கள் பாடியுள்ள பாடல்களின் அடிப்படையில் எவ்வாறு குறிக்கப்படு கின்றனர்? என்று பார்க்கலாம். இக்கட்டுரை முதல் வழியில் நின்று சம்பந்தர் பிற அடியார்களைத் தமது தேவாரத்தில் எவ்வாறு குறிக்கின்றார் என்பதை ஆராய்கிறது.

**அடியார்கள்**

அடியார்கள் என்பவர்கள் யார்? அவர்களின் இயல்பு யாவை? என்ற வினாக்களுக்குத் திருஞானசம்பந்தர் தம் பாடலில் விளக்கம் தந்துள்ளார்.

> **"பூவும் நீரும்பலியும் சுமந்து புகலூரரையே**
> **நாவினாலே நவின்றேத்த லோவார்செவித் துளைகளால்**
> **யாவுங்கேளார் அவன்பெருமையல்லால் அடியார்கள்தாம்**
> **ஓவுநாளும் உணர்வொழித்த நாளென்றுள்ளங் கொள்ளவே"**

அடியார்கள் நாளும் பூ, நீர், பலியால் சுமந்து இறைவனை வழிபட்ட வர்கள். அத்துடன் அவர்கள் சிவபெருமானின் பெருமையைத் தவிர வேறொன்றும் உணர்வில் கொள்ளாதவர்கள். அப்படிப்பட்ட தூய சிந்தை தமக்கும் வேண்டும் என்கின்றார் சம்பந்தர்.

சிவனடியார்கள் தம் சுற்றத்தை மறந்தவர்கள். அகப்பற்றையும், புறப்பற்றையும் துறந்தவர்கள். தளர்வை நீக்கியவர்கள். குற்ற மெல்லாம் போக்கியவர்கள். இக்குணங்களோடு அடியார்கள் கூடி

மகிழ்வார்கள் என்று அடியாரின் இயல்பைக் கூறுகின்றார் சம்பந்தர். இதை,

"சுற்றமொடு பற்றவை துயக்கற அறுத்துக்
குற்றமில் குணங்களோடு கூடும் அடியார்கள்"

எனவரும் பாடலால் அறியலாம்.

திருஞானசம்பந்தர் பாடல்களின் வழி அடியார்கள் என்பவர்கள் பலவகை நற்குணங்களைப் பெற்றவர்கள் என்பதை அறிய முடிகின்றது. அவர் கூறும் அடியார்களின் வழி மேலும் பல செய்திகளை அறியமுடியும். அவர் பாடியுள்ள தேவாரத்தில் கீழ்க்காணும் அடியார்கள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

1. தில்லைவாழந்தணர்கள்
2. கண்ணப்பநாயனார்
3. முருகநாயனார்
4. சண்டேசநாயனார்
5. திருநாவுக்கரசர்
6. குலச்சிறைநாயனார்
7. திருநீலநக்கநாயனார்
8. நமிநந்தியடிகள்
9. சிறுத்தொண்டநாயனார்
10. புகழ்த்துணைநாயனார்
11. மங்கையர்க்கரசியார்
12. கோச்செங்கட் சோழநாயனார்
13. திருநீலகண்டயாழ்ப்பாணர்

**1. தில்லைவாழந்தணர்கள்**

அந்தணர்கள் சிவபெருமான் அடித்தொண்டில் உரிமை பூண்டு வாழ்பவர்கள். இறைவனது திருமேனியை அலங்கரிப்பவர்கள். மறைகளால் போற்றித் துதிப்பவர்கள். இன்னும் தில்லைக்கோவிலில் அகம்படித் தொண்டுகள் செய்பவர்கள். இத்தகு பெருமைக்குரியவர்கள் தில்லைவாழ் அந்தணர்கள் ஆவார்கள். இவர்களின் தொகை மூவாயிரம். இவர்களின் பெருமை பற்றித் திருஞானசம்பந்தர்,

"கற்றங் கெரியோம்பிக் கலியை வாராமே
செற்றார் வாழ் தில்லை "

எனவரும் பாடலில் குறிக்கின்றார்.

உலகம் அருள் பெற்று ஓங்குமாறு மூன்றெரியும் விதிப்படி வளர்த்து வருபவர்கள் தில்லைமறையவர்கள் என்று விளக்குகின்றார் சிவக்கவிமணியார். இதன்வழி மறையவர்கள் உலக மக்களின் நிலை உயர இறைவனிடம் பொழுதெல்லாம் வழிபடும் நல்லெண்ணம் படைத்தவர்கள் என்று அறியலாம்.

மேலும் இவர்களின் இறைத் தொடர்பு பற்றிச் சம்பந்தர்,

**"ஆடினாய் நறுநெய்யொடு பால்தயிர்**
**அந்தணர்ப் பிரி யாதசிற்றம்பலம்**
**நாடினாயிடமா நறுங்கொன்றை நயந்தவனே"**

எனவரும் பாடலில் குறித்துள்ளார். இறைவன் அந்தணர்களைப் பிரியாத தன்மை கொண்டவன் என்பதையும் அவர்களின் உள்ளத்தே நீங்காது உறைபவன் என்பதை இதன்வழி அறியலாம். இறைவனுக்குத் தொண்டும், மக்களின் நிலை உயர வழிவகுக்கும் முத்தி வழிபாடும் தில்லை மறையவர்களின் தொண்டுகளாக ஞானசம்பந்தர் உள்ளத்தில் வெளிப்படுகின்றன. இவற்றின் வழி அடியார்கள் சிவத்தொண்டையும் மக்கள் தொண்டையும் தங்கள் உள்ளத்தில் இணைத்துக் கொண்டவர்கள் என்ற கருத்துக்களை அறியமுடிகின்றது.

**2. கண்ணப்பநாயனார்**

உடுப்பூரில் வேடர் தலைவனாக விளங்கிய நாகன் என்பானின் திருப்புதல்வன் திண்ணன். அவர் இளமையில் கன்னி வேட்டைக்குச் சென்று கோணமில் குடுமித் தேவரைக் கண்டு தன்நிலை மறந்து இறைவழிபாட்டில் ஈடுபட்டவர். இறைவன் திருக்கண்ணில் குருதி வடிவது கண்டு தமது கண்ணிடந்து அப்பியதால் கண்ணப்பன் என்ற திருப்பெயர் பெற்றவர். இவரைப் பற்றித் திருஞானசம்பந்தர் தம் பாடலில்,

**"கண்ணப்பர்க் கருள் செய்த**
**கயிலை எங்கள் அண்ணல்"**

என இறைவன் கண்ணப்பர்க்கு அருள்செய்த செயலைப் புகழ்ந்து உரைக்கின்றார்.

கண்ணப்பருக்கு இறைவன் அருள் புரியக் காரணமான கண் இடந்து அப்பிய செயலைச் சம்பந்தர் பாடலில் விளக்கியுள்ளார். இதைக்

**"கானலைக் கும்மவன் கண்ணிடந் தப்பநீள்**
**வானலைக் குந்தவத் தேவுவைத் தானிடம்"**

எனவரும் பாடலின் வழி அறியலாம்.

கண்ணப்பரைப் பற்றிக் குறிக்கும் ஞானசம்பந்தர் அவரின் வரலாற்றில் வரும் சிவகோசரியாரையும் குறித்துள்ளார். இருவர் செயலையும் ஒப்பிட்டுக் கூறியுள்ளமை பாடலின் வழி அறிய முடிகின்றது.

**"ஊனொடு உண்டல் நன்றென ஊனொடு உண்டல் தீதென**
**ஆனதொண்டர் அன்பினால் பேசநின்ற தன்மையான்"**

எனவரும் பாடலில் கண்ணப்பர் இறைவனுக்குச் செய்த பூசை முறையையும் சிவகோசரியார் இறைவனுக்குச் செய்த பூசை முறையையும் நன்கு அறியமுடிகின்றது.

கண்ணப்பர் காட்டில் வேட்டையாடிய இறைச்சியைக் கொண்டு வந்து பக்குவம் செய்து நாவினால் சுவைத்துப் பார்த்து "இவ்விறைச்சி சால அழகிது நாய னீரே அமுது செய்தருளும்" என்றார்.

சிவகோசரியார் ஆகம வழிபாட்டின்படி சொல்லப்பட்ட பூசனை முறைகளைச் செய்து வருபவர். மலர் நீர் முதலியன கொண்டு வந்து மலை மருந்தாகி விளங்கும் சிவபெருமானை வழிபட்டு வந்தார். பெரிய தவமுடையவர். கண்ணப்பர் புரிந்த இறைச்சி வழிபாட்டைக் கண்டு மனம் அழிந்தார். அவரின் நிலையை "இந்த அநுசிதங் கெட்டேன் யார் செய்தார் என்று அழிவார்" எனவரும் பாடலால் அறியலாம்.

அடியவர்கள் செய்த பூசை முறையில் ஏற்பட்ட முரண்பாட்டினை சம்பந்தர் குறித்துள்ளார். இவ்வாறெல்லாம் இறைவனிடம் அடியவர்கள் அன்பினால் வேண்டினார்கள் என்பதையும் இருவர்க்கும் இறைவன் அருள் செய்தான் என்பதையும் திருத்தொண்டர் புராணத்தின் வழி அறிய முடிகின்றது.

**3. முருகநாயனார்**

திருப்புகலூரில் திருத்தொண்டு புரிந்து சிவனருள் பெற்றவர் முருகநாயனார். இவரைத் திருஞானசம்பந்தர் திருப்பூம்புகலூர்த் திருப்பதிகத்தில் போற்றிப் பாடியுள்ளார்.

**"பூம்புகலூர்த் தொண்டர் போற்றி"**

இப்பாடல் வரி முருக நாயனாரைக் குறிப்பதாகக் கொள்ளலாம் என்று நூற்குறிப்பு குறித்துள்ளது. முருகனார் பூம்புகலூரில் வாழ்ந்து புரிந்து சிவனடித் தொண்டினைப் போற்றிச் சம்பந்தர் பாடியுள்ளார் என்றும் கொள்ளலாம்.

**4. சண்டீசநாயனார்**

சண்டீசநாயனார் இளமையில் விசாரசருமர் என்னும் திருப் பெயர் பெற்று அலகில் கலையின் பொருள் எல்லாம் உணர்ந்தார். உம்பர்

பிரான் உவக்கும் வகையில் திருமஞ்சனம் புரிந்து சிவபெருமானை வழிபட்டார். மறைவர்கள் ஆவின் பாலைத் திருமஞ்சனம் செய்வது பிழை என்று அவரின் தந்தையார் எச்சதத்தனிடம் முறையிட்டனர். இப்பூசையை மறைந்திருந்து கண்ட எச்சதத்தன் தன் மகனின் முதுகின் மீது புடைத்துக் கொடுமொழி கூறி இகழ்ந்தார். பாற்குடத்தைக் கீழே தள்ளி விட்டார். அப்போது சண்டீசரின் நிலையைச் சம்பந்தர் தம் பாடலில் குறித்துள்ளார்.

**"சென்று தாதை யுகுத்தனன் பாலையே சீறி யன்பு**
**செகுத்தனன் பாலையே**
**வென்றி சேர்மழுக்கொண்டு முன்காலையே வீடவெட்டடக்**
**கண்டுமுன் காலையே**
**நின்ற மாணியை யோடின கங்கையால் நிலவ மல்கி**
**யுதித்தன கங்கையால்**
**அன்று நின்னுரு வாகத் தடவியே ஆலவாயரனாகத் தடவியே"**

சண்டீசர் வாழ்வில் பூசைக்கு இடையூறு புரிந்த தன் தந்தையின் தாள் எறிந்த செய்தி இங்கே கூறப்பட்டுள்ளது. சண்டீசர் புரிந்த வழிபாடு சம்பந்தர் உள்ளத்தில் பதிந்த உணர்வாக வெளிப்பட்டுள்ளது என்றும் கொள்ளலாம்.

## 5. திருநாவுக்கரசர்

திருநாவுக்கரசரும் ஞானசம்பந்தரும் இணைந்து சைவத்தொண்டு புரிந்தவர்கள். திருமறைக்காட்டில் அப்பர் ''பண்ணின் நேர்மொழி யாளுமை பங்கரோ'' எனத் தொடங்கும் பதிகம் பாடித் திருக்கோவில் கதவைத் திறக்குமாறு செய்தார். ஞானசம்பந்தர் ''சதுரம் மறைதான் துதிசெய்து வணங்கும்'' எனத் தொடங்கும் பதிகம் பாடிக் கதவு திருக்காப்புச் செய்யுமாறு செய்தார். சம்பந்தர் திருவாய்மூர் திருப்பதிகம் பாடும் போது வாய்மூர் இறைவன் தமக்கு முன் காட்டிய ஆடல் காட்சியை அப்பருக்கும் சுட்டிக்காட்டினார். இதைத்

**"தளிரிள வளரென உமை பாடத் தாளம் மிடவோர் கழல்வீசிக்**
**கிளரிள மணியர வரையார்த் தாடும் வேடக்கிறிமையார்**
**விளரிள முலையவர்க் கருள்நல்கி வெண்ணி றணிந்தார்**
**சென்னியின்மேல்**
**வளரிள மதியமொ டிவராணீர் வாய்மூரடிகள் வருவாரே"**

என வரும் பதிகத்தின் மூலம் அறியலாம். சம்பந்தர் தாம்கண்ட இறைக்காட்சியை அப்பருக்கும் காட்டும் செயல் மிகுந்த பக்குவம் அடைந்த நிலையைக் காட்டுகின்றது. ''இவர்'' என்னும் சொல் அப்பர் பெருமானைக் குறிப்பதாகச் சுட்டுகின்றார் சுப்புரெட்டியார். (ப. 186)

இதன்வழி அப்பருக்கும் சம்பந்தருக்கும் கொண்ட ஆழமான அன்பினை நாம் அறியமுடிகின்றது.

### 6. குலச்சிறைநாயனார்

பாண்டிய நாட்டில் அமைச்சராகவும் சிவனடியாராகவும் வாழ்ந்தவர் குலச்சிறைநாயனார். இவரோடு நேரில் கண்டு அளாவியவர் திருஞான சம்பந்தர். ''கணங்களாய் வரினும் தமியராய் வரினும் அடியார் தங்களைக் கண்டால் குணங்கொடு பணியும் குலச்சிறை குலாவும் கோபுரம்சூழ் பணிக் கோவில்'' எனவரும் பாடலில் சம்பந்தர் குலச்சிறைநாயனாரின் பணிவுடைமைப் பண்பையும் சைவப் பணியையும் கூறியுள்ளார்.

குலச்சிறைநாயனார் எதையும் வேண்டாதவர். வேறொரு பயனையும் விரும்பாதவர் என்பதை ''வெற்றவே அடியார் அடிமிசை வீழும் விருப்பினன்'' என்ற அடிகளால் உணரப்படும். அடியார் களின் அடிவணங்கும் விருப்பம் குலச்சிறைநாயனாரின் சிறந்த விருப்பமாக விளங்குகின்றது.

### 7. திருநீலநக்கநாயனார்

திருச்சாத்தமங்கை என்னும் திருத்தலத்தில் சிவபெருமானை வழிபட்டுச் சிவனருள் பெற்றவர் திருநீலநக்கநாயனார். இத்தலத்து இறைவனை வழிபட்டு பாடல் பாடிய சம்பந்தர் இவரை, ''அடிகள் நக்கன் பரவ அயவந்திய மர்ந்தவனே'' என்று பாடியுள்ளார். இவர் வாழ்ந்த திருச்சாத்தமங்கையூரினர் இவரை நீலநக்கன் நெடு மாநகரென்று தொண்டர் அறையுமூர் என்று புகழ்ந்து உரைக்கின்றார். அடியார் வாழ்ந்ததால் திருச்சாத்தமங்கை என்ற ஊர் புகழப்படு கின்றது என்றால் அவ்வடியாரின் தொண்டும் இறைவழி பாடும் மிக உயர்ந்தது என்பதை அறியலாம்.

### 8. நமிநந்தியடிகள்

திருஞானசம்பந்தர் திருக்கோளிலி என்னும் திருத்தலத்தை வழிபடும் போது நமிநந்தியடிகளுக்கு இறைவன் வழங்கிய அருளைப் பாடியுள்ளார். இதை ''நாவியல் சீர் நமிநந்தி யடிகளுக்கு நல்குமவன்'' எனவரும் பாடலால் அறியலாம். இங்கு நமிநந்தியடிகளின் நீரால் விளக்கேற்றிய அருந்தொண்டு குறிப்பால் சுட்டப்படுகின்றது. அவரின் செயலுக்கு இறைவன் அருள்புரிந்த செய்தி சிறப்பாகச் சுட்டப்படுகின்றது.

### 9. சிறுத்தொண்டர்

சம்பந்தர் தம்முடன் சிறுத்தொண்டர் கொண்ட தொடர்பு பற்றிப் ''பழக வல்ல சிறுத்தொண்டர்'' என்று போற்றிக் கூறியுள்ளார்.

பழகுவதற்கு இனிமையானவர் என்பது அவர் பாடலிருந்து தெரிகின்றது. அவர் பாடியுள்ள திருச்செங்காட்டங்குடித் திருப்பதிகத்தில் சிறுத் தொண்டர்க்கருள் செய்வதற்காகவே இறைவன் தலத்தில் குடி கொண்டுள்ளார் என்று பாடியுள்ளார். இதைச் "சிறுத்தொண்டர்க் கருள் செய்யும் பொருட்டாக கடிநகராய் வீற்றிருந்தான் கணபதீச்சரத்தானே" எனவரும் பாடலால் அறியலாம். அத்துடன் அவரின் மகனார் சீராளமையும் குறிப்பிட்டுப் போற்றியுள்ளார். இதைச் "சீராளன் சிறுத்தொண்டன்" என்னும் பாடல் வரியால் அறியலாம். சம்பந்தர் தம்முடன் சிறுத்தொண்டர் பழகிய தொடர்பினையும் அவரின் பழகுதல் இனிமையையும் குறிப்பது நட்பின் பெருமையை நன்கு எடுத்துக்காட்டுவதாய் உள்ளது.

### 10. புகழ்த்துணைநாயனார்

திருஞானசம்பந்தர் திருஅரிசிற்கரைபுத்தூர் தலத்திறைவனைப் பாடும் பதிகத்தில் புகழ்த்துணைநாயனார்க்கு இறைவன் திருவருள் புரிந்து காசு நல்கிய செய்தியைக் கூறியுள்ளார். இதை,

**"அலந்த அடியான் அன்றைக் கன்றோர் காசெய்திப்**
**புலந்த காலை மாலை போற்றும் புத்தூரே"**

எனவரும் பாடலால் அறியலாம். பஞ்சம் வந்த காலத்தும் இறைவன் அடியார்க்குக் காசு நல்கி அருள் வழங்குவான். அடியாரின் மனக் குறையைப் போக்குவான் என்ற செய்தி இங்கு வலியுறுத்தப்படுகின்றது.

### 11. மங்கையர்க்கரசியார்

பாண்டிய நாட்டில் சைவ வாய்மை மாறி விளங்கிய காலத்தில் பாண்டியனின் மாதேவியாக விளங்கிய மங்கையர்க்கரசி சைவம் மறுமலர்ச்சி அடைய விரும்பினார். இதன்பொருட்டுத் திருஞான சம்பந்தரின் உதவியை நாடினார்.

ஞானசம்பந்தர் மங்கையர்க்கரசியார் வேண்டுதலுக்கு இணங்கப் பாண்டியநாடு வந்தார். அவரால் பாண்டிய நாட்டில் மீண்டும் சைவ சமயம் தழைத்தது. இதற்கு மிகுந்த உறுதுணையாய் இருந்தார் மங்கையர்க்கரசியார். சம்பந்தர் அரசியாரைச் சந்தித்த காட்சிகளைப் பாண்டிய நாட்டுத் திருப்பதிகங்கள் பாடும் போது விளக்கியுள்ளார்.

**"மங்கையர்க்கரசி வளவர்கோன் பாவை வரிவளைக்**
**கைம்மட மானி**
**பங்கையச்செல்வி பாண்டிமாதேவி பணிசெய்து நாடொறும்**
**பரவ"**

என்னும் வரிகளில் மங்கையர்க்கரசியார் யார் என்பதும் அவர் புரிந்த சைவப்பணி பற்றியும் தெரிகின்றது.

அரசியார் ஞானசம்பந்தரைப் பாலகன் என்று முதலில் எண்ணினார். இவரால் சமணர்களை வெல்ல இயலுமா என்றும் எண்ணினார். பின்னர் அவரது திறம் கண்டு மகிழ்ந்து வணங்கினார். இதை,

**"மானினேர்விழ மாதராய்வழு திக்கு மாபெருந் தேவி கேள்
பானல்வாயொரு பாலன் ஈங்கிவன் என்று நீபரி வெய்திடேல்
ஆனைமாமலை யாதியாய இடங்களில்பல அல்லல்சேர்
ஈனர்கட்கெளி யேனலேன்திரு ஆலவாயரண் நிற்கவே"**

எனவரும் பாடல் இதை விளக்குகின்றது. மங்கையர்க்கரசியுடன் நேரில் பேசுவது போல இக்காட்சி அமைகின்றது.

மங்கையர்க்கரசியாரைச் சம்பந்தர் பாராட்டிப் பாடியுள்ளதை,

**"மண்ணெல்லாம் திகழ மன்னனாய் மன்னும்
மணிமுடிச்சோழன்தன் மகளாம்
பண்ணினேர் மொழியாள் பாண்டிமாதேவி பாங்கினாற்
பணிசெய்து பரவ"**

எனவரும் பாடல் வரிகளால் அறியலாம். அவ்வரிகள் அரசியின் உயர்ந்த சிறப்பை விளக்கி நிற்கின்றன.

## 12. கோச்செங்கட்சோழர்

கோச்செங்கட்சோழர் முற்பிறவியில் சிலந்தியாகப் பிறந்து வாய் நூலாற் பந்தர் அமைத்துச் சிவபெருமானை வழிபட்டவர். அரிசிற்கரைப் புத்தூர் இறைவன் அவரைச் சோழனாகப் பிறந்து புகழ் அடையுமாறு அருள் செய்தார் என்ற செய்தியைச் சம்பந்தர் பாடியுள்ளார். இதை,

**"நிலத்த ணீரோ டனல்கால் விசும்பின் நீர்மையான்
சிலந்தி செங்கட் சோழனாகச் செய்தானூர்"**

எனவரும் பாடலால் அறியலாம்.

சம்பந்தர் கோச்செங்கணார்க்கு இறைவன் அருள் செய்த செயலைத் திருச்சேய்ஞலூர்த் திருப்பதிகம் பாடும்போது கூறியுள்ளார். திருவானைக்கா திருப்பதிகத்திலும் கோச்செங்கட்சோழர் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். போரின்றி தீர்த்திடும் நெறி மிக்க அரசன் கோச்செங்கட்சோழர் என்பதை திருத்தண்டலைநீணெறி திருப்பதிகத்தில் ஞானசம்பந்தர் பாராட்டியுள்ளார். இதைச்

**"செருவருத்திய செம்பியார் கோச்செங்கண்
நிருபர் தண்டலை நீணெறி காண்மினே"**

எனவரும் பாடலில் காணலாம். போரின்றி அரசு புரிய வேண்டும் பக்திநெறி நாள்தோறும் பரவ வேண்டும் என்பதை அவரின் பாடல்களின் வழி அறியமுடிகின்றது.

தலம்தோறும் திருக்கோவில் அமைத்தவர் கோச்செங்கட்சோழர் இதைப் பெருமையுடன் சம்பந்தர் குறிக்கின்றார். இதை,

**"அரிசிலம் பொருபுனல் அம்பர் மாநகர்க்
குரிசில்செங் கண்ணவன் கோயில் சேர்வரே"**

**"செய்யகண் ணிறைசெய்த கோயில் சேர்வரே"**

எனவரும் பாடலால் அறியலாம். கோயில் செய்து நாட்டுமக்கள் எல்லாம் பிறவிதோறும் வழிபட்டு உய்ய வழிகாட்டியவர் கோச்செங்கட்சோழர். அவரின் பெருமை கோவில் கட்டியதால் மேலும் உயர்ந்துள்ளது. இதைச் சம்பந்தரின் பாடலின் வழி அறிய முடிகின்றது.

### 13. திருநீலகண்டயாழ்ப்பாணர்

ஞானசம்பந்தர் திருஆலவாய் இறைவனைப் பாடும் பதிகத்தில் திருநீலகண்ட யாழ்ப்பாணருக்கு இறைவன் அருள்புரிந்த செயலைப் பாடியுள்ளார்.

**"தார முய்த்தது பாணர்க் கருளொடே"**

எனவரும் பாடல் அடிகளால் இதை அறியலாம். இசையால் அருள்பெற்றவர் திருநீலகண்டயாழ்ப்பாணர். இறைவன் அடியார்கள் இன்ன செயலால் அருள்பெற்று உயர்ந்தனர் என்ற செய்தி சம்பந்தர் பாடலில் நன்கு வெளிப்படுத்தப்படுகின்றது.

அடியார்கள் இறைவனின் நினைவை எப்பொழுதும் கொண்டிருப்பவர்கள்.

சுற்றமொடு பற்றை நீக்கியவர்கள் அடியார்கள்.

தில்லைவாழந்தணர் இறைவனுக்குரிய தொண்டையும் மக்கள் நலனுக்குரிய தொண்டையும் இணைத்து வாழ்ந்தவர்கள்.

இறைவன் தில்லைவாழந்தணரைப் பிரியாது உறைபவன்.

கண்ணப்பரின் அன்பு இறைவனால் ஏற்றுக்கொள்ளப்பட்டு அருள் புரியும் அளவிற்கு உயர்ந்ததாக உள்ளது.

சிவகோசரியாரின் எண்ணத்திற்கும் அருள் புரிந்தவன் இறைவன்.

முருகநாயனாரின் தொண்டு குறிக்கப்பட்டுள்ளது.

சண்டீசரின் பக்தி நெறி மிக உயர்ந்ததாகக் கூறப்பட்டுள்ளது.

குலச்சிறைநாயனாரின் பணிவுடைமைப் பண்பு சிறப்பாக உள்ளது.

திருநீலநக்கநாயனார் பிறந்ததால் திருச்சாத்தமங்கை சிறப்பிடம் பெறுகிறது.

நமிநந்தியடிகளின் விளக்கெரித்தல் பணி குறிப்பால் பெறப்படுகின்றது.

சிறுத்தொண்டர்க்கு அருள் புரிவதற்காகவே இறைவன் கணபதீச்சரத்தில் குடிகொண்டுள்ளான்.

புகழ்த்துணைநாயனாரின் அல்லல் போக்க இறைவன் காசு வழங்கிய செய்தி குறிக்கப்பட்டுள்ளது.

மங்கையர்க்கரசியின் வரலாறு, சைவப்பணி சிறப்பாகக் கூறப் பட்டுள்ளன.

கோச்செங்கட்சோழரின் முற்பிறப்பு, கோவில் கட்டிய செயல், அவற்றின் உயர்வு சிறப்பாகக் கூறப்பட்டுள்ளன.

இறையடியார்களின் செயல்களை ஞானசம்பந்தர் உயர்வாகப் பாடியுள்ளார். அவருடன் பழகிய அடியார்கள் பற்றியும் குறித்துள்ளார். கோச்செங்கட்சோழர் கோவில் கட்டிய செயல், மங்கையர்க்கரசியார் சைவத்திற்குப் பணியாற்றிய செயல்கள், குலச்சிறைநாயனாரின் பணிவுடைமைப் பண்பு, தில்லைவாழ் அந்தணர்களைப் பிரியாத இறைவனின் செயல், திருநாவுக்கரசர்க்கு திருநடனக்காட்சி காட்டிய செயல் போன்றவை சம்பந்தர் பாடியுள்ள பாடல்களில் மிக ஆழமான கருத்துக்களாக விளங்குகின்றன.

# 41. சம்பந்தரின் அகத்துறைப் பாடல்கள்

இராம. சௌந்திரவல்லி, குற்றாலம்.

பக்தி உலகில் பரமனை வழிபட்ட அடியார்கள் மேற்கொண்ட நெறிமுறைகள் பல. சற்புத்திர மார்க்கத்தில் இறைவழிபாட்டை மேற்கொண்ட திருஞானசம்பந்தரின் தேவாரப் பாடல்கள் பல கூறுபாடு களை உடையன. அவற்றுள் அகத்துறை தழுவிய பாடல்களை ஆய்வு செய்வதே இக்கட்டுரை.

இறைவனை அணுகும் நெறிகளில் நாயக-நாயகி பாவம் என்பது ஒன்று. இறைவனை நாயகனாகவும், தம்மை நாயகியாகவும் பாவித்து, அவனை அடைய நினைக்கும் காதல் உள்ளத் தவிப்பின் வெளிப்பாடாகப் பக்திப்பாடல்களை எழுதுதல் என்பது ஒருமுறை. சைவ, வைணவ அடியார்கள் இம்முறையைப் பயன்படுத்தி உள்ளனர். திருஞானசம்பந்தரும் தமது தேவாரத் திருப்பதிகங்களில் ஏறத்தாழப் பதினோரு பதிகங்களில் அகப்பாடல்களைப் பாடியுள்ளார். தவிர, அவர்தம் அற்புதப் பதிகங்கள் என உரைக்கப்படும் மூன்று பதிகங்களும் அகம் தழுவியன என்றும் கூறப்படுகின்றன.

திருஞானசம்பந்தரின் முதல் பதிகம் வரலாற்றுச் சிறப்பு மிக்கது. சீர்காழித் தலத்தில் தமக்கு ஞானப்பால் கொடுத்து அட்கொண்ட இறை எழில் பேசுவது. அப்பதிகத்தில் தம் உள்ளம்கவர் கள்வன் என்றே இறைவனைக் குறிக்கிறார். தலைவனிடத்துக் காதல் கொண்ட தலைவி எப்படி எல்லாம் பிரிவுத் துயரில் வருந்துவாளோ அந்த வருத்தத்தைச் சம்பந்தர் பாடல்களில் காணலாம்.

**"ஏர்பரந்த இனவெள்வளை சோர என்**
**உள்ளங் கவர் கள்வன்** (1.1.3) என்றும்,

**"இறைகலந்த வினவெள்வளை சோரஎன்**
**உள்ளங்கவர் கள்வன்"** (1.1.6) என்றும்

பிரிவாற்றாமையால் வளை நெகிழ்ந்த தன்மையைக் குறிப்பிடுகிறார். இதனைப் போலவே திருப்பாற்றுறைப் பதிகத்திலும்,

**"எண்ணார் வந்தென் எழில்கொண்டார்"** எனவும்,

**"மாகந்தோள் மதிசூடி மகிழ்ந்தென**
**தாகம் பொன்னிற மாக்கினார்" எனவும்**

**"நாதர் வந்தென் னலம் வெனவினார்"** எனவும்,

பாடுவதைக் காணலாம். இவ்வாறு காதலில் பிரிவு காரணமாக நலன் அழிதலையும், வளைசோர்தலையும், பசலை படர்தலையும் திருக்கானூர் பதிகமும், திரு இலம்பையங்கோட்டூர் பதிகமும், திருத்தோணிபுரப் பதிகமும், திருப்பரிதி நியமம் பதிகமும் பேசுகின்றன.

திருப்பிரமபுரப் பதிகம் (1.63) பைரவக் கோலத்தில் வந்து பலிதேர்ந்துண்ணும் சிவபெருமானது அழகிய தோற்றத்தையும், அதனைக் கண்ட முனிபத்தினிகள் அவர்பால் மையல் கொண்டு அடையும் விரகதாபத்தையும் அகச்சுவை ததும்பப் பேசுகிறது.

**"எரியார் மழுவொன்றேந்தியங்கை யிடுதலையே கலனா**
**வரியார் வளையா ரையம்வவ்வாய் மாநலம் வவ்வுதியே"**
எனவும்

**"கயலார் தடங்கணஞ் சொனல்லார் கண்டுயில் வவ்வுதியே"**
எனவும்

**"பகலாப் பலிதேர்ந்தையம் வவ்வாய் பாய்கலை வவ்வுதியே"**
எனவும்

பாடுகிறார். இறைவன் மீது அம்மகளிர் கொண்ட காதலால் படும் வேதனையைக் கண்துயில் கவர்ந்தவன் எனவும், வளைகவர்ந்தவன் கலைகவர்ந்தவன் எனவும் பலபடப் பேசுகிறார்.

திருத்தோணிபுரப் பதிகம் (1.60) முழுமையும் சங்க இலக்கிய மரபை ஒப்பு தூதுப்பாடல்களாக அமைந்துள்ளன. தொல்காப்பியர் கூறும் காமம் மிக்க கழிபடர் கிளவிகளாக இவை அமைந்துள்ளன. கேட்பன போலவும், கிளக்குக போலவும் இயங்குக போலவும், இயற்றுக போலவும் பாவித்துக் கொண்டு அஃறிணைப் பொருட்களை இறைவனிடத்துத் தலைவி தூதுவிடுவதாக அமைந்துள்ளது. இப்பதிகத்தில் அளிஅரசு, குருகு, வாரணம், நாராய், கபோதம், அன்னம், அன்றில், குயில், பூவை, கிளி என்ற பல்வேறு பறவைகள் தூதுப் பொருள் ஆகின்றன.

**"சிறையாரும் மடக்கிளியே யிங்கேவா தேனொடுபால்**
**முறையாலே உணத்தருவன் மொய்பவளத் தொடுதரளந்**
**துறையாருங் கடற்றோணி புரத்தீசன் துளங்குமிளம்**
**பிறையாளன் திருநாமம் எனக்கொருகால் பேசாயே"**
(1.60.10)

எனத் தூது முறைப்படி கிளியின் எழில் நலம் கூறி அழைத்து, தேனும் பாலும் தருவேன் என்று கூறி, இறைவனின் திருநாமத்தை ஒருமுறை கூறுக என இறைஞ்சி நிற்றல், தலைவியின் காதல் உள்ளத்து நிலைமையை நன்கு புலப்படுத்துவதாக அமைகின்றது.

இதே போன்று பறவைகளைத் தூதுவிட்டும், அவற்றோடு பேசுவதுமாக அமைந்த மற்றொரு பதிகம் திருச்செங்காட்டங்குடிப் பதிகம் (3.63) . இத்தலம் சீராளனை திருவமுதாக்கி இறைவனுக்குப் படைத்த சிறுத்தொண்டர் வாழ்ந்த திருத்தலம். ஆகையால் ஒவ்வொரு பாடலிலும் சிறுத்தொண்டரையும் குறிப்பிட்டு மகிழ்கிறார் சம்பந்தர்.

**''பொன்னம்பூங் கழிக்கானற் புணர்துணையோ டுடன் வாழும்**
**அன்னங்கா ளன்றில்கா ளகன்றும் போய் வருவீர்காள்**
**கன்னவில் தோள் சிறுத்தொண்டன் கணபதீச் சரமேய**
**இன்னமுத னிணையடிக்கீ ழெனதல்ல லுரையீரே''** (3.63.2)

இனி, சம்பந்தரின் அற்புதப்பதிகங்கள் எனப்படுபவை மூன்று. அவர் செய்த அற்புதங்கள் ஏராளம். எனினும் மூன்று பெண்களின் இடர்தீர்த்த பதிகங்கள் இவை. மூன்றுமே அகச்சுவைக் கூறு உடையனபோலக் காணக்கிடக்கின்றன. திருப்பாச்சிலாச் சிராமம் என்னும் தலத்தில், முயலகன் என்ற நோயால் பிடிக்கப்பட்டுத் தன்னிலை மறந்து மயங்கிக் கிடந்த கொல்லி மழவனின் மகளின், நோய் நீங்குமாறு பதிகம் பாடினார், அப்பதிகத்தில் அவள் உற்ற மயக்க நிலையினை, இறைவனால் அவள் உற்ற மையல் போலப் பாவித்துப்பாடுகிறார்.

**''துணிவளர் திங்கள் துளங்கிவிளங்கச்**
**சுடர் உடை சுற்றிமுடித்துப்**
**பணிவளர் கொள்கையர் பாரிடஞ்சூழ**
**வாரிடமும் பலிதேர்வார்**
**அணிவளர் கோல மெலாஞ்செய்து பாச்சிலாச்**
**சிராமத்துறைகின்ற**
**மணிவளர் கண்டரோ மங்கையை வாட**
**மயல் செய்வதோ இவர் மாண்பே''** (1.44.1)

என்பது முதல்பாடல். பதிகம் முழுவதும் அப்பெண் கொண்ட நோயைக் காதல் மயக்கமாகப் பாவித்துப்பாடி இறையருள் வேண்டுகிறார்.

சம்பந்தர் திருமருகல் என்னும் தலத்தை அடைந்தபோது பாம்பு கடித்துத் தன் காதலன் இறந்துவிட, அதனால் துயருற்று அழும் ஒரு வணிகர் குலத்துப் பெண்ணைக் கண்டார். அவள் வருத்தம் தீரும் வண்ணம் ''சடையாய் எனுமால்'' (2.18) என்னும் பதிகம்பாடி வணிகனை உயிர்ப்பித்தார். அந்தப் பதிகமும் அகத்துறை அமைப்பாடி யதாகக் காணப்படுகிறது.

"வழுவாள் பெருமான் கழல்வாழ் கவெனா
எழுவாள் நினைவா ளிரவும் பகலும்
மழுவா ளுடையாய் மருகற் பெருமான்
தொழுவா ளிவளைத் துயராக் கிளையே" (2.18.7)

என அப்பெண் தன் நாயகனை நினைத்து வருந்தும் வருத்தத்தை அகச்சுவையாக ஆக்கிப் பாடுகிறார்.

அதேபோன்று திருமயிலாப்பூரில் சிவநேசர் என்னும் வணிகர் தன் மகள் பூம்பாவை என்பாள் இறந்துபோக, அவள் தன் எலும்பு களையும் சாம்பலையும் ஒரு குடத்திலே இட்டுப் பாதுகாத்து வந்தார். அத் தலத்திற்குத் திருஞானசம்பந்தர் சென்றபோது, அவ்வணிகரின் துயர் தீரும் வண்ணம் பதிகம்பாடி அப்பூம்பாவையை உயிர்ப்பித்தார்.

"மட்டிட்ட புன்னையங் கானன் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச்சர மமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பினுருத்திர பல்கணத்தார்க்
கட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்" (2.47.1)

என்று அமைகின்ற பதிகப் பாடல்கள் அனைத்துமே தலைவனைக் காணாது சென்று விடுவாளோ என்பதுபோல அமைந்துள்ளன. இவ்வாறு பெண்களின் துயர்தீர்த்த இம்மூன்று பதிகங்களையும் அகத்துறைப் பாடல்களே என்பர்.

1. திருஞானசம்பந்தர் தம்மை நாயகியாகவும், இறைவனை நாயகனாகவும் பாவித்துப் பாடிய பாடல்கள் இரண்டு நெறியில் அமைகின்றன. ஒன்று தன் எழில் நலம் கவர்ந்தான் என எண்ணிப் பாடுதல்; மற்றொன்று தூது அமைப்பில் பாடியவை. முதல் பதிகத்திலேயே உள்ளங்கவர் கள்வன் எனப் பாடுவதை அகத்துறை என்னலாமா? என ஒருவினா எழும். ஏனெனில் இத்தனைப் பாடிய போது சம்பந்தரின் வயது மூன்று எனப்படுகிறது. நாயக, நாயகி பாவம் என்பதே சிற்றின்பத்தின் வழியாகப் பேரின்பம் அடையும் நெறி பேசுவதே. தன் முற்பிறப்பின் செய்தவம் காரணமாக மூன்று வயதில் ஞானசம்பந்தம் பெற்ற இவர், பரமாத்மாவை மனத்துள் நினைத்து, மையல்கொண்ட ஜீவாத்மா நிலையினின்று பாடியுள்ளார் எனலாம். தூதுப் பாடல்களில் அகத்துறை மரபின் பக்குவம் காணப்படுகின்றது.
2. ஆரண்யத்தில் இருந்த முனிவர்களின் மனைவியர் இறைவன் மீது கொண்ட காதல் அகச்சுவையோடு பாடப் பெற்றுள்ளன.
3. அற்புதப்பதிகங்கள் மூன்றும் மூன்று பெண்களில் துயர் துடைப் பனவாய் அமைந்து, அகச்சுவை பெற்றுள்ளன.

பொதுவாக, சம்பந்தர் நிலவுலகில் வாழ்ந்த காலம் பதினாறு ஆண்டுகளே. ஆதலால், அவர்தம் அகத்துறைப் பாடல்கள் நாயக - நாயகி பாவ அனுபவத்தில் உச்சத்தை எட்டியவை எனக் கூற இயலாத தன்மையன.

# 42. இயற்கை - காட்டும் இறைநெறி

ப.சு. ஞானப்பூங்கோதை, பேரூர்.

சங்க கால மக்கள் தங்கள் நிலங்களுக்குக் குறிஞ்சி, முல்லை மருதம், நெய்தல், பாலை என்று மலர்களின் பெயரிட்டனர். மலை, காடு, வயல், கடல், மணல் எனும் இவையும் இவை சார்ந்த பகுதி களும் ஐந்நிலங்களாகும். ஐந்நிலங்களுக்குரிய கருப்பொருட்கள் உணவு, மா, மரம், புல், பூ, தொழில், பண் முதலியன மக்களது இயற்கை வாழ்வை எடுத்துக்காட்டுவன. கருப்பொருட்கள் ஐம்புல நுகர்வுக்குரிய பொருட்களாக மட்டுமன்றி அறிவூட்டும் ஆசானாகவும் ஆன்மநலம் காட்டும் வாயிலாகவும் அமைந்தன என்கிறார் அறிஞர் ஒருவர். இயற்கையிடமிருந்து மனித இனம் எத்தனையோ கற்க வேண்டியுளது அதனினும் இயற்கை மனிதனுக்குக் கற்றுத் தருவது ஏராளம். இயற்கையைப் பாடாத கவிஞனே இல்லை எனலாம். தாம் கண்டு அனுபவித்த இயற்கையினை இயற்கை இன்பத்தினைத் தம் படைப்புக்களில் வெளிக்கொணர்ந்துள்ளனர். மனிதனின் கண்களும் மனமும் அதற்காகவே படைக்கப் பெற்றன என்று கூடச் சொல்லலாம். சங்க காலம் சங்க மருவியகாலம், காப்பிய காலம், பக்தி இயக்கக் காலம் எனும் பல்வேறு காலச் சூழல்களில் எழுந்த இலக்கியங்கள் பல. அவற்றுள் காணலாகும் இயற்கைக் காட்சிகள், இறைத் தத்துவங்கள் சமய உண்மைகள், வாழ்க்கை நெறிமுறைகள், சமுதாய உண்மைகள் உணர்த்துவனவாக உள்ளன. அவ்வகையில் நற்றமிழ்வல்ல ஞானசம்பந்தன் அருளிய முதல் மூன்று திருமுறைகளும் பயின்று வரும் இயற்கை, மக்கள் சமுதாயத்திற்கு இறைவழிபாட்டினை எவ்வாறு எடுத்துக்காட்டுகின்றது என்பதனை எடுத்துக் கூறும் வகையில் அமைகிறது இக்கட்டுரை.

ஆதிகால மனிதன் இயற்கையோடு இயைந்து வாழக் கற்றுக் கொண்டிருந்தான். அவன் ஐம்பூதங்களின் ஆற்றல்களைக் கண்டு அஞ்சினான். ஞாயிற்றின் ஒளி, நிலத்தின் நடுக்கம், நீரின் பெருக்கு, நெருப்பின் வெம்மை, காற்றின் சீற்றம், மழையின் பொழிவு, இடியின் முழக்கம், மின்னலின் ஒளி ஆகியன அச்சத்தை யூட்டின. எனவே அவன் அச்சத்தின் காரணமாக இயற்கையை வழிபட்டான்.

இயற்கையின் ஆற்றலைக்கண்டு முதலில் அச்சம் கொண்டவன் பின்பு இயற்கையின் ஆற்றலை அறிந்து வியந்தான், வியத்தல் உணர்வும் வழிபாட்டிற்குக் காரணமாயிற்று. பின்னர் ஒவ்வொரு சூழலில் தனக்குப் பயன்தரும் இயற்கைப் பொருள் எவையோ அவற்றினை வணங்கத்தலைப்பட்டான். எனவே இயற்கையின் பால் ஏற்பட்ட அச்சம் - வியப்பு - பயன் என்ற வளர்ச்சி மாறிவரும் மக்கள் சமுதாயம் வழிபாடு செய்தற்குரிய உணர்வை ஏற்படுத்தியது.

இயற்கைப் பொருள்களாகிய கதிரவன், மதி, மழை, மின்னல் முதலான பொருட்களைக் கண்டு ஏற்பட்ட வியப்பு அதிர்ச்சி - அச்சம் எனும் அவன் உள்ளத்து உணர்வுகளே சமயம் தோன்றக் காரணமாயிற்று என்கிறார் மேக்ஸ் முல்லர் எனும் அறிஞர்.

பழந்தமிழர் இயற்கையழகை உயர்ந்த பொருளாக அதாவது கடவுளாகக் கொண்டு வாழ்ந்தனர். பழந்தமிழ் மக்கள் கொண்ட இயற்கை அழகு என்பதனை நாம் மறுத்தலாகாது எனும் திரு.வி.க.வின் கருத்து மனிதனின் அழகியல் உணர்வு இயற்கை வழிபாட்டிற்கு வழிகோலியது என்று அறியலாம்.

**இலக்கியங்களில் இயற்கை**

உலகில் வாழும் ஓரறிவு உயிர் முதல் ஐந்து அறிவு உயிர் வரை உள்ளவை மனிதனுக்குப் பல உண்மைகளைப் பறைசாற்றுவனவாகும். சங்க இலக்கியங்களுக்கு முற்பட்ட தொல்காப்பியம் இயற்கையினது பின்புலத்தில் இறைவன் பெருமையினைக் காட்டுகிறது. ''மாயோன்மேய காடுறைவுலகமும்'' என்று நானிலப் பாகுபாடுகளுடன் அந்நிலத் தெய்வங்களையும் தொல்காப்பியர் காட்டுகிறார். மேலும் கொடிநிலை, கந்தழி, வள்ளி எனும் ஞாயிறு, திங்கள் தீ முதலான இயற்கை வழிபாடுகளைக் காட்டுகிறது. சங்க காலத்தில் இயற்கைப் பொருளை இறைவனொடு இணைத்துப் பார்க்கும் இயல்பு மிகக் குறைவாக உளது. இவ்இயல்பு தொகை நூல்களான பரிபாடல், கலித்தொகையிலும், பத்துப்பாட்டு நூல்களுள் ஒன்றான திருமுருகாற்றுப்படையிலும் காணலாம்.

சங்க இலக்கியம் மானுடத்தைப் பாடியது. பக்தி இலக்கியமோ இறையைப் பாடியது. மானுடம் பாடும் மரபிலிருந்து மாறுபட்டு இறைவனைப் புகழும் புதுமை முதலில் பரிபாடலில்தான் தோன்றியது என்று குறிப்பிடுவர். பக்தி இலக்கியங்களில் தான் இறைவனையும் இயற்கையையும் இணைத்து பார்க்கும் இயல்பு முழுமையாக மலர்ந்தது எனலாம். மூவர் தமிழ் திருமுறை - திருப்பதிகங்கள்

இயற்கையைப் பின்புலமாகக் கொண்டு பாடப்பட்டன என்றாலும் திருஞானசம்பந்தர், தம் திருமுறைகளில்தான் பெரும்பான்மையும் இயற்கை கையாளப்பட்டுள்ளது. இயற்கையை எடுத்தாளுவதில் இவரே முதன்மையாளராகவும் விளங்குகிறார்.

## இயற்கையே இறைவன்

இறைவன் உலகில் ஒன்றாய், உடனாய் வேறாய் இருப்பது போன்று இயற்கையாக விளங்குகிறான் இயற்கையில் கலந்துளான், இயற்கையைக் கடந்தவன் என்றாலும் இயற்கையைப் படைப்பவன் என்று பல நிலைகளில் இறைவனைக் காண்கிறது திருஞானசம்பந்தர் தேவாரம்.

இறைவன் நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் எனும் ஐம்பூதங்களாகவும் கதிரவன் மதி எனும் இருசுடராகவும் உலக உயிர்களாகவும் விளங்குகின்றான். அவனே எண்திசையாகவும் திகழ்கிறான், ஆதியும் அந்தமும் இல்லாதவன், உலகிற்கு அவனே ஆதியும் அந்தமும் ஆனவன். அவனே உலகின் இயற்கை வடிவாக உளன். இதனைத் திருஞானசம்பந்தர்,

**"ஈறாய்முத லொன்றாயிரு பெண்ணாண்குண மூன்றாய்**
**மாறாமறை நான்காய்வரு பூதம் அவை ஐந்தாய்**
**ஆறார்சுவை யேழோசையொ டெட்டுத்திசை தானாய்**
**வேறாயுட னானானிடம் வீழிம்மிழலையே"** (1.11.2)

என்று திருவீழிமிழலையில் இறைவனைச் சுட்டுகிறார்.

மேலும் இறைவன் உயிர்கட்கு வளம் தரும் மழையாக, மன்னவனாக, பொன்னாக, சோதியாக விளங்குகிறான். திருப்புள்ள மங்கையில் எழுந்தருளியுள்ள் இறைவன்,

**"மன்னானவன் உலகிற்கொரு மழையானவன் பிழையில்**
**பொன்னானவன் முதலானவன் பொழில்சூழ் புள மங்கை**
**என்னானவன் இசையானவன் இளஞாயிற்றின் சோதி**
**அன்னானவன் உறையுமிடம் ஆலந்துறையதுவே"** (1.16.6)

## இறைவனை இயற்கை வழிபடுதல்

ஆதிகாலத்தில் மனிதன் இயற்கையை வழிபட்டான். ஆனால் பக்திக் காலத்தில் இயற்கையோ இறைவனை வழிபட்டது எனலாம். ஆறு, கடல், விலங்குகள், பறவைகள், மதி, கதிரவன் ஆகியன இறைவனை வழிபடுவதாகத் திருஞானசம்பந்தர் தேவாரம் குறிப்பிடுகிறது.

**ஆறு-கடல்**

தென்னாட்டில் வளம் சேர்க்கும் காவிரியாறும் மணிமுத்தாறும் இறைவன் வணங்குவதற்காக இயற்கைப் பொருட்களைக் கொண்டு வருகின்றன.

மணிமுத்தாறு மலர்களையும் சந்தனத்தையும் குங்குமத்தையும் இறைவனுக்குரிய பொருளாக எண்ணி நீரில் அடித்து வருவதுடன் திருமுதுகுன்றத்து வாழ் இறைவன் திருவடியை வணங்குகிறது. இதனை,

**"கொத்தார் மலர் குளிர் சந்தகில் ஒளிர்குங்குமங்கொண்டு**
**முத்தாறுவந் தடிவீழ்தரு முதுகுன்றடைவோமே"** (1.12.1)

என்ற அடிகளால் தெளியலாம்.

காவிரியாறு, சந்தனம் ஏலம் மணி செம்பொன் ஆகிய பொருட் களை அடித்துக்கொண்டு நெய்யாடியப்பராக எழுந்தருளியிருக்கும் திருநெய்த்தானத்து, இறைவனை போற்றுகிறது. மேலும் சந்தனம், அகில், பூங்கொத்து இவற்றையும் அடித்துக் கொண்டு வருவதால் வினைதீர இறைவனைத் தொழவேண்டும் என இயற்கை வழி மக்களுக்குக் கூறுகிறார். திருஞானசம்பந்தர் இக்கருத்தினை,

**"நுகரா ரமொடு ஏலம்மணி செம்பொன்னுரையுந்திப்**
**பகரா வருபுனல் காவிரி பரவிப் பணிந்தேத்தும் நெய்**
**நகரானடி யேத்தந் நமை நடலையடையாவே"** (1.15.5)

என்றும்,

**"மெய்த்தன்னுறும் வினைதீர்வகை தொழுமின் செழுமலரின்**
**கொத்தின்னொடு சந்தார்கில் கொணர் காவிரிக்கரைமேல்**
**பொத்தின்னி டையாந்தை பல பாடும் புளமங்கை"** (1.16.5)

என்றும் திருமுறைப் பாடல்களில் குறிப்பிடுவதை அறியலாம்.

மக்கள் வாழ்வில் ஆறு இன்றியமையாத இடத்தை பெறுகிறது. நீர்நிலைகளில் சென்று வழிபடும் வழக்கம் இன்றைய நாளில்கூடக் காணலாம். மக்கள் கூட்டமாகச் சென்று ஆற்றினை வழிபட்டனர் என்பதற்குச் சங்கப் பாடல்கள் சான்றாக அமைகின்றன. ஆனால் ஞானசம்பந்தர் பாடல்களோ ஆறு தம்மிடத்திலும் தம்மைச் சார்ந்த இடத்திலும் விளையும் பொருட்களைக் கொணர்ந்து இறைவனை வழிபடுகிறது என்று சுட்டுகின்றன.

**மலர்**

தொன்றுதொட்டு மலர் வழிபாடு சிறந்து விளங்குகிறது. இயற்கை யாக மலரும் முல்லைப் பூவினைத் திருஞானசம்பந்தர் இறைநெறியில்

காட்டுகிறார். கொலைத் தொழில் செயும் வேடர்கள் ஒன்று சேர்ந்து முதுகுன்றத்து இறைவனை வழிபடுகின்றனர். இதனையறிந்த முல்லை மலர் மகிழ்ச்சியினால் மலர்கிறது என்று கூறுவதால் மலர், வழிபாட்டில் எங்ஙனம் சிறந்து விளங்குகிறது. என்பதனைக்

**"கொல்லை வேடர் கூடி நின்று கும்பிட**
**முல்லை யயலே முறுவல் செய்யு முதுகுன்றே"** (2.64.9)

என்ற அடிகளில் எடுத்துரைக்கிறார்.

இறைவழிபாட்டிற்குரிய பொருட்களில் மிகச் சிறந்ததாகக் கருதப்படுவது மலரும் நீருமே ஆகும். இதனால்தான் 'பூசை' என்று சொல் உருவாயிற்று என்பர்.

**விலங்குகள்**

**களிறு - பிடி**

திருக்குற்றாலத்துக்கு உரிய தலமரம் பலா ஆகும். அங்கு எழுந் தருளியுள்ள இறைவனின் பெயர் குறும்பலாநாதர். குற்றாலத்து மலையில் இருக்கும் களிறும் பிடியும் வேங்கை மலர்களைப் பறித்து இறை வழிபாட்டிற்குரிய முறையறிந்து வழிபடுகின்றன. இதனைச் சம்பந்தர் தேவாரம்,

**"பூந்த னறுவேங்கைக் கொத்திறுத்து மத்தகத்தில் பொலிய ஏந்திக்**
**கூந்தல் பிடியுடன் களிறும் உடன் வணங்கும் குறும்பலாவே"**
(2.71.8)

என்கிறது.

திருநணா எனும் தலத்தினைப் புலியும் மானும் நட்புடன் வணங்குகின்றன. புலியும் மானும் பகை கொள்வன. அதனை மறந்து வழிபாடு செய்வது இத்தலத்தின் சிறப்பு ஆகும். அடியார்களுக்கு அச்ச உணர்வு ஏற்படுத்தாது விலகிச் சென்று வழிபடுகின்றன. பிறவிலங்குகளும் இறைவனை வழிபடுகின்றன. சிவபக்தி கொண்ட விலங்கினங்களைத் திருஞானசம்பந்தர் காட்டுகிறார்.

"...............புலியும் மானும்
**அல்லாத சாதிகளும் அங்குகழல்மேல் கைகூப்பி அடியார் கூடிச்**
**செல்லா அருநெறிக்கே செல்ல அருள்புரியும் திருநணாவே"**
(2.72.6)

**மந்தி**

மந்திகள் கூட்டமாக வந்து பல்வகை மலர்களைக் கொண்டு திருமுதுகுன்றத்து நாதரை வழிபடுகின்றன. மக்கள் தொழுவதற்கு

முன்பாகவே தொழுது சிவபூசை செய்கின்றன. சிவபூசை செய்யாத மக்கள் நாணமடைதல் வேண்டும் என்பதனைக் குறிப்பாகத் திருமுதுகுன்றத்துப் பதிகம் தெரிவிக்கிறது.

ஆணும் பெண்ணுமான மந்தியும் கடுவனும் கூடித் திருவலிதாயத் திருத்தலத்து அந்தி வண்ணத்து இறைவனை வழிபடுகின்றன.

**''அந்தி யன்னதொரு பேரொளியானமர் கோயில் அயல் எங்கும்**
**மந்தி வந்து கடுவன்னொடும் கூடி வணங்கும் வலிதாயம்''**
(1.3.5)

**பறவைகள்**

திருமுதுகுன்றத்துத் தலத்தில் உள்ள கிளிகள் வேத இசையை சொல்கின்றன. குயில்கள் இறைவன் புகழ்பாடுகின்றன. மாணவர் சேர்ந்து ஒலிக்கும் வேத ஒலியைத் திரு அன்பிலாலந்துறை (1.33.2) தலத்தில் உள்ள கிளிகளும் ஒலிக்கின்றன.

அன்னப்பறவை பெடையோடு சேர்ந்து இன்புறும் தலமாகப் பிரமபுரம் (1.1.7) விளங்குகிறது. இது மாதொரு பாகனாகத் திகழும் இறைவனை நினைவூட்டுகிறது எனலாம்.

திருஞானசம்பந்தர் பதிகங்கள் பெரும்பாலும் தலச்சிறப்புடன் இயற்கைப் புனைவுகொண்டு பாடப்பட்டுள்ளன. தலம்தோறும் எழுந்தருளியுள்ள இறைவனைத் தம் இசைத்தமிழால் போற்றியவர் சம்பந்தர். தாம் நேரில் கண்ட இயற்கைக் காட்சிகளான நீர், நிலம், மலைகள், ஆறுகள், கடல், வயல், காடுகள், பொழில், பொய்கை, சோலை, விலங்குகள், பறவை, மலர்கள், கனிகள் என்று பல பொருட்களை வருணனைக் காட்சிகளாகத் தம் பதிகங்களுள் காட்டியுள்ளார்.

1. இயற்கைப் பின்னணியில் இறைவன் புகழ்பாடுகிறார்.
2. இறைவனே இயற்கையாகவும் உள்ளார்.
3. ஆறுகள், பறவைகள், விலங்குகள் இறைவனை வழிபடுகின்றன.

மக்கள் சமுதாயத்திற்கு இறைவழிபாட்டின் முக்கியத்துவத்தை எடுத்துக் காட்ட 'இயற்கை வழிபடுதலை' ஓர் உத்தியாகப் பயன்படுத்தினார் என்பது அறியமுடிகிறது. ''நாமும் இயற்கைவழி நின்று இறைவனை என்றும் வழிபடுவோமாக''

# 43. சம்பந்தர் பாடல்களில் சைவசித்தாந்தம்

பி. தர்மராசு, திருவையாறு.

ஒல்லையாறி உள்ளம் ஒன்றிக் கள்ளம் ஒழிந்து வெய்ய
சொல்லையாறித் தூய்மை செய்து காமவினை யகற்றி
நல்லவாறே உன்றன் நாமம் நாவில் நவின் றேத்த
வல்லவாறே வந்து நல்காய் வலிவலம் மேயவனே! -

ஞானக்கடல் ஞானி, திருஞானசம்பந்தரின் பாடல்களில் அமைந்துள்ள சித்தாந்தக் கருத்துக்களைத் தொகுத்துக் காண்பதே கட்டுரையின் நோக்கமாகும்.

சிவனடியைச் சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானமும் உவமை யிலாக் கலைஞானமும் உணர்வரிய மெய்ஞ்ஞானமும் ஒரு சேரக் கைவரப்பெற்றவர் திருஞானசம்பந்த சுவாமிகள்.

"நஞ்சணியும் கண்டனுக்கு ஆளாய அன்பு செய்தவர்" இப்பிறவியின் பயனை எண்ணி வியந்து "என்னை புண்ணியம் செய்தனை நெஞ்சமே" என்று பாடி மகிழ்ந்தவர்.

மக்கள் சமயப்பற்றும், சமய ஞானமும் உடையவர்களாய், சமய நெறியில் நின்று பயன்பெறுவதற்கு, சமய அடியார்களது பெருமையை உணர்ந்து, அவர்களிடத்து உண்மை அன்பு செலுத்துதல் முதற்கடமை யாகும். நாயன்மார்களுக்குள்ளே அத்தகையோர் பலர் இருந்துள்ளனர்.

அப்பர் பெருமானது திருத்தொண்டின் பெருமையையும் அவருக்கு ஆண்டவன் செய்த அருளினையும் உணர்ந்த அப்பூதியடிகள் அப்பரைக் கண்ணாரக் காணாமல் அவரிடம் அன்பு பூண்டதை,

"வடிவு தாம் காணாராயும் மன்னுசீர் வாக்கின் வேந்தர்
அடிமையும் தம்பிரானார் அருளும் கேட்டு அவர் நாமத்தால்
பிற திகழ் மடங்கள் தண்ணீர்ப் பந்தல்கள் முதலாய் உள்ள
முடிவிலா அறங்கள் செய்து முறைமையால் வாழ்ந்தார்"

என்று சேக்கிழார் உணர்த்தும் திறம் நினைக்கத்தக்கது.

சிவபெருமான் அம்பிகையோடு நேரே தோன்றி அருளிக் கொடுத்த ஞானப்பாலை திருஞானசம்பந்தர் மூன்று வயதில் உண்டு

அனைத்துக் கலைகளையும் ஓதாதுணர்ந்த தன்மையையும், அருட்செயல்களையும் உணர்ந்த மங்கையர்க்கரசியார் அவர்மீது தாயன்பு கொண்டார். அத்தலையன்பு திருஞானசம்பந்தரை முதன் முறையாகக் கண்ணுற்றபோது பால் சுரந்து பெருகும் நிலை உண்டானதை,

**"சுரந்த திருமுலைக்கே துய்ய சிவ ஞானம்**
**சுரந்துண்டார் பிள்ளையெனச் சொல்ல சுரந்த**
**தனமுடையார் தென்பாண்டி மாதேவி தாழிந்த**
**மனமுடையாள் அன்பிருந்த வாறு"**

என்று திருக்களிற்றுப்படியார் சுட்டியுள்ளது நினைக்கத்தக்கது. சிவப்பிரகாசரும் நால்வர் நான்மணிமாலையில் காட்டுகிறார். திருஞானசம்பந்தர் அரசனையும் நாட்டையும் உய்விக்கச் செய்தார்.

வெப்புநோயால் பீடிக்கப்பட்ட பாண்டியனின் செவி, ஞானசம்பந்தர் என்னும் திருப்பெயரைக் கேட்டதும் நோய் தளர்வுற்றது என்பதைச் சேக்கிழார்,

**"மீனவன் செவியினூடு மெய்யுணர் வளிப்போர் கூற**
**ஞானசம்பந்தர் என்னும் நாம மந்திரமுஞ் செல்ல**
**ஆனபோ தயர்வு தன்னை அகன்றிட"**

என்று குறிப்பிட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

தமிழக வரலாற்றில் பன்னிரு திருமுறைகள் தத்துவமாகவும், சரித்திரமாகவும், வரலாறாகவும், இலக்கியமாகவும், கலைப்பண்பாட்டுக் கருவூலமாகவும் விளங்குகின்றன.

திருமுறைகளினால்தான் தமிழ்நாட்டில் எண்ணற்ற திருமடங்கள் தோன்றின. சமய உண்மைகளும், உணர்வுகளும் சமய ஒழுகலாறுகளும் செழிப்பதற்குரிய சாதனங்களாக விளங்குபவை திருமுறைகள் எனலாம்.

"சமயக்குரவர் நால்வருள் முதலிடம் பெறுபவர், ஞானசம்பந்தர். முதல் மூன்று திருமுறைகள் திருஞானசம்பந்தர் அருளியவை. மகண்மை நெறியைக் காட்டுபவர் திருஞானசம்பந்தரது பாடல்கள் பதினாறாயிரம் என்றும் எஞ்சியது முந்நூற்று எண்பத்து நான்கே என்று குறிப்பிடுவர்!".

திருஞானசம்பந்தர் தாம் பெற்ற சிவஞானத்தை திருப்பதிகமாக உலகிற்கு வழங்கினார் என்பதை, "உள் நிறைந்து பொழிந்தெழுந்த உயர் ஞானத் திருமொழியால் இசைத்தார்" என்று சேக்கிழார் குறிப்பிடப்பட்டுள்ளது சிந்திக்கத்தக்கது.

திருமுறைகளின் பிழிவு சைவசித்தாந்தமாக மலர்ந்தது எனில் மிகையாகாது. அறிவு கருவூலமாக விளங்குவது சைவசித்தாந்த நூல்கள் ஆகும்.

திருமுறைகளின் மணிமகுடமாக திருஞானசம்பந்தர் பாடல்கள் விளங்குதல் போல் சைவசித்தாந்த நூல்களின் மணிமகுடமாக மெய்கண்டாரின் சிவஞானபோதம் விளங்குகின்றது.

உயிர்கள் நித்தியமானவை. அனாதிகாலந் தொட்டு ஆணவப் பிடியில் துன்புறுகின்றன. அத்துன்பத்திலிருந்து உயிர்களைக் காப்பாற்ற இறைவன் உலகைப் படைத்தான்.

**"ஊன் உயிர் வேறு செய்தான் நொடித்தான் மலையுத்தமனே - அந்த"**

**"களையா உடலோடு சேரமான் ஆரூரன்"**

என்று 7-ஆம் திருமுறை கூறுகிறது.

உடம்போடு முக்தியடையலாம் என்பது சைவசித்தாந்தக் கோட்பாடு. பக்குவம் பெற்ற ஆன்மா மும்மலங்களைக் களைந்து இருவினை ஒப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் ஆகிய நிலைகளை அடையும். சிவயோகத்தை நோக்கிச் சைவசித்தாந்திகளின் கொள்கைகள் அமைக்கப்பட்டன.

ஆன்மா ஆண்டவனிடம் அடிமை ஆகும் போது முக்தி உண்டா கின்றது. குற்றமில்லாதது எதுவோ அதுவே இறை. உலகம் குற்றமுடையது. உலகில் உயிர் வாழ்வதால் உயிரும் குற்றமுடையதாகின்றது.

சடப்பொருளாகிய உலகம், சித்துப்பொருளாகிய உயிர்கள், அவைகளை இணைத்து இயக்கும் இறைவன் ஆகிய முப்பொருள் களுள் முதலிடம் வகிப்பவன் இறைவன். இறைவனைப் பதி என்றும், உயிர்களைப் 'பசு' வென்றும் உலகமாகிய பொருள்களைப் பாசம் என்றும் அழைப்பது சைவசித்தாந்த மரபு. பசு பதியோடு மலம் நீக்கி திருவருடியில் அணையும் தகுதி பெறுகிறது. பசுக்களின் தலைவன் என்பதால் இறைவனை பசுபதி என்று அழைக்கின்றோம்.

"ஆதிபகவன்" என்று வள்ளுவர் கூறும் முதற்பொருளைச் சிவஞானபோதம், அரனாகிய 'சிவம்' என்று முதற்சூத்திரத்தில் குறிக்கின்றது.

'ஓர் இறைக்கோட்பாட்டைச்' சைவசித்தாந்திகள் அறுதி யிட்டுள்ளனர். இக்கருத்தை,

**"ஊனுளார் உயிர்வாழ்க்கை யாயுற வாகிநின்ற ஒருவன்"**
(185.7)

எனறு திருஞானசம்பந்தர் சுட்டியுள்ளார்.

இறைவனாகிய ஒருவனே அனைத்துமாகி நிற்கின்றார் என்ற சித்தாந்தக் கருத்தை,

**"ஈறாய் முதல் ஒன்றாய் இருபெண் ஆண் குணமூன்றாய்
மாறாமறை நான்காய் வருபூதமவை ஐந்தாய்
ஆருர்சுவை ஏழோசையோடெட்டு திசைதானய்
வேறாய் உடன் ஆனானிடம் வீழிமிழலையே"**

என்றும்

**"புவிமுதல் ஐந்து பூதமாய்ப் புலனைந்தாய்
நிலனைந்தாய்க் காண நான்காய்
அவை அவை சேர் பயனுருவாய் அல்ல வுரு
வாய் நின்றான்"** (129.7)

என்றும் கூறியுள்ளது சிந்திக்கத்தக்கது.

உயிர்கள் பல என்பதனைச் சுட்டி அவை அறிவிக்க அறியும் இயல்புடையன என்ற கருத்தை முதலிரண்டு சூத்திரங்களின் வாயிலாக மெய்கண்டார் சுட்டியுள்ளார். இதனை,

**"உணர்த்தில் உணர்வேன் உணர்த்தாயேல்கனத்தும்
உணரும் வகை காணேன்"**

என குருஞானசம்பந்தர் காட்டுவர்.

உயிர் வினை செய்வதற்கு ஏற்றது. தான் செய்யும் இவ்வினைக் கேற்ப துறக்க, நரக அனுபவங்களைப் பெறும் இயல்புடையது. (இருபா இருபஃது, பா. 6)

நல்வினை, தீவினை ஆகிய இரண்டும், மனம் வாக்கு காயத்தால் ஏற்படுகின்றன. விருப்பு வெறுப்புக்களால் வினை ஏற்படுகின்றது. விருப்பு வெறுப்பின்றித் திருவருளைச் சிந்திப்பதே உயிர்க்குரிய உயரிய கடனாகும். (இருபா இருபஃது, பா.14)

வினைகளை உயிர்தானே அறிந்து அவற்றோடு கூடாது. வினை களும் உயிரைத்தானே சென்றடையா. இறைவன் இவ்விரண்டையும் இயக்குகின்றான். (இருபா இருபஃது, பா.15)

வினை செய்தற்குரிய உடல் முதலியன கால வெள்ளத்தில் ஓய்ந்து கெடுவன. கணந்தோறும் விளையும் வினைப்பயன்களை

உயிர் நுகர்தற்குள் உடல் மாய்ந்து போகின்றது. வினை செய்வன உயிர்களாதலால் வினைப்பயன் நுகர்தற் பொருட்டு மாறிப் பிறக்கும் நிலை ஏற்படுகின்றது. இதனைக் குமரகுருபரர்,

**"கன்மத்துக்கீடாய் கறங்கும் சகடமும் போல் சென்மித்துழல"**

என்பார்.

முன்னை வினைப்பயனை நுகருங்கால் வேறு வினைகளைச் செய்கின்றன. வினை இயல்பை மக்களுக்குணர்த்திய வேற்றுச் சமயத்தினர் அவ்வினைகள் வெல்வதற்கரியன என்ற கொள்கையைப் பரப்பி அச்சுறுத்தினர். சைவ சமுதாயத்தினர் வினைக்கு அஞ்ச வேண்டாம். இறைவன் திருவருளின் முன் வினைப்பகை அழியும் என்றனர். இக்கருத்தை,

**"அவ்வினைக்கு இவ்வினை ஆம் என்று சொல்லும் அஃது அறிவீர்**
**உய்வினை நாடாதிருப்பது முந்தமக்கு ஊனமன்றே**
**கைவினை செய்து எம்பிரான் கழல் போற்றுதும் நாம் அடியோம்**
**செய்வினை வந்தெமைத் தீண்டப்பெறா திருநீலகண்டம்"**

(116.1)

என்று திருஞானசம்பந்தர் தெளிவுபடுத்தியுள்ளார்.

**"......தம் பெருமை பேசும் அடியார் மெய்த்**
**திண்ணமறும் வல்வினைகள் தீர அருள் செய்தலுடையான்"**

என்ற தொடர்கள் சுட்டியுள்ளன. இறைவனை அடைவதற்குரிய அன்பு நெறியைத் திருஞானசம்பந்தர் சுட்டியுள்ள திறம் நினைக்கத்தக்கது.

இறைவன் உயிர்களுக்கு வினையை ஊட்டி பிறப்பு இறப்பைத் தருகின்றான் என்ற சித்தாந்தக் கொள்கைக்கு,

**"வாழியர் தோற்றமும் கேடும் வைப்பர் உயிர்கட்கெல்லாம்"**

(267.1)

**"பிறக்குமாறு காட்டினாய் பிணிபடும் உடம்பு விட்டு**
**இறக்குமாறு காட்டினாய்"** (234.5)

என்ற திருஞானசம்பந்தரின் தொடர்கள் முன்னோடியாக அமைந்துள்ளன.

வினைப்பயன்களில் சிந்தை வைத்து மயங்குவதை விடுத்து திருவருள் வழிபாட்டில் சித்தம் வைத்தால் சிவம் உள்நின்று அகக் கருவிகளை உயரிய நெறியில் செலுத்த உதவிடுவான் என்பதை,

**"எண்ணொன்றி நினைந்தவர் தம்பால்**
**உண்ணின்று மகிழ்தவன்"** (37.2)

என்று திருஞானசம்பந்தர் குறிப்பாகப் படைத்துள்ளார்.

''இறைவனை நோக்கிச் செய்யும் தவம் பலவகைப்படினும் சிவஞானபோத எட்டாம் சூத்திரம் தவம் நால்வகை மார்க்கத்தில் அமைந்துள்ளது என்று சுட்டியுள்ளது. இத்தவத்தைச் சிவபுண்ணியம் அல்லது பதிபுண்ணியம் என்று அழைப்பது சைவமரபு'' என்று முனைவர் குருநாதன் தனது முனைவர் பட்ட ஆய்வேட்டில் குறிப்பிட்டுள்ளார்.

**சரியை**

கோயிலை வலம் வந்து வழிபடல் சரியை நெறியாகும்.

''தாயுறு தன்மையாய தலைவன்றன் நாமம்
நிலையாக நின்று மருவும்
..........................................
திருநாரையூர் கை தொழவே'' (224.4)

''கைவினை செய்கெம்பிரான் கழல் போற்றுதும்''

''கரவினையிட்டும் குளம்பல தொட்டும் களிமனத்தால்
மலரடி போற்றுதும்''

என்ற திருஞானசம்பந்தரின் பாடல் தொடர்கள் சரியை நெறியை சுட்டுவனவாகும்.

**கிரியை**

உள்ளத்தூய்மையுடன் மலர் தூவி பூசனை புரிவது கிரியை மார்க்கமாகும்.

''ஈசனை மலர்புனைந்து ஏத்துவார் வினை
நாசனை அடிதொழ நன்மையாகுமே'' (278.4)

''அத்தன் ஆரூரைப்பத்தி மலர் தூவ முத்தியாகுமே''

''பூவினைக் கொய்து மலரடி போற்றுதும்''

''பூந்தியினால் மறைவழியே புள்பரப்பி நெய்சமிதை
கையில் கொண்டு வெந்தழலின் வேட்டுலகின் மிக
அளிப்போர்''

என்ற பாடல் அடிகள் கிரியை மார்க்கத்திற்குரிய சான்றாகும்.

**யோகம்**

ஐம்புலன்களை ஒடுக்கி மனக்கண்ணில் ஒன்றி நின்று இறையைக் காணும் நெறி யோகமாகின்றது.

''அகனமர்ந்து அன்பினராய் அறுபணி செற்று
ஐம்புலனும் அடக்கி...........'' (136.6)

"ஊனில் உயிர்ப்பை ஒடுக்கி ஒண் சுடர்
ஞான விளக்கினை யேற்றி நன்புலது
ஏனை வழி திறந்து ஏத்த வல்லார்க்கிட
ரான கெடுப்பன் அஞ்செழுத்தாமே" (290.3)

"புலன்கள் செற்று மோனிகளாய் முனிச்செல்வர்
தனித்திருந்து தவம்புரியும் முதுகுன்றமே"

என்ற தொடர்கள் யோக நெறிக்குரிய அகச்சான்றாகும்.

## ஞானம்

பரம்பொருளின் தனித்திறத்தை எடுத்துரைக்கும் ஞான நூல்களை ஓதியும் உணர்ந்தும் பிறர்க்குரைத்தும் சிவனோடு ஏகனாகி நிற்கும் மார்க்கம் 'ஞானம்' ஆகும்.

"வீடுஞானமும் வேண்டுதி நீரல் விரதங்களாற்
வாடி ஞானமென்னாவது மெந்தை வலஞ்சுழி
நாடி ஞானசம்பந்தன செந்தமிழ் கொண்டிசை
பாடு ஞானம் வல்லாரடி சேர்வது ஞானமே"

என்ற தொடர்கள் ஞானமார்க்கத்திற்குரிய அகச்சான்றாகும்.

சைவ சமயத்தின் மூலமந்திரச் சிறப்பு இப்பகுதியில் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

"இறைவன் குருலிங்க சங்கம வழிபாடுகளில் தயிரின் நெய்போல்
பிரகாசமாகவும், ஏனை இடங்களில் அப்பிரகாசமாயும் நிற்பவன்"

என்று முத்துராமன் சைவசித்தாந்தம் குறித்து விளக்கம் தருகின்றார்.

புலன் சேட்டைகளுக்குட்பட்ட ஆன்மாவைக் குருலிங்க சங்கம வழிபாட்டால் கட்டுப்படுத்த முடியும் என்பதை முன்னோர்கள் கண்டறிந்தனர்.

சிவஞான போதத்தின் பன்னிரண்டாம் சூத்திரத்தில்,

"அன்பரொடு மரீஇ மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரனெனத் தொழுமே"

என்ற தொடரால் மெய்கண்டார் சங்கம வழிபாட்டைச் சுட்டியுள்ளார்.

சங்கமம் என்ற சொல்லிற்கு இணைதல் என்பது பொருள். ஆன்மாவும், ஆண்டவனும் இணைவதற்கு அடியவர்கள் பாலமாக அமைந்துள்ளனர். இறைவனை அடைவதற்குரிய வழி அவன் அடியாரை வழிபடுதலாகும். இச்சங்கம வழிபாடு அடியவரை

வழிபடல், அடியாரோடு சென்று வழிபடல் என்னும் இரு நிலைகளைக் கொண்டது.

"தொண்டர் தொண்டரைத் தொழுதடிபணி மின்கள்
தூமநெறி எளிதாமே" (240-10)

என்ற தொடரால் திருஞானசம்பந்தர் சங்கம வழிபாட்டின் சிறப்பைச் சுட்டியுள்ளார்.

திருஞானசம்பந்தரின் பாடல்கள் என்னும் கடலில் மூழ்கினால் சைவசித்தாந்த நல்முத்துக்களை எடுத்துத் திருவருளையும் குரு வருளையும் பெற்று பேரின்ப நிலை பெறலாம்.

# 44. காதல் மணம் செய்வித்த சம்பந்தர்

தாயம்மாள் அறவாணன், கொடைக்கானல்.

திருஞானசம்பந்தரின் வரலாற்றைச் சேக்கிழார் தாம் எழுதிய திருத்தொண்டர் புராணத்துள் திருஞானசம்பந்த சுவாமிகள் புராணம் (இரண்டாம் காண்டம் 6-வம்பறா வரிவண்டுச் சருக்கம்) எனும் தலைப்பில் 28-ஆம் புராணமாகப் படைத்துள்ளார். பிறப்பு முதல் 16 வயதில் தம் மனைவியுடன் முத்தி எய்தும் வரை இவர்தம் வரலாறு 1256 விருத்தங்களாக விரிகிறது.

'வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத்துறை விளங்க' தம் வாழ்வை அர்ப்பணிக்கும் திருஞானசம்பந்தர் முத்துப் பல்லக்கில் திருத்தலங்களுக்குச் செல்லும் ஒரே சமயக் குரவர் ஆவார். திருநாவுக்கரசு நடந்தே தலப் பயணம் செய்தவர் என்பது கருதத் தக்கது. கவுணிய அந்தண குலத்தில் பிறந்த இவர் உபநயனம் செய்யப் பெற்றுத் தொண்டை நாடு (25 இடங்கள்), நடுநாடு (15 இடங்கள்), சோழநாடு காவிரி வடகரை (54 இடங்கள்) காவிரி தென்கரை (100 இடங்கள்) பாண்டிய நாடு (13 இடங்கள்) கொங்கு நாடு (4 இடங்கள்) ஈழநாடு (2 இடங்கள்) என 219 தலங்களைப் பாடியவர். இவற்றுள் ஈழநாட்டு ஊர்களான திருக்கோணமலை, திருக்கேதிச்சுரம் ஆகிய ஊர்களுக்கும் துளுவநாடு, வடநாட்டு ஊர்களுக்கும் நேரில் சென்றாரா? என்பது தெளிவாகவில்லை. ஆக 386 பதிகங்கள் இவரால் பாடப் பெற்றவை. இவர் பாடும்பொழுது அருகிருந்து யாழ் வாசித்தவர் திருநீலகண்ட யாழ்ப்பாணர். ஆக நால்வருள் பின்வரும் தனிச் சிறப்புகளை எய்தியவர் இவர்.

1. 16 ஆண்டுகளே வாழ்ந்தவர்.
2. உமையம்மையால் ஞானப்பால் ஊட்டப் பெற்றவர்.
3. குழந்தைப் பருவத்திலேயே 'தோடுடைய செவியன்' எனும் பாசுரம் படைத்தவர்.
4. தமக்கென யாழ்ப்பாணர் ஒருவரை அருகு வைத்துக் கொண்டவர்.

அவர்தம் சைவப் பயணத்தில் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சி இக்கட்டுரையின் பொருளாகின்றது. சிறுத்தொண்டரின் ஊரான

திருச்செங்காட்டங்குடி சென்று அருகில் இருந்த திருமருகல் எனும் நகருக்குச் சென்றிருந்தார். அங்குள்ள இறைவன் மேல் 'பெருகு தமிழ் தொடை சாத்தி' (திருஞானசம்பந்தர் புராணம்-472) தங்கி இருந்தார். அவ்வூரில் உள்ள கோயிலுக்குப் பக்கத்தில் மடம் ஒன்று இருந்தது. அம்மடத்தில் வணிகன் ஒருவனும் கன்னிப்பெண் ஒருத்தியும் தங்கி இருந்தனர். கன்னி வணிகனை மணம் முடிக்க இருந்தாள். இரவு துயில்மேற் கொண்டிருந்த வணிகனைப் பாம்பு கடித்து விட்டது. நஞ்சு 'கிடுகிடு' என்று தலை வரை ஏறிவிட்டது. உயிர் நீங்கியது. கன்னி துடித்துப் போனாள். இரவு முழுதும் அரற்றினாள். பொழுது விடிந்தது.

**'அன்னையையும் அத்தனையும் பிரிந்து நின்னை**
**அடைவாக உடன் போந்தேன் அரவால் வீடி**
**என்னை உயிர் விட்டகன்றாய் யானென் செய்கேன்?**
**இவ்விடுக்கண் தீர்க்கின்றார் யாரு மில்லை**
**மன்னியசீர் வணிகர்குல மணியே! யானும்**
**வாழேன்'' என்றென் றயவர்வாள்**

(திருத்தொண்டர் புராணம் திருஞானசம்பந்தர் - 475)

அவனுக்குப் பிறகு வாழ்வதில்லை என்று அரற்றிய அவள் கோயிலில் சென்று சிவனை வணங்கி, வெந்து பொடியான காமன் உயிர் ரதி வேண்ட புரிந்து அளித்த புண்ணியனே! என வேண்டி, காமனை ரதிக்கு மீட்டுக் கொடுத்தது போல, தனக்கு அவனை மீட்டுக் கொண்டு தர வேண்டும் என்று வேண்டினாள்.

**இந்தவிடக் கொடுவேகம் நீங்குமாறும்**
**யான் இடுக்கண் குழிநின்றும் ஏறுமாறும்**

(திருத்தொண்டர் புராணம் - திருஞானசம்பந்ர் - 477)

இவளது கதறல் அங்கு இறைவனைக் கும்பிட வந்த திருஞான சம்பந்தருக்குக் கேட்கிறது. அவளை நேரில் கண்டு, 'பயப்படேல் நீ பருவரலும் நும்பரிசும் பகர்வாய்' என்று வினவுகிறார். சம்பந்தர் திருமுன் அக்கன்னிப்பெண் தன் அவல வரலாற்றை எடுத்து உரைக் கிறாள். என்னுடைய ஊர் வைப்பூர். அவ்வூர் வளமான பூங்காக்களால் சூழல் பெற்றது. ஊர்த் தலைவரே என்னுடைய தந்தை. அவருடைய மருமகனே இங்குப் பாம்பு கடித்து இறந்து கிடக்கிறார். என் தந்தைக்கு ஏழு பெண்கள். மூத்தவளை இவருக்கு என் தந்தை மணம் செய்வது என்று சொல்லி இவனிடம் இருந்து நிறையப் பணம் பெற்றுக் கொண்டார். இவருக்கு மணம் செய்து தாராது அயலானுக்கு மணம் செய்து தந்தார். அதன் பின்னரும் ஒவ்வொருவராய் என்னைத் தவிர மற்றப் பெண்கள் அறுவரையும் அங்ஙனமே மணம் செய்து தந்து விட்டான். மனம் தளர்ந்து வருந்தும் இவனுக்காக அன்பு பூண்டு,

அவர்களை விட்டு நீங்கி இவனையே சார்பாகக் கொண்டு நான் வாழ்ந்தேன்.

**"வளம்பொழில்சூழ் வைப்பூர்க்கோன் தாமன் எந்தை**
**மருமகன் மற் றிவன்; அவற்கு மகளிர் நல்ல**
**இளம்பிடியார் ஒரெழுவர்; இவரில் மூத்தாள்**
**இவனுக்கென் றுரைசெய்தே ஏதிலானுக்**
**குளம் பெருகத் தனம்பெற்றும் கொடுத்த பின்னும்**
**ஒரொருவ ராகஎனை ஒழிய ஈந்தான்**
**தளர்ந்தழியும் இவனுக்காகத் தகவு செய்தங்கு**
**அவரைமறைத் திவன்தனையே சார்ந்து போந்தேன்"**

(திருத்தொண்டர் புராணம் - திருஞானசம்பந்தர் -480)

**மற்றிவனும் வாளரவு தீண்ட மாண்டான்;**
**மறிகடலிற் கலங்கவிழ்த்தார் போல நின்றேன்.**

திருஞானசம்பந்தர் - 481

இவ்வாறு கன்னிப்பெண் கலங்கி அழுது கெஞ்சி வேண்டுகின்ற துயர உரையைக் கேட்ட திருஞானசம்பந்தர் இறந்தவன் உயிர் திரும்ப வரவேண்டும் என்று பாடுகிறார்.

**"உடையானை "உடையானே தகுமோ இந்த**
**ஒள்ளிழையாள் உள்மெலிவு?" என்றெடுத்துப் பாட"**

(திருத்தொண்டர் புராணம் - திருஞானசம்பந்தர் - 482)

என்று பாடினார். சற்று நேரத்தில் பொங்கு நஞ்சு தீர்ந்து எழுந்து நின்றான் அம்மணவாளன். சூழ்ந்திருந்த மக்களெல்லாம் ஆர்த்தனர். தன் இரு கைகளை உச்சி மேல் குவித்து, திருஞானசம்பந்தர் திருவடியில் விழுந்து வணங்கினள் அந்தக் கன்னிப்பெண். நங்கையும் நம்பியும் திருமணம் புரிந்து வாழும் புது வாழ்வை அவர்களுக்கு வழங்கினார். (திருத்தொண்டர் புராணம் - 473 - 483)

இந்நிகழ்ச்சி நடந்த திருமருகல் காவிரிக்குத் தென்கரையில் உள்ளது. இங்குள்ள இறைவன் பெயர் மாணிக்கவண்ணன். இறைவியின் பெயர் வண்டுவார்குழலி. இவ்வூரில் இருந்தபடி திருச்செங்காட்டன் குடி சிவனையும், திருமருகல் சிவனையும், 'கணபதி ஈச்சரம் காமுறவே' எனப் (கடைசித் தொடரைக் கொண்டுள்ள தேவாரத் திருப்பதிகங்கள் 55, 56, 57, 58, 59, 60, 61, 62, 63) பாடுகிறார். இப்பதிகங்களில் வரும் கணபதி ஈச்சரம் எனும் தொடர் தேவாரத்தில் இடம்பெற்ற குறிப்பாகலாம்.

கணபதியைக் குறிக்கப் பெற்ற முதல் குறிப்பு என்றும் இதனைக் கொள்ளலாம்.

இவ்வரலாற்றால் அறியத் தகும் முதன்மையான செய்திகள்:

1. உறவினனைக் (தந்தையின் மருகன்) கண்டு காதல் கொள்வது அக்கால வழக்கமாக இருந்துள்ளது.
2. பெற்றோர்க்குத் தெரியாமல் உடன் போக்கு செல்லும் வழக்கமும் இருந்திருக்கிறது.
3. திருமணம் முடிக்காத இளம் பெண்ணைக் கன்னி என்று சேக்கிழார் சுட்டுகிறார்.
4. காதலன் திருமணத்துக்கு முன் இறந்த நிலையில் காதலி 'யானும் வாழேன்' எனக் கூறும் போக்கு இருந்துள்ளது.
5. ஒரே பெற்றோர்க்கு ஏழு பெண் மக்கள் இருந்துள்ளனர்.
6. காதலித்தவர்க்கு உதவுதலும் திருமணம் முடித்து வைத்தலும் திருஞானசம்பந்தர் காலத்தும் இருந்துள்ளன.
7. சொந்த உறவினனை நிராகரித்தலும் அவனுக்கு மகளை மணம் முடிக்காமல் வேறு ஆட்களுக்கு மணம் முடித்து வைத்தலும் இருந்திருக்கிறது.
8. ஆடவன் பெண்ணுக்கு வரதட்சணை கொடுத்து மணந்திருக்கிறான். சங்க இலக்கியத்துள் காணப்படும் 'முலைக் கூலி' திருஞான சம்பந்தர் காலத்தும் தொடர்ந்துள்ளது போலும். (''தனம் பெற்றுக் கொடுத்த பின்னும்'' - திருஞானசம்பந்தர் - 480)
9. மணமகாத கன்னி ஆகையால் திருமணம் செய்ய இருப்பவனை மெய் தொட்டுத் தீண்டும் உரிமை இல்லை என்பது தெரிகிறது. 'வாளரவு தீண்ட வுந்தான் தீண்ட கில்லாள்' (திருத்தொண்டர்புராணம் - ஞானசம்பந்தர் - 474)

   தீண்ட முடியாதவள் ஆகையால் அவன் பக்கத்தில் வீழ்ந்த மலர்க் கொம்பைப் போல் விழுந்து புலம்புகிறாள்.
10. நீளிரவு முதல் விடியற்காலம் வரை பிணத்தை வைத்துக்கொண்டு அப்பெண் பெரிதும் தளர்ந்து புலம்பிக் கொண்டிருந்தாள் என்பதிலிருந்து (ஞான. 474) அப்பெண்ணின் துன்பம் பெரிதாகத் தெரிகிறது.
11. தமக்கை மகனுக்கு ஓர் ஆண் தன் மகளைத் திருமணம் செய்து கொடுக்கும் மரபு அக்காலத்து இருந்துளது. ஆக உறவில் திருமணம் நடைபெற்றுள்ளது.
12. பணத்துக்காகத் தந்தை செய்த ஏமாற்றும் செயலுக்கு ஒரு பேதைப் பெண் தன்னை இழக்கிறாள் என்று தெரிகிறது.

13. தனக்கென வாழாமல் பிறருக்காக வாழ்ந்த பெண்தான். இந்த வைப்பூர் பெண். தந்தையின் ஏமாற்றுக்காக/தவற்றுக்காக அத்தை மகனோடு வீட்டை விட்டே வெளியேறுகிறாள். அதோடு பாம்பு கடித்து இறந்த அத்தை மகனுக்காக விடம் நீக்க வேண்டினாள்.

14. தான் விரும்பியவனை மணந்து கொள்ளும் கற்புநெறி இப்பகுதியில் காணப்படுகிறது.

15. காதலன் இறந்தாலும் தீண்டுதல் கூடாது என்ற செயல் மூலம் அப்பெண்ணின் கற்பு, மனத்திட்பம், கட்டுப்பாடு இவை காணப் படுகின்றன.

16. தந்தை வழிச் சமுதாய அமைப்பு இருந்தமைக்குத் தாமன் வரலாறு சான்று.

# 45. சம்பந்தரின் பக்திநெறி

செ. திருஞானசம்பந்தம், திருநெல்வேலி.

பக்திநெறி என்பது அன்புநெறி; இன்பநெறி; அன்புணர்வால் ஆண்டவனை எய்தலாம் என்பதை அனுபவத்தால் உணர்த்தும் உயர்நெறி; உண்மை நெறி. இந்த அன்புநெறியே சைவ, வைணவ அடியார்கள் பிறப்பினால் பல்வேறு சமுதாயத்தினராக இருந்தாலும் தொண்டர் குலமாக, அடியார் இனமாகக் கருதி மதிப்பளிக்கத் தூண்டியது!.

> **"பக்தி நெறியால் ஏற்பட்ட சமுதாய விளைவுகளுள் முதன்மை யானது சாதிப்பாகுபாடுகளின் தளர்ச்சி எனலாம் சாதிப் பாகுபாடுகள் தளர்ச்சியடைந்தமையால் சமுதாய ஒற்றுமைக்கு வழி பிறந்தது".**

சமுதாயக் கட்டுகளை வென்று சிறக்கும் தூய பக்திநெறியின் தன்மை யினைப் பல அருட்கவிஞர்களும் பாடினர். அவர்களுள் பக்திப்பயிர் தழைக்கச் சொல்லாலும் செயலாலும் துணைபுரிந்தவர் திருஞானசம்பந்தர். அவருடைய தேவாரப் பாடல்களில் காணப்படும் பக்திநெறியை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

உலக வாழ்விற்கு நெறிப்படுத்தும் கருத்துக் கருவூலமாகத் திகழ்வது ஆளுடையபிள்ளையின் பக்திப்பாடல்கள். அவர் வாழ்ந்த கி.பி. ஏழாம் நூற்றாண்டு பக்தி இயக்கக் காலமாகும். நாட்டில் செல்வாக்குப் பெற்றிருந்த் பௌத்த சைன சமயங்களை எதிர்த்து மக்களைத் திரட்டுவதற்குக் கலை நயத்தோடு கூடிய பக்திப்பாடல்கள் - தேவாரப் பாடல்கள் பயன்பட்டன. இசையோடு பாடல்களைப் பாடிக் கோயில் தோறும் இறைவனை வழிபட்டுத் திருநெறிய தமிழால் பக்திநெறியைப் பரப்பி வந்தார். இக்கருத்தை உறுதிப்படுத்துகிறது, 'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன்' என்னும் சுந்தரர் கூற்று.

இசையால் பக்திபெருகும். பக்திபெருக வாழ்க்கை தூயதாகும். இனிமை பயக்கும், பல்லுயிரையும் நேசிக்கும் பெரிய உள்ளத்தைத் தரும். உண்மையான பக்தி வாழ்க்கையில் சிக்கல் இல்லை. பக்தியுள்ள சமுதாயத்தில் அன்பு பெருகும். அறம் வளரும், அருள் பிறக்கும்,

சமநிலையோங்கும். இவ்வுண்மைகளை உணர்ந்தே இசைப்பாடல்களைப் பாடினார் பிள்ளையார். அவையே முதல் மூன்று திருமுறைகள்.

## பதிகத்தின் பொது அமைப்பு

புகலிவேந்தர் பாடிய பதிகங்கள் மொத்தம் பதினாறாயிரம் எனினும், திருமுறை கண்ட காலத்தில் கிடைத்தவை 384 பதிகங்களே. இதில் 4181 பாடல்கள் உள்ளன. இப்பதிகங்கள் சைவத் திருமுறை பன்னிரண்டுள், முதல் மூன்று திருமுறைகளாக அமையப் பெற்றுள்ளன. ஒவ்வொரு பதிகத்திலும் பதினொரு பாடல்கள் உள்ளன. அவற்றுள் பொது அமைப்பு ஒன்றைக் காண முடிகின்றது.

ஒவ்வொரு பதிகத்திலும் முதல் ஏழு திருப்பாடல்களில் அவ்வப் பகுதிகளுக்குரிய தலங்களின் இயற்கை அழகினையும், அங்கு எழுந்தருளியுள்ள இறைவனின் திருவருளையும் விளக்கமாகப் பாடியுள்ளார்.

எட்டாம் பாடலில் இராவணன் கைலை மலையைத் தூக்கி எடுக்கமுயன்று, அம்மலையின் கீழ் அகப்பட்டுத் துன்பப்பட்டதைப் பற்றியும், தன் பிழை பொறுக்குமாறு வேண்டி அருள் பெற்றுச் சிவ பக்தன் ஆனதைப் பற்றியும் பாடியுள்ளார். இப்பாடல் வழி, அறிவின் பயனை உயிர்க்குச் சேரவிடாமல் ஆணவம் தடுத்துப் பறிக்கும்; அதனால் அவ்வாணவமுடையவன் மிண்டு செய்வான்; அந்த மிண்டுத் தனத்தையே இறைவன் வெற்றி கொள்வான் எனும் கருத்துப் புலப்படுவதை உணரமுடிகின்றது.

> **"ஒவ்வொரு பதிகத்திலும் அமைந்த ஒன்பதாம் பாடல் பசுஞானத்தாலும், பாசஞானத்தாலும் பதியாகிய இறைவனை அறிய இயலாமை ஏற்படும் என்பதையும், திருவைந்தெழுத்தை ஓதுவதே இறைவனை அடையும் வழி என்பதையும் தத்துவப் பொருளாகக் கொண்டுள்ளது"**

என்னும் கூற்றிற்கேற்ப, ஒன்பதாம் பாடலில் பிரமனும் திருமாலும் தேடிக்காண முடியாத பெருமையுடையவன் சிவபெருமான் என்று கவுணியர்கோன் குறிப்பிடுகின்றார்.

பத்தாம் பாடலில் சைன, பௌத்தத் துறவிகளின் போலி வாழ்க்கையை எள்ளியும் கடிந்தும் கூறுவார் சம்பந்தர். இப்பத்துப் பாடல்களை வேறாக வைத்து, பதினோராம் பாடல் 'திருக்கடைக்காப்பு' என்று வழங்கப்படுகிறது. தம் பதிகங்களின் திருக்கடைக்காப்புப் பாடலில் சம்பந்தர் பதிகப்பயன் கூறுவது வழக்கம். இறைவன் திருவடிகளை இடைவிடாமல் வணங்கியவர் இப்பிறவியில் உலகியல் சிறப்புக்களை அடைந்து புகழ்பெறுவதோடு, மறுமையில் தங்கள்

வினைகள் ஒழிந்து வீடுபேறு அடைவர். ஆகவே இம்மைப்பயனும் மறுமைப்பயனும் இறைவனடிகளை வணங்குதலால் பெறலாம் என்று புகலிவேந்தர் கூறுகின்றார்.

## இறைவனின் தோற்றப்பொலிவு

தமிழ்விரகர் பாடல்கள் இறைவனைப் போற்றித் துதிக்கும் பக்திப் பாடல்கள். இப்பாடல்களில் இறைவனுடைய தோற்றப்பொலிவைப் பல்வேறு வகையில் கூறி விளக்குகின்றார். மதிசூடியிருத்தலும், விடை யேறுதலும். சுடலைப்பொடியைப் பூசுதலும் ஆகிய சிவபெருமானின் அடையாளங்களை,

**"தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண்மதிசூடிக்**
**காடுடைய சுடலைப்பொடி பூசி யென்னுள்ளங்கவர் கள்வன்"**

என்ற அடிகளிலும் மங்கை பாதியராக விளங்குதலைத் திருநள்ளாறு திருப்பதிகத்தில்,

**"பெண்ணுமோர் பாலுடையன்"**

என்றும் சம்பந்தர் பாடிப் பரவுகின்றார்.

## சிவபெருமான் சிறப்பு

எம்பெருமான் யாவுமாக இருக்கின்றான் என்பதே அவனது சிறப்பம்சமாகும். அதனை ஆளுடைய பிள்ளையார்,

**"பண்ணும் பதம் ஏழும் பல ஓசைத் தமிழ் அவையும்**
**உண்ணின் றதோர் சுவையும் உறுதாளத்தொலி பலவும்**
**மண்ணும் புனல் உயிரும் வரு காற்றும் சுடர் மூன்றும்**
**விண்ணும் முழு தானானிடம் விழிம் மிழ லையே"**

என்று பாடுகின்றார்.

உள்ளத்தில் மெய்யன்பில்லாதவரால் காணுதற்கு அரியவர் சிவபெருமான். மெய்யன்புடைய அடியார்களுக்கோ விடை ஏறுபவராயும், கண்டங்கறுத்தவராயும், ஈமக்காடுறை வாழ்க்கையராயும் காட்சி தருவார். எப்பொருளினும் மேம்பட்டு எப்பொருளும் தாமாகி நிற்கும் பெரியவர் அவர். அவரைப் பதிகரணம் உடையவர்கள் மட்டுமே காணுதல் கூடும்.

இச்செய்திகளைப் புகலிவேந்தன்,

**"அரிய காட்சிய ராய்த்தம தங்கைசேர்**
**எரியர் ஏறுகந் தேறுவர் கண்டமும்**
**கரியர் காடுறை வாழ்க்கையர் ஆயினும்**
**பெரியர் ஆரறி வாரவர் பெற்றியே"**

என்று பாடியுள்ளார்.

## இறைவனின் அருட்செயல்கள்

சிவபெருமான் கருணையே வடிவமாகக் கொண்டவர். தேவர்கள் பாற்கடலைக் கடைந்த போது, வாசுகி என்னும் பாம்பு வெளிப்படுத்திய நஞ்சினால் துன்பமுற்று வருந்திய காலத்தில், அந்த நஞ்சினைத் தான் உண்டு தேவர்களுக்கு அருள் செய்தவர் என்பதை,

**"காரின் மல்கு கடல் நஞ்சமதுண்ட கடவுள்",**

**"கடலின் நஞ்சமதுண்டு இமையோர் தொழுதேத்த நடமாடி",**

**"வார்தருமால் கடல் நஞ்சமுண்ட கறையுடையான்"**

என்ற தொடர்களால் கவுணியர்கோன் குறிப்பிடுகின்றார். சிவபெருமான் தம் நகைப்பினால் திரிபுரங்களை அழித்தார். இறைவரது இவ்வருட் செயலை ஆளுடைய பிள்ளையார்,

**"பெரிய மேருவரை யேசிலையா மலை உற்றாரெயின் மூன்றும்
எரிய வெய்தவொருவன்"**

என்ற அடியில் குறிப்பிடுகின்றார்.

கயிலைமலையைத் தூக்க முற்பட்ட இராவணனது வலியினை அழித்து அவனது இசையில் மனமிரங்கி நீண்ட வாழ்நாளும் சிறந்த போர்வாளும் அவனுக்கு வழங்கி அருள் செய்தார். இச்செய்தியைப் பதிகங்களின் எட்டாம் பாடலில் சம்பந்தர்,

**"தென்னிலங் கையரை யன்வரை பற்றியெடுத்தான்
முடிதிண்டோள்
தன்னிலங்குவிர லானெரிவித்திசை கேட்டன்றருள் செய்த
மின்னிலங்குசடை யான்"**

என்றும்,

**"பண்டை யிராவணன் பாடி யுய்ந்தன"**

என்றும் குறிப்பிட்டுள்ளார்.

## அடியார்க்கு அருளும் திறம்

இறைவனுடைய பெருமைகளைக் கூறுகின்ற பொழுது சம்பந்தர் இறைவன் அடியார்களுக்கு அருளும் திறத்தினைக் குறிப்பாகக் காட்டுகின்றார். நாள்தோறும் பணிந்து ஏத்துகின்றவர்களுக்கு அருள் செய்கின்றவன் என்று முதல் பதிகத்தின் முதல் பாட்டில் குறிப்பிடுகின்றார்.

அதுபோல இரண்டாவது பதிகத்தில்,

**"சிவஞானத்தில் சிறந்தோர் தன் பாதங்களை வணங்கிப் போற்ற அவர்கள் உள்ளத்தில் தங்கி அங்கிருந்து நீங்காத ஒருவனாக விளங்குகின்றான்"**

என்று எடுத்தியம்புகின்றார். இவ்வாறு அடியார்கள் உள்ளத்தில் உறையும் இறைவர் அடியவர்களுக்கு வரும் துன்பங்களைப் போக்குவார். அவர்களுடைய வினைகளை நீக்குவார். இம்மையில் பல நன்மை களையும் மறுமையில் வீடுபேற்றினையும் அருள் செய்வார். இத் தனிப் பெருங்கருணையை காழி நாடுடைய பிள்ளை,

**''சேரும் அடியார் மேல் பைய நின்றவினை பாற்றுவர்''**

**''மந்தி ஒன்றி நினைவார் வினையாயின் தீரப்பொருளாய**
**அந்தி அன்னதொரு பேரொளியான்''**

என்ற தொடர்களால் விளக்குகின்றார். எனவே எம்பெருமானது திருவடியில் வணங்கி, வினைகளும் துன்பங்களும் நீங்கும் பொருட்டுப் பக்குவ ஆன்மாக்கள் இவ்வருளும் வண்ணத்தையும், மாண்பையும் கேட்கலாம் வேறுகதியில்லை என்பதைப் பிள்ளையார்,'

**''ஆட்பா லவர்க்கருளும் வண்ணமும் ஆதி மாண்பும்**
**கேட்பான் புகில்அள வில்லை கிளக்க வேண்டா**
**கோட்பா லனவும் வினையுங் குறுகாமை யெந்தை**
**தாட்பால் வணங்கித் தலைநின் றிவை கேட்க தக்கார்''**

என்று பாடியுள்ளார். இப்பாடல் வழி, இறைவனது கடந்த தன்மையையும், அவன் உயிர்களுக்கு அருளும் வகையையும் எடுத்துரைக்கின்றார்.

### சண்டேசரது வரலாற்றால் மெய்ந்நெறி உணர்த்துதல்

விசாரசருமராகிய சண்டேசர், மணமிக்க மலர்களால் அர்ச்சித்து நறும் பாலினால் இறைவனைத் திருமுழுக்காட்டும் போது, அவர் தந்தையாகிய எச்சதத்தன் கடவுட்கமைந்த பாற்குடத்தைக் காலால் இடறிச் சிந்தினான். இச்சிவாபராதத்திற்காக அவனது தாளைத் துணித்தார் விசாரசருமர். சிவபெருமான் அவர்க்குக் காட்சி தந்தார். 'எடுத்த தாதை விழ எறிந்தாய்; இனி உனக்கு அடுத்த தாதை நாம்;

இனி நாம் பூண்பனவும், உடுப்பனவும், உண்பனவும் உனக்கு ஆகும்' என்று அருளிச் சண்டீச பதம் தந்து தம் திருவடியில் சேர்ந்தார். இவ்வரலாற்றினை பரசமயகோளரி கூறுவதன் மூலமாக,

**'அரனடிக்கன்பர் செய்யும் பாவமும் அறமதாகும்'**

என்ற மெய்ந்நெறியை உணர்த்துகிறார்.

### வழிபடும் நெறி

திருமாலும் நான்முகனும் சென்றுணராத இறைவரது சேவடியை, அன்பர்கள் இன்னிசை பாடியும் தன்மை மறந்து ஆடியும் துதிப்பர்; மலரும் புனலும் கொண்டு துதிப்பர்; ஐம்புல ஆசைகளை அடக்கி

ஒன்றுபட்ட உள்ளத்துடன் இறைவருடைய திருவடிகளை வணங்குவர்; மிக்க அன்புடன் திருவடிகளை எண்ணி வழிபாடு செய்வர் என்பதை,

**"கொய்து பத்தர்மல ரும்புனலுங்கொடு தூவித்துதி செய்து**
**மெய்தவத்தின் முயல் வாருயர் வானக மெய்தும் புகலூரே"**

என்றும்,

**"பத்தரோடு பல ரும்பொலிய்ம்மல ரங்கைப்புனல் தூவி**
**ஒத்த சொல்லியுல கத்தவர் தாந்தொழு தேத்த"**

என்றும் கவுணியர்கோன் கூறுகின்றார்.

**"நல்லனகருதி நல்லன சொல்லி நல்ல வண்ணம் நன்றுடையானாக இருக்கின்ற இறைவனை வாழ்த்துதலே இறைவனை வாழ்த்தும் மரபு. இங்ஙனம் வாழ்த்துதல் பக்திக்கு வித்தாகும்".**

என்னும் கூற்றிற்கேற்பக் காழிநாடுடைய பிள்ளை, இறைவனை மனம், வாக்கு காயத்தால் வழிபடவேண்டும் என்று வலியுறுத்தியுள்ளார். பக்தி வாழ்க்கையின் சிறந்த இயல்பினைப் புகலிவேந்தர்,

**"ஒல்லையாறி யுள்ளமொன்றிக் கள்ள மொழிந் துவெய்ய**
**சொல்லையாறித் தூய்மைசெய்து காமவினை யகற்றி**
**நல்லவாறே யுன்றனாம நாவினவின் றேத்த**
**வல்லவாறே வந்து நல்காய் வலிவலமே யவனே"**

என்று பாடியுள்ளார். இவ்வாறு சிவன்சேவடிக்கே அன்பு செய்து உய்யுமாறு தமிழ்விரகர் ஆணையிடுகிறார்.

**"நாளாய போகாமே நஞ்சணியும் கண்டனுக்கே**
**ஆளாய அன்பு செய்வோம் மடநெஞ்சே!"**

என்பது அவராணை. இவ்விதம் ஆணையிடும் அவர், தில்லைக் கூத்தனைக் கண்டு நெஞ்சம் நெக்குருகி விழிநீர் பொழிய எல்லையிலாப் பேரன்புடன் வணங்கி,

**'சிற்றம்பல மேய இறைவன் கழலேத்தும் இன்பம் இன்பமே'**

என்றும்,

**'செல்வன் கழலேத்துஞ் செல்வஞ் செல்வமே'**

என்றும் பாடியருளினார். இவ்வடிகளில் எது இன்பம்? எது சிறந்த செல்வம்? என்பனவற்றை உலகோர்க்கு உணர்த்தியருளியதை உய்த்துணர்தல் வேண்டும்.

தூயநீறு அணிந்து சிவனருளை ஏத்தியும், உருகியும், பரவியும் பக்தி செலுத்தும் அடியவர்க்கு அல்லால் மற்றவர்க்கு அவனருள் கிடைக்காதென்று உறுதிபடக் கூறுகின்றார். இவ்வாறு தாம் பக்தி

செலுத்திய காரணத்தால் சிவபிரான் தமக்கு முத்துச்சிவிகை, முத்துக்குடை முதலியவை அருளினான் என்பதைக் குறிப்பாக உணர்த்தவே திருநெல்வாயிலரத்துறையில் பாடிய திருப்பதிகம் முதல் பாட்டில்,

**'எந்தை ஈசன் எம்பெருமான் ஏறு அமர்கடவுள் என்றேத்திச்**
**சிந்தை செய்பவர்க் கல்லால் சென்று கை கூடுவது அன்றால்'**

என்றும், ஏனைய பாடல்களில்,

**'உருகிநைபவர்க் கல்லால் ஒன்றுங் கைகூடுவது அன்றால்'**

**'பரவி நைபவர்க் கல்லால் பரிந்து கைகூடுவது அன்றால்'**

**'சீல மாந்தர்கட்டு அல்லால் சென்று கைகூடுவது அன்றால்'**

என்றும் அருளிச் செய்துள்ளார்.

இவ்வாறு எம்பெருமானை வழிபடும் நெறியை ஞானம் பெற்ற ஆளுடைய பிள்ளை எடுத்துரைக்கின்றார்.

**அற்புதங்கள்**

திருஞானசம்பந்தப் பெருமான் வாழ்வில் நடந்த அற்புதங்கள் யாவும் சைவ சமயத்தின் பெருமையையும், பக்தியின் மேன்மையையும், கடவுள் அருள்திறத்தையும் உலகோர்க்கு உணர்த்துவதாக அமைந்துள்ளன. அவர் 'தோடுடைய செவியன்' என்று தொடங்கிப் பாடியது முதல் திருநல்லூர்ப்பெருமணத்தில் இறைவன் சோதியுடன் கலக்கும் வரை இருபது அற்புதங்கள் நிகழ்ந்துள்ளன. அவை ஞானப்பாலுண்டமை, பொன்தாளம் பெற்றமை, முத்துச்சிவிகையும், குடையும், சின்னமும் பெற்றமை, முயலகன் என்னும் நோயை நீக்கியமை, குளிர்நோய் அகற்றியமை, முத்துப்பந்தர் பெற்றமை, உலவாக்கிழி பெற்றமை, திருப்பதிகம் யாழில் அடங்காததைக் காட்டியமை, அராவிடம் தீரெனத் தீர்தல், படிக்காசு பெறுதல், திருக்கதவம் அடைத்தல், வெப்பு நோய் தீர்த்தல், கனலில் ஏடு இடப்பச்சென்று இருத்தல், புனலில் ஏடு எதிர்செல்லல், ஆற்றில் ஓடம் செல்லல், புத்தனார் தலை தத்தெனத்தத்தல், ஆண்பனை பெண்பனையாதல், பாலையை நெய்தலாக்கியது, எலும்பு பொற்பாவையாதல், சோதியில் கலத்தல் என்பனவாகும். இவ்வற்புத நிகழ்ச்சிகளின் மூலம் புகலிகாவலராகிய திருஞானசம்பந்தர், இப்புவனத்தில் தங்கி வாழ்பவர்களுக்கெல்லாம் உண்மையானதும், உறுதியானதும் ஆகிய தனது பத்திமைச் சிறப்பையும், இறைவன் அருள் தன்மையையும் வெளிப்படுத்தியுள்ளார். இறைவனால் ஆட்கொள்ளப் பெற்றுத் தெய்வத் தன்மையால் சிறந்து விளங்கும் தெய்வச் சான்றோர் தன் முனைப்பின்றி இறைவன் அருள் துணையின் வழி நின்று அருஞ் செயல்கள் ஆற்றமுடியும் என்பதில் வியப்பொன்றுமில்லை.

## இயற்கையே வடிவான இறைவன்

சங்கப்புலவர்கள் இயற்கையைக் கண்டனர். திருஞானசம்பந்தர் இயற்கையில் இறைவனைக் கண்டார். திருத்தலங்கள் தோறும் சென்று இறைவனைப் பாடிப் பரவினார். செல்லும் வழியில் கண்ட இயற்கைப் பொருள்களான கடல், ஆறு, பொழில், தாவரங்கள், பறவைகள், காட்டு விலங்குகள், மலர்கள் ஆகியவற்றையும் பாடினார். பொருள் அணிகளுள் ஒன்றான எண்ணணியை இறைவனுடன் பொருத்திக் காட்டும் மாண்பு போற்றுதற்குரியது. இதனை,

**"ஈறாய்முத லொன்றாயிரு பெண்ணாண் குணமூன்றாய்**
**மாறாமறை நான் காய்வரு பூதம்மவையைந்தாய்**
**ஆறார்சுவை யேழோசையொ டெட்டுத் திசை தானாய்**
**வேறாயுட னானானிடம் வீழிம் மிழலையே"**

காலைக்கதிரோனம் இறைவனே; உலகிற்கு வாழ்வளிக்கும் மழையும் மன்னனும் இறைவனே; மாசற்ற பொன்னும் இறைவனே; என்றும், கழி, கடல், காடு, நாடு, வழி, மலை, மண், நீர்ச்சுழி முதலியவற்றில் எல்லாம் இறைவன் உள்ளான் என்றும், உயிர்வகைகள் எண்பத்து நான்கு நாளாயிரம் முழுவதையுமே இருப்பிடமாகக் கொண்டவன் இறைவன் என்றும் குறிப்பிடுகின்றார் புகலிவேந்தர்.

இவ்வாறு இயற்கையழகில் இறைவனைப் பாடிய சொல்லோவியங் களைக் கவுணியர்கோன் தேவாரத்தில் காணமுடிகின்றது.

இறைவன் அருட்செயல்களும் திருக்கோலமும் ஆளுடைய பிள்ளையார் உள்ளத்தில் பக்தியுணர்வை மலரச் செய்தன. அதன் பயனாய் இறைவன் மீது காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கப் பாடினார். இவரது பாடல்கள் உள்ளத்தை ஒரு வழிப்படுத்தி உண்மையையும் பக்தியையும் ஊட்டி நிற்கின்றன. சாதிவேறுபாடு, தீண்டாமை முதலிய மூடநம்பிக்கைகளுக்குச் சம்பந்தர் வாழ்விலும் இடம் இல்லை. பாடல்களிலும் இடம் இல்லை. இது பக்திநெறிப் பண்பாட்டின் தனிச் சிறப்பாகும். பக்தி குழைவும், கவியின்பமும் உடைய சம்பந்தர் பாடல்கள் ஆழ்ந்த பொருள் பொதிந்தவை: தமிழின் மாண்பு உரைப்பவை, அதனால் சம்பந்தர் தேவாரம்,

**'பொன்மாலை மார்பின் புனல் காழிச் சம்பந்தன்**
**தன் மாலை ஞானத் தமிழ் எனப் போற்றப்படுகிறது'**

அவ்வாறு போற்றப்படும் திருநெறிய தமிழ்ப்பாக்களை ஒரு நெறிய மனம் வைத்து நாளும் ஓதி, அவர் போதித்த செந்நெறியினைப் பின்பற்றி உய்வோமாக!

# 46. சம்பந்தரின் சில புரட்சிகள்

ச. திருநாவுக்கரசு, முசிறி.

திருஞானசம்பந்தர் சமயக்குரவர் நால்வருள் முதலாமவர். இவர் சீர்காழிப் பதியிலே சிவபாதவிருதயருக்கும் பகவதியாருக்கும் மகனாகத் தோன்றினார். இவர் புறநெறிகள் தலைவிரித்தாடியபோது ஞானத்தின் திருவுருவாகத் தோன்றி அயல் வழக்கை வென்று தமிழ் வழக்கை நிலைபெறச் செய்த சான்றோராவார். தூய திருநீற்று நெறி எண்டிசையுந் தனி நடப்ப, வண்டமிழ் செய்தவநிரம்ப, திசையனைத்தின் பெருமையெலாந் தென்றிசையே வென்றேற, அசைவில் செழுந்தமிழ் வழக்கே இயல்வழக்கின் துறைவெல்ல, பவம்பெருக்கும் புரைநெறிகள் பாழ்பட, தாவில் சராசரங்களெலாஞ் சிவம் பெருக்கும் பிள்ளையார் திருவவதாரஞ்செய்தார் எனத் தெய்வச் சேக்கிழார் பரவுகிறார். திருஞானசம்பந்தர் அருளிய திருக்கடைக்காப்புகள் முதல் மூன்று திருமுறைகளாகவும், திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய தேவாரங்கள் அடுத்த மூன்று திருமுறைகளாகவுகம், சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய திருப்பாட்டுகள் அடுத்த ஒரு திருமுறையாகவும் வகுக்கப்பட்டுள்ளன. இவை ஏழு திருமுறைகளும் பொதுவாகத் 'தேவாரம்' என்ற பெயராலும், 'அடங்கன்முறை' என்ற பெயராலும் வழங்கப்படுகின்றன. முதல் திருமுறை 'தோடுடைய செவியன்' என்ற தகர வித்தையோடு கூடிய ஓங்காரத்தில் தொடங்க, பன்னிரண்டாந் திருமுறை 'வான்புகழ் நின்றதெங்கும் நிலவி உலகெலாம்' என மகரமெய்யில் முடிகிறது. எனவே திருமுறைகள் பன்னிரண்டும் ஓங்காரத்தின் உட்பொருளாக அமைந்துள்ளன என்பர். திருஞானசம்பந்தர் புரட்சியாளராகவும் சீர்திருத்தச் சிந்தனையாளராகவும் திகழ்ந்தமையை அவரது வரலாறும் திருக்கடைக்காப்புகளும் காட்டுகின்றன.

திருஞானசம்பந்தர் கி.பி.ஏழாம் நூற்றாண்டில் விளங்கியவர் என்பது இன்று அனைவராலும் ஒப்பமுடிந்த ஒன்றாகும். கி.பி. இரண்டாம் நூற்றாண்டுக்குப்பின் ஆறாம் நூற்றாண்டு வரை களப்பிரர்கள் ஆண்ட காலத்தைத் தமிழகத்தின் இருண்டகாலம் என்பர். இவ்விருண்ட காலத்தில் தமிழ் தனக்குரிய தகுதியைத் தமிழ் மக்களிடம் பெறவில்லை. பெண்மை போற்றப்படவில்லை. மாறாகப் பெண்ணினம் இழிவாகக் கருதப்பட்டது. இசை, குறிப்பாகத் தமிழிசை புறக்கணிக்கப்பட்டது.

இந்நிலையில் தமிழினத்தைத் தட்டியெழுப்பி, பொலிவிழந்து காணப்பட்ட தமிழ், பெண்மை, தமிழிசை இவற்றை நிலைநிறுத்தவும் போற்றி வளர்க்கவும் தோன்றியவர் சிறிய பெருந்தகையாராம் நம் திருஞானசம்பந்தர். இதை அவரது முதற்பாடலின் 'தோடுடைய செவியன்' என்ற சொற்களே தெளிவுறுத்துவதை உணரலாம்.

**'நான்மறை நாவின் நற்றமிழ் ஞானசம்பந்தன்'** (436)

எனத் தம்மைக் குறிப்பிடும் திருஞானசம்பந்தர் தமிழ்மறையை ஓங்காரத்தில் தொடங்கும் போது தகர மெய்யை முதலில் வைத்தார். இதனால், தான் தமிழுக்கு முதல் இடம் தரப்போவதை அறிவிக்கிறார். 'தோடுடைய செவியின்' என இறைவன் உமையொரு பாகனாக அருட்காட்சி வழங்கும் சிவபெருமானது தொன்மைக் கோலத்தைக் கண்டு காட்டுகிறார். தோடு மகளிர் காதில் அணியும் அணிகலன். இதனைக் கூறுவதன் மூலம், தான் பெண்மையைப் போற்றவிருக்கும் பாங்கை வெளிப்படுத்துகிறார். செவி இசை கேட்கப் பயன்படும் பொறியாகும். எனவே 'செவியன்' என்பதன் வழி இசை இறைவனோடு ஒன்றியது என்பதையும் தெளிவுபடுத்த விரும்புகிறார். இறைவனே ஏழிசையாய் இசைப்பயனாய் விளங்குகின்றான்.

களப்பிரர் காலத்தில் தமிழ் புறக்கணிக்கப்பட்டது. நம் பிள்ளையார் தமிழின் முதன்மையை நிலைநாட்ட விரும்பியதோடு தானும் தமிழ் வழியில் வந்தவர் என்பதையும் வலியுறுத்த விரும்புகிறார். தாம் பாடிய பதிகங்கள் பெரும்பாலானவற்றில் தம்மைத் தமிழோடு சேர்த்து, 'ஞானமிக்க தண்தமிழால் ஞானசம்பந்தன் சொன்ன கோலமிக்க மாலை' (558), 'தமிழ் விரகன்' (2267), 'நல்ல செந்தமிழ் வல்லவன் ஞானசம்பந்தன்' (2366), 'முத்தமிழ் நான்மறை ஞானசம்பந்தன் ஒண்தமிழ் மாலை' '(2822), 'தமிழ்நாதன் ஞானசம்பந்தன்' (3221), என்றெல்லாம் மொழிகின்ற பாங்கை உணரலாம். தமிழைக் குறிப்பிடும் போதெல்லாம் 'திருநெறிய தமிழ்', 'செந்தமிழ்', 'ஞானமிக்க தண்தமிழ்', 'இன்தமிழ்', 'நற்றமிழ்', 'ஞானத்தமிழ்', 'பலந்தரு தமிழ்க் கிளவி', 'ஞால மல்குந்தமிழ்', 'அருந்தமிழ்', 'முத்தமிழ்' என்றெல்லாம் தகுந்த அடைகொடுத்தே குறிப்பிடுகிறார். சுந்தரமூர்த்தி சுவாமிகளும் 'நற்றமிழ்வல்ல ஞானசம்பந்தன்' (7787), 'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன்' (7866), 'நல்லிசை ஞானசம்பந்தனும் நாவினுக்கரசரும் பாடும் நற்றமிழ் மாலை சொல்லியவே சொல்லி ஏத்துகப்பான்' (7905) என்று திருஞானசம்பந்தரைக் குறிப்பிடும் போதெல்லாம் தமிழோடு சேர்த்தே குறிப்பிடுவதைக் காணலாம்.

தமிழ் தெய்வத் தன்மை வாய்ந்தது. தமிழ் மந்திரங்கள் ஆற்றல் மிக்கவை. 'திருநெறிய தமிழ் வல்லவர் தொல்வினை தீர்தல்

எளிதாமே' (11), 'தமிழ்மாலை பற்றி என்றும் இசைபாடிய மாந்தர் பரமன் அடிசேர்ந்து குற்றமின்றிக் குறைபாடொழியாப் புகழ் ஓங்கிப் பொலிவாரே' (22) என்பன ஆளுடையப் பிள்ளையாரின் அருள் வாக்குகள். 'இரண்டு அல்லது மூன்றாம் அடியில் காணப்படும் சொற்களை சந்தி, சீர் என்று பிரிக்காமல் அப்படியே படித்தால் புதுமையான ஒருவகை ஓசை தோன்றக் காணலாம். இப்படிப் படிக்கும் முறையை விளம்பமாகப் படித்தாலும், இடைநிலையாகப் படித்தாலும், துரிதமாகப் படித்தாலும் இச்சொற்கள் சேர்ந்து இசைக்கும் பொழுது ஒருவகையான ஓசை தோன்றுவதைக் காணமுடியும். இதனையே மந்திரங்கள் என்று கூறினர்'' எனத் திருஞானசம்பந்தரின் பதிகங்கள் பற்றிப் பேராசிரியர் அ.ச. ஞானசம்பந்தன் குறிப்பிடுகிறார். திருமருகலில் சிவபெருமானைச் சிந்தித்து, 'சடையாய் எனுமால்' எனத் தொடங்கும் திருப்பதிகத்தைப் பிள்ளையார் அருளிச்செய்ய பாம்பு தீண்டி மாண்ட வணிகன் உயிர் பெற்றெழுந்தான். திருஞானசம்பந்தர் சிவபெருமான் திருவடிகளைச் சிந்தித்து, 'துணிவளர் திங்கள்' என்றெடுத்து 'மணிவளர் கண்டரோமங்கையை வாட மயல் செய்வதோ இவர் மாண்பே' என்று பாடியருள கொல்லி மழவன் மகளின் 'முயலகன்' என்னும் பிணி நீங்கியது. 'அவ்வினைக் கிவ்வினை' என்னும் திருப்பதிகம் பாடியருளித் திருநணா திருப்பதியில் நளிர்சுரம் போக்கினார். இவை தமிழ்ப் பதிகங்களின் மந்திர ஆற்றலுக்குச் சில சான்றுகளாகும்.

பெண்மையைப் போற்றவந்த ஆளுடைய பிள்ளையார் இறைவனை உமையொரு பாகனாவே நமக்குக் காட்டுகிறார். 'பெண் மகிழ்ந்த பிரமாபுர மேவிய பெம்மானிவன்றே' (4), ஒரு பாகம் மாதிலங்கு திருமேனியினான்' (13), 'உண்ணாமுலை யுமையாளொடு முடனாகிய வொருவன்' (97), 'மலைமகள் பாக மதுடையாண்' (152), 'இறையார் வளையாளையொர் பாகத் தடக்கி' (331), 'மலைபுரிந்த மன்னவன்றன் மகளையோர்பால் மகிழ்ந்தாய்' (562), 'பெண்ணாணென நின்ற பெம்மான்' (905), 'பெண்ணினேரொரு பங்குடைப் பெருமானை' (1993), 'தையல் பாகமாயினான்' (3370) போன்றவை சம்பந்தர் காட்டும் பெண்ணினல்லாளொரு பெருந்தகை இருந்த காட்சிகள் சில. மகளிரும் ஆடவர்களோடு சென்று இறைவனை வழிபட்டப் பாங்கைப் பல பதிகங்களில் பாடிக் களிக்கின்றார். 'கோலவிழாவின் அரங்கதேறிக் கொடியிடை மாதர்கள் மைந்தரோடும் பாலெனவே மொழிந்தேத்தும் ஆலூர்' (84), 'நறுமலர் புனலொடு தூபம் சாந்தமும் ஏந்திய கையினராகிக் கன்னியர் நாள்தொறும் வேடமே பரவும் கழுமலம்' (858), 'மாதரொடும் ஆடவர்கள் வந்தடியிறைஞ்சி நிறை மாமலர்கள் தூய்' (3647) என்பன அவற்றுள் சில. 'மங்கையர்க்கரசி வளவர்கோன் பாவை வரிவளைக் கைம்மடமானி, பங்கயச் செல்வி பாண்டிமாதேவி'

எனத் தென்தமிழ்நாட்டில் சிவநெறி தழைத்தோங்கத் துணையாயிருந்த மங்கையர்க்கரசியாரைத் தமது திருப்பதிகத்தில் வைத்துப்பாடியிருப்பது பிள்ளையார் பெண்ணினத்திற்குக் கொடுத்திருக்கும் பெருமையைக் காட்டுவதாகும்.

இசையோடு தமிழ்ப் பதிகங்கள் பாடி இறைவனைத் திருஞான சம்பந்தர் பரவிய திறத்தை நமது சுந்தரமூர்த்தி சுவாமிகள் தமது திருப்பாட்டுகளில் குறித்துச் செல்கிறார். நட்டபாடை, தக்கராகம், குறிஞ்சி, இந்தளம், காந்தாரம், செவ்வழி, சாதாரி முதலான பல்வேறு தமிழ் பண்களில் தாளத்தோடு ஏழிசையாய் இலங்கும் இறைவன் புகழைப் பாடிப் பரவுகிறார். திருக்கோலக்காவில் 'மடையில் வாளைபாய' என்ற திருப்பாடலைப் பாடி தமது திருக்கரங்களால் தாளமிட்டார். அம்பலவாணரது அளவற்ற கருணையினால் திருவைந்தெழுத்து பொறித்த பொற்றாளம் அவருடைய திருக்கரத்தில் வந்தது. திருவருளின் திறத்தை நினைந்து போற்றி அத்திருத்தாளத்தை முழக்கி ஏழிசையுந் தழைத்து ஓங்க இன்னிசைப் பதிகத்தை முடித்துத் திருக்கடைக்காப்பு சாத்தியருளினார்.

**"........ ஞானசம் பந்தன்வாய் நவிற்றிய தமிழ்மாலை**
**ஆதரித்திசை கற்றுவல் லார்சொலக் கேட்டுகந் தவர்தம்மை**
**வாதி யாவினை மறுமைக்கு மிம்மைக்கும் வருத்தம்வந்**
**தடையாவே"** (2626)

**"இசை கூடும் வகையால், ஏழையடி யாரவர்கள்**
**யாவைசொன சொல்மகிழு மீசன்"** (3559)

என்பன திருஞானசம்பந்தரின் இசையைப் போற்றும் திருவாக்குகளில் சில. திருநீலகண்ட யாழ்ப்பாணரை அவரது துணைவியார் மதங்க சூளாமணியாரொடு கூடவே அழைத்துச் சென்று தமது பதிகங்களை யாழில் இசைக்கச் செய்தார் என்பதை அவரது வரலாறு காட்டுகிறது.

"தமிழை ஏற்காமலும் இறைவனுக்குப் பூசனை புரிவதற்குத் தமிழ் தகுதியற்றது என்றும், வேள்வி முதலியன செய்பவர்கள் தமிழைப் போற்றிக் கற்க வேண்டியதில்லை என்றும் கூறும் கூட்டம் ஒன்று அரசியல் வலுவுடன் இங்கு (தமிழ்நாட்டில்) இருந்திருக்க வேண்டும். அவர்கள் வாயை அடைக்கவே பிள்ளையார் ஓயாமல் தமிழைத் தம்முடன் தொடர்புபடுத்திக் கூறியிருத்தல் வேண்டும்" என்று குறிப்பிடுகின்றார் பேராசிரியர் அ.ச.ஞானசம்பந்தன். 'அர்ச்சனை பாட்டேயாகும் ஆதலால் மண்மேல் நம்மை சொற்றமிழ் பாடுகென்றார் தூமறை பாடும் வாயார்' என்பது தெய்வச் சேக்கிழார் வாக்கு. அர்ச்சகர்களின்றி மாதவர்களும் ஆடவர்களும் இறைவனை நீராட்டி

மலர்தூவி வழிபட்டமையைப் பிள்ளையார் பலபடப் பாடுகிறார். இது தமிழ்வழி வழிபாட்டை அர்ச்சகர்களின்றி அடியார்கள் செய்தனர் என்பதைக் கண்டு பிள்ளையார் நமக்குக் காட்டும் புரட்சியன்றோ?

'தடங்கொண்ட தொர்தாமரைப் பொன்முடி தன்மேல்
குடங்கொண்டடி யார்குளிர் நீர்சுமந் தாட்ட' (339)

'நறைகொண்ட மலர்தூவி விரையளிப்ப நாடோறும்
முறைகொண்டு நின்றடியார் முட்டாமே பணிசெய்ய' (656)

'போதொரு, நீர்சுமந் தேத்தி முன்னின்று
அடிகையி னாற்றொழ வல்லதொண்டர் அருவினை யைத்துரந்
தாட்செய் வாரே' (50)

என்பன ஆளுடைப் பிள்ளையாரின் திருவாக்குகள்.

"செந்தமிழர் தெய்வமறை நாவர்செழு நற்கலைதெ ரிந்தவரோ
டந்தமில்கு ணத்தவர்க ளர்ச்சனைகள் செய்யஅமர் கின்றஅரனார்
கொந்தலர்பொ ழிற்பழன வேலிகுளிர் தண்புனல்வ ளம்பெருகவே
வெந்திறல்வி ளங்கிவளர் வேதியர்வி ரும்பும்பதி வீழிநகரே"
(3660)

இப்பாடலால் சம்பந்தர் காலத்தில் குறிப்பிட்ட ஓர் இனத்தார்தான் இறைவன் திருமேனியைத் தொட்டு வழிபடவேண்டும் என்ற கட்டுப் பாடில்லை என்பதை அறியலாம். செந்தமிழர், தெய்வமறை நாவர், செழுங்கலை தெரிந்தவர்கள், அந்தமில் குணத்தவர்கள் என்ற நான்கு தொகுப்பினுள் அனைத்து மக்களையும் அடக்கிவிடலாம். இவர்கள் அனைவரும் அர்ச்சனைகள் செய்கிறார்கள் என்றால், தாமே நேரில் சென்று சிவாச்சாரியார் துணையின்றி அர்ச்சனை செய்கிறார்கள் என்றுதானே பொருள். மூவர் முதலிகளும் சிறப்பாகப் பிள்ளையாரும் அர்ச்சனை பற்றிப் பலவிடங்களில் பாடிச் செல்கிறார்கள். அர்ச்சனை என்பது ஆகமம் கூறாத ஒன்று என்பதை அறிதல் வேண்டும்.

சிவனடியார்களுக்குள் சாதிவேறுபாடுகள் இருந்ததில்லை. அந்தணரான திருஞானசம்பந்தரும் சாதிவேறுபாடு காட்டாதவர் என்பதை அவரது வரலாறு காட்டுகிறது. இசையில் மிக வல்லுனரும் சிவபெருமானது திருவடி மறவாத திருவுடையவருமாகிய அரிசன அடியாராகிய திருநீலகண்ட யாழ்ப்பாணர், தமது துணைவியார் மதங்க சூளாமணியாருடன் பிள்ளையாருடைய திருவடியை வணங்கும் பொருட்டுச் சீர்காழிக்கு வந்தார். அப்பொழுது 'பெரும்பாணர் வரவறிந்து பிள்ளையார் எதிர்கொள்ள' என்று தெய்வச் சேக்கிழார் பாடுகிறார். இதனால் பிள்ளையார் பாணரை வரவேற்க எதிர்கொண்டு சென்றார் என்பதை அறியலாம். அடுத்து,

**'கோயிலினில் புறமுன்றில் கொடுபுக்குக் கும்பிடுவித்து
ஏயும் இசையாழ் உங்கள் இறைவருக்கிங்கு இயற்றும்'**
(2032)

என்று பிள்ளையார் பாணரிடம் கூறுகிறார். போகுமிடமெல்லாம் கூடவே பாணரையும் அவரது மனைவியார் மதங்க சூளாமணியாரையும் அழைத்துச் சென்று தமது பாடல்களை யாழில் இசைக்கச் செய்தமையைக் காணலாம். மேலும் திருநீலகண்ட யாழ்ப்பாணரை அழைக்க நேர்ந்த நான்கு இடங்களில் அந்தண அடியாராகிய பிள்ளையார் யாழ்ப்பாணரை 'ஐயரே' என அழைக்கிறாரெனப் பாடுகிறார் தெய்வச் சேக்கிழார். திருநீலநக்கர் இல்லத்திற்குப் பிள்ளையார் செல்கிறார். இதில் ஒரு வேடிக்கை என்னவென்றால் உடன்செல்லும் அடியார்கள் அனைவரும் ஆண்களாக இருக்க யாழ்ப்பாணர் மட்டும் துணைவியாருடன் செல்கிறார். திருஞானசம்பந்தர், நின்ற திருநீலநக்கரிடம், 'நீலகண்டப் பெரும்பாணர்க்கு இன்று தங்க ஓர் இடங்கொடுத்தருளுவீர்' என்றார். திருமறையோராகிய திருநீலநக்கரும் நன்றென் இன்புற்று நடுமனையில் முத்தீ வளர்க்கும் வேதியின் பாங்கர்ச் சென்று அவர்களுக்கு இடங் கொடுத்தார். இது திருஞானசம்பந்தர் செய்த புரட்சியா? தெய்வச் சேக்கிழார் காட்டும் புரட்சியா?

மக்கள் தொண்டே மகேசன் தொண்டாகும் எனக் கருதி வாழ்ந்த பெருமக்கள் ஆளுடைய பிள்ளையாரும் ஆளுடைய அரசுகளுமாகும். இருவரும் திருவீழிமிழலை சென்றார்கள். அங்கு கடுமையான பஞ்சம் தலைவிரித்தாடியது. மக்கள் துயர்துடைக்கும் பணியில் இருவரும் முழுமனதாக ஈடுபட்டனர். பஞ்சத்தால் மக்கள் படும் துயரம் கண்டு மனம் வருந்தி அன்றிரவு துயின்றார்கள். இறைவன் அவர்கள் கனவில் தோன்றி 'நித்தம் ஓரோர் காசு நீடும் இலகுமணிப் பீடத்துக் குணக்கும் மேற்கும் யாம் அளித்தோம் உமக்கு' எனக்கூறி அவ்வாறே காசும் அளித்தான். இரண்டு பெருமக்களும் இருவேறு பகுதிகளில் தனித்தனியே மடம் அமைத்துக் கொண்டு இறைவன் தந்த பொற்காசை மாற்றி உணவுப் பொருள்கள் வாங்கி பஞ்சத்தால் வாடும் மக்கட்கு உணவிட்டார்கள். இருவரும்,

**'நாதர் விரும்பு அடியார்கள் நாளும் நாளும் உண்பதற்கு வருக என்று
தீதில் பறை நிகழ்வித்து'**

அழைத்தார்களாம். 'நாதர் விரும்பும் அடியார்கள்' என்ற தொடர் இங்கு நாதனால் விரும்பப்பட்ட அடியார்கள் என்ற பொருள் தந்து அனைவருக்கும் எந்த வேறுபாடுமின்றி உணவு தந்தார்கள் என்பதை நுட்பமாக உணர வைக்கிறது. சம்பந்தருக்குக் கிடைக்கும் பொற்காசு மாற்றுக் குறைவதால் உரைத்துப் பார்த்துப் பொருள் தருகின்றனர்.

எனவே சற்றுக் காலம் தாழ்க்கிறது. அவர் இறைவனிடம், 'வாசி தீரவே காசு நல்குவீர், மாசின் மிழலையீர் ஏசலில்லையே' (992) என்ற திருப்பதிகம் பாடி வாசியில்லாக் காசு பெற்றுப் பசிப்பிணி போக்கினார். இதனால் பிள்ளையார் இறைப்பணியோடு சமுதாயப் பணியும் செய்தார் என்பதை அறியலாம்.

சகுனம் பார்க்கும் வழக்கம் நம் ஆளுடைய பிள்ளையாரிடம் இருந்ததில்லை. மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் ஒற்றர்கள் வாயிலாகத் தெரிவித்ததைப் பிள்ளையார் அப்பரிடம் சொல்லி பாண்டிநாடு செல்ல உறுதிகொண்டார். 'அஞ்சுவது யாதொன்று மில்லை; அஞ்சவருவது மில்லை' என்ற அப்ப்ரடிகளே பிள்ளையாரிடம் கொண்ட தலையாய தாயன்பு காரணமாக, 'பிள்ளையாரே! சமணர்கள் பொல்லாத வர்கள். அவர்கள் வஞ்சனைகளை எல்லையின்றிச் செய்பவர்கள். மேலும் நாளும் கோளும் நன்றாயில்லை. ஆதலால் இப்பொழுது பாண்டி நாட்டிற்குப் போதல் தகாது' எனத் தடுத்தார். அப்பொழுது ஆளுடைய பிள்ளையார்,

"வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன் மிகநல்ல
வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிமே லணிந்தெ னுளமே புகுந்த வதனால்
ஞாயிறு திங்கள்செவ்வாய் புதன்வியாழன் வெள்ளி
சனிபாம் பிரண்டு முடனே
ஆசறு நல்லநல்ல அவைநல்ல நல்ல அடியா ரவர்க்கு மிகவே"
(2388)

என்ற திருப்பதிகம் பாடி நாளும் கோளும் அடியார்களுக்கு நல்லனவே செய்யும் என மொழிகிறார். இந்நிகழ்ச்சி நல்லன செய்யப் புறப்படும்போது சகுனம் பார்த்தல் சரியன்று எனத் திருஞானசம்பந்தர் கருதியமையைப் புலப்படுத்துவதாக அமைந்துள்ளது.

திருஞானசம்பந்தர் இறைவனைப் பாடுவதோடு இயற்கையையும் பாடி இயற்கையோடியைந்த வாழ்வு வாழ வழிகாட்டுகிறார். இயற்கையில் இறைவனைக் கண்ட பெருந்தகை அவர். இறுதிக் காலத்தில் புலன் களெல்லாம் பொறி மயங்கி, தங்கள் நெறிகளிலே மயங்கி, அறிவும் அழிந்து, ஐயுந்தொடர்ந்து, விழியும் செருகி அல்லலுறும் வேளையில் திருவையாறு என்னும் திருத்தலத்து அமர்ந்தருளும் இறைவன் 'அஞ்சேல்' என்று அருள் செய்வான் என்று சொல்ல வருகின்றபொழுது சம்பந்தர்,

'புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
அறிவழிந்திட் டைம்மேலுந்தி

அலமந்த போதாக அஞ்சேலென்று
அருள்செய்வா னமருங்கோயில்
வலம்வந்த மடவார்கள் நடமாட
முழவதிர மழையென் றஞ்சிச்
சிலமந்தி யலமந்து மரமேறி
முகில்பார்க்குந் திருவையாறே' (1394)

எனப் பாடிப் பரவுகிறார். இப்பாடலில் இளமகளிர் திருக்கோயிலை வலம் வருகிறார்கள். அப்பொழுது அவர்கள் நடனமாடிக் கொண்டே வருகிறார்கள். முழவு அதிர்கிறது. அதனைக் கேட்ட சில மந்திகள் மழை வரப் போகிறது என்று அஞ்சிக் கலவரமுற்று மரத்தின் மீதேறி மேகத்தைப் பார்க்கிறதாம். இயற்கைக் காட்சியைக் காட்டி, சில மந்திகள் தாம் எச்சரிக்கையாக மரமேறி முகில் பார்க்கின்றன என்று சொல்வதன் வழி நம்மில் சிலர்தான் காலன் வருமுன்னே எச்சரிக்கையாக 'அன்றறிவா மென்னாது அறம்' செய்து இறைவனை வழிபடுகிறோம் என்பதை உள்ளுறையாகச் சுட்டிக் காட்டும் அழகைக் காணலாம்.

தேவர்களும் அசுரர்களும் கூடிப் பாற்கடலைக் கடைந்த பொழுது வெளிப்பட்ட விடத்தையுண்ட கண்டத்தையுடைய சிவபெருமான் நிலைத்து வீற்றிருந்தருளும் கோயில் திருவீழிமிழலையில் உள்ளது. இதைச் சொல்ல வரும் சம்பந்தர் ஓர் அரிய காட்சியைக் காட்டுகிறார். திருவீழிமிழலையில் செறிந்த இதழ்களையுடைய தாமரைத் தவிசில் இள அன்னம் வீற்றிருக்கிறது. அதற்குத் திகழ்ந்தோங்கிய தாமரை இலை குடையாக நிழல் தருகிறது. வயல்களில் விளைந்த செந்நெல்லின் வெறிகதிர் சாமரம் வீசுகிறது. இள அன்னம் அரசு வீற்றிருக்கும் காட்சியை,

'பொறியரவ மதுசுற்றிப் பொரப்பேமத்து
ஆகப்புத் தேளிர் கூடி
மறிகடலைக் கடைந்திட்ட விடமுண்ட
கண்டத்தோன் மன்னுங் கோயில்
செறியிதழ்த்தா மரைத்தவிசில் திகழ்ந்தோங்கு
மிலைக்குடைக்கீழ்ச் செய்யார் செந்நெல்
வெறிகதிர்ச்சா மரையிரட்ட இளவன்னம்
வீற்றிருக்கும் மிழலையாமே' (1417)

எனக் காட்டுகிறார் இயற்கையோடியைந்த வாழ்வை வலியுறுத்தும் திருஞானசம்பந்தர்.

தமிழின் செம்மையையும் உயர்வையும் நிலைநாட்டல், பெண்மையைத் தெய்வமெனப் போற்றல், தமிழிசையை வளர்த்தல்,

சிவாச்சாரியார் துணையின்றி அடியார்கள் தாமே சென்று அர்ச்சனை செய்த முறை, சிவனடியார்களுக்குள் சாதிவேறுபாடுகள் காட்டாமை, மக்கள்தொண்டே மகேசன் தொண்டு என மக்கள் தொண்டாற்றியமை, அடியார்கள் நல்லன செய்யும்பொழுது நாளும் கோளும் நல்லன வாகவே அமையும் என்றமை, இயற்கையில் இறைவனைக் கண்டு இயற்கையோடியைந்த வாழ்வு வாழ வழிகாட்டுதல் ஆகியவற்றில் திருஞானசம்பந்தர் காட்டிய புரட்சிகளைக் காணலாம். நாமும் தெய்வச் சேக்கிழார் கூறுவதுபோல் வேதநெறி தழைத்தோங்க, மிகு சைவத்துறை விளங்க, பூத பரம்பரை பொலியப் புனிதவாய் மலர்ந் தழுத சீதவள வயற்புகலித் திருஞானசம்பந்தர் பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு செய்வோமாக!

# 47. சம்பந்தர் தேவாரத்தில் திருச்சிராப்பள்ளி

க. திலகவதி, தஞ்சாவூர்.

நிலையான செல்வத்தை மக்கள் எளிதாக அடைதற்கு வழிகாட்டு கின்ற அருள் நூல்களாகப் பன்னிரு திருமுறைகள் விளங்குகின்றன. இத்திருமுறைகளை அருளிச் செய்தவர்கள் திருஞானசம்பந்தர் முதல் சேக்கிழார் பெருமான் உள்ளிட்ட இருபத்தேழு அருளாளர்கள் ஆவர். இவற்றுள் முதல் மூன்று (தேவாரம் 1,2,3) திருமுறைகளும் திருஞானசம்பந்த பெருமானால் அருளப்பெற்றவையாகும். சம்பந்தர், குழந்தை நிலையிலேயே (சற்புத்திரமார்க்கம்) பதிகம் பாடி, இறைவனால் ஆட்கொள்ளப் பெற்றவர் என்ற சிறப்பினையுடையவர். 'நல்லிசை ஞானசம்பந்தனும் நாவினுக்கு அரையனும் பாடிய நற்றமிழ் மாலை'' எனச் சுந்தரர் (7:67:5) இவரைச் சிறப்பிப்பர். நம்பியாண்டார் நம்பி, திருத்தொண்டர் திருவந்தாதியில் (33),

**''வைய மகிழயாம் வாழ அமணர் வலிதொலைய**
**ஐயன் பிரமபுரத்தரற் கம்மென் குதலைச் செவ்வாய்**
**பைய மிழற்றும் பருவத்துப் பாடப் பருப்பதத்தின்**
**தையல் அருள்பெற்றனன் என்பர் ஞானசம் பந்தனையே''**

எனப் போற்றி உரைப்பர்.

சம்பந்தர் முதல் திருமுறை, 98-ஆம் பதிகத்தில் சிராப்பள்ளி இறைவனைப் போற்றிப் பாடியுள்ளார். அத்தலத்தின் பெருமையையும், இறைவனின் அருட்திறங்களையும் இக்கட்டுரை ஆராய்கின்றது.

### சிராப்பள்ளி - பெயர்க் காரணம் (தலம்)

சிராப்பள்ளி கி.மு. இரண்டாம் நூற்றாண்டுக்கு முன்பிருந்தே விளங்கி வருகின்றது. சோழர் தலைநகரங்களில் ஒன்றாகிய உறையூரைத் தன்னகத்தே கொண்டுள்ளது. திரிசிராப்பள்ளி என்பதற்குத திரிசிரன் என்னும் அரக்கன் பூசித்துப் பேறு பெற்றதனால், இப்பெயர் பெற்றது என்று புராணங்கூறும் இம்மலைக்கே மூன்று சிகரங்கள் உள்ளதால் திரிசிராப்பள்ளி எனப் பெயர் பெற்றது என்ற செவிவழிச செய்தியும் நிலவுகின்றது. சமயப் பெரியோர்கள் 'சிராப்பள்ளிக் குன்றுடையானை', 'சிராப்பள்ளிச் செல்வன்', 'சிரகிரி' என்று இவ்வூரைக குறிப் பிட்டுள்ளனர். 'திரு' என்பது அடைமொழியாகும். 'சிராப்பள்ளி'

என்பதன் பெயர்க் காரணத்தைப் பற்றி, தி.வி. சதாசிவப் பண்டாரத்தார், 'சிராப்பள்ளிக் கோயில் கட்டியவன் கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் அப்பரடிகளை (நாவுக்கரசர்) வருத்திச் சைவனான முதல் மகேந்திரவர்மனே. அவன் இத்தலத்து, எட்டுச் சுலோங்கள் அடங்கிய கல்வெட்டு ஒன்று அமைத்திருக்கிறான். அதில் தான் சைவனானதையும், திருவதிகையில் சமண் பள்ளிகளை இடித்துக் குணபரேச்சுரம் கட்டி யதையும் குறிப்பிடுகிறான். குணபரன் என்பது மகேந்திரவர்மனையே குறிக்கும் பட்டப்பெயர், இதனைச் சிராப்பள்ளியிலும், செங்கற்பட்டு வல்லத்திலும் உள்ள குகைக்கோயிற் கல்வெட்டுக்கள் வலியுறுத்து கின்றன. சிராப்பள்ளியாகிய இவ்விடத்தும் சமணப்பள்ளி ஒன்று பெரியதாக இருந்தது. அதனை இடித்தே இந்தக் கோயிலைச் சைவனான மகேந்திரவர்மன் கட்டினான்' என்று குறிப்பிடுவர்.

உச்சிப் பிள்ளையார் கோயிலின் பின்புறத்தில் இன்றும் சமண முனிவர்களுடைய கற்படுக்கைகள் காணப்படுகின்றன. அவற்றில் அந்தந்தப் படுக்கையிலிருந்த சமண முனிவரின் பெயர்கள் குறிக்கப் பெற்றுள்ளன. அவர்களில் ஒருவர் 'சிரா' என்னும் பெயருடையவர் என்று ஒரு கற்படுக்கை அறிவிக்கிறது. ஆதலால் பள்ளிக் கோயிலா னாலும் பெயர் போகாமல் சிராப்பள்ளி என்றே வழங்குகிறது.

## கோயிற் பெயர்

ஊர்ப்பெயர் சிற்றம்பர். கோயிற் பெயர் சிராப்பள்ளி. பிற்காலத்தில் சிராப்பள்ளி என்பது ஊர்ப் பெயராகி, அடைமொழி சேர்த்து திருச்சிராப்பள்ளி எனவும், திருச்சி எனவும் வழங்கப்படுவதாயிற்று. முதலாம் இராசராசன் ஆட்சியில், 16-ஆம் ஆண்டில் வெட்டப் பெற்ற விக்கிரமசிங்க மூவேந்த வேளாண் விளத்தூர் நாட்டில் நிலம் வாங்கி, அதனை உறையூர்க் கூற்றத்துச் சிறறம்பரிலுள்ள சிராப்பள்ளிக் கோயிலுக்கு அளித்தான் என்ற செய்தி கூறப்படுகிறது. வரகுண பாண்டியன் 11-ஆம் ஆண்டுக் கல்வெட்டும் இச்செய்தியைக் குறிக்கிறது. இவ்வூர் சிற்றம்பர், சிற்றம்பர் நகர், சிற்றம்பர் பதி எனவும் வழங்கப் பெறுகின்றது என்று தண்டபாணி தேசிகர் தலக்குறிப்புரையில் அவ்வூரின் பெயர்க் காரணத்தை விளக்கியுள்ளார்.

## மூர்த்தி

காவிரியின் தென்கரையில் மலைக்காட்சியுடன் இத்தலம் காட்சி அளிக்கின்றது. இறைவன் - திருமலைக்கொழுந்தர், தாயுமானவர்; செவ்வந்திநாதர்; இறைவி - மட்டுவார் குழலம்மை; வடமொழிவாணர், மாதுருபூதேசுவரர், சுகந்தகுந்தளாம்பிகை எனக் கூறுவர். கல்வெட்டுக் களில் 'இறைவன் திருமலைப் பெருமான் அடிகள்' என்ற பெயரால்

குறிக்கப்பெறுகிறார். இத்தலத்தில் உச்சிப்பிள்ளையார், மாணிக்க விநாயகர் கோயில்களும், மௌனமடம் முருகன் கோயிலும் அமைந்துள்ளது சிறப்புடையன.

## தீர்த்தம்

காவிரி, சிவகங்கை, நன்றுடையான், தீயதில்லான், பிரமதீர்த்தம் முதலிய தீர்த்தங்கள் இத்திருக்கோயிலுக்குரியன. அவற்றுள் நன்றுடையான், தீயதில்லான் என்ற தீர்த்தங்கள் ஞானசம்பந்தர் பாடலிலேயே (1:98:1) இடம்பெற்றுள்ளன. இவையன்றி மலைக்குக் கீழே தெப்பக்குளம் ஒன்றும் உண்டு. இது 16-ஆம் நூற்றாண்டில் அரசாண்ட விசுவநாத நாயக்கர் வெட்டுவித்தது ஆகும். பங்குனி உத்திரப் பெருவிழாவன்று இறைவன் இறைவியை அலங்கரித்து, தெப்ப உற்சவம் நடத்துகின்றனர்.

ஆதிசேடனுக்கும் வாயுதேவனுக்கும் நடந்த சொற்போட்டியில் பிரிந்த சிகரங்களில் ஒன்று திருக்காளத்தியாகவும், மற்றொன்று திரிகோண மலையாகவும், மற்றொன்று திரிசிரா மலையாகவும் மாறிற்று என்று புராணம் கூறும்.

காவிரியில் வெள்ளம் பெருக்கெடுத்ததால் கருவுற்ற பெண்ணுக்கு (இரத்தினாவதி) அவளது தாய் மகப்பேறு பார்க்க முடியாமல் போக, அன்பிற்கு இரங்கி இறைவனே தாயாக வந்து மகப்பேறு பார்த்ததால் (தாயும் ஆனவர்) தாயுமானவர் என்னும் பெயர் இக்கோயிலுக்கு வழங்குவதாயிற்று.

மலைமேலுள்ள கோயிலில் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. வடமொழியில் அமைந்த எட்டுச் சுலோகங்கள் மகேந்திரவர்மனின் மத மாற்றத்தையும், அதனால் அவன் செய்த சிவப்பணிகளையும் தெரிவிக்கின்றன. அதில் ஒரு சுலோகம், 'கல்தச்சரால் இந்த அரசனுடைய புகழ் விரிந்து நீடித்திருக்க வேண்டும்' என்று தெரிவிக்கின்றது. இத்தலத்தைப் பற்றிய கல்வெட்டுகளும் செப்புப் பட்டயங்களும் மிகுதியாக உள்ளன. அவற்றுள் காலத்தால் முற்பட்டது கி.மு. 2-ஆம் நூற்றாண்டில் எழுந்த பிராமி எழுத்தால் எழுதப்பட்ட கல்வெட்டாகும் என்பர் ஆராய்ச்சியாளர்.

## சம்பந்தர் பதிகத்தில் சிராப்பள்ளியின் சிறப்பு

சிராப்பள்ளி பதிகத்தில் ஒன்று முதல் ஏழு வரை அமைந்த பாடல்கள் சிராப்பள்ளியின் இயற்கை வனப்பினையும், இறைவனது அருமை பெருமையினையும் அடியார்களுக்கு அருள்செய்யும் தன்மையினையும் இறைவனை வழிபாடு செய்து மகிழும் அடியார்களது திருத்தொண்டின்

திறத்தையும் விரித்துரைக்கும் முறையில் அமைந்துள்ளன. எட்டாம் பாடலில் இராவணன் ஆணவத்தால் கயிலை மலையை எடுத்து அல்லலுற இறைவன் அருள் செய்த திறத்தையும், ஒன்பதாம் பாடலில் திருமாலும் நான்முகனும் இறைவனது அடிமுடி தேடக் காணாது, இறைவனது திருவருளால் உய்ந்த செய்தியையும், பத்தாம் பாடலில் புறச் சமயத்தார்களாகிய சமணர், புத்தர் மேற்கொண்ட நெறி குற்றமுடையன என்பதையும், பதினோராம் பாடலில் இப்பதிகப் பாடல்களைப் பயிலும் உலகோர் அடையும் நற்பயன்களையும் (திருக்கடைக்காப்பாகவும்) கூறிச் சென்றுள்ளார். இம்மூன்றாலும் (8,9,10-ஆம் பாடல்கள்) இறைவழிபாட்டிற்குரிய இன்றியமையாச் செயல் மூன்றை ஞானசம்பந்தர் உலகோர்க்குக் கூறிச் சென்றுள்ளார் எனக் கூறுதல் பொருந்தும். அவை தாம் செய்த பிழை நினைத்து உருகுதல், தம்முடைய சிற்றறிவினால் பசு, பாச ஞானங்களால் காண்பதற்கரிய கடவுள் என்று உணர்தல், இறைவன் அருளிய நெறியன்றிப் புறசமயத்தார் நெறிகள் புன்னெறி காட்டுவன என்று உணர்தல் ஆகிய அரும் பொருள்களாகும்.

## இயற்கையும் இறையும்

இயற்கையில் இறைவனைக் கண்டு வழிபடுவது ஒரு நெறி. முதன்முதல் மனிதன் ஐம்பூதங்களை வழிபடத் தொடங்கினான். இயற்கை வழிபாடே முதலில் தோன்றிய வழிபாடாக ஆய்வாளர் கூறுவர். இயற்கை, இறைவன் வீற்றிருக்கும் இடமாக விளங்குவது. இயற்கை உடலெனின் இறைவன் உயிர். இயற்கை நலமெல்லாம் இறைவனின் படைப்பு. இயற்கையினிடத்து இதயத்தைச் செலுத்துவோன் இறைவனிடத்து நெஞ்சைப் பறி கொடுப்பவன். அதனைத் தெளிவாக உணர்ந்தவர்கள், மெய்ஞ்ஞானியர். திருமுறைக்கு முதல்வராகத் திகழும் சம்பந்தர், ஏனைய மூவரினும் இயற்கையில் தோய்ந்து, அவற்றின் எழில் நலங்களையும் உயிரினங்களின் அன்புக் காட்சியினையும் விரித்துரைத்துள்ளார். சம்பந்தர் பாடல்கள் (பெரும்பான்மையாக) இரண்டடிகள் இறைவன் பெருமையையும் இரண்டடிகள் இயற்கை எழிலையும் எடுத்துரைப்பனவாய்த் திகழ்கின்றன. அப்பாடல்கள் உள்ளம் பொருந்தக் கற்போர்க்கும், இசைநலம் பொருந்தப் பாடுவோர்க்கும் தெவிட்டாத தெள்ளமுதமாக அமைந்துள்ளன.

'நன்றுடையான், தீயதில்லான் என்ற தீர்த்தங்களையும், இடப ஏற்றினையும், உமையை ஒரு பாகத்திலே உடையவனும், நல்வினைப் போகம் காரணமாக (நல்வினை, தீவினை) ஆன்மாக்களுக்கு வருவதுபோல வந்தடையாத இயற்கையேயான திருஉடையவன் இறைவன். அவன் சிராப்பள்ளி குன்றில் எழுந்தருளியுள்ளான்.

அவனைப் பாட என் உள்ளம் குளிரும்' எனப் போற்றுகின்றார். இப்பாடற்கண் இறைவனை நினையும் உள்ளம் அமைதியடைந்து குளிரும்; மனநிறைவு உண்டாகும்; மனம் நிறைவடைந்தால் துன்பம் இல்லை என்பதை அடியார்களுக்கு உணர்த்துகின்றார். இதனை,

**"நன்றுடையானைத் தீயதிலானை............**

**............ ............ .......... ...............**

**சென்றடையாத திருவுடையானைச் சிராப்பள்ளிக்**
**குன்றுடையானைக் கூறவென்னுள்ளங் குளிரும்மே"**

(1:98:1)

என்னும் பாடலால் அறியலாம். சிராப்பள்ளியின் சிறப்பையும், இயற்கை அழகையும், அங்கு வாழும் உயிரினங்களின் விளையாட்டையும் அவை மனமகிழ்ச்சியுடன் இருப்பதையும் சம்பந்தர் நயம்பட வருணித்துள்ளார்.

**"கைம்மகவேந்திக் கடுவனொடுஊடிக் கழைபாய்வான்**
**செம்முகமந்தி கருவறையேறும் சிராப்பள்ளி"** (1:98:2)

**"மந்தம்முழவம் மழலைததும்ப வரைநீழல்**
**செந்தண்புனமுஞ் சுனையுஞ் சூழ்ந்த சிராப்பள்ளி"** (1:98:3)

**"துறைமல்கு சாரற் சுனைமல்கு நீலத்து இடைவைகிச்**
**சிறைமல்கு வண்டும் தும்பியும் பாடும் சிராப்பள்ளி"** (1:98:4)

**"வெய்ய தண்சாரால் விரிநிறவேங்கைத் தண்போது**
**செய்ய பொன்சேரும் சிராப்பள்ளி"** (1:98:6)

**"தேனயம் பாடும் சிராப்பள்ளி"** (1:98:11)

**"வேயுயர் சாரல் கருவிரல் ஊகம் விளையாடும்**
**சேயுயர் கோயில் சிராப்பள்ளி"** (1:98:7)

என்று போற்றியுள்ளார்.

### இறைவனது சிறப்பு

யானைத்தோல் உடையவன்; நாகத்தை உடையவன்; சென்னியில் பிறையை (சந்திரன்) உடையவன்; கண்டத்தில் விடத்தை உடையவன்; கையில் அனலேந்தியவன்; உமையை ஒரு பாகத்திலே கொண்டவன்; கபாலம் ஏந்தி பிச்சை எடுப்பவன்; முப்புரம் எரித்தவன் என்று இறைவனது சிறப்புக்களைப் பலவாறாக எடுத்தோதுகின்றார். இத்தகைய இறைவனை நினைந்து வழிபடும் அடியவர்களுக்கு அல்லல் (துன்பம்) எப்போதும் இல்லை. ஆதலால் சிராப்பள்ளி இறைவனைச் சென்று சேர்வீராக என்பதனைச்,

"சந்தம் மலர்கள் சடைமேலுடையார் விடையூரும்
எந்தம் மடிகள் அடியார்க்கு அல்லல் இல்லையே" (1:98:3)

"சேணார் கோயில் சிராப்பள்ளி சென்று சேர்மினே" (1:98:10)

எனக் குறிப்பிடுவர்.

"வெம்முக வேழத்து ஈர்உரிபோர்த்த விகிர்தா"

"கறைமல்கு கண்டன் கனலெரியாடுங் கடவுள்
பிறைமல்கு சென்னி உடையவன்"

"தையலொர்பாக மகிழ்வர் நஞ்சுண்பர் தலையோட்டில்
ஐயமுங் கொள்வர்"

"சிராப்பள்ளி மேய வார்சடைச் செல்வர்"

"கொலை வரையாத கொள்கையர் தங்கண் மதில்மூன்றும்
சிலை வரையாகச் செற்றனர்"

என்று இறைவனது சிறப்புகளைப் பாடுவர். இராவணன் ஆணவத்தை அடக்கிய இறைவனின் செயலை,

"மலைமல்கு தோளன் வலிகெட ஊன்றி"

எனவும், திருமாலும் பிரமனும் அடிமுடி தேடிய செய்தியை,

"அரப்பள்ளியானும் அலர் உறைவானும் அறியாமைக்
கரப்பு உள்ளிநாடிக் கண்டிலரே"

எனவும் குறிப்பர்.

புத்தரும் சமணரும் உரைக்கும் சொல்லைப் பேணாது பெருஞ் சிறப்பெய்த விரும்பும் அடியவர்களுக்கு அறிவுறுத்தும் பொருட்டு,

"நாணாது உடைநீத் தோர்களும்கஞ்சி நாட்காலை
ஊணாப் பகலுண்டு ஓதுவார்கள் உரைக்கும்சொல்
பேணாதுறுசீர் பெறுதும் என்பீர்எம் பெருமானார்
சேணார்கோயில் சிராப்பள்ளி சென்று சேர்மினே"

என்று நல்வழி காட்டுகின்றார்.

1. பாடல்பெற்ற சிவத்தலங்களில் திருச்சிராப்பள்ளி மூர்த்தி, தலம் தீர்த்தத்தால் சிறந்து விளங்கும் தலமாக விளங்குகின்றது.
2. திருவண்ணாமலை போன்று இத்தலம், மலை திருத்தலமாகப் போற்றப்பட்டு வருகின்றது.

3. இப்பதிகத்தில் சம்பந்தர் சிராப்பள்ளியின் இயற்கை வனப்பினையும், இறைவனது சிறப்புகளையும், அடியார்களுக்கு அருள் புரியும் தன்மையையும் பாடியுள்ளார்.

4. திருவண்ணாமலையைப் போன்றே இத்தலத்திலும், பௌர்ணமி, பிரதோச காலங்களில் மலைவலம் (கிரிவலம்) செய்து, திருமுறை களைப் பாடி, இறைவனைத் தொழும் அடியார் கூட்டம் மிகுந்து காணப்படுகிறது.

5. கருவுற்ற மகளிர் நன்முறையில் மகவைப் பெற்றெடுக்க இவ்விறைவனை வேண்டி வழிபடும் மரபு தொடர்ந்து பின்பற்றப் பட்டு வருகின்றது.

# 48. முதல் அரசு இயற்றிய துரை

ச. நடராசன், திருப்பத்தூர்.

அம்பிகையின் ஞானப்பாலை உண்டு, ஞாலம் உய்ய ஞானத் தமிழ் மழை பொழிந்த ஆளுடைய பிள்ளையாரைப் போற்றிப் புகழ்ந்து பெருமிதம் உற்றவர் இருவர். ஒருவர் கற்பனைக் களஞ்சியம் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள். அவர், ''நால்வர் நான்மணி மாலை'' என்ற நூலை நால்வர் பெருமக்களுக்கும் சூட்டி மகிழ்ந்தார். நால்வரில் முதல்வராகிய, சம்பந்த சுவாமிகளை வெண்பாவினால் போற்றிப் புகழ்ந்தார். ஆளுடைய பிள்ளையார் அருண் மாலையை ஞானசம்பந்தருக்கும்; ஆளுடைய அரசுகள் அருண் மாலையை நாவரசருக்கும், ஆளுடைய நம்பிகள் அருண் மாலையைச் சுந்தரமூர்த்தியாருக்கும், ஆளுடைய அடிகள் அருண் மாலையை மணிவாசகருக்கும் சூட்டி மகிழ்ந்தவர். திருவருட்பிரகாச வள்ளலார் என அழைக்கப் பெற்ற சிதம்பரம் இராமலிங்கம் பிள்ளையாவார். இக்கட்டுரையில் வள்ளற்பெருமான், சீகாழி வள்ளலை எவ்வாறெல்லாம் போற்றிப் புகழ்ந்து பரவுகின்றார் என்பதனைக் காணலாம்.

## அணுக்கத் தொண்டர்

திருத்தொண்டும், தமிழ்த் தொண்டும் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்தவை. வள்ளலாரின் திருவருட்பா என்னுந் தமிழ்நெறிக்கு ஆதாரமாய் நின்றவை நால்வர்தம் தேவாரத் திருவாசகத் திருப்பாட்டு களாம். ஆகவே, பண் சுமந்த பாடல் வழிப் பரமனை அடையும் திருப்பாட்டு நெறியான நால்வர் வழியையே வள்ளலாரும் பின்பற்றித் தமிழ்ப்பாட்டு நெறி, இறைத் தொண்டாற்றுதற்கும், திருவருளைத் துய்த்தற்குமான திருநெறி என்ற பக்தி இலக்கியக் கோட்பாடு நெறியினை உறுதிப்படுத்துகின்றார் எனலாம்.

இறைப்பணி இயற்றும் தொண்டர்களை வள்ளலார் இருவகையாகப் பிரிக்கின்றார். ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களினின்றும் நீங்கிய சுத்த ஆன்மாக்கள் எனப் பெறும் சிவஞானச் செல்வர்கள் சிவனுக்கு அருகிருந்து பணிபுரியும் பெருமை பெற்றவர்கள். அவர்களை ''சுத்தியாகிய சொல்லுடை அணுக்கத் தொண்டர்'' என அழைக் கின்றார். மும்மலங்களோடு கூடியவர் சகலர் எனப்படுவர். அவ்வினஞ்

சார்ந்த தொண்டர்கள் நல் ஞானத்தால் சிவனைத் தெளிந்து, சிவயோகச் சூழலுக்குப் புறத்தே இருப்பர். அங்கிருந்து தொண்டு புரியும் இவர்களைப் ''புத்திசேர் புறத்தொண்டர்'' என அழைக்கின்றார்.

வள்ளலார் தமது பக்தி நெறிக் கோட்பாட்டுக்கு அடித்தளமாக அமைந்த நால்வர் பெருமக்களையும் ''அணுக்கத் தொண்டர்'' என்று கருதிப் போற்றுகின்றார். இவர் நால்வர் பெருமக்களையும் பாராட்டு கின்ற பான்மையினை இரு முறைகளில் காணலாம். ஒன்று, நால்வரை ஆங்காங்கு அருட்பாவில் சுட்டிக் காட்டுதல், இரண்டு தனிப்பாடல்கள் இயற்றிப் பாராட்டுதல். இவ்விரு நிலைகளிலும் சைவ சமயச் செந்நெறியாளர்களாகிய அவர்களின் வாழ்க்கை வரலாறு, அவர்கள் வாழ்வில் நிகழ்த்திய அற்புதங்கள், அவர்கள் ஆற்றிய இலக்கியப் படைப்புகள் ஆகியவற்றைக் கூறிப் போற்றுகின்றார்.

### அருள் முகில்

நால்வர் பெருமக்களுள் முதல்வராக வைத்து எண்ணப் பெறும் சிறப்பிற்கு உரியவர் திருஞானசம்பந்தர். இவரைப் போற்றிப் பாடுவதுபோல மற்ற மூவரையும் பாடி இருக்கின்றாரா என்பது ஆய்வுக்குரிய செய்தியாகும். விண்ணப்பக் கலிவெண்பா, திருவடிப் புகழ்ச்சி, திருக்கோலச் சிறப்பு, இங்கித மாலை, ஆற்றாக் காதலின் இரங்கல், சண்முகர் கொம்மி, திருவருண் முறையீடு, நெஞ்சு அறிவுறுத்தல், சிவநேச வெண்பா முதலாக தலைப்புகளில் அமைந்த பாடல்களில் ஞானசம்பந்தரின் அருமை பெருமைகளைப் பாராட்டு கின்றார் வள்ளலார்.

''சமரசானுபவ அனுக்ரக அருட்குரு தோத்திரம்'' என்ற தலைப்பில் நாற்பத்தெண் சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்த யாப்பில் அமைந்துள்ள நெடிய பாடலில் திருஞானசம்பந்தரின் பெருமையை மிக வியந்து பாடுகின்றார். ''சீகாழியில் முனிவர், சித்தர், யோகர், சுரர், சமயவாதிகள் யாவரும் கை குவித்து அருகில் நின்று ஒத்த மூவாண்டில் மகிழ்வோடு ஞான போனகம் உண்டு பதிகச் செஞ்சொல் மழையைச் சிவபெருமானாகிய பவளமலையின் மீது பொழிந்த அருள் முகிலாகிய சம்பந்த வள்ளல் எனும் கடவுளே'' என்று வள்ளலார் ஞானசம்பந்தரைப் போற்றுகின்றார்.

சிவஞான தேசிகன் திருச்சீர் அட்டகம்'' என்பது பன்னிரு சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்த யாப்பில் அமைந்துள்ளது. அட்டகம் எனில் எட்டுப் பாடல்களைக் கொண்ட தொகுப்பென்பது பொருள். எனினும் மூன்று பாடல்களே முழுமையாகக் கிடைத்துள்ளன.

நான்காவதாக உள்ள பாடல் சிதைந்து காணப்படுகிறது. சீகாழிப் பிள்ளையின் திறம் செப்புனவே அவை.

''திருஞான சம்பந்தர் தோத்திரம்'' என்பது ஆறு சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தத்தாலான ஒரு பாடல். அப்பாடலில் திருஞான சம்பந்தரின் திருவடிகளை ஒரு கோடி முறை தொண்டனிட்டு வணங்கித் தன்னை அன்பால் காக்குமாறு வேண்டுகின்ற செய்தி காணப்படுகிறது.

மேற்கூறிய இவைகளையன்றி, வடலூரார், திருஞானசம்பந்தரைப் போற்றி, ''ஆளுடைய பிள்ளையார் அருள் மாலை'' என்ற தலைப்பில் பதினோரு பாடல்களையும் பாடியிருக்கின்றார்.

## தலைவனைப் போற்றிய தமிழ்

திருஞானசம்பந்த சுவாமிகளை, வள்ளலார், காழி ஞானசம்பந்தர், சிவகுரு, நற்காழிச் சம்பந்தச் செல்வம், சற்குரு சற்குருமணி உத்தம சுத்த சற்குரு, முதலரசு இயற்றிய துரை, மூன்று வயதில் அருள் பெற்ற மணி, சம்பந்த தேவன், மறை தனிக்கொழுந்து, வடிவிலாக் கருணை வாரி, அமண் இருளொழித்த தீபம், என்னுயிர்க்கு யிரெனும் குரு, உயர்த்தனிக் கவுணிய மணி என்றெல்லாம் அன்பொழுக அழைக்கின்றார்.

## ஆளுடைய பிள்ளையார் நிகழ்த்திய அற்புதங்கள்

சிவநெறிச் செல்வரின் கருவி கரணங்கள் எல்லாம் பதிகரணங் களாக அமைய அச்சிவானுபவச் செல்வர்கள் இடம் பெறும் சில நிகழ்வுகள் இயற்கையை மீறிய நிகழ்வுகளாக அமைந்து ''அற்புதங்கள்'' என மக்களால் பாராட்டப் பெறும். அவ்வகையில் சைவ சமய குரவர்கள் நால்வர் வாழ்விலும் பல அற்புதங்கள் நிகழ்ந்துள்ளன. வள்ளலார் அவற்றைத் தம் பாடல்களில் வேண்டியவாறு எடுத்து மொழியத் தவறுவதில்லை. திருஞானசம்பந்தர் வாழ்வில் நிகழ்ந்த அற்புதங்களை வாது வென்ற சம்பந்தன் என்பதில் பொதுவானே வாதுவென்ற என்றது என் குறித்தோ எனில், எண் வகைக் குன்றத்து எண்ணாயிரவரால் பாயுடுகைக்குப் பறிதலைச் சமணர்கள் ஒருங்கே கூடித் தென்மதுரைக்கண் செந்தமிழ்ப் பாண்டியனை முன்னிட்டுச் செருகாற் செய்த சுரவாதம், அனல்வாதம், புனல் வாதங்கள் பிறபடத் திருநீற்றாலும், திருவாக்காலும் வென்று திறல் கொண்டமையன்றியும், பரசமய கோளரி என்று தானே ஒலித்த திருச்சின்னத்தில் தெய்வப் பேரொளி கேட்டு உளம் பெறாது எதிரிட்டு மறித்த போதமங்கைப் புத்த நந்தியின் பொய்த்தருக்கமும் புழுத்தலையும் பொடி பட்டழியவும், பின்னர் உள்ளது போன்றிலதைப் பற்றிய சாக்கியக் குழுவுள்

தலைவனாய சாரிப்புத்தன் சிற்சில வகையாற் செய்த சமயவாதத் தலை தடுமாறவும் செந்தமிழ் வேதத்திருமுறை தாங்கி மேம்படும் அறிஞரான் வெற்றி கொண்டமையும், திருவோத்தூரில்கண் அரனுக் கிடுபனை ஆண் பனையாயிற்றே என்று அசதியாடிய அமணக்குழு உக்களின் வாய்வாதங்கள் தாம் திருவாய் மலர்ந்த திருக்கடைக் காப்புள் ஓர் மொழியானே மண்பட்டொழிய அவ்வொன்பனை பெண் பனையாகச் செய்து விறல் கொண்டமையும் குறித்ததென்க.

அல்லதூஉம், வாது என்பது இலக்கணையாகக் கொண்டு பெருமண நல்லூரின்கண் திருமண நல்விழாவைத் தரிசிப்பான் வந்த மக்கட்கெல்லாம் தொன்று தொட்டு இடைவிடாது உடல் நிழற்போல் சூழ்ந்துள்ள பிறவிப் பெருவாதுகள் அனைத்தும் வென்றதூஉம், திருபாச்சிலாச்சிரமத்தின்கண் மழவன் மகளார்க்கு அடுத்த முயலவாது வென்றதூஉம், இவை முதலியவும், குறித்த தெனினுமாம் என்க என வள்ளலார் ''ஒழிவிலொடுக்கப் பாயிர விருத்தியுரை'' யில் தெளிவாக உரைக்கின்றார்.

## இறைவன் அளித்த பரிசு

பரசமய கோளரியாய் விளங்கிச் சமணம், பௌத்தம் முதலான வற்றை நிராகரித்து, அந்த மதத்தினரோடு வாது புரிந்து வென்று, சைவ சமயத்தை நிலை நாட்டிய பெருமை திருஞான சம்பந்தருக்குண்டு என்பதால் வள்ளலார் அருள் நெறியாகிய சைவ நெறியின் முதல் தலைவராக விளங்கிச் செங்கோலோச்சியவர் அவர் என்னும் கருத்துப்பட

**''முத்தியற் சிவகை இவர்ந்து அருள் நெறியில்**
**முதலரசு இயற்றிய துரையே''**

என்று ஞானசம்பந்தரை அழைக்கின்றார். பிறிதோரிடத்திலும் அடிகள், ''முன்னம் காழி வள்ளலுக்கு முத்துச் சிவிகையொடு, பொன் சின்னம் அளித்தோன் சிவபெருமான்'' என்று குறிப்பிடுகின்றார்.

அரசாட்சி செய்யும் ஒருவருக்கு வெண்கொற்றக் குடையும், பல்லக்கும் எக்காளம் முதலிய சின்னங்களும் அமைவன போல் சைவ சமய ஆட்சிக் காவலராய்த் திருஞானசம்பந்தர் விளங்கிமை பற்றி இறைவன் அரசுக்குரிய அடையாளங்களை அவருக்கு வழங்கினான் என உணரலாம்.

## வியாழன் தோறும் வழிபாடு

ஆளுடைய பிள்ளையார் அருள் மாலையில் வள்ளலார் அவரைச் சற்குரு மணி என்றும் சற்குரு என்றும் அழைக்கின்றார்.

என்பது முன்னர்க்காட்டப்பட்டது. அடிகள், சத்திய தருமசாலையில் வியாழக்கிழமை தோறும், திருஞானசம்பந்தருக்குச் சிறப்பு வழிபாடு நிகழ்த்தினார். வழிபாட்டின்போது சம்பந்தர் வந்து அமர்வதாகக் கருதப்பட்டு மெத்தையும் முப்புரங்களிலும் பட்டுத் தலையணை யாகிய திண்டும் அமைத்து ஆசனத்தை மலர் தூவிப் போற்றுவது வள்ளலார் வழக்கம். இன்றும் வடலூர் சத்திய தருமசாலையில் பட்டுமெத்தையும் திண்டும் வள்ளலார் திருவுருவப் படத்தில் முன் அமைக்கப் பெற்றிருத்தலைக் காணலாம்.

### மூன்று அனுபவங்கள்

உலகியலறிவு அணுவளவும் பெறாத சிறு பருவத்தில் அடிகளின் உள்ளத்திலிருந்து திருவருள் நெறியில் முற்பட்டொழுகவும், அருள் நெறியினின்றும் பிறழும் தருணத்தில் பிறழாவண்ணம் நிலைநிறுத்தி யவர் திருஞானசம்பந்தர் என்கிறார்''. உயிர்படும் துன்பங்களைக் கண்டறிதல் உயிர் அனுபவம், அதனைப் பிறமக்கள் உயிர்களிடத்துக் கண்டு மனம் இரங்குதல் அருள் அனுபவம், இந்த அனுபவம் உலக உயிர்கள் அனைத்தின் பாலும் பரந்து படர்ந்து மேம்படுதல் சிவ அனுபவம். உயிர் அனுபவம் உண்டாயின் அவ்வுணர்வின்கண் உயர்ந்த அருள் அனுபவம் உண்டாகும். குற்றமிலாத அந்த நல்ல அனுபவத்தால் சுத்த சிவ அனுபவம் உண்டாகும் என்று திருஞான சம்பந்தர் தமக்கு உரைத்ததாக வள்ளலார் குறிப்பிடுகின்றார்.

### பதிகப் பயன் கூறுதல்

திருப்பதிகந்தோறும் இறுதிப் பாடலாக அமைந்த திருக்கடைக் காப்புச் செய்யுள் யாவும் சிவபரம் பொருளைத் திருப்பதிகப் பாமாலையால் போற்றி வழிபாடு செய்யும் அன்பர்கள் எல்லா நலங்களும் பெற்று ஈறிலாப்பேரின்ப வாழ்வில் திளைக்க வேண்டும் என்றும் பெருங்கருணைத் திறத்தால் நிறைமொழி மாந்தராய் ஆளுடைய பிள்ளையார் ஆணையிற் திளந்த மறைமொழிகளாகத் திகழ்கின்றன. இந்தப் பாங்கறிந்த வள்ளலார் ஆளுடைய பிள்ளையார் அருள் மாலையிலும், தம் குருநாதரைப் பின்பற்றிப் பாடுவார் போல் பதினோராவது பாடலில் ''பேரார் ஞானசம்பந்தப் பெருமானே நின் திருப்புகழைப் பேசுகின்றோம் மேன்மேலும் பெருஞ் செல்வத்தில் பிறங்குவ்ரே'' என்று பயன் கூறுகின்றார்.

### சற்குரு மணி

மூன்று அனுபவங்களையும் அடி முடியிவையென்றும் திருநெறித் தமிழால் ஐயம் நீக்கியமை கொண்டும் வள்ளலார் திருஞானசம்பந்தரைத் தம் ஞான குருவாகக் கொண்டார் என்பது தெற்றெனப்புலனாகும். திருஞானசம்பந்தர் ''குருராயனாகத் திகழ்கின்ற பாங்கினை அடிகள்''

''குருராயன் என்பது திருஞானசம்பந்தப் பிள்ளையார்க்குச் சிறப்பிற் சிறப்பாய காரணப் பெயராய் நின்று, ஓதி உயர்ந்து பன்னாள் பல சாதனங்களில் முயன்று முயன்று ஆசாரியத் தன்மை ஒருவாறு அரிதிற்கிடைக்கப் பெற்றும் ஓரோர் காலங்களில் அவத்தை வயப்பட்டு மயங்கும் மற்றை ஆசாரியர் போலாது, ஓதாமல் வேதாகமங்களை முற்றும் உணர்ந்து இறைப்போதும் ஓர் சாதனங்களில் முயன்றதின்றி ஞானாசிரிய அருளிலக்கணங்கள் அனைத்தும் தாமே தம்பால் நிரம்பி நிற்ப அமர்ந்தனர் என்பதூஉம், ஓதி உணர்ந்த அவ்வாசிரியர்க் கெல்லாம் அவரவர் அறிவின்கண் அருளுவாய் நின்று அறிவித்தும் ஆசாரிய உருவாய் வெளி நின்று அனுக்கிரகித்து நின்றனர் என்பதூஉம், திருநோக்குஞ் செய்தல் முதலிய அறு வகைத் தீக்கையானும் அன்றித் தமது திருவுருவைக் காண்டல், நினைத்தல் மாத்திரையே பக்குவரல்லாரும் பக்குவராய் பயன்பெற நின்ற திருவருட் பெருமையர்'' என வியக்கின்றார்.

## முருகனே ஞானசம்பந்தரானார்

கண்ணுதற் பெருங்கடவுளின் குமரனாகிய ஆறுமுகப் பெருமானே ஆயிரத்து முன்னூறு ஆண்டுகளுக்கு முன்பு திருஞானசம்பந்தராகத் தோன்றினார் என்று ஒரு கருத்துண்டு. இதனை அருணகிரியார்,

**''அளகைவணி கோர்குலத்தில் வனிதையுயிர் மீளழைப்ப**
**அருள்பரவு பாடல் சொற்ற குமரேசா''**

என்று குறிக்கின்றார். வடலூர் வள்ளற் பெருமானுக்கும் இக்கொள்கை உடன்பாடானதே என அறிகிறோம்.

**''பித்தப்பெருமான் சிவபெருமான்**
**பெரிய பெருமான் தமக்கருமைப்**
**பிள்ளைப் பெருமான் எனப்புலவர்**
**பேசிக் களிக்கும் பெருவாழ்வே**
**மத்தப் பெருமால் நீக்குமொரு**
**மருந்தே எல்லாம் வல்லானே**
**வஞ்சச் சமண வல்லிருளை**
**மாயக்கும் ஞானமணிச் சுடரே''**

என்று பாடுகின்றார்

''குருராயன் என்பது வாதுவென்ற சம்பந்தன் என்பதற்கு மேனிற்கு வைத்த விதப்புக்குறிப்பால் பிள்ளையார் இவ்வவதாரத்தின் மேனின்ற அவதாரத்திலும் குமார சற்குருவாய் அரனார்க்கும் அகத்தியனார்க்கும் உபதேசித்தருளிய ஆசாரியத் தலைமையும் குறித்ததெனக் கொள்க''. என்று ஓழிவி லொடுக்கப்

பாயிரவிருத்தியுரையில் அடிகளார் குறிப்பிடுவதும் இங்கு இணைத்து நோக்கத்தக்கது.

## பொருட் பொருத்தம்

திருஞானசம்பந்தர் - வள்ளலார் இவர் தம் பொருத்தத்தை, டாக்டர் வை. இரத்தினசபாபதி அவர்கள் கீழ்கண்டவாறு வரைகின்றார்.

''தாவில் சராசரங்ளெல்லாம் சிவம் பெருக்கும் பிள்ளையார் என்பது தெய்வச் சேக்கிழார் தம் திருவாக்கு, இவ்வகையில் சரம், அசரம் என்பன அசைவன, அசையாதன, நடப்பன; நிற்பன ஆகிய எல்லாப் பொருட்களையும் உள்ளடக்கிய தொடர், எல்லாப் பொருள் களிலும் சிவம் இருக்கிறது. ஆயினும், சிவம் பெருகித் தோன்ற வேண்டும் என்ற தொண்டினை மேற்கொண்டார் திருஞானசம்பந்தர்.

திருஞானசம்பந்தரின் தொண்டின் அடிப்படையான நிற்பன நடப்பன ஆகிய அனைத்தும் சிவம் பெருகி நிற்கும் இடமாக, திருக் கோயில்களாக, சிவனுறை தலங்களாக அமைவதே என்பதேயாயின் வள்ளலாரின் தொண்டின் அடிப்படையானது அவைகளெல்லாம் சத்திய ஞானசபை என அமைய வேண்டும் என்பதே, இவ்வடிப் படையிலே சுத்த சன்மார்க்கத் தொடக்கமும் நிறைவும் அமைகின்றன'' என்று ஆய்வுரை தருகின்றார்.

## பொன்னே போல் போற்றல்

ஞானசம்பந்தரின் திருப்பாடல்களில் உள்ளந்தோய்ந்து நின்றவர் வள்ளலார். எனவே, தம்முடைய அருட்பாடல்களில் சம்பந்தர் கையாண்ட சொற்களையும் தொடர்களையும் ''முன்னோர் மொழி பொருளைப் பொன்னே போல் போற்றி'' எடுத்தாளுகின்ற முறையினைப் பலவிடங்களில் காணலாம். எடுத்துக்காட்டாகச் சில

**''புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி**
**அறிவழிந்திட்டு ஐம்மேல் உந்தி**
**அலமந்த போதாக அஞ்சேல் என்று**
**அருள் செய்வான் அமரும் கோயில்**
**வலம்வந்த மடவார்கள் நடமாட**
**முழவதிர மழைஎன்று அஞ்சிச்**
**சிலமந்தி அலமந்து மரமேறி**
**முகில் பார்க்கும் திருவை யாறே''** (1-130-1)

என்ற திருஞானசம்பந்தரின் திருப்பாடலை, வள்ளலார்,

- "இறையோன்
புலனைந்தும் என்றருளும் பொன்மொழியை மாயா
மலமொன்றி அந்தோ மறந்தாய்" (3-3-470)

என எடுத்துப் போற்றுகின்றார்.

"வெற்றவே அடியார் அடிமிசை வீழும்
விருப்பினன் வெள்ளை நிறணியும்
கொற்றவன் தனக்கு மந்திரி யாய
குலச்சிறை குலவநின் றேத்தும்
ஒற்றைவெள் விடையன் உம்பரார் தலைவன்
உலகின் இயற்கையை ஒழித்திட்டு
அற்றவருக் கற்றசிவன் உறைகின்ற
ஆலவாய் ஆவதும் இதுவே" (3-120-2)

எனப் பாடும் திருஞானசம்பந்தர் திருவாக்கினை, வள்ளலார்,

- "சம்பந்தர்
அற்றவருக் அற்றசிவ னாம் எனும் அப்பொன்மொழியை,
மற்றைமொழி போன்று மறந்தனையே" (3-3-525)

என்று எடுத்துரைக்கின்றார்.

## பெயர்க்குள்ள பெருமாண்பு

மயிலாப்பூரில் வாழ்ந்த சிவநேசச் செட்டியார் மகள் பாம்பு தீண்ட இறந்தாள். அவருடைய உடலை எரித்தனர். எலும்பு இருந்தது. அவ்வெலும்பைத் திருஞானசம்பந்தர் முன் வைக்கத் திருவருளால் பதிகம் பாடிப் பூம்பாவை என்ற அப்பெண்ணை உயிர் பெற்றெழச் செய்தார். இந்த அற்புதச் செயலைக் குறிப்பிடும் வள்ளலார்

"பண்ணாலுன் சீரினைச்சம் பந்தர்சொல வெள்ளெலும்பு
பெண்ணான தென்பார் பெரிதன்றே - அண்ணாஅச்
சைவவடி வானஞான சம்பந்தர் சீருரைக்கில்
தெய்வவடி வாம் சாம்பர் சேர்ந்து"

எனப் பாடுகின்றார். ஞானசம்பந்தரின் திருப்பாடலால் அப்பெண் உயிர்பெற்றெழுந்தாள். இது அதிசயம் இல்லை. சிவபெருமானை ஒத்த ஞானசம்பந்தரின் திருப்பெயரை யாரேனும் ஓதியிருந்தால், எலும்பு, தெய்வமாகவே ஆகியிருக்கும் என்று குறிப்பிடுகின்றார். இப்படி அவர் குறிப்பிடுவதன் வாயிலாக அப்பெருந்தகை சீகாழியில் தோன்றிய செம்மலிடத்து எத்தகைய மதிப்பைக் கொண்டிருந்தார் என்பதனை அறியலாம்.

# 49. நடுநாட்டுத் திருப்பதிகங்களில் வழிபாடு

கோ.ப. நல்லசிவம், திருப்பனந்தாள்.

சம்பந்தர் தேவாரத்தில் வழிபாடு எனும் பூசனை முக்கிய இடம் பெறுகிறது. இறைவன் அருளை முழுமையாகப் பெற்றுய்ய இவ்வழிபாடு உறுதுணை செய்யும். வழிபாட்டின் முக்கியத்துவம் உணர்ந்தே திருமுறையாசிரியர்கள் திருத்தலங்களைப் பாடும்போது, இத்தல இறைவனை வானவர்கள் வழிபட்டனர்; இது திருமால், பிரமன், திருமகள், கலைமகள் போன்றோரால் வழிபடப்பட்ட தலம். குபேரன், இந்திராதி தேவர்கள், வாலி, சுக்ரீவன், இராவணன், சப்த மாதர்கள், ஏழுமுனிவர்கள் வழிபட்டுப் பேறடைந்த தலம். இது நவகிரகங்கள் வழிபட்ட தலம் என்றெல்லாம் குறிப்பிட்டனர்.

சம்பந்தர் தேவாரத்தில் வழிபாடு பற்றிப் பரவலாகக் கூறப் பட்டிருப்பினும் காலம், சூழல், எல்லை கருதி ஈண்டு நடுநாட்டுத் திருத்தலப் பதிகங்களே எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

**சம்பந்தர் பாடிய நடுநாட்டுத் தலங்கள்**

சம்பந்தர் நடுநாட்டுள் பதினைந்து தலங்களைப் பாடியுள்ளார். அவை வருமாறு.

1. திருநெல்வாயில் அரத்துறை, 2. திருத்தூங்கானை மாடம் (பெண்ணாகடம்), 3. திரு எருக்கத்தம் புலியூர், 4. திருவதிகை வீரட்டானம், 5. திருச்சோபுரம், 6. திருமுதுகுன்றம், 7. திருநெல் வெண்ணெய், 8. திருக்கோவலூர் வீரட்டம், 9. திருஅறையணி நல்லூர், 10. திருவடுகூர், 11. திருமாணிகுழி, 12. திருப்பாதிரிப் புலியூர், 13. திருப்புறவார் பனங்காட்டூர், 14. திருஆமாத்தூர், 15. திருவண்ணாமலை என்பனவாம்.

இத்தலத் தேவாரங்களுள் வழிபாடு என்பது பல்வேறு கோணங் களில் சம்பந்தரால் பேசப்படுகிறது. மலர் தூவி வழிபடல், மொழியால் இசையால் பாடி வழிபடல், ஆடி வழிபடல், வானவர் வழிபாடு இயற்றல், வழிபாட்டால் பெறும் பயன், பதட்டம் தீர்க்கும் வழிபாடு என வழிபாடு பல்வேறு பரிமாணங்களைப் பெறுகிறது.

**மலர் வழிபாடு**

வழிபாட்டில் முக்கிய இடம் பெறுவது மலராகும். பூசை என்பதே பூ-செய் என்பதிலிருந்தே வந்தது என்பர். திருமுறையாசிரியர்கள் பலரும் இம்மலர் வழிபாட்டையே முன்னிறுத்திப் பாடியுள்ளனர். அவ்வகையில் சம்பந்தரும்,

''நின்று மலர்தூவி இன்று முதுகுன்றை
நன்றும் ஏத்துவீர்க் கென்றும் இன்பமே''

''மறையாயின பலசொல்லியொண் மலர்சாந்தவை கொண்டு
முறையால்மிகு முனிவர் தொழும் முதுகுன்றடை வோமே''
(திருமுதுகுன்றம் - 5)

''மந்தமலர் கொண்டு வழிபாடு செயும் மாணியுயிர்
வந்தவொரு காலனுயிர் மாளவுதை செய்த மணி கண்டனிடமாம்''
(திருமாணிகுழி - 6)

''தொண்டர் வந்து வணங்கி மாமலர்
தூவி நின்கழ லேத்துவார்''

''வாசமலர் தூவப் பாச வினைபோமே'' (திருமுதுகுன்றம்)

''பூவார் மலர்கொண் டடியார் தொழுவார் புகழ்வார் வானோர்கள்''
(திருவண் - 1)

''வம்பார் கொன்றை வன்னிமத்தம் மலர்தூவி
நம்பா வென்ன நல்கும் பெருமான் உறைகோயில்''

''வண்ணமா மலர்கொண்டு வானவர் வழிபட
அண்ணலார் ஆயிழை யாளொடும் அமர்விடம்''

''மஞ்சர்தாம் மலர்கொடு வானவர் வணங்கிட''

''தெரிந்த அடியார் சிவனேஎன்று திசைதொறும்
குருந்த மலரும் குரவின் அலரும் கொண்டேந்தி''

நீடு மலரும் புனலும் கொண்டு நிரந்தரம்
தேடும் அடியார் சிந்தை யுள்ளே திகழ்வானை

என வரும் பாடலடிகள் மலர் வழிபாட்டின் முக்கியத்துவத்தை விளக்குவன.

**பாடிப் பரவுதல்**

''அருச்சனை பாட்டே யாகும்'' என்பது பெரியபுராணம். எனவேதான் திருமுறையாசிரியர்கள் பாடிப் பரவும் வழிபாட்டைப் பல்வேறு இடங்களில் வலியுறுத்திச் சொல்கின்றனர்.

ஆடிப்பாடி யண்ணாமலை கைதொழ
ஓடிப்போம் நமதுள்ள வினைகளே,
அளப்பில கீதம் சொன்னார்க்கு அடிகள்தாம் அருளுமாறே

என்று அப்பர் பெருமானும் பாடிப் பரவும் வழிபாட்டை முன்னிறுத்துவார். அவ்வழியே நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய ஞானசம்பந்தரும்,

'பாடுவாருக்கு அருளும் எந்தை' (திருமுதுகுன்றம்)

"ஆய்ந்த நான்மறை பாடியாடும்
அடிக ளென்றென் றரற்றி நன்மலர்
சாய்ந்தடி பரவுந் தவத்தார்க் கருளாயே" (திருமாணிகுழி)

"பண்ணார் மறைபாட பரமன் அதிகையுள்
விண்ணார் பரவநின்றாடும் வீரட் டானத்தே"

"எந்தை யிவனென்று இரவி முதலா இறைஞ்சுவார்
சிந்தை யுள்ளே கோயிலாகத் திகழ்வானை (திருமுதுகுன்றம்)

"பூசை செய்த அடியார் அடியார் நின்று புகழ்ந்தேத்த
மூசி வண்டு பாடும் சோலை முதுகுன்றே"

என வலியுறுத்திப் பாடுகின்றார்.

**வழிபாட்டின் பயன்**

எச்செயல் செயினும் அச்செயற்குரிய பயன்வந்தே தீரும் என்பது விதி. அதற்கேற்ப வழிபாடியற்றலினால் என்ன பயன் கிட்டும் என்ற வினா எழும். அதற்கு விளக்கம் தருமாப் போலே சம்பந்தர் தேவாரத்தில்,

"விடையான் அடியேத்த மேவா வினைதானே
(திருஎருக்கத்தம்புலியூர்)

"கலையான் அடியேத்த கருதா வினைதானே"

"அண்ணா எனவல்லார்க்கு அடையா வினைதானே"

"வேறா நினைவாரை விரும்பா வினைதானே"

"தொகுவான் கழலேத்தத் தொடரா வினைதானே"

"தேவே எனஅல்லல் தீர்தல் திடமாமே"

"கறையார் மிடற்றானைக் கருதக் கெடும் வினையே"

"வாசமலர் தூவப் பாச வினைபோமே"

என்று வினைநீக்கம் தருவது வழிபாடு என்ற பொருளிலும்,

"நன்றும் ஏத்துவீர்க்கு என்றும் இன்பமே"

"நித்தம் ஏத்துவீர்க்கு உய்த்தல் செல்வமே"

"கைகள் கூப்புவீர் வையம் உமதாமே"

"பிணியாயின கெட்டுத் தணிவாருலகிலே"

"பொய்யாரிர வோர்க்குச் செய்யாள் அணியாளே"

"விடையான் முதுகுன்றை இடையா தேத்துவார் "

படையாயின சூழ உடையா ருலகமே"

வழிபாட்டால் மதிப்பு, செல்வம், உயர் பதவி, முத்தி, இன்பம் போன்றவெல்லாம் கிடைக்கும் என்ற பொருளிலும் பாடலடிகள் காணப்பெறுகின்றன.

## பதட்டம் தவிர்க்கும் மருந்து

இன்றைய சூழல் இயந்திர மயமானது. எங்கும் எதிலும் பரபரப்பு. மனமானது நிம்மதியில்லாமல் சுழன்று அல்லலுற்றுக் கொண்டு இருக்கிறது. இச்சூழலில் மனம் அமைதியுற்று இன்பம் பெறுவதற்கான ஒரே அருமருந்து வழிபாடேயாகும். அப்பர் பெருமானும் "நிலை பெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீ வா என நெஞ்சை அழைத்து திருக்கோயிலில் அலகிடுதல், மெழுக்கிடுதல், பூமாலை புனைந்து ஏத்தல், புகழ்ந்து பாடுதல், தலைபாரக் கும்பிட்டுக் கூத்தாடுதல் போன்ற வழிபாட்டைச் செய்யப் பணிக்கிறார். அவ்வகையில் சம்பந்தரும் வாழ்வில் பதட்டம் இன்றி வாழ வேண்டுமாயின் இறை வழிபாடியற்றுங்கள் என்று வலியுறுத்துகின்றார். அப்பாடல்

"அலையினார் புனல்சூடிய அண்ணலார் அறையணி நல்லூர்
தலையினார் தொழு தோங்குவார் நீங்குவார் தடுமாற்றமே"

என்பதாகும்.

## வழிபாடு செய்யாமையின் இழிவு

வழிபாடு என்பதன் விளக்கம், வழிபடுதலான் கிடைக்கும் பேறு என்று பட்டியலிட்ட, சம்பந்தர், வழிபாடு செய்யாமையான் வரும் இழிவையும் எடுத்துரைக்கின்றார். அப்பதிகம் அப்பர் பெருமான் பாடிய திருவங்கமாலை போலவே அமைந்துள்ளமை ஈண்டு குறிப்பிடத்தக்கது. மனித உடலின் ஒவ்வொரு உறுப்பும் இறைவனை வழிபடவே வழங்கப்பட்டது. அவ்வாறு அவை இல்லையெனில் அவ்வற்றுக்குப் பெருமையில்லை. இருந்தும் இல்லாதது போலவேயாகும் என்று இடித்துரைக்கின்றார்.

..................''ஆமாத்தூர் அம்மான்றன்
பொன்னங் கழல்பரவாப் பொக்கமும் பொக்கமே''

..................''ஆமாத்தூர் அம்மான்எம்
பெம்மான்என்று ஏத்தாதார் பேயரிற் பேயரே''

..................''ஆமாத்தூர் அம்மானைக்
காணாத கண்ணெல்லாம் காணாத கண்களே''

..................''ஆமாத்தூர் அம்மான்றன்
வேட நெறிநில்லா வேடமும் வேடமே''

..................''ஆமாத்தூர் அம்மானைக்
கூறாத நாவெல்லாம் கூறாத நாக்களே''

..................''ஆமாத்தூர் அம்மானைக்
கேளாச் செவியெல்லாங் கேளாச் செவிகளே''

..................'' ஆமாத்தூர் அம்மான்எம்
வள்ளல் கழல்பரவா வாழ்க்கையும் வாழ்க்கையே''

..................''ஆமாத்தூர்
நிச்சல் நினையாதார் நெஞ்சமும் நெஞ்சமே''

என்று, பெருமானை வாழ்த்தவே வாயுளது, நினைக்கவே மனமுளது, அவன் புகழைக் கேட்கவே செவியுளது, அவனை வணங்கவே சிரமுளது, அவனைக் காணவே கண்ணுள்ளது என்று அறிவுறுத்துகின்றார்.

ஸ்ரீ குமரகுருபரரும் இந்நிலையில் இறைவனை வழிபடுதலானே பெருமை பெற்ற இவை வாழ்க என்று உறுப்புகளை வாழ்த்திப் பாடுவதும் ஈண்டு நினைவு கூரத்தக்கது.

''வாழி திருமன்றம் கண்டமலர்க் கண்கள்
வாழி பெருமான் புகழ்கேட்ட வார்செவிகள்
வாழி அவனை வணங்கு முடிச்சென்னி
வாழி அவன்சீர்பாடும் வாய்''

எனவே வழிபாடு என்பது மனிதனைப் புனிதனாக்குவது; மனித வாழ்வைப் பொருளுடையதாக்குவது; மனிதனை வையத்துள் வாழ்வாங்கு வாழ வைப்பது; பரபரப்பான சூழ்நிலையிலிருக்கும் மனத்தை மாற்றி அமைதியடையச் செய்வது என்பதே சம்பந்தர் தேவாரம் உணர்த்தும் சாரம். ஆதலால், வழிபாடியற்றி வளமான வாழ்வு பெறுவோமாக.

# 50. சம்பந்தரும் ஞானமும்

அ. நலங்கிள்ளி, திருச்சி.

ஞானம் என்பது அறிவு. அறிவின் துணைக்கொண்டு மெய்ப் பொருளை உணர்தலே ஞானம். அந்த அறிவின்பமே இறைவனின் உருவம் என்று உணர்ந்து கேட்டல், சிந்தித்தல், தெளிதல்,, நிட்டை கூடல் ஆகிய நிலைகளில் வழிபடுவது சிறப்பு. இத்தகைய ஞானநெறியே மேலான நெறியாகக் கருதப்படுகின்றது. இந்நிலை பக்தியின் முதிர்ச்சியில் தோன்றுவது. ஞானத்தை அடிப்படையாகக் கொண்டு ஞானத்தால் விளைவது. ஞானச்சுடரைக் கண்டு காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கிய தமிழ்ஞான சம்பந்தரின் தீந்தமிழ்ப் பாடல்கள் நம்மனோரை நன்னெறிக்கண் உய்ப்பன. பலநிலைகளில் ஞான சம்பந்தர், ஞான நிலைகளை உணர்த்துகின்றார். அவற்றை வெளிப்படுத்துவதே இக்கட்டுரையின் நோக்கம்.

**ஞானநெறி தலைப்பட்டோர்**

'ஞானிகளாய் உள்ளவர்கள், நான்மறையை முழுதும் உணர்ந்து, ஐம்புலன்களை வென்று, மௌன நிலையில் தனித்திருந்து தவம் செய்வர்' என்று முதுகுன்றப்பதிகமும் (131.10) 'உள்ளம் பொருந்திய அன்புடன், காம, குரோத, லோப, மோக, மத, மாச்சர்யம் என்றும் ஆறுபகைகளை அழித்து, ஐம்புலன்களையும் அடக்கிய வித்தகர்களாகிய ஞானிகளின் உள்ளத் தாமரையில் இறைவன் குடியிருப்பான்' என்று வீழிமிழலைப் பதிகமும் (132.6) கூறுகின்றன.

உடம்பில் உயிர்ப்பை ஒடுக்கி, ஒள்ளிய சுடராக விளங்கும் ஞான விளக்கினை ஏற்றி, நல்லறிவினோடு ஏனைய உயர்ந்த வழிகள் விளக்கம் பெறுமாறு இறைவனை வழிபடுவோர்க்கு ஐந்தெழுத்து மந்திரம் இடர்களைக் களையும் (280.3); குற்றமிலாதவராகி, உயர்ந்த நற்றவத்தை உண்மையாகக் கற்று உணர்ந்த அடியார்களே ஞானம் மிகுத்து நின்று இறைவனைத் தொழுவார்கள் (329.3) நாள்தோறும் பாடலோடு நல்ல மலர் தூவி, தோளினோடு கைகுளிர ஞானத்தால் தொழுவார்க்கு இறைவன் இடமளிப்பான் (329.7); நான்கு மறைகளும், ஆறங்கமும் கற்று வேள்வி செய்தவர்கள் ஞானத்தைக் கருதியவர்களாவர் (376.5) என ஞானநெறி தலைப்பட்டோரின் இயல்புகளை ஞானசம்பந்தர் வரையறுத்துக் கூறுகின்றார்.

நான்மறையை உணர்தல், ஐம்புலன்களை வெல்லுதல், மோன நிலையில் தணித்திருந்து தவம் செய்தல், ஆறு பகைகளை அழித்தல், உள்ளம் பொருந்திய அன்பு செலுத்துதல், உடம்பில் உயிர்ப்பை ஒடுக்குதல், உள்ளத்தில் ஞானஒளியை ஏற்றுதல், நல்லறிவினோடு ஏனைய உயர்ந்த வழிகள் விளக்கம் பெற முனைதல், குற்றமிலாதவராக இருத்தல், நாள்தோறும் பாடலோடு நல்ல மலர் தூவித் தொழுதல், ஆறங்கம் கற்றல், வேள்வி செய்தல் முதலானவை ஞானநெறி தலைப்பட்டோருக்குப் பொருந்தி நிற்பன என்பது ஞானசம்பந்தரின் வாக்கு.

சம்பந்தர் இத்தகைய நெறிகளைத் தலங்களின்மேல் வைத்துச் சுட்டுவதும் குறிப்பிடத்தக்கது.

''ஞானிகளாய் உள்ளார்கள் நான்மறையை
முழுதுணர்ந்து ஐம்புலன்கள் செற்று
மோனிகளாய் முனிச் செல்வர் தனித்திருந்து
தவம்புரியும் முதுகுன்றமே'' (131-10)

''விருதின் நான்மறையும் அங்கமோர் ஆறும்
வேள்வியும் வேட்டவர் ஞானம்
கருதினார் உலகில் கருத்துடையார்சேர்
கழுமலநகர் எனலாமே'' (376-5)

என்பன போன்று இத்தகைய நெறிகள் அமையும்.

ஞானம் என்பதற்கு ஞானசம்பந்தர் மேலும் ஒரு விளக்கம் தருகின்றார்.

''வீடும் ஞானமும் வேண்டு திரேல், விரதங்களால்
வாடின் ஞானம் என்ஆவதும்? எந்தை வலஞ்சுழி
நாடி ஞான சம்பந்தன் செந்தமிழ்கொண்டு இசை
பாடு ஞானம் வல்லார் அடிசேர்வது ஞானமே'' (138-11)

விரதங்களால் ஞானம் கூடாது; ஞானசம்பந்தனின் செந்தமிழை இசையோடு பாடவல்லவரின் அடி சேர்ந்தால் ஞானம் கைகூடும் என உறுதி கூறுகின்றார்.

**சம்பந்தரும் ஞானமும்**

சம்பந்தர் தம்மை உளப்படுத்தி ஞானத்தை வெளிப்படுத்தும் பாடல்கள் பலவுள. தோணியுரத் தலைவனாகப் புகழ்பெற்ற ஞானம் நிறைந்த சம்பந்தனின் இனிய உரைகளை வாயாரப் பாடவல்லார் வானுலகு ஆள்வர். (48.11).

வலிமை உடைய ஞானம் வல்லார், மருகல் பெருமானின் உயர் ஞானத்தை உணர்ந்து, அவன் திருவடியை உள்கி, இயல் ஞானசம்பந்தன் பாடலைப் பாட, இவ்வகன்ற உலகமெல்லாம் புகழ் பரந்து விளங்கும் (154.11)

அரிய ஞானம் வல்ல மறையோர் பெருஞானம் உடைய அழுந்தூர்ப் பெருமானைத் திருஞானசம்பந்தன் செந்தமிழ் கொண்டு உணர்ந்தால் அவர்கட்குப் பெருமை மிக்க ஞானம் கூடும். (156.11)

திருவையாற்று ஈசனை, புகலி மன்னவன்-மெய்ஞ்ஞானப் பூசுரன் உரைத்த தமிழால் ஏத்தவல்லார், அந்த ஈசன் திருவடிக்கு நேசமிக்கவராவர். (168.11)

ஞானம் உலவுகின்ற சிந்தையினால் திருநறையூர்ப் பெருமானின் அடிதொழுது, காழிப் பந்தன் தமிழால் அவனை நினைவாரை இவ்வுலகம் வழிபாடு செய்யும்; வானளவு புகழ் பெறுவர். (223.11)

முல்லைவாயில் இறைவனை, காழி ஞானமிகு பந்தன் ஒண் தீந்தமிழால் இசையோடு பாடவல்லவர்கள் அகல்வானம் ஆள்வர். (224.11)

ஞானசம்பந்தர் இவ்வாறு தம்மை ஞானத்துடன் தொடர்புபடுத்திப் பாடியுள்ள திறம் வியக்கத்தக்கது. மேலும், ''ஞானம் உணர்வான் காழி ஞானசம்பந்தன்'' (196.11) என்றும், ''குறைவில் ஞானம் மேவுகுளிர் பந்தன்'' (219.11) என்றும் கூறியிருப்பதும் நினைத்தற்குரியது.

சமணர்களின் ஞானத்தை அந்தர ஞானம் என்று கூறுகின்றார் சம்பந்தர்.

> **''வெந்துவர் மேனியினார் விரிகோவணம் நீத்தார் சொல்லும்**
> **அந்தர ஞானம் எல்லாம் அவை ஓர்பொருள் என்னேல்''**
> (104-10)

என்று அறிவுறுத்துகின்றார். அந்தரஞானம் என்பது தடுமாற்றமுடைய ஞானம் எனப் பொருள்படும்.

**வினை நீக்கம்**

இறைவன் திருவடியை ஞானமாக நினைப்பவரின் வினைகள் நீங்கும்.

> **''வேனல் வேளை விழித்திட்ட வெண்ணெய்ப் பெருமான் அடி**
> **ஞானமாக நினைவார் வினைஆயின நையுமே''** (144-1)

**"ஊனில் வெண்தலைக் கையுடையான் உயர்பாதமே**
**ஞானமாக நின்று ஏத்தவல்லார் வினைநாசமே"** (146-5)

ஞானம் கைவரப் பெறுவாரின் வினை நீங்கும் என்ற சம்பந்தரின் கருத்தினைச் சித்தாந்த சாத்திரங்கள் அழகுற எடுத்துக் கூறும்.

## ஞானத்தின் அடைமொழிகள்

சம்பந்தரின் பாடல்களில் ஞானம் என்ற சொல் பல்வேறு அடைகளைப் பெற்று வந்துள்ளன. அந்தரஞானம் (104-10) அருஞானம், உருஞானம், திருஞானம், பெருஞானம் (156-11) இசைஞானம் (138-11), இயல்ஞானம் (154-11), உயர்ஞானம் (154-11), குறைவில் ஞானம் (219-11), சாயடைந்த ஞானம் (48-11), தத்துவஞானம் (102-1), தமிழ்ஞானம் (18-11) மறைஞானம் (22-11) மெய்ஞ்ஞானம் (168-11), வயஞானம் (154-11) என ஆண்டுள்ளமை சம்பந்தரின் ஞானத்திறத்தினைக் குறிக்கின்றது.

## ஞானசம்பந்தம்

சம்பந்தர் குழந்தையாய் இருந்தபோதே அம்மையால் ஞானப்பால் ஊட்டப்பெற்று ஞானசம்பந்தம் பெற்றவர்.

**"போதையார் பொற்கிண்ணத்து அடிசில் பொல்லாதெனத்**
**தாதையார் முனிவுறத் தானெனை யாண்டவன்**
**காதையார் குழையினன் கழுமல வளநகர்ப்**
**பேதையா ளவளொடும் பெருந்தகை இருந்ததே"** (282-2)

எனத் தம் அனுபவத்தைப் பாடுவர். சம்பந்தர் ஞானநிலையில் இருந்து சிவ வடிவில் தம்மை இழந்து சிவத்தின் வடிவழகைப் பாடுகின்றார். இறைவனை அடையும் ஞான பக்குவத்தைக் குழந்தைப் பருவத்திலேயே பெற்று விடுகின்றார். சம்பந்தர் பாடல்கள் அவர்தம் ஞான அனுபவப் பாடல்களாகும்.

சம்பந்தருக்குக் கிரியை நெறி எனக் கூறுவர். எனினும் சமயக் குரவர் நால்வரும் முதிர்ந்த ஞானநெறியில் நின்ற செம்புலச் செல்வர்கள் என்பதே சேக்கிழார் முதலிய அருளாசிரியர்களின் துணிவு. இவ்வகையில், ஞான அனுபவம் பெற்று ஞானத்தால் பாடிய பாடல்களே ஞானசம்பந்தர் பாடல்கள் எனத் துணியலாம்.

# 51. சம்பந்தரும் பழந்தமிழ் இலக்கியங்களும்

வயி. நாராயணசாமி, புதுச்சேரி.

தமிழ்மொழியில் எழுதப்பெற்றுள்ள நூல்களில் சைவ சமயத்தைப் பறைசாற்றும் புதையலாக நாம் பன்னிரு திருமுறைகளைக் கொண்டிருக்கின்றோம். திருஞானசம்பந்தர் எழுதிய தேவாரம் முதல் திருமுறையாகவும், சேக்கிழார் பெருமான் எழுதியருளிய திருத்தொண்டர்புராணம் பன்னிரெண்டாவது திருமுறையாகவும் தொகுக்கப் பெற்றுள்ளமையைத் தமிழறிஞர்கள் அறிவர். தமிழ் கூறும் நல்லுலகில் இச்சைவ சமயத்தைச் சாற்றித் திருமுறைகள் நமக்குக் கிடைக்கப் பேறு பெற்றிருக்கின்றோம் என்பதில் தமிழர் ஒவ்வொருவரும் பெருமை கொள்ளலாம்.

திருநாரையூர் என்ற திருத்தலத்தில் தோன்றிய நம்பியாண்டார் நம்பி என்பவர் அவ்வூரில் அருள்பாலிக்கும் பொல்லாப் பிள்ளையாரை வழிபட்டு வந்தவர். அக்காலத்தில் சோழ நாட்டை ஆண்டு வந்த முதலாம் இராஜ இராஜ சோழன் திருநாரையூரில் எழுந்தருளியுள்ள பொல்லாப் பிள்ளையாரை வழிபட வந்த போது, பிள்ளையாரின் அருள்பெற்ற நம்பியையும் வணங்கி, 'சமயக்குரவர் மூவர் அருளிச் செய்த தேவாரங்கள் இவ்வுலகில் நிலைபெறத் தாங்கள் ஆவண செய்து உதவவேண்டும்' எனக் கூறவும் நம்பியாண்டார் நம்பி பொல்லாப் பிள்ளையாரை வேண்டிக்கொள்ள, தில்லையில் வீற்றிருக்கும் சிற்றம்பலத்தானின் அருகில் அமைந்துள்ள அறையில் தேவார ஆசிரியர்கள் மூவரும் அருளியுள்ள திருமுறைகள் பூட்டப்பட்டுள்ளன என்று அறிவுறுத்தியதாகவும், ஆதலின் அச்சோழ மன்னனுடன் நம்பியாண்டார் நம்பி தில்லைக்குச் சென்று கூத்தபிரானை வணங்கி, அறைதிறக்கப்பெற்று அங்கு செல் அரிக்காது எஞ்சியுள்ள ஏடுகளை எடுத்தார். திருஞானசம்பந்தர் பாடியருளியவற்றை முதலில் வைத்து மூன்று திருமுறைகளாகவும், திருநாவுக்கரசர் அருளிச் செய்தனவற்றை நான்கு, ஐந்து, ஆறு என மூன்று திருமுறைகளாகவும், சுந்தரப் பெருமான் அருளியவற்றை ஏழாம் திருமுறையாகவும் வகுத்துத் தொகுத்தருளினார் நம்பியாண்டார் நம்பி என்று வரலாறு எடுத்துரைக்கின்றது.

திருமுறை என்றால் என்ன? 'திரு'என்றால் சிவனைக் குறிப்பதாகவும் 'முறை' என்றால் நெறிப்படுத்தி அல்லது வழிப்படுத்திக்

கூறுவது என்ற பொருளில் இவை 'திருமுறை' என்று பெயர்பெற்றது என்று அறிஞர் பலரும் கூறுவர். திருமுறை என்னும் சொல், மூன்றாம் குலோத்துங்கன் காலத்துக் கல்வெட்டுகளில்தான் முதன் முதலில் தோன்றியது என்று ஆராய்ச்சியாளர் கூறுவர். இக்காலம் கி.பி.1185. அதற்கு முன்பு, இம் மூவர் முதலிகள் அருளியவை 'திருப்பதியம்' அல்லது 'திருப்பதிகம்' என்றே குறிக்கப்பட்டு வந்துள்ளன. திருமுறை என்னும் இப்பெயர் மூவர் திருப்பதிகங்களுக்கு மட்டுமே முதலில் வழங்கியதாகவும் கூறுவர். பத்துப் பாடல்களைக் கொண்ட பனுவல் 'பதிகம்' என்று அழைக்கப்பெறும். 'தே' என்றால் தெய்வம் அல்லது இறைவன்; வாரம் என்றால் இசை அமைப்புடன் பாடப்பெறுவது. ஆதலின் தேவாரம் என்னும் தொடர் இறைவனிடத்து இசையுடன் பாடப்பெற்ற பாக்கள் எனப் பொருள் கொள்ளலாம். பெரும்பாலான தேவாரப் பதிகங்கள் பத்துப் பாடல்களைக் கொண்டிருப்பதால், இவை 'பதிகங்கள்' எனப் பெயர் பெற்றன. பன்னிரு திருமுறைகளும் இறைமையையும் தமிழ் மொழியையும் தமிழர்கள் ஒன்றாகவே கருதினர் என்பதற்குச் சான்றாக விளங்குகின்றன. இவ்வாறு இவை அனைத்தும் 'தெய்வத் தமிழ்'ப் பாடல்களாக விளங்குவதால் இவற்றைத் 'திருப்பதிகம்' என்றும் கூறுகின்றோம். தமது முதல் பதிகத்தின் திருக்கடைக்காப்பில் திருமுறையைத் 'திருநெறித் தமிழ்' என்று ஞானசம்பந்தப் பெருமான் அருளிச் செய்துள்ளமையை நாம் இங்கு நினைவில் கொள்ளலாம். 'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு' என்று திருவள்ளுவர் திருக்குறளை இயற்றும் பொழுதே கூறுவதிலிருந்தும் நம் மூதாதையர் இறைமைத் தன்மையையும் தமிழையும் பிரித்துப் பார்க்க வில்லை என்று உணர முடிகின்றது.

இன்றும் 'திருமுறை' சைவர்களின் வேதமாக இருந்து வருகிறது. திருமுறையின் நுண்புலத்தினை இறையருள் பெற்றவர்களே முழுமை யாக உணரமுடியும். இறைத்தன்மையில் பொதிந்துள்ள உண்மைகளை நம்மைப்போன்ற சாதாரண ஆன்மாக்களும் அறிய வேண்டும் என்பதனால்தான், ஞானசம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் முதலியவர்களை இப்பூவுலகில் அவதரிக்கச் செய்து, அவர்கள் வாயிலாக அவற்றை 'எழுதுமறை'களாக இறைவன் அருளிச் செய்துள்ளான் என்பதனை நாம் ஆணித்தரமாகக் கூறலாம். ஆதலின் திருமுறைப் பாடல்கள் அனைத்தும் இறைவன் வாக்கே எனவும் அவைதான் நமக்கு 'அருள்வாக்கு' எனவும் நாம் உணரலாம். இதனை 'எனதுரை தனதுரையாக' என்று கூறும் ஞானசம்பந்தரின் வாக்கும் மெய்ப்படுத்துகின்றது.

நமது பன்னிரு திருமுறையின் முதற்பாடல் 'தோடு' என்னும் சொல்லுடன் தொடங்கி, இறுதிப்பாடலில் 'உலகெலாம்' என்னும் சொல்லுடன் முடிவடைவதை நோக்குங்கால், 'தோடு' என்பதின் முதல் எழுத்தான 'ஓ' என்னும் எழுத்தும்,'உலகெலாம்' என்ற சொல்லின் ஈற்றெழுத்தான 'ம்' என்ற எழுத்துடன் சேரும்பொழுது 'ஓம்' என்ற வார்த்தைதான் பன்னிரு திருமறைகளின் மூலமாக நாம் பெற்றிருக்கும் 'வேதம்' என்பதை நாம் உணர்ந்து கொள்ளலாம். ''மந்திர நல் மாமறை'' என்ற ஞானசம்பந்தரின் அருள்வாக்கும் இதற்குச் சான்றாக நமக்கு அமைந்துள்ளது.

சைவர்களுக்கே உரித்தான திருநீற்றின் பெருமைதனையும், திருவைந்தெழுத்தின் அருமையையும் நாம் பன்னிரு திருமுறைகளில் காணலாம். ஏழுவயதை நெருங்கியபோது, பல ஊர்களுக்கும் சென்று வழிபட்ட ஞானசம்பந்தர் சீர்காழியை அடைந்து தோணியப்பரை வணங்கிப் பின் தம் இல்லத்தை அடைய, அவருடைய தாயார் இறைவர் திருநீற்றுக் காப்பு ஏந்தி முன் சென்று சாத்தி, இறைஞ்சி ஏத்தத் தாமும் தொழுது முறைமையாக அங்கு குழுமியிருந்த அடியவர்களுக்கெல்லாம் அருள்செய்து, சம்பந்தர் தம் இல்லத்தினுள்ளே சென்றார். ஏழுவயது நிரம்பியமையால் அவருக்குப் பெற்றோர் உபநயனம் செய்ய விரும்பினர். ஒரு பிறப்பும் எய்தாத ஞானசம்பந்தர் அப்பொழுது 'வருதிறத்தின் மறை நான்கும் தந்தோம்' எனக் கூறியோருக்கு 'எல்லா மந்திரங்களும் தோன்றுவதற்குக் காரணமாவது திருவைந்தெழுத்தே ஆகும்' எனக் கூறித் திருவைந்தெழுத்துத் திருப்பதிகத்தை அருளிச் செய்தார். எடுத்துக்காட்டாக.....

**''கொங்கு அலர் மன்மதன் வாளிஐந்து அகத்து**
**அங்கு உள பூதமும் அஞ்ச ஐம்பொழில்**
**தங்கு அரவின் படம் அஞ்சு தம்உடை**
**அம் கையில் ஐவிரல் அஞ்சு எழுத்துமே.**

**தும்மல் இருமல் தொடர்ந்த போழ்தினும்**
**வெம்மை நரகம் விளைந்த போழ்தினும்**
**இம்மை வினை அடர்த்து எய்தும் போழ்தினும்**
**அம்மையினும் துணை அஞ்சு எழுத்துமே''.**

எனக் கூறும் ஞானசம்பந்தரின் திருப்பதிகத்திலிருந்து நாம் 'நமச்சிவாய' என்ற ஐந்தெழுத்தின் வாயிலாக இறைவனைத் தொழுவதன் மூலம் எல்லா நோய்களும் நீங்கி மக்கள் வாழ வழிவகுக்கின்றது என்ற பேருண்மையை இப்பகுதி விளக்குவது புலப்படுகின்றது. சைவர்கள் என்றும் எந் நேரமும் நினைவில் கொண்டிருக்க வேண்டிய திருவைந்தெழுத்தின் பெருமையைப் பெரிதும் சிறப்பாகத் திருமுறைகள் முழக்குகின்றன.

தேவாரத் திருப்பதிகங்கள் பலவும் நம் தமிழக அரசர்களின் காலமான கி.பி.எட்டு மற்றும் ஒன்பதாம் நூற்றாண்டுகளில் தொகுக்கப் பெற்றுத் திருக்கோயில்களில் ஆங்காங்கே ஓதப்பெற்று வந்தன என அறிகின்றோம். ஞானசம்பந்தர் தோன்றிய காலத்திலும் அதற்கு முன்னுமான சில நூற்றாண்டுகளில் பழந்தமிழ் இலக்கியங்கள் எவ்வாறு இடம்பெற்றன என்பனவற்றைச் சிறிது ஆராய்வோம். சரித்திர ஆசிரியர்கள் பல்லவர் காலமாகிய கி.பி. 600 - 850ல் தான் சமயப் போர் நிகழ்ந்தது எனக் கூறுவர்.

களப்பிரர் காலத்தில் செல்வாக்குப் பெற்றிருந்த பௌத்தம் கி.பி. 5ஆம் நூற்றாண்டில் வீழத் தலைப்பட்டது. அதே காலத்தில் சமணம் வளர்ச்சி பெற்றது. அகச் சமயங்களாகிய சைவம் கி.பி ஏழாம் நூற்றாண்டு முதலும் வைணவம் கி.பி எட்டாம் நூற்றாண்டிலிருந்தும் செழித்தன. ஒருபுறம் சைவமும் வைணவமும், மறுபுறம் பௌத்தமும் சமணமும் அணிவகுத்துச் சமயப் போர் நிகழ்த்தின.

தம் ஒன்பதாம் பதிகம்தோறும் திருமாலைக் குறைத்து மதிப்பிடும் சம்பந்தர் தேவாரமும், 'அறியார் சமணர் அயர்த்தார் பௌத்தர் சிறியார் சிவப்பட்டார், மாதவனை ஏத்தாதார் ஈனவரே' என்னும் திருமழிசைப் பிரானின் பாசுரமும், சமயக் கொடுமைகள் பற்றிய செவிவழிச் செய்திகளும், சமணர் கழுவேறிய கதையும் பிறவும் பல்லவர் ஆட்சியின் முற்பகுதியில் சமயப்போராட்டத்தை உறுதிப் படுத்துகின்றன. சமயப் போரில் சைவமும் வைணவமும் வெற்றி பெறவே, பௌத்தமும் சமணமும் ஒடுங்கின என்பதனையும் இதனால் அறிகிறோம்.

அரசாங்க ஆதரவை மிகுதியாகத் தமிழ் பெறவில்லை என்ற போதிலும், சைவ நாயன்மார்களும், வைணவ ஆழ்வார்களும் பண்சுமந்த பாடல்களைப் பாடிப் பக்தி இலக்கியத்தை உருவாக்கினர். இத்தகைய உள்ளமுருக்கும் பக்திப் பனுவல்களைப் பிறமொழிகளில் காணுதல் அரிது என்பர்.

சைவ சமயக் குரவர்களாகிய திருநாவுக்கரசரும் திருஞான சம்பந்தரும் வாழ்ந்த காலமாகிய கி.பி.ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த அப்பூதி அடிகள், முருகநாயனார், சிறுத்தொண்டர், திருநீலநக்கர், குலச்சிறையார், மங்கையர்க்கரசியார், நெடுமாறர், திருநீலக்கண்ட யாழ்ப்பாணர் முதலியோரும், பூசலாரும், சுந்தரர் வாழ்ந்த எட்டாம் நூற்றாண்டில் இருந்த கோட்புலிநாயனார், நரசிங்க முனையரையர், சோமாசிமாறர், கலிக்காமர், சடையனார், இசைஞானியார் முதலிய நாயன்மார்களும் சைவத்தைப் பேணிக் காத்ததும் - வைணவ

ஆழ்வார்களாகிய பொய்கையாழ்வார், பேயாழ்வார், பூதத்தாழ்வார், திருமழிசை ஆழ்வார், நம்மாழ்வார், மதுரகவி ஆழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கையாழ்வார், தொண்டரடிப்பொடி ஆழ்வார் முதலியோர் வைணவத்தைப் போற்றி வளர்த்ததும் பல்லவர் காலத்தில்தான்.

தமிழிலக்கிய வரலாற்றிலே சோழர்காலம் ஒரு தனிச் சிறப்புடைய காலமாகும். சங்க இலக்கிய மரபுகளையும் அதற்குப்பின் இடம் பெற்ற வேதநெறிகளையும், தன் காலத்திய முறைகளையும் தழுவிக்கொண்டு ஒரு புதுநெறி கண்டு, பிற்காலத்தில் சாத்திரங்களுக்கும் புராணங்களுக்கும் சிற்றிலக்கியங்களுக்கும் உரைநடை வளர்ச்சிக்கும் வழிவகுத்துச் சிங்கநோக்காகத் தனக்கு முன்னும் பின்னும் உள்ள காலத்தை இணைத்து இலக்கிய வளர்ச்சியைத் தொடருமாறு செய்த காலம் சோழர் காலமாகும். சோழர் கால இலக்கியவீச்சு, தனக்கு முன்னே 9 நூற்றாண்டுகளையும் பின்னே 4 நூற்றாண்டுகளையும் அடக்கிக் கொண்டிருக்கும் ஒரு விரிவான காலமாகும்.

சோழர்கால இலக்கியம், சமயநோக்கு, மொழிநோக்கு, இலக்கிய நோக்கு ஆகிய மூவகை நோக்கினைக் கொண்டது. தோத்திரப்பாடல் களின் தொகுப்பும், முறையான சாத்திரநூல் தோற்றமும் சைவ, வைணவ, சமண, பௌத்தக் கொள்கைகளை வற்புறுத்த எழுந்த காப்பியங்களும், இறைவன் இயற்றிய அற்புதங்களைத் தொகுத்துரைக்கும் புராணங் களும், தமிழும் வடமொழியும் கலந்து எழுதப்பட்ட மணிப்பிரவாளமும் சமயநோக்கில் எழுந்தவையே! சோழப் பேராசர்களின் வீரத்தையும், வெற்றியையும் ஈரத்தையும் கொடையையும் மற்றும் அவர்தம் சிறப்பியல்புகளையும் தெரிவிக்கும் சிற்றிலக்கியங்கள், மெய்க்கீர்த்திகள், கல்வெட்டுகள் முதலியன வரலாற்று நோக்கமும் இலக்கியச் செவ்வியும் கொண்டவை. ஐந்தாக விரிந்த பல்வகை இலக்கண நூல்களும், நிகண்டு களும், மொழி மரபைப் பேணியதுடன் புதியவற்றையும் போற்றிக் கொள்ளும் மொழிநோக்கம் கொண்டவை. தொல்காப்பியத்திற்கும் பழைய சங்க இலக்கியங்களுக்கும் உரை கண்டமை, உரைநடையின் பெருகிய வழக்கிற்கு வித்திடுவதற்கும், அரிய இலக்கியக் கருவூலங்களை நிகழ்காலத்தினர்க்கு உரியவாறு அறிமுகப்படுத்துவதற்கும், அவற்றைக் காத்து வருங்காலத்தினரிடம் ஒப்படைப்பதற்கும் மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள் எனலாம். இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் ஆகிய முக்கூறுகளும் இயல்பாக வளர்வதற்குச் சோழர்காலம் வாய்ப்பளித்தது.

ஆழ்வார்கள் அருளிச்செய்த பாடல்களை எல்லாம் நாலாயிர திவ்வியப் பிரபந்தமாக நாதமுனிகள் தொகுத்தது இக்காலத்தில்தான்,

சோழர்காலம் பெருங்காப்பியங்களையும், சிறுகாப்பியங்களையும் கண்டது. இக்காலத்தில் எழுந்த பேரிலக்கியங்கள் எல்லாம் சமயம் சார்ந்தவையே. இக்காப்பியங்களில் பெரும்பாலானவை பிறமொழிக் கதைகளையே தழுவல்களாகக் கொண்டன. பெருங்காப்பியங்களில் சிலம்பும் மேகலையும் மட்டுமே தமிழ்க்கதைகளைக் கொண்டவை. திருத்தக்கதேவரால் இயற்றப்பட்ட சமணக் காப்பியமாகிய சீவக சிந்தாமணியும், முற்றுமாகக் கிடைக்காமல் சிலபாடல்களே உள்ள வளையாபதியும், பௌத்தக் காப்பியமாகிய குண்டலகேசியும், ஐஞ்சிறு காப்பியங்களாகிய உதயணகுமாரகாவியம், நாககுமாரகாவியம், யசோதரகாவியம், சூளாமணி, நீலகேசி முதலியவையும், வாமனாச் சாரியாரால் எழுதப்பட்ட சமணக் காப்பியமாகிய மேருமந்திர புராணமும், நீலகேசி உரையில் குறிப்பிடப்பெற்ற விம்பசார கதையாகிய பௌத்தநூலும், முருகக்கடவுள் சூரபதுமன் மேல்பெற்ற வெற்றியைச் சிறப்பித்துக் கச்சியப்ப சிவாசாரியார் எழுதிய கந்தபுராணமும், சிவபெருமானின் திருவிளையாடல்களை விளக்கும் பெரும்பற்றப் புலியூர் நம்பியின் திருவிளையாடற் புராணமும், தொண்டர் வரலாறு களைத் தொகுத்துச் சேக்கிழார் இயற்றிய சைவப்பெரும்காப்பிய மாகிய பெரியபுராணமும், இராமாவதாரத்தின் சிறப்பைக் கூறும் வைணவப் பெருங்காப்பியமாகிய கம்பர் எழுதிய இராமாயணமும் காப்பியங்கள் வரிசையில் குறிப்பிடத்தக்கவை.

திருமுறைகள் தொகுக்கப் பெற்ற பின்னர் அவற்றின் அடிப்படை யிலும், வேதாகம நெறிகளின் கூறுகளைக் கொண்டும் சைவசித்தாந்த சாத்திர நூல்கள் முறையாக எழுதப்பட்ட காலமும் சோழர் காலமே! மெய்கண்டதேவர் எழுதிய மெய்கண்ட சாத்திரமாகிய சிவஞான போதமும், அருள்நந்திசிவாசாரியாரால் எழுதப்பெற்று, சைவசமயமே சிறந்தது என்பதை விரிவாகத் தருக்கமுறையில் நிலை நாட்டும் சிவஞானசித்தியாரும், பின்னர் எழுந்த சைவ நூல்களுக்கெல்லாம் அடிப்படையாயின.

சித்துக்கள் பல புரிந்த கருவூர்ச்சித்தர், பட்டினத்தடிகள் முதலிய வர்களும் தமிழ்நாட்டுப் பதினெண் சித்தர்களில் பலரும் வாழ்ந்தது சோழர் காலத்தில்தான். சோழர் காலத்தில் இலக்கண நூல்கள் பல்கின. தொல்காப்பியத்தில் எழுத்து, சொல், பொருள் என்னும் மூன்று பகுதிகளைப் பேசும் யாப்பும் அணியும் பொருளதிகாரத்துள்ளேயே அடங்கும். ஆனால் இக்காலத்தில் யாப்புக்கும் அணிக்கும் தனித்தனியே இலக்கண நூல்கள் எழுந்தன. தொல்காப்பிய மரபுகளும் வடமொழி இலக்கண இயைபும் கலந்து இலக்கணங்கள் தோன்றின.

சொல்லின் பொருளை விளக்கிக்கூறும் அகராதிகளுக்குப் பழங்காலத்தில் நிகண்டுகள் என்று பெயர். சேந்தன் என்னும்

அரசனின் விருப்பத்திற்கேற்பத் திவாகர முனிவரால் எழுதப்பட்ட சேந்தன் திவாகரமும், திவாகரமுனிவரின் மகனாகிய பிங்கல முனிவரால் செய்யப்பட்ட பிங்கல நிகண்டும் இக்காலத்தில் எழுந்தவையே!

காலத்துக்கும் கடலுக்கும் தம்பி நமக்குக் கிடைத்திருக்கும் நூல்கள் இடைசங்க நூலாகிய தொல்காப்பியம், கடைச்சங்க நூலாகிய பத்துப் பாட்டு, எட்டுத்தொகை, திருக்குறள், சிலம்பு, மேகலை, சங்க மருவிய நூல்களாகிய பதினெண்கீழ்க்கணக்கு போன்றவையாகும். இவற்றில் தொல்காப்பியம் வெறும் இலக்கணநூல் மட்டுமன்று; மொழியியல், இலக்கியவியல், வாழ்வியல், உலகவியல், உயிரியல், உளவியல் முதலாய பல்துறைகளும் கொண்டொளிரும் தனிப்பெரும் முதல்நூலாகும். இவ்வாறான, சோழர் காலத்துக்கு முன்னே தோன்றிய பழைய தமிழ் நூல்களுக்கு உரை எழுதும் முயற்சியையும் உரையாசிரியர்கள் இக்காலத்தில்தான் மேற்கொண்டனர். பெரும்பாலோர் வடமொழி மரபினைப் பற்றியே உரை கூறினர். தொல்காப்பியத்திற்கு உரை கண்டவர்கள், உரையாசிரியர் என்று அழைக்கப் பெறும் இளம்பூரணர், பேராசிரியர், தெய்வச்சிலையார், கல்லாடர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் முதலியோர் ஆவர். இளம்பூரணர் நச்சினார்க்கினியர் இருவர் மட்டுமே தொல்காப்பியம் முழுவதற்கும் உரைகண்டவர்கள், சிலப்பதிகாரத் திற்கு) உரை கண்ட அடியார்க்கு நல்லாரும், திருக்குறளுக்கு உரை செய்த பலருள்ளும் தலைமை கொள்ளும் பரிமேலழகரும், சங்க இலக்கியங்கள் பலவற்றிற்கும் சிந்தாமணிக்கும் உரை செய்த நச்சினார்க்கினியரும் இலக்கிய உரையாசிரியர்களுள் குறிப்பிடத் தக்கவராவர். இவ்வுரை யாசிரியர்கள் உரையெழுதியதன் மூலம் இலக்கிய உரையாசிரியர்களுள் குறிப்பிடத்தக்கவராவர். இவ்வுரையாசிரியர்கள் உரையெழுதியதன் மூலம் பழைய இலக்கியங்களைப் பாதுகாத்துத் தந்துள்ளனர். விளங்காத பகுதிகளுக்கு விளக்கம் கொடுத்துள்ளனர். உரைநடையை வழக்கில் மிகுதியாகக் கொணருவதற்கு முயன்றிருக்கின்றனர் என்பதும் தெரியவருகின்றது.

இலக்கியத்தின் பலதுறை வளர்ச்சி இயற்றமிழையும், திருமுறை களின் பண்ணடைவு, பாசுரங்களுக்குப் பண்வகுத்தமை முதலியன இசைத்தமிழையும், இராசராசநாடகம் போன்றவை நாடகத் தமிழையும் போற்றின. எனவே சோழர்கால இலக்கியம், பழமையைப் போற்றியது; புதுமையைத் தழுவியது; பிற்கால இலக்கியங்களுக்கு வழிவகுத்தது. மறுமலர்ச்சி நிறைந்த ஒரு பொற்காலத்தைக் கண்டது.

இவ்வாறெல்லாம் செயல்படுவதற்கு வழிகூறும் போக்கில் அமைந்தது நமது சைவக்குரவரான ஞானசம்பந்தரின் தேவாரமே என நாம் பெருமையாகக் கூறலாம்.

# 52. தமிழ்ஞான சம்பந்தர்

ம. பகவதியப்பன், நாகர்கோவில்.

ஆதிசங்கரரும், திருஞானசம்பந்தரும், சுவாமி விவேகானந்தரும், பராசக்தியின் அருள் சக்தியால் ஆட்கொள்ளப்பட்டவர்கள். மூவரும், அறிவு - உணர்வு பூர்வமாக சமய - சமுதாய - நாடு- மொழி, மனித இனம் மீது பற்றுக்கொண்டவர்கள். புரட்சிகரமான சீர்திருத்த முன்னேற்ற கருத்துக்களை மக்களுக்கு எடுத்துக் காட்டித் தங்களுடைய பேச்சுத் திறனால் - மந்திரக் கவிதைகளால் இறைபக்தி, பண்பாடு, நாகரீகம், ஆன்மீகம் வளர்த்தவர்கள். தேசபக்தி, கடமை உணர்வு, சமய உண்மைகளைப் போதித்த செயல் வீரர்கள் - தத்துவ ஞானிகள், ஆன்மீக மகான்கள், இவர்களை அன்று முதல் என்றென்றும் நாடு போற்றும் வணங்கும் என்பது நாம் கண்ட உண்மையாகும்.

கருணைக்குப் புத்தர், சந்தக் கவிதைகளுக்கு அருணகிரிநாதர், இன்பயியல் கவிதைகளுக்கு அகநானூற்றுப் புலவர்கள், வீர வரலாற்றிற்குப் புறநானூற்று ஆசிரியர்கள், தொண்டு நெறிக்குத் திருநாவுக்கரசர், ஞானத்திற்கு மாணிக்கவாசகர், ஆன்மீகப் பக்திப் பனுவலுக்குச் சேக்கிழார், சமயப் பொது நோக்கிற்குத் தாயுமானவர், உலக அறநெறிக்குத் திருவள்ளுவர், இரக்கவுணர்வுக்கு இராமலிங்க அடிகளார். தத்துவ ஞானத்திற்குத் திருமூலர், தோழமை நெறிக்குச் சுந்தரர், கற்பனைக்குக் கம்பன் என்று கூறுவது போல மிக்கெழுந்த தமிழ் பற்றும் இந்து சமயத்தை காலத்தால் காத்தருளிய அருளாளரும் ஞானியுமாக விளங்கியவர் திருஞானசம்பந்தர். வடமொழி ஆதிக்கத்திற்கு எதிராகத் தமிழ், தமிழன் என்று குரல் கொடுத்த மாமுனிவன். தமிழ் மக்களிடையே தமிழ் பற்றுக்கு முதல் முதலிற் வித்திட்டவர். தமிழர்களிடையே இனவுணர்வுகளைத் தட்டி எழுப்பியவர். தம்முடைய பதிகங்களில் ஏறத்தாழ ஐம்பது இடங்களில் தமிழ் என்றும் தமிழ்ஞான சம்பந்தர் என்றும் குறிப்பிடுகிறார். இவ்வாறு அவர்கள் வாழ்ந்த காலத்திற்கு முன்பும், வாழ்ந்த காலத்திலும் பின்பும் ஞானசம்பந்தர் போல வேறு ஒருவரும் இல்லை. ஆம்! அவர் கூற்றிலே இல்லை சிவபெருமான் கூற்றாகவே தமிழ்ஞான சம்பந்தர் எல்லாம் பாடினார் என்றால் அதை மறுப்பார் யாரும் இல்லை.

தமிழுணர்வு தலைதூக்கி எழுந்துள்ள இக்காலத்தில் எழுதினார் - சொன்னார் - வடமொழியாளருடைய சமய வழிபாட்டு அர்ச்சனைகள் - மற்றும் சடங்குகள் - நான்கு வேத உபநிடத தாக்கத்தினால் ஏற்பட்ட சூத்திரங்கள் பாகைகள் தந்திரங்கள் - மாந்திரீகங்கள் சைவ நெறிக்கு மாறுபட்ட தத்துவார்த்த வழிபாட்டு நெறிகள் எல்லாமே வடமொழி வாயிலாக ஓதிய காலத்தில் அல்லவா தமிழ் மறையைத் தந்த ஞானசம்பந்தர் தமிழால் இறைவனையும், மக்களையும் சந்தித்தும், துதித்தும், பேசியும் மகிழ்கிறார்.

தமிழ் தீண்டத்தகாத மொழி என்றும், கடவுளுக்குத் தமிழே தெரியாது என்றும் வடமொழியிலே மந்திரங்களை ஓதினால்தான் சிவபெருமானுக்குப் புரியும் என்றும் மக்களை அரசர்களை நம்ப வைத்து அம்மொழி வாயிலாகவே வழிபாடு சடங்குகள், திருமணம், புனித நீராட்டு, இறப்பு முதலிய அனைத்து ஆன்மீக காரியங்களுக்கு வடமொழியைப் பயன்படுத்துவதை முதன்முதலில் எதிர்த்து அதற்கு எதிராகச் சமயப் புரட்சியைச் செய்தவர்கள் திருஞானசம்பந்தர். தன்னை ஞானசம்பந்தன் என்று தனியாகக் கூறவில்லை. தமிழ்ஞான சம்பந்தன் என்றே கூறியுள்ள இவர்களுடைய மொழிப்பற்று இன்று தமிழர்களிடையே மிக மிகத் தேவையானதாகும்.

திருக்கோவில் வாசல்படி கூட நுழைய முடியாத தமிழுக்கு உரிய முதல் மரியாதை அளித்தவர் தமிழ்ஞான சம்பந்தர்தான்.

தமிழ்ஞானசம்பந்தர் தமிழ் பதிகங்களை ஓதினால் நீவிர் இன்ன இன்ன பலன்களைப் பெறுவீர்கள் என்று பதிகம் தோறும் அறுதியிட்டுக் கூறுகிறார் என்பதை எண்ணி முழு நம்பிக்கையும் அதன் மூலம் தன்னம்பிக்கையையும் பெறுவோம்.

தமிழ்நாட்டில் இருண்டகாலம் எனக் களப்பிரர் காலத்தைதான் கூறுவர். அந்தக் காலத்தில் தான் பிற மாநிலத்தார்கள் தமிழ் நாட்டில் புகுந்தனர். அரசியலில் கலந்தனர். அதிகாரம் படைத்தனர். மூவேந்தர்கள் முடியிழந்ததோடு தன்பலம் குன்றி ஒற்றுமையில்லாமல் சிதறுண்டு கிடந்தார்கள். அக்காலத்தில்தான் நடந்தே ஊர் ஊராக சென்று சைவ சமயத்தையும் தமிழ் மொழிப்பற்றையும் பரப்பி பின்பற்ற வைத்தவர் தான் ஞானசம்பந்தர். ''அர்ச்சனை தமிழ்பாட்டே'' என்ற ஈசன் வாக்கிற்கு ஏற்ப தமிழில் வழிபாட்டினைத் தொடங்கி வைத்த முதல் தீர்க்கதரிசி.

''யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவது யாங்கும் காணோம்'' என்று பாடிய பாரதியின் கூற்றிற்குச் சொற்றமிழால் இன்னிசையால் இறைவனைக் குறித்துப் பாடி நமக்களித்துள்ளார்.

பாரதி அதே பாடலில் ''கம்பனைப் போல் வள்ளுவனைப் போல் இளங்கோவைப் போல் பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை'' என்று கூறுவார்.

ஆம்! முத்தமிழுக்குக் கம்பனும், வள்ளுவனும் இளங்கோ ஆகிய மூவரும் அளப்பரிய படைப்பினைத் தந்து வான்புகழ் கொண்ட ஒப்பற்ற கவிஞர்கள். அவர்கள் அடி போற்றுவோம். அந்த ஒப்பற்ற மூவருங்கூட தன்னைத் தமிழ்ப் புலவன்-கவிஞன் என்று குறிப்பிட வில்லை. இந்தப் பாசுரத்தை ஓதினால் இன்ன இன்ன பலன் பெறுவீர்கள் என்று அறுதியிட்டுச் செம்மாந்து உறுதியளிக்க வில்லை. இன்று வரை ஞானசம்பந்தருடைய பதிகங்களை முறையாக ஓதி பயன்பெற்றோர் ஆயிரம் ஆயிரம் உண்டு என்பதைச் சைவ உலகம் நன்கறியும். அவருடைய தமிழ் பற்றினைப் போற்றுவோம். அந்நிலையை நாம் பெறவும் ஆக்க ரீதியில் செயல் வடிவம் கொடுக்கக் கடமைப் பட்டிருக்கிறோம் என்பதை ஒவ்வொரு தமிழனும் உணர வேண்டும்.

ஆம்! ''பற்று அற்றான்'' பற்றினை பற்றது தமிழ்ப் பற்றினைப் பற்றிய தமிழ் - சைவ சமயப் பாதுகாவலர். தமிழ்நாடு முழுவதும் நடந்தே சென்று எது உண்மை சமயம் என்று வாதிட்டு அதில் வெற்றி பெற்றுப் பிறவா யாக்கைப் பெரியோனாகிய சிவனே என்றும் எல்லோரும் சேர்ந்து தமிழ் வழிபாடு நடத்தினால் தமிழ் சமுதாயம் வாழும், தமிழ் வளரும், தமிழ் கோலோச்சும் என்றார். தமிழ் சமுதாயப் புரட்சியாளர்தான் தமிழ்ஞானசம்பந்தர் என்ற திருஞான சம்பந்தரே. ''தமிழ் என் உயிர்க்கு நேர்'' என்று பாட அடிகோலியவர். வானமளந்தது அனைத்தும் அளந்திடும் வண்டமிழ் மொழி என்று பாடிய கவிஞன் கூற்றினை வானவர்க்கே அறிவித்து தமிழ்த் தொண்டர் சைவ சமயத்தின் சொல்லேர் உழவர்தான் தமிழ்ஞான சம்பந்தர் என்பதை விட பிறசமய் தலைவரோடு வாதிட்டுச் சைவ சமயத்தின் மேன்மையை உலகிற்கு அறிவித்து முதன்மை பெற செய்த வில்லேர் உழவராகவே விளங்குகிறார் என்றால் அது மிகையாகாது.

1300 ஆண்டுகளுக்கு முன்பு வேதியர் குலத்தில் தோன்றியவர் தான் ஞானசம்பந்தர். தாழ்ந்த குலத்தில் பிறந்த திருநீலகண்ட நாயனாரைத் தம்முடன் பிரியா சீடராகக் கொண்டு ஆன்மீக தொண்டாற்றி வந்தார் என்றால் அவருடைய சமுதாய சமத்துவக் கோட்பாட்டினை நாம் பெரிதும் போற்றி அவர் வழியில் நாம் இயங்க வேண்டும். உயர்சாதி மக்களாம் அந்தணர் வாழும் பகுதியில் நுழைய முடியாத திருநீலகண்டர் ஞானசம்பந்தருடன் உடனுறை சீடராக விளங்கினார் என்றால் தமிழ் நாட்டில் தீண்டாமையை எதிர்த்து

போராடிய முதன்மையானவர்தான் ஞானசம்பந்தர்தான். ஆம் இவர் ஒரு சமுதாய சீர்திருத்தக்காரர். எண்ணமும் செயலும் ஒன்றென வாழ்ந்த ஒப்பற்ற சமுதாயப் புரட்சியாளர்.

ஞானசம்பந்தர் வாழ்ந்த காலத்தில் வான் பொய்த்தது திருவீழி மிழலையில் பஞ்சம் ஏற்பட்டது. மக்கள் பசியால் வாடினார்கள். இதனை கண்ணுற்ற ஞானசம்பந்தர் தன்னுடைய அருள் ஞானத்தால் சிவபெருமானின் தன்னருளால் படிக்காசு பெற்று மக்களுக்கு உணவளித்து பசிப் பிணி போக்கும் வழிகாண முழுமையாக ஈடுபட்டார்.

அத்துடன் நில்லாது மக்களுக்கு ஏற்பட்ட நோய் பிணிகளை நீக்கத் தன் அருள் சக்தியால் கசிந்துருகிப் பதிகம் பாடிப் பிணிகளை நீக்கியவர்.

ஆம்! முதலில் பசிப்பிணி மருத்துவராகச் சமுதாய நற்றொண்டாற்றிய ஆளுடை ஞானசம்பந்தராவர். மக்களுடைய நோய்ப் பிணிகளை அகற்றிய நோய் நீக்கும் மருத்துவராக விளங்கினார் என்றால் அவர் தம் தொண்டின் சிறப்பினை தமிழ்கூறும் நல்லுலகம் என்றும் மறவாது நினைவு கூரும்.

திருஞானசம்பந்தர் மூவரில் முதல்வராக விளங்குகிறார். வடலூர் வள்ளல் பெருமான் தமிழ்ஞான சம்பந்தரைத் தம் உயிர் குருவாக மதித்துப் போற்றுகிறார். அருணகிரிநாதரும் அவ்வாறே போற்றுகிறார், வணங்குகிறார். பன்னிரு திருமுறை ஆசாரியர்களும் சாத்திரங்களை இயற்றிய தத்துவ ஞானிகளும் திருஞானசம்பந்தரைப் பெரிதும் மதித்துப் போற்றிப் பாடினார்கள் என்பதைக் கவனிக்க வேண்டும்.

**"வாழ்க அந்தணர், வானவர் ஆன்இனம்!**
**வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக!**
**ஆழ்க தீயது! எல்லாம் அரன் நாமமே**
**சூழ்க வையகமும் துயர் தீர்கவே"**

வாழ்க என்றே முதற்கண் திருப்பாசுரம் தொடங்குவதால் அருள்ஞான சம்பந்தரின் கருணை உள்ளத்தினை அறிய முடிகிறது. வேள்விக்குரிய அந்தணர்களையும் பஞ்சகவியம் தரும் 'ஆ' இனங்களையும் சேர்ந்து வளர்ந்து பெருக! வாழ்க! என மனமார வாழ்த்துவதோடு விண்ணின்று தண்புனல் பெய்து நாடு செழிக்கட்டும். வேந்தனும் அதனால் நல்லாட்சி புரிந்து செங்கோல் ஓங்கட்டும். தீயவை ஆழ்க என்பன பொதுவாக தீயவை மண்மூடி போகட்டும். கண்மூடி வேத சிவாகமங்களுக்கு புறம்பான தீய அயல் நெறி என்று பொருள் கொண்டாலும் தவறு இல்லை. சிவபெருமான் திருநாமம் உலகமெல்லாம் சூழட்டும், அந்த

இறைநாமம் ஓங்கட்டும், பரவி நிலைக்கட்டும், அதன் பயனாக உலக துயர் நீங்கட்டும் என்று வாழ்த்துகிறார்.

அந்தணர், முனிவர், வானவர், ஆனினம், மலை, மழை, உலகு என்றும் ஆறுவகை பொருட்களையும் முறையாக வாழ்த்தும் தமிழ் மரபினையும் இலக்கணத்தையும் பெரிதும் மதித்துள்ள பாங்கினை எண்ணி மகிழ வேண்டும்.

**''அமரர் கண்முடியும், அறுவகை யானும்**
**புரைதீர் காமம் புல்லிய வகையிலும்**
**ஒன்றன் பகுதி ஒன்றும் என்ப''**

என்ற தொல்காப்பிய புறத்திணை இலக்கணம் கூறும்.

வாழ்க அந்தணர், வானவர், ஆன்இனம் என்றது வாழ்த்தாகும். எல்லாம் சூழ்க என்பது வணக்கத்தையும் அரன் நாமமே என்றதினால் சாதனமும் துயர் தீர்கவே என்றதினால் பயனையும் குறிப்பிடுகிறார்.

இந்தப் பதிகத்தினால் மெய், மொழி, பயன், துன்பம் நீங்குதல், இன்ப வாழ்வு பெறல், தீயவை மாறுதல், சிவன் சிந்தை பரந்து சூழட்டும் என்று குறிப்பிட்டுள்ளார். வேந்தன் என்றது நின்றசீர் நெடுமாறன் ஆகிய கூன் பாண்டியனைக் குறிக்கும் என்பர்.

**ஆழ்க தீயது என்றது அயல்நெறி வீழ்க என்றது என்பர்**
(பெரியபுராணம் - 2722)

இதில் எல்லாம் என்பதனைத் தனியே வேறாகப் பிரித்து எல்லாம் அரன் நாமமே சூழ்க என இயைத்துப் பொருள் கொள்ள வேண்டும். அரன் நாமம் சிவபிரானின் திருவைந்தெழுத்து ஓதி, தியானித்து வழிபட்டு வாழ்தலாகும்.

இவ்வாறு நடக்கட்டும் நல்லன விளையட்டும் என்பதினால் தான் மண்ணில் நல்லவண்ணம் வாழலாம் என்று நமக்கு உறுதியாக அறுதியிட்டு கூறுகிறார். இம்மையில் இன்பம் நிறைந்து அதனை இனிது பெற்று இனிதே நலமோடு நீடு வாழ்க என்கிறார்.

தமிழ் நாட்டில் முதன் முதலில் சமய பிரச்சாரம் செய்தவர் தமிழ் ஞானசம்பந்தரே. தமிழ் நாட்டில் திருக்கோவில்களில் முடங்கிக் கிடந்த சமயத்தை மக்கள் மத்தியில் நாலு பேர் கூடும் இடத்தில் பேச, சொற்பொழிவுகளாற்ற சமய ஆன்மீக கருத்துக்களைப் பரப்பியவரும் தமிழ்ஞான சம்பந்தரே.

தமிழ்ஞான சம்பந்தரைச் சுற்றிப் பல்லாயிரம் தொண்டர்கள் புடைசூழ ஊர் ஊராகச் சென்று திருக்கோவில்களில் தங்கிச் சமயப் பிரச்சாரம் செய்து வந்தவர் தமிழ்ஞான சம்பந்தர். அவ்விடங்கள் எல்லாம் நாயன்மார்களால் பாடல்பெற்ற இடம் என பெருமைக்கு உரியதாகப் பண்புகள் மக்களால் பெரிதும் மதிக்கப்பட்டு வருகின்றது. என்பது கண்ட உண்மையாகும்.

விண்வெளியில் விண்மீன்களை பன்னிரண்டு தொகுப்பாக்கிப் பகுப்பு ஆய்வு செய்துள்ளார்கள். அவை மேடம், இடவம், மிதுனம், கற்கடகம், சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், தனு, மகரம், கும்பம், மீனம் ஆகும். தமிழ் ஆய்ந்த அருளாளர்கள் தங்கள் ஞானத்தால் பாடிய திருமுறைகள் பன்னிரண்டு ஆகும். அந்த திருமுறைகள் அருளியவர்கள் 27 பேர்கள்தான். ஆம் 12 ராசிகளும் 27 நட்சத்திரங்கள் உலக இயக்கங்களை கட்டுப் படுத்துவது போல தமிழ் வேதமாகிய சித்தாந்த சாத்திரங்கள், தோத்திரங்கள் அருளாளர் 27 பேர் என்பவர்கள் குறிப்பிடத்தக்கவர் என்பது சிந்தனைக்குரியது. சாத்திரம் 12 பாடியவர் 27 பேர்கள். வான சாத்திரமும் தமிழ்ஞானச் சம்பந்தரும் தொடர்பு ஆய்வுக்குரியது.

அறம், பொருள், இன்பம், வீடு என்று முதலிய நாற்பொருள் முத்தியாம் வீடுபேற்றினையே உறுதி பொருளாக போற்றப்பட்ட காலத்தில் இல்லறமே நல்லறம் என்பதை பெரிதும் மதித்து போற்றி மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம். பெண்ணின் நல்லாளோடு பெருந்தகை இருந்ததே என்று சிவசக்தியின் இயக்கத்தால் உலக இயக்கம் இனிதே நடந்து வாழ்க்கை வாழ்வதற்கு இன்றைய சித்தாந்தத்தை வலியுறுத்துவதை அறிய முடிகிறது.

அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றி போவோய் பெறுவதெவன் என்ற வள்ளுவர் கொள்கையை தமிழ்ஞான சம்பந்தர் மெருகு ஊட்டுவதை உணரலாம். எண்ணி எண்ணி ஆன்மீக கொள்கையின் பரிணாம வளர்ச்சியை காண முடிகிறது.

திருமூலர் தனித்திருந்து தவம் புரிந்து திருமந்திரத்தை அருளிய மாமுனிவர்.

**என்னை நன்றாக இறைவன் படைத்தனன்**
**தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே**

என்று கூறுவார். ஆனால் சம்பந்தரோ தவம் இயற்ற வில்லை மூன்று வயதில் இறைவியால் ஞானப்பாலுண்டு அருளாளரின் தலைவராய் மண்ணின் மைந்தர்களுக்குத் தன்னம்பிக்கை ஊட்டித் தன் கூற்று

இல்லை. இது இறை கூற்று என்று அறிதியிட்டு கூறி பாசுரத்தை ஓதினால் என்ன என்ன பலனை பெறுவார்கள் என்று உறுதியாக கூறும் பேற்றினை பணிந்து வணங்குகிறேன்.

தமிழக மக்களின் மனதிலே மாற்றங்கண்டு கேடு விளைவிக்கும் சமய கொள்கைக்கு எதிராக எழுந்தார் வீறு கொண்டு ஊர் ஊராக சென்று சமய உண்மைகளை பறைசாற்றி சமய தலைவர்களோடு வாதிட்டு உண்மை தத்துவங்களை பாராட்டி சைவ சமய மேன்மைகளை பரப்பினார். அத்துடன் மாறுபட்ட கொள்கையை அஞ்சாது எதிர்த்து அனல்வாதம் புனல்வாதம் புரிந்த உலக சமய பெருந்தலைவர்களுக்கு முதன்மையான புரட்சி கொள்கை உடையவர்தான் தமிழ்ஞானசம்பந்தர். அவர் கவிஞர், பக்தர், ஞானி, பண்பாளர், மாமுனிவர் என்பதை விட அவர் ஓர் சமுதாய சீர்திருத்தக்காரர். சமுதாயத்தில் ஏற்பட இருந்த புரையை நீக்கி காத்தருளிய புரட்சிவாதி என்றால் மிகையாகாது.

# 53. சம்பந்தர் காட்டும் வினைக் கொள்கைகள்

சி. பங்கயச்செல்வி, திருப்பனந்தாள்.

நாயன்மார்களும், ஆழ்வார்களும் பக்திப் பாடல்களைப் பாடினர். அவை தொகுக்கப்பெற்றுத் தேவாரம் என்றும், நாலாயிர திவ்யப் பிரபந்தங்கள் என்றும் பெயர் பெற்றன. தேவாரம் முதல் ஏழு திருமுறைகளாகத் தொகுக்கப்பெற்றது. திருஞானசம்பந்தர் பாடிய பாடல்கள் முதல் மூன்று திருமுறைகளாகத் தொகுக்கப் பெற்றுள்ளன. அவர் 4158 பாடல்களைப் பாடியுள்ளார். அவை 384 பதிகங்களாக இடம் பெற்றுள்ளன. அவர்தம் பாடல்களில் வினை பற்றிய கோட்பாடு களைக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**வினை ஓர் அறிமுகம்**

தெய்வநம்பிக்கை வேரூன்றி சமுதாயத்தில் சிலருக்கு நன்மை களும், சிலருக்குத் தீமைகளும் நடந்தன. இவைகளை இறைவன்தான் கொடுத்தான் என்று நம்பினர். நல்லவர்களுக்குச் சில இடையூறுகள் ஏன் நடத்தல் வேண்டும்? என்று சமுதாயம் சிந்திக்கத் தொடங்கியது. அவரவர் செய்யும் செயல்களே அவரவர்களுக்குப் பலன்களைக் கொடுக்கின்றன என்று முன்னோர் கண்டறிந்தனர். இங்ஙனம் வினைக்கொள்கை கண்டுபிடிக்கப்பட்டது. இம்மை, மறுமை போன்ற பிறப்புக் கோட்பாடுகளும் இதனோடு சேர்ந்து வளர்ந்து வந்தன. இதனை ''வினை நம்பிக்கையோடு தொடர்புற்றே பிறப்புப் பற்றிய கோட்பாடுகள் உருவாகியுள்ளன'' என்பார் கூற்றும் அரன் செய்யும். (டாக்டர் ச.வே. சுப்ரமணியன், சிலம்பும் சிந்தாமணியும், ப-95)

தொல்காப்பியக் காலம் தொட்டு தற்காலம் வரை வினைக் கொள்கை பல்வேறு மாற்றங்கள் பெற்று வந்ததோடு பல்வேறு பெயர்களோடும் அழைக்கப்பட்டு வந்துள்ளது. பால், பால்வரைத் தெய்வம், தெய்வம், விதி, முறை, ஊழ், முறைமை, பழமை, ஊழி, உண்மை, இயற்கை, நியதி, பொறி, உறற்பாலது, செய்தது, நல்லது, தீயது, கருமக் கழிபலன், புண்ணிய பாவங்கள், கன்மம் என்பன வினை பற்றி வந்த வெவ்வேறு பெயர்களாவன.

உயிர்கள் செய்யும் நன்மை தீமைகளுக்கு உட்பட்டே இன்ப துன்பங்கள் விளைகின்றன. இந்நல்வினை, தீவினைகளே உயிர்,

உடல் எடுப்பதற்குரிய மூல காரணங்கள். எனவே சம்பந்தர் வினையை நோயாகவே உருவகப் படுத்துகின்றார். ''மெலியும் தீவினை நோயவை மேவுவர் வீடே'' (2:1:5) என்பது அஃது.

வினையை இறைவனாகவும் சமயச்சான்றோர் கண்டனர். இறைவன் அனைத்திலும் உள்ளான். அனைத்துமாகவும் உள்ளான் என்பதை நன்கு உணர்ந்த சம்பந்தர் இறைவனையே வினையாகப் பார்க்கின்றார். நல்வினையும் தீவினையும் ஆனவனே என்று துதிக்கின்றார்.

### சம்பந்தர் காட்டும் வினைப் பாகுபாடு

சம்பந்தர் தம் பாடல்களில் 442 இடங்களில் வினையைப் பற்றிக் குறிப்பிடுகின்றார். அவ்விடங்களில் கூறும் பொழுது நல்வினை, தீவினை என்று இரண்டாகப் பகுத்துக் கூறுகின்றார். அதன் பயனைப் புண்ணியம் பாவம் என்றும் காட்டுவர். வினையைப் பற்றி எடுத்துரைக்கும் இடங்களில் எல்லாம் வாளா கூறாது அதன் இயல்புகள் புலப்படுமாறு அடையடுத்துக் குறிப்பிடுவது நோக்கத்தக்கது.

தொல்காப்பியக் காலம் தொட்டு நல்வினை, தீவினை என்னும் பாகுபாடே இருந்தது. சம்பந்தர் தாம் தம் பாடல்களில் வினைதுய்க்கும் முறையால் மூன்று வகைப்படும் என்பதைக் காட்டுகின்றார். அவை பழவினை, நுகர்வினை, வருவினை என்பன. எனவேதான் 'வினையாயின', 'வினைகள்' என்று பன்மையால் சுட்டுகின்றார்.

தொல்வினை, தொல்லை வல்வினை, பந்தித்த வல்வினை, பண்டை வல்வினை, பழவினை, பண்டை நம்வினை, பண்டு செய்த வல்வினை, முன்னைவினை, பண்டு நான் செய்த வினைகள் என்பன பழவினையைக் குறிப்பன. இவை பிறவிதொறும் வரக்கூடியவை. உயிர்களைத் தொடர்ந்து பற்றுபவை என்பதை இவ்வடைமொழிகள் மூலம் சம்பந்தர் காட்டுவர். இம்மைவினை, இம்மைசெய்வினை என்பன நுகர்வினையைக் குறிப்பன. மேலை நோய், மேல்வினை, வருபெரும் வல்வினை என்பன வருவினையைச் சுட்டுவன.

### வினையின் இயல்பு

ஒருவன் செய்த வினையின் பயனை அவனே துய்த்தல் வேண்டும். விருப்பு, வெறுப்புடைய உயிர்கள் செய்த இருவினைப் பயன்களை அறிந்து அவை செய்த முறையே இன்ப துன்பங்களை நுகரச் செய்பவன் இறைவன் ஒருவனே. அவன் உயிர்களுக்குத் தீவினைப் பயனை ஊட்டுவிக்கும் பொழுது நன்மையுடன் கூட்டி நுகர்விப்பன், பாவங்கள் தீர்தர நல்வினையைத் தந்து அருளுவன் என்பனவற்றையெல்லாம் உடன்பட்டவர் சம்பந்தர். இதனைப்

"பண்டு நாம் செய்த வினைகள் பறையவோரருள்நெறி பயப்பார்"

"மூவருமாகிய இருவருமாகி முதல்வனுமாய் நின்ற மூர்த்தி
பாவங்கள் தீர்தர நல்வினை நல்கி"

என்னும் பாடல்களால் அறியலாம். போன பிறவியின் பயன்வந்து சேருவதோடு மேலும் வரும் வினைகளும் இப்பிறவியில் நுகரும் வினைகளும் உயிர்களைப் பிணிக்கும் தகையன என்பதை,

"வந்திருக்கும் அடியார் தங்கள் வருமேல் வினையோடு
பந்தித்திருந்த பாவம் தீர்க்கும் பரமன் மேல்வினை"

"இம்மை வினையடர்ந்து எய்தும் போழ்தினும்"

என்னும் தேவார வரிகள் புலப்படுத்தும். வினைகளைப் பன்மையாகக் கூறுவதால் பல என்பதும்,

"என்னில் வினை களைவான்"

என்னும் பாடல்வரியால் எண்ணிக்கையில்லாதது என்பதும் போதரும். ஒருவினையிலிருந்துதான் மேன்மேலும் வினைகள் தோன்றும் என்பதை "வெடிகொள்வினை" என்பது காட்டும். வாழைக்கன்று வெடிப்பது போல ஒரு முதலிலிருந்து பலவாகப் பல்குவது வினையின் இயல்பாகும். மேலும் இஃது நியதித் தத்துவத்தால் வரையறுக்கப் படுவது. இன்னதன்பின் இன்னது நுகர்ச்சிக்குச் சரியானது என்று விதிப்பது வினை என்பதை "ஊழின் மலிவினை" என்னும் தொடர் காட்டும். வினையானது ஒரு பிறவிக்கு மட்டுமின்றி எழுபிறவிக்கும் தொடர்ந்து வரும் என்னும் நம்பிக்கை அக்காலத்து இருந்தது. கழுமலத்தைப் பாடவந்த சம்பந்தர் அவ்வூரில் அமர்ந்திருக்கும் இறைவனின் அடியினைத் தொழுபவர்க்கு வினை எழுமையும் இல என்கின்றார். வினையானது நியதியாய், அதன் விளைவாய், பயனாய் வந்து நிற்கும் என்பதற்குச் சம்பந்தர் மார்க்கண்டேயரது வரலாற்றினைச் சுட்டுகின்றார். மார்கண்டேயருக்கு வயது பதினாறு என்பது விதியாகும். விளைவு மரணமாகும். அதன் பயனாய்க் கூற்றுவன் வெளிப்படுகின்றான்.

"விதியாய் விளைவாய் விளைவின் பயனாகிக்"

என்பது அப்பாடல்.

## வினை நீக்கும் வழி

வினை என்பது யாவராலும் நீக்க முடியாது. எவற்றாலும் நீக்க இயலாது. ஊழ்வினை வருத்து வந்து ஊட்டும் என்னும் அசைக்க முடியாத கொள்கை அக்காலத்து இருந்தது. ஆனால் சம்பந்தர் தாம் முதலில் இறைவனின் திருவடி ஆற்றலால் வினையை நீக்க இயலும் என்கிறார்.

"சிந்தித் தெழவல்லார் தீராவினை தீர்க்கும்
நந்தி நமையாள்வான் நல்லம் நகரானே"

என்னும் அவர்தம் கூற்று சான்று பகரும். மேலும் வினைதீர்க்கும் வழிகளைக் கீழ்கண்டவாறு உரைப்பர்.

1. முதல்வன் பாதம் பற்றிடப் பாவம் பற்றாது.
2. இறைவன் அருள் பெற்றால் தொல்வினை சுருங்கும்.
3. சிற்றம்பலம் முதலான தலங்களைத் தொழவே வினைகள் நீங்கும்.
4. தம் பாடல்களைப் பாட வல்லார்க்கு நீங்கும்.
5. இறைவனைப் புகழ்ந்து, இரந்து ஏத்துதல் வேண்டும்.
6. இறைவன் அடியை இடைவிடாது சிந்தித்தல் வேண்டும்.
7. திருவெண்காட்டு முக்குளநீர் குடைந்தால் வினை தொடராது.
8. சிவனை நினைத்து, போதொடு நீர் சுமந்தேத்தித் தொழுதால் போகும்.
9. நந்தவனம் அமைத்தல், குளம் தோண்டல், பூ வெடுத்துக் கட்டி அணிவித்தல், மலரடி போற்றல் ஆகிய செயல்களால் நீங்கும்.

கன்மத்தின் பிடியின்றும் உயிர், இறைவனது திருவருள் மூலமாக - அவன் தொடர்போடுதான் நீக்க இயலும். அவன் நினைவால், அவனுக்குச் செய்யும் செயல்களால், அவன் உறையும் தலங்களை அடைவதனால், அவனைப் பற்றிய பாடல்களைச் சொல்வதனால், கேட்பதனால், அவனை எப்பொழுதும் அகபுறக் கண்களில் காண்பதனால் என இங்ஙனம் எல்லாம் இறை சம்பந்தமே வினைத் தொடர்பை நீக்கவல்லது என்பதைச் சம்பந்தர் தேவாரம் வலியுறுத்துகிறது.

### வினை நீங்கும் முறைமை

இறைவனை அடைந்தால் எல்லா வினைகளும் போவதில்லை. முன்பு செய்து, இப்பிறவியில் தொடர்ந்து வரும் வினை நீங்க வழியுண்டு. இறைச் சிந்தனையில் நிற்பதால் இனிமேல் வருகின்றவினை இல்லாமற் போகும். ஆனால் நுகர்வினை என்பது நீங்காது. உடல் எடுத்து வந்த உயிர் அவ்வுடல் நீங்கும் அளவும் வினையை நுகர்ந்துதான் கழிக்க இயலும்.

"தலையாய சமணர் சாக்கியர்க்கு என்றும் அறிவொண்ணா
நிலையாயென்னத் தொல்வினையாய நில்லாவே"

"நலிய வந்தவினை தீர்த்துகந்த எம்நம்பனே"

"வற்றாத வாவிகள் சூழ்ந்த மணஞ்சேரி
பற்றாக வாழ்பவர் மேல்வினை பற்றாவே"

என்னும் கூற்றுக்களால் உணரலாம். இறையடியார்களாய் இருந்தாலும் வினை வந்து வருத்துவது நீங்காது. ஆனால் அவ்வருத்தம் குறைவானதாய்ப் பெரும் தீங்கு ஏற்படா வகையில் அமையும்.

"நஞ்சமிருள் கண்டமுறை நாதனடியாரை நலியா வினைகளே"

"திண்ணிய தீவினை தீண்டப்பெறா"

"சிறப்பிலாத் தீவினை தீண்டப்பெறா"

என்னும் கூற்றுக்கள் மெய்ப்பிக்கும். அங்ஙனம் வினைகள் தீண்டும் பொழுது ஐந்தெழுத்து மந்திரமே அடியவர்களுக்குப் பெரும் பற்றுக் கோடாகும்.

"இம்மை வினையடர்த் தெய்தும் போழ்தினும்
அம்மையிலும் துணை அஞ்செ முத்தும்மே"

என்பது அப்பாடல்.

நோயை விரைந்து நீக்கினால் அதனால் விளையும் தீமை பெரிதாய் மருத்துவன் உழைப்பும், நோயின் தன்மையும் அறியப்படாதவாறு போல வினைகளை விரைந்து நீக்குதல் கூடாது. அங்ஙனம் நீக்கின் பிரிதொரு விளைவும் துன்பமும் பெருகும். எனவே பையவே நீக்குதல் வேண்டும் என்பதைப் "பையநின்ற வினை பாற்றுவார்" என்ற பாடல் குறிப்பு உணர்த்தும். ஈண்டு இறைவன் வினைகளைச் சிதறிப்போகச் செய்பவன் என்பது பெறப்படும். அவன் உயிர்களின் தீவினைகளை நீக்குவதற்கு நல்வினையைக் கொடுத்து மாற்றுவான்.

"பாவங்கள் தீர்தர நல்வினை நல்கிப்
பல் கணம் நின்று பணிய"

என்னும் பாடல் அஃது. நல்வினையைச் செய்யச் செய்ய உயிர்களிடத்துத் தீவினை நீங்கும். அவ்வினை மெல்லத் தீர்தர அதனால் வரும் விளைவாகிய பாவங்கள் நீங்கும் என்பது பொருள்.

**வினை நீக்கத்தால் பயன்**

இறைவனை அடைய உயிர்களுக்கு மும்மலங்களும் நீங்குதல் வேண்டும். மலபரிபாகம் நடந்திட உயிர்கள் பக்குவம் அடையும். இருவினை ஒப்பு தோன்றும். ஒருவன் தான் செய்த நல்வினைப் பயனாகிய இன்பத்திலும் தீவினைப் பயனாகிய துன்பத்திலும் உள்ளம் வேறுபடாது நிற்றல் இருவினை ஒப்பு என்பதாகும். அஃதாவது இன்பத்தில் விருப்பமும், துன்பத்தில் வெறுப்பும் இல்லாது இரண்டையும்

சமமாக நுகரும் நிலையை எய்துதல். இதனை எய்தியவர் ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவர். இந்நிலை ஏற்பட்ட பின்புதான் இறையருள் கிட்டும். இதனை,

> "அருகு சேர்தரு வினைகளும் அகலும்போய்
> அவனருள் பெறலாமே"

என்பது சம்பந்தர் காட்டும் நிலையாகும். இங்ஙனம் இறையருள் கிட்டிய பின் இறைவனது அருள் வீழ்ச்சி உயிர்களிடத்துப் பதியும். பின்னர் இறைவன் திருவடியோடு கலக்கும் முக்தி நிலை கிட்டும்.

> "வையம் வந்து பணியப்பிணி தீர்த்துயர்கின்ற வலிதாயம்
> உய்யும் வண்ணம் நினையின் நினைந்தால் வினைதீரும்
> நலமாமே"

என்னும் வரிகள் காட்டும். ஈண்டு நலம் என்பது முக்தியாகும். எனவே வினைநீக்கம் மட்டும் சைவசித்தாந்தம் காட்டும் முக்தி அன்று. முக்தியை அடைவதற்கு முன்னுள்ள நிலைகளை எய்துவதற்கு வினை நீக்கம் வழிவகுக்கிறது. இறைவன் குருவாக வந்து அருள் செய்வதற்கும், இறைவன் திருவடியை இடைவிடாது பற்றுதற்கும் உயிர்களுக்கு வினைநீக்கம் அவசியமாகின்றது.

1. வினை நம்பிக்கையோடு தொடர்பு பட்டே பிறப்பு பற்றியக் கோட்பாடுகள் உருப்பெற்றன.
2. ஊழ், முறை, இயற்கை, தெய்வம், உண்மை, பால், பொறி, நியதி, வினை, புண்ணியபாவங்கள், விதி என்பன ஒரு பொருட்கிளவிகள்.
3. இறைவனே உயிர்களுக்கு நல்வினை, தீவினைகளை ஊட்டுவிக் கின்றான். தீவினையை நுகரச் செய்யும் பொழுது இறையடியவர் களுக்கு நன்மையாகிய இன்பத்தைக் கொடுத்தே செய்வன் என்று சம்பந்தர் தேவாரம் சுட்டும்.
4. ஒரு வினையிலிருந்து எண்ணற்ற வினைகள் தோன்றும் என்பது சம்பந்தர் தேவாரத்தால் தெளிவாகிறது.
5. பழவினை, நுகர்வினை, வருவினை என்னும் பாகுபாட்டைச் சம்பந்தர் தாம் முதலில் விளக்குகின்றார்.
6. வினை நீக்க இயலாது என்று சமண, பௌத்த மதங்கள் உரைக்கின்றன. இவர்தாம் முதலில் வினையை இறைவனின் தொடர்பால் நீக்க இயலும் என்கின்றார்.
7. இறைவனை அடைய வொட்டாது பிறவிகளுக்கு வித்தாக அமைவன வினைகள் என்று வினை நீக்கத்தின் அவசியத்தைச் சம்பந்தர் வலியுறுத்துவர்.

# 54. சம்பந்தர் போற்றும் தலயாத்திரை

த. கோ. பரமசிவம், தஞ்சாவூர்.

உலக உயிர்கள் இறைவனிடத்துக் காட்டும் நன்றி கலந்த அன்பு பக்தி எனப்படும். இது உடலாலும் உள்ளத்தாலும் இவை இரண்டும் வெளிப்படுத்தும் உணர்வாலும் இயங்கும் அடிப்படையைக் கொண்டதாகும். இறைவன் உடலுக்கும் உணர்வுக்கும் எட்டாத பரம்பொருள். எனவே இறைவனிடத்து நாம் வெளிப்படையாக நம் பக்தியைக் காட்ட முடியாத சூழல். தவமுடைய சிலரே இறைவனிடத்து நேரடியான அன்பை, பக்தியைக் காட்டமுடியும். பெரும்பாலான உயிர்களால் அவ்வாறு நேரடியாகப் பக்தியைக் காட்டமுடியாது. எனவே அன்புகாட்டுவதைப் பிற உயிர்களிடத்துக் காட்டும் பரிவின் வழி வெளிப்படுத்தும் இயல்பான சூழலைப் பக்தி இயக்கம் கண்டது. இதனை வேறொரு வகையில் சொல்வதென்றால் பிற உயிர்களுக்கு உடலாலும் உணர்வாலும் செய்யக் கூடிய தொண்டுகளே இறைவனுக்குச் செய்யும் தொண்டாக அமையும் எனலாம். இந்த அடிப்படையை உளங்கொண்டதுதான் பக்தி இயக்கம். பக்தி இயக்கம் வலியுறுத்தும் திருக்கோயில் வழிபாடு, வீதியை, கோயிலை, ஊரை, நாட்டைத் தூய்மைப்படுத்தத் தூண்டுகிறது. நிலத்தை நீரை காற்றைத் தூய்மை செய்ய நந்தவனம் அமைத்தல், தலவிருட்சம் போற்றிப் பாதுகாத்தல், திருக்குளம் பாராட்டுதல், நறும் புகை, தீபங்களால் காற்றைத் தூய்மை செய்தல், மெழுக்கிடுதல், அலகிடுதல், பூமாலை புனைதல், திருமஞ்சனமாட்டுதல், திருவமுது செய்வித்தல், கோயிலமைத்துத் திருவிழா காணுதல், நாட்பூசை, சிறப்பு வழிபாடு நிகழ்த்துதல், பாராயணம் என அனைத்துமே தனி மனித வழிபாடாயினும், கூட்டு வழிபாடாயினும் - மக்கள் தொண்டே மகேசன் தொண்டு என்ற அடிப்படையில்தான் அடங்குகின்றன.

**அவ்வினைக்கு இவ்வினையாம் என்றுசொல்லும் அஃதறிவீர்**
**உய்வினை நாடாது இருப்பதும் உந்தமக்கு ஊனமன்றே**
**கைவினை செய்து எம்பிரான் கழல்போற்றுதும் நாமடியோம்**
**செய்வினை வந்தெமைத் தீண்டப் பெறா திருநீலகண்டம்**

(1:116:1)

**காவினையிட்டுங் குளம்பல தொட்டும் கனிமனத்தால்**
**ஏவினையில் எயில் மூன்றெரித்தீர் என்று இருபொழுதும்**

பூவினைக் கொய்து மலரடி போற்றுதும் நாமடியோம்
தீவினை வந்தெமைத் தீண்டப் பெறா திருநீலகண்டம்
(1:116:2)

திருஞானசம்பந்தரின் இப்பாடல்களில் கைவினை செய்தல், காவினை யிடல், குளம்பல தொடுதல், பூவினைக் கொய்தல், மலரடி போற்றல் போன்ற அனைத்துமே தொண்டு வகைப்பட்ட வழிபாட்டைச் சுட்டுதல் காணலாம்.

பக்தி இயக்கம் சுட்டும் வழிபாடுகள் அனைத்தும் இந்த அடிப்படையில் இயங்குகின்றன. இக்கட்டுரை திருத்தல யாத்திரையின் இன்றியமையாமை குறித்துச் சிந்திக்க முற்படுகிறது.

**நால்வகை வழிபாடு**

பக்தி செய்வதை நான்கு வகையாகக் காணலாம். தனிமனித வழிபாடு (ஆத்மார்த்த பூசை...), குடும்ப வழிபாடு (உற்றார் உறவினருடனான கூட்டு வழிபாடு) திருக்கோயில் வழிபாடு (ஊரிலுள்ளாருடனான பொது வழிபாடு) திருத்தலயாத்திரை வழிபாடு (பிற ஊர்களிலுள்ள இறைவனை, கோயிலை, தீர்த்தத்தை வழிபடுவது) எனப் பிரித்துக் காணலாம். இந்நான்கு வகைப்பட்ட வழிபாடுகளையும் திருமுறையாசிரியர்கள் விதந்து பாராட்டியிருக்கின்றனர். உள்ளம் பெருங்கோயில், ஊனுடம்பு ஆலயம் எனச் சுட்டுவதுடன் மார்க்கண்டேயன், காளத்தி கண்ணப்பர் போன்றோர் வழிபட்ட முறையில் தனிமனிதன் பூவும் நீருங்கொண்டு வழிபடுவதும், மனத்தால் நினைந்தே வழிபடுவதும் தனிமனித வழி பாட்டில் அடங்கும். குடும்பத்தில் பொதுவான இறைவடிவை நிறுத்திக் குடும்பத்தாருடன் வழிபடும் வழிபாட்டைக் குடும்ப வழிபாடாகக் காணலாம். உள்ளூரிலுள்ள திருக்கோயிலுக்குச் சென்று அலகிட்டு மெழுக்கிட்டு, பூமாலை புனைந்தேத்தி, புகழ்ந்து பாடி, போதொடு நீர் சுமந்தேத்திப் புகுவார் அவர் பின் புக்கு இறைவனை வழிபடும் திருக்கோயில் வழிபாடு மூன்றாம் வகையாகத் திருமுறையில் விதந்து போற்றப்படுகிறது.

இவற்றையெல்லாம் விட உயர்ந்த வழிபாடாக சிறந்த வழிபாடாகத் திருத்தலயாத்திரை வழிபாட்டைப் போற்றுகின்றனர் திருமுறையாசிரியர்கள், தம் சுற்றம், தம் ஊர் என்ற கட்டுகளிலிருந்து விடுபட்டு ஆன்மநேய ஒருமைப்பாட்டை, மனிதநேயப்பண்பை, பிற உயிர்களிடத்துக் காட்டும் பரிவாக வளர்ப்பதற்கு பிற ஊர்களுக்கும், நீர்நிலைகளுக்கும் சென்று வழிபடுவதை தலயாத்திரை வழிபாடு இலக்கணமாகக் காட்டுகிறது. திருமுறையாசிரியர் அனைவரும் இவ் இலக்கணத்துக்கு இலக்கியமாகவே திகழ்ந்தவர் ஆவர். குறிப்பாக,

மிகச் சிறிய வயதில் இவ்வகை வழிபாட்டைத் தொடங்கிய ஞானசம்பந்தப் பெருமான் குறுகிய காலத்திலேயே, போக்குவரத்து வசதிகள் குறைந்த அக்காலத்திலேயே 250 திருத்தலங்களுக்கு மேல் யாத்திரை செய்ததுடன் இவ்வகை வழிபாட்டை பாராட்டிப் பிறர்க்கு உபதேசமாகக் காட்டியும் போற்றுகின்றார் என்பது வியப்பாகவும் இயல்பாகவும் தோன்றுகிறது.

**யாத்திரை**

இறைவன் எல்லாமாகவும் இருக்கிறான், எல்லாவற்றினும் ஓங்கியும் இருக்கிறான். அவனே எல்லாவற்றின் இயக்கத்துக்கும் காரணமாக அமைகின்றான். ஆதலின் அவனை யாண்டும் எப்பொழுதும், எவ்வடிவத்திலும், எந்நிலையிலும் எவ்வகையிலும் வழிபடலாம். அவன் திருநாமத்தை இருந்த இடத்திலேயே ஓதுவதுகூட வழிபாட்டின் சிறந்த கூறாகவே விளங்குகிறது.

**காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி**
**ஓதுவார் தம்மை நன்னெறிக்கு உய்ப்பது**
**வேதம் நான்கினும் மெய்ப்பொருள் ஆவது**
**நாதன் நாமம் நமச்சி வாயவே.**

என்னும் திருவாக்கிலும்,

**பெருமானடி ஞானமாகந் நினையிர் வினையாயின நையுமே**

என்னும் திருவாக்கிலும்,

**திருந்திய தேவ நின்னை,**
**மனத்தகத்தோர் பாடலாடல் பேணி யிராப்பகலும்**
**நினைத்தெழுவார் இடர்களையாய் நெடுங்களம் மேயவனே**
(1:52:1)

என்னும் திருவாக்கிலும்,

**நீதியை நினையவல்லவர் வினை நில்லாவே** (2:14:2)

என்னும் திருவாக்கிலும், சம்பந்தர், அவனை நினைப்பது கூட மிகச் சிறந்த வழிபாடாக அமைந்து விடும் என்கிறார்

ஆயின், பாரதப் பண்பாடு எடுத்துக்காட்டிய அருளாளர் அனைவரும் யாத்திரை மேற்கொண்டு வழிபாடு செய்ததை நம் வரலாறுகளும் புராணங்களும் படம்பிடித்துக் காட்டுகின்றன. யாத்திரை செய்யாதவன் அரைமனிதன், அவன் பிணத்துக்குச் சமமானவன் என்றும் இடித்துக் கூறி யாத்திரையின் இன்றியமையாமையைச் சுட்டியுள்ளன திருமுறைகளும் இதனை வெளிப்படையாகவும், உள்ளீடாகவும், சுருக்கமாகவும், விரிவாகவும் பாராட்டிக் கூறியுள்ளன. திருஞானசம்பந்தர் சற்றுக் கூடுதலாகவே தலயாத்திரையை வற்புறுத்துகிறார்.

பாரதம் முழுவதும் யாத்திரை செய்து ஆங்காங்குள்ள நீர்நிலைகளில் மூழ்கி மூர்த்திகளைத் தொழுது நின்ற ஏழு முனிவர்களின் வரலாற்றையும் பிற தேவர்களின் வரலாற்றையும் நம் புராணங்களும் இதிகாசங்களும் தெளிவாகக் காட்டியுள்ளன. இராமரின் வனவாசம் கூட தீர்த்தயாத்திரை தலயாத்திரையாகவே அமைந்துவிட்டதை இராமாயணம் பகரும்.

'நீ போய், தாழிருஞ் சடைகள் தாங்கி தாங்களும்
தவமேற்கொண்டு பூழி வெங்கானப் புண்ணியத் துறைகளாடி'

எனவரும் கம்பர் வாக்கு இதனை நிறுவும். மகாபாரதத்தில் அருச்சுனன் மேற்கொண்ட தீர்த்த யாத்திரை அவனை இமயம் முதலாகக் குமரி வரை சுற்றவைத்தது. பக்தியிற் சிறந்த நாரதரும் சதாசர்வகாலமும் யாத்திரையிலேயே இருப்பதாக நம் புராணங்கள் காட்டுகின்றன. கைலாயத்தைப் பெயர்த்துக் கொண்டுபோக முயன்ற இராவணனின் வரலாறும் யாத்திரையின் இன்றியமையாமையைக் காட்டுகின்றது.

இப்பாரதப் பண்பாட்டின் அடிப்படையிலே முகிழ்ந்த பக்தி இயக்கமும் யாத்திரையை வலியுறுத்தும் நோக்கிலேயே காணப்படுதல் நோக்குதற்குரியது.

'நீ தினமும் கங்கை, யமுனை, சரஸ்வதி, கோதாவரி, நர்மதை, சிந்து, காவிரி முதலிய புண்ணிய நதிகளில் நீராடிப் புனிதம் பெறுவாயாக' என்பது பாரதம் பிள்ளைக்கவியாக ஊட்டிய ஆசாரம். இந்நதிகளில் சென்று நீராடமுடியாதவர்கள் குளிக்கும்போது இந்நதிகளின் பெயர்களைச் சொல்லி வணங்கியபின் எந்நீரிலும் குளிக்கலாம் என்பது அதற்கு விதிவிலக்காகக் கூறப்பட்டது. அதுவும் முடியாதவர்கள் நதிகளின் இராணியாகத் திகழும் கங்கையை மட்டுமாவது நினைத்துக் கொள்ளுங்கள். எல்லா நீரையும் கங்கையாகவே நினைத்துக் கொள்ளுங்கள் என்று அருளாளர்கள் கூறியுள்ளனர். இவ்வகைப் பண்பாட்டை சங்க இலக்கியம் முதலாகவே நாம் காணலாம்.

சிலப்பதிகாரத்தில், மாடலமறையோன் செய்த யாத்திரை விளக்கப்பட்டுள்ளது. அவன் வடவேங்கடத்துக் கண்ட திருமாலின் பெருமையையும் வேங்கடமலையின் சிறப்பையும் இளங்கோவடிகள் அழகாகச் சித்திரிக்கப்பட்டுள்ளது. இப்பண்பைப் பக்தி இயக்கம் பாராட்டி மேற்கொள்வதை ஞானசம்பந்தரின் தலயாத்திரை தெளிவாகக் காட்டுதல் காணலாம்.

**எல்லாம் இறைவனுக்கே**

மனித உடம்பின் உறுப்புகள் அனைத்தும் இறைவனிடத்து பக்தி செய்ய முடிந்ததைத் திருமுறைகள் சிறப்பித்துக் காட்டுகின்றன மனம்

வாக்கு காயங்களால் இறைவனிடத்து அன்பு பாராட்டிச் செய்யும் வழிபாடு சிறந்ததாகும். இதனை நாவுக்கரசரின் திருவங்கமாலை பட்டியலிட்டுக் காட்டுதல் காணலாம்.

**''தலையே நீவணங்காய் - தலைமாலை**
**தலைக்கொண்டு தலையாலே பலிதேறும் தலைவனைத்**
**தலையே நீ வணங்காய்''**

எனத் தொடங்கும் பாடலில் தலைமுதல், கண், மூக்கு, செவி, கை, யாக்கை, கால் என அனைத்தும் அவற்றிக்குரிய பண்புகளுடன் வழிபாட்டில் இணைத்துக் காட்டப்பட்டன.

இப்பாசுரத்தில்,

**'கால்களாற் பயனென் - கறைக்கண்டன் உறைகோயில்**
**கோலக் கோபுரக் கோகரணஞ் சூழாக் கால்களாற் பயனென்'**

எனும் வரிகள் சிந்தித்தற்குரியன. மற்ற உறுப்புகளுக்கெல்லாம் பொதுவில் கூறியவர், கால்களுக்கு மட்டும் திருக்கோகரணம் தலத்தை வலம் வரவேண்டும் என்று தலயாத்திரையைச் சுட்டி வலியுறுத்துதல் காணலாம்.

வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும் தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனை அங்கங்கள் எல்லாவற்றாலும் உணரும் பான்மை சிலப்பதிகாரத்திலும் காணப்படுகிறது.

**திருமால்சீர் கேளாத செவியென்ன செவியே**
**கரியவனைக் காணாத கண்என்ன கண்ணே**
**நாராயணா வென்னா நாவென்ன நாவே** (ஆய்ச்சியர் குரவை)

இவற்றையெல்லாம் உட்கொண்ட திருஞானசம்பந்தர் தம் பதிகங்கள் சிலவற்றில் உறுப்புகளின் செயற்பாட்டுக்குச் சில விதிகளைக் காட்டுகிறார். அது பொது நிலையில் இல்லாது தலயாத்திரையை முதன்மைப் படுத்தி அவ்வூர் இறைவனைக் காணவேண்டும். அவனைப் பாடவேண்டும். அவனைச் சூழ வேண்டும் என்பது போல் பாடுகின்றார்.

**'ஆமாத்தூர் அம்மானைக், காணாத**
**கண்ணெல்லாம் காணாத கண்களே'** (2:44:4)

ஆமாத்தூர் அம்மானைக், கூறாத
நாவெல்லாம் கூறாத நாக்களே (2:44:7)

ஆமாத்தூர் அம்மான்எம், பெம்மான்என்று
ஏத்தாதார் பேயரிற் பேயரே -
ஆமாத்தூர் அம்மானை, கேளாச்
செவியெல்லாம் கேளாச் செவிகளே -

**ஆமாத்தூர் அம்மான்எம், வள்ளல்கழல்**
**பரவா வாழ்க்கையும் வாழ்க்கையே -**
**ஆமாத்தூர், நிச்சல் நினையாதவர் நெஞ்சமும் நெஞ்சமே**

என வருகின்ற பாசுரங்களில் யாத்திரை செய்து ஆமாத்தூர் சென்று வணங்காதவர் உறுப்புக்கள் பாழ், நெஞ்சு பாழ், ஏன் அவர்கள் வாழ்க்கையே வீண் என்று சற்றுக் கடுமையாகவே அறிவுறுத்துகிறார்.

இன்னின்ன தலங்களில் உள்ள சிவனைத் தொழுதெழ வல்லவர் தீவினை மாயும், பிறப்பு கெடும், சிவலோகம் கிட்டும் என்றெல்லாம் நேர்நிலையில் ஊக்கப்படுத்துவது சம்பந்தர் வழக்கம்.

**செங்கண்மால் விடையார் செம்பொன் பள்ளியார்**
**அங்கணா யடைந்தார் வினை தீர்ப்பரே**

**நாலூர் மயானத்து நம்பான்தனடி நினைந்து**
**மாலூருஞ் சிந்தையார் பால் வந்துரா மறுபிறப்பே** (2:46:1)

**அத்தன்அடி நினைவார்க்கு அல்லல் அடையாவே**
**இன்பாய் இருந்தானை யேத்துவார்க்கு இன்பமே**

**மணிதன் இன்னுயிர் அளித்தானை வாழ்த்திட**
**மெலியுந் தீவினை நோயவை மேவுவர் வீடே** (2:49:5)

எனத் தொழுவார் பெறும் பேறுகளைப் பட்டியலிட்டுத் தல யாத்திரையை ஊக்கப்படுத்துகிறார். ஆயின் சில இடங்களில் யாத்திரை செய்யவில்லை எனில் எல்லாம் வீண் என்பது போல எதிர்மறையில் அச்சுறுத்துகிறார்.

**திருவார் செம்பொன் பள்ளி மேவிய**
**கருவார் கண்டத்து ஈசன் கழல்களை**
**மருவா தவர்மேல் மன்னும் பாவமே -** (1:25:1)

**ஏரார் புரிபுன் சடையெம் ஈசனைச்**
**சேராதவர் மேற்சேரும் வினைகளே -** (1:25:2)

**உரையாதவர் மேல் ஒழியா ஊனமே -**
**ஓராதவர்மேல் ஒழியா ஊனமே -** (1:25:9)

இவ்வாறு செம்பொன்பள்ளி சென்று அங்குள்ள இறைவனை வணங்காதவர்களுக்கெல்லாம் பாவமும் வினையும் தவிர்க்க முடியாமல் வந்து சேரும் என்று அச்சுறுத்துகிறார். இது எதைக் காட்டுகிறது என்றால் திருக்கோயில் வழிபாடு என்பது திருத்தல யாத்திரையை உள்ளடக்கியது, மனித நேயப் பண்பை முழுமையாக உணர்வதற்கும் செயற்படுத்துவதற்கும், கைவினையாம் திருத்தொண்டின் நெறி நிற்பதற்கும் யாத்திரைகள் இன்றியமையாதன என்பதையே உறுதிப் படுத்துதல் காணலாம். பக்தி இயக்கத்துக்கு இது இன்றியமையாத

பண்பாக நிலைத்தமையைத் திருஞானசம்பந்தர் பாசுரங்களும் தெளிவுபடுத்திவிட்டன.

'நீ வீட்டிலேயே முடங்கிக் கிடக்காதே - வெளியே வா, உன் ஊரைப் பார். உன் நீர் நிலைகளைப் பார்த்து பெருமை கொள், இன்னும் வெளியே சென்று நாட்டைப் பார் உலகைப் பார் உன் தொண்டு மனப்பான்மையை விரிவுப்படுத்து. உன் அறிவு விசாலப்படும் இவை உன்னிடம் உலக நேய ஒருமைப் பாட்டை உண்டாக்கும். இந்த நேயம் உன் வாழ்வை நிறைவாக்கும்!. இதுதான் இந்த யாத்திரைக் கோட்பாடு. இதனை வலியுறுத்தவே ஞானசம்பந்தர், போகாவிட்டால் வீண் என்று அறிவுறுத்துகிறார். என்றாலும், கங்கையாடிலென் காவிரி ஆடிலென்... எங்கும் ஈசன் என்றுணராதவர்க்கு இவ் இன்றியமையாப் பண்புகூட வீணாகிவிடும் எனத் திருமுறைகள் சுட்டவும் தவறவில்லை. எங்கும் எதிலும் ஈசனைக் காணும் உணர்வுடன் யாத்திரை செய்வோம், மனித வாழ்வில் முழுமை காண்போமாக.

# 55. ஞானக் குழந்தை புகட்டும் ஞானம்

பரிமளா தேவேந்திரன், விருதுநகர்.

மழலைப் பருவத்தில் சிவஞானம் சித்திக்கப்பெற்ற ஞானச் செம்மல் திருஞானசம்பந்தர் அன்னை பராசக்தி சிவஞானப் பாலூட்ட, உண்ட வாய் உலர்வதற்கு முன்னர், 'தோடுடைய செவியன்' என அருட்கவி பாடத் தொடங்கிய திராவிட சிசு. ஞானப்பால் உண்டதை,

**''போதையார் பொற்கிண்ணத்து அடிசில் பொல்லாதெனத்**
**தாதையார் முனிவுறத் தான் எனை யாண்டவன்**
**காதையார் குழையினன் ...... ..........''** (282-2)

என்னும் அவரது வாக்கினாலே அறியலாம். பதினாறாவது அகவையில் திருமண மங்கள நாளன்று திருநல்லூர்ப் பெருமணம் ஆலயத்தில் இறைவனை வழிபடச் சென்ற ஞானக் குரவர் தம் மனைவியுடனும் திருநீலநக்க நாயனார், திருமுருக நாயனார், திருநீலகண்ட யாழ்ப்பாணர் முதலிய சிவனடியார்களுடனும் தம்முடன் வந்த சுற்றத்தார்களுடனும் 'நமச்சிவாயப் பதிகத்தை' ஓதிக் கொண்டே இறையருட் சோதியில் கலந்தருளினார்.

''ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற கூட்டத்துப் பிறந்த பேரின்பம் அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக் கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறு இருந்ததெனக் கூறப்படாத தாய் யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பம் உறுவதோர் பொருள்'' என அகப்பொருளுக்கு இறையனார் களவியலுரையில் நக்கீரர் தரும் விளக்கம் மானிடக் காதலுக்கு மட்டுமல்லாது இறைக் காதலுக்கும் ஏற்புடையதே. இவ்வகையில் மண்ணில் நல்ல வண்ணம் வாழ நம் அகவாழ்விற்கும் புறவாழ்விற்கும் ஏற்ற நெறிகளை வகுத்துக் காட்டுவன சங்க இலக்கியங்கள் என்றால் தோணிபுரத்து அண்ணலும், அப்பரும், மணிக்கவாசகரும் தம்மைத் தலைவியாகவும் இறைவனைத் தலைவனாகவும் பாவித்துப் பாடிய செஞ்சொற் பதிகங்கள் ஆன்மீக வாழ்க்கைக்கு வழிகாட்டுபவைவாம்.

திருஞானசம்பந்தர் கண்ட முதற் தெய்வக்காட்சியின் தொடக்கமே அகப்பாடலாகச் சன்மார்க்க நெறியாகிய இறைவன் இறைவியின் இயல்பினை இயம்புவதாகத் 'தோடுடைய செவியன்' என

அமைந்துள்ளது. தோடுடைய செவியனின் இடப்பக்கத்தை இடமாகக் கொண்ட இறைவியின் கருணையை நினைந்து ஞானக் குழவி பாடிய இப்பாடலுக்குப் ''பல்லுயிரும் களிகூரத் தம்பாடல் பரமர்பால் செல்லு முறை பெறுவதற்குத் திருச்செவியைச் சிறப்பித்து'' என்று சேக்கிழார் தரும் விளக்கமும் ஆன்மாக்களின் மும்மலங்களையும் போக்கி, இறையருள் இன்ப வெள்ளத்தில் திளைக்கச் செய்ய விரும்பும் ஞானசம்பந்தரின் பேராவாவினை உணர்த்துகின்றது.

உமையொரு பாகனாக விடையின் மீதேறி வந்து இறைவன் காட்சியளித்தமையால், அவ்வினிய காட்சி ஆளுடைய பிள்ளையாரின் இதயக் கமலத்தில் பசுமரத்தாணி போல் பதிந்து பல இடங்களிலும் அவரது வாக்காக வெளிப்படுகின்றது.

**''வண்டார் குழல் அரிவையொடு பிரியாவகை பாகம்**
**பெண்தான் மிகவானான்.......''** (9.1)

**''உண்ணாமுலை உமையாளொடும் உடனாகிய ஒருவன்**
**பெண்ணாகிய பெருமான் .....''** (10-1)

**''தேனை வென்ற மொழியாள் ஒருபாகம்''** (24-3)

**''குயிலாரும் மென்மொழியாள் ஒருகூறாகி....''** (152-1)

என்று இறைவனின் அர்த்தநாரீஸ்வரராக விளங்கும் அழகுக் கோலத்தை வாய்க்குமிடமெல்லாம் வாயாரப் புகழ்வது, சிவனும் சக்தியும் ஒன்றிணைந்து காணப்படுவது போன்று இல்லறத்தில் கணவனும் மனைவியும் உடலால் வேறுபட்டு நிற்பினும் உள்ளத்தால் ஒன்றி வாழ்தல் வேண்டும்; அந்நிலையில் தான் இல்லறக் கடலையும் பிறவிப் பெருங் கடலையும் எளிதாகக் கடந்து பரமனின் பாதார விந்தங்களைச் சென்றடைய முடியும் என்பதை உணர்த்துவதற்கே. இதனையே நாயன்மார்களின் வாழ்க்கை வாயிலாகச் சேக்கிழார் பெரியபுராணத்தில் உணர்த்துகின்றார். இறைவன்பால் தம்பதியரிடையே ஒத்த உணர்வும் பற்றும் இன்மை காரணமாகவே காரைக்காலம்மையார் இல்லறம் துறந்து, என்புக்கோலம் பூண்டு தவநெறிச் செவ்வியராய் இறைவன் திருவடி நீழலை அடைகின்றார்.

இறைவனின் உரு, அருவ, உரு அருவ மேனியில் ஆழ்ந்து போற்றித் துதிக்கும் சம்பந்தர் இறைவியோடு இணைந்து தோன்றும் காட்சியையும் அழகாக எடுத்துரைக்கின்றார்.

''வன்புற்று இளநாகம் அசைத்து அழகாக
என்பிற் பலமாலையும் பூண்டு எருதேறி
அன்பிற் பிரியாது அவளோடும் உடனாய்
இன்புற்றி ருந்தான்றன் இடைமருது ஈதோ'' (32-6)

என்றும்

''மாதர் மடப்பிடியும் மடவன்னமும் அன்னதோர்
நடையுடைம் மலைமகள் துணையென மகிழ்வர்'' (136-1)

என்றும் போற்றுகிறார். மேலும் திருக்கழுமலப் பதிகத்தில் (282) 'பெண்ணின் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததே' என்றும் 'பேரறத்தாளொடும் பெருந்தை இருந்ததே' என்றும் இறைவனும் இறைவியும் தம்பதியராக எழுந்தருளியிருக்கும் காட்சியினைப் போற்றிப் பாடுகின்றார். வள்ளுவன் பகர்வதுபோல் தலை மழித்தலும் தாடி வளர்த்தலும் வேண்டாது. உலகம் பழித்ததை ஒழித்து இல்லறக் கடலில் நீந்திக் கொண்டே இறைநெறி பிறழாது நிற்றல் என்பது மிகப் பெரிய சாதனையே. தனி மனிதனாகத் துறவு மேற்கொண்டு வாழ்பவனின் வாழ்க்கைச் சாதனையைவிட இல்லறப் பந்தத்தில் கட்டுண்டாலும் நிலை தடுமாறாது இறைநெறி நிற்றலும் சமூகப் பணியாற்றலும் போற்றுதற்குரியதாகும். அத்தகையோருக்கும் வீடுபேறு உறுதி என்பதை உணர்த்தும் குறியீடாக இறைவன் இறைவியோடு எழுந்தருளும் அருள் காட்சியை இசைக்கின்றார். அர்த்தநாரீஸ்வரர் தோற்றம் தெய்வீகக் காதலை உணர்த்தும் குறியீடாகும். அம்மையப்பர் காட்சி மானிடக் காதலைச் செப்பும் குறியீடாகும். மனிதன் மனிதனாக மானுடப் பண்புகளோடு வாழ்ந்து இல்லற வாழ்வில் படிப்படியாக முதிர்ச்சியடைந்து தெய்வீக நிலையை அடைய வேண்டும் என்பதே ஞானக் குழந்தை புகட்டும் ஞானமாகும்.

காணும் பொருளெல்லாம் இறைவனைக் காணும் ஞானப் பண்டிதனின் உள்ளம் ஏனைய உயிர்களின் காதல் வாழ்வைக் கண்டும் களித்துப் பாடுகின்றது. ஆணும் பெண்ணும் இணைந்து இன்புறும் காட்சியை,

''கலையினார் மடப்பிணை துணையொடுந் துயிலக்
கானலம் பெடை புல்கிக் கனமயிலாலும்
இலையினார் பைம்பொழில் இலம்பையங் கோட்டூர்'' (76-1)

எனவும், இரை தேடற் பொருட்டுப் பிரிந்து சென்ற பறவைகள் மீண்டும் தத்தம் துணையை நாடிவரும் இனிய காட்சியை,

''பொன்னம்பூங் கழிக்காணல் புணர்துணையோடு உடன்வாழும்
அன்னங்காள் அன்றில்காள் அகன்றும் போய்வருவீர்''(321-2)

எனவும், பிடியூட்டிப் பின் உண்ணும் களிற்றின் கடமையுணர்வை,

''மருங்களியார் பிடிவாயில் வாழ்வெதிர் இன்முளைவாரிக்
கருங்களியானை கொடுக்கும் கற்குடி மாமலையாரே'' (43-4)

எனவும், வழி தவறிய பிடியின் மீது காதல் கொண்ட களிற்றின் பாசப் பிணைப்பினை,

''பிழைத்த பிடியைக் காணாதோடிப் பெருங்கை மதவேழம்
அழைத்துத் திரிந்து அங்கு உறங்கும் சாரல்'' (69-4)

எனவும் அழகாகச் சித்திரிக்கின்றார். இதுதான் இயற்கையான காதல் வாழ்க்கை. மானுடரும் இயற்கையோடு இயைந்த இல்லற வாழ்வு நடத்தி இறைவனடி சேர்தல் வேண்டும் என்பதே ஞானக் குழந்தையின் விருப்பம். எனினும் அவருள்ளம் இல்லற வாழ்வை விரும்பவுமில்லை; வெறுத்து ஒதுக்கவுமில்லை. இதை இறைவனிடம் அம்மி மிதித்தல் முதலிய சடங்குகளையுடைய திருமணம் தனக்கு வேண்டாம் என்றும் தனக்குத் திருமணம் வேண்டும் என்று எத்தலத்தினிலும் கேட்டது இல்லை என்றும் அவர் பாடிய திருநல்லூர்ப் பெருமணம் பதிகத்தின் (383-1) வாயிலாக அறியலாம். பெற்றோரின் விருப்பத்திற்கு இணங்கும் சம்பந்தரின் உள்ளம் பற்றற்றானின் திருவடியைச் சிக்கெனப் பற்றியதால் இல்லறம் ஏற்க வேண்டும் என்ற துடிப்போ, துறவு மேற்கொள்ள வேண்டும் என்ற தாகமோ இன்றி இறை சிந்தனையில் ஆழ்ந்திருத்தலால் அனைத்துயிர்களின் இன்ப வாழ்வினையும் இயல்பாகக் கண்டு மகிழ்கின்றது. பூம்பாவையின் தந்தை சிவநேசர் ''அடியனேன் பெற்ற பாவையைத் திருமணம் புணர்ந்தருள் செய்யும்'' (3011) என்று சம்பந்தரை வணங்கி வேண்டிக் கொள்ள, நீர் பெற்ற பெண் விடத்தினால் உயிர் நீக்க, யான் கற்றைவார்ச் சடை கபாலீசரின் அருள் வெளிப்பட அவளை உயிர்ப்பித்தமையால் உமது கூற்றுப் பொருந்தாது என மென்மையாகச் சம்பந்தர் மறுப்பதாகச் சேக்கிழார் பெரிய புராணத்தில் உரைப்பதும் அவரது உள்ளம் மும்மலங்களினின்றும் இயல்பாக விடுபட்டு நிற்பதையே காட்டுகிறது.

இல்லறம் ஏற்காத தொண்டுக் கிழவர் திருநாவுக்கரசரும் திருவையாற்றுத் திருக்குளத்தில் திருக்கயிலையில் மலையான் மகளுடன் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானைக் காணும் பேறு பெற்றபோது,

''காதல் மடப்பிடியோடுங் களிறு வருவன கண்டேன்'' (4-3-1)
''கோழி பெடையோடுங் கூடிக் குளிர்ந்து வருவன கண்டேன்'' (4-3-2)

''வரிக்குயில் பேடையொடாடி வைகி வருவன கண்டேன்
கண்டேன் அவர்திருப் பாதம் கண்டறியாதன கண்டேன்'' (4-3-3)

எனப் பலவாறாக ஆணும் பெண்ணுமாக இணைந்த இன்பக் காட்சியாக இறையருள் விளங்கிற்று எனப் பேரானந்தம் பொங்கத் திருவையாற்றுப் பதிகம் பாடியுள்ளார்.

பெண் என்பவள் பேய்; மாயை ஆதலால் வெறுத்து ஒதுக்கப்பட வேண்டியவள்; பெண்ணிற்கு வீடுபேறு கிடையாது என்று கூறி, சில புறச்சமயங்கள் பெண்ணை இழிவுபடுத்தின. கடுமையான மனக் கட்டுப்பாடுகளையும் விரதங்களையும் விதித்துப் புறச் சமயங்கள் தமிழகத்தில் வேரூன்றித் தழைக்கத் தொடங்கின. மக்கள் அறியாமை இருளில் மூழ்கி, மனந் தடுமாறி, முறையான வழிபாட்டை மறக்கத் தொடங்கினர். அந்நிலையில் உலக மாந்தர் இயல்பான இல்லறமேற்று, இறையடி நீழலை அடையலாம் என மக்கள் மனிதவுணர்வுகளோடு வாழ வழி காட்டினர் சம்பந்தர் முதலாகிய சைவ சமயச் சான்றோர்கள்.

**''காமஞ் சான்ற கடைக்கோட் காலை**
**ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி**
**அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்**
**சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே''** (கற்பு-51)

எனத் தொல்காப்பியர் பகர்வது போன்ற இல்லறக் கடமைகளைச் செவ்வனே நிறைவேற்றிய பின்னர் இருவரும் உள்ளத்தால் துறவு மேற்கொண்டு வீடுபேறு அடைதலே சாலச் சிறந்ததாகும்.

உலகியலில் உழலும் போதே தந்தை, தாய், தன்னுடன் தோன்றினார், புத்திரர், தாரமென்னும் பந்தம் நீங்காதவர்க்கு உய்ந்து போகும் உபாயம் இல்லையென்று கலங்காது இறைவன் திருவடி நீழலை மறவா மனம் வேண்டும் எனச் சம்பந்தர் வழிகாட்டுவது போலத் திருநாவுக்கரசரும் தமது திருத்தாண்டகத்தில்,

**''தந்தையார் தாயார் உடன்பிறந்தார்**
**தாரமார் புத்திரரார் தாந்தாமாரே**
**வந்தவாறு எங்ஙனே போமாறேதோ**
**மாயமாம் இதற்கேதும் மகிழ வேண்டா**
**சிந்தையீர் உமக்கொன்று சொல்லக் கேண்மின்**
**திகழ்மதியும் வாளரவும் திளைக்குஞ் சென்னி**
**எந்தையார் திருநாமம் நமச்சிவாய**
**என்றெழுவார்க்கு இருவிசும்பில் இருக்கலாமே''** (6.93.10)

எனத் தெள்ளத் தெளிவாக இறைவனது திருவைந்தெழுத்து நாமத்தை மனம் ஓயாது ஓதுதல் வேண்டும் என்கிறார்.

இயற்கைக் காட்சிகளின் வாயிலாகவும் மக்களுக்கு உண்மைப் பொருளை, இறைவழிபாட்டின் இன்றியமையாமையை உணர்த்த விரும்பிய சம்பந்தர்,

**''...பேரொளியான் அமர்கோயில் அயலெங்கும்**
**மந்திவந்து கடுவனொடுங் கூடிவணங்கும் வலிதாயம்**
**சிந்தியாதவவர் தம்மடும் வெந்துயர் தீர்தல் எளிதன்றே''** (3-5)

எனக் குறிக்கோளின்றி ஓடியாடித் திரியும் குரங்குகள் கூடக் கணவனும் மனைவியுமாக வந்து வழிபடுதலைக் காட்டுகின்றார்.

''பூந்தன் நறுவேங்கைக் கொத்திறுத்து மத்தகத்திற் பொலி
யவேந்திக்
கூந்தற் பிடியும் களிறும் உடன் வணங்கும் குறும்பலாவே''
(207-8)

என்றும்

''பிடியெலாம் பின்செலப் பெருங்கைமா மலர்தழீஇ
விடியலே தடம்மூழ்கி விதியினால் வழிபடும்
கடியுலாம் பைம்பொழிற் கானப் பேரண்ணலை'' (284-1)

என்றும், பொய்கையில் அதிகாலையில் நீராடி, விதிப்படி வழிபாடு செய்ய முந்துகின்ற யானைகளின் வாயிலாகவும் அறிவுறுத்துகின்றார். இவ்விலங்கினக் காட்சிகள் கணவனும் மனைவியுமாக இறையை வழிபடுதலே சாலச் சிறந்தது என்று உணர்த்துவதாகவும் அமைகின்றது.

''பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும்
பயின்று ஓதும் ஓசை கேட்டு
வேரிமலி பொழிற் கிள்ளை வேதங்கள்
பொருள் சொல்லும் மிழலையாமே'' (132-1)

என்று சிந்தித்துச் செயலாற்றும் திறனற்ற, சொன்னதைத் திருப்பிச் சொல்லும் கிள்ளைகள் கூடப் பண்டிதர்கள் ஓதும் வேத ஓசை கேட்டுப் பழகி வேதப் பொருள் உரைக்கின்றனவே என மகிழும் சம்பந்தர் மானிடப் பிறப்பெய்தியும் இறை வழிபாட்டில் நாட்டமின்றி பித்தராய், மாக்களாய் அலைவதேன் மக்களென்று வருந்துகின்றார்.

''என்பினால் கழிநிரைத்து இறைச்சிமண்
சுவர் எறிந்து இதுநம் மில்லம்
புன்புலால் நாறுதோல் போர்த்துப்
பொல்லாமையான் முகடு கொண்டு
முன்பெல்லாம் ஒன்பது வாய்தலார்
குரம்பையின் மூழ்கிடாதே
அன்பன் ஆரூர் தொழுது உய்யலாம்
மையல் கொண்டு அஞ்சல் நெஞ்சே'' (215-8)

எனத் தேக்கத்தின் இழிநிலையைச் சம்பந்தர் உணர்த்துவது போன்று,

''மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டிப்
புறத்தோல் போர்த்தெங்கும் புழுஅழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயில் குடில்'' (சிவபுராணம் - 51-54)

என்று மணிவாசகரும் ஊனுடம்பை இகழ்கின்றார். முன்னம் உடம்பை இழுக்கு என்று இகழ்ந்திருந்த முனிவர் திருமூலர், இந்த மாமிசப் பிண்டத்தின் உள்ளே உறையும் 'உள்ளொலி'' தான் ஆன்மா; தான் இறைவன் என உணர்ந்த பின்னர் உடலை வளர்த்தேன்; உயிர் வளர்த்தேன் என்கிறார்.

''உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளல் பிரானார்க்கு வாய் கோபுரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளாமணி விளக்கே (1823)

எனத் தமது அனுபவ இறை ஞானத்தால் தெள்ளிதின் உரைக்கின்றார்.

''இறைஞ்சுவார் சிந்தையுள்ளே கோயிலாகத் திகழ்வான்''
(200-2)

''நினைப்பவர் மனத்துளான்'' (76-7)

''பாடியாடிப் பரவுவார் உள்ளத்து ஆடி'' (28.7)

''ஊன் அமரும் உடலுள் இருந்த உமைபங்கன்'' (270-4)

என்று சம்பந்தப் பெருமானும், நினைப்பவர் மனம் கோயிலாகக் கொண்டவன்' என்று அப்பரும் ஏனைய சமயச் சான்றோரும் கூறுவர். ஆன்மா இறையடி சேர்தற்கு அடிப்படை ஆதாரமாக, உறுதுணையாக உடலைக் கொள்ள வேண்டுமேயொழிய, அதனைப் போற்றுவதிலேயே சிந்தனையைச் செலுத்தி, காலத்தை வீணாக்கக் கூடாது என்பதே சமயச் சான்றோரும் உணர்த்தும் உண்மையாகும். மேலும்,

''தந்தையார் போயினார் தாயரும் போயினார் தாமும் போவார்
கொந்தவேல் கொண்டொரு கூற்றத்தார் பார்க்கின்றார்
கொண்டு போவார்
எந்த நாள் வாழ்வதற்கே மனம் வைத்தியால் ஏழை நெஞ்சே''
(215-2)

என எமனின் பாசக் கயிறு என்றோ ஒரு நாள் விழுவதற்கு முன்னர் உயிர்கள் தாம் பிறவிக் கடலைக் கடக்க வழியாது என்பதனையும் சம்பந்தர் உணர்த்துகின்றார். இடரினும் தளரினும் நோய் தொடரினும், தும்மலோடு அருந்துயர் உற்றிடினும், உண்ணினும் பசிப்பினும், துஞ்சலும் துஞ்சல் இலாத போழ்தினும் உள்ளம் இடையறாது பஞ்சாக்கரத்தை ஓதிக் கொண்டே இருத்தல் வேண்டும்.

''பண்டை இராவணன் பாடி உய்ந்தன
தொண்டர்கள் கொண்டு துதித்த பின்னவர்க்கு
அண்டம் அளிப்பன அஞ்செழுத்துமே'' (280-8)

என ஆணவமும் ஆங்காரமும் மிக்க, ஒழுக்கத்திற் பிழைத்த இராவணனே அஞ்செழுத்து ஓதி உய்ந்தான் எனில் நாம் ஓதி உய்வு பெறுவதில் ஐயமில்லை என்கிறார் சம்பந்தர் மேலும்,

**''தும்மல் இருமல் தொடர்ந்த போழ்தினும்**
**வெம்மை நரகம் விளைந்த போழ்தினும்**
**இம்மை வினையடர்ந்து எய்தும் போழ்தினும்**
**அம்மையினுந் துணை அஞ்செழுத்துமே''** (280-6)

எனத் தெளிவாக ஓதுகின்றார். பஞ்சாக்கரப் பதிகம், நமச்சிவாயப் பதிகம், திருநீற்றுப் பதிகம் முதலியனவற்றை அன்றாட வாழ்வில் ஓதி உயிர்கள் சேமமுற வேண்டும் என்பதே அவர் அவா.

இப்பூவுலகில் உயிர்கள் ஆண், பெண் என்று இரு இனமாகப் பிறக்கின்றன. ஆண் சிவம் என்றும், பெண் சக்தி என்றும் கருதப்படுகின்றது. சிவனும் சக்தியும் தனித்தும் இணைந்தும் ஒன்றிலொன்று கலந்தும் காட்சியளிக்கின்றனர். தனித்தனியாகப் பிறந்த உயிர்கள் பிரம்மச்சாரியாகவோ துறவியாகவோ தனித்து நின்றேனும் ஆன்மீக வாழ்வில் ஈடுபடலாம் என்பதை உணர்த்தவே அம்மை, அப்பனின் கோலத்தைத் தனித்தனியாகவும் சம்பந்தம் உரைக்கின்றார். அடுத்ததாக, சிவனும் சக்தியும் போல ஆணும் பெண்ணும் திருமணச் சடங்குகளால் இணைந்து இல்லறத்தில் ஈடுபட்டாலும் ஆன்மீக நெறியில் நின்று வீடுபேறடையலாம் என்பதை உணர்த்தவே அவர்கள் அம்மை அப்பராகக் காட்சியளிப்பதைக் காட்டுகிறார். இல்லறத்தில் ஈடுபட்டோர் உணர்வு ஒன்றி ஈருடல் ஓருயிராகச் சங்கமிக்கின்ற உயர்நிலையை எட்டக் கருத்தொருமித்த தம்பதியராய் வாழத் தொடங்க வேண்டும். இணை பிரியாது வாழ வேண்டும் என்ற எண்ணம் வலுப்பெற, காலப்போக்கில் மனம் முதிர்ச்சியடைந்து சங்கமித்தல் எளிதாகும் என்பதை உணர்த்தவே அர்த்தநாரீஸ்வராகக் காட்சியளிப்பதைப் போற்றித் துதிக்கின்றார்.

ஆணும் பெண்ணுமாக இணைந்து வாழும் இல்லற வாழ்விலே இறையை அடைய முடியும் என்பதையும் அடைய வேண்டும் என்பதையும் அஃறிணை உயிரினங்கள் வாயிலாகவும் இறை உருவ வழிபாட்டு வாயிலாகவும் ஞானக் குழந்தை நமக்கு ஞானம் புகட்டுகின்றது. அவர் காட்டும் வழி நின்று இறைவன் திருவடி நீழலை அடைவோமாக!

# 56. திருக்கடைக்காப்பு

**பனசை சுவாமிநாதன்,** திருப்பனந்தாள்.

'சைவத்தின்மேல் சமயம் வேறில்லை', 'மேன்மை கொள் சைவ நீதி, 'மறை முடிவாம் சைவம்', 'திவ்வியம் பழுத்த சைவம்', 'ஒரும் வேதாந்தத்து உச்சியில் பழுத்த, ஆரா இன்ப அருங்கனி பிழிந்த, சாரம் கனிந்த சைவசித்தாந்தம்' என்றெல்லாம் தமிழ்ச் சான்றோர்கள் சைவ சமயம் பற்றிப் பல்காலும் உளங்கனிந்து உவந்து பாடினார்கள். பழமையும் பெருமையும் மிக்க சைவத்திற்கு அமைந்த அருட்பிழிவாம் திருமுறைகள் பன்னிரண்டனுள், ஆளுடைய பிள்ளையின் அருந்தமிழ் (பதிகங்கள்) தன்னிகரற்ற சிறப்புமிக்கது. அவர்தம் திருவாக்குகளில் (பதிகங்களில்) நிறைவாக அமையும் கடைக்காப்பின் நுட்பங்களையும், நயங்களையும் ஓராற்றான் தொட்டுக் காட்ட விழைவதே இக்கட்டுரையின் நோக்கம் ஆகும்.

## திருக்கடைக்காப்பு

பதிகப்பாடல்களைப் பாடி, நிறைவில் அதனைப் பற்றிச் சிறப்பித்துக் கூறி, அதனைப் பாடி மகிழ்ந்தால் கிடைக்கும் பயன்களைப் பற்றிக் கூறுவதே திருக்கடைக்காப்பு எனப்படும். வடமொழியில் இவ்வாறு பயன்தருவனவற்றைக் கூறுதல் பலஸ்ருதி எனப்படும். பிறர் பாடாத கடைக்காப்பு என்ற ஓர் உயர்ந்த அமைப்பைப் பாடிய சீர்மையால் ஆளுடைய பிள்ளையின் பதிகங்களையே ஒட்டு மொத்தமாகத் திருக்கடைக்காப்பு' எனக் கூறலும் உண்டு.

**'திருப்பதிகம் நிறைவித்துத் திருக்கடைக்காப் புச்சாத்தி'**

(பெரியபுராணம் - சம்பந்தர் - 80)

எனும் சேக்கிழார் வாக்கும் ஈங்கு ஒப்புநோக்கத்தக்கது.

## கடைக்காப்புப் பொருள் அமைப்பு

பெரும்பாலும் எல்லாப் பதிகங்களிலும் இறுதியில் நிறைவுப் பகுதியாக அமையும் கடைக்காப்பில், பதிகம் பற்றிப் பல சொற்களால் குறிக்கும் திறமும், அதன் இசை, பண் முதலான அமைப்புகளும், அதனை முறைப்படி ஓதுவார், கேட்பார் எய்தும் பயன்களும் பற்றிச் சொல்லும் திறமும் அமைந்துள்ளன. அதுபற்றி விரிவான அளவில் ஒரு தொகுப்பாய்வு செய்தல் தக்கதாகும்.

**பதிகம் பற்றிக் குறிக்கும் குறியீடுகள்**

அருந்தமிழ்ப் பதிகங்கள் பல்லாயிரம் பாடிய சம்பந்தர் 'பதிகம்' என்பதைக் குறிக்கப் பல சொற்களைப் பயன்படுத்தியுள்ளார்.

**'எண்' அளவில் சுட்டல்**

பதிகம் பற்றிப் பல அடைமொழிகள் சேர்த்துச் சொல்லாமல். பதிகத்தில் உள்ள பாடல் எண்ணிக்கை ஒன்றால் மட்டுமே சுட்டும் அமைப்பும் உண்டு. (இவ்வாய்வில், அடைப்புக் குறிக்குள் உள்ள எண்கள் ஸ்ரீகாமகோடி ஆய்வு மைய (வெளியீடு எண்-12-ல் உள்ள)- அடங்கல் முறையில் உள்ள பக்க எண்கள்)

'இசையால் சொன்ன **பத்து**' (அடங்கல்முறை - பக்கம் 24)

'காழியர்கோன் நவில் **பத்தும்**' (அடங்கல்முறை - பக்கம் 55)

'சம்பந்தன் மொழி **பத்தும்**' (அடங்கல்முறை - பக்கம் 85)

'நவின்றன **பத்தும்**' (அடங்கல்முறை - பக்கம் 87)

'சம்பந்தன **பத்தும்**' (அடங்கல்முறை - பக்கம் 90)

'சீர் செய்த **பத்தும்**' (அடங்கல்முறை - பக்கம் 104)

'தமிழ் ஐந்தோடு **ஐந்தும்**' (அடங்கல்முறை - பக்கம் 237)

**'பாடல்' என மட்டும் குறித்தல்**

பதிகங்களைப் பாடல் என்று மட்டும் வாளாக் குறிப்பிட்ட இடங்களும் பல உள்ளன.

'சம்பந்தன் தன **பாடல்**' (அடங்கல் முறை - பக்கம் 91)

'பாமரு **பாடல்கள்** பத்தும்' (அடங்கல் முறை - பக்கம் 119)

'காழி', நிலையாக
நினைந்தவர், **பாடல்** (அடங்கல் முறை - பக்கம் 144)

'படிகொள் **பாடல்** வல்லவர்' (அடங்கல் முறை - பக்கம் 146)

**'சொல்' என்றே மொழிதல்**

பற்பல சுவைதரும் சொற்களைக் கூட்டிப் பாடிய பதிகங்களைச் 'சொல்' என்றே சில இடங்களில் குறிப்பிடுவார்.

'நம்பனார் கழலடி
ஞானசம்பந்தன் **சொல்**' (அடங்கல்முறை - பக்கம் 47)

'அணிகொள் காழி
ஞானசம்பந்தன் **சொல்**' (அடங்கல்முறை - பக்கம் 62)

'அந்தி வண்ணன் தன்னை அழகார்
ஞானசம்பந்தன் **சொல்'** (அடங்கல்முறை - பக்கம் 134)

**சிறப்பு அடைகளுடன் சேர்த்து மொழிதல்**

இவ்வாறு மட்டுமல்லாமல், பதிகப் பொருள் குறிக்கவும், அதன் சிறப்பை உணர்த்தவும்,

'பரவிய பந்தன் **மெய்ப்பாடல் வல்லவர்'** (128)

**சொல், வண்ண மூன்றும் தமிழில் தெரிந்து'** (153)

என்று உரைத்தவிடங்கள் சிலவாகும்.

**'சொல் மாலை' முதலான சொற்களால் சுட்டுதல்**

'சொல்' என்றே மொழிந்ததோடு, சொல்மாலை, சொல் வழிபாடு என்ற குறியீடுகளாலும் சம்பந்தர் சாற்றுதலைத் திருமுறையில் காண முடிகிறது.

மஞ்சனை வணங்கு திருஞானசம்பந்தன **சொல்மாலை** (118)

'பகவனாரைப் பரவு**சொல்மாலை** பத்தும் (123)

'பழியா மறைஞான சம்பந்தன் **சொல் வழிபாடு'** (31)

**தமிழொடு இயைத்துச் சொன்ன நுட்பம்**

தமிழ் நாட்டில் 'இருண்ட காலம்' எனச் சொல்லப்பெற்ற களப்பிரர் காலத்துக்குப் பின் தோன்றிய சம்பந்தர், தமிழின்மேல் மாளாத காதல் உடையராய், தம்மையும், தாம் பாடிய பதிகங்களையும் தமிழொடு இயைத்துச் சொன்ன இடங்கள் பற்பலவாகும்.

'தமிழ்' என்று அடைமொழிகள் எதுவும் சேர்க்காமல் பதிகத்தைக் குறிக்கும் சம்பந்தரின் வாக்குகள் தமிழொடு அவர்க்கிருந்த இணைப்பைத் தெளிவாகக் காட்டுகின்றன.

'காழியுள் ஞானசம்பந்தன் சொன்ன **தமிழால்'** (53)

'சம்பந்தன் **தமிழ்** பகர்ந்த சாய்க்காட்டுப் பத்தினையும்' (56)

'நடையாரின் சொல் ஞானசம்பந்தன் **தமிழ்** வல்லார்க்கு' (67)

தமிழுடன் சில அடைகள் சேர்த்து,

'சிந்தையால் சொன்ன **செந்தமிழ்** வல்லார்' (33)

'உறும் பொருளால் சொன்ன **ஒண்டமிழ்** வல்லார்க்கு' (45)

'ஞானமிகு பந்தன் **ஒண்டமிழ்களின்'** (51)

'சொல்லிய **அருந்தமிழ்** பத்தும்' (69)

'பரவிய **செந்தமிழ் பத்தும்**' (131)

'பரவு சம்பந்தன் செந்தமிழ் வல்லார்' (133)

என்றெல்லாம் கூறிய இடங்கள் பல இஃதொத்த அடைமொழிகள் பிறசேர்த்து,

**'பந்தனுரை செய்தமிழ்கள் பத்துமிசை கூர'** (101)

**'குலமார்தமிழ் கூறுவர் கூர்மையரே'** (93)

என்றும்,

தமிழ், சீரும் சிறப்பும் மிக்கது போலவே, பதிகங்களும், சீரையும் சிறப்பையும் மிகுந்த அளவில் பெற்றவை, ஓதுவோர்க்கும் சீரும் சிறப்பும் மிகுவிப்பன என்னும் பொருளடங்க,

**'சீர்மிகுந்த தமிழ் வல்லார்'** (117)

**'சீரின்மலி செந்தமிழ்கள் செய்யுமவர்'** (141)

என்றும், தமிழ்மொழி, இயலுடன் இசையும் சேர்த்து இனிமை தருவது போல, பதிகங்களும் பண்ணாகிய இசையமைப்பு பெற்று இனிமைதரும் என்ற பொருளில்,

'பண்பொலி **செந்தமிழ்** மாலை பாடிய பத்து' (66)

என்றும்,

தெய்வீகம் சார்ந்ததும், சென்ற இடத்தால் செலவிடாது தீதொரீஇ நன்றின்பால் உய்ப்பதும் ஆகிய பதிகத்தினை,

**'திருநெறிய தமிழ் வல்லவர் தொல்வினை'** (83)

என்றும் உரைத்த இடங்கள் உண்டு.

தமிழ் சொற்களால் தொகுக்கப்பட்ட மாலையே பதிகம் எனும் பொருள்பட,

**'சூலப் படையானைச் சொன்ன தமிழ்மாலை'** (2)

**'நாதனை ஞானமிகு சம்பந்தன் தமிழ்மாலை'** (97)

**'ஞானசம்பந்தன் ஒண்டமிழ் மாலை கொண்டு'** (125)

எனப் பாடுகிறார் சம்பந்தர்.

## பதிகப் பலன் கூறும் அமைப்புகள்

'அலகில் கலையின் பொருட்கெல்லை ஆடும் பெருமான் கழல்', 'கற்றதனால் ஆய பயன்...நற்றாள் தொழலே' - என்று தமிழ்ச் சான்றோர் மொழிந்தபடி, வாழ்த்துவதும் வாயாரப் பாடுவதும் அவன்

அருள் பெறவே ஆனாலும், அவ்வாறு பாடும் பதிகங்களின் பயன் களைக் கூறும் சம்பந்தர்தம் திருவாய்மொழிகள் பற்பல அமைப்பில் உள்ளன.

அப்பதிகங்களை எப்படியெல்லாம் அடியார் பாடுதலோடு ஆடவும் செய்வர் என்றும் இசைபொருந்தப் பாடல் நலம் என்றும் குறிக்கிறார் பிள்ளையார்.

'கோலத்தால் பாட வல்லார்' (2)

'பத்திவை, கூறுமாறு வல்லார்' (4)

'பண்பயன் கொளப் பாட வல்லார்' (51)

'இசைபாடும் பத்தர்....

'இன்னிசை ஈரைந்து இசைந்தேத்த வல்லார்' (136)

'மேவி இசை மொழிவார்' (190)

'அருந்தமிழ் பாடுவார் ஆடுவார்' (245)

'பண்ணாரப் பாட வல்லார்க்கு' (253)

'பண்ணியல் பாடல் வல்லார்கள்' (26)

'பண்ணியல் பாகப் பத்திமையாலே
பாடியும் ஆடியும் பயில' (114)

'தமிழ் மாலை, பண்ணால் பாடியாட' (134)

'தமிழ், விரகன் சொன்ன இவை பாடியாட' (158)

என்று பலப்பல இடங்களில் பதிகத்தைப் பாடும்-ஓதும்-தன்மைகள் பற்றிப் பகர்கின்றார் சம்பந்தர்.

பலன் கூறுகையில், விரிவான பல அமைப்புகளில் அவற்றை உரைக்கிறார். இன்பமே எந்நாளும் துன்பமில்லை என்பதை, 'தமிழ், முழுதும் வல்லவர்க்கு இன்பமே தரும்' (201) எனும் பதிக அடிகள் தெளிவு படுத்துகின்றன.

உலகியலில் ஏற்படும் பழியும், பாவமும் வாராது, அல்லது நீங்கும் என்று பதிகப் பயனை மொழியும் இடங்கள் சில.

'பண்ணியல் பாடல் வல்லார்கள்
பழியொடு பாவம் இலரே' (26)

'ஒண்டமிழ் வல்லார்க்கு, அறும்பழி பாவம்' (45)

'படிகொள் பாடல் வல்லவர் தம்மேல் பழி போமே' (146)

'அருந்தமிழ் பாடுவார் ஆடுவார் பழியிலரே' (245)

பொதுவாகத் துன்பம் நீங்கும் என்பதை,

'ஏத்த வல்லோர்கட்கு 'இடர்' போமே' (136)

'மொழியே வல்லவர் தம்மிடர் திடம் ஒழியே' (203)

துன்பம் நீங்குவதோடு, நோய், பிணி முதலாயின வாரா எனக் குறிக்கும் இடமும் உண்டு.

'சொன்ன தமிழால்...ஏத்த மருவா பிணிதானே' (53)

'தமிழ்மாலை நாவில், ஓத வல்லார் உலகில் உறுநோய் களைவாரே' (97)

இம்மண்ணுலகில் அரசரைப் போலப் பாராளும் பேறும் கிட்டும் என்பர் சம்பந்தர்.

'பாமரு பாடல்கள் பத்தும் வல்லார் பார்முழுது ஆள்பவரே' (119)

பாராட்சி மட்டுமேயன்றி விண்உலகாளும் விழுமிய பேறும் எய்துவர்

எனச் சில இடங்களில் குறிப்பர்.

'வாழ்த்த வல்லார், கெழியார் இமையோரோடு (31)

'நாவினால் நவில்பவர் உம்பரார் எதிர்கொள உயர்பதி அணைவரே (48)

'இசைபாடு பத்தர் அகல் வானம் ஆள்வர் மிகவே' (51)

'தாம்போய் வானநடு இனிதாள்வர்' (55)

நில்லா உலகத்து நிலைத்தலைக் குறித்தோர், புகழ் நிறுவ வேண்டும். அப்புகழையும் நிலைநிறுத்தலாம் பதிகம் ஓதும் பண்பினால் என்றும் உரைப்பர்.

'மாலை பத்தும் தாங்க வல்லார் புகழ் தாங்குவாரே' (78)

'பத்தும் வல்லார், திருவொடு புகழ்மல்கு தேசினரே' (131)

'பாசந்தனை யற்றுப் பழியில் புகழாரே' (145)

'விண்ணும் மண்ணும் விரிகின்ற தொல் புகழாளரே' (153)

மூவுலகும் பெறவும் முடியும். மூவாத முத்தமிழ் கூட்டிப் பாடிய பதிகங்களை நாவாரப் பாடினால் என்பதும் சம்பந்தர் திருவுள்ளம்.

'சம்பந்தன் தமிழ் ஆர, மொழிவார்கண் மூவுலகும் பெறுவார்களே' (148)

'முற்றுலகம் அது ஆண்டு...' (176)

சித்தாந்தச் செம்பொருள், வினைநீக்கமும் அயரா அன்பின் அரன் கழல் செல்லுதலுமே ஆகும். பதிகப் பயன்கூறும் சம்பந்தர் பல இடங்களில் வினை நீக்கம், வினையின் தீமை தாக்காமை பற்றி உரைக்கிறார்.

'செப்பும் மாந்தர் தீவினை நோய் இலராய்' (62)

'தமிழ் வல்லார்க்கு அடையா வினைகள்' (67)

'தமிழ் வல்லவர் தொல்வினை தீர்தல் எளிதாமே' (83)

'அகல்வர் தீவினை; நல்வினையோடு உடனாவர்' (123)

'பாடியாடக் கெடும் வினைகளே' (158)

'வினை சிந்தும் விண்ணவர் ஆற்றலின்' (171)

'வல்லவர் அருவினை இலரே' (237)

'வலந்தரும் அவர்க்கு வினைவாடல் எளிதாமே' (258)

மறுபிறப்பு இல்லை என்றும், அதுவே தவம் என்றும் சம்பந்தர் அறுதியிட்டுரைக்கிறார்.

'மடியாது சொல்ல வல்லார்க்கு இல்லையாம் மறுபிறப்பே' (214)

'தமிழ்விரகன் தான்சொன்ன தமிழ் தரிப்போர் தவம் செய்தாரே' (193)

'தம் கையால் தொழுது தந்நாவில் மேற்கொள்வார் தவநெறி சென்று.. (247)

சிவனடியை அடைவர். சிவகதியைப் பெறுவர். சிவலோகத்தில் இருக்கப் பெறுவர் என்று, பேறுகளுள் எல்லாம் மேலான பேறுகளையும் எய்துவர் என இயம்புகிறார்.

'சிவலோகத்தில், எய்தி நல்ல இமையோர்கள் ஏத்த இருப்பார்களே' (104)

'சிவனுலகம்' இடராயின இன்றித்தாம் எய்துவர்' (106)

'சிரமலி சிவகதி சேர்தல் திண்ணமே' (128)

'முக்கணான் அடிசேர முயல்கின்றாரே' (176)

பதிகப் பலனாகத் தனித்தனியே சில பேறுகளைச் சொன்ன பாலறாவாயர், பலபேறுகளை ஒரே பாடலிலேயே அடுக்கிச் சொல்லும் இடமும் உண்டு.

'பொன் அடைந்தார் போகங்கள் பலஅடைந்தார் புண்ணியரே' (85)

இப்படிபட்ட பேறுகளைப் பெறுதல் உறுதி என்பதை ஆணையிட்டும் சொல்லுதல் உண்டு.

**'வானிடை வாழ்வர் மண்மிசைப் பிறவார்**
**மற்றிதற்கு ஆணையும் நமதே'** (181)

பாடுவோரேயன்றிக் கேட்போரும் பயனுறுவர் என்பார்.

**'ஞானத் தமிழ் நன்குணரச்**
**சொல்லிடல் கேட்டல் வல்லோர் தொல்லை**
**வானவர் தங்களொடும் செல்குவர்'** (185)

பல நூறு பதிகங்கள் பாடிய சம்பந்தரின் அருந்தமிழ்ப் பதிகங்களுள் இயைந்து கிடக்கும் இனிமைகள் பற்பல. அவற்றுள் கடைக்காப்பில் அமைந்த சில இனிமைத் தமிழ் மட்டும் ஈண்டு எடுத்துக் காட்டப் பெற்றன. விடுபட்டவை பலநூறு.

**'வாழியவன் சீர்பாடும் வாய்'** (குமரகுருபரர்)

# 57. சம்பந்தரும், திருநாவுக்கரசரும்

சி. பாலு, அண்ணாமலைநகர்.

அருநெறி, பெருநெறி, ஒருநெறி, திருநெறியாகிய சைவநெறியைப் பரவச் செய்தவர்கள் பலர். கி.பி 7-ஆம் நூற்றாண்டில் அவதரித்த திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் பெரிதும் சைவசமயத்திற்கும் தமிழ் இசைக்கும், தமிழ் இலக்கியத்திற்கும், தமிழ்ப் பண்பாட்டிற்கும் பெரிதும் பாடுபட்டவர்கள். ''சிவனுக்கு மேல் தெய்வமில்லை'' என்னும் முதுமொழிக்கேற்பச் சிவனையே வாழ்த்தி வழிபாடு செய்தவர்கள். இவர்களின் அவதாரம் சமண, பௌத்த சமயங்களின் ஆதிக்கத்தை வீழ்த்திச் சைவ சமயத்திற்கு மறுமலர்ச்சியை ஏற்படுத்தியது. திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய சைவசமயக் குரவர்களாகிய நால்வரில் சமகாலத்தில் வாழ்ந்த திரு என்னும் அடைமொழியோடு கூடிய நால்வரில் முன்நிலையில் விளங்குகின்ற திருஞான சம்பந்தரும், திருநாவுக்கரசரும் ஆகிய இருபெரும் அருளாளர்கள் குறித்துக் கீழ்கண்ட தலைப்பில் வேறு பெயர்கள், அவதாரம், அருள் பெற்ற தலம், பாடிய முதல் பதிகம், விளக்கிய அற்புதங்கள், இருவராலும் பாடப்பெற்றவர்கள், சமகாலத்தில் வாழ்ந்த நாயன்மார்கள், இருவரும் பாடிய பதிகத்தொகை, இறுதியாக பாடிய பதிகம், முத்தி எனும் தலைப்பில் ஒப்பீடு செய்வது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**1. வேறு பெயர்கள்**

திருஞானசம்பந்தரை ஆளுடைய பிள்ளையார், காழியர் வேந்தர், கவுணியர்கோன், சண்பயர் காவலன், முத்தமிழ் விரகர், பரசமயக் கோளரி, பாலருவாயர், சிவஞானக்கன்று, சைவசிகாமணி, ஞானத்தின் திருவுரு, நான்மறையின் தனித்துணை, மண்ணில் வளர்மதிக் கொழுந்து, கானத்தின் ஏழுபிறப்பு என்று திருமுறைகள் போற்றுகின்றன.

திருநாவுக்கரசரைக் குறிப்பிடுக்கின்ற பொழுது ஆளுடைய அரசர், வாகீசர், தாண்டக வேந்தர், உழவாரப் படையாளி, அப்பர், மருணீக்கியார் என்று திருமுறைகள் போற்றுகின்றன.

**2. அவதாரம்**

திருஞானசம்பந்தர் சோழ நாட்டில் சீர்காழிப் பதியில் அந்தணர் குலத்தில், சிவபாத விருதயருக்கும் பகவதி அம்மையாருக்கும்

சிவஞானபானுவாக, கி.பி. ஏழாம் நூற்றாண்டில் அவதரித்தார். இவருடைய அவதாரத்திற்குச் சேக்கிழார் பெருமான் கூறும் காரணங்கள் ''வேத நெறி தழைத்தோங்க, மிகுசைவத் துறை விளங்க பூதபரம்பரைப் பொலிய'' என்பதாகும்.

**''வேதநெறி தழைத்தோங்க, மிகுசைவத் துறைவிளங்க**
**பூதபரம்பரைப் பொலியப் புனிதவாய் மலர்ந்தழுத**
**சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்**
**பாதமலர் தலைகொண்டு திருத்தொண்டு பரவுவாம்''**

திருநாவுக்கரசர் திருமுனைப்பாடி நாட்டில் திருவாமூரில் வேளாளர் மரபில் புகழனாருக்கும் மாதினியாருக்கும் கலைத்துறைகள் தழைக்க, தவம் வாழ, சைவம் ஓங்கவும் அவதாரத்திற்கான காரணங்களைச் சேக்கிழார் அருளி செய்திருக்கிறார்.

**''திலகவதியார் பிறந்து சிலமுறை யாண்டகன் றதற்பின்**
**அலகில் கலைத்துறை தழைப்ப அருந்தவத்தோர் நெறிவாழ**
**உலகில் வரும் இருள் நீக்கி ஒளிவிளங்கு கதிர் போற்பின்**
**மலருமரு ணீக்கியார் வந்தவதாரஞ் செய்தார்''.**

### 3. அருள் பெற்ற தலம்

திருஞானசம்பந்த பெருமான் தமது 3-ஆம் வயதில் திருப்பிரம்மபுரம் எனும் சீர்காழியில் உமாதேவியாரின் சிவஞானப் பாலை உண்டு அருள் பெற்றார். ஞானசம்பந்தப் பெருமான் அவதரித்த தலமும், அருள்பெற்ற தலமும் சீர்காழியாகும்.

திருநாவுக்கரசர் திருவாமூரில் அவதரித்துத் திருவதிகை வீரட்டானத்தில் சூலைநோய் நீங்கப் பெற்று அருள் பெற்றார்.

### 4. பாடிய முதல் பதிகம்

திருஞானசம்பந்தர் பாடிய முதல் பதிகம் ''தோடுடைய செவியன்'' எனத் தொடங்கும் பதிகம்.

**''தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண் மதிசூடி**
**காடுடைய சுடலைப்பொடி பூசிஎன் உள்ளங்கவர் கள்வன்**
**ஏடுடைய மலரான் முனைநாட் பணிந்தேத்த அருள்செய்த**
**பீடுடைய பிரமாபுர மேவிய பெம்மான் இவனன்றே''**

-திருஞானசம்பந்தர்.

இப்பதிகத்தில் விடையேறி வருதல், மதிசூடினான், சுடலைப் பொடி பூசி இருந்தான், உள்ளங்கவர் கள்வன், ஏத்த அருள் செய்தான் என்ற சொற்கள் ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்கிற இறைவனின் பஞ்சகிருத்தியப் பெருமையையும், சுட்டிக்காட்ட

முடியாததாகப் பரம்பொருளை ''இவனன்றே'' என்ற சொற்களால் சுட்டிக் காட்டியும் திருஞானசம்பந்தப் பெருமான் அருளிச் செய்திருக்கிறார். த் + ஓ = தோ என்று பாடல் தொடங்குவதால் ஞான சம்பந்தரின் முதல் பாடல் பிரணவத்தை முதலாகக் கொண்டே பதிகத்தை அருளிச் செய்திருக்கின்றார்.

திருநாவுக்கரசர் பாடிய முதல் பதிகம்

**''கூற்றாயினவாறு விலக்ககிலீல் கொடுமை பலசெய்தன நான் அறியேன்**
**ஏற்றாயடிக்கே யிரவும் பகலும் பிரியாது வணங்குவன் எப்பொழுதும்**
**தோற்றாதென் வயிற்றி னகம்படியே குடரோடு தொடக்கி முடக்கியிட**
**ஆற்றேன் அடியேன் அதிகைக் கெடில வீரட்டானத் துறையம்மானே!''**

(அப்பர் தேவாரம்)

சூலைநோயினால் பாதிக்கப்பட்ட வருத்தத்தை உணர்த்தி இரவும் பகலும் பிரியாது வணங்குவேன் என்று அருளிச் செய்திருக்கிறார்.

இறைவன் (சிவபிரான்) திருஞானசம்பந்தருக்குப் பாலைக் கொடுத்து ஆட்கொண்டான். திருநாவுக்கரசருக்குச் சூலை நோயைக் கொடுத்து ஆட்கொண்டான்.

**5. விளக்கிய அற்புதங்கள்**

**திருஞானசம்பந்தர்**

1. திருஞானசம்பந்தர் உமாதேவியாரிடம் திருமுலைப்பால் உண்டு 3 வயதில் பதிகம் பாடியது.
2. சிவபெருமானிடத்தில் பொற்றாளமும், முத்துப் பல்லக்கும் முத்துச் சின்னமும், முத்துக் குடையும் முத்துப்பந்தரும் உலவாக்கிளியும் பெற்றது.
3. பாலை நிலத்தை நெய்தல் நிலமாகும்படி பாடியது.
4. ஆண் பனைகளைப் பெண் பனைகளாக்கியது.
5. ''மந்திரமாவது நீறு'' எனும் திருநீற்றுப் பதிகம் பாடிப் பாண்டிய மன்னனின் கூனை நீக்கியது.
6. சமணரோடு அனல்வாதம், புனல் வாதம் புரிந்து தேவாரத் திருவேட்டை அக்கினியில் இட்டுப் பச்சையாய் எடுத்தது.
7. ''வாழ்க அந்தணர்'' பதிகம் அருளி வைகையிலே இட்டு எதிரேறும்படி செய்தது.

8. புத்தநந்தியின் தலையிலே இடிவிழச் செய்தது
9. ஆற்றிலே தாமும், அடியாரும் ஏறிய ஓடத்தைத் திருப்பதிகம் அருளி கரை சேர்த்தது.
10. பூம்பாவை எனும் இறந்த பெண்ணினது எலும்பைப் பெண்ணுரு வாக்கி உயிர் பெற்று எழும்படி செய்தது.
11. திருமருகலில் விடத்தினால் இறந்த செட்டியை உயிர்ப்பித்தது.
12. தமது திருக்கல்யாணத்தைத் தரிசிக்க வந்தவர்கள் எல்லோரையும் தம்மோடு அக்கினியிலே புகுவித்து முத்தியில் சேர்த்தது.

### திருநாவுக்கரசர்

1. சமணர்களாலே ஏழு நாள் சுண்ணாம்பறையிலே பூட்டப்பட்டிருந்தும் வேகாது பிழைத்தது.
2. சமணர் கொடுத்த நஞ்சு கலந்த பாற்சோற்றை உண்டு சாகாது பிழைத்தது.
3. சமணர் விடுத்த கொலை யானையினால் வலஞ்செய்து வணங்கப் பட்டது.
4. சமணர் கல்லிற் சேர்த்துக்கட்டிக் கடலில் இடவும் அக்கல்லே தோணியாகக் கொண்டு கரையேறியது.
5. விடத்தினால் இறந்த அப்பூதி அடிகளாரின் மகனை உயிர்ப்பித்தது.
6. காசிக்கு அப்பால் ஒரு தடாகத்தினுள்ளே முழுகி, திருவையாற்றிலே வாவியின் மேலே தோன்றிக் கரையேறி, யாதும் சுவடுபடாமல் ஐயாற்றரசின் கண்டறியாத திருப்பாதத்தைக் கண்டது.

### இருவரும் சேர்ந்து விளக்கிய அற்புதங்கள்

1. திருமறைக்காட்டில் (வேதாரண்யம்) திருக்கதவு திறக்கப் பாடியது (அப்பர்), திருக்கதவு அடைக்கப் பாடியது(திருஞானசம்பந்தர்).
2. திருவீழிமிழலை தலத்திலே திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் படிக்காசு பெற்றுப் பஞ்சம் போக்கியது.

### 6. இருவராலும் பாடப்பெற்றவர்கள்

திருஞானசம்பந்தர் தமது பதிகங்களில் சண்டேசுரர், கண்ணப்பர், கோச்செங்கட் சோழர், நீலநக்கர், முருகநாயனார், சிறுத்தொண்டர், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார், தில்லைவாழ் அந்தணர், இராவணன், இராமர் ஆகியோரைப் பற்றிப் பாடி இருக்கிறார். திருநாவுக்கரசர் தமது பதிகங்களிலே சம்பந்தர், அப்பூதியடிகள்,

கோச்செங்கட் சோழர், சாக்கியர், இராவணன், இராமர் ஆகியோரைப் பற்றிப் பாடி இருக்கிறார்.

**7. சமகாலத்தில் வாழ்ந்த நாயன்மார்கள்.**

அப்பூதியடிகள், சிறுத்தொண்டர், திருநீலநக்கர், திருநீலகண்ட யாழ்ப்பாணர், குங்கிலியக்கலயர், குலச்சிறையார், நின்றசீர் நெடுமாறன், மங்கையர்க்கரசியார்.

**8. இருவரும் பாடிய பதிகத் தொகை**

திருமுறைகண்ட புராணம் தருகின்ற கணக்கின்படி, திருஞான சம்பந்தர் பாடிய மொத்த பதிகத் தொகை 16,000. திருநாவுக்கரசர் பாடிய மொத்த பதிகத்தொகை 49,000. ஆனால் இன்று நமக்குக் கிடைத்துள்ள பதிகங்கள் திருஞானசம்பந்தர் அருளிச்செய்த 384 பதிகங்கள், திருநாவுக்கரசர் அருளிச் செய்த 312 பதிகங்கள். பாடல்கள் கணக்கில் சொன்னால் திருஞானசம்பந்தரின் பாடல்கள் 4,137. திருநாவுக்கரசரின் பாடல்கள் 3,066. திருமுறையில் முதல் மூன்று திருமுறைகள் திருஞானசம்பந்தர் அருளிச் செய்தது. நான்கு முதல் ஆறு திருமுறைகள் வரை திருநாவுக்கரசர் அருளிச் செய்தது.

**9. இறுதியாகப் பாடிய பதிகம்**

திருஞானசம்பந்தர் திருப்பெருமணநல்லூர் (ஆச்சாள்புரம்) எனும் தலத்திலே தமது 16 வயதிலே திருமணம் நடைபெறும் நேரத்திலே இறுதியாகப் பாடியது.

**''காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி**
**ஓதுவார் தமை நன்னெறிக் குய்ப்பது**
**வேத நான்கினு மெய்ப் பொருளாவது**
**நாதன் நாமம் நமச்சி வாயவே''**

(திருஞானசம்பந்தர் தேவாரம்)

இப்பதிகத்தைப் பாடி திருநீலநக்க நாயனார், திருமுருக நாயனார், சிவபாத இருதயர், நம்பியாண்டார் நம்பி, திருநீலகண்டயாழ்ப்பாணர் மற்றுமுள்ள திருத்தொண்டர்கள் மனைவியருடனும் மற்றுமுள்ள சுற்றத்தவருடனும் சிவசோதியினுள் புகுந்தார்கள். திருநாவுக்கரசர் தமது 81 வயதில் திருப்புகலூரில் இறுதியாகப் பாடியது,

**''எண்ணுகேள் என்சொல்லி எண்ணுகேனே**
**எம்பெருமான் திருவடியே எண்ணினல்லால்**
**கண்ணிலேன் மற்றோர்களைகண் இல்லேன்**
**கழலடியே கைதொழுது காணின் அல்லால்**

ஒண்ணுளே ஒன்பதுவாசல் வைத்தாய்ஒக்க
அடைக்கும்போ துணரமாட்டேன்
புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணியனே''

(அப்பர் தேவாரம் - 971)

என்று பாடி முக்தி பெற்றார்.

## 10. முக்தி பெற்ற நட்சத்திரம்

திருஞானசம்பந்தர் வைகாசி மாதம் மூலம் நட்சத்திரத்தில் முக்தி அடைந்தார். திருநாவுக்கரசர் சித்திரை சதய நட்சத்திரத்தில் முக்தி பெற்றார்.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் எனும் இருபெரும் அருளாளர்களில் பதிகத்தை ஒப்பிட்டுப் பார்க்கின்ற போது இருவரும் ''நமச்சிவாய பதிகம்'' அருளிச் செய்திருக்கிறார்கள். ருத்திராட்சம், விபூதி, பஞ்சாக்கரம் எனும் சைவ சமய சாதனத்தில் அப்பர் பஞ்சாக்கரம் (நமசிவாய) குறித்துப் பாடி இருக்கின்றார். சம்பந்தர் பஞ்சாக்கரம், திருநீறு இவை இரண்டையும் குறித்துப் பதிகம் அருளிச் செய்திருக் கின்றார். ருத்திராட்சம் குறித்துப் பதிகம் இருவரும் அருளிச்செய்ய வில்லை. அப்பர் பதிகத்தில் ''திருத்தாண்டகம்'' சிறப்புடையது. எனவே தாண்டக வேந்தர் என்று போற்றப்படுகின்றார். மேலும் திருஅங்க மாலையும் சிறப்பான ஒன்றாக எண்ணிப் போற்றப்படுகின்றது. திருஞானசம்பந்தரின் மாலைமாற்று, திருஎழுக்கூற்றிருக்கை, திருவிருக்குகுறள், திருநீற்றுப் பதிகம், கோளறுப் பதிகம், இடர்களைப் பதிகம், யாழ்மூரிப்பண் போன்றவைகள் சிறப்பாகச் சைவர்களால் தமிழ்இலக்கியச் செல்வர்களால் பெரிதும் போற்றப்படுகின்றது. அன்றாடம் மக்கள் தங்கள் துன்பங்களிலிருந்து விடுபட திருஞான சம்பந்தர் அருளிசெய்த இடர்களைப் பதிகமும் நவகிரகங்களால் ஏற்படக்கூடிய துன்பங்களிலிருந்து விடுபடக் கோளறு பதிகமும் இன்றைய மக்களுக்குப் பெரிதும் பயன் அளிக்கக் கூடிய அளவில் இருக்கின்றது. சிவத்தலங்கள் 274-ல் திருநாவுக்கரசர் மட்டும் பாடிய தலங்கள் 28, சம்பந்தர் மட்டும் பாடிய தலங்கள் 110. இருவரும் சேர்ந்து பாடிய தலங்கள் 52. பதமுத்தியில் திருநாவுக்கரசர் சாலோகமும், திருஞானசம்பந்தர் சாமீபமும் அடைந்தனர் என்று சைவ அன்பர்கள் போற்றுகின்றனர்.

# 58. சம்பந்தர் நிகழ்த்திய அற்புதங்கள்

இரா. பிரியதர்சினி, கரூர்.

சைவ சமயக் குரவர்களில் சிறப்பு மிக்கவர் திருஞானசம்பந்தப் பெருமான் ஆவார். திருஞானசம்பந்தர் வயதில் சிறியவராயினும் ஞானத்தில் பெரியவர். இறைவன் திருவருளை குழந்தைப் பருவத்திலேயே பெற்று மெய்ஞ்ஞானமும், கலைஞானமும் நிரம்பித் திகழ்ந்தவர். தம் திருமணத்திற்கு வந்த அனைவருக்கும் சிவலோகக் காட்சியளித்த கருணை உள்ளம் கொண்டவர். இன்னிசையால் தமிழை வளர்த்தவர். திருநீற்று ஒளிபரப்பி, சைவத்தைத் தழைக்க வைத்தவர். இப்பெருமானின் வரலாற்றையும் அவர் நிகழ்த்திய சில அற்புதங்களையும் இக்கட்டுரையில் காண்போம்.

### திருஞானசம்பந்தரின் பிறப்பு

திருஞானசம்பந்தர் சீர்காழியில் தோன்றியவர். இவருடைய தந்தையார் சிவபாத இருதயர். தாயார் பகவதியம்மையார். குலம் கவுணிய வேதியர் குலம். சித்திரைக் திங்கள், திருவாதிரை நாளில் அவதரித்தார். இவரது காலம் கி.பி ஏழாம் நூற்றாண்டின் இடைப்பட்ட பகுதியாகும். இவ்வுலகிற்கு ஒரு பெரும் பேறாக அவதரித்த ஆளுடைய பிள்ளையார் செங்கீரை அடியும், சப்பாணி கொட்டியும் பிள்ளை விளையாட்டுகளுடன் வளர்ந்தார்.

### சிவஞானப் பால் உண்ணுதல்

பிள்ளையார் நடை பழக ஆரம்பித்த பருவம். இந்நாளில் நீராடச் சென்ற சிவபாதவிருதயருடன் பிள்ளையாரும் சென்றார். நீரில் மூழ்கிய தந்தையைக் காணவில்லையே எனப் பிள்ளைப் பெருந்தகையார் குளக்கரையில் நின்று அழத்தொடங்கினார். திருத்தோணியில் வீற்றிருக்கும் திருத்தோணியப்பர், பிள்ளையாருக்கு அருள்புரியும் பொருட்டு அம்மையாரோடு இடபவாகனத்தில் எழுந்தருளினார். திருத்தோணியப்பர் சிவஞானப்பாலைப் பிள்ளையாருக்கு ஊட்டும் படி அம்மையாரிடம் கூற அவரும் அவ்வாறே செய்தார். பாலில் கலக்கப்பட்ட சிவஞானத்தை உண்டதால் ''திருஞானசம்பந்தர்'' ஆனார். பிள்ளையார் கையில் பொற்கிண்ணத்துடனும், வாயில் பாலமுதம் உண்ட அடையாளத்துடனும் இருப்பதைக் கண்ட

சிவபாதவிருதையர் பிள்ளையாரிடம் விவரம் கேட்க, பிள்ளையார் விரலைத் தம் தலைக்கு மேல் காட்டினார். அங்கே விடையின்மேல் உமாதேவியாரோடு சிவபெருமான் வீற்றிருந்தார். இந்நிலையில் ''தோடுடைய செவியன் விடை யேறியோர்'' என்று தொடங்கும் பதிகம் ஞானசம்பந்தரால் பாடப்பட்டது.

## இறைவன் அருளால் பெற்றவை

ஞானசம்பந்தருக்கு ஞானப்பால் ஊட்டிய இறைவன் மேலும் பல நன்மைகள் ஞானசம்பந்தர் பெறும்படி செய்தார். ''மடையில் வாளை; பாய; மாதரார்'' எனத் தொடங்கும் திருப்பதிகத்தைத் தமது திருக்கையாலேயே தாள மாத்திரையை வரையறுத்துப் பாடினார். உடனே அவர் கையில் இறைவனின் திருவருளால் ஐந்தெழுத்து பொறிக்கப்பட்ட பொற்றாளம் ஒன்று வந்தது. திருநெல்வாயில் அரத்துறையில் கோயில் கொண்டுள்ள பெருமான் பிள்ளையார் அடிநோவ நடந்து வரும் இன்னலைத் தீர்க்கத் திருக்கோயில் பணியாளர்கள் கனவில் தோன்றி முத்துச் சிவிகை - குடை - சின்னம் ஆகியவற்றைக் கொடுக்க ஆணையிடுகிறார். இச்செய்தியை பிள்ளையார் கனவிலும் சென்று அறிவிக்கிறார்.

திருப்பட்டீசுரம் செல்லும் வழியோ வெப்பம் மிகுந்தது. அப்பாதையில் ஏற்படும் துன்பத்தை நீக்கச் சிவபூதங்கள் வானத்தில் தோன்றி 'இது இறைவன் திருவருள்' எனக் கூறி முத்துப்பந்தரை வானத்தில் விட்டனர். இவ்வாறாகப் பல வழிகளில் இறைவன் அருளை ஞானசம்பந்தர் பெற்றார்.

## திருஞானசம்பந்தர் நிகழ்த்திய அற்புதங்கள்

ஞானசம்பந்தர் தம்முடைய ஆற்றலால் பலவகையான அற்புதங் களை நிகழ்த்தியுள்ளார். அவற்றுள் தீராத நோயைத் தீர்த்தல், இறந்த வரைப் பிழைக்க வைத்தல், பசியைப் போக்க இறைவனை வேண்டிப் பொற்காசு பெறுதல் போன்றவை அடங்கும்.

திருப்பாச்சிலாச்சிரமத்தில் கொல்லிமழவன் என்னும் பெயருடைய அரசன் இருந்தான். இவன் சைவ நெறியினன். இவனுடைய ஒரே மகள் ''முயலகன்'' என்னும் தீராத நோயால் துன்பப்பட்டு வந்தாள். இதை அறிந்த ஞானசம்பந்தர் ''துணிவளர் திங்கள் துலங்கிவிளங்கச்'' என்ற பதிகத்தைப் பாடி அரசன் புதல்வியின் பிணியைத் தீர்த்தார். திருமருகலில் ஞானசம்பந்தப் பெருமான் தங்கியிருக்கும் நாட்களில், ஒருநாள் கோயிலின் அருகேயுள்ள மடத்தில் வணிகன் ஒருவன் கன்னி ஒருத்தியுடன் அம்மண்டபத்திற்கு வந்தான். அவர்கள் பெற்றோருக்குத் தெரியாமல் ஊரிலிருந்து வந்திருந்தனர். அந்த

வணிகனைப் பாம்பு தீண்ட அவன் உயிர் பிரிந்தது. இதனால் வருந்திய அந்த கன்னியின் இன்னலைத் தீர்க்க வணிகனை உயிர்பிழைக்க வைத்தார்.

பஞ்சத்தால் உயிரினங்கள் வாடக்கண்ட நாவுக்கரசரும், ஞானசம்பந்தரும் இறைவனை வேண்டினர். இறைவன் அருளால் அவர்களுக்கு நாள்தோறும் கோயிலின் கீழ்ப்பீடத்திலும், மேற்பீடத்திலும் ஒவ்வொரு பொற்காசு கிடைத்தது. அதன் மூலம் அடியார்களுக்கு உணவு அளித்தனர்.

திருவண்ணாமலையில் அடியார் ஒருவர் சிவபிரான் திருப்பணிக் கெனச் சில பனைமரங்களை வளர்த்தார். அவைகள் ஆண் பனை களாக ஆனதால் சமணர்கள் அவரை எள்ளி நகையாடினார். இதை அறிந்த ஞானசம்பந்தர் ''குரும்பை ஆண்பனை ஈன்குலையோத்தூர்'' எனப் பாட ஆண்பனை, பெண்பனையாகிக் காய்த்துக் கனிந்தன.

திருமயிலாப்பூரில் வணிகர் குலத்தோன்றல் சிவநேசர் என்பவர் வாழ்ந்துவந்தார். இச்செல்வந்தர் சிவனிடம் மிகுந்த பக்தி உடையவர், சிறந்த பண்பாளர், இவருக்கு நீண்ட நாள்கள் கழித்துப் பிறந்த குழந்தை திருமகள் போல அழகுடன் இருந்ததால் பூம்பாவை எனப் பெயரிட்டு வளர்த்தார். ஞானசம்பந்தருக்குத் தமது செல்வங்களையும், மகளையும் கொடுக்க முடிவு செய்தார். இந்நிலையில் பூம்பாவை அரவு தீண்டி இறந்து விடுகிறாள். தன் மகள் ஞானசம்பந்தருக்குச் சொந்தமானவள் என எண்ணிய சிவநேசர் அவளது இறந்த உடலை எரித்துச் சாம்பலை ஞானசம்பந்தரிடம் கொடுத்தார் சிவநேசர். நடந்தவற்றை அறிந்த ஞானசம்பந்தர் இறந்த பெண்ணை பிழைக்க வைத்ததோடு, அவளை வேறு ஒருவருக்குத் திருமணம் செய்து கொடுக்கும்படியும் கூறினார்.

**நாவுக்கரசரும், ஞானசம்பந்தரும்**

திருமறைக்காட்டில் அடைபட்டிருந்த கோயில் கதவைப் பதிகம் பாடி நாவுக்கரசர் திறக்க, அதே கதவைப் பதிகம் பாடி ஞானசம்பந்தர் மூடினார். மேலும் ஞானசம்பந்தரின் சிவிகையை நாவுக்கரசர் திருப்பூந்துருத்தி என்ற ஊரில் சுமக்கிறார். முதியவரான நாவுக்கரசரும், சிறுபிள்ளையான ஞானசம்பந்தரும் ஒருவர்மீது ஒருவர் வைத்திருந்த அன்பு இதன் மூலம் வெளிப்படுகின்றது.

**சமணர்களை வெல்லுதல்**

பாண்டியன் சமணத்தைப் பின்பற்ற, அவன் தேவியாகிய மங்கையர்க்கரசியோ சைவத்தைப் பின்பற்றினார். பாண்டியன் சைவத்தின்

பெருமையை அறிய, சமணர்களை தன் மீது ஏவிய வெப்பத்தைப் பாண்டியனுக்குத் திருப்பிவிட்டார் சம்பந்தர். வெப்பு நோயால் வாடிய பாண்டியனுக்கு அந்நோயை தீர்த்துச் சைவத்தின் பெருமையை உணர்த்தினார். மேலும் அனல் வாதம், புனல் வாதம் புரிந்து சமணர்களைத் தோற்கடித்தார்.

**மணம் புரிதல்**

பெற்றோரின் வேண்டுதலுக்கு இணங்கி நம்பியாண்டார் நம்பியின் மகளை மணம்புரிந்து கொண்டார். மேலும் மணக்கோலத்துடனேயே, மனைவியுடன் சிவஜோதியை வலம் வந்து ஜோதியில் கலந்துவிடுகிறார்.

குழந்தைப் பருவத்திலேயே இறைவனால் ஆட்கொள்ளப்பட்ட சம்பந்தர் பதினாறு வயது வரையே இவ்வுலகில் வாழ்ந்திருந்தாலும், பல்வேறு அதிசயங்களை நிகழ்த்தி, திருநீலகண்டரின் யாழ் இசையுடன் சேர்ந்து தமிழையும் வளர்த்து, சைவம் தழைக்கவும் பாடுபட்டார். இவ்வாறாக ஞானசம்பந்தரின் வரலாறு ஞானஅருள் நல்குவதாக உள்ளது.

# 59. சம்பந்தர் காட்டும் அடியார்கள்

வீ. புவனேஸ்வரி, புதுவை.

திருஞானசம்பந்தர் தாம் பாடிய பதிகங்களில் தம் காலத்தில் வாழ்ந்த அடியார்களையும், தமக்கு முன்பு வாழ்ந்த அடியார்களையும் பற்றிக் கூறியுள்ளார். அவ்வகையில், சீர்காழியில் பிராமண குலத்தில் பிறந்த சிவபாதவிருதயர் - பகவதி எனும் தம்பதியினருக்குப் பிறந்தவரே ஞானசம்பந்தர். இவர் தம் குலத்திற்கே உரிய ஞானத்தைப் பெற்றிருந் தாலும், இளம் பிராயத்தில் உமையம்மையாளின் ஞானப்பாலை அருந்தியதால் எல்லோரும் போற்றும் வகையில் ஞானத்திலும், பக்தியிலும் சிறந்து விளங்கினார். தம்மை வணங்கிய அடியவர்களுக்கு ஏற்பட்ட துன்பத்தை யெல்லாம் நீக்கி அவர்கள் சிவ அருளைப் பெற வழிகாட்டினார். இங்கு அவர் பாடிய பதிகங்களில் இடம் பெற்றுள்ள அடியார்களையும் அவர்களுடன் சம்பந்தர் கொண்டிருந்த உறவு முறையினையும் சுருக்கமாகக் கூறப்படுகிறது.

## அடியார்கள்

அடியார்களுள் ஆண், பெண் என இருபாலரும் உண்டு. சிவனடியார்கள் எத்தன்மை யுடையவர்களாக இருக்க வேண்டும் என்பதை ஞானசம்பந்தர் ''பண்டைத் தவத்தாலும் அடியாரொடு பயிலும் பயிற்சியாலும் சிவன்பால் பேரன்புற்றுத் தொண்டு செய்பவராவர்'' என குறிப்பிடுகின்றார். இவர்கள் இரவும் பகலும் பக்தியுடன் இறைவன் பெருமைகளை மட்டுமே கேட்டும் பேசியும் வாழ்ந்து வந்தனர். கண்கள் நீர்சொரிய கையைத் தலைக்குமேலே தூக்கி வணங்கியும். மேனி முழுவதும் திருநீறு பூசியும், அடியவர்களிடமும் மற்ற உயிர்களிடமும் அன்பு கொண்டும், மனதில் நல்லதை நினைத்தும் இறைவனை வழிபட்டு வந்தனர். சம்பந்தர் காலத்தில் வாழ்ந்த அடியார்களில் பெரும்பான்மையினர் இம்முறையிலேதான் அவரை வணங்கியுள்ளனர் எனும் செய்தியினை இனி வரும் நிகழ்ச்சிகள் மூலம் அறியலாம்.

## சம்பந்தரும் பிற அடியார்களும்

சம்பந்தர் தமது பதிகங்களில் பல நிகழ்ச்சிகளைக் கூறுவதோடு அடியவர்கள் சிலரைப் பற்றியும் கூறுகின்றார். அவ்வகையில், அவர்

முதலில் 'திருநீலகண்ட யாழ்ப்பாணரை' அறிமுகப்படுத்துகின்றார். 'பாணர்' இனத்தைச் சேர்ந்த இவர் தன் மனைவியான விறலியோடு சம்பந்தரைச் சீர்காழியில் சந்திக்கின்றார். தன்னை வரவேற்ற சம்பந்தரின் திருவடிகளை நமஸ்கரித்து வணங்கிய இவரைக் கோயிலுக்கு அழைத்துச் சென்று இறைவன் முன் யாழ் வாசிக்கும்படி சம்பந்தர் கூறினார். 'நீர் இங்கே சுவாமிக்கு யாழ் வாசியும்' என்றவுடன் அவர் விறலியோடு பாடி யாழ் வாசித்தார். இவர்களை அழைத்துச் சென்று விருந்தும், உறைவிடமும் கொடுத்தருளிய சம்பந்தர் தாம் பாடும் பதிகங்களின் இசையை யாழிலிட்டு வாசிக்கவும் அனுமதி தந்தார். இதனால் பாணர் சம்பந்தருடன் நட்பு கொண்டு இறுதிநாள் வரை அவருடனே இருந்தார் என்பதையும் அறியமுடிகின்றது. இதனைப் பின்வரும் பாடல் குறிப்பிடுகின்றது.

**"நாணமுடை வேதியனு நாரணனு நண்ண வொணாத்**
**தானுவெனை யாளுடையான் றன்னடியார்க் கன்புடைமை**
**பாணனிசை பத்திமையாற் பாடுதம் பரிந்தளித்தான்**
**கோணலிளம் பிறைச் சென்னி கோளிலியெம் பெருமானே"**

(675)

இந்நிகழ்ச்சிக்குப் பிறகு தில்லைக்கு தன் தந்தையோடும், யாழ்ப்பாணரோடும் மற்றையடியார்கள் தன்னை சூழ வந்த சம்பந்தரை, திருநீறும், ருத்திராட்சை மாலையும் அணிந்த இனிய குணமுடைய அந்தணர்கள் எதிர்கொண்டு வரவேற்றனர். சபாநாயகரை வணங்கிச் சென்ற பிள்ளையின் கண்களுக்கு அந்தணர்கள் மூவாயிரம் பேரும் சிவகண நாதராகக் காட்சியளித்தனர். இக்காட்சியை பாணருக்கும் காட்டினார். இதனால் அவர்கள் தன்னை வணங்குவதற்கு முன் அவர்களை சம்பந்தர் வணங்கினார். மற்றும் அப்பதியில் பாடிய திருப்பதிகத்தில் 'தொழுதேத்து சிற்றம்பலம்' என்று பாடியுள்ளார்.

இதன்மூலம் உயர்ந்த குலத்தைச் சேர்ந்த அந்தணர்களை இறைவனோடு ஒப்பிட்டு முதலில் சம்பந்தர் வணங்குவதும், தாழ்ந்த சாதியைச் சேர்ந்த பாணர் சம்பந்தரின் காலில் வீழ்ந்து வணங்குவதும் எனும் செய்தி எவ்வளவுதான் திறமை இருந்தாலும் மக்கள் சாதி என்ற வேறுபாட்டினால் ஒடுக்கப்படுவதைத் தெளிவாக கூறுகின்றது. பாணருக்கு உணவும், உறைவிடமும் தந்து தன்னுடனே செல்லும் இடமெல்லாம் அழைத்துச் செல்லும் செய்திமூலம் சம்பந்தர் சாதி சமயம் கடந்தவர் என்பதை அறியமுடிகின்றது.

சம்பந்தரின் தெய்வ தன்மையைக் கேள்வியுற்று அவரைச் சந்திக்க விரும்பி சீர்காழிக்கு வந்த 'நாவுக்கரசரை' தன் அடியார்

கூட்டத்தோடு எதிர் கொண்டழைத்தார். இவரை முதலில் நாவுக்கரசர் வணங்க இவரும் அவரை வணங்கி கோயிலுக்கு அழைத்துச் சென்று, தரிசனம் செய்துவிட்டு தம் மாளிகைக்கு அழைத்துச் சென்று திருவமுது படைத்து சிலநாள் அவருடனே தங்கியிருந்தார். இவரை மட்டுமே தமது வீட்டிற்கு அழைத்துத் திருவமுது படைத்துச் சிலநாள் தங்குவதற்கு இடமுமளித்தார் என்பது குறிப்பிடத் தக்கதாகும். வேளாளர் குலத்தைச் சேர்ந்தவர் என்பதாலும், தன்னைவிட முதிர்ந்த சிவனருள் பெற்ற அடியார் என்பதாலும் தமது வீட்டில் உணவளித்து தங்க வைத்தார் என நினைக்க இடமுள்ளது.

நாவுக்கரசரைச் சந்தித்த பிறகு அயவந்தி நாதரை வணங்குவதற்காக சாத்தமங்கை எனும் ஊருக்குச் சென்ற சம்பந்தரை அவ்வூரில் இருந்த பிராமண குலத்தில் தோன்றிய 'திருநீலநக்கநாயனார்' என்பவர் மகிழ்ச்சியோடு நடைப்பந்தரிட்டு, வாழை, கமுகுகளை நட்டு, தோரணங்கள் கட்டி, நிறை குடங்களும் தூபதீபங்களும் வைத்து தம் சுற்றத்தினரோடு வரவேற்று வணங்கினார். வேதத்தின் உள்ளுறை என்பது சைவ ஆகமப்படி இறைவனை வழிபட்டும், அடியார்களுக்குத் திருவமுது படைத்தும் வருதலே என்று நினைந்து வாழ்ந்த இவர் சம்பந்தரை வரவேற்றுத் தன் திருமாளிகையில் திருவமுது படைத்துத் தங்குவதற்கு உறைவிடமும் கொடுத்தார். இதோடு, சம்பந்தர் கேட்டுக் கொண்டபடி பாணருக்கும் விறலிக்கும் உணவளித்து தமது வீட்டிலேயே வேதிகையின் பக்கத்தில் தங்குவதற்கு இடமுமளித்துப் போற்றியதின் மூலம் அவரின் ஒற்றுமை உணர்வும், உயர்ந்த குணமும் நன்கு வெளிப்படுகின்றது. இவரை பற்றிய பதிகப் பாடல் வருமாறு,

**"மறையினார் மல்குகாழித் தமிழ் ஞானசம் பந்தன் மன்னும்**
**நிறையினார் நீலநக்கன் நெடுமாநக ரென்று தொண்டர்**
**அறையுமூர் சாத்தமங்கை அயவந்திமே லாய்ந்த பத்தும்**
**முறைமையா லேத்த வல்லா ரிமையோரிலும் முந்துவரே"**

(3426)

திருச்செங்காட்டங்குடிக்குச் சம்பந்தர் சென்றபோது மாமாத்திரப் பிராமணக் குலத்தில் பிறந்த பரஞ்சோதியாரைச் சந்தித்தார். இவர் சிவன் ஒருவனே மெய்க் கடவுள் என்றும், முக்தி அடைதலுக்கு துணையானவன் என்றும் நினைந்து, எப்பொழுதும் இறைவனையே தியானித்து அடியார்களுக்கு முதலில் திருவமுது படைத்து அதன் பின்னரே தாம் உண்ணும் இயல்புடையவர். அடியார்களுக்கு முன்பு மிகச்சிறியராய் ஒழுகியமையால் 'சிறுத்தொண்டர்' எனும் பெயரினைப் பெற்றார். தன் மகனைக் கறியாக சமைத்து இறைவனுக்குத் திருவமுது அளித்த சிறப்புடைய இவர் கணபதீச்சரமெனுங் கோயிலைத்

தரிசிப்பதிற்காக வந்த சம்பந்தரை வரவேற்றுத் திருவமுது படைத்து அவருடன் சிலநாள் தங்கியிருந்தார்.

"செந்தண்பூம் புனல் பரந்த செங்காட்டங் குடிமேய
வெந்தநீ றணிமார்பன் சிறுத்தொண்ட னவன்வேண்ட
ஆந்தண்பூங் கலிக்காழி யடிகளையே யடிபரவும்" (3480)

இந்நிகழ்ச்சிக்குப் பிறகு திருப்புகலூருக்குச் சம்பந்தர் சென்றார். அப்பொழுது பிராமண குலத்தில் பிறந்த 'முருக நாயனார்' என்பவரைச் சந்தித்தார். அவர் திருமடம் வைத்து அடியார்களுக்குத் தொண்டு செய்து வந்தார். இங்கு வந்த சம்பந்தரை வரவேற்று உபசரித்து திருமடத்தில் தங்கவைத்தார் எனும் செய்தி கூறப்படுகிறது. சிவனைப் பாடிய பதிகத்தில் இந்நாயனார் சிறப்பிக்கப்படுகிறார்.

"தொண்டர் தண்கய மூழ்கித் துணையலுஞ் சாந்தமும் புகையும்
கொண்டு கொண்டடி பரவிக் குறிப்பறி முருகன்செய் கோலம்"
(2466)

இப்பதியில் சம்பந்தருடன் முருகநாயனார், திருநாவுக்கரசர், திருநீலநக்க நாயனார், சிறுத்தொண்ட நாயனார் ஆகியோர் ஒன்றாக இருந்தனர் எனும் செய்தி கூறப்படுவதன் மூலம் இவர்களின் ஒற்றுமை உணர்வை அறியமுடிகின்றது.

திருக்கடவூர் இறைவனைத் தரிசிக்க சென்ற சம்பந்தர் அங்கு பிராமண குலத்தில் தோன்றிய கலயர் என்பவரைச் சந்திக்கின்றார். அவர் வறுமை காலத்திலும் மனைவியின் தாலியை விற்றுக் குங்குலியப் பொதியை வாங்கி இறைவனை வழிபட்டதால் இறைவன் அவரின் வறுமையை நீக்க செல்வத்தினை தந்தார். அந்த செல்வங்களோடு தயிர், நெய், பால் சேர்த்து திருவமுது படைத்து அடியார்களைப் போற்றிவந்த காலத்தில் அங்கு வந்த சம்பந்தரை வரவேற்றுத் தமது வீட்டில் திருவமுது படைத்தார் (ப. 299). இதனால் 'குங்குலியக் கலயநாயனார்' என போற்றப்பட்டார்.

பாண்டிய நாட்டிற்குச் சென்ற சம்பந்தரை பாண்டிய மன்னனின் மந்திரியாக, அரசியின் திருத்தொண்டுக்குத் துணையாகவும் இருந்த 'குலச்சிறை நாயனார்' சம்பந்தரை 'அடியற்ற மரம் போல்' நிலத்தில் வீழ்ந்து வரவேற்றார். இவரை சம்பந்தர் தன் கைகளினால் பற்றி எடுத்து அவருடன் சென்று இறைவனை வழிபட்டு அரசியின் கட்டளைப்படி தமக்கு குலச்சிறையார் அளித்த திருவமுதை உண்டு திருமடத்தில் தங்கியிருந்தார். நாயனார் அடியார்கள் எக்குலமாக இருந்தாலும், எக்குணமாக இருந்தாலும், தனித்தோ, பலர் கூடியோ வந்தாலும் அவர்களை வரவேற்று உபசரித்தார் என்பதை பாடல் குறிப்பிடுகின்றது.

''கணங்களாய் வரினுந் தமியராய் வரினு
மடியவர் தங்களைக் கண்டாய்
குணங்கொடு பணியுங் குலச்சிறை'' (4093)

பாண்டிமா தேவியான 'மங்கையர்க்கரசியார்' சம்பந்தரை ''அடியேனும் அடியேனுடைய பதியும் செய்த தவம் என்'' என கூறி வணங்கி வரவேற்றதைக் கண்டு சம்பந்தர் ''பரசமயத்தார்களுளிருந்தும் சைவ நெறியில் வாழும் அன்பரே! உம்மை காணுதற்கு வந்தோம்'' என பதில் கூறியதன் மூலம் அரசியின் பக்தி நெறியினை அறியமுடிகின்றது. இதைப் பாடலும் குறிப்பிடுகின்றது.

''மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக் கைம்மட மானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி
பணி செய்து நாள்தொறும் பரவ'' (4090)

சம்பந்தரின் திருநீற்றின் அருளால் தனது வெப்பு நோயும், கூனும் சரியானதைக் கண்டு பாண்டிய நெடுமாறன் சமண சமயத்தை விட்டுச் சைவசமயத்திற்கு மாறிச் சம்பந்தரைத் தமக்குச் சமமாக ஆசனத்தில் அமரவைத்து வணங்கினார். இவர் பின்னாளில் 'நெடுமாற நாயனார்' என போற்றப்பட்டார்.

அறுபத்து நான்கு பேர் நாயன்மார்கள் என்றாலும் இங்கு சம்பந்தர் பதினான்கு பேரை மட்டுமே தனது பதிகங்களில் கூறியுள்ளார். இவர்களில் பத்து பேர் அவர் காலத்தில் வாழ்ந்தவர்கள் ஆவர். மற்றைய நால்வரான காரைக்கால் அம்மையார், கண்ணப்ப நாயனார், சண்டேசுர நாயனார், கோச்செங்கட் சோழ நாயனார் ஆகியவர்கள் அவர்காலத்திற்கு முன்பு வாழ்ந்தவர்கள் ஆவர்.

அடியவர்கள் சந்திக்கின்றபோது ஒருவரை ஒருவர் வணங்கி கொள்வதோடு 'நமச்சிவாய' என்று உச்சரித்து இறைவன் பெருமைகளை மட்டுமே பேசுவர் என்பதை மேலேக் கூறிய செய்திகள் நமக்கு தெளிவு படுத்துகின்றன. சங்க இலக்கிய காலத்தில் இது போன்ற செய்திகள் பாணர்கள் இருவர் சந்தித்துக் கொள்ளும்போது பரிசில் தரும் மன்னனின் சிறப்புகளை பேசுவதாக கூறப்படுகின்றன.

சம்பந்தர் சந்தித்த அடியவர்களில் பெரும்பான்மையினர் பிராமணர்கள் ஆவர்.

1. திருநீலகண்ட யாழ்ப்பாணர் - பாணர்
2. திருநாவுக்கரசர் - வேளாளர்

| | | |
|---|---|---|
| 3. தில்லைவாழ் அந்தணர் | - | பிராமணர் |
| 4. திருநீலநக்கநாயனார் | - | பிராமணர் |
| 5. முருக நாயனார் | - | பிராமணர் |
| 6. குங்குலியக் கலய நாயனார் | - | பிராமணர் |
| 7. சிறுத்தொண்ட நாயனார் | - | மாமாத்திரர். பிராமணக் குலத்தில் ஒரு பிரிவு. |
| 8. நெடுமாற நாயனார் | - | க்ஷத்திரியர் |
| 9. மங்கையர்க்கரசி | - | க்ஷத்திரியர் |
| 10. குலச்சிறை நாயனார் | - | குலம் கூறப்படவில்லை. |

விருந்தினரை இன்முகத்தோடு வரவேற்று விருந்து படைப்பது தமிழர்களின் மரபான பழக்கமாகப் பின்பற்றப்படுகிறது. இந்நிலையில் சம்பந்தர் தம் பதிக்கு வந்த பாணர், விறலி, நாவுக்கரசர் ஆகிய மூவரையும் வரவேற்றுத் திருவமுது படைத்து உறைவிடமும் கொடுத்துப் போற்றினார், என்றாலும் நாவுக்கரசரை மட்டுந்தான் தன் திருமாளிகைக்கு அழைத்துச் சென்றார் என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும். பிராமண குலத்தைச் சேர்ந்த திருநீலநக்க நாயனார், சிறுத்தொண்ட நாயனார், குங்குலியக் கலய நாயனார் ஆகிய மூவர் வீட்டில் மட்டுந்தான் திருவமுது படைத்தும் அங்கேயே உறைவிடமும் கொடுத்து சம்பந்தரை உபசரித்தனர் எனும் செய்தி மூலம் தன் குலத்தைச் சேர்ந்தவர்களின் திருமாளிகைகளில் மட்டுந்தான் தங்கி இருந்தார் சம்பந்தர் என்பதை அறியமுடிகின்றது. இதே குலத்தைச் சேர்ந்த மற்றொரு நாயனாரான முருக நாயனாரும், குலச்சிறை நாயனாரும் சம்பந்தரை வரவேற்று திருமடத்தில் தங்க வைத்துத் திருவமுது படைத்துள்ளனர் எனும் செய்தியையும் அறிய முடிகின்றது.

இக்கட்டுரை வெளிப்படுத்தும் செய்தி என்னவென்றால், சம்பந்தரின் ஒற்றுமை உணர்வு, தன் அடியார்களின் துன்பத்தை நீக்கி அருள்புரிந்த தன்மை, அவர்களோடு தங்கித் திருவமுது உண்டு மகிழ்ந்ததையும் வெளிப்படுத்துகின்றது.

# 60. அற்புதத் திருப்பதிகங்கள்

சொ. பொன்னுசாமி, ஸ்ரீவைகுண்டம்.

சமயம் என்பது இறைவனை அடைவதற்கு உரிய சாதனங்களைச் சமைப்பது அல்லது பரிபக்குவப்படுத்துவது. கண்ணால் காணும் உலகையும், ஆன்மாவின் மூலம் இறைவனை உணரும் அனுமானத்தையும் இனிது காட்டும் ஞான ஒளி சமயமாகும். சமயங்களின் பரவல் காலங்களின் சூழலுக்கேற்ப அமைகின்றது. சைவ சமயம் என்பது சிவபெருமானை ஆன்மாக்கள் அடைந்து உய்வதற்குரிய பரிசுத்தம், அறிவு, அருள் முதலியவற்றை அங்கங்களாகக் கொண்டு பேரின்பத்தைத் தருவதாகும். சைவ சமயத்தின் பரம்பொருளாகத் திகழும் சிவபெருமானைச் சச்சிதானந்தம் என்று அழைக்கிறார்கள். (சத் - அழியாதது, சித் - அறிவுடையது, ஆனந்தம் - இன்பமயமானது). எல்லா உயிர்களும் போகத்தை நுகர இறைவன் சக்தியும் சிவனுமாக இருந்து அம்மையப்பர் என்றும் போற்றப்படுகின்றார்.

''அம்மையப்பரே உலகுக்கு அம்மையப்பர்'' என்கிறது திருக்களிற்றுப்படியார். சக்தியும் சிவனுமாக இருப்பதோடு இறைவன் ஒரு வடிவில் தோன்றுவதும் உண்டு. அதனை அர்த்த நாரீசுவரர் என்பர் (அர்த்தம் - பாதி, நாரி - மாது) 'பாதி மாதுடைய பரமன்' என்று பொருள். இறைவனை அடைவதற்குரிய மார்க்கங்களைச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்று நான்காகப் பகுத்துக் கூறுவர். நால்வகை மார்க்கத்தின் வழிநின்று சிவனை வழிபட்ட பெருமைக்குரிய சைவ சமயக்குரவர்கள் நால்வர்; அப்பர், சுந்தரர், சம்பந்தர், மாணிக்கவாசகர் என்னும் இந்நான்கு அடியவர்களின் பெருமை அளப்பரியது. ''அளவிலாத பெருமையராகிய அடியார்'' என்கிறார் சேக்கிழார். சைவ சமயக் குரவர்களில் ஒருவராகிய திருஞானசம்பந்தர் பாடிய பதிகங்களில் ''அற்புதத் திருப்பதிகங்கள்'' சிலவற்றை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கு.

**திருஞானசம்பந்தர்**

சீர்காழிப்பதியிலே சிவபாத இருதயரின் திருமகனாய் அவதரித்தவர் ஆளுடைப்பிள்ளையார். சின்னஞ்சிறு பிள்ளையாய்த் திருக்குளத்தின் கரையிலே இருந்த வண்ணம், திருக்குளத்தில் மூழ்கிய

தந்தையைக் காணாது அழுது கொண்டிருந்தார் இவர். அப்போது சிவபெருமானும், உமையம்மையும் அங்கே தோன்றினார். அழுகின்ற மழலைக்கும் அருளுகின்ற உளத்தோடு அன்னை உமையாள் பொற்கிண்ணத்திலுள்ள ஞானப்பாலை ஊட்டியதால், இவர் ஞானசம்பந்தர் என்னும் பெயர் பெற்றார். ஞானம் பெற்று, தேவாரம் அருளிச் செய்து அம்மையப்பரைக் கண்குளிரக் கண்டு களித்தார். ஞானப்பாலுண்ட நற்றமிழ்ப்பிள்ளையைப் பலதலங்களுக்குச் சென்று பாடிய பக்திப் பனுவல்களின் திரட்சி முதல் மூன்று திருமுறைகள் ஆகும். ''திருமுறை என்பதற்குத் தம்மை அடைந்தவர்களைச் சிவமேயாக்குகின்ற முறையெனப் பொருள் கூறலாம்'' என்கிறார் கே. ஆறுமுகநாவலர். ஓதாதுணர்ந்த ஞானசம்பந்தர், முத்தமிழ் இலக்கிய, இலக்கணப் புலமைகளைப் பக்தி உலகுக்கு மிக அதிக அளவில் பயன்படுத்திக் காட்டியுள்ளார்.

**அற்புதத் திருப்பதிகங்கள்**

ஞானசம்பந்தர் அருளிய பதிகங்கள் பல. பதிகம் என்பதற்கு, ''குறிப்பிட்ட இடத்தில் எழுந்தருளியுள்ள தெய்வத்தின் மேல் பாடப்படும் பத்துப்பாடல்கள் (poems of ten verses on the presiding deity of a place)" என்று க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி பொருள் கூறுகிறது. ஞானசம்பந்தரின் பதிகங்களின் இயல்பினை,

''அப்பதிகச் சொல் மாலைகள், இன்புடைப் பாடல்களாக, பண்ணியல் தமிழாக, சூலம் வல்லான் கழல் ஏத்தும் பாடல்களாக, நிகர் இல்லன, துளங்கு இல்லன, 'நலம்கொள்' 'பலம் மல்கிய' 'சந்தம் மலி பாடல்களாகக் குன்றாத் தமிழாக' என்றும் நின்று நிலவ வல்லன'' என்று வித்துவான் ம.வே. பசுபதி குறிப்பிடுகின்றார். ஞானசம்பந்தரின் பதிகங்களில் அற்புதங்கள் நிகழக் காரணமாக அமைந்த பதிகங்களை ''அற்புதத் திருப்பதிகங்கள்'' என்றே கூறலாம். ஞானசம்பந்தர் நிகழ்த்திய அற்புதங்களைக் குறிக்கும் பாடல் ஒன்று;

''புனலில் ஏடெதிர் செல்லெனச் செல்லுமே
புத்தனார் தலைதந்தெனத் தத்துவமே
கனலில் ஏடிடப் பச்சென்றிருக்குமே
கதவு மாமறைக்காட்டில் அடைக்குமே
பனையில் ஆண்பனை பெண்பனையாகுமே
பழைய என்புபொற்பாவையது ஆகுமே
சின அராவிடத் தீரெனத் தீருமே
சிறந்த சம்பந்தர் செந்தமிழ்ப் பாடலே''

**தோடுடைய செவியன் என்ற பதிகம்**

அம்மை பாகத்தோடும், இறைவர் பாகத்துக் குழையும் அணிந்த கோலத்தை ஞானசம்பந்தர்,

**''தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண்மதி சூடிக்**
**காடுடைய சுடலைப் பொடிபூசி என் உள்ளங்கவர் கள்வன்''**

என்று பாடுகின்றார்.

தந்தை எச்சில் பாலை ஊட்டியவர் யார் என்று கேட்டதற்கு, ஆகாயத்திலே இடபாரூடராய் உமாசஹாயராய் எழுந்தருளிய சிவபெருமானைக் காட்டி ஞானசம்பந்தர் பாடிய அற்புதத் திருப்பதிகம் இது.

**''தோலும் துகிலும் குழையும் சுருடோடும்''**

என்கிறது திருவருட்பா. மேலும் இப்பாடல் வழி முன்பொரு காலத்தில் அசுவதரன், கம்பளன் என்னும் இரண்டு கந்தருவர்கள் சிவபெருமானைப் பாடி காதிற் குழையுருவாக இருக்கப் பெற்றார்கள் என்பதையும், அவர்களும் தம் பதிகத்தை ஏற்றருள வேண்டும் என்னும் தம் எண்ணத்தையும், ஞானசம்பந்தர் உணர்த்திக் காட்டியுள்ளார். ''உள்ளம், ஆன்மா உயிர்கள் ஆகியவற்றில் இறைவன் நிறைந்தாலும், அவை பக்குவப்பட்டபோதே இறைவன் தன் இருப்பை உணர்த்தி வெளிப்படுத்துகிறான். எனவே 'உள்ளங்கவர்' என்ற செய்தி சுத்த நிலை எய்திய பின்னரே உணரத்தக்கதென்பது பெறப்படும். இறைவன் அன்பரது உள்ளத்தை விரும்பி விரைந்து சேரலின் அமர்ந்து கவர் கள்வனாயினான்'' என்கிறார் சதாசிவச் செட்டியார்.

**தொல்வினை தீர்க்கும் ஞானசம்பந்தரின் திருப்பதிகம்**

**''அருநெறிய மறைவல்ல முனியகன் பொய்கையவர்மேய**
**பெருநெறிய பிரமாபுரம்மேவிய பெம்மானிவன்றன்னை**
**ஒருநெறிய மனம் வைத்துணர் ஞானசம்பந்தன்னுரை செய்த**
**திருநெறிய தமிழ்வல்லவர் தொல்வினைதீர்தலெளி தாமே''**

பிரம தேவரது அகன்ற பொய்கையுடைய திருப்பிரம்மபுரத்தில் எழுந் தருளியுள்ள சிவபெருமானை, ஒருமைப்பட்ட மனங்கொண்டறிகின்ற திருஞானசம்பந்தர் பாடிய திருநெறித் தமிழாகிய இப்பதிகத்தை ஓதவல்லவர் தம் பழவினைகள் நீங்கப் பெறுதல் எளிதாம். சென்ற பல பிறவிகளிலும் ஈட்டி அனுபவியாது எஞ்சி நிற்கும் பழவினையும் நீங்கி விடும் அற்புதத்தை ஞானசம்பந்தரின் பதிகம் விளைவிக்கும் எனலாம்.

**அஞ்செழுத்தின் மேன்மை கூறும் அற்புதத் திருப்பதிகம்**

**காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி**
**ஓதுவார் தமை நன்னெறிக் குய்ப்பது**
**வேத நான்கினும் மெய்ப்பொருளாவது**
**நாத னாம நமச்சி வாயவே.**

அன்பு முதிர்ந்து மனம் நெகிழ்ந்து கண்களில் நீர் நிறைந்து, வேத மந்திரங்கள் பற்றி ஓதுகின்றவர்களை முத்திநெறிக்கு உய்ப்பது இறைவனின் திருநாமமே. இறைவன் நாமமே நான்கு வேதங்களிலும் முதல் நடு இறுதியெனும் யாண்டும் உண்மைப் பொருளாய் அமைவதால், ஞானசம்பந்தர், "வேத நான்கினும்... மெய்ப்பொருளாவது" என்று குறிப்பிடுகின்றார். மேலும் மந்திரத்தலைவனும் நாத வடிவமாக விளங்குவதையும் அவர் சொல்லாமலேயே உணர்த்தி விடுகின்றார்.

ஞானசம்பந்தர் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கியது போல திருவாதவூரடிகளும்,

**"உள்ளந்தாணின்றுச்சியளவு நெஞ்சா**
**யுருகாதா லுடம்பெல்லாங் கண்ணா யண்ணா**
**வெள்ளந்தான் பாயாதா னெஞ்சங் கல்லாங்**
**கண்ணிணையு மரமாந்தீவினையினேற்கே"**

என்று உருகிப் பாடுவதை ஒப்பு நோக்கலாம். நாவுக்கரசரும் நமச்சிவாய மந்திரத்தின் பெருமையை நமச்சிவாயத் திருப்பதிகத்தில்,

**"பூவினுக் கருங்கலம் பொங்குதாமரை**
**ஆவினுக் கருங்கலம் மரனஞ்சாடுதல்**
**கோவினுக் கருங்கலம் கோட்டமில்லது**
**நாவினுக் கருங்கலம் நமச்சிவாயவே"**

என்று கூறுவதையும் இவண் நினைவு கூறலாம். பிரம்மாவும், திருமாலும் ஈசனது முடியையும் அடியையும் தேடிக் காண முடியாத தவறை உணர்ந்து ஓதுகின்ற நாமம் நமச்சிவாயம் என்கிறார் ஞானசம்பந்தர்.

**ஆண்பனைகளைப் பெண்பனைகளாக மாற்றிய அற்புதப் பதிகம்**

திருஞானசம்பந்தர் பாடிய பதிகங்களில் இப்பதிகம் நிகழ்த்திய அற்புதம், ஆண்பனைகளைப் பெண்பனைகளாக மாற்றியதாகும்.

**"பூத்தேர்த்தாயன கொண்டுநின் பொன்னடி**
**ஏத்தாதார் இலை எண்ணுங்கால்**
**ஓத்தூ ர்மேய ஒளிமழுவாள் அங்கை**
**கூத்தீர் உம்ம குணங்களே"**

பிற சமயத்தைச் சேர்ந்தவர்கள் சைவத்தின் மேன்மையை உணர்ந்திடச் செய்த திருப்பதிகம் இது.

**முயலக நோய் தீர்த்த முத்துப் பதிகம்**

கொல்லி மழவன் மகள் முயலக நோயினால் பாதிக்கப் பட்டிருந்தாள். அவளது நோயின் பாதிப்பினை மாற்றிடத் திருஞான சம்பந்தர் பாடிய அற்புதத் திருப்பதிகம் இதோ:

''துணி வளர் திங்கள் துளங்கி விளங்க
சுடர்ச்சடை சுற்றி முடித்துப்
பணி வளர் கொள்கையர் பாரிடம் சூழ
ஆரிடமும் பலி தேர்வர்
அணி வளர் கோலம் எலாம் செய்து பாச்சி
லாச்சிராமத்து உறைகின்ற
மணி வளர் கண்டரோ மங்கையை வாட
மயல் செய்வதோ இவர் மாண்பே''.

**நாள்களும் கோள்களும் நல்லன எனக்கூறும் பதிகம்**

திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் திருமறைக்காட்டில் அடைத்துக் கிடந்த கோயிலின் நேர்வழியைத் திறக்க வைத்து அற்புதம் நிகழ்த்திய பின் அங்குத் தங்கியிருந்தார்கள். அப்போது பாண்டிய நாட்டு மன்னன் சமண சமயச் சார்பினனாய் இருப்பதை எண்ணிக் கவலைப்பட்ட அரசியான மங்கையர்க்கரசியாரும் அமைச்சர் குலச்சிறை நாயனாரும் திருஞானசம்பந்தரைத் தம் நாட்டிற்கு எழுந்தருளுமாறு செய்து - சமணத்தை ஒழித்து; சைவத்தை நிலை நிறுத்துமாறு வேண்டினர். அவர்களின் வேண்டுகோளை ஏற்றுப் புறப்பட்ட ஞானசம்பந்தரிடம் நாவுக்கரசர், ''நாள்களும் கோள்களும் வலியில; செல்லற்க - எனக் கூறித் தடுத்த போது ஞானசம்பந்தரோ ''ஆசறு நல்ல நல்ல - அவை நல்ல நல்ல அடியாரவர்க்கு மிகவே'' என்று கூறி இந்த அற்புதப் பதிகத்தைப் பாடினார் என்பர். கோள்களால் ஏற்படும் துன்பங்களை அறுத்தெறிவதற்கு ஏதுவாக அமைதலின் இப்பதிகத்தைக் ''கோளறு திருப்பதிகம்'' என்பர்.

''வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்
மிகநல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கைமுடி மேலணிந்தெ
லுளமே புகுந்தவதனான்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி
சனிபாம் பிரண்டு முடனே
ஆசறு நல்ல நல்ல வவைநல்ல நல்ல
வடியா ரவர்க்கு மிகவே''

இறைவன் வீணாகானத்தினால் நாதத்தை எழுப்பி உலகச் சிருட்டியைச் செய்கிறார். இதனை,

**“பெருங்கடன்மூடிப் பிரளயங்கொண்டு பிரமனும் போய்**
**இருங்கடன் மூடியிறக்குமிறந்தான் களேபரமும்,**
**கருங்கடல் வண்ணன் களேபரமுங்கொண்டு கங்காளராய்,**
**வருங்கடன் மீள நின்றெம்மிறை நல்வீணை வாசிக்குமே”.**

என்று வாகீசநாயனாரது திருவிருத்தம் எடுத்துரைக்கின்றது. இந்த அற்புதத் திருப்பதிகத்தின் மூலம் நாள்களும் கோள்களும் பற்றிய மூடநம்பிக்கைகளையும் திருஞானசம்பந்தர் சுட்டிக் காட்டியுள்ளமையை அறிய முடிகிறது. நவக்கிரகங்களாகிய கோள்களும் நாள் நட்சத்திரங்களும் தீயவையாக இருந்தாலும் நல்ல தன்மைத்தாய் மாறி வீடும் என்பதைத் திருஞானசம்பந்தரின்,

**“காள மேகந் நிறக்கால னோடந்தகன்கருடனும்**
**நீளமாய்நின் றெய்த காமனும் பட்டன நினைவுறின்**
**நாளும்நாதன் அமர்கின்ற நாகேச்சரம் நண்ணுவார்**
**கோளுநாளுந்தீயவேனும் நன்காங் குறிகொண்மினே”**

என்னும் பதிகமானது உணர்த்திக் காட்டுகிறது. திருப்பதிகங்களில் ஒன்றான திருவெழுகூற்றிருக்கையில் ஒரு ஒளிமயமான அற்புதத்தையும் ஞானசம்பந்தர் செய்துள்ளார்.

பிரம்மபுர மஹாஸ்தலத்தில் இருந்தவண்ணம் திருஞானசம்பந்தப் பெருமான் மஹா கைலாஸ பாவனை யோகத்தில் திளைத்திருந்ததால், மஹா கைலாஸ நுட்பங்கள் பொருந்தி ஒளிரும் வண்ணம் திருவெழு கூற்றிருக்கை எனப் பெயரிய ஒளிமயமான ஒலிமாலையை அருளி இருக்கின்றார் என்கிறார் முனைவர் சபாரத்தினம். இவ்வாறு திருஞானசம்பந்தப் பெருமானின் அற்புதப் பதிகங்களின் அற்புதங்களை ஏட்டிலும், மனப்பதிவேட்டிலும் பதிந்து வைத்துப் பாராட்டிக் கொண்டே இருக்கலாம்.

# 61. இடைமருதின் புராணச் செய்திகள்

கு.ச. மகாலிங்கம், தஞ்சாவூர்.

திருஞானசம்பந்தர் அருளிய தேவாரப் பாடல்கள் முழுவதிலுமே எண்ணிலடங்கா புராணச் செய்திகள் விரவிக்கிடக்கின்றன. அனைத்தையும் குறிப்பிடுவதெனில் இடமும், காலமும் போதாவென்ற காரணத்தால் தமிழ்நாட்டிலுள்ள தஞ்சாவூர் மாவட்டத்தில் காவிரியின் தென்கரை சிவத்தலமாக பாடல்பெற்ற சிவத்தலமாக சிறப்புற்று விளங்கும் திருவிடைமருதூர் எனும் திருத்தலத்தில் சம்பந்தப் பெருமான் அருளிய திருப்பதிகங்கள் மட்டும் இங்கு சுட்டப்பெறுகின்றன.

**இடைமருது**

வடமொழியில் மத்யார்ஜுனம் என்றும் தீந்தமிழில் திருவிடைமருதூர் என்றும் அழைக்கப்படும் இவ்வூர் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூன்றாலும் சிறப்புப்பெற்றது. வடமொழியில் அர்ஜுனம் என்ற சொல் மருதமரத்தைக் குறிக்கும். இந்தியாவில் மருதமரத்தைத் தலமரமாகக் கொண்டு சிறப்புற்று விளங்கும் சிவலிங்கத் திருமேனி கொண்ட கோயில்களில் மிகவும் போற்றப்படுபவை மூன்றாகும். பன்னிரு சோதிர்லிங்கத் தலங்களில் ஒன்றாகக் கூறப்படும் ஸ்ரீசைலம் மல்லிகார்ஜுனர் ஆலயம் முதல்மருது அல்லது தலைமருது எனப்படும். திருநெல்வேலி அம்பா சமுத்திரத்திற்கருகிலுள்ள திருக்கோயிலான நாறும்பூநாதர் கோயில் திருப்புடைமருதூர் என மருதமரத்தைத் தலமரமாகக்கொண்டு கடைமருது என அழைக்கப்படுகிறது. இவ்விரண்டுக்கும் இடையில் மருதமரத்தைத் தலமரமாகக்கொண்டு ஸ்ரீஜோதிர்மய மகாலிங்கப் பெருமான் கோயில்கொண்ட இடமாகத் திருவிடைமருதூர், மத்யார்ஜுனம் விளங்குகிறது. இப்பெருமான் குறித்து பல்வேறு நூல்கள் உலா, கலம்பகம், அந்தாதி, புராணங்கள் உள்ளன. இது தேவார ஆசிரியர்களாலும், மணிவாசகப் பெருமானாலும், அருணகிரிநாதர், பட்டினத்தார், சேந்தனார் போன்ற பல்வேறு அடியார்களால் பாடல்பெற்ற தலமாகும். இங்கு, பத்ரகிரியார் ஐக்கியமானார். இவ்வாறு பல சிறப்புகளைப் பெற்றது இவ்வூர். திருஞானசம்பந்தப் பெருமான் அருளிய தேவாரங்களில் திருஇடைமருது தொடர்பான பாசுரங்களில் ஒரு சில சுட்டப்பட்டுள்ளன.

## திருஞானசம்பந்தப் பெருமானும் தேவாரமும்

திருஞானசம்பந்தர் சீகாழிப்பதியில் பிறந்தவர். இறைவியால் ஞானப்பால் வழங்கப்பெற்று ''தோடுடைய செவியன்'' எனத் தீந்தமிழால் தம் பாடலைத் தொடங்கியவர். பல்வேறு சிவத்தலங்களுக்கும் சென்று இறைவனை வழிபட்டு அடியார்களுக்கு அருளியவர். தமிழும் சைவமும் தழைக்கச் சம்பந்தர் செய்த பணிகள் எண்ணிலடங்கா.

சைவ சித்தாந்தத்தை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப் பட்ட தோத்திர நூல் அல்லது கொள்கை பின்னாளில் தேவாரம் எனப்பட்டிருந்தல் கூடும்.

**''சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்**
**பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம்**
**உவமையிலாக் கலைஞானம் உணர்வறிய மெய்ஞ்ஞானம்**
**தவமுதல்வர் சம்பந்தர் தாம் உணர்ந்தார்''**

எனத் திருத்தொண்டர்புராணம் கூறுகிறது. எனவே சிவஞானம் ஓதுதல் என்பது பின்னாளில் பாடல்களை மட்டும் மையமாக வைத்துத் தேவாரம் ஓதுதல் எனப்பட்டிருக்கலாம். திருஞானம் என்பது மூவர் தேவாரத்தினைக் குறிப்பிடுவதாகக் கருதலாம் என கா.ம. வேங்கடராமையா அவர்களது கருத்து தெரிவிக்கிறது. இவ்வாறு தேவாரப் பாடல்களை இசைக்கும் ஒழுங்கினை முதலாம் இராசராசன் காலத்தில் ஏற்படுத்தப்பட்டதனைக் காணமுடிகிறது.

சிவனை வழிபடுவதில் ஐந்தெழுத்து மந்திரம் ஓதுதலே முதன்மை யானதாக ஞானசம்பந்தப் பெருமான் கருதுகிறார்.

**மந்திரம் நான்மறையாகி வானவர்**
**சிந்தையுள் நின்று அவர்தம்மை ஆள்வன**
**செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்கு**
**அந்தியுள் மந்திரம் அஞ்செ ழுத்துமே**

என்பதனால் இது அறியலாம்.

தம் தந்தையார் யாகம் செய்யப்பொருள் வேண்டிப் பிள்ளையிடம்,

**''அருமையாய் உம்மைப் பயந்த அதனால் பிரிந்துறை வாற்றேன்**
**இருமைக்கும் இன்பம் அளிக்கும் யாகமும் யான் செய்யவேண்டும்**
**ஒருமையால் இன்னஞ் சிலநாள் உடன் எய்துவேன்''**

என சிவபாத இருதயர் வேண்ட திருவாவடுதுறை இறைவனிடம் வேண்டி உலவாக்கிழி பெற்றுத் தம் தந்தையின் யாகத்திற்கும் உதவிய திறம் காணமுடிகிறது.

எனவே ஐந்தெழுத்து மந்திரமே முத்திக்கு வித்து என்பதில் எவ்வித ஐயமும் கொள்ளாத அளவில் சம்பந்தப் பெருமானின்,

**காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி**
**ஓதுவார் தம்மை நன்னெறிக்கு உய்ப்பது**
**வேத நான்கினும் மெய்ப்பொருளாவது**
**நாதன் நாமம் நமச்சி வாயவே**

என்னும் பாசுரத்தால் உணரலாம்.

இவ்வாறு ஞானசம்பந்தப் பெருமான் அருளிய தேவாரங்களில் சைவத்தின் அடிப்படைச் செய்திகளைக் காணமுடிகிறது. இனி இடைமருது தேவாரம் காட்டும் புராணச் செய்திகளைக் காண்போம்.

**மருந்த வன்வானவர் தான வர்க்கும்**
**பெருந்தகை பிறவினொ டிறவு மானவன்**
**அருந்தவ முனிவரொ டானி ழறகீழ்**
**இருந்த வன்வள நகரிடை மருதே.**

இடைமருது இறைவன் பிறப்பிணி தீர்க்கும் மருந்தானவன் என்றும் கல்லால மரத்தின் கீழிருந்து சனகாதி முனிவர்க்கு உபதேசித்த திறமும் கூறப்பட்டது. பிறப்பவர் அனைவரும் இறப்பவரே ஆயினும் சிவபெருமான் பிறப்பும், இறப்பும் அற்றவன் எனப்பட்டது. பிறவா யாக்கைப் பெரியோன் எனும் கூற்று இங்குக் குறிப்பிடத்தக்கது.

**தோற்ற வன்கேட வன்துணை முலையாள்**
**கூற்ற வன்கொல் புலித்தோ லசைத்த**
**நீற்ற வனிறை புனனீள் சடைமேல்**
**ஏற்ற வன்வள நகரிடை மருதே.**

தானே தோன்றியவன், மூலப் பரம்பொருள், புலித்தோலை இடையில் அணிந்தவன், பால் வெண்ணீற்றினன், நீள்சடைமேல் கங்கையைச் சுமந்தவன் எனப்பட்டது. கங்கை விண்ணுலகிலிருந்து பூமியை நோக்கி கடுவிரைவுடன் வருங்கால் அதனால் புவிக்கு ஏற்படும் பேரழிவு கருதி தாமே தம் செஞ்சடையில் தாங்கி நின்றார் என்பது புராணச் செய்தி.

**படையுடை மழுவினன் பால்வெண் ணீற்றன்**
**நடைநவி லேற்றினன் ஞால மெல்லாம்**
**உடைதலை யிடுபலி கொண்டு ழல்வான்**
**இடைம ருதினி லுறையெம் மிறையே**

தாருகாவனத்து முனிவர்கள் மூலப் பரம்பொருளான எத்தெய்வத்தையும் வணங்காமல் ஓம வேள்விகளே சித்தி உண்டாக்குவன என்ற

கொள்கையுடன் வாழ்ந்தனர். அவர்தம் நிலையை மாற்றவேண்டி சிவன் பிட்சாடன வேடத்திலும், திருமால் மோகினி வேடத்திலும் தாருகாவனம் செல்கின்றனர். மோகினியின் அழகைக் கண்ட தாருகாவனத்து முனிவர்கள் விருப்புற்று மயங்கி தவநிலை கெடுகின்றனர். அவர்தம் பத்தினியரோ சிவனின் பிட்சாடன வேடம் கண்டு மனமழிந்து அறிவு மயங்கி தம் கற்பு நிலை இழக்கின்றனர். இதனால் அவர்களது வேள்விப்பணி நின்றுவிடுகிறது. மயக்கம் தெளிந்த முனிவர்கள் வெகுண்டு வேள்வி செய்து அதிலிருந்து சிவனை அழிக்க அசுரன், புலி, மழு போன்றவற்றை ஏவினர். அனைத்தையும் அழித்த இறைவன் வேள்வியை அழித்து தாமும் மறைந்தார். தவறுணர்ந்த முனிவர்கள் வருந்தி இறைஞ்சி மன்னிக்க வேண்டினர். இறைவனும் மன்னித்தருளினான். அதனால் கையில் படையாக மழுவேந்தியதும், புலியை அழித்து அதன் தோலை ஆடையாகக் கொண்டதும் இங்கு புராணச் செய்தியாகக் கூறப்பட்டது.

**பணைமுலை யுமையொரு பங்க ரொன்னார்**
**துணைமதின் மூன்றையுஞ் சுடரின் மூழ்கக்**
**கணைதுரந் தடுதிறற் காலாற் செற்ற**
**இணையி லிவள நகரிடை மருதே.**

உமையொரு பாகனாக விளங்கும் சிவபெருமான் முப்புரம் தீயெழ அழித்த திறமும், காலனைக் காலால் எற்றியதுமாகிய புராணச் செய்திகள் கூறப்பட்டன.

**நிறையவன் புனலொடு மதியும் வைத்த**
**பொறையவன் புகழவன் புகழ நின்ற**
**மறையவன் மறிகட னஞ்சை யுண்ட**
**இறைய வன்வள நகரிடை மருதே.**

சிவபெருமான் பிறை நிலவினைத் தலையில் சூடியதும், வேதங்களைப் படைத்ததும் என்றும், தேவர்களும் அசுரர்களும் அமுதம் உண்ண வேண்டி பாற்கடலைக் கடைந்த போழ்து உண்டானது ஆல காலம் என்ற நஞ்சை உண்டு உலகைக் காத்ததும் ஆகிய புராணச் செய்திகள் இப்பாட்டில் கூறப்படுகின்றன.

**பொழிலவன் புயலவன் புயலி யக்கும்**
**தொழிலவன் றுயரவன் றுயர கற்றும்**
**கழலவன் கரியுரி போர்த்து கந்த**
**எழில வன்வள நகரிடை மருதே.**

இப்பாட்டில், இறைவன் ஐம்பெரும் பூதங்களையும் இயக்குபவனாகவும், ஆனைத்தோல் போர்த்தவனாகவும், வருந்தித் துயருற்று இறைஞ்சி வழிபடுவோருக்கு துயர் களைபவனாகவும் திகழும் திறம் கூறப்பட்டது.

நனிவளர் மதியொடு நாகம் வைத்த
பனிமலர்க் கொன்றை யம்படர் சடையன்
முனிவரொ டமரர் கள்முறை வணங்க
இனிது றைவள நகரிடை மருதே.

இப்பாடலில் இறைவன் விரிந்த சடைமுடியும் பிறைமதியுடன் இளநாகம் பூண்டதும், இடைமருதின் முனிவர்கள் தம்மை வணங்கும் முறைமை குறித்து அறிய விரும்பிய வண்ணம் தம்மைத்தாமே அருச்சித்த முறைமையும் கூறப்பட்டது. இது தலபுராணத்திற்குப் பெரிதும் துணை செய்கின்றது.

தருக்கின வரக்கன தாளுந் தோளும்
நெரித்தவ னெடுங்கைமா மதகரியின்
றுரித்தவ னொன்னலர் புரங்கள் மூன்றும்
எரித்த வன்வள நகரிடை மருதே.

ஆணவத்தால் இறைவன் உறையும் திருக்கயிலாய மலையினை இராவணன் பெயர்த்தெடுக்க முற்பட தம் காற்பெருவிரலால் அழுத்தி அவன் தோள்கள் நெரிபட தவற்றுக்கு வருந்தி இறைவனை இசையால் மகிழ்வித்து அருளப்பெற்ற புராணச் செய்தியும், இறைவன் ஆனைத் தோலை போர்த்தியதும், திரிபுரங்களாகத் தோன்றிய அரக்கர்களை தம் விழி நோக்கினால் எரித்த புராணச் செய்தியும் கூறப்பட்டது.

பெரியவன் பெண்ணி னொடாணு மானான்
பரியர வணைமறி கடற்று யின்ற
கரியவ னலர வன்காண் பரிய
எரிய வன்வள நகரிடை மருதே.

இறைவன் இங்குப் பெரியவனாகவும் (மஹாலிங்கம்), பாற்கடலில் துயிலும் பரந்தாமனும், மலர்மேல் அமர்ந்த அயனும் காணுதற்கெட்டா வகையில் அடிமுடி அறியவொண்ணா சோதியாகவும் தோன்றியவன். தேவரில் யார் உயர்ந்தவர் என்ற ஐயம் வந்தபோது சிவபெருமான் சோதி வடிவில் ஒளிர அவனது அடிப்பாகம் தேடி திருமால் வராக வடிவிலும் அயன் பறவை வடிவிலும் முடி தேடியும் காணமுடியாமல் செருக்கழிந்த புராணச்செய்தி கூறப்பட்டது. இத்தலத்தில் இறைவன் திருநாமம் ஜோதிர்மய மஹாலிங்கப் பெருமான் என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கதாகும்.

சிந்தையில் சமணொடு தேரர் சொன்ன
புத்தியி னுரையவை பொருள்கொ ளாதே
அந்தண ரோத்தினோ டாவ மோவா
எந்த தன்வள நகரிடை மருதே

என ஞானசம்பந்தப் பெருமான் பாடல்களில் வழக்கமாகக்காறும் பிறசமய மறுப்புப்பாடல் இது எனல் கூடும்.

**இலைம லிபொழி லிடைமரு திறையை**
**மலமிகு ஞானசம் பந்தன் சொன்ன**
**நலமிகு தமிழிவை பத்து வல்லார்**
**உலகுறு புகழி னோடொங் குவரே.**

இவ்வாறு இடைமருதூர் தேவாரத்தில் புராணச் செய்திகளை மிகுத்துக் கூறிய சம்பந்தர் இடைமருது இறைவன் குறித்துத் தாம் அருளிய பாடல்கள் ஓதி வருபவர் உலகில் மிகுந்த புகழ்பெறுவர் எனப் பதிகப்பயனை முடிமணியாகக் காட்டி நிறைவு செய்கிறார்.

# 62. சம்பந்தரும் ஈழமும்

வ. மகேஸ்வரன், தஞ்சாவூர்

இந்திய உபகண்டத்தின் துணைத் தீவகமாக விளங்குவது ஈழம். மிகக் குறைந்த (22 கி.மீ) கடல் எல்லையாற் பிரிக்கப்பட்டிருந்த போதும் நிலவியல், மொழி, பண்பாட்டு அம்சங்களில் மிகவும் அண்மித்த தன்மையுடையதாகக் காணப்படுகின்றது. குறிப்பாக வட இலங்கை, கிழக்கு மாகாணம், வடமேல் மாகாணத்தில் செறிந்து வாழும் தமிழர்களுடைய இன, மொழி, மத பண்பாட்டுப் பாரம்பரியங்களின் வரலாற்றுக் காலங்களுக்குட்பட்டே உபகண்டத்தின் ஒரு கூறான தென்னிந்தியாவுடன் இருந்து வந்திருக்கின்றது. எனினும் தமக்கே யுரித்தான தனித்துவ அடையாளங்களையும் அவர்கள் கொண்டிருக் கின்றனர் என்பதும் வரலாற்றுண்மையாகும்.

சிவபூமி என்று திருமூலரால் சிறப்பித்துக் கூறப்படுகின்ற ஈழத்திலே வரலாற்றுக் காலத்துக்கு முன்பே - சிவத்தலங்கள் பல இருந்துள்ளன. கி.மு. 5-ஆம் நூற்றாண்டிற்கு முன்பிருந்தே சிவன் ஆலயங்கள் இங்கு இருந்துள்ளன என்பதை யாழ்ப்பாண வைபவமாலை என்ற நூல் குறிப்பிடுகின்றது. அவையாவன கிழக்கில் கோணேஸ்வரம், தெற்கில் தேவந்துறையில் சந்திரசேகர ஈஸ்வரம், வடக்கில் திருத்தம்பலேஸ்வரம், திருத்தம்பலேஸ்வரி (கிரிமலையில் உள்ள சிவ, பார்வதி ஆலயங்கள்) மேற்கில் திருக்கேதீஸ்வரம் (யாழ்ப்பாண வைபவமாலை : 1949 :6) ஆகியவையே அவையாகும். எனினும், மேற்கில் முனீஸ்வரத்தையும், தண்டீஸ்வரத்தையும் யாழ்ப்பாண வைபவமாலை கூறத் தவறிவிட்டது. போல் ஈ. பிரீஸ் என்பவர் இவ்விரு தலங்களின் தொன்மை பற்றிக் குறிப்பிடுகின்றார் (சிற்றம்பலம் 2001 : 453). இவை தவிர நாடு முழுவதும் சிவத்தலங்கள் பல இருந்ததாக மகாவம்சம் என்ற நூல் மூலமாகவும் பிராமிக் கல்வெட்டுக்கள் மூலமாகவும் அறிய முடிகின்றது.

மேற்குறித்த சிவத்தலங்களுள் திருக்கோணேஸ்வரமும் திருக்கேதீஸ்வரமும் ஈழத்துச் சைவத் தமிழ் உலகில் மிகப் பிரபலம் பெற்ற தலங்களாக விளங்குகின்றன. காலத்துக்கு காலம் இலங்கை அரசியலில் ஏற்பட்ட ஏற்றமும் தாழ்வும் இவற்றின் இருப்பினை

கேள்விக்குள்ளாக்கி இருக்கின்றன அல்லது வளர்த்திருக்கின்றன. தமக்கு ஏற்பட்ட சோதனைகளைத் தாண்டி அவை நிலைபேறாக்கம் பெற்றுள்ளன. இன்றைய இனத்துவ அரசியல் நெருக்கடி காலத்திலும் கேந்திர முக்கியத்துவம் வாய்ந்த தலங்களாக இவை விளங்குகின்றன. கி.பி. 6-ஆம் நூற்றாண்டில் தமிழகத்தில் ஏற்பட்ட சைவப் பேரியக்கத்தின் வழி தொண்டை நாடு, கொங்கு நாடு, நடுநாடு, சோழநாடு, பாண்டிய நாடு, மலைநாடு முதலியவற்றில் உள்ள சிவத்தலங்கள் நாயன்மாரால் அறியப்பட்டு அவர்கள் அவற்றுக்குத் தலயாத்திரை சென்று கண்ட தலங்களையும் கேட்ட தலங்களையும் சிறப்பித்து தேவாரப் பதிகங்களைப் பாடினார். அதனால் அத்தலங்கள் பாடல் பெற்ற தலங்கள் எனும் சிறப்புத் தகுதி பெற்றன. இந்த வகையில் ஈழ நாட்டின் சிவத்தலங்களான கோணேஸ்வரமும், கேதீஸ்வரமும் தமிழகத்தில் அறியப்பட்டிருந்தன. தமது தலயாத்திரையில் இராமேஸ்வரம் வந்த சம்பந்தரும் சுந்தரரும் இத்தலங்கள் மீது பதிகங்கள் பாடினர் (சுந்தரர் கேதீஸ்வரத்தை மட்டுமே பாடியுள்ளார்). ஆகவே, இவ்விருதலங்களும் ஈழ நாட்டின் பாடல் பெற்ற தலங்களாயின. மேற்குறித்த நாயன்மார் இருவருள் சம்பந்தர் பாடிய பதிகங்களை அடிப்படையாகக் கொண்டு இக்கட்டுரை அமைகிறது.

ஞானசம்பந்தரது திருக்கேதீஸ்வரத்தின் மீதான பதிகம்,

**விருது குன்றமா மேருவில் நாணரவா அனல் எரியம்பா:**
**பொருது மூவெயில் செற்றவன் பற்றி நின்றுறைபதி என்னாளும்**
**கருதுகின்றவூர் கனைகடற்கடிகமழ் பொழிலணி மாதோட்டம்**
**கருதுகின்ற கேதீச்சரம் கைதொழக் கடுவினையடையாவே**

(2:243:1)

என்று தொடங்கி முத்திரைப்பாடல் ஈறாக பதினொரு பாடல்களைக் கொண்டதாக அமைகின்றது.

திருக்கோணமலைப் பதிகமானது,

**நிரைகழல் அரவஞ் சிலம்பொலியலம்பும்**
**நிமலர் நீறணி திருமேனி**
**வரைகெழு மகளோர் பாகமாய்ப் புணர்ந்த**
**வடிவினர் கொடியணி விடையர்**
**கரைகெழு சந்தும் காரகிற் பிளவும்**
**அளப்பருங் கனமணி வரன்றிக்**
**குரைகடலோதம் நித்திலங் கொழிக்குங்**
**கோணமாமலையமர்ந்தாரே.** (3:381:1)

என்று தொடங்கி 11-வது முத்திரைப் பாடலுடன் முடிவடைகின்றது. எனினும் 7-வது பாடல் இடம்பெறவில்லை. காலக்கறையான் தின்றிருத்தல் கூடும்.

சீர்காழியிலே ஞானப்பாலுண்ட சம்பந்தப் பெருமான் தனது குறுகிய கால உலக வாழ்வில் தலயாத்திரைகள் மேற்கொண்ட காலமே அதிகம். அன்றைய தமிழகத்தில் அவைதீக ஆக்கிரமிப்புச் சூழலில் இருந்து வைதீகத்தை மீட்டெடுக்க வேண்டிய பணியே அவரது தலையாய பணியானது. அதனால்தான் அவர் கூட்டாகவும், தனியாகவும் தமிழகம் முழுவதும் நாடு தழுவிய ஓர் பக்திப் பிரச்சாரத் தலயாத்திரையை மேற்கொண்டார். அதாவது சம்பந்தருடைய தலயாத்திரை பன்முகத்தன்மை கொண்டதாக அமைந்தது.

ஞானசம்பந்தர் தமது தலயாத்திரையில் சோழநாட்டில் அப்பருடன் திருமறைக்காடு வந்து, பின்னர் மங்கையர்க்கரசியின் வேண்டுகோளுக்கு இணங்கித் தனியே பாண்டி நாடடைந்து அங்கும் மேன்மை கொள் சைவநீதி தழைத்தோங்கச் செய்ததன் பின் மேலும் தெற்குத் திசை நோக்கிய தலயாத்திரையை மேற்கொள்கின்றார். திருப்பரங்குன்றம், திருஆப்பனூர், திருப்புத்தூர், திருப்பூவனம், திருக்கானப்பேர், திருக்குற்றாலம், திருகுறும்பலா, திருநெல்வேலி முதலான ஊர்களிலுள்ள தலங்களைத் தரிசித்து திருவிராமேஸ்வரம் அடைந்தார்.

புண்ணியனார் நெல்வேலி பணிந்து போற்றிப்
புரிசடையார் திருப்பதிகள் பிறவுஞ் சென்று
நண்ணியினி தமர்ந்தாங்கு நயந்துபாடி
நற்றொண்டருடனாளும் போற்றிச் செல்வார்
விண்ணவரைச் செற்றுகந்தானிலங்கை செற்ற
மிக்கபெரும் பாதகத்தை நீக்க வேண்டித்
திண்ணிய பொற் சிலைத் தடக்கையிராமன் செய்த
திருவிராமேஸ்வரத்தைச் சென்று சேர்ந்தார்

(தி.தொ.புராணம் - 887)

எனச் சேக்கிழார் இதனைக் கூறுகின்றார். இராமேஸ்வரத்தின் தோற்றத்துக்குக் காரணமான இராமாயணக்கதை மரபை வலியுறுத்து வதன்மூலம் இராமேஸ்வரத்தின் வரலாற்றை மட்டுமல்ல, இனி அடுத்ததாக இலங்கை மீதான கவனம் ஞானசம்பந்தரிடம் ஏற்படப் போகின்றது என்பதனை வருவது முன்கூறல் உத்திமூலம் புலப்படுத்து கின்றார் போலத் தெரிய வருகின்றது. எனினும் அடுத்து இரண்டு பாடல்களின் பின் ஈழத் தலங்கள் மீது சம்பந்தர் தேவாரம் பாடியதை அவரது வழமையான பாணியில்,

அந்நகரிலமர்ந்தங்கணினது மேவி
யாழிபுடை சூழ்ந்தொலிக்கு மீழந்தன்னின்

**மன்னு திருக்கோணமலை மகிழ்ந்து செங்கண்**
**மழவிடையார் தமைப் போற்றி வணங்கிப் பாடிச்**
**சென்னிமதிபுனை மாட மாதோட்டத்திற்**
**றிருகேதீச்சரத்தண்ணல் செய்யபாதம்**
**உன்னி மிகப் பணிந்தேத்தி யன்பரோடு**
**மூலவாத கிழி பெற்றார் உவகையுற்றார்** (தி.தொ.பு.890)

எனக் குறிப்பிடுகின்றார்.

மேற்படி பாடல்மூலம் சம்பந்தர் இதனைக் கேட்ட தலமாகவே பாடியுள்ளமையைப் புலப்படுத்தவே செய்ய பதம் உன்னி என்ற சொற்றொடரைச் சேக்கிழார் பிரயோகிக்கின்றார்.

**இவ்வாறே திருக்காளத்தி மலையிலிருந்தபடியே வடக்கு நோக்கிப் பயணித்து வடநாட்டுப் பதிகளை நினைத்துப் பாடியருளுதலுங் காண்க ஈண்டு இராமேசுரத்தில் இருந்த படியே ஈழநாட்டுப் பதிகளிரண்டினையும் பாடியருளியது இடையே கடல் குறுக்கிட்டுச் சூழ்ந்திருத்தலால் கடலைக் கடந்து செல்லல் ஆகாது என்ற மறைவிதி காரணமாக என்பது கருதப்படும்.**

(தி.தொ.பு.உரை - 1125)

என உரையாசிரியர் இதனை விளக்குகின்றார். இந்தியாவிலும் ஈழத்துக்குமான கடல்வழிப் போக்குவரத்துகள் மிகவும் இலகுவாகவிருந்த சூழலிலும் கூட ஞானசம்பந்தர் ஈழநாட்டுக்கான தலயாத்திரையை மேற்கொள்ளவில்லை. கடல்கடந்து செல்லும் வழக்கம் மறைவிதிக்கு முரணானது என உரைகாரர் கூறுகின்றனர். எனினும் புதியதோர் பிரதேசத்திற்கு யாத்திரை செல்வதற்கு யாத்திரை செல்ல சம்பந்தர் தயங்கி இருக்கலாம். அல்லது ஈழத்துக்கு அவரை விரும்பியழைக்க எவரும் முன்வராததுமாகவும் இருக்கலாம். எது எவ்வாறெனினும் சம்பந்தர் ஈழத்தலங்கள் பற்றிப் போகிறபோக்கில் (மேலெழுந்தவாரியாக) பதிகங்கள் பாடவில்லை. ஆலயங்கள் அவற்றின் அமைவிடம், மூர்த்தி, தலம், தீர்த்தச் சிறப்புகள் பற்றியும் அவர் நன்கு அறிந்ததன் பின்னரே பதிகங்களைப் பாடியுள்ளமை அவரின் பதிகங்களின் வழி புலனாகிறது.

முதலில் கேதீச்சரத்தைப் பாடவந்த சம்பந்தர் அத்தலம் மாதோட்டம் எனும் பண்டைய புகழ்மிக்க துறைமுகப் பட்டிணத்தில் அமைந்துள்ளது என்பதனை,

**கனைகடல் கடிகமழ் பொழிலணி மாதோட்டம்**
**கருத நின்ற கேதீச்சரம்** (2:243:1)

எனும் பாடல் அடியுனூடாக நிறுவுகின்றார். அநேகமான பாடல் அடிகளில் மாதோட்டம் பற்றி விவரித்துச் செல்கின்றார். மேலும் கேதீச்சரத்தின் புனித தீர்த்தமான பாலாவியை,

**மன்னு பாலாவியின் கரையிற் கேதீச்சரமடை மின்னே**

என்று குறிப்பிடுகின்றார். சுந்தரர் கேதீச்சரப் பதிகத்தில்,

**பத்தாகிய தொண்டர் தொழு பாலாவியின் கரைமேல்**

என்று முதலாவது பாடலிலேயே பாடுவதற்கு ஞானசம்பந்தரே அடியெடுத்துக் கொடுத்தார் போலும்.

திருக்கேதீச்சரம் தொடர்பான அமைவிடத்தைவிட கோணேஸ்வரம் பற்றிச் சம்பந்தர் நன்கு அறிந்துள்ளார் போலத் தெரிகின்றது. கோணேஸ்வரமும் திரிகோணமலை என்ற பட்டினத்திலே கடலோரத்திலேயே அமைந்துள்ளது. அதாவது மூன்று பக்கமும் கடல் சூழ்ந்த ஓர் குன்றிலே கோணேஸ்வரம் அமைந்துள்ளது. இந்தத் தகவலை மிக நுணுக்கமாக அறிந்து கொண்ட சம்பந்தர்,

**கரைகெழு சந்தும் காரகிற் பிளவும்**
**அளப்பருங் கனமணி வரன்றிக்**
**குரைகடலோதம் நித்திலங் கொழிக்குங்**
**கோணமாமலையமர்ந்தாரே.** (3:381:1)

என்றும்,

**குற்றமிலாதோர் குரைகடல் சூழ்ந்த**
**கோணமாமலை யமர்ந்தார்** (3:381:11)

என்றும் குறிப்பிடுகின்றார். மேலும் கோயிலின் தீர்த்தத்தின் பெயரை அவர் குறிப்பிடவில்லை. ஆயின் பொதுவாக **கோயிலுஞ் சுனையுங் கடலுடன் சூழ்ந்த கோணமாமலை** (3:381:5) என்று குறிப்பிடுகின்றார். அவர் குறிப்பிட்ட சுனை நகருக்கு 6 கி.மீ தூரத்தில் உள்ள கன்னியா என்ற இடத்தில் அமைந்துள்ள ஏழு வெந்நீர் ஊற்றுக்களாக இருக்கலாம் என்பர் உரைகாரர். ஆயின் பாவநாசதீர்த்தம் என்ற தீர்த்தம் கோயிலுக்கு அண்மித்ததாக உள்ளது. அதனையே சம்பந்தர் பொதுவாகச் சுனை என்று பாடியிருக்க வேண்டும். அத்துடன்,

**கொடிதெனக் கதறுங் குரைகடல் சூழ்ந்து**
**கொள்ளமுன் நித்திலஞ் சுமந்து**
**குடிதனை நெருக்கிப் பெருக்கமாய்த் தோன்றும்**
**கோணமாமலை** (3:381:2)

என்று குறிப்பிடுவதன் மூலம் அன்றைய ஈழத்துச் சைவத்தமிழ்க் குடிகளின் பரம்பல் திரிகோணமலையிலே மிகச் செறிவாக நிகழ்ந்திருந்ததென்ற

வரலாற்றுத் தகவலையும் தருகின்றார் என்பதனால் மேற்குறித்த பாடலடிகள் மிகவும் கவன ஈர்ப்புக்குள்ளாகின்றன.

மேற்குறித்த விடயங்கள் தவிர கேதீச்சரத்தில் மருதமும், நெய்தலும், குறிஞ்சியும் மயங்கியது என்றும், கோணேஸ்வரத்தில் குறிஞ்சியும் நெய்தலும் மயங்கியது என்றும் அவரது பாடல் அடிகளைக் கொண்டு உரைகாரர் விளக்கியுள்ளனர். கடலும் மலையும் இணைந்த நிலவியல் அமைப்பு திருக்கோணேஸ்வரத்துக்குரியது. ஆதலால் கரைகெழு சந்தும் காரகிற் பிளவும் கனமணியும், விரிந்துயர் மௌவல், மாதவி, புன்னையும் சம்பந்தர் பாடலிற் கலந்து பயின்றன. இதுபோலவே மாதோட்டத்தில் வாழையம்பொழிலில் மந்திகள் களிப்புறுதலும் வண்டு பண்செய்யும் மாமலர்ப் பொழில் மஞ்ஞை நடமிடுவதும், மாவும் பூகமும் கதலியும் நெருங்கியிருப்பதும் கூறப்பட்டுள்ளது. இதனால் நெய்தல், குறிஞ்சி, மருதம் முதலிய நிலங்கள் மயங்கின என்பர் உரைகாரர். இங்கே குறிஞ்சி பற்றிய குறிப்புகள் கற்பனைக்குரியனவே. குறிஞ்சி நிலப்பண்புகள் மாதோட்டத்தில் இல்லை. நெய்தலும் மருதமும் மயங்கிய நிலவியல் அமைப்பே காணப்படுகின்றது.

மேற்குறித்த தலங்களுக்கே உரித்தான அடையாளங்கள் தவிர சம்பந்தரது பதிகங்களில் காணப்படும் பொதுவான பண்புகளான இறைவனின் தோற்றப்பொலிவு, அவரது அட்டவீரச் செயல்கள் பற்றிய குறிப்புகள், உமையை இடங்கொண்டது, கங்கையைத் தலையிற் சூடியது, நால்வருக்கு அறம் உரைத்தது, இறைவனுக்கு வரமளித்தது, மாலும் அயனும் அடிமுடிதேடியது, சமண பௌத்த மத எதிர்ப்புப் பிரச்சாரம் முத்திரைக்கவி வரையிலான அம்சங்கள் இவற்றில் இடம் பெற்றுள்ளன.

திருக்கோணேஸ்வரத்தில் இராவணன் வெட்டு ஒன்று ஓர் பகுதியுண்டு. மலையின் ஒரு பக்கப் பிளவினை இவ்வாறு அழைக்கின்றார்கள். இராவணனது தாயார் நோயுற்றிருந்தபோது அவர் கோணேஸ்வரத்திறைவனை வணங்க முடியாது போய்விட்டது. இதனால் கோயிலையே மலையுடன் கல்லி எடுத்துக் கொண்டுபோய்ச் சேர்க்க முனைந்தபோது மலையை வெட்டிய முதல் வெட்டே அதுவென்றும், ஆயின் அவன் அவ்வாறு வெட்டும்போதே தாயாரின் மரணச் சேதி வந்ததென்றும் அதனால் தன் முயற்சியை அவன் கைவிட்டானென்றும் ஓர் கதை மரபுண்டு. இது பெரும்பாலும் தொன்மாகவே (Myth) இருக்க வேண்டும். இக்கதை மரபு அவன் இமயமலையைப் பெயர்க்க முயற்சித்த தொன்மத்தின் அருட்டுணர்வினாலும் ஏற்பட்டிருக்கலாம். ஆனால் இவ்விடத்தில் எழும் வினா என்னவெனில் இராவணன் இமயமலையை எடுத்த முயற்சியையும் இறைவன் அவன் தருக்கை

அழித்து, அருள் அளித்ததையும் தமது பதிகங்களின் எட்டாவது பாடல்களில் ஓர் வாய்பாடாகவே கூறியுள்ள ஞானசம்பந்தர் இக்கதை மரபை அறிந்திருக்கவில்லையோ என்பதே. இராவணனுடன் தொடர்பு படுத்தி சிவன் புகழ் பாடுவதே அவர் நோக்கமாக இருந்திருக்குமளவிற்கு இராவணனுடன் தொடர்புடைய வேறு செய்திகளை அவர் குறிப்பிட வில்லை. **தென்னிலங்கையர் குலபதி** (3:243:8) என்பதுடன் மட்டும் நின்றுவிடுகின்றார்.

இதுவரை விவரித்த விடயங்கள் ஞானசம்பந்தரது பதிகங்களையும், சேக்கிழாரது பாடல்களையும் அடிப்படையாகக் கொண்டவை. இனி பாடல் பெற்ற தலம் என்ற கருத்துருவாக்கங்களை இலங்கையில் ஏற்படுத்திய தாக்கத்தினையும், சம்பந்தர் பற்றிய ஈழத்தவரது அறிகை நிலையையும் சுருக்கமாக நோக்க வேண்டியுள்ளது. ஈழம், ஈழத்துத் தமிழர், ஈழத்துத் தமிழ் இலக்கியம், இந்து மதம் குறித்த வரலாற்றுணர்வுகள் ஈழத் தமிழரிடையே மேற்கிளம்பியபோது அது பலதரப்பட்ட வாதப் பிரதிவாதங்களை எதிர்கொண்டது. இந்து மதங் குறித்த வரலாற்றுக் குறிப்புகள் ஆங்காங்கே தொகுக்கப்பட்டு புராதன காலத்தில் இருந்து அண்மைக்காலம் வரை ஒழுங்கமைக்கப்பட்டன. இந்த ஒழுங்கமைப்பின் இடையறாத் தொடர்ச்சிக்கு பாடல் பெற்ற தலங்களின் கருத்து நிலை மேலும் வலுச்சேர்த்தன. அதாவது கி.பி.7,8-ஆம் நூற்றாண்டுகளில் இத்தலங்கள் நிலை பெற்றிருந்தன வென்றதற்குத் தேவாரங்கள் மிக நம்பகமான ஆவணங்களாக அமைந்தன.

ஈழத்துத் தமிழ் இலக்கியம் குறித்த தேடுதலின் சங்கப் புலவரான ஈழத்துப் பூதன் தேவனாரை ஈழத்துத் தமிழ் இலக்கியத்தின் ரிஷி மூலமாகக் கொள்ளுதல் மரபாகும். அவரது பாடல்களுக்குப்பின் ஏறக்குறைய 16-ம் நூற்றாண்டின் பின்பே ஈழத்தில் தோன்றிய இலக்கியங்கள் எமக்குக் கிடைக்கின்றன. இடைப்பட்ட காலத்தில் ஈழத்தில் பல அரசியல் மாற்றங்கள் நடந்தேறியிருக்கின்றன. சோழ மன்னர்களால் ஈழம் முழுவதும் கி.பி.10-இல் ஆட்சிக்குட்பட்டுள்ளது. சோழப் பேரரசின் ஒரு மண்டலமாக மும்முடிச்சோழ மண்டலம் என்ற பெயரில் இது நிர்வாகஞ் செய்யப்பட்டுள்ளது. சோழர் காலக் கலைப்பாணியை உடைய பல ஆலயங்கள் இங்கு எழுந்துள்ளன. ஆனால் ஈழத்தில் எழுந்த இலக்கிய ஆதாரங்கள் எதுவும் எமக்குக் கிடைத்தில. ஆயின் இலக்கியத் தரமுடைய சாசனங்கள் கிடைத்துள்ளன. இந்த இடைவெளியில் ஈழத்தைப் பற்றிக் குறிக்கின்ற இலக்கிய ஆவணங்களாகச் சம்பந்தரது தேவாரங்கள் அமைந்தன. இதுவே சம்பந்தர் தேவாரங்களுக்கு பக்தி நெறியையும் மீறின வரலாற்றங்கீகாரம்

ஈழத்திலே கிடைக்கச் செய்தது. அதாவது ஈழத்திலே கடந்த பல தசாப்தங்களாக நிலவி வரும் இனமுறுகல் சூழல் வரலாற்றாய்வு களிலிருந்துதான் ஆரம்பித்தது. அவரவரும் தத்தமது பிதுரார்ஜிதங்களை ஆட்சி, சாட்சி ஆவணங்கள் மூலமாக நிறுவினர். அப்போது ஈழத்துத் தமிழர் பற்றிய வரலாற்றுக்கும், இலக்கிய வரலாற்றுக்குமான ஆதாரங் களை முன் வைப்பதில் பெரும் இடர்ப்பாடு எழுந்தபோது ஆட்சியும் சாட்சியுமாக இப்பாடல் பெற்ற தலங்களும், ஆவணங்களாக சம்பந்தர் முதலியோர் பாடல் பெற்ற பாடல்களுமே பெரிதும் கைகொடுத்தன. ஈழத்துத் தமிழரின் வரலாற்று ரீதியான நீண்டகால இருப்புக்கும், ஈழத்துத் தமிழ் இலக்கியத்தின் இடையறாத வளர்ச்சிக்கும் தொடர்ச்சிக்கும் அவை மிகப் பெறுமதி மிக்க ஆட்சியும் சாட்சியும் ஆவணங்களுமாக விளங்கின.

ஞானசம்பந்தர் தொடர்பான அறிகையும், பயில் நிலையும் இன்றுவரை ஈழத்திலே மிக ஆழமாக வேரூன்றியுள்ளன. ஈழத்தில் கிறித்துவ மதத்திற்கெதிரான சைவ மறுமலர்ச்சி இயக்கத்தை ஆறுமுக நாவலர் முன்னெடுத்தபோது சைவ இலக்கியமான பெரியபுராணம் வசன நடை கண்டது. கோயில்களில் பஞ்சபுராணம் ஓதும் முறை உருவானது. சமய குரவர் நால்வருக்கும் குருபூசைகள் கொண்டாடப் பட்டன. ஈழத்தில், குறிப்பாக யாழ்ப்பாணப் பிராந்தியத்தில் கிறித்துவ ஆங்கிலப் பாடசாலைகளுக்கெதிராகச் சைவப் பாடசாலைகள் அவரால் ஸ்தாபிக்கப்பட்ட போது அப்பாடசாலைகளின் சைவ சமயப் பாட நெறியில் நால்வர் வரலாறும் தேவாரங்களும் இடம்பெற்றன. சமய குரவர்கள் பற்றிய கதாப்பிரசங்க முறைமையும் தவிர்க்க முடியாதவாறு இடம்பெற்றது. சைவ நாயன்மார்களில் சம்பந்தரும், மாணிக்கவாசகரும் யாழ்ப்பாண மக்களிடத்தில் பெருஞ்செல்வாக்குப் பெற்றமைக்கு நாவலரது பணிகளும், பெரியபுராணத்தின் மிகப் பரவலான செல்வாக்கும் காரணமாயின.

இலங்கை சுதந்திரமடைந்ததன் பின்னர் ஆரம்ப, இடைநிலைக் கல்வியில் சமய பாடம் முக்கியம் பெற்றது. இதனால் **சைவபோதினி, இந்துசமயம்** முதலிய பெயர்களுடன் பாடப் புத்தகங்கள் வெளியாயின. அவற்றின் கருத்திட்டங்களில் நால்வரும் முதன்மை பெற்றனர். பின்னர், அரசே இலவசமாகப் பாட நூல்களை விநியோகஞ் செய்யத் தொடங்கியபோது ஆரம்ப வகுப்புகளிலிருந்து இடைநிலை வகுப்பு வரை சைவநெறி எனும் பாடநூல் அறிமுகமானது. முதலாம் சைவ நெறியில் ஞானப்பாலூண்ட ஞானசம்பந்தரே கோட்டுப்படங்களுடன் அறிமுகமாகின்றார். அவரது முதல் தேவாரயான **தோடுடைய செவியினில்** ஆரம்பிக்கும் அவர் பற்றிய அறிமுகம் **காதலாகிக் கசிந்து**

**கண்ணீர் மல்கி** எனும் இறுதிப் பதிகமான நமச்சிவாயப் பதிகம் வரை மாணவரது உளவியற் பாங்கிற்கேற்ற விதமாகப் பாடவிதானத்தில் விரிந்து செல்கின்றது. தோடுடைய செவியன் தேவாரம் தெரிந்திருப்பதே சைவத் தமிழ்க் குழந்தைகள் ஆளுமைக்கு உரைகல்லாக விளங்குகின்றது.

ஞானசம்பந்தர் பெயரில் ஆதீனம் ஒன்றும் யாழ்ப்பாணத்து நல்லூரில் கடந்த மூன்று தசாப்தங்களாக நல்லை ஞானசம்பந்தர் ஆதீனம் என்ற பெயரில் உள்ளது. சமயப் பணியொன்றே இதன் தலையாய கடமையாகக் கொண்டு இயங்கி வருகின்றது.

மேற்குறித்த விடயங்களை உள்ளத்து நோக்கும்போது,

**பொருட்சமய முதற் சைவ நெறிதான் பெற்ற புண்ணியக்**
**கண்ணிரண்டு**

என ஒரு கண்ணாகச் சம்பந்தரைச் சேக்கிழார் போற்றுவதற்கு ஆழ்ந்த கருத்துள்ளதுபோலத் தெரிகின்றது.

> **"திருஞானசம்பந்தரை நாம் நினைப்பதுபோல் சைவ சமயத்தைப் பரப்புவதற்கும் அதன் பெருமையை வெளிப்படுத்தவும் அவதரித்த பெரியாராகச் சேக்கிழார் கருதினாராகத் தெரிய வில்லை. களப்பிரருக்குப் பின்னும் வீழ்ச்சியடைந்த தமிழ் மொழியும் தமிழ் நாகரிகமும் எழுந்திராமல் இருப்பதைக் கண்டு இத்தமிழ்ச் சாதியைத் தட்டியெழுப்பவும், இதற்குப் பகையாய் இருப்பவர்களிடம் போரிடவும் தோன்றிய புரட்சி வீரராய்க் காண்கிறார் சேக்கிழார். ஏழாம் நூற்றாண்டில் இப்போராட்டத்தை நடத்திப் பிள்ளையார் வெற்றி கொண்டிராவிடில் பன்னிரண்டாம் நூற்றாண்டில் சைவம் என்பதும் தமிழ் என்பதும் பொய்யாய்க் கனவாய்ப் போயிருக்கும் என்பதைச் சேக்கிழார் நன்றாக அறிந்தார்".**

என அ.ச.ஞானசம்பந்தன் (1999:37) குறிப்பிடுவது வெறும் புகழ் வார்த்தைகளல்ல.

# 63. நமச்சிவாய மந்திரத்தின் சிறப்பு

சு. மதியழகனார், தம்மம்பட்டி.

திருத்தோணிபுரத்து, உமையம்மையார் ஞானப்பால் அருந்துவிக்க, 'தோடுடைய செவியன்' என்று தமது மூன்றாவது அகவையில் பாடத் தொடங்கிப் பதிகப் பெருவழி கண்ட திரு நெறிய தமிழ்வல்ல ஞானசம்பந்தர் தமது பதினாறாவது அகவையில் திருநல்லூர்ப் பெருமணம் என்னுமிடத்தில் சொக்கியார் என்ற நங்கையைக் 'கல்லூர்ப் பெருமணம்' என்னும் பதிகம் பாடி மணம் புரிந்து தமது வாழ்க்கைத் துணைவியார் கரம் பற்றி வலம்வர திருக்கோயில் சோதிப் பிழம்பாகத் தோன்றியது. திருமணத்திற்கு வந்திருந்த அனைவரும் கேட்குமாறு ''காதலாகி'' என்னும் நமச்சிவாயப் பதிகம் பாடி அவர் எல்லோரையும் அவ்வொளியிற் புக்குச் சித்தி பெறச் செய்தனர். அத்தகு நமச்சிவாய மந்திரத்தின் சிறப்பினை இக்கட்டுரையின் கண் ஒருவாறு சிந்திப்போம்.

**திருஞானசம்பந்தரும் திருவைந்தெழுத்தும்**

திருஞானசம்பந்தர் அருளிய ''துஞ்சலும்'' (திருமுறை-3, பதிகம்-22), ''காதலாகி'' (திருமுறை-3, பதிகம்-49) என்னும் தேவாரத் திருப்பதிகங்கள் - திருவைந்தெழுத்தின் சிறப்பினை விரிவாகப் பேசுகின்றன. அன்றியும் திருஞானசம்பந்தர் அருளிய முதல் மூன்று திருமுறைகளிலும், திருவைந்தெழுத்தினைப் பற்றிய குறிப்புகளைத் தந்துள்ளார். அவற்றையெல்லாம் சிந்திப்பின், ஐந்தெழுத்தின் சிறப்பு, செபிக்கும் முறை, பயன் முதலியவற்றைத் தெரிந்து கொள்ளலாம்.

**பிற அருளாளர்களும், நமச்சிவாய மந்திரமும்**

பன்னிரு திருமுறைகளும் திருவைந் தெழுத்தின் விளக்கமே!

பதினான்கு சாத்திரங்களும் திருவைந் தெழுத்தின் விரிவே!

**திருநாவுக்கரசர் தேவாரம்**

''சொற்றுணை வேதியன்'' (திருமுறை-4: பதிகம்-11) என்னும் திருநாவுக்கரசர் தேவாரப் பதிகம் நமச்சிவாய மந்திரத்தின் சிறப்பினை நன்கு எடுத்தியம்புகின்றது.

''படைக்கலமாக நின் நாமத்து எழுத்து அஞ்சு என் நாவிற்
கொண்டேன்'' (4:81:8)

''நமச்சிவாய என்பார் உளரேல் அவர்
தம் அச்சம் நீங்க தவநெறி சார்தலால்'' (5:97:22)

''திரு நாமம் அஞ்செழுத்தும் செப்பாராகில்
பெரு நோய்கள் மிக நலியப் பெயர்த்தும்
செத்துப் பிறப்பதற்கே தொழிலாகி இருக்கின்றாரே''

பூவனூர்ப் புனிதன் திருநாமமாகிய நமச்சிவாயத்தினைக் கோடி தடவை செபித்து வீடு பெறலாம்.

'நமச்சிவாயவே ஞானமும் கல்வியும்
நமச்சிவாயவே நானறி விச்சையும்
நமச்சிவாயவே நாநவின் றேத்துமே
நமச்சிவாயவே நன்னெறி காட்டுமே' (5-90-2)

''திருவாய் பொலிய'' சிவாய நம வென்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதி பாதிரிப்புலியூர் அரனே!

என்பர் அப்பரடிகள்.

சிவாய நம வென்று ஓதியே திருநீறு அணிய வேண்டும். திருநீற்றுக்கும் ' ஸ்ரீ பஞ்சாட்சரம்' என்றே பெயர்.

**சுந்தரர் தேவாரம்**

சுந்தரர் தமது தேவாரத் திருமுறையில் ''மற்று பற்று'' (திருமுறை-7, பதிகம்-48) என்னும் திருப்பதிகத்தில் நமச்சிவாய மந்திரச் சிறப்பினைப் பகர்வர்.

பதிகப் பாடல் தோறும் ஈற்றடியில் உனை நான் மறக்கினும் சொல்லும் நா 'நமச்சிவாயவே' என்பர்.

''துஞ்சிருள் காலை மாலை தொடர்ச்சியை மறந்திடாதே அஞ்சுபதம் சொல்லி'' - சுந்தரர்

இரவும் பகலும் எப்போதும் நமச்சிவாயப் பொருளைச் சிந்தித்திருத்தல் வேண்டும்.

''அஞ்செழுத்து அஞ்சுபதம் ஆதல் ஓர்க'' சொல்லுலகு, வன்னம் - எழுத்து, பதம் - சொல், மந்திரம் - பொருள் என மூவகைப்படும்.

**மாணிக்கவாசகர் - திருவாசகம்**

திருப்பெருந்துறையில் குருந்த மர நிழலில் குருவடிவாக வந்த சிவபெருமானால் ஆட்கொளப் பெற்ற மணிவாசகர், தமக்குக்

குருநாதர் இரகசியமாகச் செவியில் உபதேதித்த ஐந்தெழுத்து அருமறையை, உலகம் உய்யத்தாம் பாடத் தொடங்கிய திருவாசக முதற் செய்யுளின் முதலிலேயே அமைத்து,

**"நமச்சிவாய வாழ்க"**

என சிவபுராணம் செய்வாராயினர்.

**"போற்றி ஓம் நமச்சிவாய"**

என்ற திருவாசகப் பாடல் "காருணியத் திரங்கல்" என்னும் தலைப்பில் உள்ளது.

**"இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க"**
(சிவபுராணம்)

**"நானேயோ தவம் செய்தேன் சிவாய நம வெனப் பெற்றேன்"**
(திருவாசம்:38-10)

என்றெல்லாம் பெருமிதத்தோடு பறைசாற்றிச் சொல்கின்றார் மணிவாசகர்.

## கருவூர்த்தேவர் - திருவிசைப்பா

'அற்புதத் தெய்வம்' என்னும் திருவிசைப்பாவில் "அன்பொடு தன்னை அஞ்செழுத்தின் சொற்பதத்துள் வைத்து உள்ளம் அள்ளூரும் தொண்டர்" என்பர் கருவூர்த்தேவர்.

(9-ம் திருமறை)

## திருமூலர் திருமந்திரம்

'ஒன்று கண்டீர்' என்னும் திருமந்திரப் பாடலில் நன்று கண்டீர், நமச்சிவாயப் பழம் தின்று கண்டேற்கு இது தித்தித்தவாறே என்கிறார் திருமூலர் (திருமந்திரம் -2649).

**நகாரம் மகார சிகார நடுவாய்**
**வகாரம் இரண்டும் வளியுடன் கூடி**
**ஒகார முதற்கொண்டு ஒருகால் உரைக்க**
**வகார முதல்வன் மனத்தகத்தானே.** (திருமந்திரம் -2715)

**சிகார வகார யகார முடனே**
**நகார மகார நடுவுற நாடி**
**ஒகார முடனே ஒருகால் உரைக்க**
**மகார முதல்வன் மதித்து நின்றானே** (திருமந்திரம்-2716)

நம வென்னும் நாமத்தை நாவில் ஒடுக்கிச் சிவ வென்னும் நாமத்தைச் சிந்தையுள் ஏற்றிச் சிவாய நம வெனச் சித்தம் ஒடுக்கி - (திருமந்திரம்-2668) சிவாய நமவென சித்தம் ஒடுக்கி -(திருமந்திரம் -2669)

மந்திரங்களுக்கெல்லாம் மூல மந்திரம் நமச்சிவாய மந்திரம். பஞ்ச பிரம மந்திரங்களும், ஐம்பத்தோரட்சரங்களும், பேர் ஆயிரம், சப்த கோடி மந்திரங்களும் இதில் அடக்கம்; என்கிறது தமிழாகம திருமந்திரம்.

கலை, தத்துவம், புவனம் என்னும் பொருள் உலகும் அண்ட சராசரங்கள் அனைத்தும் நமச்சிவாயத்திலிருந்து விரிந்தனவே.

ஈசானம் - ந, தற்புருஷம் - ம, அகோரம் - சி, வாமம் - வ, சத்யோஜாதம் - ய.

'ஐம்பது எழுத்தே' - (திருமந்திரம் - 954)

'நாமம் ஓராயிரம்' - (திருமந்திரம் - 2945)

'சிவசிவ என்கிலர்' - (திருமந்திரம் - 2716)

**நக்கீரர்**

'கயிலை பாதி காளத்தி பாதி அந்தாதி அஞ்செழுத்துங் கண்டீர்'...

'வாயிலே வைக்கும் அளவில் மருந்தாகித்
தீய பிறவி நோய் தீர்க்குமே - தூயவே
கம் பெருமா தேவியொரு மன்னு கயிலாயத்து
எம் பெருமான் ஓர் அஞ்செழுத்து' (11 -ஆம் திருமுறை)

**பட்டினத்தார் பாடல்**

''கல்லாப் பிழையும் - நின் அஞ்செழுத்தை
கசிந்துருகிச் சொல்லாப் பிழையும்''

தவியா திரு நெஞ்சமே

பொன்னம்பலத் தாடியை அஞ்செழுத்தால்

செவியாமல் நீ செபித்தால்

பிறவா முத்தி சித்திக்குமே!

'நாய்க்குண்டு தெண்டு..

நமனை வெல்ல வாய்க்குண்டு மந்திர

பஞ்சாட்சரம்; மதியாமல்வரு

பேய்க்குண்டு நீறு!

'ஓராதே அஞ்செழுத்து முன்னுதே..'

'ஐயுந் தொடர்ந்து விழியும் செருகி அறிவழிந்திட்டு

மெய்யும் பொய்யாகிவிடுகின்றபோது ஒன்று வேண்டுவல் யான்

செய்யும் திருஒற் றியூருடையீர்!
கையுந் தொழப் பண்ணி திருநீறு மிட்டு
ஐந்தெழுத்து ஓதவும் கற்பியுமே’.

உயிர் பிரிகிற தருணம் திருநீறிட்டு ஐந்தெழுத்தோதி கை தொழுபவர்களுக்குச் சிவபெருமான் அஞ்சேல் என்று அருள்செய்வான்.

‘புலனைந்தும் பொறி கலங்கி..
அஞ்சேல் என்று அருள் செய்வான்’

(சம்பந்தர் தேவாரம் - திருவையாறு)

இவர்களுடைய கணக்கு சித்திரகுப்தனால் எழுதப்படுவதில்லை, நந்தி தேவராலேயே எழுதப்படும்.

“தொழுது தூமர் தூவி.....................
எழுதுங் கீழ்க் கணக்கு இன்னம்பர் ஈசனே”

(அப்பர் தேவாரம் - திருஇண்ணம்பர்)

இவர்களை எமதூதர்கள் பாசக்கயிற்றினால் பிணித்து இயமன் முன் நிறுத்துவதில்லை.

“பொருளுணர்ந்து சொல்லுவார், செல்வர்
சிவபுரத்தினுள்ளார் சிவனடிக் கீழ்
பல்லோரும் ஏத்தப் பணிந்து” (சிவபுராணம்)

காசி, திருவாஞ்சியம், திருமுதுகுன்ற தலபுராணங்களை அறிக.

**சேக்கிழார் - பெரியபுராணம்**

சேக்கிழார் தமது பெரியபுராணத்தில் நாயன்மார்கள் வரலாற்றைப் பேசுந்தொறும் திருவைந்தெழுத்தின் மாண்பினை ஆங்காங்கே பகர்வர்.

ஆனாய நாயனார் புல்லாங்குழலில் நமச்சிவாய மந்திரத்தை இசைத்து மாடு மேய்த்து வந்ததாகக் குறிப்பிடுவர்.

ஞானசம்பந்தர் இறைவன் அளித்த முத்துச் சிவிகையினை ஐந்தெழுத்து ஓதி வலம் வந்து இவர்ந்ததாகச் சொல்வர்.

“இருவினைப் பாசமும் மலக்கல் ஆர்த்தலின்
வருபவக் கடலின் வீழ் மாக்கள் ஏறிட
அருளும்மெய் அஞ்செழுத்து”

“ஞான மெய்ந் நெறிதான் யார்க்கும்
நமச் சிவாயச் சொல்லாம்” (12- ஆம் திருமுறை)

**சைவ சித்தாந்த சாத்திரங்களும் திருவைந்தெழுத்தும்**

மெய்கண்டார் சைவ சித்தாந்த முதனூல் ஆசிரியர். 'விதியின் எண்ணும் அஞ்செழுத்தே' என்பது சிவஞானபோத சூத்திரத் தொடர். இதற்கு உரைசெய்த சிவஞான சுவாமிகள் 'திருவைந்தெழுத்தை அறிவினால் கணிக்க' என்பர்.

**''அஞ்செழுத்தால் உள்ளம் அரன் உடைமை கண்டு அரனை**
**அஞ்செழுத்தால் அர்ச்சித்தும் இதயத்தில் அஞ்செழுத்தால்''**

(எடுத்துக்காட்டு வெண்பா - சிவஞான)

**'சிவ முதலே ஆமாறு சேறுமேல் தீரும்**
**பவம் இது நீ ஓதும்படி'** (திருவருட்பயன்)

சிவாய நம வென்னும் திருவைந்தெழுத்து முறையே, சிவம், அருள், ஆன்மா, நிரோதம், மலம் என்னும் ஐந்தையும் குறிக்கும் என்பவர் திருமூலர். (திருமந்திரம் - 2661)

உண்மை விளக்கம், திருவருட்பயன், சிவப்பிரகாசம், சிவஞான சித்தியார் என்னும் சைவ சித்தாந்த சாத்திரங்களும் இதனை வழிமொழிந்து போற்றும்.

**'அஞ்செழுத்துமே அம்மையப்பர் தமைக்காட்டும்'**

என்பது திருவுந்தியார்

**'அஞ்செழுத்தை ஓதப்புக்கு உள்ள மதியும் கெடின்**
**(ஆன்ம போதம் நீங்கினால்) உமை கேள்வன்**
**கேதமற வந்து அளிக்கும்'**

என்பது திருக்களிற்றுப்படியார்.

**ஆடும் படிகேள் நல் அம்பலத்தான் ஐயனே,**
**நாடும் திருவடியிலே நகரம் கூடும்**
**மகரம் உதரம் வளர்தோள் சிகரம்**
**பகருமுகம் வா முடியப்பார்.**

| (ஊன்றிய | அடி | வயிறு | தோள் | முகம் | முடி) |
|---|---|---|---|---|---|
| | ந | ம | சி | வ | ய |

**''சேர்க்கும் துடி சிகரம் சிக்கனவா வீசுகரம்**
**ஆர்க்கும் யகரம் அபயகரம் பார்க்கிலிறைக்**
**கங்கி நகரம் அடிக் கீழ் முயலகனூர்**
**தங்கும் மகரமது தான்''**

| (துடிக்கை | வீசுகை | அபயக்கை | தழற்கை | அடிக்கீழ்) |
|---|---|---|---|---|
| சி | வா | ய | ந | ம |

'ஓங்காரமே நற்றிரு வாசி உற்றதனில்
நீங்கா எழுத்தே நிறை சுடராம்'

என்பன மனவாசக கடந்தார் உண்மை விளக்கம்.

**ஔவையார் - நல்வழி**

சிவாய நம வென்று சிந்தித்திருப்பார்க்கு
அபாயம் ஒரு நாளும் இல்லை - உபாயம்
இதுவே மதியாகும் மற்றைய வெல்லாம்
விதியே மதியாய் விடும் (நல்வழி - 15)

**சிவவாக்கியர் - சித்தர் பாடல்**

"அஞ்செழுத்திலே பிறந்து அஞ்செழுத்திலே வளர்ந்து
அஞ்செழுத்தை ஓதுகின்ற"....

"நவ்விரண்டு காலதாய் மவ்விரண்டு வயிறதாய்
சிவ்விரண்டு தோளதாய் வவ்விரண்டு முகமதாய்
யவ்விரண்டு தலையதாய்"..

மானுடராக்கை வடிவு சிவலிங்கம்.

'நங், மங், சிங், வங், யங், நமசிவய'

**இராமலிங்கர் - திருவருட்பா**

திருஒற்றியூரும், திருத்தில்லையும், வள்ளலார் "சொல் அவாவிய" என்னும் திருவருட்பா, பத்துப் பாடல்களிலும் நமச்சிவாய மந்திரச் சிறப்புகளைக் கூறி ஈற்றடியில் நமச்சிவாயத்தை நான் மறவேனே என்றே முடிக்கின்றார்.

## மூவகை தீட்சைகளும் திருவைந்தெழுத்தும்

**நமசிவாய**

தூல பஞ்சாக்கரம் சிவனுக்கு வணக்கம் என்பது இதன் பொருள். சமய தீட்சையில் இது உபதேசிக்கப் பெறும்.

நம - என்னுடையதல்ல; சிவய - வித்தினுடையதே. நம - அங்கம், சிவ - இலிங்கம், ய - ஐக்கியம் (அ) சமரஸ்யம்.

**சிவாய நம**

சூக்கும பஞ்சாக்கரம் சிவம் அருட் சக்தியைக் கொண்டு ஆன்மாக்க ளிடத்தில் கன்ம மாயைகளைத் (மறைப்பாற்றலை தொழிற்படுத்தி ஆணவ மலநீக்கம் செய்கிறது என்பது இதன்பொருள்:

விசேட தீட்சையில் இது உபதேசிக்கப் பெறும்.

**சிவாய**

காரண பஞ்சாக்கரம் (அ) அதி சூக்கும பஞ்சாக்கரம்.

மலங்களின் நீங்கிய ஆன்மா, அருளைப் பற்றி (அருளில் கலந்து), சிவத்தைச் சார்ந்து சிவமாம் தன்மை பெற்று (சிவத்தினின்றும் பிரிவற நின்று), சிவபோகம் துய்த்த வண்ணமாய் நிலைபேறுடையதாகி விடுகிறது.

**நிர்வாண தீட்சையில் இது உபதேசிக்கப் பெறும்.**

**விண்ணினார் பணிந்து ஒத்த வியப்புறு**
**மண்ணினார் மறவாது சிவாய என்று**
**எண்ணினார்க்கு இடமா எழில் வானகம்**
**மண்ணினார் அவர் பாலைத் துறையரே** (அப்பர்)

'சிவாய' என்னும் காரண பஞ்சாட்சரம் தேவாரத் திருமுறைகள் ஏழனுள் நடுவணதாக, நான்காம் திருமுறைத் திருப்பாலைத் துறைப் பதிகத்தின் மையத்தில் அமைந்துள்ளது.

**சிவ**

மகா காரண பஞ்சாட்சரம் (அ) மனு.

இது தாரக மந்திரம், முத்தி பஞ்சாட்சரம் எனவும் படும்.

ஆன்மா அருளில் கலந்து சிவத்தில் பிரிவற நிற்கும். சிவோக பாவனை.

**''எல்லாமற தன்னை இழந்த நலம்; -அனுபூதி நிலை''**
**''சிவ சிவ என்கிலர்''** (திருமந்திரம் - 2716)

**சி**

மகாமனு. சொரூப சிவம் - அரு, அருவுரு, உரு நிலைகளைக் கடந்து தன் இயல்பில் தானாய் மந்திர சொரூபமாய் இருத்தல், சென்று, சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து ஒன்றாம் என்பது சிகரத்தைக் குறிப்பது சுத்தாத்துவித நிலை. நாயோட்டும் மந்திரம். பிணஞ்சுடுங்கோல் (திருமந்திரம்).

திருபுடி ஞானம் - மூன்றாய தன்மை அற்ற நிலை.

**உபாய நிட்டையும், உண்மை நிட்டையும்**

நமசிவாய மந்திரம் ஒன்றே அத்துணை அனுபவங்களையும் தருகிறது. திரோதானசக்தி ஆன்மாவினிடத்திலுள்ள ஆணவ மலத்தைப் போக்கி ஆன்மாவை அருட்சக்தியிடம் சேர்ப்பித்து தான் அதில் அடங்கும்; அந்த திருவருட் சக்தி ஆன்மாவை சிவத்தினிடம்

சேர்ப்பிக்கும். சிவம் தன்னைச் சேர்ந்த ஆன்மாவைத் தன் மயமாக்கிச் சிவபோகம் துய்ப்பிக்கும். சிவத்தைச் சார்ந்த ஆன்மாவும், சிவமாம் தன்மை பெற்று இனிது விளங்கும்.

சிவம் பூரண நிறைவு (வியாபகம்)

அருள் சம நிறைவு (வியாத்தி)

ஆன்மா அடங்கிய நிறைவு (வியாப்பியம்)

சிவயவசி என்பது ஆனந்த பட்சாட்சரம் என்பர் சிற்றபலம் நாடிகள். இதுவே தாயுமானவரால் 'சித்தாந்த முத்தி' எனப்படும் பரமுத்தியாகும். இறைவன் உயிர்களோடும் பொருள்களோடும் ஒன்றாகவும், வேறாகவும் உடனாகவும் இவை அன்றாகவும் இருக்கின்றான். முத்திநிலை ஆன்மாக்களுக்கும் சிவத்திற்கும் உள்ள உறவுநிலை. பேசுதற்குரிய தன்று; அனுபவத்திற்குரியது, 'பேசா அனுபூதி' என்பர் அருணகிரிநாதர்.

**செபிக்கும் முறை**

உரை, மந்தம், மானதம் என மூவகைப்படும். விரல்விட்டு எண்ணியும், மலர்கொண்டு தூவியும், உருத்திராக்க மணி கொண்டு கணித்தும், காலக் கணக்கிட்டும், மூச்சோட்டத்தோடு கூட்டியும் செபிக்கலாம். எக்கோலம் கொண்டாலும் ஏதவத்தைப்பட்டாலும், சங்கரன்தாள் மறவாமை பொருள்: ஒரு நாளைக்கு 21, 600 சுவாச ஓட்டம். அதில் நூற்றில் ஒரு பங்கு 216. குறைந்தது காலையில் 108, மாலையில் 108 முறை செபித்தால், நாளொன்று இருநூற்றுப் பதினாறு (216) எண்ணிக்கையாகும்.

''திருவருளால் இது வாய்த்தது; திருவருளால் இதனைச் செய்கிறேன்; திருவருளால் இதனைத் துய்க்கிறேன்'' என்ற நன்றி உணர்வோடிருத்தல் வேண்டும்.

**சக்கரமும் திருவைந்தெழுத்தும்**

திருவைந்தெழுத்தை ஐங்கோண, அறுகோண, எண்கோண மற்றும் பல கோணச் சக்கரங்களில் அமைத்து எந்திரங்களில் வழிபடும் மரபும் உளது.

ஓரெழுத்து முதல் எட்டெழுத்து வரை முறிக்கப்படுகின்றன. 'ஓம் அம் உம் நமசிவாய' வகரம் ஓசை கருதி நீட்டி ஒலிக்கப்படுகிறது.

**பிரணவ மந்திரமும், நமச்சிவாய மந்திரமும்**

ஓம் என்பது பிரணவ மந்திரம். பீஜாட்சரம் எனப்படும். நாமங்களுக்கு முன் ஒட்டாகச் சேர்க்கப்படும்போது அவை

மந்திரங்களாகின்றன. ஆயினும் மூல மந்திரமாகிய திருவைந்தெழுத்து நீர்ப்பீசமாகவும், பீசத்தோடும் உச்சரிக்கப்படும். ஏனெனில், பிரணவ மந்திரமும் நமச்சிவாய மந்திரமும், ஒரே பொருளை உடையன. ஓம் - சமட்டி ; அ.உ,ம் - வியட்டி, அ-சிவ, உ-ய, ம்-நம, எனவே ஓம் - சமட்டி பஞ்சாட்சரம், சிவாய நம - வியட்டி பஞ்சாட்சரம் ஆகும்.

**எட்டும், இரண்டும் எண்ணுதல்**

**எட்டும் இரண்டும் வடிவான இலிங்கத்தே நட்டம், புதல்வா! நவிலக்கேள்!** (உண்மை விளக்கம்)

இறைவன் எல்லா உயிர்களிலும் உயிர்க்குயிராக விளங்கி உயிர்களை இயக்குகிறான். உயிர்களிடத்திலே ஆன்மப்பிரகாசமாக விளங்குகிறான்.

**முத்தி சாதனங்கள்**

1. திருநீறு 2. திரு அக்கமணி மாலை 3. திருவைந்தெழுத்து.

**சிவயோகம் பயிலுதல்**

இயல்பான மூச்சுக் காற்று (பிராண வாயு) உள் செல்லுங்கால் 'சிவத்தை ஆன்மாவோடு சேர்த்தும்' (பெறுதல் - பேறு), மூச்சை வெளியிடுங்கால் (கரியமில வாயு), ஆன்மாவினிடத்திலிருந்த 'நம' வை (மலங்களை) வெளியேற்றியும் பழகிவர வேண்டும். (விடுதல் - வீடு) வீடு பேறு - முதனிலை திரிந்த தொழிற்பெயர்கள்.

படுக்கையிலிருந்தவாறே துயில் கொள்ளும் முன்னும், துயில்களைந்த உடனும், நாள்தோறும், காலை, மாலைக் கடன்களை முடித்து வேளைக்கு ஒரு நாழிகைக்குக் குறையாமலும், சிறப்பு நாட்களில் திருக்கோயில் வலம் வருதல், கிரிவலம் வருதல் போன்ற தருணங்களிலும் இவ்வாறு பழகி வருதல் நலம்.

**தமிழ் மறை - திருக்குறளில் திருவைந்தெழுத்து**

**பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்**
**பற்றுக பற்று விடற்கு** (குறள்)

பற்றற்றான் - சி, பற்றற்றான் பற்று -வ, பற்றுக -ய, அப்பற்று - ந, பற்றுவிடற்கு - ம.

ஆணவ மலப் பற்றினின்றும் விடுபடுவதற்கு முதலில் திரோதான சக்தியைப் பற்ற வேண்டும். பின்னர் அருட்சக்தியைப் பற்றி சிவத்தை அடைதல் வேண்டும் என்பது பொருள்:

**பஞ்சாட்சரப் படிகள்**

தில்லை திருமன்றிலும், வடலூர் சத்தியஞான சபையிலும் பஞ்சாட்சரப் படிகள் அமைந்திருப்பதன் உண்மையை அறிக.

**அஞ்சு பதங்கள்**

நயப்பு, மகிழ்வு, சிறப்பு, வனப்பு, யாப்பு என்பன.

நாதன் நாமம் நமச்சிவாய என்பதே உபதேச முறையால் மந்திரம் ஆகிறது. மந்திரம் மறை பொருள்; முன் பின்னாக மாறியுள்ளது. நமச்சிவாயத்தை திரும்பத் திரும்ப உச்சரிக்க சிவாய நம வென்றாகிறது. 'நானேயோ தவம் செய்தேன், சிவாய நம வெனப் பெற்றேன்' 'தந்தது உன் தன்னைக் கொண்டது என் தன்னை' ஆடுகின்ற, சேவடிக் கீழ் எனை ஆட வைத்தார் 'சிவமாக்கி எனையாண்ட அத்தன் எனக் கருளியவாறு யார் பெறுவார்? அச்சோவே! என்பன மணிவாசகப் பேறு.

திருஞானசம்பந்தரது, திருமணத்திற்கு வந்திருந்த அனைவர்க்கும் காதலாகி என்னும் நமச்சிவாயப் பதிகம் ஒன்றே, ஞானவதி கேட்ட அளவில் சத்தியோ நிர்வாணதை தீட்சையாகி, சதேகமுத்தி சித்திக்கச் செய்துள்ளது, என்றால் நமச்சிவாய மந்திரச் சிறப்பினை என்னென்பது.

திருஞானசம்பந்தர் தமது உபநயனத்தின் போது, 'செந்தழல் வோம்பிய செம்மை வேதியர்க்கு அந்தியுள் மந்திரம் அஞ்செழுத்துமே' என்று காயத்திரி மந்திரத்தினும் மேலானது நமச்சிவாய மந்திரமே என்றும், தமது திருமணத்தின் போது 'வேதம் நான்கினும் மெய்ப் பொருளாவது நாதன் நாமம் நமச்சிவாயவே' என்று வைதிகச் சடங்குகளின் மேலானது நமச்சிவாய மந்திர சிவம் செய்தலே என்றும் வேதியர்க்கு அறிவுறுத்துகின்றார். சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம் நமச்சிவாய மந்திரத்தைச் சிவம் செய்தலேயாகும். வேத நெறி தழைத்தோங்குக! மிகுசைவத்துறை விளங்குக! பூத பரம்பரை பொலிக!

# 64. சம்பந்தர் காட்டும் சிவனியல்புகள்

அரு. மருததுரை, திருச்சி.

திருஞானசம்பந்தர் திருக்கோயில் வழிபாட்டு நெறிக்கு முதன்மை யளித்து மக்களைத் திருக்கோயில் வழிபாட்டிற்கு ஆற்றுப்படுத்தினார். மக்களுக்குத் தலவழிபாட்டில் நம்பிக்கை ஏற்படச் செய்தலையே நாயன்மார்கள் முக்கிய நோக்கமாகக் கொண்டிருந்தனர். தேவாரத் திருப்பதிகங்களின் நோக்கும் போக்கும் அதனடிப்படையிலேயே திகழ்ந்தன. தேவாரப்பாக்களில் சிவனைப் பற்றிய புராணச்செய்திகள், தலபுராணச் செய்திகள், வருணனைகள் ஆகியன மிகுதியாக இடம் பெற்றுள்ளன. அத்துடன் சிவபரம்பொருளின் சிறப்பியல்புகளையும் ஆங்காங்கே தத்துவ நோக்கில் பதிவு செய்துள்ளனர். அவற்றில் திருஞானசம்பந்தர் பதிகங்களில் காணலாகும் சிவனியல்புகள் பற்றிய செய்திகளை இக்கட்டுரை நோக்குகிறது.

**சிவனியல்புகள்**

சிவபரம்பொருளாகிய இறைவனின் இயல்புகளை எண்வகைக் குணங்களில் அடக்குவர். அய்யன் திருவள்ளுவன் இறைவனை எண்குணத்தன் என்று குறிப்பிடுகின்றார்.

**கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தன்**
**தாளை வணங்காத் தலை** (குறள்-9)

எனும் திருக்குறள் இறைவனை எண்குணத்தன் எனக் குறிக்கின்றது. இதற்கு உரையெழுதிய பரிமேலழகர் சிவாகமத்துள் கூறப்பட்டதான் இறைவனின் எண்குணங்களாகத் தன்வயத்தனாதல், தூயவுடம்பின னாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை ஆகியவற்றை அவ்வெண் குணங்களாகக் கருதுகிறார். இறைவன் குறி, குணங்களைக் கடந்தவனாயினும் இறைவனுக்கென்று இலக்கணங்களைச் சைவ சமயத்தில் ஆன்றோர்கள் குறித்துள்ளனர்.

திருஞானசம்பந்தரும் சிவபெருமானை, 'எண்ணமருங் குணத்தார்' (2.205.1) 'எண்குணங்களும்..' (2.131.1) என்றெல்லாம் சிவபெருமானைப்

பாடி மகிழ்கிறார். மேற்கூறப்பட்ட எட்டு இயல்புகளையும் ஞானசம்பந்தர் வழிநின்று இவண் விளக்கப்பெறும்.

**தன்வயமுடைமை**

பிறரின் கட்டுப்பாட்டின்கீழ் வினையாற்றுவோர் தலைவராகார். இறைவனின் தலையாய குணமே தன்வயமுடைமையாகும். விரும்பி யதை விரும்புங்கால் இயற்றிடும் தன்மையினைத் தலைவராக இருப்போர் பெற்றிடல் வேண்டும் அவ்வாறு இருக்கவேண்டுமானால் பிறர்வயப்படாமல் இருக்க வேண்டும். சிவபரம்பொருள் பிறர்வயப் படாமல் தன்வயமுடையவனாக வினையாற்றுபவர் என்பதனை ஞானசம்பந்தர் பல இடங்களில் பதிவு செய்துள்ளார். சிவபெருமான் மார்க்கண்டனுக்கு வாழ்வளித்தது, காமனைக் காய்ந்தது, பிரமன் சிரத்தைக் கொய்தது முதலான வரலாறுகள் சிவபெருமானின் தன்வயமுடைமைக்குச் சான்று பகர்கின்ற வரலாறுகளாகும்.

**மாலோடயன் இந்திரன் அஞ்சமு னென்கொல்**
**காலார் சிலைக் காமனைக் காய்ந்த...** (2.173.7)

என்ற அடிகள் மால், அயன், இந்திரன் அஞ்சிட அவர்களின் முன்பாகக் காமன் சிவனின் நுதல்விழி நாட்டத்தில் சாம்பராகிப் போனமையைக் குறிக்கின்றன. பிரமனின் சிரத்தை இறைவன் கொய்த நிலையில் தனது சிரத்தைத் தானே படைத்துக்கொள்ள இயலாமற் போனமை பிரமனின் தன்வயமின்மையைக் காட்டுகிறது. பிரமன் முதலானோர் சிவன் வயப்பட்டவர்கள். ஆனால் சிவன் பிறன்வயப்படாதவன் என்பது துலக்கமாகிறது. ஞானசம்பந்தர் சிவபெருமானின் தலைமைத் தன்மையைப் பலவாறாகப் பரவித் துதிக்கின்றார்.

சிவபெருமான் கட்டுப்பாடுகளற்றவன். இவனை நிகர்த்தவர் ஒருவருமில்லை. 'நேரும் அவர்க்குணரப் புகில் இல்லை' (1.136.5), 'இணையிலி' (1.110.4), 'நிகரில்லர்' (2.198.7), 'இணையில இறைவன். (1.120.6), ''ஒருவனாய் நின்ற பெருமான்'' (3.315.10), ''உலகுக்கு ஒருவனாய் நின்றாய்'' (2.251.1) முதலான ஞானசம்பந்தர் வாக்குகள் கட்டுப்பாடுகளற்ற நிகரற்ற இறைவனாகச் சிவபெருமானைச் சுட்டுகின்றன.

''ஏழுலகும் ஓகை தந்து ஆளவல்லான்'' (3.315.10), ஆளுமவர் (3.328.1), ''உலகாளுடையீர்'' (2.140.1) என்பன இறைவனின் தலைமைத் தன்மையைக் குறிப்பனவாகும். அத்துடனின்றி உலகுக்கு அடிப்படையாகவும் சிவபெருமான் விளங்குவதை மூலமதாய் முதல்வன் (2.262.2), 'மூலமதாகி நின்றான்' (3.319.9) என்பன சுட்டுகின்றன.

தன்வயமுடையவனுக்குரிய தன்மைகளான கட்டுப்பாடுகளற்ற நிகரற்ற, தலைமைத் தன்மையனாகப் பெற்ற சிவபெருமானே உலகின் மூலமாக இருந்து தாங்குகிறான். அவனுக்கு நிகரானவர் ஒருவருமிலர். அவனே, அனைத்திற்கும் தலைமையாகவும் அடிப்படையாகவும் விளங்குகின்றான்.

**தூயவுடம்பு**

எண்குணங்களில் இரண்டாவதாக வைத்து எண்ணப்படுவது தூய உடம்பு. இறைவன் தூயவுடம்பினைப் பெற்றவன். சிவபெருமான் தன்வயமுடைமையினாலே எவற்றையும் உடலின்றியே செயல்படும் தன்மையன். பிறர் பொருட்டாகச் சிலவற்றை உடம்போடு நின்று செய்யவேண்டுதலின் தூயவுடம்பு வேண்டப்படுகிறது. இறைவனின் உருவத்தை 'அருளுரு' என்று சித்தியார் (சுப. பா.67) குறிப்பிடுகிறது. அருணந்தி இறைவன் பஞ்சகிருத்தியம் செய்யவே உருவம் எடுப்பதாகக் கூறுகிறார். மேலும், உயிர்களுக்கு உருவம் தர ஒருவர் வேண்டும் என்றும் இறைவனுக்கு உருவத் திருமேனி அளித்திட ஒருவர் வேண்டுவதில்லை (பா.59) என்றும் குறிப்பிட்டுள்ளார். உயிர்கள் தாம் விரும்பிய வண்ணம் உருவம் எடுத்திட இயலாது. ஆனால் இறைவனால் தான் வேண்டுங்கால் வேண்டும் வடிவினை எடுக்கவியலும். தானாகவே இதனை இயற்றுவதால் இறைவன் யோனிவாய்ப் பிறவாத தூயவுடம்பினன் ஆகிறான். ஆகவேதான் இறைவனைப் பிறவாயாக்கைப் பெரியோன் எனக் கூறுகின்றனர். தூய உடம்பு என்பது மலமுதலிய குற்றங்களற்றும் தேற்றக்கேடின்றியும் விளங்குவது.

''தன்னொப்பிலாத் தூயவன்'' (1.113.2), குற்றமில்லர் (2.249.4) என்ற குறிப்புகள் சிவபெருமான் மலமுதலிய குற்றங்களற்ற புனித னாகவும் தூயவனாகவும் விளங்குகிறான் என்பதனைக் குறிக்கும் சான்றுகளாகின்றன.

தூயவுடம்பு என்பது தோற்றக்கேடின்றி விளங்குவதாகும். சிவபெருமானுக்குப் பிறப்பினால் உண்டாகும் குற்றங்களான மூப்பு, பிணி முதலியன இல்லை. இதனை ஞானசம்பந்தரின்' 'எங்குமோர் பிணியிலார்' (2.239.4), ''நோயிலார்'' (2.21.4.4); 'நோயுமிலராவர்' (3.340.5), ''பிணியில்லவனே'' (2.156.6), ''மூப்பு நீக்கிய முக்கன் மூர்த்தி'' (3.300.6) என்ற குறிப்புகள் விளக்குகின்றன.

**இயற்கையுணர்வினனாதல்**

மூன்றாக வைத்தெண்ணப்படுவது இயற்கையுணர்வினனாதல் என்ற குணமாகும். இறைவனினறிவு பிறபொருள்களால் வரும்

செயற்கை அறிவன்று. அது தானே விளங்குவது. நால்வர்க்கு அறமுறைத்தல் மற்றும் வேதாகம புராணங்களை உலகுக்கு அறிவித்தது தொடர்பான புராண வரலாறுகள் இறைவன் இயற்கை உணர்வினன் என்பதை விளக்குகின்றன.

**அறங்கிளரும் நால்வேதம் ஆலின்கீழ் இருந்தருளி**
**அமரர் வேண்ட** (1.131.7)

**திறந்தான் காட்டியருளா யென்று தேவரவர் வேண்ட**
**அறந்தான் காட்டியருளிச் செய்தார்** (1.69.8)

என்ற அடிகள் நால்வர்க்கு அறமுரைத்தமையைக் கூறுகின்றன. மேலும் 'ஓதியாரும் அறிவாரில்லை' (2.142.7) என்ற தொடர் இயற்கையறிவினன் என்பதனைக் குறிக்கக் காணலாம்.

## முற்றுணர்வு

நான்காவதாகக் கருதப்படுவது முற்றுணர்தலெனும் குணமாகும். அறிவித்தாலறியும் அறிவதாகவும் அளவில் குறையுமில்லாமல் முக்கால நிகழ்ச்சிகள் அனைத்தையும் பிறர் உதவி இன்றித் தானே முழுமையாக அறிபவன் இறைவன். அவ்வறிவை முற்றறிவு என்பர். அறிவு செயற்கையாக நிகழாது இயற்கையாகவே விளங்கினும் அஃது ஒரு காலத்து ஒன்றையே அறியும் சிற்றறிவாய்விடின் எல்லாவற்றையும் எஞ்ஞான்றும் தன்னிச்சை வழி நடாத்தும் முழுமுதற்றன்மை யின்றா மாதலின் எஞ்ஞான்றும் எல்லாவற்றையும் ஒருங்குணர்தலாகிய இஃது அதனையடுத்து வேண்டப்படுகிறது என்று முற்றுணர்வு எனும் குணம் நான்காவதாக அமைந்த தன்மையினை அறிஞர் சி. அருணைவடிவேலு முதலியார் (சித்தாந்த வினாவிடை, ப.178) விளக்கியுள்ளார். சிவபெருமான் முற்றுமுணர்வாளன் என்பதனை ஞானசம்பந்தர், 'இயங்குஞானத்தார்' (1.8.3), 'ஞானத்திரளாய் நின்ற பெருமான்' (2.156.11) ''பெருஞானமுடைய பெருமான்'' (2.156.11) என்ற குறிப்புகள் வழி விளக்குகிறார். சிவபெருமானின் அறிவு முற்றுமுணர்வறிவு. அவனால் உணரப்படாதது ஒன்றும் கிடையாது. அவன் ஞானமயமாய் ஞானவடிவாய் இருக்கின்றான். எல்லாக் கலைகளும் அவனேயாகிறான். ஆகவே, அவனது அறிவு தானே அறியும் பேரறிவாகின்றது.

## இயல்பாகவே பாசங்களின்று நீங்குதல்

எண்பெரும் குணங்களில் ஐந்தாகக் கருதப்படுவது இறைவன் இயல்பாகவே பாசங்களினின்று நீங்கியவன் என்பதாகும். பாசங்களில் கட்டுண்டவரைப் பாசங்களினின்று நீங்கியவரே விடுவிக்க இயலும். அவ்வகையில் இக்குணத்தினையும் இறைவனின் குணங்களில்

சிறப்புடையதாகக் கருதுவர். உயிர்களின் அறிவு பாசத்தோடு ஒருவாற்றான் ஒத்துப் பரியதாய் நிற்றலின் பருப்பொருளாய பாசத்தால் இயல்பாகவே மறைக்கப்பட்டுள்ளது. ஆனால் இறைவன் அவ்வாறல்லன். அவன் இயல்பாகவே பாசங்களினின்று நீங்கியவன் என்பதனைக் குறிக்கின்றன. சிவபெருமான் மலமற்றவன், பாசம் முதலான குற்றங்களற்றவன். பிறரை மயக்கிடும் வல்வினைகள் அவனை நெருங்காது. சிவபெருமான் இயல்பாகவே பாசங்களினின்று நீங்கியவனாதலினாலே தன்னை வழிபடும் அடியவரை அக்குற்றங் களினின்று அவன் விடுவிக்கின்றான்.

## பேரருளுடைமை

இறைவனின் எண்குணங்களில் ஆறாவதாக வைத்தெண்ணப் படுவது பேரருளுடைமை என்பதாகும். இறைவன் உயிர்கள்மாட்டு வைத்துள்ள பெருங்கருணையின் காரணமாக அவை செய்யும் குற்றங்களைப் பொறுத்துக் குணங்களை ஏற்று அருள் வழங்குவான். முப்புரத்தவர்கள் அறத்தினின்று வழுவி மறத்தொழில் புரிந்த ஞான்று அவர்களின் ஆணவத்தை ஒடுக்கி அருள் வழங்கியமையும் இராவணன் கயிலையைப் பெயர்த்தபோழ்து அவனை அடர்த்து ஆணவம் அடங்கச் செய்தருளியமையும் சிவபெருமானின் பேரருட்டிறத்தை உணர்த்தும் புராண வரலாறுகளாகும்.

''பேரருளாளர்'' (1.77.3), ''அளிதரு பேரருளாளர்'' (3.315.3)' ''அருளாளன்'' (2.223.6) என்பன இவண் காட்டுக்களாகின்றன. அருளே வடிவாக இருந்து உயிர்களை உய்விக்கின்றான். மலங்களில் கட்டுண்ட உயிர்களின் மயக்கறுத்து அவர்களை ஆட்கொள்கிறான். அனைத்து உயிர்களுக்கும் அருள் வழங்கி உய்விக்கும் சிவபரம்பொருள் பேரருளாளன் என்பதனை ஞானசம்பந்தர் பதிகம்தோறும் பாடிப் பரவியுள்ளார்.

## முடிவிலாற்றலுடைமை

சிவபெருமான் முடிவிலாற்றலுடையவன். இக்குணம் ஏழாவதாக வைத்தெண்ணப்படுவது. சிவனின் எல்லையற்ற ஆற்றலை விளக்கும் புராண வரலாறுகள் காலனை அழித்தது, முப்புரத்தவரை எரித்தது, பிரமன் சிரங்கொய்தமை, இராவணனை அடர்த்து முதலியன. உலகில் எவராலும் வெல்லுதற்கு இயலாதோர் இராவணன் முதலானோர். ஆனால் அவர்களின் ஆற்றல் இறைவனின் திருமுன்னர்ப் பயனற்றுப் போனமை இறைவனின் வரம்பற்ற ஆற்றலை விளக்குவதாகின்றது. இவ்வரலாறுகள் திருஞானசம்பந்தர் பதிகங்களில் பரக்கப் பேசப் பட்டுள்ளன.

''அருமையில் அளப்பரிதாயவனே'' (2.261.5)

மதிலெரித்த மூர்த்திதிறங் கருதுங்கால் இன்னரென்னப்
பெரிதரியர் ஏத்தச் சிறிதெளியரே (2.251.5)

என்ற அடிகள் சிவபெருமானின் முடிவிலாற்றலினை விளக்கும் சான்றுகளாகின்றன.

**வரம்பில் இன்பமுடைமை**

சிவபெருமானின் எண்குணங்களில் இறுதியாக வைத்தெண்ணப் படுவது எவ்வாற்றானும் யாதானும் யாதொன்றும் குறைவில்லாதவன் எனப்படும் வரம்பில் இன்பமுடையன் என்ற குணமாகும். அழிவற்றவனான இறைவன் வரம்பில் அறிவுடையவன். அத்துடன் குறைவில்லாத இன்பமுடையவனாகவும் இருக்கின்றான். எனவே, அவனை அடைந்த உயிர்களும் இன்பம் அடைகின்றன. சிவபெருமான் தன்னைச் சார்ந்த உயிர்களுக்கு இன்பம் அருளும் பெருமையையும் அவன் இன்ப வடிவினனாகவுள்ள தன்மையினையும் தேவாரத்தில் பரக்கக் காணலாம். ''ஆராத இன்பன்'' (2.224.3), ''அமுது'' (1.134.2) ''அடியார் தமக்கு இனியர்'' இனியர்(1.16.7), நினைவார்க்கினியர் (3.307.4), நினைவார் நினைய இனியர்'' (1.74.4), 'இன்பன்' (1.120.6), ''இன்பம் முற்றும் நீ'(3.310.3)' ''இன்பமும் ஆகி'' (3.365.7) என்று திருஞானசம்பந்தர் சிவபெருமானை வரம்பில் இன்பமுடையவன் என்று குறிக்கின்றார். சிவபெருமானே இன்ப வடிவினனாக இருந்து அவனை நினைப்போர்க்கும் சார்ந்தோர்க்கும் வழிபடுவோர்க்கும் இன்பத்தை வழங்குகிறான். அவன் காணவும் கருதவும் இனியவனாகிறான் என்று திருஞானசம்பந்தர் விளக்குகிறார்.

மேற்கண்டவாறு சிவனியல்புகளை ஞானசம்பந்தர் சிவனியல்பு களைப் பதிவு செய்துள்ளார். இந்த எண்குணங்களைத் தொகுத்து மூன்றாகக் கொள்கிற மரபும் சமயத்தில் உள்ளது. ஆகவே தான் சிவபெருமானை முக்குணமுடையவன் என்று கூறுகின்றமையையும் அடியவர்களிடம் உள்ளது. வடநூலார் சத்து, சித்து, ஆனந்தம் என்று கூறுவர். திருஞானசம்பந்தரும் சிவபெருமானைக், 'குணங்கள் மூன்றாய்' (2.132.5) குணம் மூன்றாய் (1.11.2), ''திரிகுணம்மா் நெறி' (1.21.1)' ''திரிகுணமேவிய'' (3.371.5) என்றெல்லாம் பாடிப் பரவுகிறார்.

சிவஞானபோதம் ஆறாஞ் சூத்திரம் இறைவனைச் சிவசத்து என்கிறது. சிவஞான சித்தியாரில் இறைவன் சத்துப் பொருளாகவும் சித்துப் பொருளாகவும் இருக்கின்றான் (சுப.பா.244) என்று கூறப் பட்டுள்ளது. இறைவனின் முக்குணச் சிறப்பினைச் சிவப்பிரகாசம்,

நின்மலனாய் ஏகமாய் நித்தமாகி
அலகிலுயிர்க் குணர்வாகி அசலமாகி
அகண்டிதமாய் ஆநந்த உருவாய் (பா.13)

என்று விளக்குகிறது. நித்தமாகி என்ற சொல் இறைவனின் அழியாத தன்மையான சத்துத் தன்மையினைச் சுட்டுகிறது. 'அலகிலுயிர்க் குணர்வாகி' என்றதனால் எண்ணிறந்த உயிர்களுக்கு அறிவாய் விளங்கும் சித்துத் தன்மை விளக்கப்படுகிறது. ஆனந்த உருவாய் என்பது வரம்பில் இன்பமுடையன் என்பதைக் காட்டுகிறது. அழியாத தன்மையினன் ஆதலின் என்றும் உள்ளவன் இறைவன். அறிவு வடிவாய் இருப்பதினாலே உயிர்களுக்கு அறிவை வழங்குகிறான். இன்ப வடிவினன் ஆதலின் உயிர்களுக்கு இன்பத்தை வழங்குகிறான்.

சத்து என்பது என்றும் மாறுதலில்லாத பொருளாகும். ஆகவே, தன்வயமுடைமை, தூயவுடம்பு, பாசமின்மை, பேராற்றல் முதலியவை சத்துள் அடங்கும். அறிவு வடிவாயிருத்தல், இயற்கையுணர்வு, முற்றுணர்வு, பேரருள் ஆகியவை சித்துள் அடங்கும். வரம்பில் இன்பமுடைமை ஆனந்தத்துள் அடங்கும். இவ்வாறு எண்குணங் களும் முக்குணங்களில் அடங்கும். திருஞானசம்பந்தர் பதிகங்களில் இவ்வாறு சிவனியல்புகள் பரக்கப் பேசப்பட்டுள்ளன.

ஆயிரக்கணக்கான பாடல்களில் பொதிந்துள்ள செய்திகளில் ஒரு சில மட்டும் இக்கட்டுரையில் நோக்கப் பெற்றன. சிவபரம்பொருளின் ஈரில் பெருங்குணங்களை எண்வகையாகவும் மூவகையாகவும் திருஞானசம்பந்தர் தேவாரத் திருப்பதிகங்களில் பதிவு செய்துள்ளார். அவரது நோக்கம் சைவப்பயிர் வளர்க்க வேண்டும் என்பதும் மக்கள் அதன்வழி உய்வுபெறவேண்டும் என்பதுமாகும். எனினும் பாடல்களில் தத்துவ நோக்கிலும் சமய நோக்கிலுமாகப் பல செய்திகள் புதைந்துள்ளன. இக்கட்டுரை சிவபரம்பொருளின் இயல்புகளைச் சிறிது சிந்தித்தமைகிறது.

# 65. மயிலைப்பதிகம் காட்டும் திருவிழாக்கள்

ம. மனோன்மணி, கோவை.

"சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம்"

பெற்றுயர் நிலையடைந்தவர் திருஞானசம்பந்தப் பெருமான். அத்தகு பெருமானின் பதிகங்கள் ஒவ்வொன்றும் தனிச்சிறப்புடையவை. நுண்பொருளும், செம்பொருளும் விளக்கும் திறத்தவை. மாசகன்ற மனம் பெறும் மாண்பினவை. அவ்வகையில் அவரின் திருமயிலாப்பூர் பதிகம் இறைவனைக் குறித்து நாடே எடுத்துக் கொண்டாடும் பெருவிழாக்களைக் குறிப்பிட்டுக் காட்டும் தன்மையது. அவற்றைக் காட்டும் வகையில் இக்கட்டுரை அமைகிறது.

**அருளியல் நிகழ்ச்சி**

திருஞானசம்பந்தரின் சிவஞான அமுது உண்டு, உலகம் வாழ உவந்து உவந்து அருளிய அருளிச் செயல்கள் பல. மிகு சைவத்துறை விளங்க விளங்கிய ஞானசம்பந்தரின் மயிலாப்பூர் நிகழ்ச்சி அருளியல் நிகழ்ச்சியாக விளங்குவது. பூம்பாவைத் திருப்பதிகமாக அருளி, எலும்பைப் பெண்ணாக்குகிறார். எலும்பைப் பூம்பாவையாக்கிய நிகழ்ச்சியே திருஞானசம்பந்தர் வரலாற்றில் நடந்த இறுதி நிகழ்ச்சி. அதன் பிறகு திருமண நிகழ்ச்சிதான் நடந்தது.

மதிசூடும் அண்ணலாரின் அடியார்களை அமுது உண்ணச் செய்து, அவ்வாறு அமுதுண்டு அடியார்கள் மகிழும்போது இறைவன் திருமேனியில் ஒரு பொலிவு உண்டாகும். அது திருவருட் பொலிவாகும். அது அப்பொலிவினால் விளைவது நல்லறம். இந்த அறம் மெய்ம்மையாம் எனில், இக்குடத்தில் உள்ள எலும்பு பெண்ணாகி 'உலகவர் முன் வருக' என்று கூறுகிறார் திருஞானசம்பந்தர்.

திருவருளை விளக்கமாகப் பெறவேண்டுமெனில் திருக்கோயில் களில் செய்யப்பெறும் பூசனைகள் விழாக்கள் ஆகியவற்றைச் செய்ய வேண்டும். அவற்றால் திருவருளை எளிதில் பெறலாம். அத்தகைய திருவருள் நிகழ்ச்சியே மயிலாப்பூர் நிகழ்ச்சியாகும்.

**பதிகச் சிறப்பு**

திருவொற்றியூரை வழிபட்டு மயிலாபுரித் திருநகரை அடைந்து கபாலீச்சுரம் உடையானை வழிபட்டுப் போற்றிய திருஞானசம்பந்தர், 'சித்தம் இன்புறு சிவநேசர்பால் திருவருள் செலுத்தி, மங்கை எலும்பு சேர் குடத்தினை வைத்து வணங்கி, மண்ணோரும், விண்ணோரும் காணப் 'பூம்பாவை' பெயர் சொல்லி, மண்ணினிற் பிறந்தார் பெறும் உண்மைப்பயன் உணர்த்தி, இறைவனை 'உலகத்தவர் முன் வருக' என்று உரைத்து, 'மட்டிட்ட' என்று தொடங்கும் நற்பதிகம் பாடியருளினார். அதனால் இத்திருப்பதிகம் 'பூம்பாவைப் பாட்டு' எனப் பெயர் பெற்றது.

**விழாக்கள்**

இப்பதிக விழாவில் முதல்விழா பூரட்டாதியில் நிகழும் வழக்கமாகக் கூறுவர். இத்திருவிழா 'உருத்திர பல்கணத்தார்' என்று பெருமைபடுத்தும் மாகேசுரராகிய அடியவர்களின் பெருமை கூறி அவர்களுக்குத் திருவமுது அமைத்து வழிபாடு செய்து விழா எடுத்துக் கூறுகிறது, முதற்பாடல். அடியவர்க்கு அமுது படைக்கும் விழாவை முதன்மைப் படுத்துகிறார். இக்கருத்து பற்றியே சேக்கிழார் பெருமானும்,

**''மண்ணினில் பிறந்தார் பெரும்பயன் மதிசூடும்**
**அண்ணலார் அடியார் தமை அமுது செய்வித்தல் ஆங்கவர்**
**நல்விழாபொலிவுகண்டார்தல்''**

என இந்நிகழ்ச்சியைச் சிறப்பித்துள்ளார். உருத்திர பல்கணத்தாரின் பெருமை பேசும் சம்பந்தர் 'ஒட்டிட்ட பண்பை' அடையாக்குகிறார். ஒத்த உணர்வுடையோராக, அதாவது 'உணரப்படுவாரோடு ஒட்டி வாழ்தி' என்பதற்கேற்ப அடியவர்களைச் சிறப்பிக்கின்றார்.

இரண்டாம் விழாவாக ஐப்பசித் திங்களில் நடைபெறும் ஐப்பசித் திருவோண விழா பற்றிக் குறிப்பிடுகிறார் தவ முதலவர் சம்பந்தர். இவ்விழாவிலும் அருந்தவத்தவர்களாகிய அடியார்கள் திருவமுது செய்த காட்சியும் குறிக்கப்பட்டன. இத்தல வரலாற்றில் திருவோணத்தில் கொடியேற்ற நிகழ்ச்சி நடைபெறுவதை அறிய முடிகிறது. இந்நாளில் திருவோணம் திருமாலின் வழிபாடாகக் கொண்டாடப்பட்டு வருகிறது.

மூன்றாம் விழா 'கார்த்திகைத் திருவிளக்கீட்டு விழா' இவ்விழா தொன்றுதொட்டுக் கொண்டாடப்பட்டு வரும் பெருவிழாவாகும். மகளிர் மனைகளில் திருவிளக்கேற்றி 'நெல்லும் மலரும் தூவி மங்கலமாக வழிபட்டுள்ளதைத் தமிழ் நூல்களில்' அறியலாம்.

நான்காம் விழா மார்கழி மாதத்தில் கொண்டாடப்படும் 'திருவாதிரைத் திருவிழா'. எல்லாச் சிவன் கோயில்களிலும்

அம்பலவாணருக்கும், அம்பிகைக்கும் திருமுழுக்காட்டித் திருமண நிகழ்ச்சி முடிந்து பக்தருக்குத் தரிசனம் தரும் இவ்விழாவை 'ஆருத்ரா தரிசனம்' என்றும் அழைப்பர். இவ்விழாவையும் சிறப்பாகக் குறிப்பிடுகிறார்.

ஐந்தாம் விழாவாகத் தைப்பூச விழாச் சிறப்பு கூறப்படுகிறது. இவ்விழாவில் அடியவர்க்கு நெய் பூசிய தெளிந்த பொங்கல் சோறு படைக்கப்பட்டு கொண்டாடப்படுவதைச் சுட்டுகிறார்.

ஆறாவது விழா கடலாட்டு விழாவாகும். இவ்விழா மாசி மாதம் மகம் திருநாளாகச் சிறப்பிக்கப் பெறுகிறது. 'மாசிக் கடலாட்டு விழாவின்' மகிழ்ச்சியில் ஆடல், பாடல் நிகழ்த்துதல், அதுகண்டு மகிழ்தல் முதலான செயல்பாடுகள் நிகழ்வதைத் திருஞானசம்பந்தரின் வேறு பதிகங்களிலுள்ள தேவாரப் பாடலடிகளே சான்றாகின்றன.

**''சேயிழையார் நடம்பயிலும் திருவையாறு''**

என்றும்,

**''பண்களினேர் மொழி மங்கைமார் பலர் பாடியாடிய ஓசை''**

என்றும்,

**''பாலினேர் மொழி மங்கைமார் நடமாடி இன்னிசை பாட''**

என்றும் குறிப்பிடப்பெறும் பாடலடிகள் விழா நிகழ்ச்சிகளில் ஆடல், பாடல் நிகழ்வதையும் குறிப்பாகப் பெண்கள் இதில் பெரும்பங்கு வகிப்பதையும் காட்டுகின்றன.

ஏழாவது விழா பங்குனி உத்திரவிழாவைக் கூறுவதாக அமைகிறது. இவ்விழாவிலும் மக்களின் ஆரவாரம் ஆர்ப்பு எடுத்திருந்ததைச் சுட்டும் வகையில் 'ஒலி விழா' எனச் சிறப்பிக்கிறார் திருஞானசம்பந்தர். இப்பதிகத்தின் ஏழாவது பாடலில் திருமயிலைத் திருத்தலத்தில் திருவருள் எழுச்சியை விளைவிக்கும். திருக்கோயில் விழாக்கள் நிறைய எடுக்கப் பெற்றதைக் குறிப்பிட்டுக் காட்டும் வகையில் 'கலிவிழாக் கண்டான் கபாலீச்சுரம் அமர்ந்தான்' என்ற தொடரைச் சுட்டியிருப்பதும் குறிப்பிடத்தக்கது. மேலும் மயிலாப்பூரின் வீதிகள் மலிவிழா வீதியாகத் திகழ்ந்திருந்தது. அதாவது விழாக்கள் இடையறாது நடக்க, அதனால் விளங்கும் வீதியாகக் காண்கிறார். 'வீதிகள் விழவின் ஆர்ப்பும்' என்று கூறுவதனாலும் அறியலாம்.

எட்டாவது விழா பதினெண் கணங்களுக்கும் உரிய அட்டமி நாள் விழாவாக நடைபெற்றுள்ளது. திசைதொறும் நின்று மக்கட் கூட்டம் இவ்விழாவைக் கண்டுகளித்திருக்க வேண்டும். எனவேதான்

இத்தகு விழாக்களைக் கண்ணாரக் காணவேண்டும் என்றும் வலியுறுத்தியுள்ளார். சிலர் இவ்விழா சித்திரையில் நடைபெறுவதாகக் கூறுவர். 'அட்டமி நாள் விழா முற்காலத்தது' என்று உரைக்குறிப்பும் கூறுகிறது.

ஒன்பதாவது விழா வைகாசித் திங்களில் நடைபெற்ற ஊஞ்சல் திருவிழாவாகக் கூறுவர். ''பொற்றாப்பு'' என்ற சொல்லைப் பொன்தாம்பு எனக்கொண்டு தாம்பைக் கயிறாகக் கொண்டு ஊசல் ஆடி மகிழ்ந்துள்ளனர். திருப்பொன்னூசலைத் திருவாசகமும் சிறப்பிக்கிறது. திருக்கல்யாண உற்சவத் திருவிழாவாகவும் இதனைக் கருதலாம்.

பத்தாவது விழாவாகப் 'பெருஞ்சாந்தி' விழா குறிப்பிடப் பெறுகிறது. பெருஞ்சாந்தி கும்பாபிடேகம் எனப்படுகிறது. திருக்குடமுழுக்கு விழாவைக் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார். இவ்விழாவும் ஆனி, ஆடி, புரட்டாசி முதலான மாதங்களில் நடைபெற்றிருக்க வேண்டும்.

இவ்வாறாக ஆண்டு முழுவதும் மயிலைக் கபாலீச்சரத்தில் திருவிழாக்கள் நடைபெற்று வந்திருப்பதைத் திருஞானசம்பந்தர் எடுத்துக் காட்டியுள்ளார். இத்தகு விழாக்களில் மக்கள் மனம் ஒன்றி வழிபட்டு இறைவன் திருவருளைப் பெறுதல் வேண்டும் எனச் செம்மை நலம் காட்டியுள்ளார்.

# 66. சம்பந்தர் ஊட்டும் நம்பிக்கை

அ. மாதவி, திருநெல்வேலி.

'திராவிட சிசு' என்று ஆதிசங்கரால் அழைக்கப்பெற்ற சிறப்புக் குரியவர். சேக்கிழாரின் பெரியபுராணத்தைப் பிள்ளைபாதி புராணம் பாதி என்று போன்றுவர். இத்தகைய சிறப்புகளுக்கெல்லாம் உரியவராக இருப்பவர் திருஞானசம்பந்தர். சம்பந்தரின் 'திருவடிகளே முத்தி' என்பார் சிவப்பிரகாச சுவாமிகள். இங்ஙனம் சைவ சமயச் சான்றோர் பலராலும் போற்றப்படும் சிறப்பிற்குரிய திருஞானசம்பந்தர் தம் வாழ்க்கையின் மூலமும் பாடல்களின் மூலமும் மக்கள் மனத்தில் பல நம்பிக்கை விதைகளை ஊன்றியுள்ளார். அவ்விதைகள் இன்றும் செழித்தும் வாழ்ந்தும் வருகின்றன என்பது கண்கூடு. எனவேதான் இவ்வெழுத்துரை திருஞானசம்பந்தர் ஊட்டும் நம்பிக்கைகள் என்ற தலைப்பில் அமைந்து அக்கருத்துக்களை ஆராய்வதாக அமைகின்றது.

**வாழ்க்கையில் நம்பிக்கை**

வாழ்க்கை வாழ்வதற்கே, வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவனே வானுறையும் தெய்வம் என்ற நன்மொழிகளை வாழ்க்கையில் கடைப்பிடித்து வாழ வழியேற்படுத்தியவர் சம்பந்தர். சம்பந்தர் காலத்தில் புறச்சமயங்களின் ஆதிக்கம் அதிகம். அச்சமயங்கள் இல்லறவாழ்வை விடத் துறவறத்தையே பெரிதும் வற்புறுத்தின. ஆதரித்தன. இல்லறத்தின் மேன்மை குலைக்கப்பட்டது. இல்லறத்தான் இழிவாகக் கருதப்பட்டான். இந்நிலையில் தொல்காப்பியம் கருத்துப்படி 'எல்லா உயிர்க்கும் இன்பம்' என்பது பொதுவானது. அவ்வின்பத்தைத் துறந்து இயற்கைக்கு மாறான வாழ்க்கை வாழ்வது சரியானதன்று. சைனரும் பௌத்தரும் துறவறத்தைப் பெருமையாகப் பேசிவந்த காலத்தில் போலித் துறவை வெறுத்து ஒதுக்கி,

**''மண்ணில் நல்லவண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணில் நல்லகதிக்கு யாதுமோர் குறைவிலை
கண்ணில் நல்லஃதுறும் கழுமல வளநகர்ப்
பெண்ணின் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததே'**

என்ற பாடல் அமைந்த பதிகத்தின் மூலம் இறைவன் பெண் ஒரு பாகமாய் இருப்பவன். இந்த உலகத்தில் நல்லபடி வாழமுடியும்.

நல்லகதி அடைவதற்கு இல்லறம் எவ்வகையிலும் தடையில்லை என்ற நம்பிக்கையை வளர்த்துள்ளார். இந்நம்பிக்கையின் அடிப்படையிலேயே இன்று சைவர்களின் திருமணங்களிலும் திருமண அழைப்பிதழ்களிலும் பயன்படுத்தப்படும் ஒரு பாடலாக இப்பாடல் விளங்குகின்றது.

**மனித நெஞ்சிற்கு நம்பிக்கைக் கூறல்**

மக்களுடைய வாழ்வுநோயும் பிணியும் நிறைந்து பெரிய இடையூறு களுக்கும் துன்பங்களுக்கும் இடையே உழல்கின்றது. இருந்தபோதிலும் 'அஞ்சல்நெஞ்சே' இறைவன் இருக்கிறான். உதவுவான் அருள்புரிவான் என்ற நம்பிக்கையை ஆறுதலை வழங்கும் வகையிலும் சம்பந்தர் பாடல்களைப் பாடியுள்ளமை கருதத்தகும்.

**'முடிகளால் வானவர் முன்பணிந்து**
**அன்பராய் ஏத்தும் முக்கண்**
**அடிகள் ஆரூர்தொழுது உய்யலாம்**
**மையல் கொண்டு அஞ்சல் நெஞ்சே'**

என்ற பாடலைக் காணலாம். மேலும் நாள்தோறும் இறைவனை வழிபடுவது நல்லது. அதன்மூலம் நம்மைப் பற்றியுள்ள 'வினைகளைப் போக்கிக் கொள்ளலாம் என்று சம்பந்தரே தம் நெஞ்சிற்குக் கூறுவதுபோல் கூறுவது இவண் கருதத்தக்கது.

**'நீநாளும் நல்நெஞ்சே நினைகண்டாய்; யார்அறிவார்**
**சாநாளும் வாழ்நாளும் காய்க்காட்டு எம்பெருமாற்கே**
**பூநாளும் தலைசுமப்பப் புகழ்நாமம் செவிக்கேற்ப**
**நாநாளும் நவின்று ஏத்தப் பெறலாமே நல்வினையே'**

என்பதே அப்பாடல். இப்பாடல்கள் நெஞ்சே வருந்தாதே. துன்பத்தில் துயர் துடைக்கவும் இன்பத்தைப் பெருக்கவும் உய்தியடையவும் இறைவன் இருக்கிறான் என்று நெஞ்சிற்குத் தைரியமும் ஊக்கமும் நம்பிக்கையும் வழங்குகின்றன.

**கோள்களால் ஏற்படும் தீமை அகல கோளறு பதிகம்**

சம்பந்தர் மதுரை செல்லமுற்பட்டகாலை சமணரால் எல்லையற்ற துன்பங்களை அனுபவித்த அப்பர்,

**'பிள்ளாய் அந்த அமண் கையர்**
**வஞ்சனைக்கோர் அவதி யில்லை**
**உரைசெய்வ துளது; உறுகோள் தானும் தீய**
**எழுந்தருள உடன்படுவது ஒண்ணாது'**

எனக் கூறித் தடுத்தார். ஆனால் சம்பந்தரோ, பரசுவது நம்பெருமான் கழல்கள் என்றால் பழுதணையாது என்று கூறி இறைவன்

உள்ளிருக்கையில் கோள்களால் ஏற்படும் தீமை எதுவும் இல்லை எனும்படி ஒருபதிகம் பாடியுள்ளார். அது 'கோளறு திருப்பதிகம்' எனப்படுகின்றது.

'வேயுறு தோளி பங்கன் விடமுண்ட கண்டன்'

என்ற முதற்பாடலில் எங்கள் தலைவன் சிவபெருமான் பெண்ணை ஒருபாகமாகக் கொண்டவன். விடத்தை உண்டு கண்டம் கறுத்தவன். கங்கையும் பிறைச் சந்திரனையும் முடியில் அணிந்து என் உள்ளத்தில் குடிபுகுந்தவன். அவ்வான் அவன் என் உள்ளத்தில் இருப்பதால் நவக்கிரகங்கள் ஏற்படுத்தும் தீங்குகள் தன்னை ஒன்றும் செய்யாது' என்று குறிப்பிடுகின்றார்.

'நாள் என்ன செய்யும் கோள் என்ன செய்யும்'
நாதன் உள்ளிருக்கையில்

என்ற வரிகளும் இதனையே தெளிவுறுத்துகின்றன. இந்தப் பதிகவரிகள் மூலம் சம்பந்தர் இறைமீது கொண்டிருந்த பக்தியும் அதனால் விளைந்த நம்பிக்கையும் பெறப்படும்.

இன்றும் கூட மக்கள் நவக்கிரக வழிபாட்டிற்கு, அவற்றால் ஏற்படும் துன்ப நிவர்த்திக்குச் சம்பந்தரின் பதிகத்தை நம்பிக்கையுடன் ஓதி வருதல் கண்கூடு.

## இறையருளைப் பெற வயது தடையில்லை

திருமாலும் பிரமனும் தேடியும் கிடைக்காத இறைவனைப் பிஞ்சுவிரல் நீட்டித் தன் தந்தைக்குக் காட்டிய திறம் இவண் சுட்டத் தக்கது. இறைவன் எவராயிருப்பினும் அழுகுரலுக்கு ஓடோடிவருபவன் என்ற நம்பிக்கையை வளர்க்கும் விதமாகச் சிறுகுழவியாக இருந்தும் இறைவனைத் தன் தந்தைக்கு அறிமுகப்படுத்திய பாங்கு குறித்தற்குரியது.

சுடுகாட்டினுள் என்றும் ஆடிக்கொண்டிருப்பவனாகிய சிவபெருமானைத்தம் கைவிரலாற் சுட்டிக் காட்டிச் சம்பந்தர், இறைவனைத் தந்தை நிலைக்குக் கொணர்ந்து ஞானக்கண்களால் காண வேண்டியவனை ஊனக்கண்களால் காணும் தன்மையுடையவனாக்கி விட்டார்.

இத்தன்மையன் இந்நிறத்தன் என்றெல்லாம் சுட்டிக்காட்டி அறியப்படமுடியாத இறைவனை இதோ என்று விரலாற் சுட்டி, 'தோடுடைய' என்று விளக்கிக் காட்டிய செயலைச் சிவப்பிரகாச சுவாமிகள் 'சுட்டினொடு காட்டும் சம்பந்தா' என்று குறிப்பிடுகின்றார்.

இறைவனை அறிய வயதோ பிறவோ தேவையில்லை. அன்புமனம் வேண்டும் என்று இறைவன் மீது மக்களுக்கு நம்பிக்கை

ஏற்படுத்தும் விதம் காணுதற்குரியது. பின் சம்பந்தர் மதுரைக்குச் சென்றபோது, ஆலவாய் பெருமானைப் பாடுங்காலத்துப் பாலனாய்த் தொண்டுபுரியும் தனது மனக்கருத்தைப் பின்வரும் பாடல்மூலம் உரைக்கின்றார்.

**'கோலமாய நீள்மதில் கூடல் ஆலவாயிலாய்**
**பாலனாய தொண்டுசெய்தும் பண்டுமின்னும் உன்னையே**
**நீலமாய கண்டனே நின்னையன்றி நித்தலும்**
**சீலமாய சிந்தையில் தேர்வதில்லை தேவரே'**

பாலனாய தொண்டு செய்து என்று குறிப்பிட்டுத் தொண்டு செய வயது ஒரு தடையில்லை. எந்த வயதிலும் எதையும் சாதிக்கலாம் என்ற நம்பிக்கையை மேற்சுட்டியவை விளைவிக்கின்றன.

**துன்பம் நீக்கும் மருந்து**

மனித வாழ்வு துன்பங்கள் நிறைந்தது. அத்துன்பத்திற்கு அணை போட்டாலும் அது நிரந்தரமாக விலகுவதில்லை. மும்மலங்களி லிருந்தும் தீவினைகளிலிருந்தும் விடுபெற்று வாழ இறைவனை வணங்க வேண்டும்.

**'ஊனுடைப் பிறவியை அறுக்க உன்னுவீர்**
**கானிடை பாடலான் பயில்க ருக்குடிக்**
**கோனுயர் கோயிலை வணங்கி வைகலும்....'**

என்று இவ்வுலக வாழ்வில் அமைந்த துன்பம் போக்கி, இன்பம் பெருக்கி வாழ சிவனை வழிபடல் வேண்டுமெனக் கூறுகின்றார்.

**'உமதடி தொழும் இயலுளார் மறுபிறப் பிலரே'** என்றும்
**'உமை ஏத்துவார் அருவினையொடு துயரிலரே'** என்றும்
**உமைப் பேணுதல் கற்றறிவோர்கள் தங்கடனே'**

என்றும் கூறி இறைவனை வணங்கினாலே 'போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசுபோல் விலகி விடும்' என்ற ஆண்டாள் திருமொழி உண்மையாகி நிற்றலை உணரமுடியும் என்கின்றார். கற்றதனால் ஆனபயனே இறைவனை வழிபடுதல் என்ற இறைநம்பிக்கையை மக்களிடம் தோற்றுவிக்கின்றார் சம்பந்தர்.

**திருநீற்றின் மீது நம்பிக்கை வளர்த்தல்**

பாண்டிய மன்னனுக்கு வெப்புநோய் ஏற்பட்டு அவன் துன்புற்ற காலை சம்பந்தர், மன்னன் துன்பத்தையும் சமணர் மீது அவனுக் கிருந்த நம்பிக்கையையும் போக்கிச் சைவத்தின் மீதும் திருநீற்றின் மீதும் நம்பிக்கையை ஏற்படுத்தியவர். 'மந்திரமாவது நீறு', வானோர்

அணிவது நீறு' எனும் இப்பதிகம் திருநீற்றின் பெருமையைக் கூறி அதை அணிவார் யாதொரு துன்பமும் நீங்கி உய்தி அடைவார், 'இன்பம் எந்நாளும் துன்பமே இல்லையென்' என்ற நிலையை அடைவார் என்றெல்லாம் குறிப்பிடுகின்றார். திருநீறைச் சாம்பல் என்றிகழாது மந்திரமாக அருமருந்தாகக் கருதிப் பயன்படுத்தினால் 'எல்லாம் இன்பமே' என்ற நிலை வந்தெய்தும் என்ற திருநீற்றின் மீது நம்பிக்கை வளர்க்கின்றார்.

### உரிய வழியில் எதையும் அடைதல்

நம்பிக்கையுடன் இருந்தால் எதையும் சாதிக்கலாம். உரிய வழியில் சென்றால் எல்லாம் நலம் என்பதற்கு மறைக்காட்டு நிகழ்ச்சி ஒரு சான்றாகும். மறைக்காட்டில் மறைகளால் வழிபாடு செய்து பூட்டப்பெற்ற கதவைத் திறக்க அப்பரும் சம்பந்தரும் முயன்றனர். கோயிலுக்கு வரும் மற்றையோர் வேறு வாயில் வழியாகச் சென்று இறைவனை வழிபட சம்பந்தர் அப்பரிடம் மறைக்காட்டு இறைவனை இவ்வாயில் (உரிய வழியில்) வழியாகச் சென்று வழிபடுதல் வேண்டுமெனக் கூற அப்பரும் 'பண்ணினேர் மொழியாள்' எனத் தொடங்கும் பதிகத்தைப் பாடி, அடைக்கப்பட்டிருந்த கதவைத் திறந்தார். இருவரும் ஏனை அடியவர்களும் அவ்வாயில் வழியே சென்று இறைவனை வழிபட்டனர். திறந்த கதவை மூடச் 'சம்பந்தர்' 'சதுரம் மறை' என்ற ஒரு பாடலைப் பாட முன்திறந்திருந்த கதவுதானே மூடிக் கொண்டது. சம்பந்தர் ஏனைய பாடல்களையும் பாடி அப்பதிகத்தை நிறைவு செய்தார் என்ப. இது ஒரு சிறப்புடைய நிகழ்ச்சி என்றாலும் இருசான்றோர் இதில் தொடர்புடையவர் என்றாலும் இறைவனை முழுமனத்துடன் வேண்டினால் எத்தடையும் எடுத்த காரியத்தை முடிக்கத் தடையாக இராது என்பதனையும் எந்தச் செயலுக்கும் உரியவழியே சிறந்தது என்பதையும் உணர முடியும்.

### புதிய இலக்கிய வகைகள்

தமிழ் மரபிற்குத் தகப் புதிய இலக்கிய வகைகள் பலவற்றைச் சம்பந்தர் பாடியுள்ளார். இவற்றின் ஓசை ஒழுங்கும் சொல் வன்மையும் சொல் வளமும் கண்டும் கேட்டும் இன்புறத்தக்கன. சம்பந்தர் நாவில் தமிழ் தில்லைக் கூத்தனைப் போல் களிநடம் புரிகின்றது. திருவேக பாதம், திருவெழுகூற்றிருக்கை, மாலைமாற்று, இயமகம், திருச்சக்கர மாற்று, திருக்கோமூத்திரி உள்ளிட்ட பல சித்திர கவிவடிவங்களைச் சம்பந்தர் அறிமுகப்படுத்தி இறைவனை எத்தகைய கடினமான அமைப்பாக இருந்தாலும் எளிதில் பாடலாம் என்ற நம்பிக்கையைத் தோன்றுவிக்கின்றார். சேக்கிழார் சம்பந்தர் பாடிய புத்திலக்கியங்களைப்

பற்றி இரண்டு பாடல்களில் (276,277) குறிப்பிட்டுள்ளார் எனில் அவற்றின் சிறப்பு எளிதில் விளங்கும்.

ஏகபாதம் என்பது ஓரடியே எல்லா அடிகளாயும் (நான்கடி) மடங்கி வருதலாகும். ஓரடியே நான்கடியாய் வந்தாலும் ஒவ்வோர் அடிக்கும் பொருள் வேறுபட்டு விளங்குவதே இச்சித்திரக்கவியின் சிறப்பாகும். திருஞானசம்பந்தரின் சீகாழிப்பதிகம் (127) ஏகபாதமாக அமைகின்றது.

'பிரம புரத்துறை பெம்மான் எம்மான்' என்ற இந்த முதலடியே நான்கடியாயும் வருகின்றது. இதற்கு உரையெழுதுவோர்.

**'பிரமம் புரத்துறை பெம்மான் எம்மான்**
**பிரமம் புரத்துறை பெம்மான் எம்ஆன்**
**பிரமம் புரத்துறை பெம்ஆன் எம்மான்**
**பிரமபுரத்து உறை பெம்மான் எம்மான்'**

**என்று** பிரித்து, (1) அறிவொளியாகவும் பராசக்தியாகவும் எங்கும் நிறைந்து நிற்கும் பூரணத் தன்மையை வியந்து அத்தகைய பூரணத் தன்மைக்கும் மேலாய் இன்பமே வடிவாய் முதல் நடு இறுதி அற்று விளங்கும் பெரியோன் (2) வானத்தினின்று பெருகும் கங்கை நங்கையைத் தரித்தவன் எம்மை நீங்காத ஆன்மாவானவன் (3) எனது உடற்பற்றை அறுக்க, என்னைப் போலவே உடலோடு வந்து என்னைப் பிரம்மானுபவம் என்னும் முத்திநிலையை அடையும்படி செய்தவன் (யாவன் என்னில்) பிரம்மபுரம் என்னும் திருத்தலத்தைக் கோயிலாகக் கொண்டு விளங்கும் பெருமான்' என உரையெழுதுகின்றனர்.

இவ்வாறே ஒவ்வொரு இலக்கிய வகையிலும் புதுமைகள் பல செய்து பலசித்திரக்கவிகளைத் தானே உருவாக்கிப் புத்திலக்கிய வகை களை அவற்றையும் சித்திரக்கவிகளாக உருவாக்க முடியும் என்ற நம்பிக்கையைத் தோற்றுவித்துப் பின்னாளில் பல சித்திரக்கவிகள் தோன்ற நம்பிக்கையையும் ஊக்கத்தையும் ஊட்டியவை சம்பந்தர் அவர்தம் பாடல்கள் எனில் மிகையில்லை.

சமயத்தைப் பரப்ப ஒவ்வோர் ஊராகச் சென்ற சம்பந்தர், தான் சென்ற ஊரின் அழகைப் பலவாறாகப் புகழ்ந்துபாடி, அவ்வூர் மக்கள் ஊரையும் ஊரில் உறை தெய்வத்தையும் நம்பிக்கையுடன் வணங்கி வாழவேண்டும் என்ற கருத்தை நிலைநிறுத்துகின்றார். சாதிவேறுபாடு, தீண்டாமை முதலிய மூடநம்பிக்கைகளுக்கு இடமில்லை என்பதை அவர் வாழ்வும் பாடல்களும் புலப்படுத்துகின்றன. அவர் பிராமணராக இருந்தும் தம் பாடலுக்கு யாழ் இசைக்கத் திருநீலகண்டரைத் தீண்டாக்

குடும்பத்தைச் சேர்ந்தவராக இருப்பினும் அழைத்துக் கொண்டு எல்லா இடங்களும் சென்றாமை கருதுதற்குரியது.

'யான் உரைப்பன சிவன் உரையே' என்றும் 'ஆணை நமதே' என்றும் கூறும் கருத்துக்கள் உறுதி ஊட்டுபவையாக நம்பிக்கை வளர்ப்பனவாக அமைந்துள்ளன. அவருடைய வாழ்வும் பாடல்களும் அஞ்சாமையும் தெளிவும் ஆர்வமும் நம்பிக்கையும் நிரம்பியவை. சுருங்கச் சொன்னால் நம்பிக்கையற்று இருந்தவர்களுக்கு நம்பிக்கையையும் ஊக்கத்தையும் எழுச்சியையும் ஏற்படுத்தியவை சம்பந்தரின் பாடல்களும் வாழ்க்கையும்.

# 67. வைதிகமும் சம்பந்தரும்

முத்து ஆபத்சகாயம், புதுகும்மிடிப்பூண்டி.

''வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறை விளங்க'' திருஅவதாரம் செய்தவர் திருஞானசம்பந்தர். இவரது அவதாரத்தால் அன்பு நெறி தழைத்தது; திருவருள் மலிந்தது; தெய்வத் தமிழ் மலர்ந்தது; பக்தி மணம் பரவியது; பாரெல்லாம் இன்பத்தில் தழைத்தது.

வேதங்கள் இறைவனின் மூச்சுக் காற்றாக உருவகிக்கப் படுகின்றன. வாழ்வாங்கு வாழ்ந்து மெய்ப்பொருளின் பேருணர்வை எய்திய சான்றோர்களின் வாய்மொழியாக வேதங்கள் வழங்கப் பட்டுள்ளன. வேதநெறிகளில் பயணம் செய்வோர் தம்மைத் தாம் உணர்வர். இவ்வையத்தையும் தூய நன்னோக்கினால் பரம்பொருளின் திருவடிவமென அறியும் பேறு பெறுவர். பலவற்றைக் காண்பதனால் ஏற்படும் மயக்கம் தீர்ந்து அனைத்தையும் ஊடுருவி நிற்கும் ஒன்றேயாகிய பரம்பொருளைக் கண்டு, காதலாகிக் கசிந்து மல்கி, கரும, பக்தி யோக ஞான வழிகளின் முடிவான இலக்கை அடைவர்; முக்திக் கணியை எளிதில் பெறுவர்.

தாய் வயிற்றில் கரு, உயிர்க்கும் நாள் தொடங்கி, அது முறைப்படி உருவாகி மண்ணில் உதித்து, வளர்ந்து மரணவாயில் வழியாக பிற உலகங்களுக்குச் சென்றும் நிலை ஈறாக ஓருயிரின் வாழ்வைத் தூய்மைப்படுத்த உதவும் தக்க மந்திரங்களும், விரிவான சடங்கு களும் வேதநெறியில் வகுக்கப்பட்டுள்ளன. பரம்பொருளின் திருவடியில் முகம், கை, தொடை, கால்களுக்கு உவமிக்கப் பட்டுள்ள நாற்குலத் தோரும் தத்தம் நெறி ஒழுகி நின்று, தம்முள் ஒத்த அன்பு பூண்டொழுகி, அதன் பயனாக படைப்பின் உண்மை நோக்கத்தை உணர்ந்து, தெய்வ ஒளி பெற்று 'ஒன்றாகக் காண்பதுவே காட்சி' என்னும் தமிழ் மூதாட்டியின் வாக்கிற்கு இசைந்த பெருவாழ்வு நலம் காணுதல் எப்போதையும் விட இன்றைய நவீன உலகிற்கு மிகவும் தேவைப்படுகிறது.

வேதநெறிகள் சமூகத்தில் எந்நிலையில் உள்ளார்க்கும் இறைமையை நினைவுறுத்தி, தூய அமைதியான நிறைவு பெற்ற வாழ்க்கையையும் அதன் பயனாய் விளையும் ஆனந்தத்தையும்

அளித்து வருவதில் யாதோர் ஐயமும் இல்லை வேதங்களுக்கு எல்லையில்லை. அவை காட்டும் நெறிகளுக்கும் முடிவில்லை. எனினும் தொழுவார் உள்ளத்துள் ஜோதியாய்த் துலங்கும் தூய பரம்பொருளை யாவரும் தங்களால் இயன்ற நித்திய, நைமித்திக வழிபாடுகளாலும், பொருந்தும் சீரிய நோன்புகளாலும், மக்கள் தொண்டாம் மகேசன் தொண்டாலும் பணிந்து பரவசமெய்தி அத்துவித முக்தியை உள்ளங்கை நெல்லிக் கனியாய்ப் பெற்றிட வேத நெறிகள் பாதைகள் பல அமைத்துத் தந்துள்ளன.

குன்றத்தூர்ச் செல்வர் சேக்கிழார் பெருமான் திருவாய் மலர்ந்த திருஞானசம்பந்தர் வரலாற்றில் காணும் வைதிக நெறிச் சடங்குகளை, அவர் வழிகண்டு பேரின்பம் அடைவோமாக. திருவருட்பிரகாச வள்ளலாரின் ஞான குருவாயும், திருமுருகப் பெருமானின் அவதாரமாயும், தோணிபுரத்தில் தோன்றிய திருவருட்செல்வர் வாழ்வினைச் சிந்தித்துத் தூய மனம் பெற்று, அவர் காட்டிய வழியொழுகிப் பேரின்பப் பெருவாழ்வு பெறுவோமாக.

நாமகரணம், அன்னப் பிராசனம், ஜாதகர்மம், சௌளம், உப நயணம், விவாகம் மற்றும் வேள்விகள், மந்திரங்கள், அருச்சனைகள், வழிபாட்டு முறைகள், மறுமையை மனத்துட் கொண்டு செயல்படும் தான தருமங்கள், தவம் யாவும் வேதநெறியில் வகுக்கப்பட்டுள்ளன.

**அன்னையின் வயிற்றில் சிசு - சமயச் சடங்குகள்**
**பும்ஸுவனம், சீமந்தம், வளைகாப்பு**

சிவபாத இருதயர், பகவதியார் பெருந்தவத்தால் பகவதியார் மணி வயிற்றில் 'கரு' வொன்று உதித்தது.

**'மறைநூல் முறைச் சடங்கு**
**நாளுடைய ஈரைந்து திங்களினும்**
**நலம் சிறப்பக் கேளிருடன் செயல் புரிந்து'** (1924)

இத்தொடரால் குறிப்பால் மேற்படி வைதிகச் சடங்குகளை நம்மனக் கண்முன் நிலவ விடுகிறார் சேக்கிழார் பெருமான்.

**விதை தானம் முதலிய தானங்கள்**

குழந்தை பிறந்ததும் பெற்றவன் நீராடி, பரிசுத்தமாக விதைதானம் செய்கிறான். இதை விளக்க வந்த சேக்கிழார் பெருமான் திருஞான சம்பந்தர் திரு அவதாரத்தைச் சித்திரிக்கும் பகுதியில்,

**''காதல்புரி சிந்தை மகிழக் களிசிறப்பார்**
**சாதகமுறைப் பல சடங்குவினை செய்வார்''**

''வெண்முளைய பாலிகைகள் வேதிதொறும் வைப்பார்
புண்ணிய நறும்புனல்கொள் பொன் குடம் நிறைப்பார்''

''செம்பொன் முதல் ஆனபல தானவினை செய்வார்
நம்பர் அடியார் அமுதுசெய்ய நலம் உய்ப்பார்'' (1938-1942)

இத்தகைய நிகழ்ச்சி அவதார தினத்தன்று மட்டும் தானா?

''தூய திருமாமறை தொடர்ந்த நடை நூலின்
மேய விதி ஐயிரு தினத்தினும் விளைத்தார்''

குழந்தை பிறந்த நாள் முதல் தொடர்ந்து பத்து நாடகள் திருப்புகலியில் சிவபாத இருதயர் இல்லத்தில் நடந்த நிகழ்ச்சிகள் இவை.

**சூதகம்**

குழந்தை பிறந்த பத்து நாட்கள் வரை அக்குழவியைப் பெற்றோர்க்கு 'விருத்தி' என வழங்கப்படுகிறது. பிறப்பு தீட்டு என்பர் இதனை. தூய்மையின் பொருட்டும், சிறு குழந்தையின் நலன் பொருட்டும் முன்னோர் வகுத்துக் காட்டிய வைதிகச் சடங்கு இது.

''சூதம் நிகழ் மங்கல விளைத் துழனி பொங்கச்
சாதக முறைப்பல சடங்கு வினை செய்வார்''

சூதம் - சூதகம் (இடைக்குறை) இறப்புத்தீட்டினும் வேறுபடுத்திக் காட்டுவதற்காகவே, 'சூதம் நிகழ் மங்கல வினை' என்ற தொடரைக் கையாண்டுள்ளார் சேக்கிழார் பெருமான்.

''மறைவளர் திருவே வைதீக நிலையே (1995)
வைதிக சூளாமணியை மாதவத்தோர் பெருவாழ்வை''
(2776)

என்றெல்லாம் சேக்கிழார் பெருமான் நாவினிக்க, நெஞ்சினிக்கப் பகரும் சொற்களைக் காணும் போது வைதிக நெறி வளர்க்கக் திரு அவதாரம் செய்த அருளாளர் வாழ்க்கை கருவில் உதிக்கும் போதே இத்தகு வைதிக நெறியுடன் வளரத் தொடங்கியது என்பது உணர வேண்டிய ஒன்று. அப்பெருமான் திருநல்லூர் என்னும் திருத்தலத்தில் அடியார் புடை சூழ, பெற்றவரும் உற்றவரும் முன்செல்ல கைப்பிடித்த பாவை நல்லாள் நம்பாண்டார் நம்பி பெற்றெடுத்த திருச்செல்வி சுந்தரியுடன் (சொக்கியார்) ஜோதியிற் கலக்கும் வரை வைதிக நெறியில் ஒளிர்ந்ததைத் தொடர்ந்து காண்போம்.

**நாமகரணம் (பெயர் சூட்டுவிழா)**

பாலறாவாயர் திருஞானசம்பந்தர்க்குச் சிவஞானம் தலைப்பட்ட பின் கிடைத்த பெயரே திருஞானசம்பந்தர் என்பதாம். இவருக்குப்

பெற்றோர்கள் இட்ட பெயர் சேக்கிழார் பெருமான் கூறவில்லை என்றாலும், நாமகரணம் ஆனதையும் தொட்டிலில் இட்டதையும் அழகு தமிழில் பாடிச் செல்கிறார்.

**''நாமகரணத்து அழகு நாள்பெற நிறுத்திச்**
**சேம உதயப் பரிதியில் திகழ் பிராணனைத் தொட்டில்**
**அமர்வித்தார்** (1944)

**அன்னப்பிராசனம் (உணவு ஊட்டல்)**

உமையம்மை சிவஞானத்தைக் குழைந்தூட்டப் பிறந்தவர் திருஞானசம்பந்தர் 'பரமர் தாள் பரவும் அன்பே திருமுலை சுரந்து' குழந்தையை வளர்த்தது (1945)

மூன்றாம் அகவையில் உலக ஈன்ற அன்னையே 'உண் அடிசில்' எனப் பொன்வள்ளத்துப் பால் சுரந்து ஊட்டினாள்.

**''எண்ணிய சிவஞானத்து இன்னமுதம் குழைத்தருளி**
**உண் அடிசில் என ஊட்ட .... அங்கணனார் அருள் புரிந்தார்**
(1971)

**உபநயனம்**

**''ஒருபிறப்பும் எய்தாமை உடையார் தம்மை**
**உலகு இயல்பின் உபநயன முறைமை ஆகும்**
**இருபிறப்பின் நிலைமையினைச் சடங்கு காட்டி**
**எய்துவிக்கும் மறைமுனிவர் எதிரே நின்று**
**வருதிறத்தின் மறைநான்கும் தந்தோம் என்று**
**மந்திரங்கள் மொழிந்தவர்க்கு மதுர வாக்கால்**
**பொருஇறப்ப ஓதினார் புகலி வந்த**
**புண்ணியனார் எண்ணிறந்த புனித வேதம்''.**

அவதார புருஷர் சம்பந்தர். உபநயனம் என்பது அகக்கண் திறக்கும் புனித விழா; முந்நூல் அணி விழாவிற்குப் பின்னரே வேதம் ஓதும் தகுதி ஒருவருக்கு வரும் என்பது நியதி. வேதங்களைக் கற்றுணர்ந்த பெரியோர்கள் வேதம் நான்கும் உமக்குத் தந்தனம் என்ன, தமிழ் மறை தந்த வள்ளல் மதுர மொழியில் அவர்களுக்கு எண்ணிலா வேத மந்திரங்களை ஓதிக் காட்டி வியக்கச் செய்தார்.

தமிழ்மொழியை யாரிடம் கற்றார் ஞானசம்பந்தர்? அவரே வடமொழி மாமறைகளையும் அவர்க்குத் தந்தனர் என்பதை யாவரே அறியார்? ஆனாலும் இவரது வாழ்வில் அந்தணர் மரபிற்கு உரிய முறையில் முந்நூல் அணிவிழா நடந்தேறியது என்பது இங்கு எண்ணத் தக்கது.

அப்பொழுது தான், வேதங்களுக்கும் அனைத்து மந்திரங் களுக்கும், கலைகளுக்கும் வித்தாக இருப்பது ஐந்தெழுத்தே எனக் கூறும் முகமாக பஞ்சாக்கரப் பதிகம் பாடினார். பஞ்சாக்கரப் பதிகம் இஷ்ட சித்தி தரும் அற்புதப் பதிகம்.

**திருமணம்**

உலகம் உய்யத் திரு அவதாரம் செய்த திருஞானசம்பந்தருக்கு அகவை பதினாறு. அவரை இல்லற வாழ்வில் ஈடுபடுத்த பெற்றோரும் மற்றோரும் ஆர்வம் கொண்டார்கள்.

''நாட்டுமறை முறையொழுக்க ஞான போனகருக்கும்
கூட்டுவது மனம் கொள்வார் கோதில் மறைநெறிச் சடங்கு
காட்டவரும் வேள்வி ஓர்கன்னி தனை
வேட்டருள வேண்டும் என விண்ணப்பம் செய்தார்கள்'
(3059)

ஆளுடைய பிள்ளையாரோ திருவருள் ஆணைப்படி உலகுய்யப் போந்தவர். அவர் எதன் பொருட்டுத் திரு அவதாரம் செய்தாரோ, அப்பணி முற்றுப்பெற்றது. ஆதலால் அவர்கள் கருத்துக்கு இசைய மறுத்தார். மீண்டும் அவர்கள் வற்புறுத்தினர். (3060)

''இருநிலத்து மறைவழக்கம் எடுத்தீர்நீர் ஆதலினால்
வருமுறையால் அறுதொழிலின் வைதிகமாநெறி ஒழுகும்
திருமணம் செய்தருளுதற்குத் திருஉள்ளம் செய்யும்'
(3061)

என ஆளுடைய பிள்ளையார் திருஉள்ளம் இசைந்தார்.

''மறைவாழ அந்தணர் தம்வாய்மை ஒழுக்கம் பெருகும்
துறைவாழ சுற்றத்தார் தமக்கருளி உடன்படலும் (3064)

கணித நூல் வல்லவர் திருமண நாளும், ஓரையும் குறித்தனர்.
(3072)

ஏழுநாள் முன்னர் பொன்மணிப் பாலகைமீது புனித முளை
பூரித்தார். (3075)

**மணிவிழாத் தொடக்கம் - காப்புக் கட்டுதல்**

''மாமறை நூல்விதிச் சடங்கில் வகுத்தமுறைநெறி மரவின்
தூமன நல்உபகரணம் அமைப்பவர் தம்தொழில் துவன்ற
.......... திருக்காப்பு நாண் அணிவார் (3082)

**சமாவர்த்தனம்**

(சம்சாரத்திற்குரிய உட்படுதற்கு உ ரிய நிலை)

''பூகரும் வைதிக விதிச் சமாவர்த்தனப் பான்மை
திகழ முற்றிய செம்மலார்'' (3087)

முந்நூலில் மான்தோல் தரித்த பிரம்மசாரிகள் குருவைப் பின்தொடர்ந்து திருமணக் கூடத்திற்கு வருகிறார்கள் (3105)

**மணநாள்**

''துளக்கில் வேதியர் ஆகுதி தொடங்கிடா முன்னம்
வளர்க்கும் வேதியில் வலம் சுழித்து எழுந்தது வன்னி''
(3096)

இது நன்னிமித்தமாகக் கருதப்படுவது

வேதஒலியும் நாதஒலியும் பரந்தது (3102)

**மாப்பிள்ளைக் கோலம்**

புனித நீராடி, வெண்பட்டாடை உந்தரீயம் அணிந்து, கச்சம் தரித்து, முத்துமாலை முதலியன தரித்து, பல் ஆபரணம் பூண்டு, பிறர் அணிசெய்ய 'ஆளுடைய பிள்ளையார் உருத்திராக்க மாலையைத் தாமே எடுத்தணைந்து கொண்டார். (3113-3119)

மணமகளின் தகப்பனார் நம்பாண்டார் நம்பி தம்பதிகள் பிள்ளையாரின் திருப்பாதங்களைத் தூய நீரால் விளக்கினர். அவரைச் சிவனாகவே கருதி அவரது பாத நீரைத் தாமும் தெளித்துக் கொண்டு மற்றவர்க்கும் தெளிவித்தனர்.

**குலம், கோத்திரம் கூறி தாரை வார்த்தல்**

''பெருகுஒளி ஞானம்உண்ட பிள்ளையார் மலர்க்கை தண்ணில்
மருவு மங்கல நீர்வாசக் கரகம் முன்ஏந்தி வார்ப்பார்
தருமுறை கோத்திரத்தின் தம்குலம்செப்பி என்றன்
அருநிதிப் பாவையாரைப் பிள்ளையார்க் களித்தேன் என்றார்''
(3138)

**பாணிக்கிரகணம் (கைபிடித்தல்)**

''நல்தவக் கன்னியார் கை ஞானசம்பந்தர் செங்கை
பற்றுதற்கு உரிய பண்பின் பழுதில் நல்பொழுது நண்ண''
(3139)

திருமண நல்லோரை வந்தது.

''மறைஒலி பொங்கி ஓங்கி மங்கல வாழ்த்து மல்க
நிறைவளைச் செங்கை பற்றி எரிவலம் கொள்ள வேண்டி''
(3143)

**எரிவலம் வருதல்**

"மந்திர முறையால் உய்த்த எரிவலம் ஆக, மாதர்
நம் தருக்கையைப் பற்றும் தாமரைச் செங்கையாளர்" (3145)

உலகெலாம் பரவி ஏத்தும் ஆளுடைய பிள்ளையார் திருமணம் முடிந்து' நமச்சிவாயத் திருப்பதிகம் பாடியவாறே 'நல்லூர்ப் பெருமணம்' நண்ணினார்.

"சீர்பெருகு நீலநக்கர் திருமுருகர் முதல் தொண்டர்
ஏர்கெழுவு சிபாத இருதயர் நம்பாண்டார் சீர்
ஆர்திரு மெய்ப் பெரும்பாணர்"

அனைவரும் தத்தம் துணைவிமார்களுடன் ஜோதியிற் கலந்தனர்; சிவிகை தாங்கினோர், முத்துமாலை புனைவோர், அறுவகைச் சமயத்தின் அருந்தவர்கள், அடியவர்கள், வேறு திருவருளினால் திருமணம் காணவந்தோர் அனைவரும் ஜோதியில் கலந்தனர்.

இறைவனது திருநாமத்தை, திருமந்திரத்தைத் சிந்தையில் கொள்வதேபோல் அவனடியார்கள் திருநாமத்தைச் சிந்திப்பதும், அவர் வரலாற்றை ஆராய்வதும் அவர்கள் வகுத்த வாழ்வு நெறிகளைக் கைக்கொள்வதும் ஆன்ம அழுக்கினையும் உடற்பிணிகளையும் ஓட்ட வல்லது.

ஆளுடைய பிள்ளையார் தீய நெறியில் ஒழுகிய புறச் சமயத்தவரை அனல்வாதம், புனல் வாதம் முதலியவற்றால் வெற்றி பெறுவதற்குச் சிவபெருமானிடம் அனுமதி கேட்ட பதிகத்தில் வைதிக நெறியின் பெருமைகளைப் பற்றி மிகவும் விரிவாகப் பாடியுள்ளார். வேத வேள்வியின் பெருமை, வைதிகத்தின் சிறப்பு, ஆறங்கத்தின் பெருமை, அழலோம்பும் அருமறையோர் திறம், திருநீற்றுப் பெருமை முதலிய வற்றை அப்பதிகத்தில் வெளிப்படுத்தியுள்ளார்.

சனாதன தருமத்தில் கணக்கிற்கடங்காப் பிறவிகளும், வாழ்க்கை அனுபவங்களும் அடையும் உயிரின் சம்ஸ்காரங்களை (எண்ணப் பதிவுகள்) தூய்மை செய்யக் காலங்காலமாக சமயாசார, அனுஷ்டானங் களை கைக்கொண்டு வாழ வற்புறுத்தப்பட்டு வந்துள்ளது.

எப்பொழுதும் இறைமையை நினைந்துருகிச் சுகங்கண்டு, அலைபாயும் எண்ணங்களின் சுமை நீங்கி அமைதியும் ஆனந்தமும் பெற்று, வாழ்வை அப்பரத்திற்குக் காணிக்கையாக்கி, அழகிய மணம் மிக்க மலராக மாற்றிக் கொள்வதே வேதத்தால் பரிந்துரைக்கப்பட்ட வழியாகும்.

பாகுபடுத்திப் பாடுபடுத்தும் மனம் அற்ற நிலையில் எல்லா மாகிய ஒருபொருள் மட்டுமே அரசோச்சுகிறது. அந்த நிறைபொருளை அடையும் வழியில் உள்ள தடைகளை அகற்ற வழிகாட்டுவனவே வேத நெறிகள். அவைகள் நாடு, மொழி, இனம், மதம் மற்றும் அனைத்துக் குறுகிய வட்டங்களையும் தாண்டி, மனித குலத்திற்குப் பரம்பொருள் ஜோதியைக் காண புத்துணர்ச்சி ஊட்டுகின்றன.

மேற்கண்டவாறு வைதிக நெறிநின்று திருஞானசம்பந்தப் பெருமான் வழிகாட்டிய வண்ணம் பெருவாழ்வு வாழ்ந்து உய்வு பெறுவோமாக.

# 68. தமிழ்ஞான சம்பந்தன பாடலும் பயனும்

முத்து இலக்குமி, மதுரை.

''சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர்....'' (பெரியபுராணம்)

என்று சேக்கிழாரால் போற்றி வணங்கப் பெறும் திருஞானசம்பந்தரின் திருஅவதாரப் பெயர் 'பிள்ளையார்' என்பதேயாம். இறைவி வழங்கிய ஞானப்பால் உண்ட பின்பு திருவும் ஞானமும் ஒருசேரச் சம்பந்தமாகிடத் திருஞானசம்பந்தர் கிடைத்தார்.

'பிள்ளையார் என்பது பிள்ளைத் திருநாமம்'. ஞானப்பால் உண்டபின் திருஞானசம்பந்தர் எனப் பெயர் சூட்டினர் என்று வாழ்வியற் களஞ்சியம் (தொகுதி பத்து. ப, 4020) என்ற நூலின் வழி அறிதற்கு இயலும். நாளும் இன்னிசையால் தமிழ்ப்பரப்பும் சீர்மையால் திருஞானசம்பந்தர்; தமிழ்ஞான சம்பந்தர் ஆனார்.

தமிழ் கூறும் நல்லுலகில் தமிழ் நெறியாம்- இறைநெறி - பக்தி நெறி தழைத்துச் செழிந்திடப் புறச் சமயங்கள் வீழ்ந்துபடத் தமிழ் ஞானசம்பந்தர் தமது சொல்மாலையால் - பாமாலைத் தொடுத்து அணிவித்து வணங்கினார். மேலும்

''ஞான சம்பந்தன தமிழ் வல்லார்'' (பாடல் 106)

''சம்பந்தன செந்தமிழ் வல்லார்'' (பாடல் 447)

''நன்சொலி னாற்பரவு ஞான சம்பந்தனல்ல''

''ஒண் சொலின் இவைமாலை....'' (பாடல் 1281)

என்று சம்பந்தன் என்பது 'சம்பந்தன' என்று அகர ஈற்றினைப் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது. ஆறாம் வேற்றுமை உருழிகாம் 'அ' கரம் 'அன்' என்பதோடு சேர்ந்து 'அ' என்றாகி உடைமைப் பொருளில் இடம் பெறுகிறது. எனவே ஞானசம்பந்தரோடு தமிழ்ப் பாடல்கள் இணைந்துள்ள பாங்கு புலனாகிறது. இவண் முதல் திருமுறையிலுள்ள 1469 பாடல்கள் மட்டுமே ஆய்வுக்குரியவையாகின்றன.

'எனதுரை தனதுரை' (பாடல் 76) என்று ஞானசம்பந்தப் பெருமான் இறைவனே உண்ணின்று உணர்த்தப் பெருகிய உருக்கத்தால் பாடினார் என்று 'திருமுறை இலக்கியம்' (ப.2) என்ற நூல் குறிப்பிடும். இவர் தம் பாடல்கள் பன்னிரு திருமுறையில் முதல் மூன்று திருமுறைகள் என்று குறிப்பிடப்படுகின்றன. இவை திருக்கடைக் காப்பு என்ற பெயரினைப் பெற்றவை. 384 திருப்பதிகங்களில் பாடப் பெற்றுள்ளப் பாடல்களின் எண்ணிக்கை 4158 ஆகும். திருநாவுக்கரசரின் பாடல்கள் 4,5,6 திருமுறைகள் எனப்பட்டன. தேவாரம் என்ற பெயரினால் குறிக்கப்பட்டது. அடுத்துத் தம்பிரான் தோழர் சுந்தரரின் பாடல்கள் 7-வது எனப்பட்டது. அது திருப்பாட்டு என்று அழைக்கப் பெற்றது. ஆனால் நாளடைவில் முதல் மூவரின் பாடல்கள் அனைத்தும் தேவாரம் என்ற பெயரினாலேயே குறிக்கப்படுவதாயிற்று. 27 அடியவர்களின் அருட்பாக்களின் தொகுப்பாகிய பன்னிரு திருமுறையில் இடம் பெற்றுள்ள பாடல்கள் 18346. இதில் திருஞான சம்பந்தர் 4158 பாடல்கள் பாடியுள்ளார். சேக்கிழார் 4286 பாடியுள்ளார். இவ்விருவரே மிகுதியான பாடல்களைப் பாடிய பாவேந்தர்கள் ஆவர்.

220 திருத்தலங்களுக்குச் சென்று இறைவனைக் காணுந்தோறும் திருஞானசம்பந்தர் சொல் புதிதாய்ச் சுவை புதிதாய்ச் சோதி வானவனைப் பாடிப் பரவுகின்றார். ஒவ்வொரு திருப்பதிகமும் ஒவ்வொரு திருத்தலத்தில் பாடப் பெற்றது. இதில் பதிகம் என்பதால் இதன்கண் பத்துப் பாடல்கள் உள்ளன என்பது பெறப்படும். இதில்

8-வது பாடலில் - இராவணனைப் பற்றியும்

9-வது பாடலில் - மால், அயன் பற்றிய செய்தியும்

10வது பாடலில் - சமணர்களின் சமயப் போராட்டமும்

இடம் பெற ஞானசம்பந்தர் ஒரு 'முறை' வைப்போடு பாடியுள்ளார். இப்பத்துப் பாடல்களைத் தொடர்ந்து 'பதினோராவது' பாடலாக அமைந்துள்ள பாடலில் பயன் விதந்து விளக்குதற்குரியது. இப்பாடலே திருக்கடைக் காப்பு என்ற பெயருக்கு உரியதாக விளங்கி யுள்ளது. இத் 'திருக்கடைக் காப்பு' என்ற பெயரே ஞானசம்பந்தரின் மூன்று திருமுறைகளுக்கும் உரியதாக வழங்கப் பெற்றுள்ளதும் குறிப்பிடத்தக்கது. ஒவ்வொரு திருப்பதிகத்தின் இறுதியிலுள்ள திருக்கடைக்காப்புப் பாடலே இறையருளைப் பெற்றுப் பிறவி வினையினின்று விடுபட்டு-உய்தி பெற்றுச் சிவகதியைப் பெறுதற்குரிய படிநிலைகளை உணர்த்தும் பான்மையதாகும்.

திருஞானசம்பந்தன பாடல்களில் பெரும்பாலும் ஒவ்வொரு திருப்பதிகத்திலும்

1 முதல் 7 பாடல்களில்

1. இறைவனின் தோற்றப் பொலிவு
2. இறைவனின் திருக்கோலம் கொண்டுள்ள தலச் சிறப்பு
3. திருத்தலத்தோடு புராணச் செய்திகள் இருப்பின் அக்கருத்தியலை இணைத்துக் கூறும் திறன்.
4. இறைவனின் திருவடியைத் தேடி அலையும் ஆன்மாக்களின் நிலை.
5. திருவடியைக் கண்ட பொழுது ஏற்படும் பரவசப் பேரின்பம்.

என்பன இடம் பெற்றுள்ளன. ''இறைவன் வேறு இத்திருப்பதிகம் வேறு என அமையாமல், இறைவனே இத்திருப்பதிகங்கள் வடிவத்தில் மறையென மறைந்துள்ளான் என்பதே சாலப் பொருந்தும் என்று ஆய்வாளர் கூறுகின்றார். (திருஞானசம்பந்த சுவாமிகள் - தேவாரம், உரையாசிரியர் வ.த. இராமசுப்பிரமணியம், ப.6)

## இறைவனின் தோற்றப் பொலிவு

**''தோடுடைய செவியன் விடையேறி ஓர்**
**தூவெண் மதிசூடிக்**
**காடுடைய சுடலைப் பொடிபூசி என்**
**உள்ளங் கவர் கள்வன்''** (பாடல் - 1)

என்பதே திருஞானசம்பந்தரின் முத்தான முதற்பாடல்

## திருத்தலச் சிறப்பு

**''ஏடுடைய மலரான் முனைநாள் பணிந்து**
**ஒத்த அருள் செய்த**
**பீடுடைய பிரமாபுர மேவிய**
**பெம்மான் இவன் அன்றே''** (பாடல் - 1)

என்பதால் இத்திருத்தலத்தில் பிரமனுக்கு ஈசன் அருள் வழங்கியச் சிறப்புப் பெறப்படுகிறது.

## புராணச் செய்தியைக் கூறும் திறன்

**''......... அரண் மூன்றும்**
**சீரின் மல்கு மலையே சிலையாக**
**முனிந்தான் உலகு உய்ய... ''** (பாடல் -15)

என்ற வரிகளால் திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளின் உலகு உய்யச் செயல்பட்ட பாங்கு புலனாகிறது.

## திருவடிகளைக் காண விழையும் ஆன்மாக்களின் நிலை

"பிணி படுகடல் பிறவிகள் அறல் எளிதுஉளது
அது பெருகிய திரை
அணிபடு கழுமலம் இனிது அமர் அலைஉரு
வினன் அவிர் சடைமிசை
தணிபடு கதிர்வளர் இளமதி புனைவனை
உமைதலை வனை நிற
மணிபடு கறை மிட றனை நல மலி கழல்
இணை தொழ மருவுமே" (பாடல் 196)

என்ற பாடலின் மூலம் இறைவனது திருவடியைத் தொழத் துடிக்கும் ஆன்மாவின் நிலையை ஞானசம்பந்தர் விளக்குகிறார்.

## திருவடியைக் கண்ட பேரின்ப நிலை

"நிழலின் ஆர்மதி சூடிய நீள்சடை
அழலின் ஆரழல் ஏந்திய
கழலினார் உறையும் கர வீரத்தை
தொழ வல்லார்க்கு இல்லை துக்கமே"

என்பதால் துயர் நீங்கி இறையனுபவமாம் பேரின்பத்தைப் பெற முடியும் என்பது பெறப்படும். திருஞானசம்பந்தப் பெருமானின் அறுபூதிப் பாடல்களே இவைகள் என்றால் பொருத்தமுடைத்து.

ஆன்மாக்களிடம் காணப்பெறும் மும்மலங்களாம் ஆணவம், கன்மம், மாயை என்பன திருஞானசம்பந்தப் பெருமானின் பாடல்களில் முறையே 8, 9, 10 பாடல்களில் இடம் பெற்றுள்ளன எனலாம். ஒவ்வொரு திருப்பதிகத்திலும்,

1. 8வது - இராவணன் பற்றியது ஆணவத்தைக் குறிப்பிடுகின்றது.
2. 9வது - மால், அயன் குறித்தது கன்மத்தைக் கூறுகிறது.
3. 10வது - சமணர், பௌத்தர் பற்றிப் பேசுவது மாயையை விளக்குவது என்று கூறுவதற்கு இயலும்.

"கச்சும் ஒள்வாளும் கட்டிய உடையர்
கதிர்முடி சுடர்விடக் கவரியும் குடையும்
பிச்சமும் பிறவும் பெண்ணணங்காய
பிறை நுதலவர் தமைப் பெரியவர் பேணப்

**பச்சமும் வலியும் கருதிய அரக்கன்**
**பருவரை எடுத்த திண் தோள்களை அடர்வித்து**
**அச்சமும் அருளும் கொடுத்தளம் அடிகள்**
**அச்சிறு பாக்கமது ஆட்சி கொண்டாரே''** (பாடல் 836)

என்னும் பாடலால் இராவணனது ஆணவத்தை இறைவன் அடக்கிய பாங்கினை அறிதற்கு முடிகிறது. இராவணன் மட்டுமல்லாது மானுட உயிர்கள் அனைத்துமே ஆணவத்தோடு இருப்பின் அல்லல் படுவர் என்பதை எடுத்துரைப்பதேயாம்.

**''கண்ணன் கடிக்கமல மலர்மேல் இனிதுறையும்**
**அண்ணற்கு 'அளப்பரிதாய்....''** (பாடல் 956)

என்று ஞானசம்பந்தப் பெருமான் மாலும் அயனும் தங்களது கர்மத்தால் - தொழிற் பயனால் காண விழைந்து காணாது தவித்தனர். இறைவனைக் காண அன்பு நெறியாம்-பக்தி நெறியே வேண்டப்படுவது என்பதைச் சம்பந்தப் பெருமான் இனங்காட்டி விளக்கும் முறைமை போற்றுதற்குரியது.

**தேரர் அமணரும் சேரும் வகையில்லாள்**
**நேரில் முதுகுன்றை நீர்நின்று உள்குமே''** (பாடல் 1012)

இவண் பௌத்தர், சமணர் என்ற புறச் சமயங்கள் மாயை மக்கள் மயக்கமுற்று உள்ளனர். இதிலிருந்து விடுபடத் திருமுதுகுன்றத்து இறைவனை வழிபடல் வேண்டும் என்றும் சீகாழிப் பிள்ளைச் சிறப்புற எடுத்துரைக்கிறார்.

இவ்வாறு சைவ சித்தாந்தச் சாத்திரத் தத்துவக் கூறுகள் திருஞான சம்பந்தன பாடல்களில் இடம் பெற்றுள்ளப் பாங்கு விரிப்பின் அகலும் தொகுப்பின் எஞ்சும் தன்மையான எனலாம். இறைவன் கோலத்தையும், வீற்றிருக்கும் தலத்தையும் அடியவரின் நிலையினையும், இறைவன் அருள் பாலிக்கும் அன்பினையும், மானுடத்திடம் காணப்பெறும் மும்மலங்கள் நீங்கப் பெற வேண்டிய கடப்பாட்டினையும் திருப்பதிகங்கள் தோறும் ஞானசம்பந்தர் பாடியுள்ளார். இப்பாடல்களைப் படிப்போரின் பயனைக் கூறுவது இறுதிப் பாடலாம் திருக்கடைக் காப்புப் பாடலாகும்.

**திருக்கடைக் காப்புப் பாடலில்**

1. இறை விளக்கமும்
2. இறைப் பாடல்களைப் பாடும் காலத்துப் பெறும் பயனும் விளக்கம் பெறுகின்றன.

இறை விளக்கத்தைப் பொறுத்த மட்டில் முந்தைய பாடல்களில் இடம் பெற்ற தோற்றப் பொலிவு புனைவுகளே இடம் பெறுகின்றன. கருத்துத்

தான் கூறியது கூறியதே தவிரச் சொற்கள் கூறியது கூறல் இல்லை என்பதை விதந்து கூற வேண்டும். ஞானசம்பந்தரின் தமிழ்ச் செல்வாக்குக் காரணம் அவரது சொல்வாக்கேயாம்.

இறைப் பாடல்களைப் பாடும் பொழுது பெறும் பயன்களாவன.

1. வினை நீங்கப் பெறுவர்
2. பிறவா வகை வீடே பிறப்பறுப்பர்
3. புகழோடு வாழ்வார்
4. விண்ணுலகு அடைவர்
5. சிவகதி பெறுவர்

என்ற ஞானசம்பந்தர் விதந்து விதந்து விளக்கி எடுத்துரைத்துள்ளார்.

சம்பந்தப் பெருமான் அடியார், மன்னவர், படியார் என்ற மூவகையான இறையன்பர்களை

**''அடியார் தொழ மன்னவர் ஏத்தப்**
**படியார் பணியும் பனையூரே''** (பாடல் 396)

என்ற வரிகளால் குறிப்பிடுகின்றார் உரையாசிரியர்.

மனம், வாக்கு, காயம் என்ற முக்கரணங்களால் வழிபடுபவர் அடியார், மனம், வாக்கு என்ற இரண்டின் வயப்பட்டு ஏத்த வல்லவர் மன்னவர், காயத்தால் வணங்கும் பெருமக்கள் படியார் (திருஞான சம்பந்த சுவாமிகள் தேவாரம் - வ.த. இராமசுப்பிரமணியர் - உரையாசிரியர் - ப. 317) என்று விளக்கம் செய்கிறார். இத்தகு முப்பெரும் மக்களால் ஞானசம்பந்தரின் பாடல்கள் பயிலப் பெற முதற்கண் வினை நீங்கப் பெறுவர்.

**வினை நீங்கப் பெறுபவர்**

உயிர்கள் உலகில் வாழும் காலத்து வாழ்தல் வேண்டிப் பல்வேறு வினைகளைச் செய்வர். இதில் நல்வினையும் உண்டு. தீவினையும் உண்டு. இதில் தீவினைகள், துன்பங்கள், கவலைகள் நீங்கப் பெறுதல் வேண்டும். இதற்குச் சம்பந்தப் பெருமானின் பாடல்கள் உய்தி வழங்குவன என்பதைப் பல பாடல்களில் காண முடிகிறது. முதல் திருமுறைப் பாடல்களில் வினை பற்றிய குறிப்பு ஏறத்தாழ 50 இடங்களில் இடம் பெற்றுள்ளன.

1. தீவினை நீங்கும் ( பாடல் 11)
2. ... துயர் வீடே (பாடல் 392)

3. பாவம் பறையுமே (பாடல் 569)

4. கவலை கழிவாரே (பாடல் 925)

5. செடிகள் நீக்குமே (பாடல் 1024)

என்பனவற்றைச் சான்றாகக் கூறலாம்.

**பிறவா வகை வீடே**

பிறவிப் பெருங்கடலைக் கடந்திட இறையருள் வேண்டும். சேர்ந்த இடமெல்லாம் தீர்த்தமாகச் செய்யும் திறமிக்க இவ்வடியவர்களுக்குக் கலைமகள் சயமகள் புகழ் மகள் இசைதர இரு நிலத்து இனிது இருப்பது என்பதில்லாது

**"......... தமிழ் மாலை செவிக்கு இனிதாக**
**வல்லார்க்கு எளிதாம் பிறவா வகை வீடே"** (பாடல் 337)

என்று பேற்றிற்கு உரியவராகின்றனர்.

**புகழோடு வாழ்வர்**

மானுட உயிர்கள் வினை நீங்கப் பெற்று. பிறவா பேரின்பத்தை அடைந்திடப் புகழோடு வாழும் உயர்நிலையை அடைகின்றனர். ஞானசம்பந்தரும்,

**"........ புகழ் தாங்குவாரே"** (பாடல் 55)

**"........ பொன்னுலகில் பொலிவாரே"** (பாடல் 469)

**"........ நல்லாரே"** (பாடல் 732, 874, 892)

**"........ திருவொடு புகழ்மல்கு தேசினரே"** (பாடல் 1184)

**"........ புகழொடு கிளரொளியினரே"** (பாடல் 1314)

என்று விருப்போடு 16 இடங்களில் போற்றுகின்றார்.

**விண்ணுலகு அடைவர்**

ஆன்மாக்கள் மண்ணுலகில் வாழ்வதைப் போன்று விண்ணுலகில் இறையுலகில் வாழும் தன்மையன என்று இறை இலக்கியங்கள் கூறுதலுண்டு. இவண் ஞானசம்பந்தன பாடலைப் பாடிப் பரவித் தொழும் பொழுது அடியார்கள் விண்ணுலகினைப் பெறுவர் என்பதைக் கீழ்க்காணும் வரிகளால் அறிதற்கு முடியும்.

**".... குளிர் வானத்து உறைவார்"** (பாடல் 35)

**".... உயர் வான் அடைவாரே"** (பாடல் 118)

**"... வான் அடைவாரே"** (பாடல் 370)

"…. பயில்வது வானிடையே" (பாடல் 700)

"…. விண்ணவர் ஆற்றலின் மிகப் பெறுவாரே" (பாடல் 863)

என்பவைகளாகும். இக்கருத்தியலை ஏறத்தாழ 27 பாடல்களில் காணமுடிகிறது.

## சிவ கதி பெறுவர்

இறைவனை நாடிச் செல்லும் உயிர்கள் அவனது திருவடியைக் காணப்பெற்றுச் சிவகதியை அடையும் பேற்றினைப் பெறுகின்றன. இச்சீலமாம் சிவகதியைச் சம்பந்தன பாடல்கள் வழங்கும் வகைமையின. இதனை,

"….. எய்துவார் ஈசனையே" (பாடல் 677)

"…… சிவலோகம் சேர்வாரே" (பாடல் 655)

"…… பற்றுவார் ஈசன் பொற்பாதங்களே" (பாடல் 1227)

"…… சீரருளாற் பெறுபவர் சிவலோகமதே" (பாடல் 1270)

"…… உயர் பொருள் தருமே" (பாடல் 1336)

"…… இருநிலத்து ஈசன் எனும் இயல்பினோரே" (பாடல் 1426)

என்ற வரிகளால் உணர முடிகிறது. இவ்வாறு ஞானசம்பந்தன பாடலும் பயனும் நாளும் படித்து இன்புற்று இறையடியைச் சேருதற்குத் துணை புரிவன. இக்கருத்து ஏறத்தாழ 15 இடங்களில் பதிவாகியுள்ளன.

1. சம்பந்தரின் பாடல்கள் உயிர்கள் உய்தி பெறுதற்குரிய இறைநெறியை இறைத்திருவடியைக் காணுதற்குக் காரணமானவை.

2. சம்பந்தன பாடல்கள் என்று பிள்ளையார் பாடுவதினால் தம்மை அந்நியமாக்கிக் கொண்டு பார்க்கும் நிலையைக் காணமுடிகிறது.

3. திருமுதுகுன்றம் என்ற திருத்தலம் குறித்தத் திருப்பதிகம் அனைத்துமே பயனைக் கூறுவன (கட்டுரையின் விரிவஞ்சி பாடல் இடம் பெறவில்லை)

4. திருப்பிரமபுரம், திருவாரூர், திருவீழிமிழலை, திருமுதுகுன்றம், திருவாலவாய், திருவிடைமருதூர் திருஅன்னியூர் - என்ற திருத்தலங்களுக்குரிய பதிகங்கள் இரண்டு அடிகளில் பாடப் பெற்றுள்ளன.

- முதல் திருமுறையில்
- இறைவனது திருக்கோலம்
- திருத்தலச் சிறப்பு
- புராணச் சிறப்பு
- புராணக் கூறின் இணைப்பு
- திருவடியைக் காண விழைதல்
- திருவடிப் பேற்றினைப் பெறல்
- மும்மலங்களை நீக்குதலைச் சான்றினால் விளக்குதல்
- பாடலினால் பெறும் பயன்கள்

என்பன போன்ற கூறுகள் இடம் பெற்றுள்ளன.

> "சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும் எம்சுந்தரனும்
> சிற்கோல வாதவூர்த் தேசிகனும் முற்கோலி
> வந்திலரேல் நீறெங்கே மாமறை நூல் தானெங்கே
> எந்தை பிரான் ஐந்தெழுத்து எங்கே?"

என்று பழம் பாடல் பாராட்டுவது ஏற்புடையதே.

# 69. சம்பந்தர் திருமுறைகள்

கோ. முத்துக்கந்தசாமி தேசிகர், திருச்சி.

திருஞானசம்பந்தப் பெருமான் சீகாழிப்பதியிலே சிவபாத இருதயர், பகவதியம்மை தம்பதிகளுக்கு குழந்தையாக இறைவன் திருவருளால் சைவம் தழைக்க அவதாரம் செய்தருளினார்.

இறைவன் அருள் வழி உமையம்மை எண்ணரிய சிவஞானத்து இன்னமுதைக் குழைத்து ஊட்ட ஞானசம்பந்தப் பெருமான் சிவனடியே சந்திக்கும் திருப்பெருகு சிவஞானம், பவமதனை நீக்கும் ஓங்கிய ஞானம், உவமையிலாக் கலைஞானம், மெய்ஞ்ஞானம் பெற்று ஏழிசை மொழியாளாகிய அம்மையின் திருவருள் பெற்று ஞானவடிவம், கானவடிவும் பெற்றவரானார்.

நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பி, பற்பல அற்புதங்களை நிகழ்த்திச் சைவத்தை நிலைநாட்டி, தழைக்கச் செய்தார்.

**வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத்துறை விளங்க**
**பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத**
**சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்**
**பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்**

என்று சேக்கிழார் போற்றுவார்.

இவருக்கு தாய், தந்தையார் இட்ட பெயர் தெரியவில்லை. இறைவன் ஞானப்பால் ஊட்டியருள ஞானசம்பந்தம் பெற்றதால் திருஞானசம்பந்தர் என்று போற்றப்பெற்றார்.

தமது முதல் பதிகத்திலே கடைப்பாட்டில் ஒரு நெறிய மனம் வைத்துணர் ஞானசம்பந்தன் என்று தமது பெயரை முத்திரை பதித்தார்.

தமிழ் விரகன், முத்தமிழ் விரகன்; இயல்ஞான் சம்பந்தன், இசைஞான சம்பந்தன், சந்தம்கொள் சம்பந்தன், நல்லிசை ஞானசம்பந்தன், நற்றமிழ் ஞானசம்பந்தன், நான்மறை கற்றவன், சைவசிகாமணி, பரசமய கோளரி என்று பல்வகையாலும் போற்றப்படுபவர்.

உலகின் முதல் இலக்கண இசை பண்ணிசையாகும். இது ஆய்ந்த முடிவு.

பண்ணிசையிலே முதன் முதலாகப் பாடல்களைப் பதிகங்களாகப் பாடியருளி இசையின் முன்னோடியாகத் திகழ்ந்தருளும் நால்வர்களில் (முதல் சாகித்ய கர்த்தாக்கள்) (காரைக்கால் அம்மையார், திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர்) ஞானசம்பந்தப் பெருமான் சிறப்பிடத்தினைப் பெறுகிறார்.

தற்போது நமக்கு இறையருளால் கிடைக்கப் பெற்றதில் ஞானசம்பந்தர் இருபத்தி இரண்டு பண்களில் பதிகங்களை அருளிச் செய்துள்ளார். இவர் இன்னும் பல பண்களில் பதிகங்களை அருளி யிருக்க வேண்டும்! ஆனால் அவை கிடைக்காமல் அழிபட்டுப் போயின.

திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிய திருமுறைகள். பற்பல அற்புதங்களை நிகழ்த்திய, இப்போதும் நிகழ்த்தும் அற்புத இசைத் தமிழ், நோய்களை, வினைகளை நீக்கி வேண்டுவார் வேண்டுவதை அளிக்கும் மந்திர இசைத்தமிழ், தெய்வீக இசைத்தமிழாகும். இசையின் முன்னோடியாக விளங்கும் பண்ணிசைத் தமிழ் முதல் இசைக்குரிய பாடலாகப் (இசையின் முதல் சாகித்யங்களாக) போற்றப் பெறும் இசைத்தமிழ்.

சாகித்யங்கள், கிருதிகள், என்று சொல்லப்படும் எந்த இசைக்குரிய பாடல்களிலும் இல்லாத, அமையாத சுவையுமுறு தாளத்தொளி பல அமைந்து சந்தங்கள் (நடைகள், கட்டளைகள்) கொண்ட சங்கத்தமிழ், (சந்தத் திருப்புகழ் பாடியருளிய அருணகிரிநாதர் ஞானசம்பந்தப் பெருமானையே குருவாகக் கொண்டவர்) புவியதனில் பிரபுவான புகலியில் வித்தகர்போல அமிர்தகவித் தொடைபாட அடிமை தனக்கு அருள்வாயே என்பது அருணகிரியார் வாக்கு.

முருகனே ஞானசம்பந்தராக அவதரித்தார் என்பதற்கு அருணகிரிநாதர் அருளிச் செய்த திருப்புகழ்ப் பாடல்களே சான்றாகும்.

எந்த இலக்கியங்களிலும் இல்லாத பல புதிய யாப்பமைதிப் பதிகங்கள் உடைய யாப்புக்குரிய இசைத்தமிழ்.

கற்பனை வளங்கொண்டதும் பல அருஞ்சொற்கள் அமையப் பெற்றதுமான இலக்கியத் தமிழிசை.

பதங்கள் என்று தற்போது கூறப்படும் அகத்துறைப் பதிகங்கள் கொண்ட இனிய தெய்வீக இசைத்தமிழாகும்.

மூவர் அருளிய திருமுறைப் பண்ணிசையினை மிகப் பழமையான முறையில் பாடும்போது பண்ணிசையின் உயிர்நாடியினை (ஜீவனை) (இராகத்தின் பூரணமான சுவையினை) உணர முடியும்.

திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிய திருமுறைகள் முதல் மூன்று திருமுறைகளாக நம்பியாண்டார் நம்பிகளால் வகுக்கப் பெற்றுள்ளது. திருஞானசம்பந்தர் அருளிய திருமுறைகள் திருக்கடைக்காப்பு என்று வழங்கப்படுகிறது.

முதலில் திருமுறைகளில் உள்ள யாப்பிசைப் பதிகங்கள் சிலவற்றின் யாப்பின் சிறப்பினைக் கூறுகிறேன்.

நம்பியாண்டார் நம்பிகள் சம்பந்தப் பெருமானை ''நல்ல சங்கத்து ஒன்றும் புலவர்கள் யாப்புக்குரியன'' என்று போற்றியுள்ளார்.

சேக்கிழார் பெருமான், இயல், இசைத்தலைவன் என்று சம்பந்தரைப் போற்றியுள்ளார்.

மற்றும் சம்பந்தப் பெருமான் அருளிய யாப்புடைப் பதிகங் களைச் சேக்கிழார் பெருமான் 'மூல இலக்கியம்' என்று அருளுகிறார். (செய்யுள் 276-277)

செந்தமிழ் மாலை விகற்பச் செய்யுட்களால் மொழிமாற்றம் / வந்த சொற்சீர் மாலைமாற்றும், வழிமொழி எல்லா மடக்கும் / சந்தவியமகம், ஏகபாதம், தமிழிருக்குறள் சாத்தி / எந்தை எழுகூற்றிருக்கை, ஈரடி, ஈரடிமேல் வைப்பு.

நாலடிமேல் வைப்பு, மேன்மை நடையின் முடுகுமிராகம் / சால்பினில் சக்கரம், ஆதி விகற்பங்கள் சாற்றும் பதிகம் / மூல இலக்கியம் ஆக எல்லாப் பொருள் முற்ற / ஞாலத்து உயர்காழியாரைப் பாடினார் ஞானசம்பந்தர். ஆக சம்பந்தப்பெருமான் தமது புதிய யாப்புக்குரிய பதிகங்களை தம்மை ஞானப்பால் கொடுத்து ஆட்கொண்ட சீகாழிப் பெருமானுக்கே முதலாவதாக பாடி அர்ப்பணித்தார் என்பதனைச் சேக்கிழார் வாக்கால் உணரமுடிகிறது.

## மொழிமாற்று

**பண் : வியாழக் குறிஞ்சி**

**காடது அணிகலம் கார்அரவம் பதிகால தனில்**
**தோடது அணிகுவர் சுந்தரக்காதினில் தூச்சிலம்பர்**

என்று சொற்களை (மொழிகளை) இடம் மாற்றி அருளியிருக்கின்றார்.

பொருள் கொள்ளும்போது காடது பதி அணிகலம்கார் அரவம் - காலதனில் தூச்சிலம்பர் - சுந்தரக் காதினில் தோடது அணிகுவர் என்றாகும்.

மொழிகளை மாற்றிக் கூட்டிப் பொருள் கொள்ள வைப்பதால் மொழிமாற்று ஆகும். இறைக்கவி என்று கூறப்படுகிறது.

**நாலடி மேல்வைப்பு**

**பண்: பழம் பஞ்சுரம்**

**வேத வேள்வியை நிந்தனை செய்துழல்**
**ஆதமில்லி அமணொடு தேரரை**
**வாதில் வென்றழிக்கத் திருவுள்ளமே**
**பாதி மாதுடனாய பரமனே**
**ஞாலம் நின்புகழே மிக வேண்டும் தென்**
**ஆல்வாயில் உறையும் எம்ஆதியே.**

வேத வேள்வியை என்ற இப்பதிகத்தின் (நான்கு வரிகள் கொண்ட) ஒவ்வொரு பாடலின் இறுதியிலே இருவரிகள் ஒரே பொருளுடையதாக அருளப்பட்டுள்ளது. (திருக்கடைக்காப்பு பாடல் தவிர)

முதல் நான்கடிகள் ஒரு தன்மையதாகவும் மேல்வரும் இரண்டு அடிகள் மற்றொரு தன்மையதாகவும் இணைந்து வருவதால் நாலடிமேல் வைப்பு என்பதாகிறது.

இதுபோன்று இடரினும் தளரினும் போன்ற யாப்பிசைப் பதிகங்களைச் சம்பந்தப் பெருமான் அருளியுள்ளார்.

**ஈரடி மேல்வைப்பு**

**பண்: காந்தா ரபஞ்சமம்**

**கொட்டமே கமழும் கொள்ளம் பூதூர்**
**நட்டமாடிய நம்பனை உள்கச்**
**செல்லவுந்துக சிந்தையார் தொழ**
**நல்குமாறருள் நம்பனே.**

கொட்டமே கமழும் எனும் இப்பதிகத்தின் (இருவரிகள் கொண்டது) ஒவ்வொரு பாடலின் இறுதியிலே ஒரே பொருள் கொள்ளும் இரு வரிகளை அமைத்து அருளப்பெற்றுள்ளது.

இது ஈரடி மேல் வைப்பு எனும் யாப்புச் சிறப்புப் பெறுகிறது.

**திருவியமகம்**

**பண்: பழம்பஞ்சுரம்**

**உற்றுமை சேர்வது மெய்யினையே உணர்வது**
**நின்னருள் மெய்யினையே**
**கற்றவர் காய்வது காமனையே கனல்வழிகாய்வது காமனையே**

**அற்ற மறைப்பது முன்பணியே அமரர்கள் செய்வது முன்பணியே**
**பெற்று முகந்தது கந்தனையே பிரமபுரத்தையு கந்தனையே.**

முதலில் வரும் மெய்யினையே உமையம்மை இறைவனின் திருமேனியில் ஒருபாகம் கொண்டதால் இறைவன் திருமேனியைக் குறிக்கும் இரண்டாவதாக வரும் மெய்யினையே என்பது இறைவனின் அருள் தன்மையினை உணருகின்ற அருள் உண்மையினைக் குறிப்பதாகும்.

ஒவ்வொரு வரியில் இரு இடத்தில் ஒரே சொல் இரு வகையாகப் பொருள் கொள்ளும் வகையில் அமைந்துள்ளது.

அடிதோறும் சீர் மீண்டும் மடங்கி வருவதால் திருவியமகம் என்பதாகிறது.

இயமகம் என்பது வடசொல் என்றும் இதற்குத் தமிழ்ச் சொல் மடக்கு என்றும் சொல்லப்படுகிறது.

**மாலைமாற்று**

**பண்: கௌசிகம்**

**யாமா மாநீ யாமாமா யாழிகாம॥ காணாகா**
**காணா காமா காழியா மாமா யாநீ மாமாயா.**

இப்பாடலின் முதல்வரியின் கடைசி எழுத்திலிருந்து தொடங்கிச் சொன்னால் பாடலின் இரண்டாவது வரியாக வரும். பாடலின் கடை எழுத்திலிருந்து தொடங்கிச் சொன்னாலும் மறுபடியும் அப்பாடல் வருகிற சிறப்பினைக் காணலாம். இது ஒரு மாலையை மாற்றிப் போடுவது போன்று இப்பதிகத்தின் பாடல்கள் அமைந்துள்ளன. ஆதலால் இப்பதிகம் மாலைமாற்று எனும் சிறப்புப் பெறுகிறது. மற்றும் யாவும் நெடில் எழுத்தாக இப்பாடலை அருளிச் செய்துள்ளார் நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய தமிழ்ஞான சம்பந்தர்.

இப்பதிகத்தில் 8, 10, 11 பாடல்களைத் தவிர மற்றப் பாடல்கள் அனைத்தும் நெடில் எழுத்தாக அருளப்பெற்றுள்ளது.

**வழிமொழித் திருவிராகம்**

**பண்: சாதாரி**

**சுரருலகு நரர்கள் பயில்தரணிதலம் முரணழிய அரணம தில்முப்**
**புரமெரிய விரவுவகை சரவிசை கொள்கரமுடைய பரமனிடமாம்**
**வரமருள வரன்முறையின் நிரைநிரைகொருள்வரு சுருதிசிர**
**வுரையினான்**
**பிரமனுயர் அரனெழில் கொள்சரணவிணை பரவவளர் பிரமபுரமே**

சுரருலகு எனும் இப்பதிகத்தின் இம்முதற்பாடல் இடையின ரகரத்தைச் சிறப்பாக வைத்து அருளப்பெற்றுள்ளது மற்றும் இப்பதிகத்தின் மற்றைய பாடல்களில் ஒவ்வொரு பாடலில் ஒவ்வொரு எழுத்தை சிறப்பாக அமைத்து சம்பந்தப்பெருமான் அருளியுள்ளார். மொழியை (எழுத்தை) வழியாக (வழி மொழியாக) கொண்டுள்ளதால் வழிமொழித் திருவிராகம் எனும் யாப்புச் சிறப்புப்பெறுகிறது. பாடல் ஒரே அமைதியில் அமைந்துள்ளதால் திருவிராகம் எனப்பெறுகிறது. மற்றும் சீகாழியின் பன்னிரு பெயர்களும் வந்த வரலாற்றினை அவ்வழியே மொழி எனச் சொல்வதுமுண்டு. அநாகத எடுப்பு, அனாதி எடுப்பு என்று தாளம் தொடங்குவதற்குமுன் பாடலைத் தொடங்கு வதற்கு கூறுவதுண்டு. அதுபோன்ற அமைப்பிலே இப்பதிகத்தின் நிராமய எனும் பாடல் அமைந்துள்ளது.

**திருஎழுகூற்றிருக்கை**

இன்னும் ஒன்று முதல் ஏழுவரையுள்ள எண்களை வைத்து அதற்குரியவாறு சொற்களை அமைத்து (ஒன்று இரண்டு - ஒன்று, இரண்டு, மூன்று திரும்ப இரண்டு ஒன்று மறுபடி ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு - மூன்று, இரண்டு, ஒன்று இவ்வகை அமைப்பிலே ஒருவாயினை எனும் பதிகம் சம்பந்தப்பெருமான் அருளிச் செய்துள்ளார். திருஎழு கூற்றிருக்கை எனும் யாப்புச் சிறப்புப் பெறுகிறது.

மற்றும் ஏகபாதம், சக்கர மாற்று முதலிய யாப்புடைப் பதிகங்களும் சம்பந்தப் பெருமான் அருளிச் செய்துள்ளார்.

திருக்குறள் போன்று குறுகிய இருவரிகள் கொண்ட திருவிருக்கு குறள் எனும் பதிகங்களும் பல அருளிச் செய்துள்ளார். ஈரடி என்ற (இரண்டு அடிகளைக் கொண்டது) பதிகங்களும் அருளிச் செய்துள்ளார்.

**சப்தங்கள்**

சப்தம், கட்டளை ஆக இரண்டும் ஒன்றேயாகும். பாடலின் சந்தங்களுக்குத் தக்கபடி (நடை அமைப்பிற்கு) தட்டுகளை போட்டுப் பாடுவது சந்த தாளமாகும்.

ஞானசம்பந்தப் பெருமான் சந்தங்கள் நிறைந்த பதிகங்கள் பல அருளிச் செய்துள்ளார்.

**சந்தங்கொள் சம்பந்தன் தமிழுரைப்போர் தக்கோரே**

என்றும்,

**நமச்சிவாயயெனும் சந்தையார் தமிழ் ஞானசம்பந்தன்**

என்றும் சம்பந்தர் அருளுவார்.

சந்தம் பலவும் பாடும் அடியார் தங்களின் காணாது என்றும், ஆரூரன் - சந்தம் இசையொடும் வல்லார் தாம்புகழ் எய்துவர் தாமே என்றும் சுந்தரர் அருளுவார்.

அருணகிரிநாதர் காலம் வரை சந்த தாளங்களே இருந்து வந்திருக்கிறது.

தற்போது சொல்லப்படும் திஸ்ரம், (3) சதுஸ்ரம் (4) கண்டம் (5) மிஸ்ரம் (7) போன்ற நடைகள் திருமுறைகளில் கட்டளைகள் அதாவது சந்தங்களில் பதிகங்கள் அன்றே அருளிச் செய்யப்பட்டுள்ளது.

மற்றும் ஒரே வரியில் பல சந்தங்கள் (நடைகள்) அமைந்துள்ள பதிகங்களும் உள்ளன.

மேலும் ஒரு சந்தத்தில் (நடையில்) அமைந்துள்ள பதிகத்தில் அதே சந்தத்தில் (நடையில்) பல பேதங்கள் கொண்ட ஜதிகள் (சொற்கட்டுகள்) அமையப்பெற்றுள்ளன.

சம்பந்தர் திருமுறைகளிலிருந்து சில சந்தப்பதிகப் பாடல்களை காணலாம்.

திஸ்ரம் என்று சொல்லப்படும் மூன்றில் அமைந்துள்ள சந்தம்.

மூன்று (திஸ்ரம்) என்ற சந்த அமைப்பிலே பலவகை பேதங்கள் உள்ள பதிகங்கள் மூவர் திருமுறையில் அமைந்துள்ளன.

சம்பந்தப் பெருமான் அருளிய வண்டார் குழல் அங்கமும் வேதமும், மடையில் வாளை போன்ற பதிகங்களும் இன்னும் பலவும் உள்ளன.

**மைம்மரு பூங்குழல் - பண் : நட்டபாடை**

சதுஸ்ரம் என்று சொல்லப்படும் நான்கில் அமைந்துள்ள சந்தம். நான்கு எண்ணிக்கை கொண்ட சந்த அமைப்பிலே பதிகங்கள் பல உண்டு. அதில் சம்பந்தரின் தளிரிளவளரொளி, அவ்வினைக்கிவ் வினை பூந்தோந்தாயன பிறையணி படர்சடை, நடைமருதிரிபுரம், எந்தையீசன், திடமலி இப்பதிகங்களில் இதே சந்தத்தில் பல பேதங்கள் அமைந்த ஜதிகளை காணலாம்.

**பூந்தோந்தாயன - பண் : பழந்தக்கராகம்**

திடமலி எனும் பதிகம் திருமுக்கால் (சாதாரி)

என்று வழங்கப்படுகிறது - பண் : சாதாரி

முதல் வரியும், மூன்றாம் வரியும் முழுமையாகவும் இரண்டாவது வரியும், நான்காவது வரியும் முக்கால் அளவாகவும் அமைந்துள்ளது. ஆதலால் திருமுக்கால் என்று சந்தக் கணக்காக இப்பதிகம் கூறப் பட்டிருக்கிறது.

**கண்டம் என்று சொல்லப்படும் ஐந்தில் அமைந்துள்ள சந்தம்**

ஐந்தெண் சந்த அமைப்பிலேயும் பல பதிகங்கள் உள்ளன. அதில் சில சம்பந்தரின் ஏனவெயிறு, எந்தமது, திருத்திகழ், பவனமாய் இப்பதிகங்களில் இதே சங்கத்தில் (ஐந்து) பல பேதங்கள் கொண்ட சொற்கட்டுகளை (ஜதிகளைக்) கொண்டதாக அருளப்பெற்றுள்ளது.

**திருத்திமிழ் - பண் : இந்தளம்**

மிஸ்ரம் என்று சொல்லப்படும் ஏழில் அமைந்த சந்தம்.

ஏழென் கொண்ட (மிஸ்ரம்) சந்த அமைப்பிலேயே சம்பந்தப் பெருமான் பல பதிகங்கள் அருளிச் செய்துள்ளார்.

சம்பந்தர் அருளிய ஏழென் சந்தம் அமைந்த சேவுயரும் என்ற பதிகப்பாடல்.

**பண் : மேகராகக் குறிஞ்சி**

**திருத்தாளச்சதி**

சம்பந்தப்பெருமான் இயல் (யாப்பு என்றாலும் பொருந்துமென எண்ணுகிறேன்) சிறப்பும், சந்தச் சிறப்பும் கொண்டதாக திருத்தாளச்சதி என்ற சிறப்புடைப்பதிகம் அருளியுள்ளார். பதிகத்தில் ஒவ்வொரு பாடலும் (சதுஸ்ர) நான்கென் சந்தத்தில் ஜதிபேதங்கள் கொண்டதாக அருளிச் செய்துள்ளார்.

**பந்தத்தால் - பண்: வியாழக் குறிஞ்சி**

ஒரு பாடலின் ஒரு வரியில் பல சந்தங்கள் அமையப் பலபதிகங் களைத் திருஞானசம்பந்தப் பெருமான் அருளியுள்ளார். அதில் கோளறு திருப்பதிகம் எனும் சிறப்புப்பெற்ற வேயுறு தோளிபங்கன் பதிகமும் ஒன்று.

**வேயுறு தோளிபங்கன் - பண் : பியந்தைக் காந்தாரம்**

சம்பந்தர் திருமுறைகளில் இயல், இசை, யாப்பு, சந்தச் (லயம்) சிறப்புக்கள் இன்னும் பலப்பல நிறைந்துள்ளன. இப்போது ஒரு சிலவற்றையே அளித்துள்ளேன்.

திருமுறைப் பதிகங்களில் ஒவ்வொரு பாடலையும் மேலும் ஆய்ந்து ஆய்ந்து பார்த்தால் பல ஓசைத் தமிழின் சுவையையும் அதன் உள்நின்று ஒலிக்கும் சுவையுமுறு தாளத்தொலி பலவற்றையும் கண்டும், கேட்டும் சுவைத்தும் மகிழலாம்.

மேலும் மிகச் சுருக்கமாக எனது ஆய்வு ஒன்றினைத் தெரிவிக்கிறேன்.

இன்று இசை உலகில் இசைத்தமிழ் என்றும், தமிழிசை என்றும் கூறப்பட்டு வருவதை அறிகிறோம்.

இசையின் முன்னோடியாகத் திகழும் பண்ணிசையாகிய திருமுறைகளில்:

திருஞானசம்பந்தப் பெருமான் அருளிய திருமுறைகள் (பண்ணிசைப் பதிகங்கள்) **இசைத்தமிழ்** ஆகும்.

(திருநாவுக்கரசுப் பெருமான் அருளிய திருமுறைகள் **தமிழிசை** ஆகும்)

சம்பந்தப்பெருமான் அருளிய திருமுறைகளில் புதிய யாப்புகளும், இயல் சிறப்புகளும் நிறைந்து காணப்பட்டாலும், இசையின் தன்மையே (இசையியலே) மேலோங்கி இருப்பதை உணரலாம்.

**'நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பும் ஞானசம்பந்தன்**
**'நல்லிசை ஞானசம்பந்தரும்**

என்பது சுந்தரர் வாக்கு.

**கானத்தின் ஏழுபிறப்பின்**
**கழலடி போற்றி வணங்கி**

நிறைவு செய்கிறேன்.

# 70. திருச்செங்காட்டங்குடி பதிகத்தில் கருப்பொருள்

வெ. முத்துராமன், மதுரை.

திருச்செங்காட்டங்குடி தலமானது நன்னிலம் இருப்பூர்தி நிலையத்திலிருந்து ஆறுகல் தொலைவு வழியில் திருப்புகலூர், இராமனதீச்சரம், திருக்கண்ணபுரம் (திருமால் தலம்) உள்ளன. சிறுத்தொண்ட நாயனார் பிள்ளைக் கறி அளித்த அற்புதத் தலம். இத்தலத்தில் பாடப்பட்ட பாடல்களில் தொல்காப்பியர் கூறிய கருப்பொருள் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. அவை முறையே புன்னைமரம், கடற்கரைச்சோலை, புன்னைப்பறவை, அன்னப்பறவை, குளம், பொய்கை, இளநாரை, மீன், சிறுகுருகு (உள்ளான் பறவை), கெண்டைமீன், குருகு (மடநாரை) தேன், பண் முதலியவைகள் காணப்படுகின்றன. இவற்றில் கருப்பொருளில் ஒன்றான பறவைகளைச் சம்பந்தர் தம் பாடலில் எவ்வாறு கையாண்டுள்ளார் என்பதை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**கருப்பொருள்**

"தெய்வம் உணாவே மாமரம் புட்பறை
செய்தி யாழின் பகுதியொடு
அவ்வகை பிறவும் கருவென மொழிப"

(தொல்-பொருள்-அகத்)

தெய்வம், உணவு, விலங்கு, மரம், பறவை, பறை என்னும் முழுங்குக் கருவி, தொழில், பண் (இசை) முதலியனவும், அத்தன்மைய பிறவும் கருப்பொருள் என்று கூறுவர்.

**தொல்காப்பியர் கூறும் கருப்பொருளில் பறவையினங்கள்**

| | | |
|---|---|---|
| முல்லை நிலம் | - | கானாங்கோழி |
| குறிஞ்சி நிலம் | - | மயில், கிளி |
| பாலை நிலம் | - | எருவையும், பருந்தும், கழுகும் |
| மருதம் நிலம் | - | அன்னம், அன்றில், நாரை, நீர்கோழி, குருகு |
| நெய்தல் நிலம் | - | கடற்காக்கை |

## திருச்செங்காட்டுப் பதிகத்தில் பறவைகள்

இப்பதிகத்தில் பறவைகள் பற்றிய செய்திகள் கூறுமிடத்து,

**"பைங்கோட்டு மலர்ப் புன்னை பறவைகள் பயப்பூரச்**
**சங்காட்டந் தவிர்த்து எனைத் தவிரா நோய் தந்தான்"**

(3-21-1)

பசுமையான கிளைகளையும், முத்துப்போன்ற மொட்டுக்களையும் உடைய புன்னைமரக்கிளைகளில் உள்ள பறவைகளே! திருச்செங்காட்டங்குடியில் வீற்றிருக்கும் சிவபெருமான், என்னைத் தீராத் துயரில் ஆட்படுத்தி யுள்ளான். அதனால் அவனிடம் சென்று என் நிலையைச் சொல்.

இப்பாடலில் புன்னைப்பறவையை நெய்தற் திணைக்குரிய கருப்பொருளாக (பறவையாகக்) கையாண்டுள்ளார்.

**"பொன்னம் பூங்கழிக்கானல் புணர்துணை யோருடன்**
**அன்னங்காள் அன்றில்காள் கணபதீச்சரம் மேயவாழும்**
**இன்னமுதன் இணையடிக்கீழ் எனதல்லல் உரையீரே"**

(3-21-2)

பூக்களால் பொலிவுபெற்ற திருச்செங்காட்டுக் கடற்கரைச் சோலையில் தன் பெடையோடு பிரியாது இணைந்து வாழும் அன்றில் பறவைகளே, அன்னப்பறவைகளே! கரும்பினும் இனியனுமாகிய கங்கையைத் தலையில் சூடியவனுக்கு நான் படும் துன்பத்தை உரைப்பாயோ?

**"குட்டத்தும் குழிக்கரையும் குளிர்பொய்கைத் தடத்தகத்தும்**
**இட்டத்தால் இரைதேடும் இருஞ்சிறகின் மடநாராய்**
**சிட்டான் சீர்சிறு தொண்டன் செங்காட்டங் குடிமேய**
**வட்டவார் சடையார்க்கு என் வருத்தம் சென்றுரையாயே"**

(3-21-3)

தண்ணீர் நிறைந்து காணப்படும் இடத்திலும் சிறு பள்ளங்களில் காணப்படும் நீரினிடத்தும், சோலையில் காணப்படும் பொய்கை யிடத்தும், வயல் வெளிகளில் காணப்படும் நீர்களினிடத்தும் விருப்பம் போல இரைதேடும் நாரையே! செங்காட்டங்குடியில் உறைந்துள்ள இறைவனிடத்து என் வருத்தத்தைக் கூறு.

இப்பாடலில் நாரையே மருத நிலத்துக் கருப்பொருளாகச் சம்பந்தர் கையாண்டுள்ளார்.

**"கானருகும் வயலருகும் கழியருகும் கடலருகும்**
**மீனிரிய வருபுனலினல் இரைசேர்வெண் மடநாராய்**
**தேனமர் தார்ச்சிறுத் தொண்டன் செங்காட்டங் குடிமேய**
**வானமரும் சடையர்க்கு என் வருத்தம் சென்றுரையாயே"**

(3-21-4)

கடற்கரைச் சோலையிலும், வயல்வெளியிலும், கழியருகிலும், கடலருகிலும் இரை தேடும் நாரைகளே ஒவ்வொருவரும் தனித்தனியாக இறைவனிடம் சென்று என் வருத்தத்தைக் கூறுவாயோ.

இப்பாடலில் நாரையே மருத நிலத்துக் கருப்பொருளாகவும், நெய்தற்நிலத்துக் கருப்பொருளாகவும் கையாண்டுள்ளார். இக்கருத்து தொல்காப்பிய இலக்கண நூலில்

**"உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே"**

(தொல் - பொருள்)

எனக் கூறுவதன் மூலம் சம்பந்தர் பாடலில் உரிப்பொருள் அல்லாத கருப்பொருள் பிற நிலத்து மயங்கி வருதலை அறிய முடிகிறது.

**"ஆரலாஞ் சுறவமேய்ந் தகன்கழனி சிறகுலர்த்தும்**
**பாரல் வாய்ச் சிறுகுருகே பியிறூவி மடநாராய்**
**சீருலாஞ் சிறுத்தொண்டன் செங்காட்டங்குடியே**
**நீருலாஞ் சடையார்க்கென் நிலைமைசென் றுரையீரே"**

(3-21-5)

ஆரல்மீன், சுறாமீன் இவற்றை இரையாக உட்கொண்ட உள்ளானே, நாரையே என்னுடைய நிலையை அவனுக்கு எடுத்துரைப்பாயாக.

இப்பாடலில் உள்ளான், நாரையே நெய்தற் நிலத்திற்குரிய கருப்பொருளாகச் சம்பந்தர் கையாண்டுள்ளார்.

**"குறைக்கொண்டார் இடர்தீர்த்தல் கடன்அன்றே குளிர்பொய்கைத்**
**துறைக் கெண்டை கவற்குருகே துணை பிரியா மடநாராய்**
**பெருமான்சீர் அருள் ஒருநாள் பெறலாமே"** (3-21-6)

குருகே, நாரையே துன்புற்றவர் இடர்தீர்த்தல் பிறர் கடமையல்லவா? எனவே எனக்காக இறைவனிடத்துச் சென்று சீரருளைப் பெற உதவுவாயா?

முன்னரே ஒரு பாடலில் (3-21-4) கூறியது போன்று இப்பாடலிலும் குருகு நாரையே நெய்தற் திணைக்குரிய கருப்பொருளாகச் சம்பந்தர் கையாண்டுள்ளார்.

**"கருவடிய பசுங்கால்வெண் குருகே யொண்கழி நாராய்**
**ஒருவடியா விரந்தாளென் றொருநாட்சென் றுரையீரே**
**செறுவடி தோட்சிறுத் தொண்டன் செங்காட்டங்குடியே**
**பேராளன் பெருமான்ற னருறொருநாட் பெறலாமே"**

(3-21-7)

வெண்குருகே, கழிநாராயே உன் அன்புக்காக ஏங்கித் தவிக்கும் ஒரு அடியான் உள்ளான் என ஒருநாளேனும் சென்று சொல்லேன்.

இப்பாடலில் குருகு, நாரையே நெய்தற் திணைக்குரிய கருப் பொருளாகச் சம்பந்தர் கையாண்டுள்ளார்.

**"கூரார விரைத்தேர்ந்து குளமுலவி வயல்வாழும்**
**தாராவே மடநாராய் தமியேற்கொண் றுரையீரே**
**சீராளன் சிறுத்தொண்டன் செங்காட்டங் குடிமேய**
**பேராளன் பெருமான்ற னருளொருநாட் பெறலாமே"**

(3-21-8)

தாராவே, மடநாராயே எனக்கு ஒரு உதவி செய். அவன் அருள் பெற எனக்காகத் தூது செல்.

இப்பாடலில், நெய்தற் நிலத்திற்குரிய கருப்பொருளான தாரா, மடநாரை முதலியவற்றை மருத நிலத்துக்கும் கருப்பொருளாகக் கையாண்டுள்ளார். இது தொல்காப்பியர் கூறிய திணை மயக்கத்திற்கு உட்படுகிறது.

**"நறப்பொலிபூங் கழிக்கான னவில்குருகே யுலகெல்லாம்**
**அறப்பலி தேர்ந் துழல் வார்க்கென் னலர் கோடலழகியதே**
**சிறப்புலவான் சிறுத்தொண்டன் செங்காட்டங் குடிமேய**
**பிறப்பிலிபேர் பிதற்றிநின் நிழக்கோவெம் பெரு நலமே"**

(3-21-9)

குருகே, உலகுக்கு எல்லாம் அறச்செயல் செய்யும் செங்காட்டங்குடியில் உரைந்துள்ள சிவனிடம், என்னைப் பற்றி எழும்பிய அலர் தூற்ற நின்ற பழியை கேட்பது அழகியதோ? அவன் பெயரையே நாளும் புலம்பி என் பெருநலமனைத்தும் அழிவதுதானா என் நிலைமை? இறைவனிடத்துச் சென்று கூறு.

இப்பாடலில், நெய்தற் திணைக்குரிய கருப்பொருளாகக் 'குருகை' சம்பந்தர் கையாண்டுள்ளார்.

இத்திருச்செங்காட்டங்குடி பதிகத்தில் இறைவனின் அருளைப் பெறும் பொருட்டுத் தூதுப்பொருளாகக் கருப்பொருளைக் (பறவையினங் களை) கையாண்டுள்ளார். மேலும், இவர் இப்பதிகத்தில் பெரும்பான்மை நெய்தற் திணையையும், சிறுபான்மை மருதத் திணையும் கையாளு வதற்கு உரிப்பொருள் ஒரு காரணமாகிறது. அடுத்து, நெய்தற் திணைக் குரிய கருப்பொருள், மருதத் திணையில் மயங்கி வருதலையும் இப்பதிகத்தில் காணமுடிகிறது.

# 71. சம்பந்தரும் ரபீந்திரநாத் டாகுரும்

சொ. முத்தையா, சாந்திநிகேதன்.

**கங்கையும் காவிரியும்**

கங்கையும் காவிரியும் நம் பாரதத் திருநாட்டின் புனித நதி களாகும். கங்கை நதி வங்கநாட்டை வளப்படுத்துகிறது. காவிரி நதி தமிழகத்தை வளப்படுத்துகிறது; செந்நெற் களஞ்சியமாகச் செழிக்கச் செய்கிறது. இந்த இருபெரும் நதிக் கரைகளிலும் தோன்றிய நாகரிகங்கள் பழமையும், பண்பாட்டுச் சிறப்பும் மிக்கவை. இந்த இரு நதிக்கரை களிலும் வாழ்ந்த மக்கள் நிறைந்த சிந்தனைகளையும், நிலைத்த படைப்புக் களையும் இந்த நதிகளைப் போலவே வற்றாது வழங்கி வந்திருக் கிறார்கள். வடநாட்டில் பிறந்து வங்க மாநிலத்தைச் செழிக்கச் செய்து ஓயாது பாயும் கங்கையும், தென்னாட்டில் பிறந்து தமிழ் நிலத்தைச் செழிக்கச் செய்யும் காவிரியும் இறுதியில் பாரதம் முழுமைக்கும் சொந்தமான வங்காள விரிகுடாக் கடலில் சென்று கலக்கின்றன. இந்த இருபெரும் நதிகளைப் போலவே இரண்டு பெருங்கவிஞர்கள் பாரத மண்ணில் வெவ்வேறு நூற்றாண்டில் தோன்றி வாழ்ந்து மறைந்தார்கள். ஒருவர் திருஞானசம்பந்தர்; மற்றொருவர் ரபீந்திரநாத் டாகுர். 'செப்பு மொழி பதினெட்டுடையாள் எனினும் சிந்தனை ஒன்றுடையாளான' பாரதத் தாய்க்கு இருவரும் தவப்புதல்வர்கள். இறைவனை ஏற்றிப் போற்றுவதில் ஓரணியில் நின்றவர்கள். இணையற்ற இந்திய இலக்கிய மாமேதைகள். சிறந்த சிந்தனையாளர்கள்.

**சம்பந்தரும் டாகுரும்**

தமிழ் இலக்கிய வரலாற்றில் பக்திப் பாடல்களுக்குத் தனியானதோர் இடமுண்டு. அவற்றுள் திருஞானசம்பந்தரின் பாடல்களுக்குச் சிறப்பானதோர் இடமுண்டு. இதே போன்று வங்க இலக்கிய வரலாற்றில் பக்திப் பாடல் களுக்குத் தனியானதோர் இடமுண்டு. அவற்றுள் ரபீந்திரநாத் டாகுர் பாடல்களுக்குச் சிறப்பானதோர் இடமுண்டு. திருஞானசம்பந்தர் தமிழ் நாட்டில் தோன்றினார். ரபிந்திரநாத் டாகுர் வங்காளத்தில் தோன்றினார். சம்பந்தர் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டிருக்க, டாகுர் வங்க மொழியைத் தாய்மொழியாகக் கொண்டவர். சம்பந்தர் சீகாழியில் சிவபாத இருதயருக்கும் பகவதியம்மையாருக்கும், சித்திரைத் திருவாதிரைத் திருநாளில் மகவாய்த் தோன்றினார். டாகுர் மேற்கு வங்காளத்தில் -

கல்கத்தாவில் தந்தையார் மகரிஷி தேவேந்திரநாத் டாகுருக்கும், தாயார் சாரதா தேவியாருக்கும் பிறந்த குழந்தைகளில் 14-ஆம் குழந்தையாகவும், 8-ஆம் மகனாகவும் பிறந்தார். 7.5.1861-இல் பிறந்த இவர் 7.8.1941-இல் தன் 80-ஆம் வயதில் மறைந்தார்.

'பிள்ளை பாதி; புராணம் பாதி' என்று சொல்லும் அளவுக்குச் சம்பந்தரின் வரலாற்றை எடுத்தோதுகிறது பெரியபுராணம். நம்பியாண்டார் நம்பி, சேக்கிழார், சம்பந்தர், தாயுமானவர், குமரகுருபர அடிகள் போன்றோரின் படைப்புக்களால் சம்பந்தரின் வாழ்க்கை வரலாற்றை ஓரளவு அறிந்து கொள்ள முடிகிறது. விரிவான, விளக்கமான அளவில் அவர் வரலாறு அறியுமாறில்லை. டாகுர் 'இளமைக்காலம்' ('சேலோர் பேவர்') என்ற தலைப்பில் நூலே எழுதியுள்ளார். அதுமட்டுமல்ல அவர் வரலாற்றை விரிவாகவும், விளக்கமாகவும் பிறர் எழுதியுள்ளனர். இன்றும் அவர் வாழ்வில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை வகுத்தும் தொகுத்தும் நுணுகி ஆராய்ந்து எழுதிக்கொண்டும் வருகின்றனர். இந்த வகையில் டாகுரின் வாழ்க்கை வரலாறு மிகத் தெளிவாக அறியக் கூடிய நிலையில் நூல்கள் அமைந்து காணப்படுகின்றன. இருவரும் கருவிலே திருவுடையவர் களாக விளங்கினார்கள். இருவரும் இளமையிலேயே கவிபாடும் ஆற்றல் பெற்றவர்களாகத் திகழ்ந்தார்கள். சம்பந்தர் மூன்று வயதிலே பாடத் தொடங்கினார். முதலில் பாடிய பதிகம் 'தோடுடைய செவியன்' என்ற பதிகம். டாகுர் பன்னிரண்டு வயதில் பாடத்தொடங்கினார். 'அபிலாஷை' ('விருப்பம்') என்பது இளமையில் அவர் பாடிய பாடல்களில் ஒன்று. அப்பாடல் பத்திரிகையில் 1873-இல் வெளி வந்தது. அதுமட்டுமல்ல 'பிருதிவிராஜன் தோல்வி' என்ற பெயரில் ஒரு நாடகத்தையும் இளமையிலே எழுதினார். இருவர்தம் படைப்புக் களுக்கும் எழுதப்பட்ட உரைகளின் படையெடுப்புக்கள் ஏராளம். இருவரும் இனிய இலக்கியங்கள் பல படைத்தனர். ஆயின் டாகுரோ கவிதைகள் மட்டுமின்றி நாடகங்கள், சிறுகதைகள், புதினங்கள், உரை நடைகள், தத்துவக் கட்டுரைகள், வரலாற்றுக் கட்டுரைகள், பயண இலக்கியங்கள், கடித இலக்கியங்கள், ஆய்வுக் கட்டுரைகள், நகைச்சுவைச் செய்திகள், சமயக் கட்டுரைகள், சமுதாயச் சிந்தனை பற்றிய கட்டுரைகள் ஆகிய பலதுறைகளிலும் தன் முத்திரையைப் பதித்தார். இவை போதாதென்று தமது 70-வது வயதில் முழுக்கவனத்தையும் செலவிட்டு ஓவியர் ஆனார். அதிலும் தனிப்பாணி ஏற்படுத்திக் கொண்டு புகழ் பெற்றார்.

சமண, பௌத்த மதங்கள் அரசியல் செல்வாக்குப் பெற்றிருந்த காலத்தில் வாழ்ந்தவர் சம்பந்தர். இந்திய நாடே ஆங்கில ஆட்சிக்குட் பட்டிருந்த காலத்தில் வாழ்ந்தவர் டாகுர். தமிழ் யாப்பு வரலாற்றிலும்

சில புதுமைகளைச் செய்தவர் சம்பந்தர். இவர் பாவியற்றுவதில் முழு உரிமை பெற்றவராய் விருத்தப்பாவில் பல புதிய வகைகளைக் கண்டுள்ளார். இவரைத் தொடர்ந்த சமயக் குரவர்களும் பழைய பாவகைகளைக் கைவிட்டுப் புதிய விருத்தங்களையே தேர்ந்தெடுத்தனர். இதே போன்று டாகுரும் யாப்பு வரலாற்றில், மாறுபாடு செய்தார். நாட்டுப்புறப் பாடல்களின் வடிவங்களையும், மெட்டுக்களையும் கிரகித்துக் கொண்டு பல புதிய கவிதைகளைப் புனைந்தார். புதிதாகப் புதுக்கவிதைகளை யாத்து யாப்பு வரலாற்றில் புதுமையைப் புதுக்கியவர். இருவரும் தத்தம் தாய்மொழிப்பற்றில் திளைத்தவர்கள். இருவரும் இறைவனை ஏற்றிப் போற்றுவதில் ஓரணியில் நின்றவர்கள். எனினும் அந்த இறைவனைச் சுட்டிக் காட்டுவதில் வேறுபட்டு நின்றவர்கள். ஆளுடைய பிள்ளையார் ஒவ்வொரு பதிகத்திலும் ஒன்பதாம் பாட்டில், திருமாலும், பிரமனும் சிவனின் அடிமுடியைத் தேடியுங்காண முடியாமற் போனதாக வரும் புராணக் கதைகளைப் பற்றிய குறிப்புத் தருவர். சிவன் மும்மூர்த்திகளில் ஏனைய இருவரிலும் உயர்ந்தவரென்பதை இங்கே சம்பந்தர் (77.9; 213.3; 281.5) காட்டுகிறார். 'இறைவனைக் காணாத கண் என்ன கண்ணே, ஏத்தாத நாவென்ன நாவே, கேளாத செவியென்ன செவியே!' என இளங்கோவடிகள் கேட்பது போலச் (சிலம்பு. 17.35, 36, 37) சம்பந்தரும் ஆமாத்தூர் அம்மானை விளித்துக் கேட்கிறார் (180. 4, 8, 7). இதனுடன் அமையாது கவுந்தி அடிகள் கூறியது போன்று (சிலம்பு. 10. 197, 199) சிவபிரானைத் தவிர, பிற தெய்வங்களை என் நா போற்றாது, பாடாது, பாராட்டாது என்ற முறையிலும் பேசுகின்றார் ஞானசம்பந்தர். (262. 4, 9). டாகுரோ 'அங்கிங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாய்' விளங்கும் உருவமில்லா இறைவனையே சுட்டிக் காட்டுவார். காரணம் டாகுர் பிரம்ம சமாஜத்தைச் சார்ந்தவர். பிரம்மம் என்பது பிரம்மா அல்ல, விஷ்ணு அல்ல, சிவன் அல்ல, இவர்கள் அனைவரையும் கடந்த உருவம் இல்லாத ஆதிமுலமே பிரம்மம். அந்த உருவமில்லா இறைவனையே தெளிவாகக் கீதாஞ்சலியில் (96) சுட்டிக் காட்டுகிறார்.

''பிஸ்ஸருபேர் கேலாகரே
கொத் தொஇ கேலாம் கேலே
அபருப்கே தேக்கே கேலாம்
துட்டி நயர் மேலே''

என்பது பாடல்.

''கணக்கற்ற உருவங்கள் களியாட்டம்
ஆடும் இவ்விளையாட்டரங்கிலே
எனது விளையாட்டு முடிந்து விட்டது.

இங்குதான் உருவமே இல்லாத
அந்தப் பரம் பொருளின்
காட்சியைக் கண்டு கொண்டேன்''

என்பது மேலைப் பாடலின் பொருள்.

இருவரும் அந்தணர் குடும்பத்தில் தோன்றியவர்கள். இறைவன் 'தோடுடைய சிவனாய்' (அர்த்தநாரி ஈசுவரனாய்) இருக்கும் கோலத்தைச் சுட்டிக் காட்டி, இந்த 'மண்ணில் நல்லவண்ணம் வாழலாம்' என்ற ஆர்வத்தை ஊட்டி, பிறகு நல்ல கதி அடைவதற்கு எவ்வகையான குறையும் இல்லை என்று நம்பிக்கை தந்ததோடு மட்டுமின்றி திருமணமும் செய்து கொண்டவர் சம்பந்தர். சம்பந்தர் 16 வயதில் (ஔவை, துரைச்சாமி, சைவ இலக்கியவரலாறு, ப.59) திருநல்லூர்ப் பெருமணத்தில் இறைச் சோதியொடு, திருமணக்கோலத்தில் கலந்ததாகக் கூறுவர். டாகுர் தமது 22 வயதில் மிருநளினி தேவியாரை (9. 12. 1883) மணந்து கொண்டார். நிறைவாழ்வு வாழ்ந்து தமது 80-வது வயதில் இறைவனோடு கலந்தார். உலக இன்பங்களை நுகர்ந்தவாறே இறைவனிடத்தில் பக்தி செலுத்தலாம் என்ற உண்மையை இருவர் பாடல்களும் எடுத்துரைக்கின்றன. இருவரும் அழகை ஆராதித்தவர்கள். அந்த அழகிலும் இறைவனைக் கண்டு ஏற்றிப் போற்றியவர்கள். இருவரும் நாயகன் நாயகி பாவத்தைத் தம் பாடல்களில் கையாண்டவர்கள். தமிழ்நாட்டின் ஒருமைப்பாட்டுக்கு வித்திட்டவர் சம்பந்தர். இந்திய நாட்டின் ஒருமைப்பாட்டுக்கு ஏன் உலகத்தின் ஒருமைப்பாட்டுக்கே பாடுபட்டவர் டாகுர். சம்பந்தர் தமிழ்நாடு முழுவதும் சுற்றுப்பயணம் செய்தார். 13 ஆண்டுகளில் சம்பந்தர் 6 **முறைகள்** தம் ஊரிலிருந்து புறப்பட்டு ஏறத்தாழ 220 திருப்பதிகளுக்குச் சென்று பதிகங்கள் பாடி வந்துள்ளதாக முத்திருமுறைகளிலிருந்து அறிய முடிகிறது (ஔவை, துரைச்சாமி, மேற்படி நூல், ப. 64). டாகுரும் போக்குவரத்து வசதியற்ற அக்காலத்தில் இந்திய நாடு மட்டுமின்றி கிட்டத்தட்ட 13 **முறைகள்** வெளிநாடுகளும் சென்று வந்தார் என்பதை அவர் வாழ்க்கை வரலாற்று நூல்கள் தெரிவிக்கின்றன; சமண, பௌத்தர் பற்றிய சம்பந்தர் குறிப்புக்களில் (72.10; 197.10; 234.10; 289.10) மிகுந்த காழ்ப்புணர்ச்சிக் காணப்படுகிறது. பெரும்பான்மையும் பிள்ளையார் எல்லாப் பதிகங்களிலும் பத்தாம் பாட்டில் சமண, பௌத்தர்களை இழித்துக் கூறுகிறார். ஆயின் டாகுர் எச்சமயத்தினரையும் போற்றுபவராகவே காணப்படுகிறார். எம்மதமும் சம்மதம் என்பதே அவர் கொள்கை.

தற்காலத்தில் கட்சிகள் அரசாட்சியைப் பற்ற முயல்வது போன்று முடியரசுக் காலத்தில் சமய வாதிகள் மன்னனைப் பற்ற முயன்றார்கள். சமயப் போராட்டக் காலமாக இடைக்காலம் அமைந்திருந்தது[1]. இக்காலத்தின் வளர்ச்சியே சிந்தாமணி தோன்றினால் பெரியபுராணம் தோன்றும்

நிலையை ஏற்படுத்திற்று. இந்தச் சூழலில், பல்லவ ஆட்சிக் காலத்தில் சமணர்களுக்கு அரசனிடம் மிகுந்த செல்வாக்கு இருந்தது. அரசன் எச்சமயத்தைச் சார்ந்தவனாக இருக்கிறானோ அச்சமயம் சமுதாயத்தில் செல்வாக்குப் பெற்றிருப்பதையும், அச்சமயத்தை எதிர்ப்போர் படும் அல்லல்களையும் நாவுக்கரசர் வாழ்க்கை நமக்குத் தெளிவுபடுத்துகிறது. பாண்டி நாட்டிலும் இந்த நிலை இருந்தது. இந்நிலையில் நின்றசீர் நெடுமாறன் என்ற பாண்டியனைச் சமண சமயத்திலிருந்து சைவ சமயத்திற்கு மாற்றினார் சம்பந்தர். இந்நிகழ்ச்சியில் சம்பந்தர் தன்னை அரசியலில் ஈடுபடுத்திக் கொண்டார். அரசியல் செல்வாக்குச் சம்பந்தருக்கும், சைவ சமயத்திற்கும் கிட்டியது. அதனால் சமணர் களை அனல், புனல் வாதங்களில் சம்பந்தர் வென்றார். ஆயின் டாகுர் தன்னை அரசியலில் ஈடுபடுத்திக் கொண்டபோது கருத்து வேறுபாடுகள் எழுந்தன. அதனால் டாகுர் அரசியலிருந்து மெல்ல விலகிக்கொண்டார்.

சாதிவேறுபாடு, தீண்டாமை முதலிய மூடநம்பிக்கைகளை அறவே வெறுத்தார் சம்பந்தர், அவர் பிராமணர் குடும்பத்தைச் சார்ந்தவராக இருந்தும், தம் பாடல்களுக்கு யாழ் இசைப்பதிற்காகத் தீண்டாக் குடும்பத்தைச் சார்ந்த திருநீலகண்டர் என்பவரைத் தம்முடன் தலங்களுக்கு அழைத்துச் சென்றார். பிராமணர்களின் தெருக்களுக்கும், வீடுகளுக்கும் அழைத்துச் சென்றார், அந்தத் தீண்டாதவர் உள்ளே வருவதனால், பிராமணர் வளர்க்கும் வேள்வித் தீ அவிந்து குற்றம் ஏற்படுமோ என்று பலர் அஞ்சியபோது அஞ்சாமல் அந்த வேள்வித் தீயின் அருகே அவரை அழைத்துச் சென்று, தீ முன்னிலும் நன்றாகச் சுடர்விட்டு ஒளிர்வதை மற்றவர்கள் காணச் செய்தார். சம்பந்தரைப் போலவே டாகுரும் சாதிவேறுபாடு, தீண்டாமை முதலிய மூடநம்பிக்கைகளை முற்றிலும் வெறுத்தார்.

ஒவ்வொரு நாயன்மாரும் தமிழ்ச் சைவத்திற்குத் தங்களுடைய முக்கியமான பங்கையளித் திருக்கிறார்கள் என்றாலும், சம்பந்தர் தமிழ்ச் சைவத்தை உருவாக்கவும், வளர்க்கவும், மக்கள் மத்தியில் செல்வாக்குப் பெறவும் செய்த பணிகள் எவ்வகையாலும் ஒப்புமை கூற முடியாத அளவுக்குச் சிறப்பானவை. இதே போன்று பிரம்மசமாஜ் சமயத்திற்கு டாகுரின் பாட்டனாரும், தந்தையாரும் தங்களுடைய முக்கியமான பங்கையளித் திருக்கிறார்கள் என்றாலும், டாகுர் பிரம்ம சமாஜத்தை மேலும் உருவாக்கவும், வளர்க்கவும், மக்கள் மத்தியில் செல்வாக்குப் பெறவும் செய்த பணிகள் எவ்வகையாலும் ஒப்புமை கூறமுடியாத அளவுக்குச் சிறப்பானவை.

சைவ சமயத்தின் அருமை பெருமைகளை விளக்கப் பல அற்புதங்கள் நிகழ்த்திக் காட்டினார் சம்பந்தர் (சம்பந்தர் தேவாரம் 280; 44; 429; 154; 173; 309; 202; 371; 264; 54; 183) பிரம்ம சமாஜத்தின் அருமை

பெருமைகளை விளக்க டாகுர் ஏதும் அற்புதங்கள் நிகழ்த்தியதாகத் தெரியவில்லை.

சம்பந்தர் பாடல்களைக் குறிப்பிட்ட ஒரு பண்ணில் பாடியிருக்கிறார் என்பதும், அப்பாடல்கள் எப்போதும் அப்பண்ணிலேயே பாடப்பட வேண்டும் என்பதும் தமிழ் (ச்சைவ) மரபு. தேவாரங்களைப் பொறுத்தவரை அவைகளுடைய சொற்கோவைகளும் அவைகளுக்கான பண்களும் மிக முக்கியமானவை. அவற்றின் சொற்களையோ, பண்களையோ மாற்றுவது கூடாது என்ற நிலையிலேயே இன்றும் பேணப்பட்டு வருகின்றன. இதே போன்று டாகுரால் இயற்றப்பட்ட பாடல்கள் அவராலேயே பண் அமைக்கப்பட்டு அப்பாடல்கள் எப்போதும் அப்பண்ணிலேயே பாடப்பட வேண்டும் என்பது வங்க (ரபீந்திர) சங்கீத் மரபு. டாகுரால் இயற்றப்பட்ட பாடல்களின் சொற்களையோ, பண்களையோ மாற்றுவது கூடாது என்ற நிலையிலேயே இன்றும் பேணப்பட்டு வருகின்றன.

வடமொழியும் அறிந்தவர் ஞானசம்பந்தர். ஆயின் அம்மொழியை அவர் பயன்படுத்தியதாகத் தெரியவில்லை. தமிழிலேயே தம் கருத்துக் களைப் பரிமாறியவர். டாகுரோ வங்கமொழி தவிர வேறுபல மொழி களிலும் வல்லவராகத் திகழ்ந்தார். அதனால் அவரால் மொழியாக்கமும் செய்யமுடிந்தது.

சம்பந்தர் திருக்கோலக்கா இறைவனிடமிருந்து பொற்றாளம் (23) பெற்றார். திருவீழிமிழலையில் 'படிக்காசு' (92) பெற்றார். முத்துப் பந்தரும் (331) பெற்றார். டாகுரும் வாழ்நாளில் பல்வேறு பரிசுகளும் பட்டங்களும் பெற்றார்.

'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன்' என்று போற்றப்பட்டவர் சம்பந்தர். 'ரபீந்திர சங்கீத்' என்னும் இசையால் இசை பரப்பியவர் டாகுர். முதல் திருமுறை 8 பண்களிலும், இரண்டாம் திருமுறை 6 பண்களிலும், மூன்றாம் திருமுறை 9 பண்களிலும் பாடப் பட்டுள்ளன. ஆக, சம்பந்தர் 23 பண்களில் பாடியுள்ளார். அவற்றுள், 'இந்தளம்' என்ற பண்ணில்தான் 39 பதிகங்கள் பாடப்பட்டுள்ளன. டாகுர் ஏறத்தாழ 2500 இசைப் பாடல்களைப் பாடியுள்ளார். இப்பாடல்களுக்கு 'ரபீந்திர சங்கீத்' என்று பெயர். வடஇந்திய இசைகளான இந்துஸ்தான், கருநாடக சங்கீதம், தேஸஜ் போன்றவற்றையும், ஐரோப்பிய இசையையும் கலந்து புதுமையான ராகங்களை உருவாக்கிப் பாடப்பட்டதே 'ரபீந்திர சங்கீத்' என்பது. இவர் இயற்றிய இசைப்பாடல்களில் பெரும்பான்மையான பாடல்கள் துருபதி இசைகளை அடிப்படையாகக் கொண்டு புதிய புதிய ராகங்களை உருவாக்கிப் பாடப்பட்டவை. இவருடைய கீதிப் பாடல்களை வழிபாட்டுப் பாடல்கள் (பஜாகீதி), காதல் பாடல்கள்

(பிரேம் கீதி), இயற்கைப் பாடல்கள் (பிரகிருதிகீதி), தேசப்பக்திப் பாடல்கள் (தேஸ் பிரேம் கீதி) எனப் பலவகைகளாகப் பிரிக்கலாம். வழிபாட்டுப் பாடல்கள் 'துருபதி', 'பாவுல்' இசைகளை அடிப்படை யாகக் கொண்டவை. காதல் பாடல்களும், தேசப்பக்திப் பாடல்களுள் சிலவும் 'டப்பா' எனப்படும் ஒருவகை இசை வகையிலிருந்து பெறப் பட்டவை. நமது இந்திய நாட்டின் தேசிய கீதம் 'துருபதி' இசை வகையை அடிப்படையாகக் கொண்டு குழுவாக நின்று பாடும் இசை வகையில் அமைக்கப்பட்டது. இவருடைய கீதிப்பாடல்கள் அனைத்துமே பாடுவதற்கும், ஆடுவதற்கும் ஏற்ற வகையில் அமைந்து காணப்படுகின்றன. இவ்வாறு ஒரு சில ஒற்றுமை, வேற்றுமைக் கூறுகள் இருவரிடையேயும் காணப்படுகின்றன.

சம்பந்தரும், டாகுரும் காலத்தாலும், இடத்தாலும், மொழியாலும், பண்பாட்டாலும் வேறுபட்டுக் காணப்படினும் கூறுகின்ற கருத்தால் ஒன்றுபட்டுக் காணப்படுகின்றனர். சம்பந்தரின் கருத்து டாகுரின் கருத்தில் எதிரொலிக்கிறது. இருவேறுபட்ட மொழிகளில் காணப்படும் கருத்து ஒற்றுமைகளைச் சுட்டிக் காட்டுவதே இவ்வாய்வுக் கட்டுரையின் நோக்கம்.

## தாய்மொழிப்பற்று

''அயர்லாந்து வேண்டுமா அல்லது காலிக் மொழி வேண்டுமா என்று என்னிடம் கேட்டால் நான் அயர்லாந்தை விட்டுவிடுவேன். காலிக் மொழிதான் வேண்டும் என்பேன்'' என்று கூறினார் அயர்லாந்து நாட்டின் விடுதலை வீரரும், மொழிப்பற்றுக் கொண்ட தலைவருமான டி. வேலரா அவர்கள். அவர் தாய்மொழியையும் விடவில்லை, தாய் நாட்டையும் விடவில்லை என்பது வரலாறு. எனினும் தாய்மொழியை மட்டும் பெரிதும் வற்புறுத்திக் கூறியதற்கான காரணம், நாடு இல்லை யென்றால் எங்காவது சென்று தேடிக்கொள்ளலாம்; ஆனால் மொழி இல்லையென்றால் அவ்வினமே அழிந்து போய்விடுமல்லவா? அந்த மக்கள் ஒன்று என்று காண ஆதாரமே இல்லாது போய்விடுமல்லவா? அதனால்தான் தாய்மொழியைக் காக்க விரும்பினார் அத்தகைமையாளர். எந்த மொழியாயினும் அம்மொழியைத் தாய்மொழியாக உடையவர்களுக்கு அது மிகமிக உயர்ந்ததுதான். உயிரினும் இனியதுதான்.

மொழிப்பற்று எனக் குறிப்பிடுவது தாய்மொழிப்பற்றே ஆகும். நம் மழலைப் பருவம் முதல் உணர்வோடு உணர்வாய் இயற்கையில் வருவது தாய்மொழியே. உள்ளக் கருத்தை வெளியிட ஒருவருக்குக் கருவியாய் அமைவது தாய்மொழியே ஆகும். ஒரு மொழியைத் தாய்மொழியாகக் கொண்ட இனம் அந்த மொழியின் வளர்ச்சியில்

வாழ்வில் பற்று வைப்பதில் தவறில்லை. மொழியைத் தாய் என்று சொல்கிற மனிதன் அந்த மொழித்தாயிடத்தில் பற்றும் பாசமும் வைப்பது பொருத்தமே. இந்தத் தாய்மொழிப் பற்றாளர்களின் வரிசையில் குறிப்பிடத் தக்கவராகத் திருஞானசம்பந்தர் விளங்கினார். சம்பந்தர் காலத்தில் வேற்றுச் சமயத்தவரின் ஆளுகையில் தமிழகம் வாடி வதங்கிச் சுருண்டு கிடந்தது. இப்படிப்பட்ட காலத்தில்தான் சமயத்தோடு தமிழையும் போற்றிப் புரந்தார் சம்பந்தர். இப்படிப் பொருத்தமற்ற காலச் சூழலிலும் தமிழைப் போற்றிய தனிப்பெருமை அடிகளுக்கு உரியது.

திருஞானசம்பந்தரின் முத்திரைக்கவிகள் பலவற்றில் 'நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன்', 'தமிழ் ஞானசம்பந்தன்', சம்பந்தன் செய்த 'தமிழ்மாலை' என்றெல்லாம் தமிழுடன் தன்னை ஒன்று சேர்த்துக் கூறும் பண்பு காணப்படுகிறது. சம்பந்தர் தாய்மொழியாம் தமிழ்மொழி மீது தண்டாக் காதல் கொண்டவராக விளங்கினார் என்பதை இச்சொற்களாலும் 'தமிழாகரர்', 'தமிழாளி' என்ற சிறப்புப் பெயர்களாலும் அறிய முடிகின்றன.

பிற சமயவாதிகளை வென்றமைக்குக் காரணங்கள் பலவற்றுள் சம்பந்தர் தமிழ்மீது கொண்டிருந்த அளப்பரிய பற்றும் ஒன்று. அவர் தமிழுக்கு அடைகூறும் முறைகளிலேயே அவர் தமிழ்ப்பற்று வெளிப்படு கின்றது. அருந்தமிழ் (234. 11), ஆரா அருந்தமிழ் (89. 11), இசை மலி தமிழ் (22. 11), இன்தமிழ் (56. 11), இன்புறுந்தமிழ் (2. 4-11), உருவாரும் ஒண்டமிழ் (150. 11), உரைசெய் தமிழ் (341. 11), எழுதுமொழி தமிழ் (325-12), ஏரினார் தமிழ் (288. 11), ஏறு பல்பொருள் முத்தமிழ் (373. 11), ஒண்டமிழ் (224-11), ஒளிர் பூந்தமிழ் (194-11), கலைமலி தமிழ் (120-11), கலைமுத்தமிழ் (253. 10), குலமார் தமிழ் (153. 11), குலவேந்தர் செந்தமிழ் (193. 11), குற்றமில் செந்தமிழ் (113. 11), குன்றாத் தமிழ் (18. 11), சங்கமலி தமிழ் (332. 11), சந்தநிறை தண்டமிழ் (335-11), சீர் இன்புறுந்தமிழ் (214. 11), செந்தமிழ் (43. 11), செப்பரிய தண்டமிழ் (190. 11), செறிவண்டமிழ் (199. 11), சொல்லார் தமிழ் (31. 11), ஞாலமல்குந் தமிழ் (212. 11), ஞானத்தமிழ் (117. 12), தண்டமிழ் (81. 11), தலமார்தரு செந்தமிழ் (160. 11), தவமல்கு தமிழ் (112. 11), திருநெறிய தமிழ் (1. 11), துளங்கில் தமிழ் (13. 11), நலங்கொள் தமிழ் (14. 11), நற்றமிழ் (40. 11), நாடவல்ல தமிழ் (281. 11), மாடமலி தமிழ் (121. 11), பண்ணாருந் தமிழ் (323. 11), பண்ணியல் தமிழ் (309. 5), பண்ணுலாம் அருந்தமிழ் (348. 11), பண்பொலி செந்தமிழ் (184. 11), பரவிய தமிழ் (287. 11), பல்பொருள் முத்தமிழ் (383. 11), பலஓசைத் தமிழ் (11. 4), பாரின் மலிகின்ற புகழ் நின்ற தமிழ் (333. 11), புகழ் வண்டமிழ் (240. 11), பூந்தமிழ் (194.21), பேரியல் இன்தமிழ் (64. 11), மறைவளருந் தமிழ்

(203. 11), முடிவில் இன்தமிழ் (94. 11), விலையுடை அருந்தமிழ் (262. 11) என்று வானளாவத் தமிழைப் புகழ்ந்திருக்கிறார். சங்ககாலத் திற்குப் பிறகு முதன்முதலில் தமிழுக்குப் பலவகையான சிறப்பு அடை மொழிகள் அளித்துப் பெருமை சேர்த்தவர் திருஞானசம்பந்தப் பெருமானே என்பதில் அணுவளவும் ஐயமில்லை. தமிழில் இவருக்கு இருந்த அன்பு அளவிடற்கரியது என்பதைப் பார்க்கின்றோம்.

கடவுளைப் பாடிய தமது இலக்கியங்களில் தமிழைப் பாடித் தமது கடவுட்பற்றொடு தமிழ்ப்பற்றையும் வெளிப்படுத்தியவர் திருஞானசம்பந்தர் என்பதையும் அறிகின்றோம்.

திருஞானசம்பந்தரைப் போலவே ரபீந்திரநாத் டாகுரும் தாய்மொழிப் பற்று கொண்டவராகவே விளங்கினார். ''அந்த நாளில் தாய்மொழியையும், தாய் நாட்டின் மேலுள்ள பற்றையும் உதறி எறிவதுதான் படித்தவர் களுக்கு அழகு என்று ஓர் எண்ணம் இருந்து வந்தது. ஆனால் எங்கள் வீட்டில் என் தமையனார் முதற்கொண்டு அனைவரும் எப்போதும் தாய்மொழியிலேதான் பல தரப்பட்ட செய்திகளைப்பற்றி விவாதிப்போம். என் தந்தைக்குப் புதிதாகப் பழக்கமான ஒருவர் ஆங்கிலத்திலேயே கடிதம் எழுதியிருந்தார். உடனே அதைத் திருப்பி அனுப்பிவிட்டார் என தந்தை'' என்று டாகுர் குறிப்பிடுவதிலிருந்து அந்நாளில் டாகுர் குடும்பமே தாய்மொழியில் - வங்கமொழியில் பெரிதும் ஈடுபாடு கொண்டிருந்தவர்களாக வாழ்ந்தார்கள் என்பது தெரிய வருகிறது. ''மேல்நாட்டுப் படிப்பும் படித்துவிட்டுக் கிளிப்பிள்ளை போல் அந்த நாட்டார் சொல்வதையே திரும்பத் திரும்பச் சொல்லும்போது தெருவில் போகிறவர்கள் சற்றுநேரம் வியப்போடு நம்மைப் பார்ப்பார்கள். அவ்வளவுதான் இதனால் யாருக்கு என்ன லாபம்? நம்முடைய சொந்த மொழியில் நம் கலைகளைப்பற்றி அறிந்து பேசவும், எழுதவும் ஆற்றல் பெறவேண்டும். உலகம் நம்மிடம் இதைத்தான் எதிர்பார்க்கிறது. அப்போதுதான் உலகத்தில் நமக்கு மதிப்பு ஏற்படும்'' என்று மற்றோரிடத் திலும் டாகுர் தாய்மொழியைப் பற்றி வலியுறுத்திக் கூறுகிறார்.

ஆங்கில மோகம் பெருகியிருந்த அந்தக் காலத்திலே தாய்மொழி மூலம் அனைத்துக் கல்வியும் போதிக்கப்பட வேண்டும் என்று கனவு கண்டவர் டாகுர். அதற்காக நடைமுறையிலும் உழைத்தவர் அவர். ராஜாராம் மோகன்ராய் நூல் நிலையத்தில் கூடிய ஒரு பொதுக் கூட்டத்தில் ''பாடமொழி'' என்ற தலைப்பில், வங்காளப் பல்கலைக் கழகங்களிலும் வங்காளமொழியே பாடமொழியாக அமைதல் வேண்டும் என்று அந்த நாளிலேயே கவிஞர் பெருமான் வலியுறுத்தினார். ''தாய்மொழி வழியே பாடம் கற்க வேண்டும்'' என்று கவிஞர் வற்புறுத்தியதைப் பங்கிம் சந்திரர் முதலியோரும், பின்னர்க் கல்கத்தாப் பல்கலைக்கழகத்தின்

துணைவேந்தராக இருந்த குருதாஸ் பேனர்ஜியும் ஒப்புக் கொண்டனர் என்பதனை இங்கே நினைவு கூர்தல் வேண்டும். டாகுரால் உருவாக்கப் பெற்ற விசுவ-பாரதி நடுவண் பல்கலைக்கழகத்திலும் வங்க மொழியே எல்லாத் துறைகளிலும் பயிற்று மொழியாக (Medium of Instruction) இருந்து வரவேண்டும் என விரும்பினார். அவர் விருப்பப்படியே வங்காள மொழியே பயிற்று மொழியாக இன்றும் இருந்து வருகிறது என்பதும் இங்கே குறிப்பிடத்தக்கது. இவ்வாறு ஒல்லும் வகையெல்லாம் உயர் தாய்மொழிக்காக உழைத்த உத்தமர் டாகுர்.

தாய்மொழியை உயிரினும் மேலாக மதிக்கும் மனப்பான்மை யுடைவர்களாக இரு மகாகவிகளும் விளங்கியிருக்கிறார்கள் என்பதை அவர்தம் படைப்புக்களிலிருந்து அறியமுடிகிறது.

**நாயகன்-நாயகி பாவம்**

நாயகன், நாயகி என்பன வடசொற்கள். இச்சொற்களுக்கு நேரிடையாகத் தலைவன், தலைவி என்ற சொற்களைச் சொல்லலாம். தலைவன், தலைவி என்ற சொற்கள் மிகவும் பழையவை. நாயகன், நாயகி என்ற வடசொற்கள் தலைவன், தலைவி என்ற தமிழ்ச் சொற்களுக்கு இணையாக வழங்கத் தொடங்கியமைக்குக் காரணம் இருக்கவேண்டும். தலைவன், தலைவி என்ற சொற்கள் உலகியற் காதலரை உணர்த்தப் பயின்று தமிழ்மொழியில் வழங்கி வந்ததால், நாயகன், நாயகி என்ற சொற்கள் தெய்வீகக் காதலரைக் குறிப்பதற்கு ஏற்றனவாக உருவாக்கப்பட்டிருக்க வேண்டும். பாவம் என்ற சொல்லும் வடமொழிச் சொல்லே. இறைவன் ஆன்மா, நாயகன், நாயகியாகப் பாவனை செய்யப்படுதலையே இச்சொல் உணர்த்துவதாகக் கொள்ள வேண்டும். அதாவது நாயக, நாயகி பக்திநெறி என்பது இறைவனைக் காதலனாக்கித் தங்களைக் காதலியாக்கிப் பாடும் முறையாகும். காதலரிடையே நிகழும் உணர்ச்சி நெருக்கத்தைப்போல் இறைவனுடன் அடியார்கள் கொள்ள விரும்பிய உணர்வு நெருக்க விருப்பத்தின் விழைவே இப்பக்திநெறி எனக் கூறலாம்.

நாயகன், நாயகி பாவம் பாலுணர்வை அடிப்படையாகக் கொண்டது. அதாவது பாலுணர்வே தலைவன், தலைவி உறவை ஏற்படுத்துகின்றது. உலக வாழ்க்கையில் அமைந்துள்ள உறவு முறைகள் ஏராளம். அவை யாவற்றுக்கும் சிகரமாக அமைந்தது தலைவன், தலைவி உறவு முறையாகும். இன்றைய உளவியல் அறிஞரும் மனித வாழ்வில் பாலுணர்வு பெறும் முக்கியத்துவத்தை வற்புறுத்துவர். மனித வாழ்வு முழுவதையும் பாலுணர்வு நெறிப்படுத்துகிறது என்று காட்ட முனைந்தார் பிராய்ட் என்னும் உளவியல் அறிஞர். பாலுணர்வு மனித வாழ்வில் மிகவும் சக்தி வாய்ந்த ஒன்று என்று எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப் படுகிறது.

நாயகன், நாயகி பாவம் தமிழ் இலக்கியத்தில் மட்டும் இல்லை; இந்து சமயத்தில் மட்டும் இல்லை. பிற சமயத்திலும் நாயகன், நாயகி பாவம் காணக்கிடக்கிறது. இந்தப்பாவம் கிறித்துவத் திருமறையின் பழைய ஏற்பாட்டிலேயே தொடங்கிவிட்டது எனலாம். சாலமன் பாடியதாகக் கூறப்படும் உன்னதப் பாட்டில் காதலன், காதலி நிலையில் இறைவன் ஆன்மா உறவுகள் விளக்கப்படுவதாகத் திருமறைத் திறனாய்வாளர்கள் குறிப்பிடுவர். திருமறையின் புதிய ஏற்பாட்டுப் பகுதியிலும் இறைவனை மணமகனாகவும், திருச்சபைகளை மணப்பெண்ணாகவும் ஒப்பிட்டுப் பேசும் மரபினைக் காணலாம். நாயகன், நாயகி உறவு நிலையில் இறைவன் ஆன்மா உறவினை விளக்கிச் செல்லும் போக்கினை லத்தீன் மொழியின் பக்திப்பாடல்களிலும் காணமுடிகிறது. இஸ்லாமிய சமயத்தின் ஒரு பிரிவினரான சூஃபி என்னும் பிரிவினர் இறைவனைக் காதலியாகவும், ஆன்மாவைக் காதலனாகவும் அமைத்து இறைநெறிப் பாடல்கள் பாடியுள்ளனர், சூஃபியில் உள்ளதுபோல பாரதியும், குணங்குடி மஸ்தானும் பாடியுள்ளனர். மரபு வழியாகப் பாடப்பட்ட பக்திநெறி இங்கே மாற்றம் பெற்றுள்ளது என்பதை அறிகிறோம். பக்தி இயக்கம் இந்தியா முழுவதும் பரவியபோது பிற இந்திய மொழிகள் பலவற்றிலும் நாயகன், நாயகி பாவச் செய்யுட்கள் எழுந்துள்ளன என்பதைக் காணமுடிகிறது.

இறைவனை நாயகனாகவும், தம்மை நாயகியாகவும் பாவித்து அந்நாயகனை அடைதற்காக ஏங்கி இரங்கிப் பாடும் மரபு பக்தி இலக்கியத்தில் நயமும் இனிமையும் நிரம்பிய ஒன்று. இங்ஙனம் நாயகனை நாடும் நாயகியாய் இருவரும் நலிந்து உருகிப் பாடிய பாடல்கள் நிறைய உள்ளன. ஒரு சில பாடல்கள் இங்கே எடுத்துக் காட்டப்படுகின்றன.

மனிதரிடத்துத் தம் மனக்கவலை உரைப்பது இயலாத நிலையில் கிளியை அருகில் அழைத்துத் தன் காதல் தலைவனது திருநாமத்தை ஒரு முறையாவது சொல்லும்படி ஏங்கிக் கேட்கிறார் சம்பந்தர்.

''சிறையாரும் மடக்கிளியே
இங்கேவா! தேனொடு பால்
முறையாலே உணத்தருவன்
மொய் பவளத் தொடுதரளம்
துறையாரு கடற்றோணி
புரத்தீசன் துளங்கு மிளம்
பிறையாளன் திருநாமம்
எனக்கொரு கால் பேசாயே'' (60)

இளம்பிறை அணிந்த எம்பெருமானது திருநாமத்தை ஒருமுறை பேசு! உனக்குத் தேனும் பாலும் வேண்டியபடி தருவேன் எனக் கூறும்போது இறைவனிடம் தலைவி கொண்டுள்ள அன்பின் ஆழம் விளங்கிறதல்லவா?

தாமரை மலரில் தேனைக் குடித்துவிட்டுப் பெண்வண்டோடு சேர்ந்து மகிழ்ந்து இசைபாடும் வண்டே! என்மேல் இரக்கங்கொண்டு என் நாயகராகிய சிவபெருமானிடம் சென்று காதலால் ஏங்கும் என் நிலையை ஒருமுறை சொல்லமாட்டாயா? என ஏங்கித் தவிக்கும் தலைவியின் நிலையை சம்பந்தரின் மற்றொரு பாடலிலும் காணலாம்.

குயில், நாரை, பூவை, அன்றில் போன்றவற்றையும் முன்னிலையாக வைத்துத் தன் பிரிவுத்துன்பத்தை அவைகளிடம் கூறித் தலைவனிடம் தூது செல்லும்படியும் சம்பந்தர் வேண்டுகிறார்.

**"முன்றில் வாய் மடற்பெண்ணைக்**
**குரம்பைவாழ் முயங்குகிறை**
**அன்றில்காள்! பிரிவுநோய்**
**அறியாதீர் மிகவல்லீர்**
**தென்றலார் புகுந்துலவுந்**
**திருத்தோணி புரந்துறையுங்**
**கொன்றைவார் சடையார்க்கு**
**என் கூர்பசலை கூறீரே"**

என்பது பாடல்.

7, 13, 34, 35, 41, 43, 52, 54, 56, 57, 99 எண்ணுள்ள கீதாஞ்சலிப் பாடல்கள் நாயகன், நாயகி பாவத்திலேயே டாகுரால் படைக்கப்பட்டுள்ளன. அவற்றுள் ஒன்றிரண்டைப் பார்க்கலாம். டாகுர் இந்த நாயக, நாயகி பாவத்தை மிக அற்புதமான கவிதை நயத்தோடு கையாண்டிருக்கிறார்.

**"என்னுடைய கவிதைப்பெண்**
**அவளுடைய அணிகலன்களையெல்லாம்**
**களைந்து ஒதுக்கி வைத்துவிட்டாள்.**
**ஆடைகளிலும் ஆபரணங்களிலும்**
**அலங்காரங்களிலும்**
**அவளுக்கு எவ்விதப் பெருமையும் கிடையாது.**
**இந்த ஆடை ஆபரணங்கள் நமது சங்கமத்திற்கு**
**இடையூறாகி நம் உறவைப் பாழாக்கும்.**
**இவை உனக்கும் எனக்கும் இடையே தடையாக நிற்கும்.**
**அவற்றின் கலகலப்பில் உன்னுடைய**
**ரகசிய மொழிகள் எனக்குக் கேட்காது போய்விடும்.**
**உன்னுடைய கனிவான பார்வைபட்டதும்**
**என்னுள் இருக்கும் கவிஞனின் கர்வம்**
**வெட்கத்தால் நாணிக் குனிகிறது.**

ஏ, கவிஞர் தம் கோவே!
நான் உன் பாதகமலங்களில்
சரணடைந்து விட்டேன்.
என்னுடைய வாழ்க்கையை
எளிமையானதாகவும் நேர்மையானதாகவும்
ஆக்க அருள் செய்!
உன்னுடைய கரங்களிலே
ஒரு புல்லாங் குழல்போல் அமைத்து
என்னை உன் இன்னிசையால் நிரப்பு" (கீதாஞ்சலி - 7)

இக்கவிதையில் கவிஞர் டாகுர் தன்னையும் தன்னுடைய கவிதையையும் பெண்பாலாக்கி-இருவரும் ஒன்றாகக் கலந்து, இறைவனுக்குத் தங்களை அர்ப்பணம் செய்து கொள்ளத் துடிக்கும் தவிப்பினைப் பார்க்க முடிகிறது என்பதைப் பார்க்கிறோம். ஆடைகளும் ஆபரணங்களும் காதலர்கள் அன்போடு ரகசியமாகச் சேரும்போது-மெய்யுறுபுணர்ச்சியின் போது இடையூறாகத்தானே அமையும்?

"வீழும் இருவர்க்கு இனிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு"

என்பது வள்ளுவர் (1108) வாக்கன்றோ? மணமேடையில் போட்ட பெரியமாலைகளும், மொடமொடத்த பட்டுச்சேலையும், காதணி, மூக்கணி, சங்கிலி, பதக்கம் இன்னபிறவற்றையும் அணிந்து கொண்டு சங்கமித்தால் என்ன ஆனந்தம் கிடைக்கும்? ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் இடையே எந்த இடையூறும், கட்டுப்பாடும் குறுக்கிடக்கூடாது என்பதே இக்கவிதையின் பொருள். ஜீவாத்மா தன்னுடைய செயற்கையான-மலங்களைக் களைந்து விட்டால்தான் பரமாத்மா ஐக்கியம் சாத்தியப்படும் என்னும் பொருளில் நாயகன், நாயகி பாவத்தில் அமைந்தது இப்பாடல்.

"என் அருமைக் காதலனே!
எல்லோருக்கும் பின்னால் நிழலில்
ஏன் ஒளிந்துகொண்டு நிற்கிறாய்?
உன்னைப் பொருட்படுத்தாமல்
தள்ளிக்கொண்டு புழுதிபடிந்த சாலையிலே
அவர்கள் போகிறார்கள்.
உன் பூசைக்கு வேண்டிய புனிதப் பொருள்களை
எல்லாம் பரப்பி வைத்துக் கொண்டு
உனக்காக நான் காத்திருக்கும் வேளையில்
வழியில் வருவோர் போவோர் எல்லாம் வந்து
உன் வழிபாட்டுக்காக வைத்திருந்த மலர்களை

ஒவ்வொன்றாய் எடுத்துச் சென்றுவிட்டார்கள்.
இதனால் என் பூக்கூடையும் அனேகமாய்க் காலியாகிவிட்டது.
காலை நழுவி மதியம் ஆனது.
அந்தியின் நிழலில் என் கண்கள்
தூக்கக் கலக்கத்தில் சொருகுகின்றன.
வீடு திரும்பும் மனிதர்கள்
என்மீது பார்வையை வீசி
ஏளனத்துடன் நகைக்கும் போது
எனக்கே வெட்கமாய் இருக்கிறது.
ஆடையை இழுத்து முகத்தை மூடிக்கொண்டு
ஒரு பிச்சைக்காரியைப் போல்
அமர்ந்திருக்கும்போது
''உனக்கு என்ன வேண்டும்?
என்று பிறர் கேட்கிறார்கள்.
இமைகளைத் தாழ்த்திக் கொண்டேன்.
எதுவும் பதில் சொல்லவில்லை.
ஓ! உனக்காகக் காத்திருக்கிறேன் என்றும்
நீ உறுதியாக வருவதாக வாக்களித்திருக்கிறாய் என்றும்
என்னால் அவர்களிடம் எப்படிச் சொல்லமுடியும்?
உனக்குச் சீதனமாகக் கொடுக்க
என் வறுமையைத்தான் வைத்திருக்கிறேன்
என்று எப்படிச் சொல்லுவேன்?
ஆஹா! இந்த உண்மையை
என் இதயத்தில் ரகசியமாக வைத்திருக்கிறேன்.
புல்தரையில் அமர்ந்து
நீலவானத்தைப் பார்த்தபடி
உன்னுடைய ஒளிமயமான திடீர் வருகையை
எண்ணிக் கனவு காண்கிறேன்.
எங்கும் ஒளிவெள்ளம் பாய
பொன்னிறக் கொடிகள் உன் தேரில் பறக்க
உன் தேரை என் வாசலிலே நிறுத்திவிட்டு
அரியணையிலிருந்து இறங்கிவந்து
இந்தக் கந்தையணிந்த பிச்சைக்காரியை
புழுதியிலிருந்து தூக்கி
உன் அருகிலே அமர்த்துகிறாய்.
கோடைகாலத்துக் கொடியைப் போல
கர்வத்திலும் வெட்கத்திலும்
நான் துடித்துப் போகிறேன்.

ஆனால் காலம் ஓடிக்கொண்டிருக்கிறது.
உன்தேரின் சக்கர ஒலிகளைக் கேட்க முடியவில்லை.
ஆரவாரத்துடனும் கோலாகலத்துடனும
அநேக ஊர்வலங்கள் இவ்வழியிலே போகின்றன.
அவர்களின் பின்னால் நீ மட்டும் ஏன்
நிழலில் மௌனமாக மறைந்து கொண்டு நிற்கிறாய்?
நான் உன் வரவுக்காக அழுதபடி
மனமுடைந்து ஆசையுடன் காத்திருக்கிறேன்''

(கீதாஞ்சலி 41)

இறைவனின் வரவுக்காக ஆவலுடன் காத்திருக்கும் பக்தனைப் போல, காதலனின் வரவுக்காகக் காதலி காத்திருப்பதை நாயகன், நாயகி பாவத்தில் சுட்டிக் காட்டுகிறார் டாகுர். காலத்தாலும், இடத்தாலும், மொழியாலும், பண்பாட்டாலும் வேறுபட்ட இருவரின் கருத்துக்கள் ஒற்றுமை உடையனவாகக் காணப்படுகின்றன என்பதற்குத் திருஞானசம்பந்தர் பாடல்களும், ரபீந்திரநாத் டாகுர் படைப்புக்களும் சான்றாக விளங்கு கின்றன. இவர்கள் இருவரையும் ஒட்டியும் உறழ்ந்தும் நோக்குதற்கு-விரிவாக ஆராய்வதற்கு இன்னும் இடம் இருக்கிறது. விரிவஞ்சி-பக்க வரையறை கருதி இக்கட்டுரை இங்கே நிறைவு செய்யப்படுகிறது.

# 72. திருப்புகழில் சம்பந்தர்

சேது. முருகபூபதி, புதுவை.

திருஞானசம்பந்தரைப் பற்றிச் சிந்திக்கத் துணைசெய்வது அவர் பாடிய தேவாரம் ஒரு புறம் இருந்தாலும், அவரையே படம் பிடித்துக் காட்டுவது, சேக்கிழார் பெருமான் பாடிய திருத்தொண்டர் புராணமாகும்! சேக்கிழார் பாடிய திருத்தொண்டர் புராணத்தில் 1255 பாடல்களில் திருஞானசம்பந்தரை அருட்துறைசார்ந்த தமிழ் உலகுக்கு அறிமுகப் படுத்துகிறார். எடுத்த எடுப்பிலேயே திருஞானசம்பந்தர் எதற்காகப் பிறந்தவர் என்றும், என்ன செய்யப் பிறந்தவர் என்பதையும் முதல் பாடலிலேயே குறிப்பிடுகிறார். அதாவது,

**"வேத நெறி தழைத்து ஓங்க மிகுசைவத்துறைவிளங்கப்**
**பூதபரம்பரை பொலியப்"**

பிறந்தவராம் ஞானசம்பந்தர். ஞானசம்பந்தர் கிரியை மார்கத்திற்கு உரியவர். கிரியை மார்க்கத்தில், தகப்பன்-மகன் உறவு பேசப்படும். இந்த கிரியை மார்கத்துக்குப் பெரிதும் துணைசெய்யும் கலை - இசையாகும்! மற்றும் இறைவனைப் பற்றிப் பேசுவதாகும். இடையீடு இல்லாத இறையன்பு உடையவராய் இருப்பார்கள். இவர்களுடைய தொண்டில் நோக்கம் இருக்கும். தொண்டு செய்பவர்களுக்கு அரனாக இருப்பார்கள். வேதம் என்ற சொல்லுக்கு இறைவனிடம் இருந்து பிறந்த சொல் என்றும் (ஜீவனைச் சிவமாக்கும்), ஒன்றை மற்றொன்றாக்கும். மாற்றும் தன்மை யுடையது என்றும் சொல்வார்கள். இப்படி வேதம் எந்த நோக்கத் திற்காகப் பிறந்ததோ அந்த நோக்கம் மறந்து மக்கள் வாழத் தலைப் பட்டார்கள். ஏன் அந்த நோக்கம் மறந்து மக்கள் வாழத் தலைப் பட்டார்கள் என்றால், அந்த மக்கள் எழுத்தறிவு இல்லாமலும் அறியும் திறம் இல்லாமலும் வாழ்ந்தார்கள். குறிப்பாக, தத்தமது தாய்மொழி மூலமாக, இறையாண்மையைப்பற்றி அறியும் வாய்ப்பை இழந்து வாழ்ந்தார்கள். ஏன் தமது தாய்மொழி தன்வாய் இழந்தது என்பதைச் சிந்தித்தார்கள். தாய்மொழியான தமிழுக்கு போதுமான வாய்ப்புத் தரப்படாமல், தமிழ் மெலிவடைந்து இருந்தது. இந்த மொழி பேசும் மக்களும், உய்வடையத் தெரியாமல் தொய்வடைவதை தடுத்து, அருட்துறை விளங்க வேண்டும் என்றால் அந்த இனம் பேசும் தாய்மொழி தழைக்க வேண்டும். ஞானசம்பந்தர் தமிழ்பாடிய காலத்தில் தமிழ் ஏன்

நலிவடைந்தது, எதனால் நலிவடைந்தது, யாரால் நலிவடைந்தது என்பது எல்லாம் ஊரறிந்த உண்மையாகும். காரணம் எதுவாக இருந்தாலும், ஞானசம்பந்தர் தமிழால் தெய்வங்களைப் பாடியது தமிழின் மீட்சிக்காகப் பாடினார் என்பதுதான் உண்மை. 'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பி' என்பார்கள். பரப்புதல் என்றால் நிலைகொள்ளச் செய்தல் என்று பொருள்.

ஆனால் அருணகிரிநாதர் தமிழ் பாடிய காலத்தில் தமிழ் தன் வாய்ப்பை இழந்ததோடு அல்லாமல் தமிழனும் காமத்தால் உலுத்துப் போய் இருந்தான். தேவாரத்தில் தனிமனித இழிவுகள் அவ்வளவாகக் குறிப்பிடப்பட்டு இருக்காது! இறைவனின் அருமை-பெருமை இறையாண்மையின் சிறப்பு சிவபெருமானின் வடிவம், தோற்றம், பொலிவு, அழகு, அணிகலன்கள், வடிவழகு, திருவடிப் பெருமை, வீரட்டானச் செய்திகள், மேலும், தனக்கு இறைவன் செய்த உதவி, தமிழ்மொழியின் சிறப்பு வினையின் விளைவு, மேலும் பிறப்பின் வேரறுப்பது, இந்த பிறப்பு -இறப்பை எப்படி எது இருந்தால் களையலாம் என்பன போன்றவைகளை குறிப்பிட்டு இருப்பார்கள். ஆனால், திருப்புகழ் படித்தால், ஏகதேச சரிபாதி, தனிமனித இழிவு, ஒழுக்கக்கேடு, இந்த இனம் ஏன் உலுத்துப்போனது, எதனால் சீர்கெட்டது, என்ன செய்தால் என்ன ஆவாய், இதைச் செய், இதனைச் செய்யாதே என்று மனித சமுதாயத்தின் குற்றங்களை ஒருபாடு சொல்லி, இந்த மனித சமுதாயம் உய்வடைந்து, யாரைச் சேர வேண்டும் எதனைச் சேரவேணும் எப்படிச் சேரவேணும் இந்தத் தமிழ் இனம் எப்படிப்பட்ட இனம், இந்தத் தமிழ் இனத்தின் தாய்மொழியான தமிழ் எப்படிப்பட்ட மொழி, யாரால் போற்றி வணங்கப்பட்ட மொழி, இந்த மொழி என்ன செய்துள்ளது, எப்படிச் சிறப்பான காரியங்களைச் செய்த சிறந்த தாய்மொழியான தமிழுக்குச் சொந்தமான தமிழினம், ஏன் தருதலை ஆனது, எதனால் அடிமைப் பட்டது, இந்த இனம் என்ன செய்யவேணும் என்ன செய்யக்கூடாது என்று ஒருபாடு சந்தம் என்ற சாட்டை தாங்கி மனித சமுதாயத்தை எச்சரித்த தமிழன் அருணகிரிநாதர். மேலும் குறிக்கோள் இல்லாமல் வாழாதே, இறைவனை மறந்து தவறு செய்யாதே. மறந்தால் வினைப் பயன் ஏறும், உய்வடைய முடியாது. இந்தப் பிறப்பையே நல்லபிறப்பாக மாற்று என்றெல்லாம் தாம் பாடிய திருப்புகழில் குறிப்பிடுகிறார்.

பல நூற்றாண்டுகளுக்கு முன்பு சீர்காழியில் பிறந்த தமிழனான ஞானசம்பந்தப் பெருமானைத் தம் ஆன்ம குருநாதனான முருகப் பெருமானாகவே உறுதிபூண்ட அருணகிரிநாதர், தாம் பாடிய திருப்புகழில் எங்கெல்லாம் பரவிப் போற்றுகிறார் என்று பார்ப்போம். முதலில் அருணகிரியார் தான் பாடிய கயிலைமலைத் திருப்புகழில், தான் யாரைப் போல தமிழ்பாக்கள் பாடவேணும் என்று கேட்கிறார் தெரியுமா?

திருஞானசம்பந்தர் பாடியதைப் போல தானும் தமிழ்ப்பாட வேணும் என்கிறார்.

பாடல் எண் 241, கயிலைமலைத் திருப்புகழ்

''புமியதனிற் ப்ரபுவான புகலியின் வித்தர்போல
அமிர்தகவித் தொடைபாட அடிமைதனக்கு அருள்வாயே''

புகலியின் வித்தகர் யார்? அது தான் திருஞானசம்பந்தர். அவர் எப்படிப் பட்டவர் இந்த பூமியில் ப்ரபுவாம் அவர் பாடல் எப்படி இருக்கிறதாம்? அமிர்தகவி மாலையைப் போல் உள்ளதாம்! இப்படிப்பாட வேணும் என்று விரும்பிய அருணகிரிநாதர், திருஞானசம்பந்தரை யார் என்று அறிமுகம் செய்வதைப் பாருங்கள். தாம் பாடிய திருக்குடவாயில் திருப்புகழில்,

''கருதும் ஆறு இரு தோள் மயில்வேல் இவை
கருதலுணா வகை யோரரசாய் வரு
கவுணியயோர் குலவேதியனாயுமை கனபாரக்
களப்பூண் முலை யூறிய பாலுணு
மதலை யாய் மிகுபாடலின் மீறிய
கவிஞனாய் விளையாடிடம் வாதிகள் கழுவேறக்
குருதியாறெழ வீதியெலாமலர்
நிறைவதாய் விட நீறிடவே செய்து
கொடியமாறன் மெய் கூனிமிராமுனை குலையாவான்
குடிபுகீரென மாமது ராபுரி
யியலை யாரணபூரென நேர் செய்து
குடலைமாநகர் வாழ்வுற மேவிய பெருமாளே''

இந்தத் திருப்புகழில் அருணகிரியார் சொல்ல நினைப்பது என்ன வென்றால் எவராலும் கருதிப் போற்றப்படும் பன்னிரு தோள்கள் மயில்வேல் இவைகளை, யாரும் கண்டுகொள்ளாத வகையில் மறைத்து, சீர்காழிப்பதியின் அரசாக கவுணிய குலத்தினருட் சிறந்த வேதியனாக வந்து சந்தனம் போன்ற கலவை பூசிய உமாதேவியாரின் திருமுலையில் ஊறிய பாலை உண்டு குழந்தையாய், மிக்கபாடல் பாடுவதில் எவரினும் மேம்பட்ட கவிஞனாய்த் திருவிளையாடல்கள் செய்திருந்த சமயத்தில், வீண்வாதுக்கு வந்த சமணர்களைக் கழுவில் ஏற்றியும் அவர்கள் தம் ரத்தம் ஆறாகப் பெருகவும், வீதிகளில் பூமாரி நிரம்பிடவும், திருநீற்றை யாவரும் இடும்படிச்செய்தும், சமணர் சார்பில் பட்டு இருந்த பாண்டியனுடைய கூன்பட்ட உடல் நிமிர்ந்து விளங்கவும், சமணர் பகையை அழித்து வானில் குடிபுகுவீர்கள் எனச் சிறந்த மதுரைப் பட்டணத்தின் முன்பு இருந்த சமணர் நிலையை மாற்றி வேதபுரி என்னும் படியாக அந்த ஊரை நேர்மையான செந்நெறியில் சேர்ப்பித்து,

திருக்குடவாயில் என்னும் பெரிய நகரத்தில் வாழ்வு கொண்டு வீற்றிருக்கும் பெருமானே என்று சம்பந்தன் தான், முருகன் என்று சாதிக்கிறார். இதுபோல உமையம்மையிடம் பாலமுது உண்ட சம்பந்தன் வேறுயாரும் இல்லை, முருகனே என்று இது போல பல இடங்களில் பாடி உள்ளார்.

திருக்கழுக்குன்றத் திருப்புகழில்,

''எழுநிறை அரிபிரமர் சோதியிலகுமரன் மூவர் முதலானோர்
இறைவியெனு மாதி பரை முலையானூறி யெழுமயிர் தநாறுவாயா
புழு கொழுகு காழி கவுணியரில் ஞான புநித எனை ஏடு தமிழாலே
புனலிலேதிரேரசமணர் கழுவேற லொரு கவிவீரகுருநாதர்''

என்றும், திருவதிகைத் திருப்புகழில்,

''கயிலை மலைக் கிழவினிடக்குமரிவிருப்பொடுகருதக்
கவி நிறையப் பெறும்-வரிசைப் புலவோனே''

என்றும், வள்ளி மலைத்திருப்புகழில்,

''அருகர் கணங்கள் பிணங்இடும் படி
மதுரையில் வெண் பொடியும் பரந்திட
அரஹர சங்கர வென்றருள் புகழ்வேலா
அறம்வளர் சுந்தரி-மைந்தா''

என்றும், திருத்தணித் திருப்புகழில்,

''பொறியுடைச் செழியன் வெப்பொழிதரப்பறிதலைப்
பொறியிலச் சமணரத்தனைபேரும் பொடிபடச் சிவமணம்
பொடி பரப்பிய திருப்புகலியிற் கவுணியப்புலவோனே''

என்றும், சீர்காழித் திருப்புகழில்

''சேனைக்குருக்கூடலில் அன்று ஞானத் தமிழ் நூல்பகர்ந்து
சேனைச் சமணோர் கழுவின்மிசைக் கொடியோன் உடல்துன்ற
தீமைப்பிணியும் திரவந்தகுருநாதா''

என்றும், திருத்தணித் திருப்புகழில்,

''விரித்த அருகிரிநாதன் உரைத் தமிழெனம் மாலை
மிகுத்தபலமுடன் ஓத மகிழ்வோனே
வெடித்த சமணர் கழுவேறவுருத்தி கணவனும்மீள
விளைத்தொரு தமிழ்பாடு புலவோனே''

என்றும், காசித் திருப்புகழில்,

''மாள அன்றமணீசர்கள் கழுவேற வாதில்லென்ற தமிழ் வீரா''

என்றும், தாய் மொழியான தமிழைக் காக்கவும், தாய்மொழின் மார்க்கமான, தமிழ் மார்க்கத்திற்கு தடையான, வினையின் துணைக்கரணங்களை

மையமாய் வைத்துப் பேசும் நூல்மதங்களை ஒழித்தும், தமிழ் இனத்தின் கடவுட் கொள்கையைப் பேசும், சைவ நீதியையும் அதை அடிவுற்றிப் பேசும், வேதநெறியையும் காப்பாற்றும் தன்மையைத் தான்படி இசையிறு தமிழ் என்று சொல்லப்படும் தேவாரப்பாடல்களில் இறைவனை உருவ சிவமாகவும், உருவா அருவசிவமாகவும், அருவசிவமாகவும் காட்டியதோடு அல்லாமல், தமிழுக்கு காவலனாக இருந்த ஞானசம்பந்தரை அருணகிரியார் தன் ஆன்ம குருநாதனான, முருகனின் அவதாரமே என்று பலவகையில் தாம் பாடிய திருப்புகழில் குறிப்பிட்டுள்ளார். அருணகிரிநாதரைப் போல, ஞானசம்பந்தரை நெஞ்சார எத்தனைபேர் நினைத்திருக்கக் கூடும் என்று எண்ணும் அளவுக்கு வாய்ப்புக்கு கிடைத்த இடங்களில் எல்லாம் தாம் பாடிய திருப்புகழ் பாடல்களில் புதைத்து வைத்து இருக்கிறார்.

உதாரணமாக,

"உமை முலைதறு பாற்கொடு அருள்கூறி
உரிய மெய்தவமாக்கி நலுபதேச
தமிழ்தனைக்கரை காட்டிய திறலோனே"

என்றும்,

"சம்பந்தன் எனத்தமிழ் தேக்கிய - பெருமாளே"

என்றும்,

"இமகிரி வந்தனைந்த பொறப்பாவை பச்சைவஞ்சி
அகிலதலம்பெறும் நவை - சத்தியம்பை
இளமுலையின் செழும்பால் குடித்திலங்கு
இயல் - நிமிர்திடுவோனே"

என்றும், தீர்த்தமலைத் திருப்புகழில் ஞானசம்பந்தர் நிகழ்த்திய அற்புதங்களைச் சொல்கிறார்.

"சீட்டையெழுதிவையாற்றில் எதிருற
ஓட்டியழல் பசை காட்டிசமணரை
சீற்றமொடு கழுவேற்ற அருளியகுருநாதா"

என்றும் திருசெங்கோட்டுத்திருப்புகழில்

"தர்கசமணமூகர்மிக்ககழுவேற
வைத்த ஒருகாழி மறையோனே"

என்றும், திருவரத்துறை திருப்புகழில்

"பிறைவியைத் தணித்தருளும் நிட்களப்பிரம சிற்சுகக் கடல்மூழ்கும்
பெருமுனித்திரடபரவு செய்ப்பதிப்ரபல கொச்சையிற் சதுர்வேதச்
சிறுவதிற்கருட் கவிதை நித்திலச் சிவிகையை கொடுத்தருள்
ஈசன்"

என்று சிவபெருமான் சிவிகை கொடுத்ததையும் குறிப்பிடுகிறார்.

இந்த சம்பந்தப் பெருமான், தான் திருநள்ளாற்றில் பாடிய பதிகத்தை தான் அனல் வாதத்தின் போது பாடி உள்ளார் என்றும் திருவாரூரில் பாடிய வாழ்க அந்தணர் என்ற திருப்பாசுரத்தை புனல் வாதத்தின் போது பாடினார் என்று தீர்த்தமலை திருப்புகழில் குறிப்பிட்டுள்ளார்.

சமண மதம் எப்படிப்பட்டது என்றும் சிவமதம் எப்படிப்பட்டது என்றும் அதற்காக ஞானசம்பந்தர் என்ன செய்தார் என்பதை திருவேற்காட்டுத் திருப்புகழில்,

"வார் பேரருளே பொழிகாரண் - மாமத
ஏற்பாடிகளேயழிவேயுற - அறைகோப
வாக்காசி வமாமதமே - மிக
வூக் காதிப யோக மதேயுறு
மாத்தா சிவபால குகா வடியார்கள் வாழ்வே"

என்றும், கலைவகுத்தோதிய ஞானசம்பந்தனாம் அதாவது வேதத்தை தேவாரப்பாடலாக வகுத்து ஓதிய ஞானசம்பந்தன் என்று திருவருணைத் திருப்புகழில் குறிப்பிடுகிறார்.

மதுரை திருப்புகழில்,

"தவறிலாமல் ஆளப்பிறந்த
தமிழ் செய்-மாறன் கூன்வெப்பொடன்று
தவிர அலவாயிற் சிறந்த-பெருமாளே"

என்றும், திருப்போரூர் திருப்புகழில்,

"பமர பரப்ரபாருணபடிலதாரகமாசுக
பசுரபாடனப்பனிதபகளேச பசிதபாரண வாரன
துவசஏடகமாவயில்"

என்பதில் "பசுரபாடன" என்ற சொல்லில் வாழ்க அந்தணர் என்று பாடி உலகுக்கு பாடம் புகட்டிய ஞானசம்பந்தன் என்று குறிப்பிடுகிறார்.

திரு ஆலங்காட்டுத் திருப்புகழில்,

அன்று ஆலங்காட்டில் அண்டரும் உய்ய
நின்ருடும் கூத்தன் திருவருள்
அங்கு ஆகும்பாட்டின்பயனினை அருள்வாழ்வே
அன்பால் நின்தாள்கும்பிடும் அவர்தம்
பாவம் தீர்த்து அம்புவிடை அஞ்சா நெஞ்சாக்கம்
கரவலலபெருமாளே

"அதாவது சம்பந்தப் பெருமானாக தாம் பாடிய ஒவ்வொரு பதிக ஈற்றிலும் அப்பதிகப் பயன்களை உலகுக்கு எடுத்துக்காட்டி உள்ளார். ஞானசம்பந்தன் உரை செய்த" திருநெறிய தமிழ் வல்லவர் தொல்வினை

தீர்தல் எளிதாமே என்ற குறிப்பை அருணகிரிநாதர் ''அங்கு ஆகும் பாட்டின்பயன்'' என்று குறிப்பிடுகிறார்.

முருகப் பெருமானே, திருஞானசம்பந்தராய் திருஅவதாரம் செய்த காலத்தில் சிவசாரூபம் வேண்டிக் கச்சியில் திருமேற்றளியில் தவம் செய்துகொண்டு இருந்த விஷ்ண மூர்த்திக்குச் சம்பந்தர் சாரூபம் அறித்த வரலாற்றை காஞ்சிபுரத் திருப்புகழில்,

**''திருமாலுக்கு சிவசாரூபம்**
**பழைய சந்தத்தைப் பெற்றபடப்பெண்**
**புகலு கொண்டற்குச் சித்தியளிக்கும்**
**பெருமாளே''**

என்றும், மேலும் சமணர்களைக் கழுவேற்றிய தகவலை மதுரை, திருநல்லூர், விருதாச்சலம், வேலூர் போன்ற தலங்களில் பாடிய திருப்புகழில் அருணகிரிநாதர் திரும்பத்திரும்பக் குறிப்பிடுகிறார்.

ஞானசம்பந்தராய் பிறந்த அவர் நிகழ்த்திய அற்புதங்களை, அருணகிரிநாதர் தாம் பாடிய திருப்புகழில் குறிப்பிடத் தவறியது இல்லை. செட்டிப் பெண்ணை உயிர்பெறச் செய்ததை தாம் பாடிய அவிநாசித் திருப்புகழில்,

**''அங்கத்திப்பாவை செய்தாம்''**

எனவும் திருமயிலைத் திருப்புகழில்,

**''அளகை வணிகோர் குலத்தில் வனிதையுயிர் மீளழைப்ப**
**அருள் பரவு பாடல் சொற்ற-குமரேசா''**

என்றும், தாம் பாடிய திருவோத்தூர் திருப்புகழில்,

**''பவமாய் தான் அதுவாகும் பனைக்காய் தேமணநாறும்**
**பழமாய்பார் மிசைவீழும்படி வேதம்**
**படியாப்பாதகர் பாயன்றியாடாப் போதைகள் கேசம்**
**பறிகோப்பாளிகள் யாருங்கழுவேறச்**
**சிவாய்த்தேனமுதானுற் திரு வாக்காலொளி சேர்வெண்**
**டிரு நீர்னால் சமராகுஞ் சிறியோனே''**

என்றும், ஆன்பனையை பெண்பனையாக்கியது போன்ற அற்புதத்தைக் குறிப்பிடுகிறார். இதையே சேக்கிழார் தாம் பாடிய பெரியபுராணத்தில்,

**''ஆலவாய் அண்ணல் நீயே மண்ணும் மந்திரமுமாகி**
**மருந்தாய் த்தீர்பதென்று திருப்பதிகம்பாடி**
**திருவளர் நீறு கொண்டு திருக்கையால் தடவ**
**வெப்பகன்று வழுதியுமுழுதுய் தான் என்றும்**
**குறும்பை ஆண்பனையீனும் என்றும் வாய்மை**

குலவுதலால் நேருங்கும் ஏற்றுப்பனை யெல்லாம்
நிறைந்த குலைகளாய்க்குரும்பை அரும் பெண்பனை
யாகியிடக்கண்டாரெல்லாம் அதிசயித்தார்கள்''

என்று குறிப்பிடுகிறார். இப்படிப் பலவாராக ஞானசம்பந்தனை அருணகிரிநாதர் ஏன் சிந்தித்தார் என்றால், பரசுப்பிரமணியமாய் உள்ள முருகனே, அபரசுப்பிரமணியமாகத் தோன்றி உள்ளார் என்றும், மற்ற தெய்வங்களை எல்லாம்விட, முருகப்பெருமான் ஆரியனாகத் தோன்றினாலும், தமிழனாய் மாறியவன் என்றும் அப்படி மாறிய முருகன், தமிழுக்கு ஆபத்து வரும்போது எல்லாம் தமிழுக்குத் துணை செய்துள்ளான் என்றும், மதுரை தமிழ்ச் சங்க நிகழ்ச்சி, சாரதாபீடத்தில் இருந்து தமிழ் ஆராய்ந்தது, சிவபெருமானுக்கு ஓம் என்ற பிரணவ மந்திரத்தை முருகன் தமிழால் சொன்னது, மற்றும், தாய்மொழியான தமிழையே தன் கடவுளாக எண்ணும் கௌமார மார்க்கத்தைச் சேர்ந்த தமிழ் இனத்தின் காவலனாக தன்னை ஆக்கிக்கொண்டது. குழந்தை தெய்வமான தெய்வம், தமிழுக்கு எப்படித் தொண்டு செய்தாரோ அதேபோல, திருஞானசம்பந்தராய் முருகன் அவதாரம் செய்தபொழுது தாய்மொழியான தமிழையே பாலாக உண்டான் என்பதனாலும், எந்த நோக்கத்திற்காக ஞானசம்பந்தன் தமிழ் பாடினானோ அதே நோக்கம் கொண்ட அருணகிரிநாதர் அந்த ஞானசம்பந்தனைப் போல தமிழ் பாடவேணும் என்று எண்ணி, ஞானசம்பந்தப் பெருமானின், கடவுட் கொள்கையில் இறங்கி நீந்தி வந்த அருட்துறை அத்தனையும், தான் தமிழ் பாடிய காலத்திலும் தேவைப்பட்டதனால், ஞானசம்பந்தப் பெருமானைத் தான் பாடிய திருப்புகழில் எப்படி எப்படியெல்லாம் நினைவு கூறி திருப்புகழ் எழுதினார் என்பதில் ஐயமில்லை. மேலும், எப்படி அத்துவைத சிந்தனையை ஆதிசங்கரர் சமஸ்கிருதத்தில் சொன்னாரோ அதுபோல, திருஞானசம்பந்தர், தாம் பாடிய தேவாரத்திலும் அந்த அத்துவிமான சிந்தனையைச் சொல்லி உள்ளார். அதுபோல் அருணகிரியாரும், தாம்பாடிய திருப்புகழில் அத்துவைத சிந்தனையைப் பாடி உள்ளார்.

''நீனும் நானுமாய், ஏகபோகமாய்
இறுகும் வகையற இறவியொடு பிறவி அற''

என்பார் அருணகிரிநாதர். ஆகவே, தமிழனின் மார்க்கமான இரண்டற்ற நிலை என்பதை வடமொழியில் சொன்னவர் சங்கரர். தமிழில் சொன்னவர் திருஞானசம்பந்தர். இவர்கள் இரண்டும் பேரையும், இணைத்துச் சிந்தித்தவர் அருணகிரிநாதர். பாரதிக்கு எப்படி ஒரு பாரதிதாசனோ அதுபோல, திருஞானசம்பந்தருக்கு ஒரு தாசன் அருணகிரியார் என்பதில் ஐயம் இல்லை.

# 73. சம்பந்தர் காலச் சமூகச்சூழல்

இரா. முருகன், புதுவை.

தமிழ் இலக்கிய வரலாற்றில் குறிக்கப்படும் 'பக்தி இலக்கியகாலம்' என்பது பக்தி இயக்கத்தை வளர்க்கத் தோன்றிய இலக்கியக் கால கட்டத்தைக் குறிக்கும். சமணமும், பௌத்தமும் செல்வாக்குப் பெற்றிருந்த இக்காலத்தில், அம்மதங்களின் ஆதிக்கத்தைத் தடைசெய்ய முன்னின்ற சமயங்களே சைவம் வைணவம் ஆகியவை. திருமாலை கடவுளாகக் கொண்ட பன்னிரு ஆழ்வார்களால் உருவாக்கப்பட்டதே நாலாயிரத் திவ்வியபிரபந்தம். இதேபோல் அறுபத்து மூன்று நாயன்மார்கள் சிவபெருமானைப் போற்றிப் பாடிய பக்திபனுவல்களே பன்னிரு திருமுறைகள்.

## பன்னிரு திருமுறைகள்

சமண-பௌத்த ஆதிக்கமும், சைவ-வைணவ சமயங்களினுடைய வளர்ச்சியின் தொடக்கமும் இணைந்த முரண்பாடான காலச்சூழலில் சைவத்தை வளர்த்த பெருமை சமயக்குரவர்கள் நால்வரையே சாரும். இவர்களுள் முதன்மையானவர் திருஞானசம்பந்தர். எந்த ஒரு படைப்பாளனும் தன் படைப்பில் அவனுடைய, இறந்தகால மற்றும் நிகழ்கால சமூக நிகழ்வுகளைப் பதிவு செய்வது இயல்பு. இவ்வகையில் ஞானசம்பந்தர் படைத்த தேவாரம் சுட்டும் அக்கால மக்களின் வாழ்வியல் கூறுகளை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## 1. கடவுள் வழிபாடு

தொடக்கத்தில் இயற்கையின் சீற்றத்தைக் கண்டு அஞ்சிய மனிதன், பயத்தின் காரணமாக இயற்கையையும், ஆவியையும் வழிபடத் தொடங்கினான். பின்னர், இயற்கையை ஓரளவுக்குக் கட்டுப்படுத்தி மனித இனத்தைக் காத்த இனக்குழுத் தலைவனை இறையாகக் கருதினர். இதன் வளர்ச்சி நிலையாகவே அரசனை, 'கோ' என்றும் அரசன் உள்ள இடத்தை 'கோயில்' என்றும் அழைத்தனர். தற்போது கோயில் என்பது கடவுள் உள்ள இடத்தை குறிக்கிறது. தம் தேவைகளைப் பூர்த்தி செய்யவேண்டி இறைவனை வழிபடும் மக்கள் இறைவனை மகிழ்விக்கப் பல்வேறு வகையான செயல்களில் ஈடுபடுகின்றனர். இதனைப் பொதுவாக இறைவழிபாடு என்பதனுள் அடக்கலாம்.

மலர் கொண்டு அருச்சித்தலும், பூசனை செய்தலும், இறைவன் திருப்புகழை இசையால் போற்றுவதும், இயற்றமிழால் மொழிவதும் ஆகிய செயல்களை வழிபாடு என்பர் அறிஞர் பெருமக்கள். கடவுளை வழிபடும் உரிமை அனைவருக்கும் உண்டு. மன்னர்கள் இறைவனை வழிபட வந்ததனை,

**"அணிகிளர் வேந்தர் புகுதும் கூடல்**
**ஆலவா யின்கண் அமர்ந்தவாறே"**

எனும் தேவார அடிகள் உணர்த்துகின்றன. மன்னர்களோடு முனிவர்களும், அந்தணர்களும் கடவுளை வழிபாடு செய்தனர். கடவுள் வழிபாட்டிற்கு முனிவர்கள் வந்ததனை,

**"முறையாயின பலசொல்லிஒண்**
**மலர்சாந்துஅவை கொண்டு**
**முறையால்மிகு முனிவர்தொழு"**

எனும் பாடல் வரிகளில் பதிவு செய்துள்ளார். மேலும் இவர்களோடு மகளிர் தத்தம் கணவன்மார்களுடன் இணைந்து வந்து இறைவனைத் தொழுத நிலையினை,

**"சூடக முன்கை மடந்தை மார்கள்**
**துணைவ ரொடும் தொழுது ஏத்திவாழ்த்த"**

எனும் அடிகள் தெரிவிக்கின்றன. வழிபாட்டின் போது கருவிகளை இசைத்து இசைப்பாடல்களைப் பாடினர். சூழல் யாழ் போன்ற இசைக் கருவிகள் பயன்படுத்தப்பட்டதனை,

**"துளைபயி லும்குழலி யாழ்முரலத்**
**துன்னிய இன்னிசை யால்துதைந்த"**

எனும் தேவார அடிகள் பறைசாற்றுகின்றன. ஞானசம்பந்தர் இசைக்கருவி கொண்டு பாடியதும், திருப்பாணாழ்வாரை உடன் இணைத்துக்கொண்டு பாடியதும், மற்றும் சம்பந்தருக்கு இறைவன் பொற்றாளம் அளித்ததும் இதனை உறுதிப்படுத்துகின்றன. ஈசனைப் பூசிப்பதே மெய்தவத்திற்குரிய வழி என்பதோடு இதற்காக இறைவனை நன்னீரால் பூசிப்பதோடு மென்மலரால் அருச்சித்துத் தோத்திரம் செய்யவேண்டும் என்கிறார். மலர்க்கொத்து, சந்தனம், அகில், குங்குமப்பூ போன்றவற்றோடு பசுவிலிருந்து பெறப்படும் பால், தயிர், நெய், கோசலம் (அ) கோநீர், கோமயம் (அ) சாணம் ஆகிய ஐந்து வகையான பொருட்களைக் கொண்டு பூசை செய்தனர். பூமாலை அணிவித்து அகற்புகையூட்டி ஒலி எழ நைவேத்தியம் செய்ததனை,

**"செம்பொன்செய் மாலையும் வாசிகையும்**
**திருந்துபு கையும்அ வியும்பாட்டும்"**

எனும் அடிகள் புலப்படுத்துகின்றன. மூலமுதல்வனாகிய சிவபெருமானை அல்லும் பகலும் போற்றி வணங்குபவர்களுக்குத் துன்பமே கிடையாது என்று இறைவழிபாட்டினால் ஏற்படும் பலன்களை,

**''...............இரவோடு**
**பகல்பர வுவர் தமது**
**எரியுற வினைசெறி கதிர்முனை இருள்கெட''**

எனும் வரிகளில் குறிக்கிறார். இவ்வாறு மன்னர், மக்கள், முனிவர் போன்றோர் பல்வேறு வகையான பொருட்களைக் கொண்டு இறை வழிபாடு செய்த அக்காலச் சமூகநிலையினைத் தேவாரம் வழி அறிய முடிகிறது.

## 2. திருவிழாக்கள்

சமூகமக்கள் அனைவரும் அவரவர்கள் வாழும் சூழலுக்கேற்பத் தத்தம் தொழில்களைச் செய்கின்றனர். இவர்கள் அனைவருக்கும் பொதுவான ஓய்வுக்காலங்களிலேயே திருவிழாக்கள் கொண்டாடப் படுகின்றன. மக்கள் அனைவரையும் ஒன்றிணைத்து நல்லுறவை உண்டாக்கு வதோடு, அவர்களிடையே மதநல்லிணக்கத்தையும் உருவாக்குவதே திருவிழாக்களின் நோக்கமாக இருந்திருக்க வேண்டும். இறைவனுக்காகச் செய்யப்படும் இவ்விழாவில் மக்கள் அனைவரும் ஒன்றுகூடி, பாரபட்ச மின்றித் தத்தம் பணிகளைப் பகிர்ந்து கொள்வர். சாதீய ஏற்றத்தாழ்வுகள் சட்டங்களைக்கொண்டு சரிசமமாக்கப்பட்ட இக்காலத்தில் சாதிவேறுபாடு பாராட்டாமலிருப்பது ஒரு சாதாரண நிகழ்வு என்றாலும், சாதி தலைவிரித்தாடிக் கொண்டிருந்த காலச்சூழலில் திருஞானசம்பந்தர் பாணர் குலத்தைச் சார்ந்த திருப்பாணாழ்வாரைத் தம்முடன் கோயிலுக்கு அழைத்துச்சென்று சாதீய ஏற்றத்தாழ்வுகளைக் களைந்தது முதல் சாதியப் புரட்சியாகும்.

சைவ சமய நாயகனான சிவபெருமானின் கோவில்களில் திருவிழாக்கள் கொண்டாடப்பட்டன. அடியவர்களினுடைய வேண்டுதலின் பொருட்டும் மற்றும் சுபகாரியங்களை மேற்கொள்ளும் பொருட்டும் நடத்தும் விழாவினை 'எடுக்கும் விழவு' என்றும் இறைவனின் திருநட்சத்திர நாட்களில் (திருவாதிரை, பூசம்) போன்ற நாட்களில் நடைபெறும் விழாவினை 'நன்னாள்விழவு' என்றும் இருவகையாகக் கொள்ளலாம். இவ்விரு வகையான விழாக்களும் தேவார காலத்தில் இருந்ததனை,

**''நம்பெரு மான்இது என்கொல் சொல்லாய்**
**எடுக்கும் விழவும் நன்னாள் விழவும்''**

எனும் பாடலடிகளில் பதிவு செய்கின்றார். முழவு, யாழ் போன்ற இசைக் கருவிகளின் ஒலியோடு சங்குகளின் ஒலியும் பொருத்தி இசைத்தன.

அதற்கேற்ப இசைப்பாடல்களும் பக்தர்களின் இறைவாழ்த்தொலி களும்·எங்கும் பரவியிருந்த சிறப்பு மிக்கத் திருவிழா நடைபெற்றதனை,

> "பறையின்னொலி சங்கின்னொலி
> பாங்காரவும் ஆர
> அறையும் மொலி எங்கும்மவை"

எனும் தேவார அடிகள் தெரிவிக்கின்றன.

### 3. மகளிர் மாண்புகள்

இயற்கையிலேயே அழகுமிகுந்த பெண்கள், அழகுக்கு அழகு சேர்க்கும் வகையில் தங்களின் மேனியில் சந்தனக் குழம்பைப் பூசிக் கொண்டு மணம்மிக்கவர்களாயும், கற்புத்திண்மை வாய்க்கப் பெற்றவர் களாயும் விளங்கினார். தேவாரகால மகளிர் கழற்சிக்காய், அம்மானை மற்றும் பந்து விளையாட்டு போன்றவற்றில் சிறந்து விளங்கினர். இயல்பான ஆடையிலிருந்துமாறி, பந்து விளையாட்டின்போது அவ்விளையாட்டிற்கே உரிய ஆடைகள் அணிந்திருந்ததனை,

> "கன்னியர் ஆடல் கலந்துமிக்க
> கந்துக ஆடை கலந்துதுங்க"

எனும் அடிகளில் குறிக்கிறார். மேலும் பெண்கள் ஆற்றங்கரையிலும், குளக்கரையிலும் நீராடிவிட்டு விழாவுக்குச் சென்றனர். அங்கே பக்தி மேலீட்டின் காரணமாகப் பணிசெய்யும் தொண்டர்கள் ஆடிப்பாடும் போது, மலர்சூடிய மகளிர் மொழியலங்காரம் மிக்க பாடல்களைப்பாடி அவர்களுடன் உடன் பணியாற்றினர். இவர்களில் சிலர் ஆடல் மகளிராகவும் விளங்கினர். ஆடல்வல்ல மகளிர்க்கு செல்வந்தர்கள் பொன்னும் பொருளும் அளித்தனர். இதனை,

> "சுற்றிய வாசலின் மாதர் விழாச்
> சொற்கவி பாடநி தானநல்கி"

எனும் அடிகள் உணர்த்துகின்றன. இதன் வழி ஆண்களோடு பெண்களும் சரிசமமாக விளங்கிய அக்காலச் சமூகநிலையை அறியமுடிகின்றது.

### 4. ஆடை அணிகலன்கள்

மானத்தை காக்க விரும்பிய மனிதன் ஆதிகாலத்தில் இலை, தழை மற்றும் மரப்பட்டைகளை ஆடையாகப் பயன்படுத்தினான். கால வளர்ச்சிக்கும் நாகரிக மாற்றத்திற்கும் ஏற்ப ஆடை அணிகலன்களிலும் மாற்றம் கண்டான். மக்களின் பண்பாடு, சமூகச்சூழல் போன்றவை அவன் சார்ந்த இடத்திற்கேற்பச் சில தனிப்பட்ட ஆடைகள் அணிவதற்குக் காரணமாயின. தேவார காலத்தில் மதம் பரப்பிய சமணர்கள் தங்களின் இடைமட்டும் மறையும்படியான மரவுரி அணிந்திருந்தனர். இவர்கள்

தங்களின் துறவுக்கோட்பாட்டை வலியுறுத்தக் காவிநிறம் கொண்ட துவராடை அணிந்திருந்தனர். இதனை,

**"ஒண்துவர் ஆர்துகில் ஆடைமெய் போர்த்து**
**உச்சிகொ ளாமைஉண் டேஉரைக்கும்"**

எனும் அடிகளில் தெரிவிக்கின்றார். இவ்வாறு பலவகையான ஆடைவகைகளைக் குறிக்கும் ஞானசம்பந்தர், தம்முடைய துணைவர்களோடு இறைவழிபாட்டுக்குச் செல்லும் மகளிர் அணிகலன்களில் ஒன்றான 'சூடகம்' எனும் வளையலைத் தங்களின் முன்கையில் அணிந்திருந்தனர் என்று குறிப்பிடுகிறார். இதனை,

**"சூடக முன்கை மடந்தை மார்கள்**
**துணைவ ரொடும் தொழுது ஏத்திவாழ்த்த"**

எனும் பாடலடிகளில் தெரிவிக்கின்றார்.

### 5. நம்பிக்கைகள்

மனித வாழ்வுக்கு அடிப்படையானது நம்பிக்கை. இந்நம்பிக்கை அவரவர்களின் மனநிலையைப் பொறுத்தே அமையும். கடவுள் வழிபாட்டில் ஈடுபாடு உள்ளவர்கள் பாவம், புண்ணியம் எனும் இருவகையான நம்பிக்கைகளைக் கொண்டிருந்தனர். இந்த நம்பிக்கைகள் ஞானசம்பந்தர் காலத்தில் இருந்ததனை,

**"பண்டு நாம் செய்த பாவங்கள் தீர்ப்பார்".**

எனும் வரியானது உணர்த்துகின்றது. மேலும் அவரவர்கள் செய்யும் பாவ புண்ணியங்களுக்கு ஏற்ப பிறவிப்பயனை அடைவர் என்றும், பிறவிப்பயனைப் பெற விரும்பாதவர்கள் பிறப்பறுக்க விரும்பினர் என்றும் இலக்கியங்கள் சுட்டுகின்றன. பிறப்பறுக்க வேண்டுமாயின் சிவபெருமான் விரும்புகின்ற எளிமை, அன்பு, தூய்மை, தவம், நல்லொழுக்கம் ஆகிய நற்பண்புகளைப் பெற்றிருக்கவேண்டும் எனும் நம்பிக்கை கொண்டிருந்ததனை,

**"சீலம்மிகு சித்தத்தவர்**
**சிந்தித்து எழும் எந்தை"**

எனும் வரிகளில் குறிக்கின்றார். மேலும், ஞானசம்பந்தர் காலத்தில் வாழ்ந்த சமணர்களும், சாக்கியர்களும் வெற்றிலை பாக்குடன் சுக்கையும் வாயில் போட்டு, மென்றுதின்னும் பழக்கம் கொண்டிருந்ததோடு மருதாணி இலையின் சாயத்தைப் பூசிக்கொள்ளும் பழக்கத்தைக் கொண்டிருந்ததனையும்,

**"இலைமரு தேஅழ காகநாளும்**
**இடுதுவர்க் காயொடு சுக்குத்தின்னும்"**

எனும் அடிகளில் புலப்படுத்துகின்றனர்.

1. மன்னர் முதல் மக்கள்வரை அனைவரும் மலர்தூவி அருச்சித்து, இசைப்பாடல்களைப் பாடி இறைவனை வழிபட்டனர்.
2. இசைக்கருவிகளின் ஓசைமுழங்கக் கோவில்களில் எடுக்கும் விழா, நன்னாள் விழா எனும் இருவகையான திருவிழாக்கள் நடத்தப்பட்டன.
3. விளையாட்டு, ஆடல், பாடல் எனும் அனைத்துத் துறைகளிலும் பெண்கள் சிறந்து விளங்கினர்.
4. ஆண்கள் துவராடை, மரஉரி ஆடை எனும் ஆடை வகைகளையும், பெண்கள் சூடகம் எனும் வளையலையும் அணிந்திருந்தனர்
5. தேவாரக்காலச் சமூகம் மறுபிறப்பில் நம்பிக்கை கொண்டிருந்தது.
6. இதுபோன்ற சமூகவியற் செய்திகளைத் தம் பாட்டினிடையில் ஞானசம்பந்தர் கலந்து தருவதைக் கருதமுடிகிறது.

# 74. சம்பந்தரின் திருமுறைத் தலங்கள்

க. முருகேசன், கோவை.

"மண்ணில்நல் லவண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணில்நல் லகதிக்கி யாதுமோர் குறைவிலைக்
கண்ணின்நல் லஃதுறும் கழுமல வளநகர்ப்
பெண்ணின்நல் லாளொடும் பெருந்தகை இருந்ததே"

தேவார முதலிகள் மூவரும் பல சிவத்தலங்களுக்குச் சென்று ஓதியருளிய திருமுறைகள் அனைத்தும் சேர்ந்தது தேவாரமாகும். **(தே+வாரம்=தேவாரம்: தேவனிடத்து வாரத்தை விளைவிப்பது. அஃதாவது சிவனிடத்து அதனை ஓதுவார்க்கும் கேட்பார்க்கும் அன்பை உண்டுபண்ணுவது. 2. தே+வாரம்=சிவபிரானுக்குத் தன்னிடத்தும் தன்னை ஓதுவாரிடத்தும் அன்பை விளைவிப்பது. அதனிடத்தும் அதனையோதும் மக்களிடத்தும் சிவபிரான் வாரமுடையவர் ஆவர். 3. தே+வாரம்: சிவபெருமானுக்கே வாரமாகிய உரிமையுடையது என்பது கருத்து).** சிவனின் பெருமை, அவர்தம் கருணைத்திறம், தலச்சிறப்புகள், தங்கள் முறையீடு, அருள்வேண்டல் முதலியன பற்றி இவ்வடியார்கள் பாடியுள்ள பதிகங்கள், மனித நெஞ்சங்களைச் சிவமயமாக்கி அச்செந்நெறிக் கடவுளோடு ஒன்றச் செய்யும் தெய்வத் திறமும் தொன்மையும் வாய்ந்தவை. தெய்வீக மணத்தோடு இசைமரபு, சமய, தத்துவக் கருத்துக்களைப் பெருமளவில் தம்முள் கொண்டவை. தமிழ் மக்களை அவர்களது பழைய பண்பாட்டிலிருந்து வழுவாது நெறிப்படுத்திய பெருமை தேவாரப் பாடல்களுக்கு உண்டு. மக்களை மனம் மாற்றி நல்ல மாறுதல்களுக்கு வழிவகுத்ததில் முன்னின்றமை காரணமாகவும், உளம் நெகிழ வைக்கும் பக்திச்சுவை ஊறித் ததும்பும் காரணத்தாலும், சமய தத்துவம் பேருண்மைகளைத் தம்முள் அடக்கிய பெற்றியாலும், இலக்கியச்சுவை, இசை இனிமை நிரம்பி வழியும் பாங்காலும் தேவாரப் பாக்கள் பக்தி இலக்கிய உலகில் சிறப்பானதொரு இடத்தை வகிக்கின்றன.

**சிதம்பரம்**

ஆன்மா உய்வு பெறுவதற்கு அது இறைவனிடத்துக் கொள்ளும் தனிப்பட்ட உறவே பக்தியாகும் என்னும் கருத்தின்படி இறைவனிடத்துப்

பற்றுக்கொண்டு இடைவிடாது அவனை நினைந்து நினைந்து உள்ளம் உருகி தியானிப்பதே தன் வாழ்வாகக் கொண்டவர் திருஞானசம்பந்தர். சம்பந்தப் பெருமானின் தேவாரத் திருப்பதிகங்களில் போற்றப்பெற்றுள்ள திருத்தலங்களைச் சுட்டிக்காட்டுவது இக்கட்டுரையின் நோக்கம். தேவாரத் திருப்பதிகங்கள் இருந்த இடம் தில்லையம்பலம் என்னும் சிதம்பரம். உயிர்களின் உடம்பில் நடுவாக நெஞ்சம் இருப்பது போல பூவுலகத்துக்கு நடுவாக விளங்குவது இத்தலமாகும். திருவைந்தெழுத்தாகிய 'சிவயநம' என்னும் மந்திரத்தை நினைவுறுத்தும் வகையில் தென்றமிழ் நாட்டில் ஐவகைச் சபைகள் விளங்கியிருந்தன. இவை முறையே திருவாலங் காட்டில் இரத்தினசபை; தில்லையில் பொன்னம்பலமாகிய கனகசபை; திருக்கூடலில் வெள்ளியம்பலம்; திருநெல்வேலியில் தாமிரசபை; திருக்குற்றாலத்தில் சித்திரசபை என்பனவாகும். இவ் ஐவகை சபையும் இறைவனின் ஐந்து திருத்தொழில்களையும் நினைவுறுத்துகின்றன.

**"ஆடினாய்நறு நெய்யொடு பால்தயிர்**
**அந்தணர் பிரியாத சிற்றம்பலம்**
**நாடினாயிடமா நறுங்கொன்றை நயந்தவனே**
**பாடினாய் மறையோடு பல்கீதமும்**
**பல்சடைப்பனி கால்கதிர்வெண் திங்கள்**
**சூடினாய ருளாய் சுருங்கஎம் தொல்வினையே"**

எனப் பாடுகின்றார் திருஞானசம்பந்தர். சிதம்பரத்திற்கு அருகில் உள்ள திருவேட்களம் தலம் சிவபெருமான் அருச்சுனனுக்குப் பாசுபதப்படை நல்கிய பெருமை பெற்ற தலமாகும். இதன்கண் தங்கியிருந்த சம்பந்தர் தன்னுடைய முதல் திருமுறையில் அந்தமும் ஆதியும் இல்லாதவன்; மலைமகள் காணத் திருநடனம் புரிபவன்; அவரை, "சந்தம் இலங்கு நகுதலைகங்கை தண்மதியம் மயலே ததும்ப, வெந்த வெண்ணீறு மெய்பூசும் வேட்கள நன்னர்" என்று போற்றிப் பாடுகின்றார்.

## திருநல்லூர்ப்பெருமணம்

சிதம்பரத்திற்குத் தெற்கில் அமைந்துள்ள திருத்தலம் திருநல்லூர்ப் பெருமணம். இத்திருத்தலத்தை,

**"கல்லூர்ப் பெருமணம் வேண்டா கழுமலம்**
**பல்லூர்ப் பெருமணம் பாட்டுமெய் யாய்த்தில்**
**சொல்லூர் பெருமணம் சூடல ரேதொண்டர்**
**நல்லூர்ப் பெருமணம் மேயநம் பானே"**

என்று சம்பந்தப் பெருமான் பாடுகின்றார். இத்திருக்கோயிலுக்குச் சுற்றத் தாருடன் சென்றடைந்த சம்பந்தர் திருமணக்கோலத்தில் காதலியைக் கைப்பற்றிக் கொண்டு வலஞ்செய்து புக்கொன்றி உடனானார். சூரிய, சந்திரர், நான்முகன், இந்திரன் முதலான எல்லா இறைவர்களும் வணங்கி

வழிபட்டுப் போற்றுகின்ற பெருமையை உடையது 'திருமயேந்தரப்பள்ளி' என்னும் தலமாகும்.

மூன்றாம் திருமுறையில் 'திருக்கலிக்காமூர்' தலத்தைப் பாடுகின்றார். பராசர முனிவரால் வழிபடப்பட்ட பெருமை பெற்ற இத்தலத்தில், ஒவ்வொரு வருடமும் மாசிமகத்தன்று இறைவன் தென்திருமுல்லை வாயிலுக்கு எழுந்தருளித் தீர்த்தம் அளிக்கின்ற உற்சவம் சிறப்பாகச் செய்யப் படுகின்றது. இச்செய்தி,

**"மைவரை போல்திரை யோடுகூடிப் புடையே மலிந்தோதம்**
**கைவரை யால்வளர் சங்கமெங்கும் இருக்கும் கலிக்காமூர்**
**மெய்வரை யான்மகள் பாகன் தன்னை விரும்ப உடல்வாழும்**
**ஐவரை ஆசறுத் தாளுமென்பர் அதுவும் சரதமே"**

என்ற பாடலில் சுட்டப்பெறுகின்றது.

### திருப்பிரமபுரம்

**"தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண்மதிசூடிக்**
**காடுடையசுட லைப்பொடிபூசியென் உள்ளங்கவர் கள்வன்**
**ஏடுடையமல ரான்முனைநாட் பணித்தேத்த அருள் செய்த**
**பீடுடையபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே"**

என்று தம்முடைய முதல் பதிகத்திலேயே திருப்பிரமபுரத்தைப் பாடுகின்றார் சம்பந்தர். செவியில் தோடணிந்து, வெண்மதியைத் தலையில் சூடி, விடையேறி, சுடுகாட்டில் உள்ள சாம்பலைத் தன் மேனியெங்கும் பூசித் திரிகின்ற இறைவன் தனக்கு அருள்புரிந்த சிறப்பு வாய்ந்த பிரமாபுரத்தில் உறைபவன் என்று போற்றுகின்றார். இப்பிரமபுரத்தை மூன்றாவது திருமுறையிலும் ஒரு பாடலில் போற்றுகின்றார். அப்பாடல்,

**"உற்றுமை சேர்வது மெய்யினையே உணர்வது நின்னருள் மெய்யினையே**
**கற்றவர் காய்வது காமனையே கனல்விழி காய்வது காமனையே**
**அற்றம் மறைப்பது முன்பணியே அமரர்கள் செய்வது முன்பணியே**
**பெற்று முகந்தது கந்தனையே பிரம புரத்தை யுகந்தனையே"**

என்பதாகும். அந்தமில்லாத வானில் அமர்ந்து நால்வர்களாகிய முனிவர் களுக்கு அருள்செய்து தலையோட்டில் பிச்சை பெற்று உண்டு, பெருங்கடல் இலங்கை வேந்தனின் கொடுமையைத் தன் ஒருவிரலால் ஊன்றி நிறுத்தி, பொன்மாடக் கொச்சையாகிய பிரமபுரத்தில் வந்தமர்ந்த சிவப்பரம்பொருளைப் பாடுகின்றார்.

### சீர்காழி

சிதம்பரத்திற்கு அடுத்து விளங்கும் சீர்காழி திருஞானசம்பந்தர் தோற்றம் பெற்ற புண்ணிய பூமியாகும். மூன்று வயதுக் குழந்தையாகிய

சம்பந்தர் தந்தையாருடன் திருக்கோவிலுக்குச் சென்றிருந்தார். தந்தையார் பிள்ளையாரைத் திருக்குளக்கரையில் அமர்த்தினார். தாம் தீர்த்தநீருள் மூழ்கிச் சிறிதுநேரம் உள்ளேயிருந்தனர். பிள்ளையார் தந்தையைக் காணாது திருத்தோணிச் சிகரம்பார்த்து அம்மே அப்பா என்று அழைத்தருளி அழுதருளினர். சிவபெருமானின் ஆணையின்படி உமையம்மையார் தம் திருமுலைப்பாலைப் பொற்கிண்ணத்தில் ஏந்தி அருளிச் சிவஞானங் குழைத்து ஊட்டினார். யாவருக்கும் தந்தையாராகிய இறைவன் இவ்விதம் ஆண்டமையால் ஆளுடைய பிள்ளையார் எனப் பெற்றனர். சிவஞானங் குழைத்தூட்டப் பட்டமையால் சிவஞான சம்பந்தராகியது சீர்காழித் தலத்தில்தான். தந்தையார் தீர்த்தமாடிவிட்டுப் பேருணர்வோடு பொலியும் பிள்ளையைக் கண்டார். எச்சில் மயங்கிடப் பாலூட்டினார் யாரென வெகுண்டு வினவினார். அப்பொழுது பிள்ளையார் விண்ணில் விடையின் மேல் அம்மையொடு தோன்றும் இறைவனைச் சுட்டிக்காட்டி, ''தோடுடைய செவியன்....'' என்ற பதிகத்தைப் பாடினார்.

இத்தலத்தில் வீற்றிருக்கும் சட்டைநாதருக்குக் கூறப்படும் கதை ஒன்றுள்ளது. மாவலியிடம் மகாவிஷ்ணு மண்கேட்டுப் பெற்ற பின்பு செருக்குற்றுத் திரிகின்ற வேளையில், வடுகநாதர் சென்று தம் திருக்கரத்தால் மகாவிஷ்ணுவை மார்பில் அடித்து வீழ்த்தினார். இலக்குமி மாங்கல்யப் பிச்சை கேட்க அவ்வாறே அருள் செய்ய மகாவிஷ்ணு உயிர் பெற்றெழுந்து வணங்கினார். தம் தோலையும் எலும்பையும் அணிந்து கொள்ளுமாறு அவர் வேண்ட, இறைவனும் எலும்பைக் கதையாகக் கொண்டு, தோலைச் சட்டையாகப் போர்த்து அருள் செய்த வடிவம்தான் சட்டைநாதர் வடிவம் என்பதாகும். பன்னிரு ஊழிகள் தோறும் அறியாதிருக்கும் பெருமை வாய்ந்த இத்தலம் பன்னிரு பெயர்களைப் பெற்ற தலமாகும். 1. பிரமபுரம், 2. வேணுபுரம், 3. புகலி, 4. வெங்குரு, 5. தோணிபுரம், 6. பூந்தராய், 7. சிரபுரம், 8. புறவம், 9. சண்பை, 10. காழி, 11. கொச்சைவயம், 12. கழுமலம் என்னும் பன்னிரு பெயர்களும் முறையே பன்னிரு ஊழிகளிலும் உண்டானவை. இவை திருமுறை பன்னி ரண்டினையும் நினைவூட்டும் வண்ணம் அமைந்துள்ளன.

சிவபெருமானின் திருமொழிதான் தன் வழியாக வெளிவந்துள்ள திருப்பாடல்கள் என்று சம்பந்தர் உறுதிபூண்டார். இவ்வுண்மை புலப்படத் தீயின்கண் திருஏட்டை இடுவதற்குத் திருவாணை பெறத் திருக்கையால் திருமாமறையினைத் தாமே மறித்துப் பார்த்தருளினார். இக்குறிப்பினை ''வல்லதோ ரிச்சையால் வழிபாடிவை பத்தும் '' என்னும் மறைமொழி வலியுறுத்துகின்றது.

## திருவைத்தீஸ்வரன் கோயில்

'திருப்புள்ளிருக்குவேளூர்' என்னும் பெயர் கொண்ட தலம் வைத்தீஸ்வரன் கோயில் என அழைக்கப் பெறுகின்றது. திருப்புள்ளிருக்கு

வேளூர் என்பது சம்பாதி - சடாயு என்னும் புள்ளரையர் இருவரால் வழிபடப்பட்டமையால் புள்ளூர் என்றும், இருக்கு மறையால் வழிபடப்பட்டமையால் இருக்கூர் என்றும், முருகவேள் வழி பட்டமையால் வேளூர் என்றும் பெயர் பெற்றதாகக் கூறுவர். நோய் தீர்க்கும் தலமாகத் திகழும் இச்சன்னதியில் வழங்கப்படும் சந்தனக் குழம்புருண்டையை (மருந்துப் பொட்டலம்) உட்கொண்டு, சித்தாமிர்த தீர்த்தத்து நீரைப் பருகி வந்தால் எக்கொடிய நோயும் அகன்றுவிடும். இங்கு உறையும் இறைவனின் பெயரே வைத்தீஸ்வரன் என்பதாகும். இறைவி தையல்நாயகியார்.

## திருமணஞ்சேரி

"துள்ளு மான்மறி தூமழு வாளினர்
வெள்ள நீர்கரந் தார்சடை மேலவர்
அள்ள லார்வயல் சூழ்மணஞ் சேரிஎம்
வள்ள லார்கழல் வாழ்த்தல்வாழ் வாவதே"

என்று சம்பந்தர் பாடும் திருமணஞ்சேரித் திருத்தலம் குற்றாலத்திற்கு அருகில் உள்ளது. இத்திருத்தலத்தில் கருவுற்றிருந்த நங்கையர் இருவர் பிள்ளை பிறக்கும்போது ஆணும் பெண்ணுமாகப் பிறந்தால் அவ்விரு வர்க்கும் திருமணம் செய்விப்போம் என்று உறுதிபூண்டனர். ஒருத்திக்கு பெண் குழந்தை பிறக்க மற்றொருத்திக்கு ஆமை பிறந்தது. தாங்களுக்குள் ஏற்படுத்திக் கொண்ட உறுதிப்படி ஆமைக்குப் பெண் கொடுக்க இரண்டாமவள் மறுத்துவிட, ஆமை சிவபெருமானை நோக்கித் தவமிருக்க, இறைவன் அருளால் ஆமைக்குத் திருமணம் நடந்ததாக வரலாறு. ஆனால் இன்றும் இத்திருக்கோயிலில் திருமணமாகாத, திருமணம் தடைப்பட்டுக் கொண்டேயிருக்கின்ற ஆண்களும் பெண்களும் இறைவனை வேண்டிக் கொள்ள ஒரு ஆண்டுக்குள் அவர்களுக்குத் திருமணம் கைகூடிவிடும் என்பது நம்பிக்கையின் அடிப்படையில் வழிபாடு செய்வது நடைபெற்றுக் கொண்டுள்ளது. இருமனங்களைத் திருமணத்தில் இணைத்து வைப்ப தாலேயே இத்தலம் இப்பெயர் பெற்றுள்ளது.

## திருப்பனந்தாள்

'தாடகையீச்சரம்' என்று வழங்கப்படும் இத்தலத்தில் தாடகை என்னும் அம்மையார் உண்மையான அன்போடும் பக்தியோடும் சிவபெருமானை வழிபட்டார். அவருடைய அன்பின் பொருட்டுச் சிவபெருமான் சாய்ந்தருளினார். இதையறிந்த மன்னன் யானையையும் தானையையும் கொண்டு இறைவனை நேர்செய்ய முயன்றும் முடிய வில்லை. இதையுணர்ந்த குங்குலியக்கலய நாயனார் இங்கு வந்து சிவலிங்கத்தின் மேல் கயிறு பிணித்துத் தம் கழுத்தில் கட்டி இழுத்தார்.

அன்பிற்கு எளியனாகிய இறைவன் நேர்கொண்டு நின்று அருளிய திருக்காட்சியை சேக்கிழார் குறிப்பிடுகின்ற பெருமை வாய்ந்த திருத்தலமாகும். இத்தலத்தை,

**"கண்பொலி நெற்றியினான் திகழ கையிலொர் வெண்மழுவான்**
**பெண்புணர் கூறுடையான் மிகுபீடுடை மால்விடையான்**
**விண்பொலி மாமதிசேர் தரு செஞ்வடை வேதியனூர்**
**தண்பொழில் சூழ்பனந்தாட் டிருத்தாடகை யீச்சரமே"**

என்ற பாடலில் சம்பந்தர் போற்றுகின்றார்.

### திருவைகாவூர்

**"கோழைமிட றாககவி கோளும்இல வாகஇசை கூடும் வகையால்**
**ஏழைஅடி யாரவர்கள் யாவைசொன சொல்மிகழும் ஈசனிடமாம்**
**தாழைஇள நீர்முதிய காய்கமுகின் வீழநிரை தாறுசிதறி**
**வாழைஉதிர் வீழ்கனிகன் ஊறிவயல் சேறுசெயும் வைகாவிலே"**

என்ற பதிகத்தில் 'திருவைகாவூர்' தலம் சுட்டப்படுகின்றது. இமய தீர்த்தமும் வில்வமரமும் உள்ள இத்தலத்தில் வேடன் ஒருவன் புலிக்கு அஞ்சி ஒருநாள் இரவு இத்திருவூரில் உள்ள வில்வமரத்தில் ஏறிக் கொண்டான். சிவராத்திரியாகிய அன்று இரவு முழுவதும் அவ்வேடன் வில்வ இலையைப் பறித்துக் கீழே போட்டுக் கொண்டே இருக்க, கீழே இருந்த சிவலிங்கத்திற்கு அபிடேகமாக அமைந்ததால் இறைவன் அருளால் அவ்வேடன் வரம் பெற்றான் என்பது குறிப்பிடத்தக்கது.

### திருச்சி

'தென்கயிலாயம்' என்று குறிப்பிடப்பெறும் திருச்சியில் உறையும் இறைவனின் திருநாமம் 'தாயுமானவர்'. சிவபக்தியில் மூழ்கியிருந்த மாது ஒருத்தி தன் மகப்பேற்றுக் காலத்தில் உதவுவதற்கு யாரும் இல்லாதபோது சிவபெருமானே தாயைப்போல் வந்து தாயிற்சிறந்த தயவானாக உதவி புரிந்து அருளியதால் தாயுமானவர் என்னும் திருப்பெயர் வழங்கப்படுகின்றது.

**"நன்றுடையானைத் தீயதிலானை நரைவெள்ளேறு**
**ஒன்றுடையானை யுமையொருபாகம் உடையானைச்**
**சென்றடையாத திருவுடையானைச் சிராப்பள்ளிக்**
**குன்றுடையானைக் கூறஎன்னுள்ளங் குளிரும்மே"**

என்று சம்பந்தர் பாடலில் இடம்பெறும் தலத்தில் தாயுமான அடிகள் தங்கி அருமறை கேட்டார். முதல் மகேந்திரவர்மனால் தோற்றுவிக்கப் பட்ட இக்கோயிலின் மலை உச்சியில் உச்சிப்பிள்ளையார் திருக்கோயில் உள்ளது. பாடலிபுத்திரலமண் பள்ளியொடும் பாழிகளும் கூட இடித்துக் கொணர்ந்து குணதரேச்சரம் கட்டியதைக் கூறும் எட்டு வடமொழிச்

செய்யுளால் ஆன கல்வெட்டு இங்குள்ளது. இது இந்திரன், நான்முகன், அனுமன், நாககன்னியர், திரிசிரன் ஆகியோர் வழிபட்ட திருவூராகும்.

## ஆலந்துறை (திருப்புள்ளமங்கை)

"மன்னானவன் உலகிற்கொரு மழையானவன் பிழையில்
பொன்னானவன் முதலானவன் பொழில்சூழ்புள மங்கை
என்னானவன் இசையானவன் இளஞாயிறின்சோதி
அன்னானவன் உறையும்மிடம் ஆலந்துறையதுவே"

என்று சம்பந்தர் பாடும் 'ஆலந்துறை' வானவர் அமுதம் கடைந்தபோது வெளிப்பட்ட பெருநஞ்சினை சிவபெருமான் உண்டு திருமிடற்றில் அடக்கிய தலமாகும். இதனால் இத்திருவூர் ஆலந்துறை எனப்பட்டது. இறைவன் பசுபதிநாதர்: இறைவி பால்வளை நாயகி. இறைவன் நஞ்சுண்ட அந்நேரம் பிரதோச காலமாகக் கருதப்பட்டு அவ்வேளையில் சிவதலங்களில் விசேடப் பூசைகள் நடத்தப் பெறுகின்றன. வழிபாடுகள் கூட அமுதம் கடைவதுபோல அரைவட்டப் பாதையில் மட்டுமே சன்னதி வலம் வருதல் குறிப்பிடத்தக்கது.

## திருக்குடமூக்கு

கும்பகோணத்தில் இருக்கும் கும்பேசரின் திருத்தலமாகும். மாசி மாதத்தில் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை நிகழும் மாசிமகத்தன்று புனிதமான கங்கை முதல் பெருந்தீர்த்தம் யாவும் வந்துகூடி ஆடி வழிபடுகின்றன என்பது வரலாறு. கும்பேசர் அருள்புரியும் ஏழு திருவிழா ஊர்களாக, 1. கும்பகோணம், 2. கலயநல்லூர், 3. வலஞ்சுழி, 4. தாராசுரம், 5. சுவாமிமலை, 6. கொட்டையூர், 7. மேலைக் காவிரி ஆகியவற்றைக் குறிப்பிடுவர். கும்பேசர் மங்கள நாயகி அம்மையாருடன் வீற்றிருக்கும் இத்தலம் சம்பந்தரின் மூன்றாம் திருமுறையில் "கழைவளர் கவ்வைமுத்தங் கமழ் காவிரியாற்றயலே" என்னும் பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது. 'திருவீழிமிழலை'யில் சம்பந்தரும் அப்பரும் சந்தித்து மகிழ்ந்தனர். இருவரும் இறையருளால் படிக்காசு பெற்று, பஞ்சத்தால் வாடிய மக்களுக்கு உதவினர். சம்பந்தர் வாசியுள்ள காசு முதலில் பெற்றுப்பின் இறைவனை வேண்டிப் பாடி வாசி நீங்கப் பெற்றார். திருமறைக் காட்டில் நெடுநாள் திறக்கப்படாமல் இருந்த கோயிற் கதவுகளைப் பண்ணினோர் மொழியாள் என்னும் பதிகம் பாடி அப்பர் திறக்கச் செய்ய, சதுரம்மறை என்ற பதிகம்பாடி சம்பந்தர் அக்கதவுகளை மூடச்செய்தார்.

## திருவாவடுதுறை

திருமூலர் இத்தலத்தில் அரச மரத்தடியில் யோகத்தில் இருந்து ஆண்டுக்கொரு திருமந்திரமாக மூவாயிரந் திருமந்திரங்கள் கொண்ட

தனித்தமிழ் ஆகம முறையினை அருளிச் செய்த பெருமை வாய்ந்த தலமாகும்.

"இடரினுந் தளரினும் எனதுறு நோய் தொடரினும் உனகழல்
தொழுதெழுவேன்
கடல்தனி லமுதொடு கலந்த நஞ்சை மிடறினி லடக்கிய
வேதியனே
இதுவோஎமை ஆளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோஉனதின் னருளாவடுதுறை அரனே"

என்னும் பதிகத்தில் சம்பந்தர் குறிப்பிடுகின்றார். தமிழ் இலக்கியத்தில் தனித்தமிழ் ஆகமமாகிய திருமந்திரம் உருவாதற்குக் காரணமாக அமைந்த புகழ்பெற்ற தலமாகும்.

**பிற தலங்கள்**

நாவுக்கரசர் அரவம் தீண்டிய அப்பூதியடிகளின் பிள்ளையை 'ஒன்றுகொலாம்' என்னும் பதிகம் பாடி உயிர்ப்பித்த கதலிவனமாகிய திருத்தலம் **திருப்பழனம்** (திருமுறை-1) பரசுராமர் தன் தாயைக் கொன்ற பழி நீங்குவதற்காக சிவபெருமானை வழிபட்ட ஆலமரம் தலவிருட்சமாக விளங்கும் **திருப்பழுவூர்** (திருமுறை-2) மார்க்கண்டேயர் வழிபட்ட திருவூராகவும், வழிபாட்டிற்காக பால்பெருக்கெடுத்தோடச் செய்த திருவூராகவும் திகழும் **திருப்பாற்றுறை** (திருமுறை-1). அகத்தியமுனி 'ஈ' வடிவம் கொண்டு வழிபட்ட திருவிங்கநாதமலை என்று அழைக்கப் படும் **திருவீங்கோய்மலை** (திருமுறை-1). நான்முகனும் உதங்கமுனிவனும் வழிபட்ட காலங்கள் ஐந்திலும் சிவபெருமான் ஐவேறு நிறங்களாகக் காட்சி கொடுத்து பஞ்சவருணநாதர் என்னும் திருப்பெயர் பெற்ற **திருமூக்கீச்சரம்** (திருமுறை-2)

மேலும் திருமால் மாணிக்கத்தை வைத்து வழிபட்ட **திருவாழ் கொளிறதூர்** (திருமுறை-1). இந்திரனின் குற்றத்தை இறைவன் பொருத்து அருளிய **திருக்கருப்பறியலூர்** (திருமுறை-2). உமையவள் இறையிட மிருந்து அருமறையாகிய ஓங்கார உபதேசம் பெற்ற **திருவோமாம்புலியூர்** (திருமுறை-3). இந்திரன் வேண்ட அமுதம் உண்டாகும்படி வரம் பெற்ற **திருக்கடம்பூர்** (திருமுறை-3). இறைவனுக்கு வரிப்பணத்தில் திருக்கோயில் கட்டியதால் தண்டனைக்கு அஞ்சி உயிர்நீத்த அடியவரை இறைவன் உயிர்பித்த **திருமங்கலக்குடி** (திருமுறை-3) முருகப்பெருமான் சூரபன்மாவை அழிக்க சிவபெருமானை வழிபட்டுப் படை பெற்ற சிறப்பு வாய்ந்த **திருச்சேய்ஞலூர்** (திருமுறை-1). குருதிவழி சிவலிங்கம் வெளிப்பட்டு மன்னனுக்கு அருள் வழங்கிய **திருந்துதேவன்குடி** (திருமுறை-3) சிவராத்திரியன்று அகத்தியமாமுனி வந்து வழிபடும் சிறப்புப் பெற்ற

**திருவியலூர்** (திருமுறை-1) சூல்கொண்ட பெண்ணொருத்தியின் நீர் தாகம் தீர்ப்பதற்காக இறைவன் தென்னங்குலையை வளைத்துக் கொடுத்து 'குலைவளைநாதர்' எனப் பெயர்பெற்ற **திருவடகுரங்காடு துறை** (திருமுறை-3). சிவனை நினைந்து முறையாக திருப்பதிகத்தை ஓத எல்லா வழக்குகளும் வெற்றி பெறும் துன்பம் நீக்கும் தலமாக விளங்கும் **திருநெடுங்களம்** (திருமுறை-1). நந்திகள் சிறிது விலகி நின்று இறைவனைக் காணும் வகையில் அமைந்ததும், சம்பந்தப் பெருமானுக்கு இறைவன் முத்துப்பந்தல் கொடுத்து அருள்புரிந்ததுமாகிய **திருப்பட்டீச்சரம்** ஆகிய திருத்தலங்கள் பலவற்றைத் தன் திருப்பதிகங்களில் சம்பந்தப் பெருமான் சுட்டிப் போற்றுகின்றார்.

தேவார முறைவைப்பின்படி திருஞானசம்பந்தரின் தேவாரம் முதல் மூன்று திருமுறைகளாக விளங்குகின்ற மொத்தத் திருப்பதிகங்களின் எண்ணிக்கை 16,000 ஆகும். இம்மூன்று திருமுறைகளிலும் போற்றிப் பாடப்பட்ட திருத்தலங்களுக்கு நடைப்பயணமாகச் சென்று இறைவனைக் கண்டு போற்றிப் பக்தியில் ஊறித் திளைத்தவர் சம்பந்தப் பெருமான் என்பதை இக்கட்டுரை வாயிலாக அறிய முடிகிறது.

**நமச்சிவாயவே ஞானமும் கல்வியும்**
**நமச்சிவாயவே நான் அறிஇச்சையும்**
**நமச்சிவாயவே நாநவின்று ஏத்துமே**
**நமச்சிவாயவே நன்னெறி காட்டுமே**

# 75. சம்பந்தர் கவித்திறன்

ந. முருகேசன், திருப்பனந்தாள்.

சமண, பௌத்த சமயங்களின் நெருக்குதல்களில் இருந்து சைவத்தைக் காத்தவர்; அற்புதங்கள் நிகழ்த்தியவர்; சாதி வேற்றுமைகளைத் தகர்க்கப் புரட்சிகள் செய்தவர்; மனிதநேயத்தோடு சமூகத் தொண்டாற்றியவர்; மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம் என்ற நம்பிக்கை ஊட்டியவர்; பெண்மையைப் போற்றியவர் என்று போற்றப்படும் சம்பந்தர் மிகச் சிறந்த கவிஞர். அவர்தம் ஒப்பற்ற கவித்திறனைச் சிந்திப்பது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

ஒரு கவிதை இலக்கியம், மிகச் சிறந்த கவிதை இலக்கியமாகத் திகழ, அதனுள் கருத்து, கற்பனை, உணர்ச்சி, வடிவம், ஓசை, புதுமை முதலியன நன்றாக அமைந்திருக்க வேண்டும். இவை நன்றாக அமைய வில்லையானால், படைப்பு, மக்கள் மத்தியில் நிலையபெறாது. ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளாய் மக்கள் மத்தியில் நிலைபெற்று, இன்னமும் ஒலித்துக் கொண்டிருக்கும் சம்பந்தர் தேவாரம், சிறந்த - மிகச் சிறந்த கவிதை இலக்கியமாகத் திகழ்வது, அதனுள் கருத்து, கற்பனை முதலியன நன்றாக அமைந்துள்ளமையால்தான்.

தலங்கள்தோறும் சென்று, தோத்திரப் பாடல்களாகப் பாடினாலும், தம் பாடல்கள் வெறும் தோத்திரங்கள் என்ற நிலையினைக் கடந்து, சிறந்த கவிதைகளாக விளங்க வேண்டும் என்று திட்டமிட்ட சிந்தனையோடு பாடியுள்ளார் சம்பந்தர். பாடி வெற்றியும் பெற்றுள்ளார். வெற்றி பெற்றமைக்கு அவர்தம் கவித்திறனே காரணமாகும்.

## கருத்து

சம்பந்தர் ஆன்மிகவாதி; சைவம் வளர்க்கப் பிறந்தவர். எனவே சமயப் பின்னணியோடு, மானிட வாழ்க்கைக்கு உதவும் நல்ல கருத்துக்களை நேர்த்தியாகக் கூறுகிறார். மனிதன் பிழை செய்யக் கூடியவன்; ஆணவ முனைப்புடையவன். இம்மானிட இயல்பை உணர்ந்த சம்பந்தர், இதிகாச, புராணக் கதைகளைக் காட்டி, மக்கள் அறியாமையால் செய்யும் பிழைகளைப் பொறுத்தருளுமாறு உள்ளன்போடு, உருகி வேண்டினால், எல்லாம் வல்ல இறைவன் பொறுத்தருள்வான் என்ற உயர்ந்த கருத்தையும், ஆணவ முனைப்பால் ஆண்டவனைக் காண இயலாது என்ற சீரிய

கருத்தையும் பதிகந்தோறும் கூறிச் செல்கிறார். மானிட மனத்தை இறைவன்பால் திறமையோடு திருப்புகிறார்.

விலங்கு வாழ்க்கையிலிருந்து, மக்களை வேறுபடுத்திக் காட்டுவது ஒழுக்க நெறியாகும். இவ்வொழுக்க நெறியே சராசரி வாழ்விலும் சமய வாழ்விலும் இன்றியமையாததாகும். இவ்வொழுக்க நெறியை,

**"ஒல்லையாறி உள்ளமொன்றிக் கள்ளமொழிந் துவெய்ய**
**சொல்லையாறித் தூய்மைசெய்து காமவினைய கற்றி"**

என்ற திருவலிவலத் தேவாரத்தில் சிறப்பாகப் பாடியருள்கிறார். கள்ள நினைவுகளையும் காம நினைவுகளையும் அகற்றியபின்தான் கண்ணுதற் கடவுள் நாமம் ஏத்தலாம் என்று சுட்டுகிறார். கருத்தை இசையோடு குழைத்துக் கூறுகிறபோது, மனதில் மென்மையாகச் சென்று தங்கும் என்ற உளவியல் அறிந்து பாடுகிறார் சம்பந்தர்.

நாளை, மறுநாள் என்று இறைவழிபாட்டிற்கான காலத்தைத் தள்ளிப் போடாமல், பூசைக்கான பூ சுமந்து, பொன்னார் மேனியனின் நாமம் கேட்டு, மனத்தை உருக்கும் அய்ந்தெழுத்தை ஓதி உய்வுபெற வேண்டும் என்பதைத் தம் நெஞ்சத்திற்குக் கூறுவது போல,

**"நீநாளும் நன்னெஞ்சே நினைகண்டாய் யாரறிவார்**
**சாநாளும் வாழ்நாளும் சாய்க்காட்டெம் பெருமாற்கே**
**பூநாளும் தலைசுமப்பப் புகழ்நாமம் செவிகேட்ப**
**நாநாளும் நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே"**

என்று பாடுகின்றார். "யார் அறிவார் சாநாளும் வாழ்நாளும்" என்று மின்னல் வீச்சைப் போன்ற கருத்தை, பாட்டின் இடையிலே மின்ன வைத்து, நிலையாமையை உணர்த்தி, இறைவழிபாட்டில் மானிடனை வழிநடத்தும் கவித்திறன் எல்லோர்க்கும் வரக் கூடியதன்று.

**கற்பனை**

மனித மனத்தை ஈர்க்கக் கூடியது கற்பனையாகும். "கவிதை என்றதும் கற்பனையே பலருக்கும் நினைவுக்கு வருகிறது. கவிதையின் பல பண்புகளிலும் கற்பனையே பிரசித்தமாய் உள்ளது என்பதனையே இந்நிலைமை தெளிவுறுத்துகிறது. அதாவது கற்பனையே கவிதையின் மூச்சாகக் கருதப்படுகிறது" என்ற க. கைலாசபதியின் கூற்று, கவிதையில், கற்பனைக்குள்ள இன்றியமையா இடத்தைச் சுட்டிக் காட்டுவதாகும். தம் படைப்புகள் மக்கள் மனதில் தங்கிட இக்கற்பனையை அழகோடு பதிகந்தோறும் அமைத்துள்ளார் சம்பந்தர்.

இயற்கைக் காட்சிகள் கவிஞன் மனத்தை ஈர்த்துப் பாப்புனைய வைக்கக் கூடியவை. "இலக்கியம் படைத்த எப்புலவனும் எழுதாச்

சித்திரமாய் இலங்கும் இயற்கையின் எழிலைப் பாடாமல் விடுவதில்லை'' என்பர் சோ. ந.கந்தசாமி. சம்பந்தர் மட்டுமென்ன விதிவிலக்கா? இயற்கை அழகில் ஈடுபட்டு நிறையவே பாடியுள்ளார். திருவீழிமிழலையின் இயற்கைவளம் சம்பந்தரின் கவிதை மனத்தில் கற்பனையைத் தூண்டி விடுகிறது. தூண்டவே,

**''செறியிதழ்த்தா மரைத்தவிசில் திகழ்ந்தோங்கும்**
**இலைக்குடைக்கீழ்ச் செய்யார் செந்நெல்**
**வெறிகதிர்ச்சா மரையிரட்ட இளஅன்னம்**
**வீற்றிருக்கும் மிழலை யாமே''.**

என்று புனைகின்றார். தாமரைப் பூவானது சிம்மாசனமாக, இலைக் குடைக்கீழ், நெற்கதிர்கள் கவரிவீச, இளவன்னம் அரசாக வீற்றிருக்கின்றதாம். கற்பனை வளம் மிக்க இவ்வறுசீர் விருத்தப்பாடலை மக்கள் மனம் எப்படி மறந்து போகும்?

கலைத்திறமையைக் காட்டிக் கொற்றவர்களிடம் பரிசுகள் பெற்று வாழ்க்கை நடத்திய சமுதாயத்தைக் கண்டவர் சம்பந்தர். இயற்கை வருணையில் இதனையேற்றி,

**''வரைசேரும் முகில்முழவ மயில்கள்பல**
**நடமாட வண்டு பாட**
**விரைசேர்பொன் இதழிதர மென்காந்தள்**
**கையேற்கும் மிழலை யாமே''**

என்று பாடுகின்றார் சம்பந்தர். வண்டு பாட, முகில் முழவொலி எழுப்ப, மயில் நடம் கண்டு மகிழ்ந்த கொன்றை, பொன்போன்ற பூக்களைப் பரிசாக வழங்க, காந்தள் கைநீட்டி வாங்குவதாக ஒளிரும் கற்பனை எவர் மனத்தைக் கவராமல் போகும்!

ஆண்டவனின் சந்நதிக்குச் சென்று, அவனைப் புகழ்ந்தும் போற்றியும் பாடும் தோத்திரப் பாடல்களையெல்லாம், அற்புதமான கற்பனைகளால், மனம் கவரும் கவிதைகளாக்குவது, சம்பந்தரின் ஆற்றல்மிக்க திறனேயாகும்.

## உணர்ச்சி

உணர்ச்சி வெள்ளமாய்ப் பெருக்கெடுத்தோடும் போதுதான் கவிதை பிறக்கிறது. எனவேதான் ''கவிதையின் முக்கியமான பாகம், ஜீவசக்தி. அது கவிஞனது உள்ளத்தின் உத்வேகத்தைப் பொறுத்துத்தான் இருக்கிறது'' என்று புதுமைப்பித்தன் குறிப்பிட்டார். பக்தி உணர்ச்சி வயப்பட்ட சம்பந்தர் ''உள்ளம் குளிர்ந்த போதெல்லாம் உவந்து உவந்து உரைப்பனே'' என்று கூறிக் கவிதை பாடியதால், பாடல்களில் உணர்ச்சி தானாக

வந்துவிடுகிறது. உணர்ச்சி இல்லாத பாடல்கள் நீரில்லா நதிகள் என்பதை உணர்ந்த சம்பந்தர், தம் படைப்புகளை, நிலைபேறு உடையனவாக ஆக்க, உணர்ச்சி மிக்கவையாக உருவாக்கினார். தம் மனத்தை நோக்கிச் சொல்வது போல, பிரமபுரத்துப் பெருமானிடம் தாம் கொண்ட பக்தியை வெளிப்படுத்தும் பாங்கு உணர்ச்சி மயமானது.

**''நன்னெஞ்சே உனைஇரந்தேன் நம்பெருமான் திருவடிக்கே
உன்னஞ்செய் திருகண்டாய் உய்வதனை வேண்டுதியேல்
அன்னஞ்சேர் பிரமபுரத் தாரமுதை எப்போதும்
பன்னுஞ்சீர் வாயதுவே பார்கண்ணே பரிந்திடவே''**

தம்மையாட்கொண்ட சிவபிரானை, ஆரமுதாக உருவகிப்பதும், அப்பெருமானை எப்போதும் புகழ்ந்து பாடிக் கொண்டிருக்க விரும்புவதும் அவர்கொண்ட பக்தி உணர்ச்சியின் வெளிப்பாடு. இவ்வெளிப்பாட்டில், அவர்தம் பக்தி உணர்ச்சி சுழித்தோடும் நதியோட்டமாய்த் தெரிகிறது.

காதல் என்பதில் மக்கள் மனம் எளிதில் பதியும் என்பதை நன்கறிந்த சம்பந்தர், பக்தி உணர்ச்சியை வெளிப்படுத்த நாயக நாயகி பாவத்தைக் கையாள்கிறார். நாயக நாயகி பாவத்தில், பக்திக்கவிதை இயற்றுவது கத்திமேல் நடப்பதைப் போன்றதாகும். சற்றுத் தடம்புரண்டாலும் கவிதை ஏமாற்றிவிடும். வெற்றிகரமாகப் பாடுகின்றார் சம்பந்தர்.

**''சிறையாரும் மடக்கிளியே இங்கேவா தேனொடுபால்
முறையாலே உணத்தருவன் மொய்பவளத் தொடுதரளம்
துறையாரும் கடல்தோணி புரத்தீசன் துளங்குமிளம்
பிறையாளன் திருநாமம் எனக்கொருகாற் பேசாயே''**

பிறையாளன் திருநாமம் எனக்கொருகால் பேசாயே என்ற கவர்ச்சி கரமான மாயத் தொடரில் பக்தி உணர்ச்சியை நேர்த்தியாக வெளிப்படுத்து கிறார் கவிஞர்.

**வடிவம்**

கவிஞரும் திறனாய்வாளருமான ரகுநாதன், 'இலக்கிய விமர்சனம்' என்ற தம் நூலில், கவிதையைப் பற்றிய விமர்சனம் எழுதும்போது, ''எந்தக் கலைக்கும் ரூபம், உருவம் வேண்டும். ரூபமற்று, ஆதியநாதியாய் அங்கிங்கெனாதபடி இருப்பது கடவுளுக்குப் பொருந்தலாம்; கலைக்குப் பொருந்தாது'' என்று எழுதுவதோடு ''இலக்கியத் துறைகளில் கவிதைத் துறையே தலைசிறந்ததாக விளங்குகிறது. கவிதைத் துறைக்கு இந்தச் சக்தியைத் தருவது எது? கவிதைக்கென கவிஞன் கையாளும் இலக்கணம், அதாவது உருவ அமைப்பு, பயன்படுகிறது'' என்று எழுதி வடிவத்தின் பயன்பாட்டைக் குறிப்பிடுவார். எனவே மிகச் சிறந்த கவிஞன், கவிதையின் வடிவ அமைப்பில் சிந்தை செலுத்துவது இயல்பு.

தோத்திரப் பாடல்களாகப் பாடிக் குவித்த சம்பந்தர் சலிப்புத் தோன்றாமல் இருக்கவும், சுவை கருதியும் பல்வேறு வகையான பாவடிவங்களைக் கையாண்டுள்ளார். காப்பியக் கவிஞர்கள் கதை யோட்டத்திற்கேற்பப் பாவடிவங்களை மாற்றிச் செல்வதுபோலச் சம்பந்தர் தம் கவித்திறன் வெளிப்படும் வண்ணம் பற்பல பாவடிவங்களில் பாடியுள்ளார்.

ஆசிரியப்பா, ஆசிரியத்துறை, ஆசிரிய விருத்தம், கலித்துறை, கலிவிருத்தம், தரவுக் கொச்சகக்கலிப்பா, வஞ்சித்துறை, வஞ்சி விருத்தம், குறள்தாழிசை, ஈரடிமேல்வைப்பு, நாலடிமேல்வைப்பு, திருமுக்கால் எனப் பத்துக்கும் மேற்பட்ட பாவடிவங்களைக் கையாண்டுள்ளார் சம்பந்தர். எல்லா வடிவங்களையும் செம்மையாகக் கையாண்டுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. இத்தனை வகை வடிவங்களைத் திருமுறைக் கவிஞர் களில் இவர் ஒருவரே கையாண்டுள்ளார் என்பதும், கையாண்டு வெற்றி பெற்றுள்ளார் என்பதும் பாராட்டுதலுக்கும் போற்றுதலுக்கும் உரியது. ஈரடிமேல்வைப்பு, நாலடிமேல்வைப்பு, திருமுக்கால் என்பன வெல்லாம் பிறர் கையாளாத பாவடிவங்கள் எனலாம்.

பதிகம் என்ற இவர் தம் இலக்கிய வகை, பல்வேறு வகையான - செம்மையான பாவடிவங்களால் மக்கள் மனதில் நிலைபெற்றது.

**ஓசை**

கவிதையைச் சிறப்புடையதாக்குவதும் கவர்ச்சி உடையதாக்குவதும் அதில் வரும் ஓசையாகும். தமிழில் உள்ள யாப்பிலக்கண அமைப்பு, ஓசையை அடிப்படையாகக் கொண்டே உருவாக்கப்பட்டுள்ளது. யாப்பறிவும், புதுவது புனையும் ஈடுபாடும் மிக்க கவிஞர் சம்பந்தர், தம் பதிகங் களைப் பல்லாயிரம் பேர் பாடிக் களிப்பதை உணர்ந்தமையாலும், ஓர் ஊருக்கே ஒன்றுக்கு மேற்பட்ட பதிகங்கள் பாடுகின்ற ஆர்வம் தமக்கு ஏற்படுவதை உணர்ந்தமையாலும், பற்பல வகையான ஓசைகளில் பாக்களைப் பாடினால் நலம் எனக் கருதி பற்பல ஓசைகளில் பாக்களைப் பாடினார் போலும். பன்னூறு கவிதைகள் பாடுகின்றபோது வகை வகையான ஓசைகளில் பாக்களைப் புனைவது மகிழ்ச்சியைத் தரக் கூடியதல்லவா!

''ஒழுகலரி தழிகலியில் உழியுலகு
பழிபெருகு வழியை நினையா
முழுதுடலில் எழுமயிர்கள் தழுவுமுனி
குழுவினொடு கெழுவுசிவனைத்
தொழுதுலகில் இழுகுமலம் அழியும்வகை
கழுவுமுரை கழுமலநகர்ப்

பழுதிலிறை யெழுதுமொழி தமிழ்விரகன்
வழிமொழிகள் மொழிதகையவே''

என்றவொரு கவிதையை, சம்பந்தரின் படைப்புகளில் காணப்படும் ஓசைநயத்திற்கு எடுத்துக்காட்டாகக் காட்டலாம். இக்கவிதையில் காணப்படும் ஓசையின் செல்வாக்கை, வில்லிபுத்தூரார் பாரதத்திலும், பிற்காலப் பிரபந்தக் கவிஞர்களின் படைப்புகளிலும் காணலாம்.

**புதுமை**

சிறந்த கவிஞன், பழைய வடிவங்களைப் பின்பற்றிக் கவிதைகள் புனைவதோடு புதிய வடிவங்களையும் படைத்து, வெற்றி பெறுவான். ஞானப்பால் உண்டு ஞானக் கவிதைகள் பாடிய தமிழ்விரகர் சம்பந்தரும் பழைய வடிவங்களில் பாடிக் குவித்ததோடு, புதிய வடிவங்களைப் படைத்துப் புதுமை செய்து சாதனை படைத்துள்ளார். திருவேகபாதம், திருவெழுகூற்றிருக்கை, மாலைமாற்று, மொழிமாற்று, இயமகம், திருச்சக்கரமாற்று, மாவின்பாச்சல், திருச்சாளச்சதி போன்றவை இவர் தமிழுக்குச் செய்த புதுமை அணிகளாகும். தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு உதவிய இப்படைப்புகளை 'மூல இலக்கியம்' என்று சேக்கிழார் புகழ்வார். இன்று, இப்படைப்புகளைச் சோதனை முயற்சியென்றும், புதிய வகைகளைப் படைத்தருள வேண்டும் என்று விருப்பமென்றும், அறிவுப் புலமை வீறுகளை வெளிப்படுத்த வேண்டுமென்று ஈடுபாடென்றும் திருவாய்வாளர்கள் கருத்துரைப்பர்.

**அற்புதத் தொடர்கள்**

''கவிதை என்பது படிப்பவன் மனத்தில் சில கீறல்களை உண்டாக்க வேண்டும்; ஈரம் கொண்ட மண்ணில் தடம் பதிதல் போலப் படிப்பவன் உள்ளத்தில் தடப் பதிவு செய்தல் வேண்டும்'' என்பர். ''யாதும் ஊரே யாவரும் கேளிர்'' ''ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்'' என்பன போல அப்பதிவு அமையும். கவிஞர் சம்பந்தரும் இத்தகு அற்புதத் தொடர்களைத் தந்துள்ளார்.

**''இறைவன் கழலேத்தும் இன்பம் இன்பமே!''**

**''அழகராய் இருப்பார் இவர்தன்மை அறிவார்ஆர்!''**

**''என் உள்ளம்கவர் கள்வன்''**

**''சரண்புகுந்தார் தமைக்காக்கும் கருணையினான்''**

**''எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும் தன்னடியார்க்கு
இங்கேஎன் றருள்புரியும் எம்பெருமான்''**

**''நானாவித உருவாய்நமை யாள்வான்''**

**''தாயென நிறைந்ததொரு தன்மையினர்''**

''கண்ணினாற் காணவல்லார் அவர்கண் ணுடையார்களே''

''கல்லா நெஞ்சின் நில்லான் ஈசன்''

''பேராயிரமும் பிதற்றத் தீரும் பிணிதானே!''

''மண்ணில்நல்ல வண்ணம் வாழலாம்''

''தீவினைக்கோர் மருந்தாவான்''

''குற்றம் அறியாத பெருமான்''

''மன்னன்ஆனவன் உலகிற்கொரு மழையானவன்''

''நினைப்பவர் மனத்துளன்''

செந்தமிழ் வளர்த்த திருஞானசம்பந்தரின், காலத்தால் அழியாத அற்புதத் தொடர்கள் இவைகள்.

முழுப்பார்வையில் தமிழ்ஞானசம்பந்தரைப் பார்க்கிறபோது, அவர் அருளாளராகவும், ஆன்மீகவாதியாகவும், சைவம் பரப்பிய செம்மலாகவும் திகழ்வதோடு, முன்னோர் வகுத்த மரபில் நடந்து, தம் பின்னோர் இனிது நடந்து செல்லப் புது வழித்தடங்களை உருவாக்கிய மாபெரும் கவிஞராகவும் விளங்குவதை உணரமுடியும். அதனால்தான்,

''அருண மங்கலை உனது சிந்தை
தழைந்த பாலமு தூறினால்
அருண கொங்கையில் அதுபெ ருங்கவி
அலைநெ டுங்கடல் ஆகுமோ
வருண நன்கு கவுணி யன்சிறு
மதலை யம்புயல் பருகியே
பொருண யம்பெரு கவிதை யென்றொரு
புனித மாரி மொழிந்ததே''

(கவிராஜ பண்டிதர் மொழிபெயர்ப்பு)

என்று ஆதிசங்கரரின் சௌந்தர்யலகரி புகழ்கிறது. சம்பந்தரை, பொருள் நயம் பெரு கவிதை என்றொரு புனிதமாரி பொழியும் கவிமேகமாக உருவகித்திருப்பது நோக்கத்தக்கது.

# 76. சம்பந்தரின் சமயப்பரப்பு உத்தி

தி. ரமா, காரைக்குடி.

### சமயம் வளர்க்கும் சூழல்

திருநெறிய தமிழ் வளரத் திருஞானசம்பந்தர் திருத்தலங்கள் தோறும் சென்று இன்னிசைப்பதிகங்கள் பாடிச் சைவத்தை வளர்த்தார். அவர் வாழ்ந்த காலத்தில் சமண பௌத்த மதங்கள் தமிழகத்தில் நன்கு வேரூன்றியிருந்தன. சமண, பௌத்தம், சைவம் ஆகியன ஒன்றோ டொன்று போட்டியிட்டு வளர முயன்றன. இச்சமய வளர்ச்சியில் சைவ சமயத்தை வளர்க்கவும் நிலைநாட்டவும் சைவச்சான்றோர்கள் பெரும்பாடுபட்டனர். திருத்தலம் தோறும் சென்று நாடெங்கும் சிவனைப் போற்றிப்பாடிச் சமயத்தைப் பரப்பினர். அவ்வாறு திருத்தலங்கள் தோறும் சென்றுவந்த சிறிய பெருந்தகையார் என்று போற்றப்பெற்ற திருஞானசம்பந்தர், சிவனை வணங்கும்படியும் பிற சமயத்தைப் புறக்கணிக்கும்படியும் தம்முடைய பாடல்களில் வலியுறுத்தினார். ஒவ்வொரு தலத்தைப் பாடும்போதும் அயற்சமயத்தைப் புறக்கணிப்பதற் கெனத்தனியே ஒருபாட்டை ஒதுக்கி இக்கருத்தை அழுத்தமாகச் சம்பந்தர் எடுத்துரைத்தார். அதனால் அவர் மக்களிடையே சைவசமயச் சிந்தனையையும் சிவ வழிபாட்டையும் பரப்பினார்.

### சிவபெருமானை நாடுங்கள்

திருஞானசம்பந்தர் தம்முடைய பாசுரத்தில் தம் காலத்திலிருந்த சமண பௌத்தங்களைப் புறக்கணித்துச் சிவபெருமானை வணங்குமாறு வேண்டுகிறார். இவர் பாண்டிய நாட்டிலுள்ள திருக்கானப்பேரெயில் வந்து சிவனைப் பணிந்து பாடிய பதிகத்தில் ''சமண பவுத்த சமயங்களால் பயனில்லை கானப்பேரைத் தொழுங்கள்'' என்று அறிவுறுத்துகிறார்.

**''உறித்தலைச் சுரையொடு குண்டிகை பிடித்துச்சி**
**பறித்தலும் போர்த்தலும் பயனிலை பாவிகாள்**
**மறித்தலை மடப்பிடி வளர்இளங் கொழுங்கொடி**
**கறித்தெழு கானப்பேர் கைதொழல் கருமமே''** (3:26:10)

என்று அயற் சமயத்தாரைப் பாவிகள் என்று விளித்து அவர்களைத் தன் வழி வருமாறு பாசுரத்தில் சம்பந்தர் வேண்டுகிறார். இவ்வாறே திருக்காளத்தியைப் பாடும்போதும் ''வீங்கிய வுடலினர் விரிதரு

துவருடைப்பாங்கிலார் சொலைவிடும் பரனடி பணியுமின்'' (3:36:10) என்பர். பிற சமயம் விடுத்து மாறுவோர் சைவ சமயத்தின் பாலே வரல் வேண்டும் என்பதைச் சம்பந்தர் உறுதிப்படப் பேசுகிறார்.

**உரைநீத்து வருக**

திரு அம்பர் மாகாளத்தைப் பணிந்து பாடும் திருஞானசம்பந்தர் தெற்றெனச் சமண பவுத்தரை விடுத்துச் சைவத்தைப் பின்பற்ற வேண்டுகிறார்.

**''சாக்கியக் கயவர்வன் றலைபறிக்**
**கையரும் பொய்யினானும்**
**ஆக்கிய மொழியவை பிழையவை**
**ஆதலில் வழிபடுவீர்!**
**வீக்கிய வரவுடைக் கச்சையான்**
**இச்சையாக அவர்கட் கெல்லாம்**
**ஆக்கிய அரனுறை அம்பர்மா**
**காளமே அடை மினீரே''** (3:93:10)

சாக்கிய சமணர் மொழிகள் பொய்யானவை என்றும் அவர்களைக் கயவர் என்றும் சம்பந்தர் குற்றப்படுத்துகிறார். புறக்கணித்தற்குரியவற்றைப் பேசிச் சிவனடி பணிய அழைக்கின்றார். சிவனைப் பணிகின்ற தொண்டர்கள் சமண சாக்கியர் உரைக்கும் மொழிகளை விடுத்துச் சிவனடி பேணல் வேண்டும் என்பது சம்பந்தர் விருப்பம். அவ்வண்ணமே, திருவலஞ்சுழித் தொண்டர்களும் திகழுகின்றனர்.

**''குண்டரும் புத்தருங் கூறையின்றிக்**
**குழுவா ருரைநீத்துத்**
**தொண்டரும் தன்தொழில் பேணநின்ற**
**கழலா னழலாடி''** (3:106:10)

வலஞ்சுழி வாணன் அடிபணிவோம் என்று ஆளுடைய பிள்ளையார் பாடுகின்றார். 'உரைநீத்து' என்ற தொடர் சமண சாக்கியார் உரைக்கு மக்கள் செவி கொடுக்கலாகாதென்பதை உணர்த்துகிறது. அவர்வழிச் சென்று சமணபவுத்தர்களாக வாழாகாது என்று புலப்படுத்துகிறார்.

**அயற்சமயத்தார் வித்தாரம்**

சிவனடி பணிந்து சிவனைப் பணிக என்று சொல்ல வந்த சம்பந்தர், இதனை இவ்வாறே உரைக்காது, சமண சாக்கியர் உரைகளை இகழ்ந்திட வேண்டும் என்றும் இகழ்வோர் பின்பற்றுகின்ற இறைவன் சிவன் என்றும் பாடுகிறார்.

**''கடுமலி உடலுடை அமணரும்**
**கஞ்சியுண் சாக்கியரும்**

**இடுமற வுரைதனை யிகழ்பவர்**
**கருதுநம் மீசர் வானோர்''** (3:89:10)

என்றும் வருவது மேற்கூறிய உண்மையை வலியுறுத்தும். வேள்விக் குடிப் பாடலில், பழுக்கக் காய்ச்சிய இரும்பு போற் சுடும் வெயிலில் தவம் என்று நிற்கின்ற துறவிகளாகிய அமணரும் குண்டரும் இல்லறத்தாராகிய கொடியோரும் பவுத்தரும் விரும்பத்தக்க முகத்தோடு பேசுதலை வல்லவர். சிரிப்பை உண்டாக்கும் கதைகளைக் கட்டிப்பேசித் திரிபவர். ஆதலால் அவர் உரையையும் சரிதையையும் கொள்ளாது வேள்விக்குடிச் சிவன் அடியைச் சேர்ந்து உய்க என்பர் சம்பந்தர் (3:90:10).

## ஒழுங்கான பொய்மொழிகள்

சிவபெருமானை வணங்கிச் சிறப்பு எய்துக என்று வலியுறுத்தும் சைவ குரவர்களில் திருஞானசம்பந்தர், சமணர் சாக்கியர் அறிவுரை களைப் புறக்கணிக்க என்பர். வாழ்க்கையில் கொள்ள வேண்டியன, தள்ள வேண்டியன என்ற இரண்டும் கண்முன் காட்சி தரும். ஒன்று கையில் இருக்கும் போது, தள்ள வேண்டிய இன்னொன்றைத் தள்ளி விடவேண்டும், அவ்வாறாயின் எடுக்க வேண்டியதை எளிதில் எடுத்துக் கொள்ள முடியும். சீர்காழிப் பதிகத்தில்,

**''வேரியுமேணவ காழியொயே**
**யேனை நிணேமட ளோகரதே**
**தேரகளோடம் ணேநினையே**
**யேயொழிகாவண மேயுரிவே''** (3:117:10)

என்று பாடுகிறார். (''மணமும் பெருமையும் புதுமையுமுடைய சீர்காழிப் பெருமானே துன்பத்தையும் மிக்க அன்பையும் முறையே ஒழித்தாலும் அள்ளிக் கொள்ளுதலுமாகிய செய்கை யோகிகளுடைய செய்கையே; தேரர் அமணர்களின் உபதேசங்களையும் அவர்களை நினைத்தலையும் அவருடன் சேர்தலையும் ஒழித்தருள்வீராக; அறநெறிகளிற் சேராமற் காக்கும் பண்புகள் உமக்கு உரியவேயாகும்'' என்பது கருத்து.) சமண பவுத்த மதங்களைப் புறக்கணிக்கவும் அம்மதங்களைச் சாராதிருக்கவும் கழுமலக் கடவுள் அருள் செய்ய வேண்டும் என்பது ஞானசம்பந்தர் துணிவு.

சமணரும் சாக்கியரும் பேசுகின்ற மொழி ஒழுங்குடையன போலத் தோன்றும். ஆனால் அவை அனைத்தும் பொய்ம்மொழிகளே. இதனை,

**''நேசமில் மனச்சமணர் தேரர்கள்**
**நிரந்தமொழி பொய்கள் அகல்வித்து**
**ஆசைகொண் மனத்தையடி யார்அவர்**
**தமக்கருளும் அங்கணனிடம்''**

''பாசம் அறுத்தவனி யிற்பெயர்கள்
பத்துடைய மன்னவனைக்
கூசவகை கண்டுபின் அவற்கருள்கள்
நல்கவல கோகரணமே'' (3:79:10)

என்று சம்பந்தர் பாடுவர். சமணரும் தேரரும் கூறுவன ஒழுங்குடையது போலக் கூறுவன பொய்ம்மொழியாம்; அவற்றைக் கேளாத வண்ணம் செய்பவன் திருக்கோகரணச் சிவன்.

**மெய்ம்மொழியா? பொய்ம்மொழியே!**

சமணர் சாக்கியரிடமிருந்து மக்களை விடுவிக்க அவர்தம் உரைகள் பொய்ம்மொழிகள் என்றும் மெய்யல்ல என்றும் சம்பந்தர் பாசுரங்களில் பேசுகிறார்.

''சாக்கியர் சமண்படு கையர் பொய்ம் மொழி
ஆக்கிய உரைகொளேல் அருந்தி ருந்நமக்(கு)
ஆக்கிய அரனுறை அணிக ருக்குடிப்
பூக்கமழ் கோயிலே புடைபட் டுய்ம்மினே'' (3:21:10)

இதன்கண் பொய்ம்மொழி என்றும் அம்மொழிகளை மக்கள் கொள்ள வேண்டாம் என்றும் நவிலப்பட்டிருக்கிறது. வேறொரு பாடலில் ''குண்டாடிச் சமண்படுவார் கூறைதனை மெய்போர்த்து மிண்டாடித் திரிதருவா ருரைப்பன கண் மெய்யல'' (3:65:10) என்பர் சம்பந்தர். திருச்சக்கரப் பள்ளிப் பதிகத்தில் உடம்போர் சீவரர் ஊண் டொழிற் சமணர்கள் விடம்படும் உரையவை மெய்யல (3:27:10) என்று வருவதும் மேற்காட்டியதை வலிமைப்படுத்தும். இதனையே,

(அ) போதியார் பிண்டியார் என்றவப் பொய்யர்கள்
வாதினால் உரையவை மெய்யல........ (3:29:19)

(ஆ) கையிலுண் ணுங் கையருங் கடுக்கள்தின் கழுக்களும்
மெய்யைப் போர்க்கும் பொய்யரும் வேதநெறியை யறிகிலார்.
(3:53:10)

(இ) போதியர்கள் பிண்டியர்கள் போதுவழு
வாதவகை யுண்டுபல பொய்
ஓதியவர் கொண்டு செய்வ தொன்றுமிலை
நன்றதுணர் வீருரைமினோ (3:75:10)

(ஈ) நக் குரு வாயாவரும் துவராடை நயந்துடையாம்
பொக்கர்கள் தம்முரைகள் எவை பொய்யென எம்மிறைவன்
(3:61:10)

(உ) பள்ளியை மெய்யெனக் கருதன்மின (3:88:10)

**(ஊ) புத்தரொடு அமணர்பொய் பெயரும் நள்ளாறர்** (3:87:10)

என்று சம்பந்தர் தாம் பாடிய பாசுரங்களில் எல்லாம் சமணர், பவுத்தர் சாற்றுவன பொய் என்று தெற்றென நவில்கின்றார். ஆனால் அதற்கான காரணத்தை அவர் பாசுரங்களில் பேசிலர். மக்கள் அறிந்த உண்மை என்று கருதி அவ்வாறு கூறாது விடுத்தனராதல் சாலும். சமணர், சாக்கியர் உரையெல்லாம் பொய் என்று பகர்ந்து சைவம்மெய் என்று சொல்லித் திருஞானசம்பந்தர் சைவசமயத்தைப் பரப்புகின்றார்.

**அலர்தூற்ற**

அயற்சமயத்தார், சைவசமயத்தைத் தூற்றிப் பேசுவதைச் சம்பந்தர் ஒரு தொடரால் பாடலில் உணர்த்துகிறார். அதற்கு அவர் பயன்படுத்தும் தொடர் அலர் தூற்ற என்பதாகும். பலரும் அறிந்து கூறும் புறங்கூற்றே அலராகும். ஆனால் உரியவர்களுக்குத் தெரியாமல் உரியவர்களைப் பற்றிக் காணாமல் பேசும் புரட்டுமொழி அலர் எனப்படும். அலர் என்ற சொல் அகப்பொருளில் பயிலும் கலைச் சொல் இச்சொல்லால் அயற்சமயத்தாரின் ஏச்சுரையைச் சம்பந்தர் உணர்த்துகிறார்.

திருமயிலாடுதுறைப் பதிகம் மிண்டுதிறல் அமணரொடு சாக்கியரும் அலர்தூற்ற (3:70:10) என்று இயல்புகிறது. சமணரும் சாக்கியரும் செப்புகின்றவற்றை யாரேனும் மெய் என எண்ணி விடுதல் கூடும் அத்தகையோரின் அலர் தூற்றலை ஏற்காதீர் என்று தேவாரம் தெளிவுறக் கூறுகிறது.

**தோகையம் பீலி கொள்வார் துவர்க் கூறைகள் போர்த் துழல்வார்**
**ஆகம செல்வனாரை அலர் தூற்றுதல் காரணமாக்**
**கூகையம் மாக்கள் சொல்லைக்குறிக்கொள்ளன்மின் ஏழுலகும்**
**ஓகைதந் தாளவல்லான் உறையும் மிடம் ஒற்றியூரே** (3:57:10)

இப்பாசுரத்தின் சம்பந்தர், சமண தேரர்களைக் கூகை (கோட்டான்) என்றார். இவர்கள் இயம்புகின்ற அலர்மொழியை மக்கள் ஏற்றுக் கொள்ளக் கூடாது. வாழ்க்கைக் குறிக்கோளாகச் சமண சாக்கியர் மொழி களைக் கொள்ளாதீர் என்று சம்பந்தர் வலியுறுத்துகின்றார். மேலும் சமணரும் பவுத்தரும் சைவ சமயத்தை இகழ்ந்தமையும் இப்பகுதியால் புலனாகும்.

**நலம் பயவாதன**

சமணரும் சாக்கியரும் பேசுகின்ற பொய்ம் மொழிகளை மெய்ம் மொழிகளாக நம்பி மக்கள் அவர்கள் வழிச் செல்லலாம். ஆனால் அச் சொற்கள் நன்மை பயவாதவை. திருச்சேறைத் தேவாரத்தில், பவுத்தர் சமணர் கூறுவன குறும்புச் சொற்கள் அவை நலம் பயவாதன அவற்றைக் கேட்காதீர் என்று கூறப்படுகிறது. இதனை,

''துகடுறு விரிதுகில் உடையவர்
அமணெனும் வடிவினர்
விகடம துறுசிறு மொழியவை
நலம்இல வினவிடல்'' (3:86:10)

என்று பாடலடிகள் காட்டுகின்றன. இக்கருத்தையே திருப்பரிதி நியமத் தேவாரத்தில் இழுக்கான சொல் வளமாக நினைக்க வேண்டா (3:104:10) என்றும் அருளாளர் அறைகுவர். மொழிவதைக் கேளாதே என்று இயம்பு வதுடன் அம்மொழிகளின் தீய பயனையும் சம்பந்தர் பாசுரங்கள் வலியுறுத்துகின்றன.

**ஊர்தோறும் பாடுதல்**

சமணர்களும் சாக்கியர்களும் சிவனையும் சைவத்தையும் ஏசிப் பேசியவை மிகுதி. ஒவ்வொரு திருத்தலத்தைப் பாடும்போதும் சம்பந்தர் சமண, சாக்கியர்களைத் தாக்கிப் பாடுகிறார்; அவர்கள் பகருவனவற்றை நம்பாதீர் என்பார். பாசுரங்களை ஓதுவார்க்குச் சம்பந்தர் சொன்னதையே திரும்பத் திரும்பச் சம்பந்தர் சாற்றுகிறாரே என்ற எண்ணம் எழுவது இயல்பேயாகும். ஆனால் சொல்லுபவர் பாடுபவர் வேண்டுமானால் ஒருவராகலாம்; கேட்கும் - ஓதும் - மக்களோ வெவ்வேறு ஊரினர் ஆவர்; தம்மூர்ப் பாடலிருப்பின் அதை ஓதி உய்குவர்; அயலூர்ப் பாடலைப் படிக்க வேண்டும் என்ற கட்டாயமில்லை. அதனால்தான் ஊர் சென்று அங்குள்ள சிவபெருமானை வழிபட்டுப் பாடியபோது சமணர், சாக்கியர் களின் கருத்தைக் கொள்ளலாகாது; சிவனைப் பணிந்துயக் என்று பாடினார். ஒவ்வொரு ஊரிலும் சமண, பவுத்தத்துக்கு எதிரான எழுச்சியை உருவாக்கவே பதிகந்தோறும் சம்பந்தர் பாடிப் போந்தார்.

சமண, பவுத்தர் சொல்லுவனவற்றை விடுக்க என்றும் சைவர் செப்புவனவற்றைக் குறிக்கோளாக எடுக்க என்றும் சம்பந்தர் சொல்லுகிறார்.

''பின்னொடு முன்னிடு தட்டைச் சாத்திப்
பிரட்டே திரிவாரும்
பொன்னெடுஞ் சீவரப் போர்வை யாளர்கள்
புறங்கூறல் கேளாதே'' (3:101:10)

இதில் 'அல்லாத பொருள்களைக் கூறுதலைக் கேளாமல்' (புறங்கூறல் கேளாதே) இராமேச்சுரமேய பரமர் செய்யும் செயலை உணர்ந்து உய்தி அடையுங்கள் என்று சம்பந்தர் அறிவுறுத்துகிறார். இன்னொரு பாடலில் 'அறிவில மண் புத்தர் அறிவு கொள்ளேல்' (3:109:10) என்பர். சமணர் சாக்கியர் உரைகள் மறவுரை என்றும் அவற்றை மக்கள் கொள்ளல் ஆகாது என்றும் மூன்றாந் திருமுறைப் பாடல்கள் வெளிப்படுத்துகின்றன.

''கட்டமண் தேரரும் கடுக்கடின்
கழுக்களும் கசிவொன்றில்லாப்
பிட்டர்தம் மறவுரை கொள்ளலும்'' (3:91:10)

இங்குக் கொள்ளலும் என்ற சொல்லுக்குக் கொள்ளன்மின் என்று பொருள்; இது கொள்ளும் என்ற சொல்லுக்கு எதிர்மறை வடிவுமாகும். (கொள் - அல்-உம்-அல்-எதிர்மறை இடைநிலை; உம்- ஏவற்பன்மை விகுதி) இவ்வாறு சமணர், சாக்கியர் அறிவுரைகளை மக்கள் கேட்பதைச் சம்பந்தர் தடுக்கின்றார். இத்தகைய குறிப்புகள் தேவாரத்தில் பெரிதும் பயிலுகின்றன.

''தூசு புனைதுவ ராடை மேவுந்
தொழிலா ருடம்பினிலுள்
மாசு புனைந்துடை நீத்தவர்கண்
மயனீரமை கேளாதே
தேசுடையீர்கள் தெளிந்தடைமின்'' (3:102:10)

''ஆதர் சமணரொடும் மடை மைந்துகில்
போர்த்(து) உழலும்
நீதர் உரைக்கும் மொழி அவை
கொள்ளன்மின்'' (3:62:10)

''புற்றேறி யுணங்குவார் புகையார்ந்ததுகில் போர்ப்பார்
சொற்றேற வேண்டாநீர் தொழுமின்கள் சுடர்வண்ணம்''
(3:64:10)

''தடுக்கினை இடுக்கிமட வார்கள்இடு
பிண்டமது உண்டுழல் தரும்
கடுப்பொடி யுடற்கவசர் கத்துமொழி
காதல்செய்தி டாது'' (3:73:10)

''போர்த்த மெய்யினர் போதுழல் வார்கள்சொல்
தீர்த்த மென்றுதெளி வீர்தெளி யேன்மின்'' (3:46:10)

''பொச்சமமர் பிச்சைபயில் அச்சமணு
மெச்சுமறு போதியருமா
மொச்சைபயி லிச்சைகடி'' (3:74:10)

''வெற்றரை யாகிய வேடங் காட்டித் திரிவார் துவராடை
உற்றரை யோர்கள் உரைக்கும் சொல்லை உணராது எழுமின்கள்''
(3:107:10)

''துவருறு விரிதுகில் ஆடையர்
வேடமில் சமணர் என்றும்
அவருறு சிறு சொலை அவம் என
நினையும்...'' (3:92:10)

"கஞ்சிப்போ துடையார் கையிற்கோ சாரக்
கலதிகள் கட்டுரை விட்டு" (3:119:10)

"நின்றுணும் சமணும் இருந்தணுந் தேரு
நெறியலா தனபுறங்கூற" (3:123:10)

என்று பல பாடல்களில் சமண பௌத்தர் உரையைச் சம்பந்தர் புறக்கணிக்க வேண்டுகிறார். முதற் பகுதியில் சமண சாக்கியரியல்பை உரைக்கும் சம்பந்தர், பிற்பகுதியில் அவர்தம் கருத்தைக் கேளாதீர் என்று தெளிவாக விளம்புகிறார்.

## உரையால் சமயம் வளர்த்தோர்

சம்பந்தப் பெருமான் பயன்படுத்தும் சொற்கள்தாம் வேறுவேறாகக் காணப்படுகின்றன; ஆனால் எல்லாப் பாடல்களிலும் பாடப் பெறும் கருத்து ஒன்றேயாகும். மூன்றாந் திருமுறையிலுள்ள இன்னும் பல பாசுரங்களிலும் (1:10; 2:10; 4:10; 13:10; 24:10; 25:10; 28:10; 31:10; 38:10;) சமணர் சாக்கியர் உரையைக் கேளாதீர் என்று சம்பந்தர் மக்களுக்கு அறிவுறுத்தார். சமணரும் சாக்கியரும் ஆங்காங்கே மக்களைத் திரட்டித் தம் சமயக் கருத்தை உரையாகவே எடுத்து மொழிந்தனர். சைவச் சான்றோர்கள் இசையோடு கூடிய இன்னிசைத் தமிழாய் மொழிந்தனர்; அதனால் சம்பந்தர், சமணர், தேரர்கள் சொல்லுவதை உரை என்றும் பேச்சு என்றும் சுட்டினார்.

## அஞ்சாத சம்பந்தர்

திருஞானசம்பந்தப் பெருமான் திருத்தலந் தோறும் சென்று சைவத்தைப் பரப்பினார்;சமண, பவுத்த சமய வளர்ச்சியைத் தடுக்குமுகமாக மக்களைத் தன்னுடைய இன்னிசைத் தமிழைக் கையாண்டார். சம்பந்தர் தமிழகத்தில் சைவத்தைப் பரப்பிய காலத்தில் சமண பவுத்தர் எதிர்ப்பைச் சந்தித்தவராதலின் பாண்டிய நாட்டுக்கு வரும்போது சம்பந்தர் தம் அஞ்சாமையைப் பாடல்களில் வெளிப்படுத்துகிறார்.

"ஆனைமாமலை ஆதியாய இடங்களில்பல அல்லல்சேர்
ஈனர்கட்கெளி யேனலேன்திரு வாலவாயர னிற்கவே"
(3:39:1)

என்று திருஆலவாய்ப்பதிகம் தெரிவிக்கின்றது. இப்பதிகம் முழுமையும், தான் திருவாலவாயரன் துணையால் சமணர்களுக்கு எளியேன் அல்லேன் என்ற உறுதி தோன்ற சம்பந்தர் பாடியுள்ளார். அவர் பாடிய இன்னொரு திருவாலவாய்த் தேவாரத்திலும் சமணரொடு வாதுசெய்யத் திருவுள்ளம் கொண்டிருப்பதாகவும் அதற்கு ஆலவாயரன் துணை வேண்டும் என்பதாகவும் வலியுறுத்துகிறார். இப்பதிகத்தில் சம்பந்தரின் எதிர்ப்புணர்வும் நெஞ்சுரமும் புலப்படுகின்றன.

''வைதி கத்தின் வழியொழ காதவக்
கைத வம்முடைக் காரமண் தேரரை
எய்தி வாதுசெ யத்திரு உள்ளமே
மைதி கழ்தரு மாமணி கண்டனே'' (3:108:2)

சமணரொடு வாதிட்டு வென்று ஆலவாயிலுறையும் சிவபெருமான் புகழ் ஞாலம் எங்கும் மிக வேண்டும் என்று சம்பந்தர் பாடுகிறார். சமண சாக்கியங்களை மக்கள் பின்பற்றக்கூடாது என்றும் அவற்றை வாது செய்து வெல்ல வேண்டும் என்றும் சைவ சமயத்தைப் பரப்பச் சம்பந்தர் முனைகின்றார்.

**சமயக் கோட்பாட்டைச் சுட்டிப் பாடுதல்**

திருநெறிய தமிழ் வளர்க்கும் சம்பந்தர், சமண சாக்கிய சமயங் களை மக்கள் பின்பற்றக் கூடாது என்று தெளிவாக நவில்கிறார். இக்கருத்தைப் பல பாடல்களில் சுட்டுகிறார். இவ்வாறு சுட்டும்போதெல்லாம் சமண சாக்கியர்களின் நடை, உடை, பாவனைகளைச் சொல்லி அவர் அறைவனவெல்லாம் பொய் என்று சம்பந்தர் தெரிவிக்கிறார். சமண பௌத்தங்களை எதிர்த்துப் பாடுகின்ற சம்பந்தர், சமண, பவுத்தரின் சமயக் கோட்பாடுகளை மறுத்துப் பெரும்பான்மையான பாடல்களில் பாடவில்லை; மிகச் சில பாடல்களில் சமண பவுத்தரின் சமயக் கோட்பாட்டைச் சுட்டியும் பாடியிருக்கிறார். திருவீழிமிழலைத் தேவாரத்தில்,

''குண்டமண ராகியொரு கோலமிகு
பீலியொடு குண்டிகை பிடித்
தெண்டிசையும் இல்லதொரு தெய்வமுள
தென்பரது வென்ன பொருளாம்'' (3:80:10)

என்று சம்பந்தர் பாடுகிறார். சமணர்கள் தெய்வம் பற்றிய தெளிவான கொள்கையுடையவர்களில்லை. சமணர்களை நோக்கித் தெய்வம் என்பதொரு பொருள் உண்டா இல்லையா என வினவினால் அவ் வினாவுக்கு உண்டு என்றோ இல்லை என்றோ ஒருதலையாக விடை கூறுவதில்லை. அஸ்திநஸ்தி என மேற்குறித்த கொள்கையினை அடியொற்றி ஏழு பகுதியாக விடை கூறுவர் சமணர். ஒரு பொருளின் இயல்பினையும் இருப்பினையும் விரித்துக் கூறும் கூற்றுக்கள் ஏழு பகுதிகளாக அமைதலின் இவ்வுரையாடல் முறையைச் சப்த பங்கி என்பர். இங்ஙனம் கடவுட் கொள்கை பற்றி ஒன்றோடொன்று ஒவ்வாதவற்றைக் கூறி மக்களது மனத்தைத் தெளிவற்ற குழப்ப நிலைக்கு உள்ளாக்கி வருமே இப்பொருந்தாக் கொள்கையினைச் சம்பந்தர் சொல்லியுள்ளார். (க.வெள்ளை வாரணன் (1962) பன்னிரு திருமுறை வரலாறு) சமண சமயக் கருத்தை மறுத்துச் சம்பந்தர் பாடுமிடங்கள் மிகச் சிலவே. பாடுமிடமெல்லாம் சமயக்கருத்தை மறுத்துச் சம்பந்தர் பாடியிருப்பின், திருமுறைப்பாடல்கள் சாத்திர நூலாகிப்

போயிருக்கும். ஆனால் சம்பந்தர் அவ்வாறு பாடாது தோத்திர நூலாக - அன்பு (பக்தி) நூலாகப் பாடியிருக்கிறார். அன்பு கழுமிய இன்னிசைப் பாடல்கள் சைவம் தழைக்கச் சிறந்த கருவியாக உள்ளன.

## அல்நெறி குறுகோம்

சைவ சமயம் பரவ இன்னிசையால் தமிழ் பாடிய திருஞானசம்பந்தப் பெருமான் உளப்பாட்டுத் தன்மைப் பன்மையாகத் தேரர் நெறியில் செல்ல மாட்டோம். அவர்கள் வழிச் செல்லாக் கோயில்களையே அடைவோம் எனப் பாடுகின்றார்.

**''பறியாத் தேரர் நெறியில் கச்சிச்**
**செறிகொள் கம்பம் குறுகுவோமே''** (3:41:10)

என்பது திருக்கச்சியேகம்பத் தேவாரம். சாக்கிய சமணர் வழியிற் செல்லாத கோயில்களையே பணிவோம் என்று சைவர்கள் வாழ்ந்தனர். சமணர்களோ திருநீறு பூசியவர்கள் மேல்பட்டு வீசும் காற்றடிக்கும் இடத்திலும் நிற்க மாட்டார்களாம். இதனை,

**''நீற்று மேனியர் ஆயினர் மேலுற்ற**
**காற்றுக் கொள்ளவு நில்லா அமணரை''**

என்று சம்பந்தர் உறுதிப்படுத்துவர். இங்ஙனம் சமண பவுத்தமும் சைவமும் ஒன்றை வெறுத்து ஒன்று வளர முற்பட்டது. திருஞானசம்பந்தர் போன்ற வைதீக வாரணங்களால் சைவம் மேலோங்கித் தழைத்தது.

மூன்றாம் திருமுறை தருகின்ற கருத்துகளைத் திரட்டி நோக்கும் போது, திருஞானசம்பந்தப் பெருமான் திருத்தலம் தோறும் சென்று சைவத்தை வளர்த்தார் என்பது பெறப்படும். அவர் சைவத்தைப் பரப்பிட, அவர் அடியார்களை நோக்கிச் சிவனை நாடுங்கள் என்று இயம்பினார். பதிகந்தோறும் சமண, பவுத்தர் உரைகள் பொய்யானவை என்றார்; அவற்றை நீத்து மக்கள் சைவத்தின்பால் சாரல் வேண்டும் என்றார். சைவத்தை இகழ்ந்து அயற் சமயத்தார் பேசுதலை அலர் தூற்ற என்ற தொடரில் சுட்டினார். அகப்பொருளுக்குரிய தொடரை அருளியலில் சம்பந்தர் ஆண்டார். சமண பவுத்தர் மொழிகள் நலம் பயவாதன என்று சொல்லித் திருத்தலம் தோறும் சென்று சைவத்தின் மேன்மையையும் சமணத்தின் தாழ்மையையும் மக்களுக்கு எடுத்தியம்பினார். பிற சமயங்களை மறுப்பதிலும் எதிர்ப்பதிலும் சம்பந்தர் அஞ்சா நெஞ்சமுடைய வராக இருந்தமையைப் பதிகங்கள் மெய்ப்பிக்கின்றன. சமண பவுத்தர்களின் சமயக் கோட்பாட்டையும் சம்பந்தர் ஒரோ வழி பாசுரங்களில் பேசுகிறார். சமண பவுத்தரும் சைவரும் ஒருவரையொருவர் காண்பதைக் கூடத் தவிர்த்தனர். சம்பந்தர் சமண பவுத்தத்தை அடக்கிச் சைவத்தைப் பரப்பிட இன்னிசையோடு கூடிய பாடல்களைத் திருத்தலம் தோறும் பாடிச் சைவத்தை வளர்த்தார். அயற் சமயத் தாக்குதலும் இன்னிசைப் பாடல் பாடலும் சமயம் பரப்புதற்குரிய சம்பந்தர் நெறியாகும்.

# 77. சம்பந்தரும் - கோயில் வழிபாடும்

த. வசந்தா, சென்னை.

'மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்' எனத் தம் தெய்வக்கவி வழி மக்களை அழைத்த ஞானக் குழந்தை; 'நற் கொன்றையான் அடியலாற் பேணா **எம் பிரான் சம்பந்தன்** அடியார்க்கும் அடியேன்' (திருத்தொண்டத்தொகை) என்றும், 'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞான சம்பந்தன்' என்றும் சம்பந்தரையும் தமிழையும், சம்பந்தரின் பக்தியையும் ஒன்றாகக் காட்டுவர் வன்தொண்டர் சுந்தரமூர்த்தி நாயனார்.

**காழியர் தவமே கவுணியர் தனமே கலைஞானத்**
**தாழிய கடலே யதனிடை யமுதே யடியார் முன்**
**வாழிய வந்திம் மண்மிசை வானோர் தனிநாத**
**னேழிசை மொழியா டனதிரு வருள்பெற் றனையென்பர்**

(சம்பந்த மூர்த்திநாயனார் புராணம் - 91)

எனப் போற்றும் சேக்கிழார் 'எங்கள் பிரான் சம்பந்தர்'

**வேதநெறி தழைந்தோங்க**
**மிகுசைவத் துறை விளங்கப்**
**பூதபரம் பரைபொலியப்**
**புனிதவாய் மலர்ந்தழுத**
**சீதவள வயற்புகலித்**
**திருஞான சம்பந்தர்**
**பாதமலர் தலைக் கொண்டு**
**திருத்தொண்டு பரவுவாம்**

என்பர். பெரியபுராணத்தில் 4286 பாடல்கள் உள்ளன; அவற்றுள் சம்பந்தப் பெருமானுக்கு மட்டும் 1256 பாடல்கள் (29.30%) பாடியுள்ளார்.

தெய்வ ஞானக்கன்று (94), முத்தமிழ் விரகர் (15), வேதம் தமிழால் விரித்தார் (289), மெய்ஞ்ஞானமுணர் திருஞான சம்பந்தன் (313), ஞானத்தின் திருவுரு (728), நான்மறையின் தனித்துணை (728) எனப் பலவாறாகச் சிறப்பிக்கின்றார் சேக்கிழார்.

சம்பந்தர் 'தம் உள்ளங்கவர் கள்வனை'ப் பாடிய சொல்மாலை வழி 'ஒருபானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்பது போல' சிவ

வழிபாட்டுச் சிந்தனைகளைப் பின்வருமாறு வகை தொகை செய்து காண்பது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## I ஞானசம்பந்தர் காட்டும் மக்கள்

மன்னன்
புறச்சமயத்தார் (சமணர், பௌத்தர்)
அடியார்கள் (சம்பந்தரும் சேர்த்து)
கேட்போர்
பெண்
(அ) வழிபாட்டுக்குரியவர்
(ஆ) வழிபடுவோர்

## II ஞானசம்பந்தர் காட்டும் வழிபாடு

சிவன் (கடவுள்)
கோயில்
திருத்தலம்
மொழி (ஊடகம்)
நீறணிதல்
திருவடி
திருநாமம்
வழிபடுவோர் கை
வழிபடுவோர் தலை
வழிபடுவோர் நா (வாய்)
வழிபடுவோர் கண், செவி, நெஞ்சம், மேனி
வலம் வருதல் பாடுதல்
விழா எடுத்தல்

## III ஞானசம்பந்தன் காட்டும் ஞானசம்பந்தன்

**மன்னன்**

தமிழ் பரப்பிய சம்பந்தருக்குத் தொண்டை நாட்டுப் பல்லவ மன்னனும் பாண்டிய நாட்டு வேந்தனும் சிவ பக்திக்கு நெருக்கடி தந்த காலமாக அமைந்தது. எனவே மகேந்திரவர்மனுடன் நாவுக்கரசருக்கு நடந்த போராட்டம் போலச் சம்பந்தருக்கும் மதுரையில் நடந்தது. ஆம்! அவர் தங்கியிருந்து மடத்திற்குத் தீ வைக்கப்பட்ட சம்பவம், அனல் வாதம், புனல் வாதம் போன்ற நிகழ்வுகள் பாண்டியனோடு சம்பந்தன் போராட வேண்டிய சூழலைக் காட்டுகின்றது. ஆக சம்பந்தர் மக்கள் செல்வாக்குள்ள மன்னனின் பகையை வெற்றி கண்டு, மன்னனையும்

அதன் விளைவாக மக்களையும் சிவநெறிக்குச் செலுத்தும் பேராற்றல் படைத்தவரானார்.

சிவ வழிபாட்டிற்குரிய கோயில்களை உருவாக்கும் பொருளாதாரச் செல்வாக்கு மன்னனிடம் மட்டும் இருந்த அக்காலச் சமுதாயத்தையும் நாம் நினைவு கூர்தல் தகும். எனவே 'அவனை அடியார் தொழ மன்னவர் ஏத்தப் பிற மக்களும் வணங்குகின்றனர்' (396), 'தீபமொடு தூயமலர் தூவி நளன் நாளும் வழிபாடு செய்கின்றான்' II (352), 'அரசர் அணி பொற்கலன் கொண்டு வருகின்றார்' (122) என்றெல்லாம் பாடுகின்றார்.

**புறச் சமயம்**

தமிழ் விரகன் சொல்மாலைகளில் ஒவ்வொரு பதிகத்திலும் ஒரு பாடல் சமணர் பௌத்தர் பற்றி அமைந்து வெளிப்படையாக அவர்களைச் சாடுகின்றது. 'அவர்கள் மொழியைப் பொருளாக நினையாதீர்கள்' (161), 'சிவனைச் சிந்திக்காத மனத்தருடன் சேர்வது தீ நெறி (1197), ஆகும். அவர்கள் துயரம் தீர்தல் எளிதன்று' (27) எனப் பதிகம்தோறும் தமிழகத்தையும் தமிழக மக்களையும் ஆட்டிப் படைத்த மக்கள் செல்வாக்குள்ள புறச் சமயங்களைத் துணிந்து எதிர்க்கின்றார்.

**அடியார்**

**முடிகள் சாய்த்தடி வீழ்தரும் அடியாரை முன்வினை மூடாவே**
II (1125)

**தொண்டர் தொண்டரைத் தொழுதடி பணி மின்கள் தூநெறி**
**எளிதாமே** II (1134)

என அடியார்களைப் போற்றும் பெருமான் 'உன்னை வாய்மொழியால் இரவும் பகலும் ஏத்திப் பாடும் அடியார்களின் இடர் களைவாய்' (566) என்று அடியவர்களுக்காக இறைவனிடம் வேண்டுகின்றார். சான்று:

**"பொன்னடியே பரவினாளும் பூ வொடு நீர் சுமக்கும்**
**நின்னடியார் இடர் களையாய் நெடுங்கள மேயவனே**
(561:3-4)

**கேட்போர்**

'என் சிந்தை ஒருவரே' (604) எனத் தம்மை வெளிப்படுத்திக் கொள்ளும் சம்பந்தர் **யாழின் இசை வல்லார் சொலக் கேட்டார்** அவர் எல்லாம் ஊழின் மலி வினைபோயிட உயர்வான் அடைவாரே (118:3-4) என்றும் ஞானசம்பந்தன் தமிழ்மாலை கூறுவாரையும் கேட்கவல்லாரையும் குற்றங்கள் குறுகாவே (II1124:3-4) அவர்களுக்குத் துயரில்லை (1266);

சிவன் சேவடி சேர்வது திண்ணம் (1288); எனவே அவன் தமிழைப் பாடி ஆடுங்கள்; பாவம் கெடும் (1255) எனத் தன்னம்பிக்கை ஊட்டுகின்றார்.

## பெண்

தற்கால அரசியலில் பெண்ணின் பங்களிப்புக்குப் போராட்டம் நடப்பது போல அக்காலச் சமயச் சூழலில் சமய உலகில் பெண்ணை விலக்கிய மதங்களின் நடுவே பெண்ணைப் போற்றி, வழிபாட்டுக்குரிய வராகவும் வழிபடுவோராகவும் காட்டுவது புரட்சி. 'தோடுடைய செவியன்' 'ஆகத்து உமைகேளவன்' (930) 'மையினார் மவா நெடுங்கண் மலைமகள் ஓர் பாகமாம்' (662) 'உமையாள் பங்கர் மன்னி உறைகோயில்' (752) எனச் சிவனை மாதொரு பாகனாகக் காட்டுவதோடு,

'சூடக முன்னகை மடந்தை மார்கள்
துணைவ ரொடும் தொழுது ஏத்திவாழ்த்த' (65:3-4)

எனப் பெண்கள் துணைவனுடன் இறை வழிபாடு செய்வோராகவும் சித்திரிக்கின்றார்.

இத்தன்மைத்தான பாடல்கள் பெண்களை ஆன்மீக உலகில் முழுக்க முழுக்க அப்புறப்படுத்திய சமணர் பௌத்தர்களுக்கு எதிராகச் சாதுரியமாக சம்பந்தர் உயர்த்திய போர்க்கொடியாகவும் அதே சமயத்தில் மக்களைத் தன்வயப்படுத்தும் மருந்தாகவும் அமைந்தன.

பக்தி உலகில் பெண்களுக்கு இருந்த நெருக்கங்களைத் தகர்க்கும் அல்லது தளர்த்தும் பணியைத் தமிழ் விரகன் பாமாலை செய்தது.

## சிவன் கோயில்

இறைவன் எழுந்தருளியுள்ள திருத்தலங்களைச் சொல்லி வழிபடத் தூண்டுகிறார்; தன்னையும் இணைத்துச் சொல்லி வழிபட்டால் என்னை நன்மை என்பதையும் இணைத்தே பாடுகின்றார்.

பொருவிடையுயர்த் தான் புகலியைப்
பரவிடப் பயில் பாவம் பாறுமே II (268:3-4)

அருள் கிட்டும் II (371)

வல்லினை அறுந்து போகும் II (252).

எனவே,

தீப மாலை தூபமும்செ நிந்த கையர் ஆகிநம்

தேவதேவன் மன்னும் ஊர்தி ருந்துகாழி சேர் மினே
II (1050:4)

எந்தளாள் வாழ்வதற்கே மனம்
வைத்தியால் ஏழை நெஞ்சே! II (856)

அந்தண் ஆரூர் தொழுது உய்யலாம், மையல் கொண்டு சிரியாதே நெஞ்சே (II 856) முதுகுன்று அடைவோம் (123:3-4) என நெஞ்சோடு பேசுகின்றார்.

இறை வழிபாட்டிற்குரிய இடம் கண்ட முத்தமிழ் விரகன் தான் அவதரித்த சீர்காழிக்கு மட்டும் 12 (பிரமபுரம், வேணுபுரம், புகலி, செங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, கொச்சை வயம், கழுமலம்) பெயர்களில் 66 பதிகங்க்ள் (மொத்தம் 383 பதிகங்கள்) அதாவது 17.23% பாடியிருப்பதும் தாம் பாடிய 383 பதிகங்களில் 226 திருத்தலங்கள் பற்றிச் சொல்மாலை புனைந்திருப்பதும் ஈண்டு சிந்திக்கத் தக்கது.

## திருத்தலம்

திருக்ஷேத்திரக் கோவை என்று ஒரு பதிகம் பாடியிருப்பது சம்பந்தரின் பக்தி இயக்கத்தின் வெளிப்பாட்டிற்கு நல்ல சான்றாகும்.

சிவனை முழுமுதற் கடவுளாக வைத்து வழிபட்ட மக்கள் வாழ்ந்த இடங்களில் இருந்த அத்தனை சிவத்தலங்களையும் பற்றிப் பதிகம் பாடியுள்ளார். சிறப்பாகக் காவிரியின் வடகரை (134 பதிகம்), தென்கரை (150 பதிகம்), தொண்டைநாடு (31 பதிகம்), பாண்டிய நாடு (24 பதிகம்) போன்றவற்றிற்கு அதிகப் பதிகங்களைப் பாடியிருப்பது பக்தி இயக்கம் சூல் கொண்டிருந்த மேகமாகப் பரவிய இடங்களைப் பற்றியும் நமக்கு அறிவிக்கின்றது. அது பற்றி ஈண்டு விரிப்பின் பெருகும்.

## மொழி

பக்தியை இயக்கமாக்கிப் பரவச் செய்த கவுணியர் குலக்கன்றாகிய ஞானசம்பந்தருக்குத் தம் பாடலைப் பெரும்பான்மை மக்களிடையே கொண்டு சேர்க்க மிகச் சிறந்த ஊடகமாகத்தான் தமிழ் மொழி தேவைப்பட்டது. அதே நேரத்தில் வடமொழியை நான் அறிந்தவன்; வேதம் பயின்றவன் என்பதைச் சொல்லியாக வேண்டும்.

எனவே தம்மோடும் தம் பாடலோடும் தமிழைச் சேர்த்தே பெருமை செய்கின்றார்.

**சக்கரஞ்சீர்த் தமிழ் விரகன் தான் சொன்ன**
**தமிழ் தரிப்போர் தவம் செய் தோரே** II (798:4)
**நல்லவே நல்லவே சொல்லிய ஞானசம்பந்தன்** II (865)
**செந்தமிழ் வல்லவன் ஞானசம்பந்தன்** II (897:2)
**அருமறை ஞானசம்பந்தன்** II (972)

மறைஞான ஞானசம்பந்தன் II (929)
முத்தமிழ் நான்மறை ஞானசம்பந்தன் II (2822)
சந்தம்பரவு ஞானசம்பந்தன் I (304)
ஞானத்து உயர் சம்பந்தன் நலங்கொள் தமிழ் I (151)

சம்பந்தன் வேதங்களையும் ஆறு அங்கங்களையும் அறிந்தவன்; தந்தையார் செய்த வேள்விக்குப் பொருள் கொடுக்கும் ஆற்றல் படைத்தவன்; அந்தணர்கள் வேள்வித் தீயில் வேதம் முழங்கச் சிவனை வழிபடும் ஊரினன்; எளிய மக்களிடம் சிவப்பயிர் தழைக்க - தமிழ் மழை வேண்டியவன். எனவே பக்தியைப் பரப்பும் சிறந்த சாதனமாக, ஊடக மாகத் தமிழைத் தெரிவு செய்து கொண்டு பாடினான்.

**நீறு**

சிவனை வழிபடுபவர்கள் மார்பினை நீறு அலங்கரிக்க வேண்டும்; அவர்களை மட்டும் தான் சார்ந்து இருப்போம்.

சாம்பல் அகலத்தார் சார்பல்லாற் சார்பிலமே II (472:4)

எனவே திருநீற்றின் பெருமைக்கு ஒரு பதிகம் பாடுகின்றார்.

முக்தி தருவது நீறு முனிவர் அணிவது நீறு
சத்திய மாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு
பத்தி தருவது நீறு பரவ இனியது நீறு
சித்தி தருவது நீறு திருவால வாயான் திருநீரே II (711)

அணிபவர்க்குப் பெருமை கொடுப்பது, பூச இனியது, புண்ணிய மாவது, பேச இனியது, ஆசை கெடுப்பது அந்தமதாவது, தேசம் புகழ்வது (713), பாவம் அறுப்பது (715), இன்பம் தருவது (717), என ஒவ்வொரு நிகழ்வுக்கும் பயனைப் பற்றி எடுத்துச் சொல்லி விழைவை ஏற்படுத்தும் ஆற்றல் தமிழ் விரகனைச் சாரும்.

**திருவடி**

ஞானச்சிறுவன் இறைவனை வணங்கிய நாள் வாழ்ந்த நாள் வணங்காத நாள் வீணாகக் கழிந்தநாள் (1246) வழிபட்டால் எவை எவை அணுகா; எவை கிட்டும் என்றும் பாடுகிறார்.

காலம் பெற மலர் நீர் அவை தூவித் தொழுது ஏத்தும்
ஞாலம் புகழ் அடியார் உடல் உறுநோய் நலி யாவே I (160:3-4)

பாலோடு நெய்யாடி
பாதம் பணிவோமே II (499:4)

**பாலும் பனிமலர் தூவப்**
**பறையும்நம் பாவமே** II (86:4)

**தேன் இயன்றநறு மாமலர் கொண்டு நின்று**
**ஏத்தத் தெளிவு ஆமே!** I (28:4)

**கடிகமழ் மாமலர் இட்டு**
**கறைமிடற்றான் அடி காண்போம்** I (405)

இரவும் பகலும் வழிபட வேண்டும் II (404), இரண்டு வேளையும் மலரிட வேண்டும் (398) நிலை கொண்ட மனத்தவர் நித்தம் மலர் கொண்டு வணங்குவர் (387), பிணிகெட ஞானமா மலர் கொண்டு வழிபட வேண்டும் III (3080), ஏன்

**இனமலர் ஏய்ந்தன தூவி எம்பெருமானடி சேர்வோம்** I (430:4)

என்றே தம்மையும் உளப்படுத்தி அழைக்கின்றார். வினை நீங்க மலர் தூவுங்கள் II (1212, 1213) அலங்கல் சூட்டுங்கள் நோய் அடையாது (633:3-4)

பிறவி அறுக்கும் பிரானை 'தேன் படுமாமர் தூவித் திசை நோக்கித் தொழுதால் தீயவை கெடும் (738), இவ்வாறாக வழிபாட்டு முறைகளைப் (604) பாடுகின்றார்.

## திருநாமம்

**'தெளிவு குருவின் திருநாமம் செப்பல்'**

என்பது திருமந்திரம்.

**'பேறுடையான் பெயரைச் சொல்லி வழிபட்டால் பிணி பேரும்** III (2904)

**'கோட்டூர் நற்கொழுந்தே'**

II என்று சொல்லி எழுந்திருங்கள் (1182:4)

**நீரார் சடையாய் நெற்றிக் கண்ணா என்றென்று**
**பேரா யிரமும் பிதற்றத் தீரும் பிணிதானே** II (634:3-4)

என்பதால் கிளியை விளித்துப் பேசும் ஞானக் குழந்தை,

**'பிறையாளன் திருநாமம் எனக்கு ஒரு கால் பேசாயே'** (654:4)

என வேண்டுகின்றார்.

சிவ வழிபாட்டு முறைகளைச் சம்பந்தனுக்கு முன்னோடியாகத் திருமூலரும் காரைக்காலம்மையாரும் கவினுறக் காட்டியுள்ளனர். எனினும் ஞானசம்பந்தர் தம்மை வெளிப்படுத்திக் கொண்டது போல

அவர்கள் தங்களை வெளிக்காட்டவில்லை. காலச்சூழல் சம்பந்தரைத் தம்மைச் சொல்லி கூட்டத்தை இணைக்கத் தூண்டுகின்றது.

**கை**

சம்பந்தர் கும்பிடுவார் சிவன் தமக்கு அன்பு செய்பவன் (81) அவனைக் கண்டு கை தொழுதால் கவலை நோய் கழலும் III (3142) அங்கையால் தொழுபவர்க்கு அல்லல் இல்லை III(3115), கவலை நீங்கும் (1122).

**கள்ளமே செய்கிலார் கருதிய கானப்பேர்**
**உள்ளமே கோயிலா வுள்குமென் னுள்ளமே** (3079:3-4)

**அவனைத் தலையினால் வணங்குபவர் தவமுடையவர்கள் ஆவர்** (3082)

என்பர்.

**வாய்**

நம்பன் நாமம் நவில வேண்டும், அதுமட்டுமா பங்கய மங்கை விரும்பும் ஆரூர்ப் பசுபதி ஈச்சுரம் பாடு நாவே I (78:4) என நாவை வேண்டுகிறார். **கண்** பெற்ற பயன் அவனைக் காண்பதாகும்;அவர்கள் மட்டுமே கண்ணுடையார்கள் II (1290) என்கிறார்.

**செவி**

ஈசன் பெருமையைக் கேட்க வேண்டும். கேளாச் செவியெல்லாம் கேளாச் செவிகளே II (477:4). நெஞ்சம் நினைக்க வேண்டும் II (479:4).

**வலம் வருதல்**

வலம் வரும்பொழுது, இறைவனை இசையோடு போற்றி வழிபடுங்கள்; அப்படிச் செய்தால் அதுவே வரம் ஆகும். ஆக வலம் வரவேண்டும், இசையோடு மொழிந்து வலம் வரவேண்டும் வலம் வந்தால் அதுவே வரம் என வழிபாட்டு முறைகளைப் பாடலில் எடுத்துக் காட்டுகிறார். எனவே தான்,

**நலங்கொள் மாமலர் தூவி நாள்தொறும்**
**வலங்கொள் வார்வினை மாயுமே** II (1218:3-4)

வலம் வரவேண்டும் எனச் சிந்தை உடையவர்க்குத் துன்பம் மாயும் (1296:6) எனப் போற்றுகின்றார்.

**பாடுங்கள்**

பக்தர்கள் சிவனைப் பாடி வழிபட்டால் எவை எவை கிடைக்கும் எவை எவை நீங்கும் என மொழி வழி எடுத்துரைக்கின்றார்.

பற்றானைப் பற்றிநின் றார்க்கில்லை பாவமே (114)
பதியானைப் பாடவல் லார் வினை பாறுமே II (166:4)
பண்ணாரப் பாடவல்லார்க் கில்லை பாவமே II (175:4)
உயர்ஞானம் உணர்ந்து அடி உள்குதலால்
இயல் ஞானசம்பந்தன் பாடல் வல்லார்
வியல் ஞாலமெல் லாம் விளங் கும்புகழே II (196:2-4)
திருஞானசம்பந்தன் செந்தமிழ்கள்
உருஞான உண்டாம் உணர்ந் தார் நமக்கே II (218:3-4)
இணையார் கழல் ஏத்த இடர் கெடுமே II (220:4)
எம்மானை ஏத்த வல்லார்க்கு இடர் இல்லையே II (112)
பாடல் பத்தும் வல்லார் பரலோகஞ் சேர்வாரே II (545:4)
செய்யுள் பாட வல்லார் சிவலோகம் சேர்வாரே II (578:4)
பண்ணோடு இவை பாடிய பத்தும் வல்லார்
விண்ணோரவர் ஏத்த விரும்புபவரே II (294:3-4)
அந்தம் இல்லியை ஏத்து ஞானசம்
பந்தன் பாடல் கொணடு ஓதி வாழ்மினே II (250:3-4)
இசைபாடிட நின்றார் தமைத் துன்பநோய் அடையாவே
II (1175:4)
...பாட நோய்பிணி பாறுமே II (1222:3-4)
சொல் ஆர் தமிழ் மா லைசெவிக்கு இனிதாக
வல்லார்க்கு எளிதாம் பிறவா வகை வீடே I (337)
இறப்பும் இல்லை, பிறப்பும் இல்லை I (562:4)
சூலம்பல் லான்கழல் ஏத்துபாடல்
சொல்லவல் லார்வினை இல்லையாமே I (64:4)
பாட்டினால் பணிந்து ஏத்திட வல்லவர்
ஒட்டினார் வினை ஒல்லையே I (616:3-4)

ஒவ்வொரு பதிகத்திற்கும் திருக்கடைக்காப்பாக அமைந்த பாடல்கள் விரிவான ஆய்வுக்குரியவை. பதிகத்தின் கடைசிப் பாடல் கறைகண்கண்டன் கருணை, அதைப்பாடிய ஞானசம்பந்தன் அல்லது படைப்பாளியின் ஆளுமை, மொழிச் சிறப்பு, வரலாறு என்பன போன்ற செய்திகளைப் பொதிந்து வைத்துள்ள பேழையாகும்.

## விழா எடுத்தல்

சிவன் கோயிலில் நடைபெறும் விழாக்கள் ஆன ஓண விழா II (503), தைப்பூசம் (506), மாசி மகம் (507), பங்குனி நாள் (508) மற்றும்

விளக்கிடுதல் (504), திருவாதிரை (505), அட்டமி (509) பொன்னூஞ்சல் (510) பற்றியும் வழிபாட்டின் பொழுது நிகழ்த்தும் சடங்குகள், திருஅமுது என்பன போன்ற செய்திகளைப் பாடி மக்களை அவ்வண்ணம் செய்ய வேண்டிய பொறுப்பாளிகளாக்குகின்றார்.

## சம்பந்தன் வெளிப்பாடு

ஆதி சேவடி யடைந்தனம் அல்லல் ஒன்றிலமே II (888)

அதிர்உறு கழல்அடி களது அடிதொழும் அறிவு அலது அறி அறியமே (201:4)

கடிகமழ் மாமலர் இட்டு கறைமிடற்றான் அடி காண்போம் I (426:4)

வேதனை தாள்தொழ வீடெளி தாமே II (4146:3-4)

'வள்ளல் கழல் பரவாத வாழ்க்கை வாழ்க்கையே அல்ல' (636:4)

என்கிறார்.

உடல் இலங்கும் உயிர் உள்ளளவும் தொழ உள்ளத் துயர் போமே (30:4)

நாதனை யடிதொழ நன்மை யாகுமே III (3009:4)

ஞானனை யடிதொழ நன்மை யாகுமே (3010:4)

ஆதியை யடிதொழ அல்ல லில்லையே (3021:4)

அன்பன் பாதமே வாழ் மினே II (256)

அத்தன் அடி நினைவார்க்கு அல்லல் அடையாவே (498:4)

உள்ளன்போடு வழிபடுவது வாழ்க்கை (470)

சேவடியே பணிமின் பிணி போகவே (87:4)

முடிகள் சாய்த்தடி பேணவல்லார் தம்மேல்
மொய்த்தெழும் வினைபோமே (1161:4)

இவ்வாறாகப் பல நிலைகளில் தம்மை உளப்படுத்திக் கொண்டு, சிவநெறிக்கு மக்களை அழைத்து - பயனையும் சொல்லி ஆற்றுப் படுத்துகின்றார்.

## அழைப்பு

வம்மின்னடியீர் நாள் மலர் இட்டுத் தொழுது உய்ய
உம்மன்பினோடு எம்மன்பு செய்து ஈசனுறை கோயில்
I (110:1-2)

'நாதர் வந்து நலங்கொண்டார்' (606:2)

எனப்பாடி பொது மக்களின் கூட்டுறவு வேண்டுகின்றார்.

**தன்னைப்பற்றி**

ஞானம் உணர்வான் காழி ஞான சம்பந்தன் II (654:1)
இன் சொல் ஞான சம்பந்தன் (665:3)
நல்ல ஞானசம்பந்தன் (600:1)
காழியீசன் கழலே பேணும் சம்பந்தன் (643:2)

இவ்வாறெல்லாம் ஞானக் குழந்தை தம்மை அடைமொழியுடன் சிறப்பிக்கக் காரணங்கள் பலப்பல.

நிறைவாக, ஞானசம்பந்தர் காட்டும் ஞானசம்பந்தர்

- பாண்டிய மன்னரின் எதிர்ப்பைச் சந்தித்தவர்
- சமணர் பௌத்தர்களை வெளிப்படையாகச் சாடியவர்
- அடியார்களுள் ஒருவராக நின்று அடியார்களைப் போற்றியவர்
- அடியார்களுக்காகக் கறைமிடற்றானிடம் வேண்டியவர்
- பொதுமக்களையும் பெண்களையும் கணக்கில் எடுத்துக் கொண்டவர்
- வேதத்தோடு வேள்வியோடு சைவ நெறி தக்க வைக்க - தழைக்கப் போராடியவர்
- வழிபாட்டு இடம், வழிபடு கடவுள் போன்றவற்றிற்கு முதன்மை கொடுத்தவர்
- புறச்சமயத்திலிருந்த மக்களுக்கு நம்பிக்கை ஊட்டியவர்
- இனிய கவிஞன் இசை மேகம் பக்தியைப் பாடுபொருளாகக் கொண்டு புரட்சி செய்தவர்
- இடமறிந்து காலமறிந்து பாக்களைக் கையில் எடுத்தவர்
- சைவத்திற்குச் சரியான அடித்தளம் அமைத்தவர்
- சமூக அக்கறை கொண்டவர்; சமூகச் சிந்தனையாளர்
- வழிபாட்டு முறைகளை எடுத்துச் சொல்லிப் புறச் சமயத்திலிருந்து சைவநெறி நெகிழ்ச்சி உடையது என உறழ்ந்து காட்டியவர்
- வழிபாட்டுப் பாடல்கள் வழித்தமிழனையும், தமிழையும் வளப் படுத்தியவர்
- சிவஞானத்தைக் காட்டியவன் ஞானசம்பந்தர்
- பதிகங்கள் வழி கோயிலோடு நில்லாமல் மக்களின் உள்ளத்தை உளவியல் பாங்கில் வாசித்தவர்
- வன்தொண்டர் சுந்தரரிடம் சிவன் சொன்னது போல் சிவனுக்குப் பாட்டையே அர்ச்சனை ஆக்கியவர்
- சிவனுடன் மட்டும் இல்லாமல் ஜீவனையும் தட்டி எழுப்பியவர்.

# 78. சம்பந்தர் போற்றும் அடியார்கள்

சு. விஜயகாந்தி, மயிலம்.

இறைப்பணியோடு இன்றமிழ்ப் பணியும் ஒருங்கே ஆற்றிய சமயக்குரவருள் முதல்வர் திருஞானசம்பந்தர். இவர் தம்மையொத்த இறையடியார்களைத் தம் திருமுறைகளில் ஆங்காங்கே சுட்டிப் போற்றிப் பரவியுள்ளார். சம்பந்தர் அடியார்களைப் போற்றியதை விதந்துரைப்பது இவ்வாய்வு. இவர் சுட்டும் தனி அடியார்களை மட்டும் குறித்து இவ்வாய்வுரை அமைகிறது.

அடியார்களின் பற்றாளர் சம்பந்தர் என்பதை அவர் அருளிய பதிகங்கள் தெற்றெனப் புலப்படுத்துகின்றன.

**"உன்னைப் போற்றும் அடியார்க்கு அருளாயே"** (ப. 189, பா. 5)

**"நாடொரும் பொய்யிலா அடிமை புரிந்தார்க்கு அருளாயே"** (ப. 189, பா. 7)

என்பன சம்பந்தர் அடியார்க்காக இறையருளை பெற விழைவதைத் தெரிவிக்கும். மேலும் அடியார்களுக்கு நாளும் கோளும் எப்பொழுதும் நல்லனசெய்யும் என்கிறார். (ப. 221-ப. 1,) இவ்விதம் அடியார்களின் ஆர்வலராகிய சம்பந்தர் தாம் சந்தித்த அடியார்களை இறைப்பணியாற்றிய அவர்களைச் சிறப்பித்துப் போற்றுகிறார்.

### 1. சம்பந்தர் போற்றும் அடியார்கள்

1. முதல் திருமுறையில் போற்றப்பெற்றோர் கோச்செங்கட் சோழன், சண்டேஸ்வரர், சிறுத்தொண்டர், நீலகண்ட யாழ்ப்பாணர், நமிநந்தி அடிகள்.

2. இரண்டாம் திருமுறையில் போற்றப்பெற்றோர் புகழ்த்துணை நாயனார், முருக நாயனார், நின்றசீர்நெடுமாறன், கோச்செங்கட் சோழன், சண்டேஸ்வரர்.

3. மூன்றாம் திருமுறையில் போற்றப்பெற்றோர் கண்ணப்பர், குலச்சிறையார், திருநீலநக்கர், மங்கையர்க்கரசியார், நின்றசீர்நெடுமாறன், கோச்செங்கட்சோழன், சண்டேஸ்வரர், சிறுத்தொண்டர், திருநீலகண்டர், யாழ்ப்பாணர்.

மேற்சுட்டிய அடியார்களை சம்பந்தரின் நோக்கில் நின்று,

1. சமய புரட்சிக்கு வித்திட்டோர்.

2. இறைப்பணியின் சிகரம் நின்றவர்.

3. செயல்களும் செயலாற்றியோர்.

1) தன்னை வருத்தியோர், 2) தன்னைச் சார்ந்தோரை வருத்தியோர், 3) இசைத்தமிழால் இறைப்பதம் வென்றவர், 4) வலிய வழிபாட்டின் வழி இறைபதம் உற்றவர் எனும் பொருண்மைகளில் பகுத்துணரலாம்.

### (1) 1. சமயப் புரட்சிக்கு வித்திட்டோர்

சமயக்குரவர்கள் தோன்றிய காலம்; தமிழ்வேந்தர் தளர்வுற்றனர், அயலவர் உயர்வுற்றனர். மேலும் சமய உலகில் சமணர்களின் மேலோங்கிய ஆட்சியால் சமூகம் சீர்குலைந்தது, சமயப்பூசல் வேரூன்றியது. இக்காலச் சூழ்நிலையில் தான் சம்பந்தர் சமய உலகில் ஒளி ஞாயிறென உதித்துப் புரட்சிக்கு வித்திட்டார். சமய மறுமலர்ச்சிக்கு, புரட்சிக்கு வித்திட்டவர் சம்பந்தர், எனினும் அவர் சமணரை எதிர்த்து ஆற்றிய சமயப் போருக்குத் தூண்டுகோலாக உறுதுணையாக நின்றவர்கள் மந்திரி குலச்சிறையாரும் அரசமாதேவி மங்கையர்க்கரசியாரும் ஆவர். இப் புரட்சியில் வெற்றிபெற நடுநாயகராக பரிசோதனை முயற்சிக்குரியன் பாண்டியன் நின்றசீர் நெடுமாறன்.

3-ம் திருமுறையில் 378-ம் பதிகத்தில் மங்கையர்க்கரசியார்க்கு 5 பாக்கள், (1, 3, 5, 9) குலச்சிறையாருக்கு 5 பாக்கள் (2, 4, 6, 8, 10) என்று இருவரையும் சமமாகப் போற்றும் சம்பந்தர் இறுதியில் 11ம் பாடலில் இருவரையும் போற்றிய பாங்கு வியத்தற்குரித்து தேவியார் இறைவனின் அருளைப் பெற்றவர். (373-6) பாண்டியன், வெப்பு நோயுற்றபோழ்து சம்பந்தர் தேவியை முன்னிலைப்படுத்தி என்னைப் பாலன் என எண்ண வேண்டாம். சமணர்களுக்கு எளியேன் அல்லன் (297-பா.1) எனப் பரவுகிறார். திருவாலவாய் திருத்தலத்தைச் சிறப்பிக்குமிடத்து, தேவியார் வழிப்பட்ட, சிவத்தொண்டாற்றிய திருத்தலம் எனப் போற்றுகிறார்.

**"........................................ பாண்டிமாதேவி**
**பணி செய்து நாடொறும் பரவி"** (3-378-பா. 1)

**"................................... பாண்டிமாதேவி**
**பணி செய்ய பாரிட நிலவும்"** (3-378-பா. 3)

**"பாங்கொடு பணிசெய நின்ற"** (378-பா. 7)

எனுமடிகள் சம்பந்தர் தேவியாரைப் போற்றியதைப் பாங்குற உரைக்கின்றன.

அடுத்து குலச்சிறையாரைப் போற்றுமிடத்து 'குலச்சிறை குலாவி நின்றேத்தும்' (372-பா. 2) இறைவன் அடியார்களைக் கண்டால் பணிந்து வணங்குபவர் குலச்சிறையார் (328-4) இறையடியார்களைப் பணி தலையே தவமாகக் கொண்டவர் (378, பா. 6) சிவச்சின்னங்கள் அணிந்தவர் களைக் கண்டு வணங்குபவர் (378-பா. 8) எனப் பலவாறாகப் போற்றுகிறார் சம்பந்தர்.

சம்பந்தர் தங்கியிருந்த திருமடத்தில் சமணர்கள் தீக்கொளுவ, மன்னன் சைவம் தழுவவும், பாண்டிமாதேவியின் மங்கல நாணைக் காக்கவும், குலச்சிறையாரின் அன்புக்காகவும், இத்தீயானது "பையவே சென்று பாண்டியற்காக" எனப் பாடியருளினார் சம்பந்தர் (309-பா. 1) சமணர் கொளுவிய சுடர் தென்னன் பக்கமே சேர்க (பதி. 309-பா. 1) எனப் பாடிய நிகழ்வே சமய உலகில் மாபெரும் புரட்சியை உருவாக்கியது. திருநீற்றுப் பதிகத்தால் மன்னனின் வெப்புநோய் அகன்றது. சமணர்கள் தோற்றுக்கழுவேறினர். 'மன்னன் எவ்வழி அவ்வழி மக்கள்' ஆதலின் மன்னன் சைவத்தைப் பின்பற்ற மக்களும் சைவமதம் பற்றி அதன் வளர்ச்சிக்கு வழி வகுத்தனர். சைவம் தழைத் தோங்கியது. சேக்கிழாரும் இதனை "வெய்ய தீங்கியது வேந்தன்மேற்று எனும் விதிமுறையால் செய்யனே திருவாலவாய்" எனும் திருப்பதிகம், சைவர் வாழ் மடத்தமணர்கள் இட்டத் தீத்தழல் போய்ப், பையவே சென்று பாண்டியற்காகெனப் பணித்தார்.

இங்ஙனம், திருத்தலத்தைச் சிறப்பிக்கும் வகையில், மங்கையர்க் கரசியார், குலச்சிறையார் இவர்களின் சிவத்தொண்டினையும், வழி பாட்டினையும் போற்றுகிறார் சம்பந்தர். மன்னன் சைவம் தழைக்கக் காரணமாகவிருந்த நிகழ்வைச் சுட்டிப் பாராட்டுகிறார்.

### (1) 2. இறைப்பணியில் சிகரம் நின்றவர்

சோழர்காலத்தில் கோயிற்கலை மிகுதியும் வளர்ந்தது. அவ் வளர்ச்சியின் ஒரு பங்கு கோச்செங்கட்சோழ நாயனாருக்கும் உண்டு. இச்சோழனால் உருவாக்கம் பெற்ற தலங்களை நவிலுமிடத்து, நாயனாரையும் ஒருங்கே பாராட்டுகிறார். சிலந்தி செங்கட்சோழனாகப் பிறந்த வரலாற்றை,

**"சிலந்தி செங்கட் சோழனாகச் செய்தானூர்"** (3-199-7)

எனச் சுட்டுகிறார். இம்மன்னன் திருவானைக்கா கோவிலை உருவாக்கியமையால்,

**"செங்கட்பெயர் கொண்டவன் செம்பியர்கோன்**
**அங்கட் கருணை பெரிதாயனே"** (2-159-5)

அப்பதிகத்தில் போற்றப்பெறுகிறார். இன்னும் சேய்ஞலூர் (1-48-6), திருவைகல் மாடக்கோயில் (3-276-2,4), திருஅம்பர் பெருந்திருக்

கோயில் (3-277-1,2), திருத்தண்டலை நீணெறி கோயில் (3-308-9), போன்ற கோயில்களை உருவாக்கிய அரும்பணியாகிய வரலாற்றுப் பணியைப் பாராட்டிச் சிறப்பிக்கிறார். சோழன் ஆக்கிய கோயிலில் வீற்றிருக்கும் இறைவனை வழிபட்டு உய்வீர் என்றழைக்கிறார் சம்பந்தர்.

## (1) 3. செயற்கருஞ் செயலாற்றியோர்

செயற்கருஞ் செயலாற்றி இறைபதம் பெற்ற கண்ணப்பநாயனார், சண்டேசர், புகழ்த்துணை நாயனார், சிறுத்தொண்டர் ஆகிய நால்வரையும் போற்றுகிறார் சம்பந்தர். இந்நால்வரும் தன்னை வருத்தியும், தன்னைச் சார்ந்தோரை வருத்தியும் பெறற்கரிய பெரும் பேறு பெற்றனர்.

### 1. தம்மை வருத்தியோர்

தம்மைத்தாமே வருத்தி வழிபாடு மேவி, இறைப்பதம் உற்றவர் கண்ணப்பர், புகழ்த்துணை நாயனார் எனுமிருவர்.

ஆகம விதிக்கு மாறாகச் சூழலுக்கேற்றாற்போல் எளிய வழிபாட்டு முறை மேற்கொண்டாலும், கண்ணினை இடந்து ஈசன் கண்ணில் அப்பிய செயற்கருஞ் செயலால் நற்பேறு பெற்றார். இதனை,

**''வாய் கலசமாக வழிபாடு செய்யும்**
**வேடன் மலராகும் நயனம்**
**காய் கனையினால் இடந்து ஈசனடி**
**கூடு காளத்தி மலையே''** (3-327-4)

எனும் சம்பந்தரின் அடிகள் போற்றுகின்றன.

**''கண்ணப்பருக்கு அருள் செய்த கயிலை''** (3-364-7)

எனவும்,

**''கானலைக்கும் அவன் கண்ணிடந்தப்ப நீள்**
**வானலைக்கும் தவத்தேவு வைத்தானிடம்''**

என்றும் கண்ணப்பரின் அருஞ்செயலை வியக்கிறார் சம்பந்தர்.

**''கண்ணப்பன் கண்ணப்பக்கண்டு உகந்தார்''**

என நாவுக்கரசரும் இவரைப் போற்றுகிறார்.

நாள்தோறும் இடைவிடாது இருவேளையும் இறைவனை வழிபட்டு இறைத்தொண்டாற்றி இறைபதம் உற்றவர் புகழ்த்துணை நாயனார். அவ்வமயம் ஊரில் பஞ்சம் நிலவியதால், இவர்தம் சிவத்தொண்டுக்கு ஏதம் வந்தது. இருப்பினும், வறுமைப்பிணியால் நைந்து வருத்தினாலும் இறைப்பணியைத் தொடர்ந்தார். ஒருநாள் இறைவனுக்கு அபிடேகம் செய்யும் போழ்து மயக்குற்றுக் கீழே விழுந்தார். அவ்வேளையில் இவர் தம்மை வருத்தி ஆற்றும் இறை பணியை இறைவன் உணர்ந்தவராய்,

அவரது கனவில் தோன்றி, பஞ்சம் தீரும்வரை சிவபீடத்தில் காசு வைக்கப்பெறும் எனச் சொல்லி மறைந்தார். அடியாரும் அக்காசினைக் கொண்டு இறைப்பணியைச் செம்மையாக ஆற்றி உய்ந்தார். சம்பந்தருக்கும், அப்பருக்கும் இறைவன் படிக்காசு வழங்கியது போல, புகழ்த்துணை நாயனாரும் காசு பெற்று உண்மைத் தொண்டாற்றியதை,

"அலந்த அடியான் அற்றைக்கு அன்றோர் காசெய்திப்
புலர்ந்த காலைமாலை போற்றும் புத்தூரே". (2-198-7)

எனப் பாராட்டுகிறார் சம்பந்தர். இவ்விதம் சூழலுக்கேற்றாற் போல நெஞ்சுரத்துடன் அன்பு மேலீட்டால் தம்மை வருத்தி இறைப்பேறு பெற்றமையின் சம்பந்தர் அவ்விருவரைப் போற்றுகிறார்.

## 2. தம்மைச் சார்ந்தோரை வருத்தியோர்

சிறுத்தொண்ட நாயனாரும், சண்டேச நாயனாரும் தம்மைச் சார்ந்தோரை வருத்தி இறைப்பேறு பெற்றனர்.

பரஞ்சோதி எனும் பெயரில் பரஞ்சோதியாக வாதாபி கொண்டு வரலாற்றில் பதிவுற்றவர். மனம்மாறி இறைப்பணியாற்றி சமய வரலாற்றிலும் சிறுத்தொண்டராகப் பதிவுற்றார். தாம் சிவப்பணியாற்றியதோடு மட்டுமன்றி, தம்மில்லிற்கு விருந்துண்ண வந்த இறை பொருட்டு, தம் புதல்வன் சீராளனை அறுத்துக் கறி சமைத்துப் படைத்தார். இத்தகு செயற்கருஞ் செயலாற்றியவரை "திருச்செங்காட்டங்குடி" பதிகம் முழுமையும் போற்றிப் பரவுகிறார் சம்பந்தர். சிறுத்தொண்டன் இறைப்பணியாற்றும், வழிபாடு செய்யும் செங்காட்டங்குடி (3-21-11) என பதிகம் முழுமையும் சிறப்பித்துரைக்கிறார் சம்பந்தர். சிறுத்தொண்டருக்கு இறைவன் அருளீந்தான் என்பதை,

"பொடி நுகரும் சிறுத்தொண்டர்க்கு அருள்
செய்யும் பொருட்டாகக்
கடிநகராய் வீற்றிருந்தான் கணபதிச்சுரத்தானே" (1-61-10)

எனப் புகழ்ந்துரைக்கிறார் சம்பந்தர்.

மூன்று திருமுறைகளிலும் போற்றப்பெறுபவர் சண்டீசர். இவர் அவதரித்த திருசேய்ஞலூர் தலத்தைப் பாடும்போழ்து, தந்தை தாள் தடிந்தவருக்கு மாலை சூட்டத் தலைமை தந்ததென்னே (1-48-7) என வியக்கிறார்.

திருக்கோளிலி பதிகத்தில், மணலால் இலிங்கம் செய்து பாலால் அபிடேகம் செய்த விசாரசருமரைத் தடுத்த தந்தை தாள் தடிந்தவருக்கு, சண்டேச பதவியைத் தந்தருளியவர் (1-62-4) என்கிறார். மேலும் திருஊறல் (1-106-5), திருப்பிரம்மபுரம் (2-201-2), திருவேட்டக்குடி,

(3-324-3), திருக்கயிலாயம் (3-326-10), திருவாலவாய் (3-373-5) போன்ற பதிகங்களிலும் இறைவனால் ஆட்கொள்ளப்பட்ட சண்டீசரின் வரலாற்றை நவில்கிறார்.

சூழலுக்கேற்ப பாலாபிடேகம் செய்து வழிபட்ட வழிபாட்டிற்கு இடையூறு வந்துற்றபோது, இடையூறுக்குரியவர் யாரென்றும் பாராது இறைப்பற்று மேலீட்டால் தந்தை தாள் தடித்து இறைப்பேறு பெற்றார் சண்டீசர்.

### (1) 4. இசைத்தமிழால் இறைபதம் வென்றவர்

சம்பந்தர் தலங்கள் தோறும் சென்று பதிகம் பாடி பரவியபோது நீலகண்ட யாழ்ப்பாணரும் உடன்சென்று, சம்பந்தரின் வேண்டுதலுக்கேற்ப அவர் பாடிய பாடலை யாழில் இசைத்து, இசைத்தமிழ்ப்பணி வழி இறைநெறி கண்டார்.

**"பாணன் இசை பத்தினமயாற் பாடுதலும் பரிந்தளித்தான்**
**கோணலிளம் பிறை சென்னிக் கோளிலி எம்பெருமானே".**
(1-62-9)

என்று பாணருக்கு அருளீந்த இறைவன் போற்றப்பெறுகிறார். இறைவன் அடியார்தம் கனவில் பாணரை அழைத்து வரும்படி ஏவ, அவர்கள் அழைத்துவர, பாணர் பாட்டிசைக்க அவருக்குப் பொற்பலகை தந்தருளினார். (3-373-6) ஆனாய நாயனார் இசைக்கு உருகிய இறைவன் நீலகண்ட யாழ்ப்பானரின் இசைத்தமிழக்கும் உருகி அவரை ஆட்கொண்டமையின், சம்பந்தர் அவரைச் சிறப்பித்தருளினார்.

### (1) 5. வலிய வழிபாட்டின்வழி இறைபதம் உற்றவர்

நமிநந்தியடிகள், திருநீலநக்கர் எனுமிருவரும் வலிய, வழிபாட்டின்வழி இறைபதம் உற்றனர்.

நமிநந்தியடிகள் தொழில்வல்ல சித்தனாகிய இறைவனின் அருளின் வழி, எண்ணெய்க்குப் பதிலாக திருத்தல குளத்திலுள்ள, நீரினால் தீபமேற்றி வழிபட்டுய்ந்தார். அற்புத சிற்றாற்றலைப் பெற்ற இவரை திருக்கோளிலி பதிகத்தில்,

**"ஆவிதனில் அஞ்சொடுக்கி அங்கணன் என்றாதரிக்கும்**
**நாவியல்சீர் நமிநந்தியடிகளுக்கு நல்குமவன்".** (1-62-6)

என வியந்துரைக்கிறார் சம்பந்தர்.

சம்பந்தர் சாத்தமங்கை தலத்திற்குச் சென்றபோழ்து திருநீலநக்கர் அவரை எதிர் கொண்டு வரவேற்று ஓம்பினார். எனவே அயவந்தி இறைவனைப் போற்றும் முகத்தான் நீலநக்கரையும் போற்றுகிறார் சம்பந்தர்.

''நீலநக்கன் நெடுமாநகர் என்று தொண்டர் அறையும் ஊர்
சாத்தமங்கை'' (3-316-11)

எனவும் சிறப்பிக்கிறார்.

இறைவனை மலரால் அர்ச்சித்து வழிபட்டு உய்ந்தவர் முருக நாயனார். இவர்தம் வலிய வழிபாட்டினை,

''தொண்டர் தண்கயம் மூழ்கித்
துணையலும் சாந்தமும் புகையும்
கொண்டு கொண்டடி பரவிக்,
குறிப்பறி முருகன் செய்கோலம்''. (2-228-3)

என்றும்,

''முருகன் முப்போதும் செய்முடிமேல்
வாசமாமலர் உடையார்'' (2-92-5)

என்றும் பாராட்டுகிறார் சம்பந்தர்.

''புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணல் அதுகண்டு அருள் புரியாநிற்கும்'' (3)

எனும் திருமூலர் வாக்கும் ஈங்கு ஏற்புடைத்து.

இவர் இறைவன் திருக்குறிப்பின் வழி ஒழுகும் ஆற்றலுடையர் என்பதை 'குறிப்பு அறிமுருகன்' எனும் சொற்றொடரால் தெளியலாம். அப்பர் பெருமானும் குறிக்கோள் இலாது கெட்டேன் என்பார். இறைவன் குறிப்பறிந்து ஒழுகிய இவரது வலிமைமிகு மலர் வழிபாட்டினை சம்பந்தர் வியந்துரைக்கிறார்.

சம்பந்தர் அடியார்களைப் போற்றுமிடத்து பெறப்படுவன:

1. அடியார்களின் பற்றாளராக, அவர்களுக்காக இறையருளை வேண்டிப் பெற்றவர்.
2. சமய வரலாற்றில் பதிவுற்ற மாபெரும் புரட்சிக்கு வித்திட்ட, சைவமும் தமிழும் தழைக்க வழிவகுத்த அரசமாதேவி, குலச் சிறையார், பாண்டிய மன்னன் மூவரின் பெருமை போற்றல்.
3. 'அரசமாதேவி' அமைச்சர் இவ்விருவரின்றேல் சமயப்புரட்சியும் இல்லை. ஆதலின் 378ம் பதிகத்தில் இவ்விருவரையும் சமமாக மதித்து போற்றும் நடுநிலை.
4. திருநீற்றுப் பதிகத்தால் மனம்மாறிய அரசனைப் போற்றல்.

5. திருத்தலத்தைச் சிறப்பிக்குமிடத்து நால்வகை அடியார்களின் சிவத்தொண்டினையும் வழிபாட்டினையும் போற்றும் உத்தி.

6. கோயில் பல உருவாக்கிய கோச்செங்கணின் அரும்பண்பை 3 திருமுறைகளிலும் போற்றல்.

7. அடியார்கள் தம்மை வருத்தியும் தம்மைச் சார்ந்தோரை வருத்தியும் ஆற்றிய அருஞ்செயல்களைப் போற்றல்.

8. இசைத்தமிழால் இறைபதம் உற்ற திறம் போற்றல்.

9. இறைவனை விளிக்குமிடத்து, அடியார்களைப் போற்றும் உத்தி.

10. வலிய, எளிய வழிபாட்டின்வழி பெற்ற இறைபேறு போற்றல்.

# 79. சம்பந்தர் பாடிய பஞ்சபூதத் தலங்கள்

**வ. விசயரங்கன்,** புதுகும்முடிப்பூண்டி.

சீர்காழி பிரம தீர்த்தக் கரையில் அம்மையப்பரின் தரிசனங் கண்டு, ஞானப் பாலுண்டு அமுதத் தமிழ் இசைத்த திருஞானசம்பந்தர் தமிழகம் முழுவதும் கால் நிலம் தோயத் திருத்தல யாத்திரை மேற்கொண்டு நாட்டையும், மக்களையும் வாழ்வாங்கு வாழச் செய்து பக்திநெறி பரப்பியவர். அவர் பாடிய பதிகங்கள் 16000 என்பர். தற்போது 384 பதிகங்களே கிடைத்துள்ளன. அவர் பாடிப் பரவிய திருத் தலங்களில் **பஞ்சபூதத் தலங்களின்** சிறப்பினைச் சிறிது காணலாம்.

மண், நீர், தீ, காற்று, வானம் எனும் பஞ்சபூதங்களின் பேராற்றலைத் தன்னுட்கொண்டு ஒளிரும் திருத்தலங்கள் முறையே காஞ்சிபுரம், திருவானைக்கா, திருவண்ணாமலை, திருக்காளத்தி, சிதம்பரம் என்பனவாம். இந்த ஐந்து தலமகிமை பற்றி ஆராய்வோம்.

**திருஞானசம்பந்தர்**

**''வேத நெறி தழைத்தோங்க மிகுசைவத் துறை விளங்கப்**
**பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத**
**................திருஞான சம்பந்தர்''**

என்பார் சேக்கிழார் பெருமான்.

**''வெம்பந்தம் தீர்த்து உலகாள் வேந்தன் திருஞான**
**சம்பந்தன் தனை அருளால் சாரும் நாள் எந்நாளோ''**
- தாயுமானவர்

**''பிறவியெனும் பொல்லாப் பெருங்கடலை நீந்தத்**
**துறவியெனும் தொல்தோணி கண்டீர் - நிறையுலகில்**
**பொன்மாலை மார்பன் புனற்காழி சம்பந்தன்**
**தன்மாலை ஞானத் தமிழ்''.**
- நம்பியாண்டார் நம்பி

குமர குருபர சுவாமிகள் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழில் திருஞானசம்பந்தரைக் 'கழுமல மதலை' என்று போற்றி, அவரது பதிகங்கள் அறிதற்கு அரிய உபநிடத கருத்துக்கள் என்பதை தெள்ளத் தெளியப் புலப்படுத்துகின்றார்.

"செழுமலை தெளிய வடித்த தமிழ்ப்பதிகத்தோடே
திருவருள் அமுது குழைத்து விடுத்த முலைப்பாலாற்
கழுமல மதலை வயிற்றை நிரப்பி". - குமரகுருபரர்

திருஞானசம்பந்தரின் செந்தமிழ்ப் பாடல்களின் ஆற்றலை விதந்தோதும் பழம்பாடல் இது :

"புணலில் ஏடுஎதிர் செல்லெனச் செல்லுமே
புத்தனார் தலை தத்தெனத் தத்துமே
கணலில் ஏடிடப் பச்சென்(று) இருக்குமே
கதவு மாமறைக் காட்டில் அடைக்குமே
பனையில் ஆண்பனை பெண்பனை ஆக்குமே
பழைய என்பு பொற் பாவைய தாக்குமே
சினவரா விடம் தீரெனத் தீருமே
செய்ய சம்பந்தர் செந்தமிழ்ப் பாடலே".

**பிருதிவித்தலம் (காஞ்சிபுரம்)**

இத்திருத்தலம் சான்றோர்வாழ் தொண்டை வளநாட்டின் தலை நகராய்த் திகழ்ந்த பெருநகரம். பல்லவ மன்னர்களின் பெருமையைப் பாரறிய வைத்த பழம்பதி 'தென்னாட்டு நாளந்தா' எனப் போற்றப்படும் பெருமை கொண்டது. 'கல்வியில் கரையிலாத காஞ்சி மாநகர்' எனப் போற்றுவார் அப்பர் சுவாமிகள். 'நகரேஷு காஞ்சி' என்பான் பாரவி. சுந்தரர் இடக்கண் பெற்ற திருத்தலம். முக்தி நகர் ஏழனுள் ஒன்று. வசிக்க முக்தி தரும் திருத்தலம் 'காஞ்சியில் வைகுவோர் சிவத்தோடு ஒன்றுவர்' என்பது புராண வரலாறு. சைவம், வைணவம், சமணம், பௌத்தம் ஆகிய நாற்பெருஞ் சமயங்களும் ஒளி வீசித் திகழ்ந்த இடம்.

கற்ப காலத்திலும் காஞ்சி நகரம் அழியாதிருக்கும் வண்ணம் சிவபெருமான் செய்வித்தனர். இதனாற் காஞ்சி நகரத்திற்குப் 'பிரளயஜித்', என்னும் ஒருபெயர் உண்டு. காஞ்சிபுரம், திருபுவன சாரம், காம பீடம், தபோ மயம், மும்மூர்த்தி வாசம், துண்டீரபுரம், இலய சித்து, பிரம்புரம், விண்டுபுரம், சிவபுரம், சகல சித்தி, கன்னி காப்பு எனப் பன்னிரு காரணப் பெயர்களையும் கொண்டது காஞ்சி மாநகர்.

இங்குள்ள சிவாலயங்கள் அனைத்திற்கும் அன்னை காமாட்சியே தேவியாவாள். இரு நாழி நெல் கொண்டு 32 அறம் வளர்த்தவள் அன்னை காமாட்சி. முக்தி மண்டபம் மூன்று; புட்கரிணி 5; நதிகள் 7; பீடம் 8 - தன்பால் கொண்ட தெய்வத் தன்மை மிக்கது இத்திருப்பதி. நான்கு வேதங்களாகிய ஒரு மாமரமே இத்தலவிருட்சம்.

ஏகாம்பரநாதர் திருக்கோயில் மூலஸ்தானம் மணலால் ஆனதால் அபிஷேகமில்லை, புனுகுச் சட்டமே சாத்தப் பெறுவது. தீர்த்தம் கம்பாநதி;

ஏழுவாரத்திற்கும் ஏழு தீர்த்தங்கள் மட்டுமன்றிப் பலப்பல தீர்த்தங்களால் புனிதங் கொண்டது காஞ்சிபுரம்.

திருமால் ஒவ்வொரு அவதாரத்திலும் பூஜித்த புனித பூமி; எண்திசைக் காவலர்களும், அகத்தியர், மார்க்கண்டேயர் போன்ற மாமுனிவர்களும் தேவரும், மாமனிதர்களும்,மூவரும் பணிந்து ஏற்றிய திருத்தலம்; ஐயடிகள் காடவர்கோன் அரசாண்ட திருப்பதி; மறவாது கல்லெறிந்த சாக்கியரும், திருக்குறிப்புத் தொண்டரும் முக்தி பெற்ற தலம்; இத்தலத்தின்மீது 4 பதிகங்கள் திருஞானசம்பந்தர் பாடியுள்ளார்.

**பிள்ளையார் பாளையம்**

காஞ்சிபுரத்தில் திருமேற்றளி நாதர் சந்நிதித் தெருவின் கோடியில் ஆளுடைய பிள்ளையார் (திருஞானசம்பந்தர்) கோயில் உள்ளது. இவரது வருகையால் இப்பகுதி அன்று முதல் இன்று வரை **பிள்ளையார் பாளையம்** என வழங்கப்படுவது நம் சிந்தனைக்கு உரியது. சுந்தரர் பாடலில்;

**'வெள்ளங் காட்டி வெருட்டிட அஞ்சி**
**வெருவியோடித் தழுவ வெளிப்பட்ட**
**கள்ளக் கம்பனை'**

என்ற தொடர்களால் அன்னை காமாட்சி ஏகம்பனை வழிபட்ட வரலாறு அறியத் தக்கது.

**'கைப்போது மலர் தூவி, காதலித்து வானோர்கள்**
**முப்போதும் முடி சாய்ந்துத் தொழ நின்ற முதல்வனை'**
- அப்பர்

**'கருவார் கச்சித் திருஏ கம் பத்(து)**
**ஒருவா என்ன மருவா வினையே'** - சம்பந்தர்

**அப்புத்தலம் (திருவானைக்கா)**

**'மால் அயன் தேடிய மயேந்திரரும்**
**காலனை உயிர்கொண்ட கயிலையாரும்**
**வேலைய தோங்கும் வெண்ணாவலாரும்**
**ஆலையாரூர் ஆதி ஆனைக்காவே'** - திருஞானசம்பந்தர்.

அப்புத்தலமாம் திருவானைக்கா இறைவன் பேரில் திருஞானசம்பந்தர் மூன்று பதிகங்கள் பாடியுள்ளார். காவிரி, கொள்ளிடம் ஆகிய இரண்டு ஆறுகளுக்கும் இடைப்பட்ட இடத்தில் இறைவன் கோயில் கொண்டிருப்பதால் மூலஸ்தானத்தில் எப்பொழுதும் தண்ணீர் சுரந்தபடி இருக்கும். தலவிருட்சம் வெண்நாவல்.

கோச்செங்கட்சோழன் எடுப்பித்த மாடக்கோயில்கள் எழுபதில் இதுவும் ஒன்று. இத்தலத்து இறைவனைத் திருஞானசம்பந்தர் போற்றும் போது கோச்செங்கட்சோழன் வரலாற்றைக் குறிப்பிடத் தவறவில்லை.

**''செங்கண் பெயர்கொண்டவன் செம்பியர்கோண்**
**அங்கட் கருணை பொரிதாய வனே''**

உமாதேவி பூஜித்த திருத்தல மகிமையும் இத்தலத்திற்கு உண்டு. இதன் காரணமாக நாள்தோறும் அம்மன் கோயில் அர்ச்சகர் பெண்ணுடை தரித்து உச்சிக்கால பூஜைசெய்யும் ஐதீகம் இங்குண்டு. அம்பிகை அகிலாண்டேஸ்வரி கவி காளமேகம் தமிழ் அமுதம் பொழியக் காரணமானவள். ஆதிசங்கரரும், அம்பிகையின் அருட்பார்வை அவனிக்குக் கிடைக்க வழிபட்ட திருத்தலம் இது.

அட்ட திக் பாலகர், அட்ட வசுக்கள், சிலந்தி, யானை , செங்கணான், நான்முகன், திருமால், பராகரமுனிவர், சம்புமுனி, கௌதம் முனிவர், கதிரவன், சந்திரன், அகத்தியர், மூவர் முதலிகள், கமலை ஞானப் பிரகாசம் மற்றும் பல்லோர் பாடிப் பரவிய தலம்.

**'செழுநீர்த்திரள்'**

அம்பிகை தீர்த்தத்தைத் திரட்டிச் சிவலிங்கத் திருவுரு அமைத்த காரணத்தால் இறைவன் திருநாமம் 'செழுநீர்த்திரள்'. காவிரி, கொள்ளிடம் எனும் இருநதிகளின் நீர்த்திரள் அகிலாண்டேஸ்வரரின் கருவறையில் சுரந்தபடி இருக்கும் காரணத்தால் அமைந்தது இப்பெயர் என நினைக்க இடமும் உண்டு. இத்திருப்பெயரைத் திருநாவுக்கரசு சுவாமிகள் 'முன்னானை' எனத் துவங்கும் பதிகத்தின் ஒவ்வொரு பாடலிலும் இடம்பெறச் செய்துள்ளார் என்பது நாம் அறியத் தக்கது.

இறைவனது தீயுருவம் நீருருவமான தலமல்லவா இது? தீர்த்தம் பிரம்ம புட்கரணி, இந்திர தீர்த்தம் என்பன, மூவரும் நகருக்குள்ளே வாராமல் பதிகம் பாடிப் பரவியுள்ளனர்.

ஆலயத்தில் பெரிய திருமதில் 'திருநீறிட்டான் மதில்' என்று அழைக்கப்படுகிறது. வெண்நாவல் வீற்றிருக்கும் விமலன் சித்தர் உருக்கொண்டு, எழுந்தருளி, வேலையாட்களுக்கு அவர்களுடைய வேலைக்குத் தக்கவாறு பொன்னாகும் வண்ணம் திருநீறளித்துக் கட்டுவித்தமையின் இப்பெயர் பெற்றது என்பர்.

இந்தியத் திருநாடு 'ஜம்பூத்வீபம்'; இத்தலமோ ஜம்புகேசுவரம் (வெண் நாவல் மரத்தைத் தல விருட்சமாக உடையது).

## அக்னித்தலம் (திருவண்ணாமலை)

**''உண்ணாமுலை உமையாளொடும் உடனாகிய ஒருவன்**
**பெண்ணாகிய பெருமான்மலை திருமாமணி திகழ**
**மண்ணார்ந்தன அருவித்திரள் மழலைம் முழவதிரும்**
**அண்ணாமலை தொழுவார்வினை வழுவாவண்ணம் அறுமே''**

- சம்பந்தர்

பஞ்ச பூதத் தலத்துள் அக்னித் தலம் அண்ணாமலை, விராட் புருஷனின் மணிபூரகத்தலம்; நினைக்க முக்தி தரும் அற்புதத் திருத்தலம்; மாணிக்க வாசகர் திருவெம்பாவை பாடிய திருத்தலம்; இடப்பாகம் பெறத் தேவி அருந்தவம் புரிந்து இடப்பாகம் பெற்ற இடம்; திருமாலும், நான்முகனும் தேடிக் காணொணாத இறைவன் கோயில் கொண்ட இடமும் கூட. மூவரும் பரவிய தலம்; சுந்தரர் பாடலில் வைப்புத்தலம். திருஞானசம்பந்தருடைய இரு பதிகங்கள் தற்போது உள்ளன. அருணகிரி நாதர் வழிபட்ட தலம். எத்தனையோ மகான்கள் அன்று முதல் இன்று வரை ஐம்புலனடக்கி, அருந்தவம் புரியுமிடம்.

எட்டு கல் சுற்றளவு கொண்ட 'மலைவலம்' அன்றுமுதல் தொடர்ந்து பக்தர்களால் கைக்கொள்ளப்படுகிறது. இன்று முழுமதி நன்னாளில் கிரிவலம் வருவோர் எண்ணிக்கை கணக்கில் அடங்காது. கார்த்திகைத் திங்களில் பிரும்மோத்ஸவம் காணக் கண் கோடி வேண்டும் **'தீபத் திருவிழா'** பேசாத நாளில்லை; பேசாத நூலில்லை.

பெண்ணையாறு, சேயாறு, கபிலை நதி, திரு நதி-நதிகள் நான்கு; அர்க்கமலை, தேவமலை, தண்ட மலை, திரிசூலகிரி-மலைகள் நான்கு; தீர்த்தங்கள் 360.

பிறவிப் பிணி அகற்றுதலின் இறைவன் **'மலை மருந்து'** என அழைக்கப்படுகிறான். அதிரும் கழலார், அருணாசலேஸ்வர், அண்ணா மலையார் என்றும் வழங்கப்படுகிறார், அம்பிகை உண்ணாமுலை.

அணி அண்ணாமலை (அடி அண்ணாமலை) பஞ்சமுக தரிசனம் என்னும் மலையின் ஐந்து சிகரக் காட்சி காணவேண்டிய ஒன்று. சைவ எல்லப்ப நாவலர் இயற்றிய அருணாசல புராணம் படிக்க வேண்டிய ஒன்று.

**'வந்தித் திருக்கம் அடியார் தங்கள் வருமேல் வினையோடு**
**பந்தித் திருந்த பாவம் தீர்க்கும்'**

பரமன் கோயில் கொண்ட திருவண்ணாமலையை நாளும் எண்ணத்தில் கொண்டு போற்றுவோமாக.

## வாயுத்தலம் (காளத்தி)

'கோங்கமே குரவமே கொன்றையம் பாதிரி
மூங்கில் வந்தனைதரு முகலியின் கரையினில்
அங்கமா காளத்தி அடிகளை அடி தொழ
வீங்கு வெந்துயர்விடும் வீடு எளிதாகுமே'

- திருஞானசம்பந்தர்

பஞ்சபூதத் தலங்களுள் வாயுக்ஷேத்திரம் (காற்று) இறைவன் காளத்தீசுவரர்; அம்பிகை ஞானப் பூங்கோதை; மூலஸ்தானத்தில் உள்ள விளக்குகள் எப்போதும் காற்றில் அசைந்து கொண்டே இருக்கும்.

தட்சிண கைலாயம், தென்கயிலாயம், திருக்காளத்தி, காளஹஸ்தி, சிவானந்தகிரி, சிவானந்த நிலையம், கண்ணப்பபுரம், மும்முடிச் சோழபுரம் என்று பலபெயர்களை உடையது. காளத்தி வலம் வருதல், மேற்குச் சாளர வாயிலின் வழியாக காளத்தி நாதரைத் தரிசித்தல் ஒவ்வொரு வரும் ஆயுளில் ஒருமுறையாவது மேற்கொள்ள வேண்டிய ஒரு செயல் ஆகும்.

அப்பர், சம்பந்தர், சுந்தரர் மூவரும் காளத்தியில் இருந்தபடியே வடநாட்டுத் திருப்பதிகளைப் பாடிப் பரவியுள்ளனர். சிலந்தி, பாம்பு, யானை மூன்றும் வழிபட்டு முக்தியடைந்ததால் 'சீகாளத்தி' என்ற பெயரைப் பெற்றது. ஆறு - பொன் முகலி (சுவரண முகி) மலை மேலிருந்த குடுமித் தேவரை ஆறே நாளில் வழிபட்டு, அரும்புகழ் கொண்டான் கண்ணப்பன். மூவர் முதலிகள் மலைமேல் ஏறியே வழிபட்டதைப் பெரியபுராணத்தால் அறியலாம்.

## கண்ணப்பன்

"வாய் கலசமாக வழிபாடு செய்யும் வேடன் மலராகு நயனம்
காய் கணையினால் இடந்து ஈசனடி கூடும் காளத்தி மலையே"

- சம்பந்தர்

பக்தியின் உச்ச நிலையில் ஒளிர்ந்தவன் திண்ணன். குடுமித்தேவரிடத்து அவன் கொண்ட தீராக்காதலை பெரியபுராணத்தால் விரிவாக அறிகிறோம்.

தண்ணீரை வாயிலே நிரப்பி, அந்த எச்சில் நீரையே புனித நீராக அபிஷேகம் செய்கிறான் திண்ணன். இறைவன் திருக்கண்ணில் குருதி வழியக் கண்டு, வேதனையால் துடித்து, தம் கண்களையே இறைவனுக்கு அப்பிக் கண்ணப்பன் ஆனான். இந்த வரலாற்றை இரத்தினச் சுருக்கமாக இரண்டே வரிகளில் பாடுகிறார் காளத்திப் பதிகத்தில் திருஞானசம்பந்தர்.

**சிவசாரூப்யம்**

விராட் புருஷனுடைய விசுத்தி ஸ்தானத்தலம் (கழுத்து) என்பர் இத்தலத்தை; பிரம தேவருடைய அநாகத ஸ்தானம்; பஞ்சாஷர ஜபசித்தியை விரைவில் வழங்க வல்ல திருத்தலம்; சிவஞானத்தைக் கூட்டுவிக்கும் தன்மையதாய், காசி, தில்லை, திருமுதுகுன்றம் போன்று ஒளிர்வது இத்தலம்; 'சிவ சாரூப்பயம்' தரும்; வசிக்க முக்தி தரும் தலம் இது.

**தலவிருட்சம் : அகண்டவில்வம், கல்லால்.**

உருத்திரர், நக்கீரதேவர், இந்திரன், இராமன், திருமால், திருமகள், நான்முகன், கலைமகள், முசுகுந்தன் போன்றோர் வழிபட்டுப் பேறு பெற்றுள்ளனர். கலியின் துயரை மாற்றிப் பிறவித்துயரை நீக்க வல்ல இத்திருத்தலத்தை வழிபட்டு வாழ்வின் பயனைப் பெறுவோமாக.

**ஆகாசத்தலம் (சிதம்பரம்)**

**''கற்றாங்(கு) எரியோம்பிக் கலியை வாராமே**
**செற்றார் வாழ் தில்லைச் சிற்றம்பலம் மேய**
**முற்றா வெண் திங்கள் முதல்வன் பாதமே**
**பற்றா நின்றாரைப் பற்றா பாவமே''** - சம்பந்தர்

விராட் புருஷனுக்கு இதய தாமரையாய் திகழ்வதால் புண்டரீகபுரம் எனப் பெயர் கொண்டது சிதம்பரம். பஞ்சபூதத் தலத்துள் ஆகாசம் ஐந்து சபைகளில் கனகசபை. பிறந்தாலும், இறந்தாலும், தரிசித்தாலும் முக்தியளிக்கும் தலம் ஆதலின் மகா சிவலோகம், பூலோக கைலாசம் என்றெல்லாம் அழைக்கப் பெறும். பொன்னம்பலம், சிற்றம்பலம், புலியூர், பெரும்பற்றப் புலியூர், தில்லைவனம், சிதாகாசத்திருத்தலம் என்று பெயர்களையும் உடையது.

சிற்சபை, கனகசபை, நிருத்தசபை, தேவசபை, இராசசபை என இங்கு ஐந்து திருச்சபைகள் உள்ளன. பொற்சபை இரணியவர்மனாலும், பராந்தகனாலும், பேரம்பலம் அநபாய சோழனாலும் பொன்வேயப் பெற்றது என்பர். திருநாவுக்கரசர் பதிகத்திலேயே பொன் வேய்ந்த தலமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

சிற்றம்பலத்தே கூத்தப் பெருமான் திருநடனம் ஆனந்த நடனம். இறைவனின் ஐந்தொழிலைக் காட்டிடும் அற்புதத் திருக்கூத்து. சிவகங்கை புனித தீர்த்தம்; தில்லை நடராசனுக்கு வலப்புறம் சிதம்பர ரகசியம்; அம்பிகை சிவகாமி.

வைணவருக்குக் கோயில் திருவரங்கம்; சைவர்களுக்குக் கோயில் சிதம்பரமே. வியாக்கிர பாத முனிவரும், பதஞ்சலியும் பூஜித்துப் பேறு

பெற்ற இடம். மாணிக்க வாசகர், திருமாளிகைத்தேவர், மூவர் முதலிகள், சேந்தனார் பாடிய பாடல்களை உடையது. குமரகுருபரர் சிதம்பர மும்மணிக் கோவை, சிதம்பர செய்யுட்கோவை, சிவகாமியம்மை இரட்டை மணி மாலை என்றும் நூல்களைத் தமிழ் கூறும் நல்லுலகிற்கு வழங்கியுள்ளார்.

கோவிந்தராசர், நடராசர் ஆகிய இரு ராசாக்களையும் ஒரே நேரத்தில் இத்தலத்தில் வழிபடலாம். ஆண்டிற்கு ஆறுகாலம் நடராசர் அபிஷேகம்; ஆனித் திருமஞ்சனமும், ஆருத்ரா தரிசனமும் கண் கொள்ளாக் காட்சி. சித்திரை, ஆவணி, புரட்டாசி, மாசித் திங்களிலும் அபிஷேகம் உண்டு. தில்லை மூவாயிரவர் பூஜிக்கும் திருத்தலம், இக்கோயிலில் அர்த்த ஜாம வழிபாடு சிறப்புக்குரியது.

தெய்வத் தமிழ் மறைகளாம் தேவாரப் பதிகங்கள் கண்டெடுக்கப் பட்ட தலம் இதுவே. வேதத்தின்கண் உள்ள 'தர்சணோபநிஷத்தில்' சிதம்பர மகிமை பேசப்படுகிறது.

**''அருமறைச் சிரத்தின் மேலாம்**
**சிற்பர வியோமமாகும் தில்லைச் சிற்றம்பலம்''**

என்று திருத்தொண்டர் புராணம் கூறுவதும் வேத சிரமாகிய உபநிடதங் களில் ஞானாகாச வடிவமாகத் திகழ்வது தில்லைச் சிற்றம்பலம் என்பதை உறுதி செய்கிறது.

வேதங்கள், உபநிடதங்கள், இதிகாசபுராணங்கள், சங்க இலக்கியங் களில் இடங்கொண்ட புனிதத் தலங்கள் பற்பல. மூர்த்தி சாதாக்யம் தில்லை நடராசர்; லிங்கோத்பவ மூர்த்தி அண்ணாமலையார்; ஆறாதாரத் தலங்களாகப் போற்றப்படுபவை ஆரூர், ஆணைக்கா, திருவருணை, சிதம்பரம், காளஹஸ்தி, காசி, கைலாசம் என்பன.

விராட் புருஷனின் மூலதாரமாக ஒளிர்வது திருவாரூர்; நாபியாகத் திகழ்வது திருவானைக்கா; வயிறாக விளங்குவது திருவண்ணாமலை; இதயமாக இயங்குவது சிதம்பரம்; கழுத்தாகப் பரிணமிப்பது காளத்தி; திருப்புருவம் காசி; நெற்றி கேதாரம்; கைலாசம் சிரசு என்றெல்லாம் கூறப்படுகிறது.

காளத்தி, சிதம்பரம், திருவானைக்கா, திருவண்ணாமலை இந்நான்கு தலங்களும் பஞ்சபூதத் தலங்களிலும், ஆறாதாரத் தலங்களிலும் இடங் கொண்டிருப்பதை எண்ணி எண்ணி வியக்கத் தோன்றுகிறது. திருஞான சம்பந்தர் போன்ற அவதார புருஷர்களும், ஞானிகளும், சித்தர்களும், மாமுனிவர்களும், தேவர்களும் இத்தலங்களைப் பூஜித்து வழிகாட்டி யுள்ளனர். இத்தகு தலங்களைத் தரிசிப்பதும், உள்ளத்தில் நினைப்பதும், அங்கங்களால் பணிவதும் இருவினை போக்கி இறைவனோடு இரண்டறக் கலக்கும் தூய அன்பை அனைத்துயிர்க்கும் வாரி வழங்குகின்றன.

# 80. சம்பந்தர் தேவாரத்தில் வாழ்வியல் சிந்தனைகள்

ந. வெங்கடேசன், அண்ணாமலைநகர்.

மனிதன் உலகத்தில் பிறந்து நாகரிகம் பெற்று, என்று கூடி வாழத் தொடங்கினானோ அன்றே வாழ்வியல் தொடங்கியது. வாழ்வியல் தான் சமூகம் அல்லது சமுதாயம் என்ற பெயரால் வழங்கப்படுகிறது.

பறவைகள், விலங்குகள், மக்கள் போன்ற உயிரினங்கள் கூடி வாழும் இயல்பு உடையவை. அந்தந்த இனத்திலும் வலிமை உடையவை அவற்றிற்குத் தலைமை ஏற்கும். மனிதனும் கூடிவாழும் இயல்பைப் பெற்றவனே. ஆனால் ஆறறிவைப் பெற்றிருப்பதால் அவன் மற்ற உயிர் களிடமிருந்து வேறுபடுகிறான்.

மனித வாழ்க்கை வேறு; மற்ற உயிர்களின் வாழ்க்கை வேறு. கண்டதைக் கண்டபடி கண்ட இடத்தில் விலங்குகள் செய்யும். மனிதன் வரையறுத்த நல்வாழ்க்கை வாழ்பவன். எனவே, செய்யத்தக்கவை எவை; தகாதவை எவை என அவன் பகுத்துணர வேண்டிய நிலையில் இருக்கிறான். இதனை,

**''தக்க இன்ன தகாதன இன்னவென்று**
**ஒக்க உன்னலர் ஆயின் உயர்ந்துள**
**மக்களும் விலங்கே''**

என்ற கம்பநாடரின் வாக்கு புலப்படுத்தும்.

மனிதன் நிலை தவறாமல் நல்வாழ்வு வாழ வேண்டுமானால் அவனுக்குச் சில ஒழுக்க நெறிகள் தேவைப்படுகின்றன. அவை நெறி தவறாமல் வாழ உதவுகின்றன. அவ்வொழுக்க நெறிகளைச் சமுதாய அறங்களை வகுத்து வழி நடத்துபவர்கள் சான்றோர்கள். அத்தகைய சான்றோர்களில் ஒருவரான திருஞானசம்பந்தர் தமது தேவாரப் பாடல்களில் வாழ்வியல் சிந்தனைகள் பலவற்றை வகுத்துக் கூறியுள்ளார்.

### தெய்வச் சிந்தனை

சைவ நெறியைத் தமிழகத்தில் பரப்ப வந்து தோன்றிய சம்பந்தப் பெருமான், மக்கள் நல்வாழ்வு வாழ வேண்டுமானால் இறைவன் திருவடிகளைத் தொழுது வழிபட வேண்டுமென வலியுறுத்துகின்றார்.

''நிறைவு வேண்டுவீர், அறவன் அன்னியூர்
மறையு ளான்கழற் குறவு செய்ம்மினே
இன்பம் வேண்டுவீர் அன்பன் அன்னியூர்
நன்பொன் என்னுமின் உம்பராகவே''

வாழ்க்கையில் துன்பம் நீங்கி இன்ப நிறைவு பெற வேண்டுமா? இறைவனது பொன் போன்ற திருவடிகளைப் போற்றிப் பாடுங்கள் என இப்பாடல்கள் அறிவுரை கூறுகின்றன.

**சாதி வேற்றுமை**

பண்டைத் தமிழகத்தில் சாதி வேற்றுமை இல்லை. சாதி என்ற சொல் கூட இல்லை. அது நடுவிலே வந்து புகுந்தது. அச்சாதிக் கொடுமையால் பல தீமைகள் தலைவிரித்தாடின. மக்களிடையே சமுதாய ஒற்றுமை பெருமளவு குலைந்தது. இத்தகைய குலைவுகளை ஏற்படுத்தும் சாதி வேற்றுமை கூடாதென்பதைச் சொல்லளவில் அன்றிச் செயலளவில் நடைமுறைப்படுத்திச் சாதிபேதமற்ற சமரசச் சிந்தனையை மக்களிடையே வித்திட்டவர் சம்பந்தர்.

தீண்டத் தகாத குலத்தில் பிறந்த திருநீலகண்ட யாழ்ப்பாணரை உடன் பிறந்தவராகத் தழுவித் தம்முடன் இருத்திக் கொண்டார். இதை ஓர் சமுதாயப் புரட்சி என்றே கூறலாம்.

''திருஞானசம்பந்தர் செய்த சமுதாயப் புரட்சி அந்தணர்கட்கு அதிர்ச்சியைத் தந்திருக்க வேண்டும். திருநீலகண்ட யாழ்ப்பாணரை அவருடைய மனைவியாருடன் உடன் அழைத்துச் சென்றதும் கூடவே யாழ்வாசிக்குமாறு செய்ததும் இத்தமிழகச் சைவம் என்ன இயல் புடைத்து என்பதைக் காட்டும் அறிகுறிகளாகும்'' என்னும் அ.ச. ஞானசம்பந்தனாரின் கூற்று இக்கருத்தை நன்கு விளக்கும்.

இதிலிருந்து தீண்டாமைக் கொள்கைக்கு முதல் முழுக்குப் போட்டவர் சம்பந்தர் என்பதை அறியலாம்.

**உலகளாவிய சிந்தனை**

தான் மட்டும் வாழவேண்டும் என்று நினைப்பவன் சின்னதொரு கடுகு போன்றவன் என்பர் பாவேந்தர் பாரதிதாசன். உலகம் வாழ வேண்டும் என்று விரும்புபவனே உயர்மனிதன் என்பது ஆன்றோர் கொள்கை. தனது ஊர் மட்டும் வாழ்ந்தால் போதும் என்பதும், தனது நாட்டு நன்மைக்காகப் பிறநாட்டைத் துன்புறுத்தலும் கடியத்தக்கவை என்பதை,

''தன்பெண்டு தன்பிள்ளை சோறு வீடு
சம்பாத்யம் இவையுண்டு தானுண் டென்போன்

சின்னதொரு கடுகுபோல் உள்ளங் கொண்டோன்
தெருவார்க்கும் பயனற்ற சிறிய வீணன்!
கன்னலடா என்சிற்றூர் என்போன் உள்ளம்
கடுகுக்கு நேர்மூத்த துவரை யுள்ளம்!
தொன்னை உள்ளம் ஒன்றுண்டு தனது நாட்டுச்
சுதந்தரத்தால் பிறநாட்டைத் துன்புறுத்தல்''

என்ற பாடல் தான் வாழ்ந்தால் மட்டும் போதாது; பிறரும் வாழ உதவ வேண்டும் என்ற பரந்த சிந்தனையை வலியுறுத்துகிறது.

திருஞானசம்பந்தரின் ஆழ்மனச் சிந்தனை உலகம் முழுவதும் வாழ வேண்டும் என்பதையே குறிக்கோளாகக் கொண்டிருந்தது. இவர் தமிழ்நாட்டிற்கு மட்டும் நன்மை விளைவிக்கப் பிறந்தார் என்று சேக்கிழார் பாடவில்லை. உலகம் முழுவதும் வாழ வேண்டும் என்ற உயர்ந்த குறிக்கோள் உடையவர். ஆதலானும், 'உலகெலாம்' என்றே இறைவன் அடி எடுத்துக் கொடுக்கக் காப்பியத்தைப் பாடியவர் ஆதலானும், வாய்ப்பு வரும் போதெல்லாம் உலகம் முழுவதும் உய்யவே சம்பந்தர் பிறந்தார். அவர் சிந்தனை உலக முழுவதும் படர்ந்தது என்பதைச் சேக்கிழார் வற்புறுத்திப் பாடுகிறார்.

''மிசை உலகும் பிறஉலகும்
மேதினியே தனிவெல்ல''

''தாவில் சராசரங்கள் எலாம் சிவம்பெருக்கும்
பிள்ளையார் திருஅவ தாரம் செய்தார்''

''ஏழிசையும் பலகலையும் எவ்வுலகும் தனித்தனியே
வாழவரும் அவர் தம்மை''

''உலகுய்ய மகப் பெற்றார்''

என்ற பாடலடிகளில் இதனைக் காணலாம். இவ்வாறு வருவனவற்றைக் கருத்துடை அடைமொழி என்று கூறுவர். இவ்வடை மொழியால் திருஞானசம்பந்தர் உலகளாவிய சிந்தனை உடையவர் என்பது புலனாகின்றது.

சம்பந்தரின் தேவாரப் பாடல்களில்,

''சூழ்க வையகமும் துயர் தீர்கவே''

எனவும்,

''விளங்கி வையம் ஏதப்படாமை
உலகத்தவர் ஏத்தல் செய்ய''

எனவரும் பகுதிகள் அவர் உலகு தழுவிய கொள்கை உடையவராக இருந்தாரேயன்றிச் சிறிய வட்டத்துக்குள் சுற்றுபவர் அல்லர் என்பதைச் சேக்கிழார் நன்கு அறிந்து கொண்டார் என்று கருதலாம்.

**மூடச்சடங்குகளைக் கடிந்துரைத்தல்**

இன்று நாம் வாழ்வில் எத்தனையோ பொருளற்ற போலிச் சடங்குகளைப் பின்பற்றி வருகிறோம். போலிச்சடங்குகளைச் செய்தல் மடமை எனச் சம்பந்தர் வலியுறுத்துகிறார்.

''திருஞானசம்பந்தர் தேவையற்ற சடங்குகள் - பைத்தியக்கார நம்பிக்கைகள் என்பவற்றைக் கண்டித்துள்ளார். ஆதலின் வாய்ப்புக் கிடைக்கும் இடங்களில் எல்லாம் சேக்கிழார் அக்கருத்தை வலியுறுத்தல் காணலாம்'' என்றும் அ.ச. ஞானசம்பந்தனார் கூற்று இதனை வலியுறுத்தும்.

பிறந்த குழந்தைக்குக் காப்பு நாண் அணிவித்தல் இந்நாட்டு மரபு எனினும் சம்பந்தருக்கு அது செய்யப்படவில்லை எனச் சேக்கிழார் பாடுவது குறிப்பிடத்தக்கது.

**''ஆறுலவு செய்யசடை ஐயர் அருளாலே**
**பேருல கிறுக்கென வரும்பெரியவர்க்கு**
**வேறுபல காப்புமிகை என்றவை விரும்பார்**
**நீறுதிரு நெற்றியில் நிறுத்தி நிறைவித்தார்''**

**மொழிச்சிந்தனை**

''பெற்ற தாயும் பிறந்த பொன் நாடும்
நற்றவ வானினும் நனிசிறந் தனவே''

என்பர் பாரதியார்.

நமக்குத் தாய்மொழி தமிழ், அது உயிரினும் சிறந்தது. வடமொழியில் மட்டும் மந்திரம் ஓதி இறைவனை வழிபட வேண்டும் என்பது வைதிகர் கொள்கை. தமிழை இசையோடு பாடி வழிபட்டால் இறைவன் மகிழ்வோடு ஏற்றுக் கொள்வான் என்பது சம்பந்தர் கொள்கை.

தம்முடைய பதிகந்தோறும் வாய்ப்புக் கிடைத்த இடமெல்லாம் தமிழின் பெருமைகளை எடுத்துக்கூறி, திருஐந்தெழுத்தே முடிவான மந்திரம் என்று இவர் பாடியுள்ளார். தமிழ் மொழியின், பெருமையை இவர் எடுத்துக்கூறிய இடங்கள் நூற்று நாற்பதுக்கும் மேற்பட்டவையாகும்.

இவர் தம்மைக் கூறிக் கொள்ள வேண்டிய ஒவ்வொரு பதிகத்தின் திருக்கடைக்காப்பிலும்,

**''நற்றமிழ்க்கு இன்துணை ஞானசம்பந்தன்''**

**''தலைமகனாகி நின்ற தமிழ்ஞான சம்பந்தன்''**

**''பழுதில் இறை எழுதுமொழி தமிழ்விரகன்''**

"தன்னொளி மிக்குயர்ந்த தமிழ் ஞானசம்பந்தன்"

எனத் தமிழுடன் தம்மைத் தொடர்புபடுத்திப் பாடுவதால் இவர் கொள்கையை அறியலாம்.

தெய்வ சிந்தனைமிக்க ஞானசம்பந்தர் தம் திருப்பாடல்கள் வழி வாழ்வியல் சிந்தனைகள் பலவற்றை வழங்கியுள்ளார். அவற்றில் சாதி வேற்றுமையைக் களைத்து மக்கள் வாழவேண்டும் என்பதை வலியுறுத்தியுள்ளதையும் மூடச்சடங்குகளைச் செய்யக்கூடாது என அறிவுறுத்தியதையும் திருவைந்தெழுத்தே முடிவான மந்திரம் என மக்களுக்கு உணர்த்திய திறத்தையும் இக்கட்டுரையில் காணலாம்.

# 81. சம்பந்தரும் சேக்கிழாரும்

ஜெ. சந்திரசேகரன், சிதம்பரம்.

நால்வர் பெருமக்களில் முதலாவதாக வைத்து எண்ணப்படுபவர் திருஞானசம்பந்தப் பெருமான். திருத்தொண்டர்கள் அனைவருமே ஞானியர்கள் தாம் என்றாலும் சமயகுரவர் நால்வரையும் நான்கு நெறிகளையும் உலகிற்கு உணர்த்தியவர்களாகக் காட்டுவது மரபாகி வந்துள்ளது. அந்நிலையில் திருஞானசம்பந்தப் பெருமானது நெறி மகன்மை நெறி (சற்புத்திர மார்க்கமே) என்று கொள்ளத் தருவதற்குப் பெரியபுராணம் துணை செய்கிறது.

**ஞான அமுதம்**

திருஞானசம்பந்தப் பெருமான் இறைவனால் ஆட்கொள்ளப் பட்ட முறையிலேயே இதனை அறிய முடிகிறது. தந்தையொடு திருக்குளம் சென்ற பிள்ளையார், பெற்ற தந்தை நீராடக் குளத்தில் மூழ்கிய பொழுது பண்டை உணர்வு வர 'அம்மை அப்பா' என அழுதார். அப்பொழுது மெய்யான தாயும் தந்தையுமாகிய சிவபெருமான் உமையொரு பாகனாகத் தோன்றினார். முறையாக அம்பிகை வந்து அமுதூட்டினார். பெற்ற ஞான அமுதம் பிள்ளையின் அழுகையை மாற்றியது. சிவஞானசம்பந்தர் ஆயினார். இந்த நிலையில் சிவபாத இருதயரின் மகனார் இப்போது சிவபெருமானுக்குத் திருமகனாயினார் என்பதால் மகன்மை முறை தெளிவாகிறது. இதனைச் சேக்கிழார் பெருமான் தமது நூலில்,

**''யாவர்க்குந் தந்தைதா யெனுமவரிப் படியளித்தார்**
**ஆவதனா லாளுடைய பிள்ளையா ராயகில**
**தேவருக்கு முனிவருக்குந் தெரிவரிய பொருளாகுந்**
**தானிறனிச் சிவஞான சம்பந்த ராயினார்''**

எனத் தெளிவாகக் குறித்துள்ளார்.

'உமையும் தாமுமாகத் தமது உருவத் திருமேனி கொண்டெழுந் தருளி முன்வந்தும் பால்தந்தும் ஞானமுதவியும் ஆட்கொண்டனர். இது பிரளயாகலருக்கு அருளும் முறை என அளித்துள்ள விளக்கத்தை நோக்கும் பொழுது மேற்குறித்த செய்தி உறுதியாவதோடு விளக்கமும் பெறுகிறது.

சிவஞானம் திருவருளின் வழியே கொடுக்கப் பெற்றாலன்றித் தேவர் முனிவர் முதலியவர் எவர்க்கும் தெரிவரிதாகும். ஏனெனில் சீவன் முத்த நிலைமையைச் சிவஞான சித்தியார்,

"தெரிவரிய மெய்ஞ்ஞானம் சேர்ந்தவாறே
சிவம் பிரகாசிக்கும், இங்கே சிவன் முத்தன் ஆகும்"

என்று குறித்துள்ளது. எனவே சிவானுபூதியில் இருப்போருக்குக் கன்மம் உளதாகாது என்பதனாலேயே இவ்வாறு குறித்தனர்.

**கிரியை நெறி**

திருஞானசம்பந்தர்தாம் கிரியை நெறியில் நின்றவர் என்பதனை அவரே தமது வாய் திறந்து அருளிய முதற் பாடலில்

"ஏடுடைய மலரான் முனைநாள் பணிந்தேத்த"

எனத் தெளிவாகக் குறித்துள்ளார். இவர் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் ஆலயங்கள்தோறும் சென்று பாடிப் பரவி வழிபட்டவர். இறைவனைப் பாமாலை எனும் சொல் மலர்களால் அருச்சித்தவர் எனச் சேக்கிழார் பல இடங்களில் குறித்துள்ளார்.

'செங்கை நிறை மலர்கொண்டு தூவித்
திருவிருக்குக் குறள்பாடி ஏத்தி'

எனும் பாடலடியும்,

'கற்றவர்வாழ் கடல்நாகைக் காரோணத்துக்
கண்ணுதலைக் கைதொழுது கலந்த ஓசைச்
சொற்றமிழ் மாலைகள் பாடிச்சில நாள்வைகித்
தொழுதகன்றார் தோணிபுரத் தோன்றலார் தாம்'

எனும் அடிகளும் இதற்குச் சான்றாகின்றன.

திருஞானசம்பந்தர் பரார்த்த பூசை செய்தவர். சமுதாயத்திற்காக உலகம் உய்யும் பொருட்டு இறைவனை வேண்டி வழிபட்டவர். இறைவனைப் பூசித்தலும் போற்றலுமாகிய செயல்களைச் செய்து வழிபட்டவர். இவர் ஞானமும் கைவரப் பெற்றவர். அதனால்தான் இத்துணையும் மனத்துட் கொண்ட சேக்கிழார்,

'தொழுது விழுந்து பணிந்தெழுந்து சொன்மாலைகளால் துதிசெய்து
முழுதும் ஆனார் அருள்பெற்றுப் போந்துவைகி முதலவர்தமைப்
பொழுது தோறும் புக்கிறைஞ்சிப் போற்றி செய்தங் கமர்வார்முன்'

என அவர் வழிபட்ட முறைமையை வரிசைப்படுத்தித் தொகுத்துக் கூறியுள்ளார். இறைவன் திருஞானசம்பந்தப் பெருமானைப் பிள்ளையாக ஆட்கொண்டமையால் ஆளுடைய பிள்ளையார் என அழைக்கப் பட்டார். இதனை,

"ஈசர் மிழலை இறையவர்பால் இமயப்பாவை திருமுலைப்பால்
தேசம்உய்ய உண்டவர்தாம் திருமாமகனார் ஆதலினால்"

என வரும் சேக்கிழாரின் பாடலடிகள் உறுதி செய்கின்றன. மேற்குறித்த செய்திகளால் கிரியை நெறியில் திருஞானசம்பந்தப் பெருமான் வழி பட்டார் என்பதனை அவர்தம் பாடல்களாலும் சேக்கிழாரின் பாடல் களாலும் உறுதி செய்ய முடிகிறது. அவர் சரியையை விரும்பாதவரோ எதிரானவரோ அல்லர். அவர் அம்முறையில் வழிபட்டதும் உண்டு என்பதும் தெளிவாகின்றது.

## திருவடி மறவாப் பான்மை

திருஞானசம்பந்தர் சீர்காழிப் பதியில் அவதரித்த உடனேயே அவருக்கு இறையுணர்வு பெருகியது. அதனால்தான் 'சேவாண்ட கொடியவர்தஞ் சிரபுரத்துச் சிறுவருக்கு மூவாண்டில் உலகுய்ய நிகழ்ந்ததனை மொழிக்கின்றேன் எனச் சேக்கிழார் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். இது முற்பிறவித் தொடர்பால் ஏற்பட்டதாகவும் அறிய முடிகிறது. இவர் சிவபெருமானைக் குருவாகக் கருதி வழிபட்டவர். முற்பிறவியிலும் சிவபெருமானை வழிபட்டு அருள் பெற்றவர். இதனைச் சேக்கிழார் 'பண்டு திருவடி மறவாப் பான்மையோர் தமை என்ற தொடரால் குறித்துள்ளார்.

மேலும்,

**''முன்னிலைமத் திருத்தொண்டு முன்னியவர்க் கருள்புரிவான்''**

**''முறைபுரிந்த முன்னுணர்வு மூலா''**

என்ற தொடர்களாலும் இதனை அறிய முடிகிறது.

இறைவன் உமையம்மையாகிய தமது தேவியின் மூலமாகத் திருஞான சம்பந்தருக்கு ஞானப்பால் அளித்துச் சிவஞானம் முதலாகிய அனைத்து வகை ஞானங்களையும் அளித்தனன்.

**''எண்ணரிய சிவஞானத் தின்னமுதங் குழைத்தருளி''**

**''சிவனையே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞான<br>பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம்<br>உவமையிலாக் கலைஞானம், உணர்வரிய மெய்ஞ்ஞானம்<br>தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தார் அந்நிலையில்''**

என்னும் சேக்கிழார் வாக்குகளால் இதனை உறுதி செய்ய முடிகிறது.

## ஞான தீக்கை

இறைவன் திருஞானசம்பந்தருக்குத் தாமே குருவாக வந்து எப்பொருளுமாக்குவான் ஈசனே எனும் உணர்வும், அப்பொருள் தான் ஆளுடையார் அடியார்கள் எனும் அறிவும் ஆகிய ஞான தீக்கைகளை ஞானப்பால் மூலம் அருள்கின்றான். தமக்குக் குருவாக விளங்கிய சிவபெருமானின் திருமேனியைக் காண்டற்கும் அவனுடைய

திருப்புகழ்களை எல்லாம் செந்தமிழ்ப் பாடல்கள் மூலம் சொல்லுதற்கும், அவன் திருவுருவையே எப்பொழுதும் சிந்திப்பதற்கும் இறைவன் எழுந்தருளிய தலங்கள்தோறும் சென்று பாடிப் பணிந்து வழிபட்டார்.

**திருவருள்வழி சாதனைகள்**

இவர் பல தலங்கட்கும் சென்று அற்புதங்கள் நிகழ்த்தியமை, இறைவன் திருவருளால் முத்துச்சிவிகையும் முத்துக்குடையும் முத்துச் சின்னங்களும் பெற்றமை, பொற்காசு பெற்றமை போன்றன நிகழ்ந் தமைக்கும் திருவருளே காரணம் எனினும் அனைவருக்கும் இவ்வாறு நிகழந்து விடவில்லை. எனவே அவருக்குக் குருவாக வந்து இறைவன் அருள் புரிந்ததும் முற்பிறவியில் செய்த இறைத்தொண்டுமே இவர் சிறுவயதிலேயே சாதனைகள் பல புரிந்து முத்தி பெற்றதற்குக் காரணங்களாகின்றன. குருவழிபாட்டின் மூலம் முக்தியடைந்தவர்களில் ஞானசம்பந்தரும் ஒருவர் என்கிறார் சேக்கிழார்.

**தீட்சா குரு**

திருஞானசம்பந்தர் தீட்சா குருவாகவும் விளங்கியவர். சமணர் களின் சொற்கேட்டுத் தீநெறியில் நடந்த 'நின்றசீர் நெடுமாறன்' என்னும் மன்னனுக்குத் திருநீறு அளித்துச் சமயதீட்சை செய்வித்த தீட்சாகுரு ஞானசம்பந்தர் என்பதை 'ஞானசம்பந்தரின் பாதம் நண்ணி நான் உய்ந்தேன்'' என்ற வாக்குவழி இவ்வுண்மை புலனாகிறது. திருஞான சம்பந்தர் வையைக் கரையில் வாதம் செய்யப் பாடியதே மன்னனுக்கு ஞானம் உண்டாகக் காரணமாயிற்று. இவ்வகையில் திருஞானசம்பந்தரே நின்றசீர் நெடுமாறனார்க்குக் குருவாவார் எனச் சேக்கிழார்வழி அறிய முடிகிறது.

நின்றசீர் நெடுமாறனின் மனைவியாகிய மங்கையர்க்கரசியார் ஞானசம்பந்தரையே குருவாகக் கருதி வழிபட்டவர். நின்றசீர் நெடுமாறனாகிய மன்னனும் மதுரை மாநகரத்தாரும் சைவ சமயம் சார்வதற்கு ஞானசம்பந்தரின் உதவியை நாடினர். மங்கையர்க்கரசியார் திருமறைக்காட்டில் ஞானசம்பந்தர் எழுந்தருளியுள்ளமையை அறிந்து தம் அமைச்சரை ஏவி அவரைப் பாண்டிநாட்டுக்கு எழுந்தருளும்படிச் செய்தார். தாம் குருவாக அவரை ஏற்று வழிபட்டதுமன்றித் தம் கணவரும் அவரைக் குருவாக ஏற்க உதவியமையைச் சேக்கிழார் வாக்கால் அறிய முடிகிறது.

'மங்கையர்க்கரசியாரின் வழிநின்று ஞானசம்பந்தரின் அருள்நாடி நின்றவர் குலச்சிறையார். சிறந்த அமைச்சருக்குரிய கடமையினின்றும் வழுவாமல் மன்னனும் மதுரை மாநகரத்தாரும் சைவ சமயம் சார்ந்து நிற்கவும் நன்னெறி அடையவும் ஞானசம்பந்தரை வேண்டி நின்றார். இதனால் இவரும் ஞானசம்பந்தரைக் குருவாக ஏற்றமை உறுதியாகிறது.

இதனை விளக்கும் முகத்தான்,

**''கொற்றவன் தேவியாரும் குலச்சிறையாரும் தீங்கு**
**செற்றவர் செய்யபாத தாமரைசென்னி சேர்த்துப்**
**பெற்றனம் பெருமை இன்றுபிறந்தனம் பிறவாமேன்மை**
**உற்றனன் மன்னன் என்றே உளங்கனித்து வகைமிக்கார்''**

என்ற பாடலை அருளியுள்ளார் சேக்கிழார்.

ஞானசம்பந்தரின் பாடல்களுக்கு யாழ்கொண்டு இசை அமைத்தவர் திருநீலகண்ட யாழ்ப்பாணர். ஞானசம்பந்தரை வழிபட்டு நின்ற இவர் ஞானசம்பந்தரின் பெருமையைத் தம் சுற்றத்தார்க்கு உணர்த்த எண்ணித் தம் இசைக்கு அடங்காத பாடலை ஞானசம்பந்தரிடம் வேண்டிப் பாட வைத்தவர்.

**''சிறியமறைக் களிறளித்த திருப்பதிக இசையாழின்**
**நெறியிலிடும் பெரும்பாணர் பின்னும் நீர் அருள்செய்யும்**
**அறிவரிய திருப்பதிக இசையாழில் இட்டடியேன்**
**பிறிவின்றிச் சேவிக்கப் பெறவேண்டும் எனத்தொழுதார்''**

என்னும் சேக்கிழார் பாடலே இவர் ஞானசம்பந்தரைக் குருவாக ஏற்றமையை உணர்த்துவதாகும்.

ஞானசம்பந்தரைக் குருவாக நினைத்து வழிபட்டவர்களுள் கணநாதரும் ஒருவர். ஞானசம்பந்தரின் திருவடிகள் மீது பேரன்பு கொண்டு முப்பொழுதும் அருச்சனைகள் செய்து வணங்கியவர். குருவருளாலேயே முத்திப் பேறடைந்தவர்.

**''ஆன தொண்டினில் அமர்ந்த பேரன்பரும்**
**அகலிடத் தினிலென்றும்**
**ஞான முண்டவர் புண்டரீ கக்கழல்**
**அருச்சனை நலம்பெற்ற**
**.................................**
**வழித் தொண்டின் நிலைபெற்றார்''**

என்னும் சேக்கிழாரின் திருவாக்கு இவர் ஞானசம்பந்தரைத் தொழுது நின்றமையை உணர்த்துகிறது.

சிவபாத இருதயர் பரசமயம் நீக்கிச் சைவ சமயம் தழைக்கச் செய்ய வேண்டும் என்னும் பெருநோக்கோடு மகப்பேறு வேண்டி வழி பட்டவர். இவர் வேண்டிக் கொண்டதற்கேற்ப இவருக்குத் திருஞானசம்பந்தர் மகவாய்ப் பிறந்து சிவஞானம் பெற்றுப் பல தலங்கட்குச் சென்று அற்புதங்கள் நிகழ்த்தி, பலருக்குத் தீட்சா குருவாக விளங்கிச் சைவ சமயம் தழைக்கச் செய்தார் என்பதைச் சேக்கிழார்வழி உணர முடிகிறது.

# 82. சித்தாந்த நெறியில் சம்பந்தர்

சிறுத்தொண்டன், கோவை.

''வாழ்வெனும் மையல்விட்டு வறுமையாம் சிறுமை தப்பித்
தாழ்வெனும் தன்மையோடும் சைவமாம் சமயம் சாரும்
ஊழ்பெறல் அரிது சால உயர்சிவ ஞானத்தாலே
போழிள மதியினானைப் போற்றுவார் அருள் பெற்றாரே''
- சிவஞான சித்தியார்

**எது சித்தாந்தம்?**

'கற்றுத் தெளிந்தோர் தம் பட்டறிவால் உய்த்துணர்ந்துரைத்த' முடிந்த முடிவே சித்தாந்தம். இது போன்ற பிற மதத்தவர்களும் கூற லாயினர். அவை பௌத்த சித்தாந்தம், சமண சித்தாந்தம், வைணவ சித்தாந்தம் எனலாம். மலர் எனில் தாமரையையும்-பழம் எனில் வாழைப் பழத்தினையும் உலகில் கூறி வழங்கல்போல் வழக்காற்றில் சித்தாந்தம் என்றால் 'சித்தாந்த சைவத்தையே' நுண்ணறிவுடையோர் கூறலாயினர். அதுவே நிலை பேறுடைமையானதைக் காண்கிறோம். மேலும் இவ்வழக் காற்றால் சிந்தாந்தச் செந்நெறியின் மாட்சியை அறியலாம்.

**சித்தாந்த நுண்மை**

சித்தாந்தம் எனில், முப்பொருள் உண்மை கூறுவதெனலாம். அப் முப்பொருளாவன பதி, பசு, பாசம் என்பன பதி-கடவுள்; பசு, உயிர்; பாசம் - உயிரைப் பிணித்துள்ள கட்டு; இவற்றை 'இறை-உயிர்-தளை' என்றும் உரைப்பர். பதிப்பொருள் ஒன்றே; பசுக்கள் எண்ணில; பாசம் மூன்று அவை 'ஆணவம், கன்மம், மாயை' என்பன. இவை உயிரைக் கட்டுப்படுத்தல் பற்றிப் பாசம் எனப்படுதல் போல, உயிர்களின் தூய்மையைக் கெடுத்து நிற்றலாலும் பின்பு அகற்றப்படுதலாலும் 'மலம்' எனவும் கூறுவர் (மலம் - அழுக்கு) இம்முப்பொருள்களும் அனாதி, நித்தியப் பொருள்கள் எனும் தீர்ந்த உண்மையை

''பதி, பசு, பாசம் எனப் பகர் மூன்றில் பதியினைப் போல்
பசு-பாசம்-அனாதி''

எனும் திருமந்திரத்தால் தெளியலாம். ''இல்லது தோன்றாது-உள்ளது அழியாது'' என்பதும் சித்தாந்த அடிநிலை உண்மையாம். ஈண்டு தோற்றம், அழிவு என்பது நிலை மாற்றங்களே அன்றி வேறல்ல. தோன்று

தலாவது காரண நிலையிலிருந்து காரிய நிலையை அடைவதே, அழிதலாவது காரிய நிலையிலிருந்து மீண்டும் காரண நிலையை அடைவது (மண்-குடம் -மண்).

### சித்தாந்த நெறி

பசு என்றுண்டோ அன்றே அதனை ஆணவ மலமாகிய பாசம் செம்பில் களிம்பு போல் அநாதியே பற்றி அதன் அறிவு இச்சை செயல் களைத் தடுத்து நிற்றலால் பசு அநாதியே தன்னியல்பை இழந்து இன்பத்தைப் பெறாது துன்பத்தை நுகரும் பித்தமாகிய பொதுவியல்பை அடைந்துள்ளது. 'இருட்டறையில் அகப்பட்டுக் கிடக்கும் கண்ணிலாக் குழவியணைய ஆன்மாவை தன்னிலை உணர்த்தியும், மல நீக்கம் பெறச் செய்தும் சிவப்பேறாம் சிவானந்தத்தில் அழுந்தச் செய்தல் சித்தாந்த நெறியாம். அந்நெறிக்கு நம்மனையவர்களை ஆற்றுப்படுத்துவான் எழுந்ததே திருமுறை நூல்களாம்; நம் பக்திப்பனுவல்களில் முன் நிற்கும் திருஞான சம்பந்தரின் அருள்வாக்கில் சித்தாந்த நெறி பற்றிக் காண்போம்.

### சிவ சார்பு

கருணைக் கடவுளைச் சாரச்சார இன்பம்-அடிசேர எண்ணமின்று விலக விலகத் துன்பமே! ஐயன் அடி நினைவின்றிச் செயும் எச்செயலும் பிறப்பையும் அது பற்றிய துன்பத்தையுமே பெருக்கும்; என்பது சித்தாந்த கருத்தாகும். இதனையே ஞானப்பிள்ளை

**''முற்றா வெண்திங்கள் முதல்வன் பாதமே**
**பற்றா நின்றாரைப் பற்றா பாவமே''**

என்றும்

**''பிறப்பில் பெருமானைப் பின்தாழ் சடையானை**
**மறப்பிலார் கண்டீர் மையல் தீர்வாரே''**

என்றும் உரைத்தார். 24 பிரகிருதி தத்துவத்தைத் தம் பாடலில் கூறுதல்:

**''ஒன்றறொன் றோடொன்றும் ஒருநான்கொ டைந்தும் இரு**
**மூன்றோ டேழும் உடனாய்'' ...** -தென் திருமுல்லைவாயில்

திருஞானப்பிள்ளை வாழ்வாங்கு வாழும் நெறி இது என்றும் அது பற்றி நிற்பின், பெறும் பேறாம் வீடும் கூறியுள்ள பாங்கு எண்ணி போற்றற்குரியது.

**''நீநாளும் நன்னெஞ்சே நினைகண்டாய் யாரறிவார்**
**சாநாளும் வாழ்நாளும் சாய்காட்டெம் பெருமாற்கே**
**பூநாளும் தலைசுமப்பப் புகழ்நாமம் செவிகேட்ப**
**நாநாளும் நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே''**

- திருசாய்க்காடு

என்பதே.

சிவபரம்பொருள் சொரூப நிலையிலிருந்து-அளப்பருங் கருணையால் தடத்த நிலைக்கு வந்து உயிர்கள் தம் பக்குவ நிலைக்கேற்ப-பஞ்ச பூதங்களாய், போகப் பொருளாய் நுகர்ச்சிக்குரிய 'தனு கரணமாய்' விளங்குவன். இச்சித்தாந்த நுண்பொருளை ஞானப் பிள்ளை தம் அருட்பாடலில்

**''மண்ணொடு நீரனல் காலோ பாகாயம் மதிஇரவி**
**எண்ணில் வரும் இயமானன்''** - திருவெண்காடு

**''சோதியாய் நிறைந்தான் சுடர்சோதியும் சோதியான்**
**வேதியாகி விண்ணாகி மண்ணோடு எறிகாற்றுமாய்**
**ஆதியாகி நின்றானும் ஐயாறுடை யானே''** - திருவையாறு

## இருபொருள்

எல்லாம் உணர்சிவபரம் பொருளே 'சத்து' மற்றவை அசத்தே! பதி என்னும், சத்து என்றும், குறிப்பதெல்லாம் பேரறிவாய் விளங்கும் மெய்ப்பொருளாம் சிவத்தையே குறிப்பதாகும். இதுவே சித்தாந்த மரபுமாம்; நம் சிற்றறிவு பற்றிச் சித்தாந்தம் கூறுவது ஈண்டு ஊன்றி நினைக்கற்பாற்று. ''ஒன்றையறியு மிடத்து மற்றொன்றை யறியாது. ஒவ்வொன்றாய் அறிதல், அறிவதனையும் அறிந்தவாறே அறிந்து நில்லாது விட்டு விட்டறிதல், அறிந்ததனை மறத்தல், தானாக அறியாது அறிவித்த பின்னறிதல் (சுட்டறிவு) இக்குறைபாடுகளெல்லாம் உள்ள அறிவை - அறிவு என்றல் சிறந்ததன்று - ஆகலான்

**''பொறியின்றி ஒன்றும் புணராத புந்திக்கு**
**அறிவென்ற பேர் நன்றற''** - திருவருட்பயன்

எனும் சித்தாந்த நூலால் அறியலாம். தெய்வப் புலவர் திருவள்ளுவரும் அறிவிற்கு இலக்கணம் கூறும் பொழுது

**''எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்ப தறிவு''**

என்றார் இதனால் பேரறிவு சிற்றறிவு இன்னதென அறிந்தோம்.

## முப்பொருள்

பதிப்பொருள் சத்தாயும், சித்தாயும், ஆனந்தமாயும் நிற்றலே அதனியல்பாகும். பதியினது உண்மை இயல்புகளாக மற்றும் பல கூறப் படினும் அவையெல்லாம் இப்முப்பொருளில் அடங்குவதாகும். இம்மூன்றும் ஒன்றாம் பொழுது ''சச்சிதானந்தம்'' என்ற பெயராம். (சத், சித், ஆனந்தம்)

## அருளாளர் யார்?

சித்தாந்த சைவம் கூறுவது- ''நல்வினை தீவினை செய்வார் புண்ணியம் அன்றி பாவம் எய்துவர். ஐயன் அருளில் அழுந்தி வினை செயும்

திறம் பெற்ற அடியவர்கள் 'மல பரியாகம் பெற்றவர் ஆவர்- அவர்களே இருவினை ஒப்பு எனும் நிலை பெற்றவர். அடுத்து அவர்களே சத்திநி பாதமாம் தண்ணருள் வீழ்ச்சி உற்றவராவர் (அருளாளர்)

**இருவினை ஒப்பாம் மலபரிபாகம்**

1. சிலையால் எயிலெய்தான் சிற்றம் பலந்தன்னைத்
   தலையால் வணங்குவார் தலையானார்களே!
2. நீரார் சடையானை நித்தல் ஏத்துவார்
   தீரா நோயெல்லாம் தீர்தல் திண்ணமே''

-முதல் திருமுறை - தில்லை

3. கல்வனார் உறையும் கழிப் பாலையை
   உள்ளுவார் வினையாயின ஓயுமே
4. காலங்கள் வந்துலவுங் கழிப்பாலையை
   வலங்கொள்வார் வினையாயின மாயுமே''

-திருக்கழிப்பாலை

5. காலம்பெற மலர் நீரவை தூவித் தொழுதேத்தும்
   ஞாலம்புகழ் அடியாருடல் உறுநோய் நலியாவே

-திருநெய்த்தானம்

**சத்தினி பாத அருள் உற்றார்**

மல பரிபாக எய்தப் பெற்ற புண்ணியப் பேற்றினர் சத்தினிபாத அருள் வீழ்ச்சி உற்றவராவர். இத்தகையவரைப் பற்றி தம் ஞானப் பனுவலில் ஞானப் பிள்ளை கூறக் கேட்கலாம்.

1. ''நித்தலும் நியமஞ் செய்து நீர்மலர் தூவிச்
   சித்தம் ஒன்றவல்லார்க்கு அருளும் சிவன் கோயில்

-திருசாய்க்காடு

2. ''கிளருஞ் சடையண்ணல் கேடில் கழலேத்தத்
   தளரும் உறு நோய்கள் சாருந் தவந்தானே''
3. ''விடையார் கொடியெந்தை வெள்ளைப் பிறைசூடும்
   சடையான் கழலேத்தச் சாரா வினை தானே''

-திருவம்பர் மாகாளம்

4. ''பைந்தளிர்க் கொன்றையந்தாரப் பரமன் அடிபரவப் பாவம்
   நைந்தலும் வந்தனையு நாடொறு நல்லனவே''

- திருவாரூர்

**இரண்டே ஒன்று**

சித்தாந்த சைவத்தில் ஒடுக்கம் - அஃதாவது செயலற்ற நிலை சிவம் என்றும், அருளின் வெளிப்பாடே சக்தி என்றும் கூறுவர். அச்சக்தியே பின் சிவத்துள் ஒடுங்கும். இக்கருத்தை புறநானூற்றில் கடவுள் வாழ்த்தில் காணலாம்.

**''பெண்ணுரு ஒருதிறன் ஆகின்று-அவ்வுருத்**
**தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும் என்பதே!''**

இக்கருத்தை அருள்ஞானப் பிள்ளை தம் வாக்கால் அறியலாம்.

**''உமையா ளொருபாக மதாகச்**
**சமைவார் அவர்சார் விடமாகும்**
**அமையா ருடல்சோர் தரமுத்தம்**
**அமையா வருமந் தனையாறே''** - திருவையாறு

**சிவ வழிபாட்டில் அறிவியல்**

தொன்மைக் காலம் தொட்டு ஆலய வழிபாட்டில் எரியோம்பி வேள்வி வழிபாடு செய்தல் நிகழ்ந்துவரக் காண்கிறோம். இது தேவர்களை மகிழ்விப்பான் மட்டுமின்றி 'வான்முகில் வழாது பெய்து, மலிவளம் சுரக்கவும்' ஆம்; இதனை அறிவியலாரும் ஏற்றுக் கொள்கின்றனர்; (மேகம் கருக்கூடின் மழை வரும்) இதனை ஞானப்பிள்ளை தம் ஞானப்பாடலில் கூறப் பார்க்கலாம்

**''மண்ணில் பெருவேள்வி வளர்தீப் புகைநாளும்**
**விண்ணிற் புயல்காட்டும் வீழி மிழலையே''** - திருவீழிமிழலை

**வினை தீர்தல் எளிதே**

ஐயன் அடிபரவி, ஓயாது உள்கியும், நீள நினைந்தும் அறம் பேணி வையத்து வாழ்வாங்கு வாழ்ந்துவரின் எண்ணிய எண்ணாயாங்கெய்தல் எளிதாம். இதனை ஞானப் பிள்ளை தம் பாடலில்

**''அருநெறிய மறைவல்ல முனியகன் பொய்கை யலர்மேய**
**பெருநெறிய பிரமாபுர மேவிய பெம்மான் இவன்தன்னை**
**ஒரு நெறிய மனம் வைத்துணர் ஞானசம்பந்தன் உரைசெய்து**
**திருநெறிய தமிழ்வல்லவர் தொல்வினை தீர்தல் எளிதாமே''**

**ஊனமில்லை**

சித்தாந்தச் செந்நெறிப்படி - சிவ பரம்பொருள்- 'வேறாய் - உடனாய் - ஒன்றாய்' நமக்கு தோன்றாத் துணையாய் இருந்து அவ்வப்பொழுது நம்மை நெறிப்படுத்தி வருகிறது. (ஒன்றாதல்)

**''ஓயாது உள்குவார் உள்ளுருக்கும் பெம்மானை''** - சுந்தரர்

''ஓராதார் உள்ளத்து ஒளிக்கும் ஒளியானை'' - மணிவாசகர்

''மனத்தகத்தான் வாக்கினுள்ளான்'' - அப்பர்

இக்கருத்தையே நம் ஞானப்பிள்ளை-

''வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்
மிக நல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிமேலணிந்தென்
உளமே புகுந்த அதனால்
ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியவர்க்கு மிகவே''

எனக் கூறக் காணலாம். எனவே ''ஒன்றி இருந்து நினைமின்கள் உன்தனுக்கு ஊனமில்லை'' எனும் அப்பர் வாக்கைப் போற்றுவோம்

## ஆண்டவன் பேரருள்

எனவே தான் எல்லாம் வல்ல பதிப்பொருளாம் சிவபரம் பொருள் பெத்தத்தில் கிடக்கும் ஆன்மாவை ஈடேற்ற தம் அளப்பெருங் கருணையால் - ''கன்மம், மாயையால் - தனு, கர்ண, புவன போகத்தை வழங்கியதுடன் நில்லாது - பக்தி நெறி என்றும் - அதில் அவ்வவர்தம் திறத்திற்கேற்ப ஒழுகுவான் நூல்நெறி (சரியை-கிரியை-யோகம்-ஞானம்) என்றும், மேலும் பற்றிப் படர்ந்து சிறப்பான் 'குரு, லிங்க, சங்கம வழிபாடு என்ற பகுப்பும் இவற்றை எளிதாகப் பற்றுவான் அடியார் கூட்டமும் தோன்றலாயின. (திருஞானசம்பந்தர் தம் அடியார்புடைசூழ தலயாத்திரை செய்து ஆலய வழிபாடு நிகழ்த்தியமை)

## சிவம் போற்றுவோம்

உலகத்தை நினைக்கும் தொறும் துன்பம் மேலோங்கவும்- உலகை விட்டு விலகி ஐயன் அடி நினையும் தொறும், இன்பமே மேலோங்கவும் வாழ்வை நுகர்ந்தோர் அறிவர். எனவே தான் ''அவனே அவனே என்பதை விட சிவனே சிவனே என்னலாம் என்பர். இக்கருத்தையே சன்மார்க்க நெறி காட்டிய எந்தை மணிவாசகர் 'தினைத்தனை உள்ளதோர் பூவினில் தேனுண்ணாதே, நினைத்தொறும் காண்தொறும் எப்போதும், அனைத்தெலும்பு உள்நெக ஆனந்தத் தேன் சொரியும் குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பி'' எனக் கூறும் தொடரால் அறியலாம்.

நாம் நாளும் நுகரும் இன்பமெலாம் சிற்றின்பமே-மேலும் துன்பத் திற்கே வித்தாவது. எனவே தான் முந்தைய நம் முன்னோரெலாம், நாம் எளிதாகத் துன்ப நீக்கமும், இன்ப ஆக்கமும் பெறுவான் தொடங்கினவே' ஆலய வழிபாடுகளும், சிறப்பொடு பூசனையும்; ஒவ்வொரு திங்கள்

தொறும் பல்வகை விழா பல்வகையான திருவுருவ சிறப்பு விழாக்கள் போன்றன ஆம். அறவினைகளும் நோன்பு விழாக்களும் எளிதாக நம்மை நெறிப்படுத்துவான் தோன்றியனவே ஆம். எனவே தான் அவ்வவர் திறத்திற்கேற்ப' அறவினை வழிபாடு நிகழ வேண்டும் எனும் கருத்தில் நம் தெய்வப் புலவர் தம் பாடலில் - (தானம், தவம்)

**''ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே**
**செல்லும்வா யெல்லாம் செயல்''**

என்றார்.

எனவே சைவ சித்தாந்த நெறிப்பட்ட நோன்பு ஆலய வழிபாடு - அதன் வழிப்பட்ட நித்திய வழிபாடு - வார வழிபாடு - திங்கள் வழிபாடு -பல்வகைச் சிறப்பிற்குரிய ஆண்டு வழிபாடுகள் - அதன் வழிப்பட்ட சடங்குகள் தெய்வ மூர்த்தங்கள் - பல்வகைப்பட்ட வழிபாடுகள் போன்றன அனைத்தும் எல்லாம் வல்ல சிவபரம் பொருளை இடையறாது 'சிந்தித்தல் - பாடிப்பரவல்-வழிப்படுதல்' வேண்டும் என்பதே (சிந்தித்துப் பார்க்கின் உணரலாம்). அந்நிலை கைவரப் பெற்றோரே அருளாளர்-யோகிகள்-சித்தர்கள்-ஞானிகள் எனலாம். அத்தகையவர்கள் திறத்தைப் பல்வகையில் - ஞான அனுபூதிச் செல்வராம் திருவள்ளுவர் தம் ''நீத்தார் பெருமை'' எனும் அதிகாரத்தில் கூறுவதைப் பார்க்கலாம்.

மணிவாசகர் போற்றியாங்கு நாமும் ''இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க'' எனப் போற்றுவோம்.

**'மண்ணில் நல்லவண்ணம் வாழலாம்....**
**சிவம் போற்றி-அவம் வெல்வாம்!'** (ஞானசம்பந்தர்)

# 83. சம்பந்தரும் திருநாவுக்கரசரும்

கே.டி. தமிழ்மணி, புத்தானம்பட்டி.

ஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் சமகாலத்தில் வாழ்ந்திருந்த சைவ சமயக் குரவர்கள் ஆவர். இவ்விருவரும் ஒருவரையொருவர் பெரிதும் மதித்து, நட்பிற் கலந்து பல தலங்களுக்கு உடன் சென்று பதிகம் பாடிச் சில அற்புதங்கள் நிகழ்வுற ஒருங்கே காரணமாய் விளங்கினர்.

திருஞானசம்பந்தர் பிள்ளைப் பிராயத்திலேயே இறைவன் திருவருள் பெற்று, மெய்ஞ்ஞானமும், கலைஞானமும் நிரம்பித் திகழ்ந்தவர். அவர் திருநீற்று பெருமைதனைப் பரப்பிச் சைவத்தைத் தழைக்கச் செய்த ஞானக் கோமான்.

தருமசேனர், மருள்நீக்கியார் என்றெல்லாம் அழைக்கப்பெற்ற திருநாவுக்கரசர் தம் தமக்கையரால் மெய்ஞான அறிவு பெற்றுச் சமணத்தை விடுத்துச் சிவபெருமானைப் போற்றித் தமிழ்ப்பாமாலை சாத்துகின்ற மெய்யுணர்ச்சி பெற்றவர். எனவே, இருவரும் இறைவன் திருவருள் நிரம்பப் பெற்று பெருமையுடையவர். அவர்தம் இருவரின் கூட்டுறவின் சிறப்பைச் சுட்டுவதே இக்கட்டுரையின் நோக்கம்.

**இருவரும் சமம்**

ஒருமுறை திருநாவுக்கரசர் தில்லைத் திருநடனம் சேவித்து அங்கு எழுந்தருளியிருக்கும் காலங்களில் ஞானசம்பந்தரின் திருவார்த்தைகளை அடியவர்கள் உரைக்கக் கேட்டு அவருடைய மலர்க்கழல்கள் வணங்க விருப்புத் தெரிவித்தார். திருப்புகலிமருங்கில் இவ்விருவரின் முதல் சந்திப்பு நிகழ்வுற்றது. திருநாவுக்கரசரின் விருப்பு அறிந்து ஞானசம்பந்தர் 'ஆக்கிய நல்வினைப் பேறு' என்று அன்பர் பலரோடு சென்று எதிர்கொண்டு வரவேற்றார். இவ்விருவர் சந்தித்தக் கோலத்தைச் சேக்கிழார் பெருமான் கூறுங்கால்,

சிந்தை இடையறா அன்பும்
திருமேனி தனில் அசைவும்
கந்தை மிகையாம் கருத்தும்,
கைஉழவாரப் படைப்பும்,
வந்திழி கண்ணீர் மழையும்,
வடிவிற் பொலி திருநீறும்,

அந்த மிலாத் திருவேடத்
தரசும் எதிர்வந் தணைந்தார்

இருவரும் ஒருவர்பால் மற்றொருவர் கொண்டிருந்த அன்பின் உன்னதம் வெளிப்படுகின்றது.

ஞானசம்பந்தரின் கருத்தில் பரவியிருந்த திருவேடமே அவர் எதிரே தோன்றித் திருநாவுக்கரசராக வருவது கண்டு தம் மலர்க்கையால் சம்பந்தர் வணங்கும் முன்னரே திருநாவுக்கரசர் வணங்கி நின்றிருந்தார். சம்பந்தர் 'அப்பரே' என்றார். அப்பரும் 'அடியேன்' என்றார். அந்தணர் குலத்துப் பிள்ளையும் வேளாண் குலத்து விருத்தருமாகிய இரண்டு பெருந்தகையார்களும் சற்று நேரம் அளவளாவி, ஒருங்கே திருக்கோயிலுக்குச் சென்று இறைவனைத் துதித்தனர். இந்தக் காட்சியைச் சேக்கிழார் பெருமான் கூறுகையில்,

**அருட்பெருகு தனிக்கடலும் உலகுக் கெல்லாம்**
**அன்புசெறி கடலுமாம் எனவும், ஓங்கும்**
**பொருட்சமய முதற்சைவ நெறிதான் பெற்ற**
**புண்ணியக் கண் இரண்டெனவும், புவனமுய்ய**
**இருட்கடு வுண்டவர் அருளும் உலகமெல்லாம்**
**ஈன்றான்தன் திருவருளும் எனவும் கூடித்**
**தெருட்கலை ஞானகன்றும் அரசும் சென்று**
**செஞ்சடை வானவர் கோயில் சேர்ந்தாரன்றோ**

அவ்விருவரின் சிறப்பு இப்பாடலில் ஒருசேர உரைக்கப்பட்டுள்ளது. இப்பாடலில் சேக்கிழார் பெருமான் கையாண்டுள்ள 'ஞானக்கன்றும் அரசும்' என்ற தொடரில் உள்ள 'தெருட்கலை' ஞானம் என்ற சிறப்பு மொழியைத் திருநாவுக்கரசருக்கும் சேர்த்துப் பொருள் கொள்ளும் வண்ணம் சேக்கிழார் நயம்படக் கூறியிருக்கிறார். இதைப்போலவே திருநாவலூரார் 'நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன் நாவினுக்கரையன்' என்று கூறுங்கால் 'நற்றமிழ் வல்ல' எனும் சிறப்பு நாவுக்கரசருக்கும் உடையதாகின்றது.

இருவரும் இணைந்த கைகளுடன் திருக்கோயில் அடைந்து திருத்தோணியப்பரை வணங்கி இன்பப் பேருணர்வோடு நின்றிருக்கையில் ஞானசம்பந்தர் நாவுக்கரசரை 'உம் தம்பிரானைப் பாடும்' என்று சொல்ல, அப்பர் இந்தத் திருவிருத்தத்தைப் பாடியருளினார்:

**பார்கொண்டு மூடிக்கடல் கொண்ட**
**ஞான்றநின் பாதமெல்லாம்**
**நாலஞ்சு புள்ளினம் ஏந்தின**
**என்பர் நலிர்மதியம்**

**கால்கொண்ட வண்கைச் சடைவிரித்**
**தாடும் கழுமலவர்க்(கு)**
**ஆலின்றி மற்றுமுண்டோ அந்த**
**ணாழி அகலிடமே!**

எவ்வாறு அப்பன் அருளாசியும், அம்மை அருளாசியும் சிறிதும் வேறு பாடில்லாதவையோ, அதுபோலவே நாம் 'நோக்குங்கால் கண்ணிரண்டும் ஒன்றையே' அல்லவா நோக்கும். இங்கே ஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் வெவ்வேறு உருவத் தோற்றம் பெற்றிருந்தாலும் அவர்கள் கொண்டிருந்த உணர்ச்சியிலும், பெருமையிலும் ஒருமித்தே விளங்கினர் இரு கண்கள் போல. இங்ஙனம் அடியவர்கள் இவ்விருவரையும் ஒருங்கு வைத்து எண்ணியுள்ளனர்.

## நட்பின் வளர்ச்சி

ஒருமுறை ஞானசம்பந்தர் திருப்புகலூரில் முருக நாயனார் திருமடத்தில் தங்கியிருந்தார். அப்பொழுது திருவாரூர் சென்று திரும்பும் வழியில் திருப்புகலூர் எல்லை வந்தடைந்த திருநாவுக்கரசர் ஞானசம்பந்தரின் வருகை அறிந்து மகிழ்வுற்று தொண்டர் புடைசூழ எதிரே சென்றார். இருதிறத்துத் தொண்டர்களும் ஒருங்கே சேர்ந்ததால் நிலவின் கடல்கள் ஒன்றாகி இணைந்தது போல இருந்தது. இருவரும் ஒருவரையொருவர் வணங்கி, மங்கலம் வினவி மகிழ்வுற்றனர். அப்பர் திருவாரூர் ஆதிரைத் திருவிழாச் சிறப்பை எடுத்துரைக்க ஞானசம்பந்தரும் உடன் திருவாரூர் சென்ற இறைவனை வணங்கி, திரும்ப வந்து திருப்புகலூரில் திருநாவுக்கரசரைச் சேர்ந்தார். அக்காலத்து நாயன்மார்கள் பலர், குறிப்பாகச் சிறுத்தொண்டர், நீலநக்கர், ஏனைய தொண்டர்களும் ஞானசம்பந்தரையும், திருநாவுக்கரசரையும் சந்தித்து ஒப்பாகவே வணங்கி உடனுறைந்து பயன் பெற்றார்.

இவ்விருவரின் பெருமைகளை ஒருங்கே பறைசாற்றும் சான்றுகள் பல. அவற்றில் ஒன்று திருவீழிமிழலையில் பஞ்சம் பொருட்டு அடியவர் களுக்கு இருவரும் அமுதளித்த சம்பவம். பெருந்தகை இருவரும் அடியவர்களுக்கு திருவமுது வழங்குதற் பொருட்டு மிழலையிறைவர் படிக்காசு வழங்கினார். இச்செய்தி சுந்தரமூர்த்திகளால் பின்வருமாறும்

**நேசமுடையடியார்கள் வருந்தாமை அருந்த**
**நிறைமறையோர் உறைவீழி மிழலையினில் நித்தல்**
**காசருளிச் செய்தீர்**

மேலும்,

**தெரிந்த நான்மறை யோர்க்கிட மாகிய திருமிழலை**

இருந்து நீர் தமிழோடிசை
கேட்குமிச்சையாற் காசுநிமித்தம் நல்கினீர்
(சுந்தரமூர்த்தி - தேவாரம்)

சிறப்புற சுட்டப்பட்டுள்ளது. இவ்விருவரின் இந்த அருட்பணிச் செய்தியை நம்பியாண்டார் நம்பிகள் திருவந்தாதியில் (80) திறம்பட குறிப்பிட்டுள்ளார்.

பாடிய செந்தமி ழாற்படிக் காசு பரிசில்பெற்ற
நீடிய சீர்த்திரு ஞானசம்பந்தன் நிறைபுகழால்
நேடிய பூந்திரு நாவுக்கரசொடு எழின்மிழலைக்
கூடிய கூட்டத்தினால் உளதாய்த்து இக்குவலயமே

### வேறுபாடிலா நிலை

ஞானசம்பந்தரின் வேண்டுகோளை ஏற்றுத் திருநாவுக்கரசர் திருமறைக் காட்டில் மறைக்கதவம் திறக்கும்படி ஒன்பது பாடல் பாடியும் திறவாமல் 'இரக்கமொன்றிலீர்' என்று பத்தாவது பாடல் பாடிய பிறகே மறைக் காட்டான் அருள்பாலித்துக் கதவு திறப்பித்தார். இதற்கு மாறாக, கதவை அடைக்கும்படி ஞானசம்பந்தர் பாடிய முதற்பாட்டுக்கே இறைவன் அருளினார். இச்சம்பவத்தால் அப்பரைத் தாழ்வாக மற்றோர் எண்ணிக் கெடாத வண்ணம் சேக்கிழார் பெருமான் பின்வருமாறு தக்கக் காரணம் கூறுகிறார்.

**வேதங்கள் எண்ணில் கோடி மிடைந்து செய்பணியை மிக்க**
**ஏதங்கள் நம்பால் தீர்ப்பார் இருவரும் செய்து வைத்தார்**
**நாதங்கொள் வடிவாய் நின்ற நதிபொதி சடையார் செய்ய**
**பாதங்கள் போற்று மேலோர் பெருமையார் புகரு நீரார்?**

எனவே இவ்விருவர் பெருமையில் உயர்வு தாழ்வு பாராட்டல் தகாது என்று அவர்தம் வேற்றுமையில்லா நிலை உணர்த்தப் பெறுகின்றது. இந்தச் சிறப்புத் தன்மைக்கு வலுவூட்டும் விதமாகத் திருவாய்மூரில் இறைவன் காட்சியளித்ததைச் சுட்டலாம். திருவாய்மூருக்கு வருமாறு இறைவன் அப்பரையே முதலில் பணித்தார். அவரும் சென்றார். ஞானசம்பந்தர் செய்தியறிந்து அவரும் தொடர்ந்து சென்றார். எனினும், ஞான சம்பந்தருக்கே இறைவன் முதலில் திருக்கூத்துக் காட்சியருளினார். ஞானசம்பந்தர் இறைவனைக் காட்டவே அப்பர் கண்டு மகிழ்ந்தார். இச்சம்பவம், இறைவனே அவர்கள் இருவரிடையே உயர்வு தாழ்வு இல்லை என உணர்த்தியது போலாகின்றது.

### அப்பர்தம் அன்பு

வாகீச முனிவரும், ஞானசம்பந்தரும் திருமுறைக் காட்டுக் கோயிலில் வீற்றிருந்தபொழுது மதுரைப் பாண்டிமாதேவியாரும், குலச்சிறையாரும் விடுத்த தூதுவர்கள் ஞானசம்பந்தரைச் சந்தித்து அழைப்பு விடுக்கின்றனர்.

சம்பந்தரும் மதுரை செல்ல ஆயத்தமாகிறார். திருநாவுக்கரசர் இத்தருணத்தில் 'அந்த அமண்கையர் வஞ்சனைக்கு ஓர் எல்லையே இல்லை, இப்போது கோளும் தீயது' என்று தடுத்துரைத்தார். உடனே ஞானசம்பந்தர் 'பரசுவது நம்பெருமான் கழல்கள் என்றால் பழுது அணையாது' என்று பதிகம் அருளினார். ஞானசம்பந்தர் மதுரை சென்றது சமணரை வெல்வதை முதன்மையாகக் கொண்டன்று. 'எல்லையிலா நீறு போற்றும் இருவரையும் சென்று காணும் கருத்துடையேன்' என்று செப்பியருளியபடி பாண்டிமா தேவியையும், மந்திரியாரையும் கண்டு மகிழ்வதையே குறிக்கோளாகக் கொண்டு புறப்பட்டார். இடையே வம்புக்கு வந்த சமணக் கும்பல் தாமே தருவித்துக் கொண்ட தீமையால் அழிந்து போகின்றனர். இவ்வாறான இடையூறுகளை முன்னுணர்ந்து ஞானசம்பந்தர் மீது கொண்ட அன்பின் பொருட்டுத் திருநாவுக்கரசர் சம்பந்தரை மதுரைப் பயணத்தைத் தவிர்க்க வேண்டினார்.

திருப்பூந்துருத்தி எனும் ஊருக்கு ஞானசம்பந்தர் வருகை புரிந்தபொழுது அப்பர் ஞானசம்பந்தர் மீது கொண்டிருந்த அன்பு அளவுக்கரிய வகையில் வெளிப்பட்டது. தென்னவனின் கூனைச் சரிசெய்து திருநீற்றின் பெருமைதனை ஒளிபரப்பிய தமிழ் விரகர் ஞானசம்பந்தரின் வருகையைக் கேட்டறிந்து மகிழ்ந்த தமிழ்வேந்தர் திருநாவுக்கரசர் அவரை எதிர்கொண்டு அழைக்கும் பொருட்டுத் தொண்டர்கள் பலருடன் சென்றார். கூட்ட மிகுதியால் ஞானசம்பந்தரை நெருங்கி வர முயன்றதோடு மட்டுமல்லாமல் சம்பந்தரது சிவிகையைச் சுமந்து வந்தார். ஞானசம்பந்தர் இதனையறிந்தக் கணம் மிகவும் பதைத்துக் குதித்தார். இருவரும் ஒருவரை ஒருவர் வணங்கி மகிழ்ந்தனர்.

## பதிகங்களில் சிறு வேறுபாடு

ஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் மிக நெருங்கிய நாட்டினராய், சில சமயங்களில் உடன் உறையும் திருவினராய் திகழ்ந்திருக்கின்றனர். இவர்களின் பாடல்களில் கருத்து ஒற்றுமையும், சொல்லொற்றுமையும் காணப் பெறலாம். எனினும், பதிக அமைப்பில் ஞானசம்பந்தரின் பதிகங்களில் எட்டாவது பாடலில் இராவணனைப் பற்றிய செய்தியும், ஒன்பதாவது பாடலில் அயன் அரிகளுக்கு அரியனாய் விளங்கிய செய்தியும், பத்தாவது பாடலில் புத்தர், சமணர் நெறியின் பொய்ம்மையும் விளம்பப் படும். ஆகவே, பத்தாம் பாடல் 'சமண்பாட்டு' என விளக்கப்பெறும். பதினோராம் பாடல் பதிகம் பாடுதலின் பலன் பற்றி விவரிக்கும். இத்தகைய தன்மைகள் திருநாவுக்கரசர் பதிகங்களில் இடம்பெறவில்லை. அவர் பதிகங்களில் பத்துப் பாடல்களே உள்ளன. பத்தாவது பாடல் இராவணன் அருள்பெற்ற செய்தி பற்றி விவரிக்கும்.

இவ்வாறு இருவரும் இராவணன் பற்றி கூறுவதன் நோக்கம் பூலோகத்தில் வாழ்பவர்கள் தவறு செய்துவிடின், கழிவிரக்கங்கொண்டு இறைவன் திருவடியிற் சரண் புகுந்தால் அவனது அருள் கிட்டும் என்பதாகும். இங்ஙனம் பதிக அமைப்பு வேறுபாடு இருப்பினும் இறைவனது அறக்கருணையே எல்லார்க்கும் வேண்டியது என இருவரும் வற்புறுத்துகின்றனர்.

மேற்சொன்ன நிகழ்வுகள் இரு பெருந்தகைகளின் வாழ்க்கை நிகழ்வுகள் அவர்களின் பண்புடைமையையும், பணிவுடைமையையும், நண்புடைமையையும் சிறப்புற வெளிக் கொணருகின்றன. இத்தெழுகை நட்பின் சிறப்பினையும், அவர்கள்தம் இறைத் தொண்டினையும் வார்த்தைகளால் முடிவுறச் செய்ய இயலாது.

# 84. சம்பந்தர் காலமும் சூழலும்

அழ. முத்துப்பழனியப்பன், கோவை.

**வேதநெறி தழைத்தோங்க, மிகுசைவத் துறைவிளங்கப்**
**பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தெழுத**
**சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்**
**பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்.**

சமயத் தலைவரும், சமுதாயத் தலைவரும் தோன்றுதற்குத் காலமும், சூழலும் கருவியாகின்றன. தமிழ்ப் சைவ சமயத் தலைவர்கள் நால்வரும், அவரவர் தோன்றிய காலத்தையும் சூழலையும் சிறப்புற மாற்றி அமைத்தனர். அவருள்ளும், ஆளுடையபிள்ளையும், அப்பரும் தோன்றிய காலம், தமிழர்தம் தவக்குறைவால், தமிழ்ச் சமயமும், தமிழ் மொழியும், பண்பாடும் பின்னடைந்திருந்த காலம். அக்காலச் சூழ்நிலையில், தமிழையும், தமிழ்ச் சமயத்தையும், தமிழ்ப் பண்பையும், மீண்டும், மீட்டளித்த பெருமை, ஆளுடைய அடிகளையே முதலிற் சாரும்.

அவர் தோன்றிய காலம் எத்தகையது? தமிழ்மொழி வழக்கில் இல்லை, அயல் மொழியாம் பாலி சிறப்படைந்திருந்தது. தமிழ்ச் சமயம் மறைந்து போயிருந்தது. வடக்கில் பேரரசனான பல்லவ மன்னன் சமணனாக விளங்கினான். அதுபோல் தெற்கில் பேரரசனான, பாண்டிய மன்னனும் சமண மதத்தைத் தழுவியிருந்தான்.

நாடெங்கனும், சமணப் பள்ளிகள் மட்டுமே சிறந்திருந்தன. அவர்தம் வழக்காறுகளே நிறைந்திருந்தன. சங்ககாலத் தமிழகம் மாறிப்போய் விட்டது. இயற்கை நெறியில் சிறந்திருந்த தமிழர் செயற்கை நெறிகளைக் கைக்கொண்டிருந்தனர்.

''சமுதாயத்தில் வேலைப் பிரிவினை ஏற்படலாயிற்று. கைத் தொழிலிலும் விவசாயமும் பிரிந்தன. உற்பத்தியில் பங்கெடுக்காமல், உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள் மட்டும் பரிவர்த்தனை செய்வதில் மட்டும் ஈடுபடும். வியாபாரிகள் வர்க்கம் தோன்றியது. வணிக வர்க்கத்தினர், மன்னர் ஆகிய இரு பகுதியினரும் சமண, பௌத்த சமயங்களை ஆதரித்தனர். அவையும், மன்னர்களையும், வணிகர்களையும் ஒழுக்கம், அமைதி என்ற போர்வையில் ஆதரித்தன''.

இதன் விளைவாகத் தமிழ்நாடு முழுவதும், சமணர்கள் ஆதிக்கம் அதிகமாயிருந்தது. மீன் பிடித்தல், வேட்டையாடுதல் முதலிய உழவு சார்ந்த தொழில்களும், நேரடியான வேளாண்மையும், நிலத்தை உழுது பயிரிடும் வேளாளரும் மிகவும் பாதிக்கப்பட்டனர்.

**''பழங்கால வைதிகச் சமயக் கோயில்கள் கவனிப்பாரற்றுக் கிடந்தன. சைவ, வைணவக் கோயில் நிலங்களையும் மன்னர் ஆதரவுடன் சமணர் எடுத்திருந்தனர் என நாம் ஊகிக்க இடமுண்டு''**

பெரியபுராணமும் இதை உறுதிப் படுத்துகின்றது.

**''பூழியர் தமிழ்நாட்டுள்ள பொருவில் சீர்ப்பதிகள் எல்லாம்**
**பாழியும் அருகர்மேவும் பள்ளிகள் பலவுமாகிச்**
**சூழிருட் குழுக்கள் போலத் தொடைமயிற் பீலியோடு**
**மூழிநீர் கையிற் பற்றி அமணரே யாகிமெய்ப்ப**

**...... சைவ நெறியினிற் சித்தம் செல்லா**
**நிலைமையில் நிகழுங் காலை .....**

பாண்டிய நாட்டில், பாண்டிமாதேவியையும், அமைச்சர் குலச்சிறையையும் தவிர வேறு எவருமே சைவர் இல்லை.

**''.... இருவர்தம் பாங்குமன்றிச் சைவம் அங்கெய்தாதாக ''**

நாலடியார் போன்ற அறநூல்களின் காரணமாக, பெண்களும், புலன் உணர்ச்சியைத் தொடும் நுண்கலைகளும் உறங்கிக் கிடந்தன. அழகுக் கலைகள்யாவும் அடங்கிப்போயின. இசை சிறப்புப் பெறவில்லை. இசைநூல்கள் எழவில்லை. அருகரைப் போற்றுவோரே சிறந்திருந்தனர். உழவுத் தொழில் சிறப்படையாததால் நாட்டில் பஞ்சம் ஏற்பட்டது. இறைவனால் ஞானசம்பந்தருக்கு வழங்கப்பட்ட படிக்காசுக்குக்கூட வணிகர்கள் வட்டம் கேட்டனர் என்பதன் மூலம் பஞ்சகாலத்திலும் வணிகர்கள் நன்கு செழிப்படைந்திருந்தனர் என்பது தெளிவாகிறது.

அதுபோலவே, தமிழ்மொழி பின்னுக்குத் தள்ளப்பட்டது. சங்க காலத்தில் பாண்டியன் அறிவுடை நம்பி போன்ற மன்னர்கள் தமிழ்ப் புலவர்களாகவும் சிறந்து விளங்கித் தமிழ் மொழியை வளர்த்தனர். சங்கம் கண்டனர். ஆனால், பல்லவ மன்னர்கள் வடமொழி வாணர்களாக விளங்கினர். வடமொழியே அரசவை மொழியாகவும் விளங்கின. வடமொழி, பிராகிருதம் ஆகிய மொழிகளைப் பெரிதும் போற்றினர். லோக விபாகம், கிராதார்ச்சுனியம், அவந்திசுந்தரிகதா, காவ்யாதர்கம், மத்தவிலாசப் பிரகசனம், மகாவீர சரிதம், உத்திரராம சரிதம், மாலதி மாதவ, முகுந்தமாலா முதலிய பல வடமொழி நூல்கள் எழுந்தன. மன்னர் பட்டயங்கள் பெரும்பாலும் வடமொழியிலும், பிராகிருதத்திலும் அமைந்துள்ளன.

இத்தகைய காலச் சூழலில்தான் ஞானசம்பந்தர் தோன்றினார். தமிழர்தம் வேளாண்மை பாழ்பட்டிருப்பதைக் கண்டு நொந்தார். ஆகவே தம் பாடல்களிற் பெரும்பான்மையாக, இயற்கை வருணனைகளைச் சிறப்புறச் சேர்த்தார். ''இயற்கை பாதி, இறைமை பாதி'' எனும் கொள்கையை உருவாக்கினார்.

விடியற்காலை எழும் கதிரோனும் இறைவன்; உலகிற்கு வாழ் வளிக்கும் மழையும் அவன். மன்னனும் அவன் என்று பாடுவார் திருப்புள்ள மங்கைத் தேவாரத்தில், வயல்வெளி சூழ்ந்த மருத நிலத்தை அவர் பாடும் அழகே அழகு.

**''கொங்குலா மலர்ச்சோலை வண்டினங் கிண்டி, மாமது**
**உண்டிசை செயத்**
**தெங்கு பைங்கமுகம் புடைசூழ்...''**

**''கோல மாமயில்கள் ஆலக் கொண்டல்கள்சேர்**
**பொழிற் குலவும் வயலிடைச்**
**சேலிளம் கயலார் புனல் சூழ்ந்த திருக்களர்''**

- திருக்களர் பதிகம்

**''சிறைவண்டி யாழ்செய் பைம்பொழிற்**
**பழனஞ் சூழ் சிற்றேமம்''....** - திருச்சிற்றேமம் பதிகம்

**''பலவு நீள் பொழில் தீங்கினி தேன், பலா**
**மாங்கனி பயில்வாய, கலவ மஞ்ஞைகள்**
**நிலவு சொற்கிள்ளைகள் அன்னஞ்**
**சேர்ந்தழகாய குலவு நீள்வயற்**
**கயலுகள் கோட்டூர்''**

**''...குருகு வாழ் வயல் கோட்டூர்''** - கோட்டூர் பதிகம்

நெய்தலைப் பற்றிப்பாடும்போது, கடலும் கடல் சூழ்ந்த இடத்திற்கே நம்மை அழைத்துச் செல்கிறார்.

**''சங்கந் தரளம் அவைதான் கரைக்கு ஏற்றும்**
**வங்கஞ் சூழ் மறைக்காடு....''**

**''குரவங் குருக்கத்திகள் புன்னைகள் ஞாழல்**
**மருவும் பொழில் சூழ் மறைக்காடு....''**

-மறைக்காட்டுப் பதிகம்

மலைசூழ்ந்த குறிஞ்சியை இவர் எடுத்துக்காட்டும் அழகே தனி.

**''வானிற் பொலிவெய்தும் மழை மேகங் கிழிந்தோடிக்**
**கூனற் பிறைசேரும் குளிர் சூரற் கொடுங்குன்றம்''**

- திருக்கொடுங்குன்றப் பதிகம்

"வம்பார் குன்றம் நீடுயர் சாரல் வளர் வேங்கைக்
கொம்பார் சோலைக் கோல வண்டியாழ் செய்குற்றாலம்"

"மலையார் சாரல் மகவுடன் வந்த மடமந்தி
குலையார் வாழைத் தீங்கனி மாந்துங் குற்றாலம்"

- திருக்குற்றாலப் பதிகம்

இவ்வாறு இயற்கை அழகை எடுத்துக்காட்டி, பழந்தமிழர் சமயத்தை நிலை நாட்டினார்.

தம் பாடல்களுக்கு, திருநீலகண்ட யாழ்ப்பணரைக் கொண்டு இசை வகுத்ததன்மூலம், பழைய யாழ்ப்பாணன் பெருமையை உறுதிப்படுத்தினார். தாம் செல்லுமிடங்களுக்கு எல்லாம் அவரையும் அழைத்துச் சென்று சிறப்பித்தார். தாழ்ந்த குலம் என்று கருதப்பட்ட, யாழ்ப்பாணரும், அவர் மனைவியாரும், அந்தணர்தம் வேள்விச் சாலையில் தங்க வைக்கப் பட்டனர். அவர்கள் தங்கியதால், வேள்விச்சாலையில், எழுந்த தீ வலஞ்சுற்றி எழுந்தது என்பார் சேக்கிழார். இத்தகைய சமுதாயப் புரட்சியையும் ஞானசம்பந்தர் செய்தார்.

அம்மட்டோ, தமிழ், தமிழ் என்று தமிழ்க் கொடியை ஏந்தி, தமிழுக்குப் புதுவகை யாப்பு, சந்தங்கள், பண் என்றெல்லாம் சேர்த்து, தமிழுக்குப் புதுமெருகு ஏற்றியவர் ஞானசம்பந்தரே! பொதுமக்களைக் கவருதற்காகவும், ஒற்றுமை உணர்ச்சியை இலகுவில் உருவாக்குவதற் காகவும் எளிய, இனிய உயிர்த்துடிப்புள்ள மொழியைத் தமது பாடல்களுக்கு ஏற்ற சாதனமாகக் கொண்டார்கள். வீரசோழியம் போன்ற பிற்கால இலக்கண நூல்களிற்கூட அங்கீகரிக்கப்படா வழக்குகளையும், பிரயோகங் களையும் தேவாரத்தில் காணலாம்.

"ஞாலமளந்த மேன்மைத் தெய்வத்தமிழ், அசைவில் செழுந்தமிழ், மறையிலங்கு தமிழ், தவம்மல்கு தமிழ், திருநெறிய தமிழ், அருள்மாலைத் தமிழ், விலையுடைய அருந்தமிழ், இன்தமிழ், இறையெழுது மொழி"

என்றெல்லாம் முன் எப்போதுமில்லாத வகையில் தமிழ் அடைமொழி களைப் பெற்றது.

சம்பந்தர் தம்மைப் பற்றிக் கூறுமிடத்து நற்றமிழ் ஞானசம்பந்தன், அருந்தமிழ் ஞானசம்பந்தன், தமிழ் நாதன் ஞானசம்பந்தன், தமிழ்நாடு ஞானசம்பந்தன், சீரார் தமிழ் ஞானசம்பந்தன், செந்தமிழின் விரகன், தமிழ்க்கிழமை ஞானன், செந்தமிழான், நல்ல செந்தமிழின் வல்லவன் ஞானசம்பந்தன், வித்தக மறைமலி தமிழ் விரகன், தகுதமிழ் ஞானசம்பந்தன்,

உரைசெய் தமிழ்ஞான சம்பந்தன், பாரினார் தமிழ்ஞான சம்பந்தன் என்றெல்லாம் தமிழையுந், தன்னையுந் சேர்ந்தே பாடுகின்றார்''.

அ.ச. ஞானசம்பந்தம், தேசீய இலக்கியம் என்ற நூலிற் குறிப்பிடுவது நோக்கத்தக்கது.

''தமிழ் முரசு கொட்டித் தமிழ்க்கொடி ஏந்தித் தமிழ் கவிதையால், தமிழ்க் கடவுளைப் பாடி, தூங்கும் தமிழினத்தைத் தட்டி எழுப்பின வீரத் தமிழர் ஒருவர் உண்டு என்றால் அவர் ஞானசம்பந்தரல்லாமல் வேறு யார்?'' ஞானசம்பந்தர் போராட்டத்தின் விளைவாக தமிழ் இறைமொழியாக ஏற்றுக் கொள்ளப்பட்டது.

ஆக, ஞானசம்பந்தர் காலச் சூழல்களை வென்றார். தமிழரின் தனிப் பண்பாட்டை நிலை நிறுத்தினார். தமிழ்மொழியை என்றுமள தென்தமிழாக மாற்றி அமைத்தார்.

சைவமுந் தமிழும் வாழுகின்ற வரையிலும், ஞானசம்பந்தப் பெருமானின் பெயரும் நின்று நிலவும் என்பதில் ஐயமில்லை.

# 85. சம்பந்தர் ஊட்டும் நம்பிக்கை

பிரணதார்த்திஹரன், திருச்சி.

தென்னாட்டிலிருந்து வடநாட்டிற்கு பக்தி பயனானது பரவ ஆரம்பித்தது. மனிதன் இரை தேடுவதோடு இறைவனையும் தேடத் துவங்கினான். அன்பும் சிரத்தையும் இணைந்த இறை உணர்வே பக்தி எனப்படுகிறது. இப்பரந்த தேசத்தில் இறைவழிபாடானது சைவம், வைணவம், சாக்தம், சூர்யம், காணபத்யம், கௌமாரம் என ஆறு விதமாக நிகழ்கிறது. சைவ வழிபாட்டில் நாயன்மார்களுக்கும் வைணவ வழிபாட்டில் ஆழ்வார்களுக்கும் பெரும் பங்கு உண்டு.

பக்தியினை குரங்கு பக்தி, பூனை பக்தி என இருவகைப் படுத்தலாம். குரங்கு பக்தியில் குட்டியானது தாயினை இறுகக் கட்டிக் கொள்ளும். அதாவது இறைவன் பல சோதனைகள் தந்தாலும் இறைவனை எப்பொழுதும் பக்தர்கள் நினைத்து இருப்பர். பூனைபக்தியில் தாயானது மிகவும் பொறுப்புடன் இருந்து குட்டிகளைப் பாதுகாக்கும். அதேபோல் இறைவன் பக்தர்மேல் அன்பு கொண்டு ஆதரவு காட்டுவதாகும். சம்பந்தர் குழந்தையாக இருக்கும் போது உமையானவள் ஞானப்பால் அளித்தாள். அச்சமயம் தந்தையார் பால் கொடுத்தது யார் என வினவ; அவரும் நம்பிக்கையுடன் ''தோடுடைய செவியன்' என்ற பதிகத்தினைப் பாடினார்.

தேவாரம் என்பதன் பொருள் கடவுளுக்குச் சாற்றப்படும் பூமாலை போன்ற பாமாலை என்பதாகும். இறை நம்பிக்கை தன்னம்பிக்கைக்கு ஆதாரமாக விளங்குகிறது. மக்களின் தலைவனாக விளங்கும் மன்னன் நல்ல உடல் நலத்தோடு ஆரோக்கியமாக இருப்பானாகில் நாடு வளம் பெறும். கூன் பாண்டியனுக்கு ஏற்பட்ட வெப்ப நோயை பூரணமாக குணப்படுத்த 'மந்திரமாவது நீறு' என்ற பதிகத்தை நம்பிக்கையோடு பாடி மன்னனின் துயரை நீக்கினார். திருநீறு மந்திரமாகவும் தந்திரமாகவும் திகழ்கிறது. வேதத்தில் உள்ள திருநீறு துயர் தீர்க்கும் தன்மை வாய்ந்தது. அது உண்மையில் உள்ளது திருநீறு முக்தியினைத் தரவல்லது. முனிவர்கள் அதை அணிவதால் பரவ இனியது. சித்தி அளிக்கும் தன்மை வாய்ந்தது. காண இனியதாகத் திகழ்கிறது. நாம் குளித்துவிட்டு வந்தவுடன் தலையினை நன்கு துவட்டினாலும் ஈரம் முழுவதும் போகாது. திருநீற்றை

நெற்றியில் அணிவதால் அது ஈரத்தை வெளிப்படுத்துகிறது என்ற விஞ்ஞான பூர்வமான செய்தியை உணரலாம். மேலும், இவ்வுடலை விட்டு உயிர் நீங்கினால் மிஞ்சி நிற்பது சாம்பல்தான் என்ற தத்துவ ரீதியான கருத்தையும் நாம் உணரலாம். எனவே திருநீறு பாவத்தினைப் போக்கவல்லது என்று நம்பிக்கையுடன் சம்பந்தர் கூறுகிறார்.

திருஞானசம்பந்தர் இல்லத்தில் வாழ்ந்த திருநாவுக்கரசர் சைவ சமயத்தினை நிலைநாட்ட பெரிதும் உதவினார். நவக்கிரகத்தால் ஏற்படும் தோஷம் நீங்க 'வேயுறு தோளி பங்கன்' எனும் கோளறு பதிகத்தினைப் பாடினார். முழு நம்பிக்கையுடன் வேதாரண்ய தலத்தில் இப்பதிகத்தைப் பாடினார். மேலும் திருக்கொடி மாடச் செங்குன்றூர் எனும் ஊரில் மக்கள் பலருக்கும் சீடர்களின் சிலருக்கும் கடுங்குளிருடன் கூடிய விஷஜுரம் பிடித்ததால் சம்பந்தர் 'அவ்வினைக் கிவ்வினை' எனும் பாடலை நம்பிக்கையுடன் பாட அனைவரும் பூரண குணமடைந்தனர்.

மேலும் இறைவன் அருளை என்றும் மறவாமல் இருக்கும் நிலையினை அருளுமாறு வேண்டி, 'மறையுடையாய் தோலுடையாய்' எனும் பதிகம் பாடினார். திருநல்லூர்ப் பெருமணம் எனும் தலத்தில் ஞானசம்பந்தர் துணைவியார் மற்றும் அனைவருடனும் 'நல்லூர் பெருமணம்' என்ற பதிகத்தினைப் பாடி கோயிலுக்குள் நுழைந்தவுடன் ஈசன் அருளால் கர்ப்பக்கிருஹத்தில் ஒரு சோதி தென்பட்டது. உடனே சம்பந்தர் நம்பிக்கையுடன் 'காதலாகிக் கசிந்து' என்ற ஐந்தெழுத்து பதிகத்தினைப் பாடிக் கொண்டே எல்லோரையும் அந்த ஜோதியில் இரண்டற கலக்கச் செய்தவர். இதுவே சம்பந்தர் பாடிய கடைசிப் பதிகம் என்பது குறிப்பிடத்தக்கது.

தான் பெற்ற ஞானத்தை கவிதையாக்கி, நம்பிக்கையுடன் திருஞான சம்பந்தர் வலம் வந்தார். அவரது பதிகங்கள் பல வாழ்வில் வெற்றிபெற இறைவனிடமும் என்னிடமும் நம்பிக்கை தேவை என்ற உண்மை புலப்படுகிறது. 'நம்பியவருக்கு நடராஜா' என்றும் அருளுவார் என்ற நம்பிக்கை பக்தர்களுக்கு எழுகிறது. இறைவனை நினைப்பதற்கு இறைவன் அருள் தேவை என்ற நம்பிக்கையினை சம்பந்தர் பதிகங்கள் பறைசாற்றுகின்றன.

# 86. சம்பந்தர் தேவாரத்தில் இறைவனும் அடியவரும்

ந. சுசீலா, திருச்சி.

''தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிது'' என்பர். தொண்டர்களின் உள்ளத்தில் இறைவன் ஒடுக்கமாக இருக்கின்றான். தன்னை வழிபடும் அடியவர்க்கு இறைவன் ஒன்றாய் இருந்தும், உடனாய் இருந்தும், வேறாய் இருந்தும் அருள்புரிகின்றான். இறையியல் என்பது இறைவனைப் பற்றியது மட்டுமன்று; இறைவனை வணங்கும் மனிதரையும் பற்றியது என்பதே உண்மை. இறைவனுக்கும் அடியவருக்கும் உள்ள தொடர்புதான் இறையியலின் அடிப்படை நெறியாகும். தம்மையே நல்கும் அடியவர்களை இறைவன் பலவழிகளில் நெறிப்படுத்தி அவர்களுக்கு அருள்புரிகின்றான். ஞானசம்பந்தர் தம்முடைய தேவாரத்தில் இறைவன் அடியவர்க்கு அருள்புரியும் திறத்தினைப் புலப்படுத்தியுள்ளார். அவற்றை வெளிப்படுத்துவதே இக்கட்டுரையின் நோக்கம்.

இறைவன், ''வேண்டுவார்க்கு வேண்டுவன அருளும் பண்பினன்'' என்பதை ஞானசம்பந்தர், ''ஆசைகொள் மனத்தை அடியவர் தமக்கருளும் அங்கணன்'' (337-10) என எடுத்துரைக்கின்றார். எங்காகினும், யாதாகினுமாகப் பிறந்தாலும் இறைவன் தன் அடியவருக்கு இங்கே இருக்கிறேன் என்று அருள்புரிவானாம். இதனைச் சம்பந்தர்,

**''எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும் தன்அடியவர்க்கு**
**இங்கே என்று அருள்புரியும் எம்பெருமான்''** (176-6)

என்று தெளிவுறுத்துவர். பெருமானுக்கே அடிமையாக இருந்து, மறவாமல் மனம் ஒன்றி வணங்கும் தொண்டருக்கு இறைவன் எல்லாமாக இருந்து அருள்புரிவான்.

**''மறப்பிலா அடிமைக்கண் மனம்வைப்பார் தமக்கெல்லாம் ஆவார்''** (322.7)

என்று சம்பந்தர் இறைவனின் அருள்திறத்தைத் தெளிவுறுத்துவார். இவ்வாறு அருள்புரியும் இறைவன் இயல்பினைப் பலவகைப்படுத்தலாம்.

**ஆட்கொண்டருளல்**

**''விரும்பும் அடியாரை ஆள் உகந்தவன்''** (187-2)
**''கனிந்தவரைக் கலந்து ஆட்கொள்ளும் முனி''** (150-3)

தன்னை விரும்பும் அடியவரை விரும்பிக் கலந்து ஆட்கொண்டருளுதல் இறைவன் இயல்பு. ஆட்கொள்ளுதல் என்ற நிலையிலேயே இறைவன் அடியவரோடு உடனாகி நிற்கின்றான் என்பது தெளிவு.

**இடரானவை களைதல்**

ஆட்கொண்ட பிறகு அடியவரின் இடர்களைக் களைதல் ஒருங்கே நிகழ்ந்துவிடும். இடரான பலவும் அடியாரை வந்து நலியாத வண்ணம் அருள்செய்ய வேண்டும் என்று வேண்டியவர் சம்பந்தர். ‘அச்சம் இலர்; பாவம் இலர்; கேடும் இலர்; அடியார் நிச்சம் உறும் நோயும் இலர்’ (18.2) ‘ஈசன் சேவடி ஏத்தி இறைஞ்சிடச் சிந்தை நோயவை தீர நல்கிடும், (263.4) என்பன சம்பந்தரின் உறுதிமொழிகள்.

**பழிபாவம் நீக்குதல்**

இறைவன் திருவடிகளை மனத்தில் நினைத்துத் தொழுபவரின் பாவத்தைத் தீர்க்கும் இறைவன் பாவமில்லாதவர். (204.6) மனம் உருகி கின்று ஆதரித்து அன்பு செய்து அவன் அடியினை வழிபட வல்லவரின் பழிகளை வேரோடு இறைவன் அறுப்பான் (188.3) பாவநாசத்து இறைவன் தன் அடியவரின் பாவந்தீர்ப்பார்; பழிபோக்குவர் (355.1).

**புகழும் பெருமையும் தருதல்**

அடியவரின் பழிபாவத்தைப் போக்கும் இறைவன், அவர்கட்குப் புகழும் பெருமையும் தருவான். மேலும் செல்வம், உயர்ச்சி, ஆக்கம் முதலியவற்றையும் தருவான். வீழிமிழலை இறைவன் திருவடியைப் பூவெனத் தலை மேற்கொள்வார் புகழ் பெருக வாழ்வார் (304.2). அரனைத் தொழும் அடியவர் பெருமையைப் பெறுவார் (245-10) உமையொரு பாகனைத் தொழுது வணங்கினால் செல்வம் சேரும்; அழிவில்லை; உயர்ந்த புகழ்பெறுவர் (363.9).

**அன்னம்பாலித்தல்**

அடியவரின் பசியையும் இறைவன் போக்கி அருளுவான்.

**“பத்தரன்ன பண்டாரமே”** (374.3)

என்பது சம்பந்தர் வாக்கு.

**ஐயமகற்றி இன்பம் அளித்தல்**

‘புரிந்த அடியாரை ஐயம் அகற்றுவான்’ (88.20) இறைவனின் அருளை நம்பினார் கைவிடப்படார் என்பது கருத்து. ‘சார்ந்தவர்க்கு இன்பங்கள் தழைக்கும் வண்ணம் நேர்ந்தவன், (113.5) தம்மைப்போல் தம் அடியார்க்கும் இன்பம் அளிப்பவர் (238.2) முதலில் அடியவருக்கு ஐயம் நீக்குவதும் முடிவில் இன்பம் அளித்தலும் இறைவன் கருணைத் திறமாகும்.

### கோளும் நாளும் நலியா வகை அருளல்

இறைவன் அடியவரை 'நாளும் கோளும் இடர்செய்யா' என்பது சம்பந்தரின் துணிவு. சம்பந்தர் இதனை ஆணையிட்டுக் கூறுகின்றார். கோளறு பதிகம் இதற்குச் சிறந்த சான்று.

### வினை நீக்குதல்

அடியவராகி நின்று இறைவனை ஏத்த வல்லவரை அருவினைகள் அடையா (244.1), அடியவர் தொழுது எழ, அமரர் ஏத்த வல்வினைகள் பலவற்றைத் தீர்ப்பவன் (261.7) என்று பல இடங்களில் சம்பந்தர் உறுதிபடக் கூறுகின்றார்.

### தவநெறி அருளல்

இறைவன் திருவடியைச் சேர வல்லவர் உறுவது தவமே (352.5) இறைவனை வாழ்த்துபவர் ஐயமின்றித் தவநிலை அடைவர் (221.9).

### எளிவந்த தன்மையனாதல்

இறைவன் தன்னை அடைந்தவர்க்கு எளியவன்; பிறருக்கு அரியவன்; 'அன்பு செய்வார் அவர்க்கு எளியவர்' (214-6). 'வணங்காதார் தமக்குப் பிணக்கம் செய்பெருமானார்' (322.3) எனச் சம்பந்தர் இறைவனின் எளிமைத் தன்மையை அடியவர்க்கு உணர்த்துகின்றார்.

### விண்ணுலக வாழ்வு தருதல்

சிவபெருமான் தன்னைத் தொழுது ஏத்தி வணங்குபவருக்கு, அமரர் உலகையும் அண்டத்தையும் அருள வல்லவன் என்பது சம்பந்தர் வாக்கு. ''அடியவர்களுக்குக் குடியிருக்க, இம்மண்ணில்லாமல் விண்ணைக் கொடுக்கும் மணிகண்டன்'' (179-8) என்றும், 'தம்மைச் சேர்ந்தவர்கள் அண்டம் ஆள தாம் வனத்தில் பலிகொண்டவர் (296-1) என்றும் கூறுவது நோக்கத்தக்கது.

### பிறப்பு இறப்பு நீக்குதல்

சிவன் அடியைத் தொழும் இயல்பினர் மறுபிறப்பு இல்லாதவர் (353-9) என்றும் பேணுவார் பிணியொடும் பிறப்பு அறுப்பான் (291-9) என்றும் வழிபாட்டின் பெரும்பயனைச் சம்பந்தர் கூறுகின்றார்.

### அடியவரோடு உடனிருத்தல்

இறைவன் அடியவரோடு உடன் இருப்பதையே எப்போதும் விரும்புவான். 'உள்ளம் உருகில் உடனாவார்' (247-3) 'எம்பெருமானே என்று நின்றவர் இடமெல்லாம் விருப்பமுடன் அமர்ந்தான்' (253-7) என்று அவன் உடனாக இருந்து அருளுவதைச் சம்பந்தர் சுட்டுகின்றார்.

## சிவகதி அளித்தல்

சிவபெருமான் பக்குவமடைந்த தன் அடியவர்களைத் தானாக்கித் திருவடியளித்து வீடளிப்பான் என்று சம்பந்தர் உறுதியாகக் கூறுகின்றார். 'சிவபெருமானின் அடிதொழச் சிவகதி பெறுவது திண்ணம்' (349-10), 'தஞ்சமாகத் தலைவனை நினைப்பவர்கள் துஞ்சல் இல்லாத நல்ல உலகம் பெறுவர்' (195-10) என்று சிவகதிப்பேறு சுட்டப்படுவது உணர்தற்குரியது.

கருணையே வடிவான சிவபெருமான் தன்னையே தமர்க்கு நல்கும் தனிப்பெருஞ் சிறப்பினன். தன்னை அடைந்தவர்க்கு அளப்பரும் பேற்றினை அளிக்கவல்லவன். ஞானசம்பந்தர், இறைவன் அடியவர்க்கு நிழலாக நின்று அருள்புரியும் திறத்தினை விளக்கமுறத் தமது பதிகங்களில் கூறியுள்ளார்.

இறைவன் அடியவர் இடரைக் களைந்து, பழிபாவம் நீக்கி, அவர் கட்குப் புகழும் பெருமையும் தந்து, அன்னமளித்துப் பசிபோக்கி, ஐயம் களைந்து இன்பம் நல்கி, கோளும் நாளும் வருத்தாமற் காத்து, வினை நீக்கி, தவநெறி அருளி, எளிமைத் தன்மையுடன் திகழ்ந்து, விண்ணுலக வாழ்வளித்து, பிறப்பு இறப்பு நீக்கி, தோன்றாத் துணையாய் உடனிருந்து, சிவகதி அளிப்பான் என்பது ஞானசம்பந்தர் தேவாரம் நம்மனோர்க்குத் தெளிவுறுத்தும் கருத்து. வழிபாட்டுப் பயனாகவும் இவற்றைக் கொள்ளலாம்.

# 87. செல்வத்துள் செல்வம்

மு. அம்பிகாபதி, மதுரை.

'குன்றுடையானைக் கூற என்னுள்ளங் குளிரும்மே' - சம்பந்தர்

உலகில் தோன்றிய உயிர்கள் யாவும் துன்பம் நீங்கி இன்பம் பெற விரும்புதல் இயற்கை. அவ்வுயிர்கள் பெறுவதற்கரிய மானிடப்பிறவி எடுத்ததன் பயன், 'பேரின்பப் பெருவாழ்வு' பெறுதலேயாகும். அப்பேரின்ப பெருவாழ்வுதனைக் கண்டிட, இன்பப் பொருளாம் இறைவனை அடைய, உயிர்கள் கடைப்பிடித்து ஒழுகவேண்டிய பெருவழி, அறவழி 'சமயம்' ஒன்றே.

ஒருவர்க்கு உடல் வளர்க்கும் உணவை அளிப்பதினும், உள்ளத்தைச் செம்மைப்படுத்தும் கல்வியறிவுதனை ஈவதினினும், பேரின்பம் பெற உதவும் நல்லொழுக்க சமயநெறியினைக் கற்றுத் தருவதே சாலச்சிறந்தது. சாதி, மொழி, இனம், நாடு என்று பிரிந்து கிடப்பவரைச் சமயம் ஒன்றே ''ஒன்று'' சேர்க்கின்றது.

**எது சமயம்?**

எவ்வுயிர்க்கும் தீங்கு செய்யாத தன்மையராய், தன்னுயிர் போல் மன்னுயிர் காத்து நன்மை செய்வதனைக் கற்றுத் தருவதே 'நல்லறம்', அந்நல்லறத்தின் வழி நிற்பதே நற்சமயம்!

**''அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்**
**செந்தண்மை பூண்டொழுக லான்''** (குறள்-30)

என்று வள்ளுவர் வரையறுப்பதும் இதனாலன்றோ? எனவே குலத்தால் அல்லாது குணத்தால் மட்டுமே ஒருவர் உயர்நிலை பெறமுடியும். அப்படிப்பட்ட நன்னிலையைப் பெற வழிகாட்டிய, துணைநின்ற தமிழ்ச் சான்றோர்கள், சமயக்குரவர்கள் பலர். அவர்களுள் தனக்கென ஒரு தனியிடத்தைப் பெற்றிருப்பவர்,

**''வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத்துறை விளங்கப்**
**பூதபரம்பரை பொலிய புனிதவாய் மலர்ந்தழுத**
**சீதவள வயற்புகலித் திருஞானசம்பந்தர் ஒருவரே!.''**

**வந்தார் ஞானசம்பந்தர்**

சமயப் பிணக்குகளால் சிக்குண்டு, சமண முனிவர்களால் சிதை வுண்டிருந்த தமிழக மக்கள் முன்னே, அவர் தம் நெஞ்சத்து இருள் அகற்ற பிறந்த அறிவுச்சுடரொளியே சம்பந்தர். கரவொன்றும் அறியா பச்சிளம் பாலகனாய்ப் பரம்பொருளின் பெறலரும் ஞானப்பாலமுது உண்டு, நற்கருணைத் தேனுண்டு தான் பெற்ற பேரின்பப் பெரு வெள்ளத்தைப் பிறரும் மாந்தி மகிழ, தன் சிறுவாய், திருவாய் மலர்ந்து புகன்ற பெருஞ்சொற்களே அவர்தம் திருமுறை 'தேவாரப் திருப்பதிகங்கள்'.

சம்பந்தரின் பெருமை பேசும் சேக்கிழார், 'முற்பிறவியிலும் சிவனை நாடித் தவம் புரிந்ததோடு, சிவனின் திருக்குமரனைப் போல் புவியில் வந்து தோன்றினார்' எனப் பாடுகின்றார்.

இதனை,

**''பண்டு திருவடி மறவாப் பான்மையோர்''**

**''தம்மேலைச் சார்புணர்ந்தோர்''**

**''இறைவர் திருமைந்தர் தமையெதிர் கோளேற்றார்''**

என்பதால் உணர்ந்து கொள்ளலாம். இவ்வாறு சிவனருள் பெற்று சிவமைந்தனைப்போல் பழகு தமிழ்ச்சொல் எடுத்து அமுதமொழி ஏந்திப் பண்பாடிய ஞானசம்பந்தர், தம் பாடல்களுள், செல்வத்துள் சிறந்த செல்வம் எது? எனப் பார்க்கின்றார். அது சிவனின் 'திருவடி தரும் திருவருளே' எனக் கண்டு உரைக்கின்றார்!.

சொற்றுணை வேதியன், சோதி வானவனின் நற்றுணை நாடிப் பாடிய நாவுக்கரசரினும், அம்மானாய் வந்து நின்றருளிய பெம்மானைப் ''பித்தா'' என்றழைத்திட்ட பேரழகர் சுந்தரரினும், கற்குந்தோறும் கசிந்துருகும் வண்ணம் ''தேவாரப்பா'' ஆரத்தைத் தில்லை அம்பல வாணனுக்குச் சூடி மகிழ்ந்தவர் நம் ஞானக் குழந்தையாம் ஞானசம்பந்தரே.

நாவுக்கரசரும் சுந்தரரும் தம் வினைப்பயன் நீங்க, ''என் உள்ளம்'' ''என்வினை'' ''எனக்கருளேன்'' என்றும் பாடி இருக்கின்றார்கள். ஆனால் பால்மணம் மாறா பச்சிளம் பாலகர் சம்பந்தரோ, முதல் பதிகத்தில் தன்னிலைப்படுத்தி, இறைவன் பெருமை கூறிப் பாடி நின்றிருந்தாலும், பின்னர் பாடிய பதிகம் பெருமவற்றில் அடியவர் அனைவர் சார்பாகவே நின்று, அருள்வேண்டிப் பாடுகின்றார். இறைவன் திருவருளை, அழகை எடுத்தோதுகின்றார். இதனாலன்றோ சம்பந்தர் பாடல்கள் சந்தமிக்க இசைப்பாடல்களால் எங்கும் ஒலித்துக் கொண்டிருக்கின்றன இன்றும்!

**நாவுக்கரசரின் பாடல்கள்**

சமணராய் இருந்து சூலைநோய் ஆட்கொண்டு தமக்கை திலகவதியார் வேண்டலால் சிவனாரால் தடுத்து ஆட்கொள்ளப் பெற்றவர் நாவுக்கரசர். மகேந்திரவர்ம பல்லவனால் அவர்கொண்ட துயர்கள் சொல்லி மாளாது. அதனால் தாம் என்னவோ அப்பரின் அமுதப்பாக்களில் அரற்றல் கலந்த 'தன்குறை கூறல்' 'தன்பயன்வேட்டல்' எனும் தாகக் குரலே அதிகமாய் ஒலிக்கின்றது.

''கூற்றாயினவாறு விலக்ககிலீர்
..................................
பிரியாது வணங்குவன் எப்பொழுதும்
தோற்றாது என் வயிற்றின் அகம்படியே
குடரோடு துடக்கி முடக்கியிட
ஆற்றேன் அடியேன்''

''புழுவாய் பிறக்கினும் புண்ணியா, உன்னடி என் மனத்தே
வழுவாதிருக்க வரந்தரல் வேண்டும்''

''தன்னைச் சரண் என்று தாளடைந்தேன்
......... ....... ......
என்னைப் பிறப்பறுத்து என்வினை கட்டறுத்து, ஏழ்நகரத்து
என்னைக் கிடக்கவொட்டான் சிவலோகத்த(து) இருந்திடுமோ''

''....... கூற்றம் குமைப்பதன்முன்
பூவார் அடிச்சுவடு என்மேல் பொறித்துவை''

''................................. பிஞ்ஞகன்பேர்
மறப்பன்கொலோ? என்று என்னுளங் கிடந்து மறுகிடுமோ''

''உன்பாதம் காண்பதற்கு உருகிற்று என்உள்ளம்''
உன்னை நினைந்தே கழியும் என்ஆவி''

''கற்பகமேயான் உன்னை விடுவேன் அல்லன்''

எனப் பலவாறாய்ப் பாடி, பணிந்து பரிதவித்து வேண்டுகின்றார். என்செய்வது ஈசனின் திருவுள்ளமன்றி நாவுக்கரசரை இவ்வாறு நவில வைத்தது வேறு எது?

தன்குறை கூறல், தன்நெஞ்சுக்கு அறிவுறுத்தல் (உபதேசம்) உலகுக்கு அறிவுறுத்தல் என்று நின்று உருகிப்பாடி, ஈசனின் அருள் நெஞ்சை அறிவதற்கும் தெளிவதற்கும் அவர்க்குச் சற்றே நாளானது. வெட்ட வெட்ட தழைக்கும் கருவேல மரத்தைப் போல வாழ்க்கைத் துயர்கள் அவரைக் கொட்ட கொட்ட, பின்னரே அவர் தெளிந்து நிற்கின்றார்! சிவனருள் கலந்து நிற்கின்றார்!

''நாமார்க்கும் குடியல்லோம், நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்பாடோம், நடலை இல்லோம்
ஏமாப்போம், பிணியறியோம், பணிவோம் அல்லோம்,
இன்பமே எந்நாளும் துன்பமில்லை''

எனத் தன்னம்பிக்கை முரசை உலகில் அன்றே தட்டி முழக்குகின்றார்.

**சுந்தரரின் சொல்மாலை**

''மணநாளில் வந்து மயக்கறுத்தவனை பின் எவ்வாறு
வேண்டுவார்?''

''பித்தா! பிறைசூடி பெருமானே அருளாளா
எத்தான் மறவாதே நினைக்கின்றேன் மனத்து உன்னை''

என்றவர்,

''அன்னே உன்னையல்லால் இனி யாரை நினைக்கேனே''
''பொன்னும் மெய்ப்பொருளுந் தருவானைப்
............... ............... .............
பின்னை என்பிழையைப் பொறுப்பானை''

''திருவும் மெய்ப்பொருளும் செல்வமும் எனக்குஉன்
சீருடைக் கழல்களென்று எண்ணி
..............................
ஊடியும் உறைப்பானாய்த் திரிவேன்''

என்று பற்பல இடங்களில் ''தன்மயக்கம் குறை தீர'' வேண்டும் என்று வேண்டுகின்றார். பின்னரே படிப்படியாக பரிமளிக்கின்றார். நெஞ்சுக்கு அறிவுறுத்தி உலகுக்கு அறிவுறுத்தி பாக்களால் ஞாலத்தை நல்வழிப் படுத்தும் ஞானமிகு புலவர்களுக்கும் அறிவுறுத்தி ஈசனின் வடிவை, அழகை, உயர்வை, தலப்பெருமைகளைப் பாடி மகிழ்கின்றார். ஒருவருக்கு இருவராய்த் துணைவியரை ஈசன் அருளால் இணையப் பெற்றதால்தான் என்னவோ அசதியாடல் வழி ஈசனோடு ஊடி நாடி, பின் இறுதியில் கூடியும் நிற்கின்றார்.

**ஞான ரதமேறி வந்த ஞானசம்பந்தர்**

நடைவளரும் முன்னே ஞானத்தை வளர்த்தவரல்லவோ ஞான சம்பந்தர். அவரின் முதல் பதிகம் என்னவோ 'என்உள்ளங் கவர்கள்வன்' என்று உருகித்தான் நிற்கின்றது. அப்படி உருகி நிற்கும் வேளையிலும் அப்பரைப் போல் 'என் குடற்நோய் தீரேன்' என அரற்றாது, சுந்தரரைப் போல 'பித்தா' எனப் பேசாது தோடுடைய செவியன் என அம்மையப்பனாய்க் காட்சிகாணும் அகக்கண் உடையவராய் ஏடுடைய மலரானுக்கு அருள் செய்த ஈசன், 'மானிடர்க்காய் பிரம்மபுரம் எனும் மண்ணில் வந்து

மேவியுள்ளான்'' என மகிழ்கின்றார். மேலும் ''குன்றுடையானைக் கூற என்னுள்ள குளிருமே'' என்றும் மகிழ்கின்றார். மகிழ்வு கொண்ட நெஞ்சத்திற்கு,

**''நீ நாளும் நன்னெஞ்சே' நினைகண்டார் யாரறிவார்**

**........ ......... ..........**

**நாநாளும் நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே''**

என்று நல்வழி காட்டுகின்றார்.

'நாள்மலர் இட்டுத்தொழுது, கழல் போற்றி ஆளாய அன்பு செய்தால், கேடுபடா திறமருளி கோளாய நீக்குமவன் கோளிலி எம்பெருமான்' என நம்பிக்கை விதை விதைக்கின்றார். ''நாள் என் செய்யும் கோள்தான் என்செய்யும் எனக் கோளறு பதிகம் பாடியதோடு 'மக்கள் நல்லவண்ணம் வாழலாம்' என்று நவில்கின்றார். பிணிக்கு மருந்தாய், அன்புடை அடியார் திருநீறு அணிந்த அளவில் சிவனருள் கிடைக்குமென சீர்மை மொழி புகழ்கின்றார். வெண்ணீறு அணிவதற்கு காலமோ இடமோ கிடைக்காது போனாலும், நல்லவர் தீயவர் எனாது நச்சினார் சொல்ல, நம்மைக் கொல்ல நமன்தமர் கொண்டு போமிடத்தும்.

**''அல்லல் கெடுப்பன அஞ்செழுத்துமே''**

என்கின்றார்.

நான், யான், எனது என்று ஓரிரு பதிகங்களில் பாடும் சம்பநதர் பெரும்பான்மையான பதிகங்களில் யாம், எம், நம் என்று பன்மை நிலையில் நின்றே பாடுகின்றார்.

நாளும் இன்னிசையால் தமிழ்பாடி ஞாலம் உய்ய இவ்வாறு ஞானசம்பந்தருக்கு நல்வழி காட்டும் வள்ளன்மை எவ்வாறு கிட்டியது? யாரால் கிட்டியது? அனைத்துக்கும் முன்தோன்றி இந்த அகிலமனைத்தையும் காத்துநிற்கும் அனல் ஏந்தி ஆடும் ஆடலரசாலன்றோ? பல்லாண்டு வாழவைத்து, பன்முறை சோதனைக்கு ஆட்படுத்தி அதன் பின்னரன்றோ அப்பரை 'தாசமார்க்கத்தில்' தன்பால் ஆட்கொண்டான் தஞ்சைப் பெருவுடையான். திருமண வேளையிலே கடனாளி நீயென்று சுந்தரரிடம் சொல்வழக்காடி அதன்பின்னர் தானே 'சன்மார்க்கத்தில்' சந்துசெய்வித்துக் கொண்டான். ஆனால் இவ்விருவர்க்கும் போல் இல்லாது மழலைவாய் முற்றிலுமாய் மலருமுன்னரே ஞானப்பாலைத் தனியே வந்து தராது, தாய் உமையம்மையோடு வந்து தந்தருளி, 'சத்புத்ர மார்க்கத்தில் சம்பந்தருக்கு அருள் செய்தார் அம்பலவாணர். அதனாலன்றோ வாழ்க்கைத் துன்பத்தில் உழலாது சிவனின் வடிவை, பெருமையை, அழகை, அருளை அனைவரும் அறியப் பாடி சமணரை சைவத்தால் வென்று, சங்கரனின் சமர்த்துப் பிள்ளையானார் சம்பந்தர். எத்துணைப் பெரிய

செல்வராயினும் அவர் வைத்திருக்கும் செல்வமெல்லாம் உண்மைச் செல்வமல்ல.

**''செல்வர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய**
**செல்வன் கழலேத்தும் செல்வம் செல்வமே''**

என்கின்றார். சம்பந்தருக்கு இதனாலன்றோ எவ்வடியார்க்கும் இல்லா வகையில் முத்துப்பந்தரும் முத்துச்சிவிகையும், பொற்றாளமும், பொற் கிழியும் புகழுடன் வந்தது. எனவே பற்றற்ற இறைவன்பால் பற்றுவைத்து, ''பண்ணிசையால் பாடிப் பரவிய பாலறாவாயர் நமக்குக் (சைவத்திற்கு) கிட்டியது செல்வத்துள் செல்வமே!

**''ஆழ்க தீயது, எல்லாம் அரன் நாமமே**
**சூழ்க, வையகமும் துயர் தீர்கவே''** - சம்பந்தர்

# 88. சம்பந்தர் பாடல்களில் வழக்காற்றுக் கூறுகள்

கு. கதிரேசன், திருச்செந்தூர்.

கவிஞர் தம் படைப்புகளில், அக்கால மக்களின் வாழ்க்கையையும் பண்பாட்டுக் கூறுகளையும் படம் பிடித்துக் காட்டும் தன்மை இயல்பான, தவிர்க்க முடியாத பணியாக அமைந்து விடுகிறது. தாம் வாழ்ந்த காலத்து மக்களின் சமூக நிலையையும் வழக்காறுகளையும் காலம் காலமாகப் பின்பற்றப்பட்டு வரும் மரபுகளையும் சமகால இலக்கியங்கள் பிரதிபலித்துக் காட்டுகின்றன. அதனால்தான் இலக்கியங்கள் வாழ்க்கையைக் காட்டும் கண்ணாடி என்கின்றனர். எனவே இலக்கியங்களை ஆராய்வதன் மூலம் சமகாலத்து மக்களின் வாழ்க்கை பண்பாடு, படைப்பாளனின் இயல்பு ஆகியவற்றை இனம் காண முடியும். இதன் மூலம் பல புதிய வரலாற்றுப் பதிவுகளும் செய்திகளும் வெளிப்படுவதற்கான சூழல் உருவாகும். இக்கருத்தாக்கப் பின்னணியில் திருஞானசம்பந்தர் தேவாரப் பாசுரங்களை ஆராய்ந்து அறியும் முயற்சி மேற்கொள்ளப்படுகிறது. இதனால் பல புதிய செய்திகள் வெளிப்படும். இந்தப் பின்னணியில் திருஞானசம்பந்தர் பாடல்களில் காணப்படும் நாட்டுப்புறக் கூறுகளை இனம் கண்டு ஆராய்ந்து அறியும் நோக்கிலும் பல புதிய செய்திகளைப் பதிவு செய்யும் நோக்கிலும் இக்கட்டுரை அமைந்துள்ளது.

திருஞானசம்பந்தர் தம் பக்தி நெறியை அக்கால மக்களிடையே வழக்கிலிருந்த நாட்டுப்புற கலை, இலக்கியப் பண்பாட்டுக் கூறுகளுடன் தொடர்புபடுத்தி, அவற்றை உள்வாங்கி உட்படுத்தியிருக்கும் தன்மையைக் காண முடிகிறது. அக்காலத்தில் வழக்கிலிருந்த இசை, நடனம் உள்ளிட்ட கலை வடிவங்களைத் தம் பக்திப் பாசுரங்களுக்கு உதவியாகப் பயன் படுத்தியிருக்கும் தன்மையைக் காணமுடியும். திருநீலகண்ட யாழ்ப் பாணருடன் அவர்க்கு ஏற்பட்ட தொடர்பினால் மேற்குறித்த கருத்தினை விளங்கிக் கொள்ளலாம்.

''திருநீலகண்ட யாழ்ப்பாணர் சம்பந்தரின் திருப்பாடல்களுக்கு யாழ் இசை அமைப்பதை மிகப் பெரும்பேறாகக் கருதினார். இதனால் பாணரின் உறவினர்கள், ''சம்பந்தர் பாட்டுச் சிறப்புக்கு உம் யாழ்வாசிப் பல்லவா காரணம்'' எனக் கூறினார். அதைக் கேட்ட பாணர் பதைபதைத்து நின்று யாழிற்கு அடங்காத ஒரு பதிகம் பாட வேண்ட சம்பந்தரும் ''மாதர் மடப்பிடியும்'' எனத் தொடங்கும் பதிகத்தைப் பாடினார்,

என்னும் செய்தி மூலம் அக்காலத்தில் யாழ் என்னும் இசைக்கருவியைப் பக்திப் பாசுரங்களைப் பாடப் பயன்படுத்திய பாங்கும் இசையின் இயல்பும் சித்திரித்துக் காட்டப்படுகிறது. அதோடு இத்திருப்பதிகத்தை யாழில் வாசிக்கச் சபதமேற்று, அது முடியாமையினால் யாழை உடைக்க முயன்ற பாணரைச் சம்பந்தர் தடுத்து நிறுத்தி, ''ஏழிசையாய் உள்ள எம்பெருமான் திருப்புகழை எவ்வாறு கருவியில் கட்டுப்படுத்த முடியும்... எனக் கேட்டு உணர்த்தி வாழ்த்தினார். அதன்பின் பாணர் யாழில் இசைத்துப் பாடினார்'' என்னும் செய்தி இசையின் இயல்பையும் பண்டைக் காலம் தொட்டு இருந்து வந்த இசையின் வகைகளையும் விளக்குகிறது. பாணருக்குப் பண் இசைக்கும் தொழில் குலத்தொழிலாகும். தம் குலத்தொழிலான பண் அமைத்துப் பாடிப் பணம் பெறும் நாட்டுப்புறப் பண்பாட்டு மரபு இதில் ஊடுருவியிருப்பதை இனம் காண முடிகிறது.

ஆற்றுப்படை நூல்களில் நக்கீரர் இயற்றிய திருமுருக்காற்றுப்படை திருமுருகனிடம் அருள் வேண்டி ஆற்றுப்படுத்திய பெருமை உடையது. மற்ற ஆற்றுப்படை நூல்கள் எல்லாம் பொருள் வேண்டி ஆற்றுப்படுத்த திருமுருகாற்றுப்படை மட்டும் அருள் வேண்டி ஆற்றுப்படுத்திய தன்மையைப் பண்டைத் தமிழ் இலக்கியங்கள் வழி அறியலாம். இந்தப் பின்னணியில் திருஞானசம்பந்தரும் திருநீலகண்ட யாழ்ப்பாணரும் யாழ் வாசித்துப் பண்ணிசைத்துப் பாடி நின்ற தன்மையை ஆராய்ந்து பார்த்தால் ஓர் உண்மையை இனம் காணலாம். பொருள் நோக்கமின்றி அருள் நோக்கத்துடன், இறைவன் பெருமையைப் பறைசாற்றும் திருநோக்கத்துடன் ஞானசம்பந்தர் யாழ்ப்பாணருடன் பாடிச் சென்ற நோக்கு நக்கீரர் பெருமானின் அருள் நோக்குடைய திருமுருகாற்றுப்படை இலக்கிய நோக்குடன் ஒப்பிடத்தக்கது. இக்கருத்து உண்மை. பின்வந்த கவிஞர்களின் இதயத்தை மிகவும் பாதித்து ஆளுமை செய்தது. அதற்குப் பல சான்றுகளைக் கூறலாம்.

**''நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன்''**

என்னும் பாடல் அடி மேற்கூறிய கருத்தினை உறுதி செய்ய முடியும்.

இசை எழுத்தால் இசைக்கேற்ற அசைவுகளும் இயக்கங்களும் எழுவது இயற்கையே. இசைக்கேற்ப நிகழ்த்தும் ஆட்டம் தவிர்க்க முடியாதது ஆகும். இசைக்கு மயங்காதவர்கள் யாருமில்லை. இசைக்கேற்ப தாவரங்கள், செடிகள், கொடிகள், ஊர்வன, பறப்பன, விலங்குகள், மனிதன் முதலிய அனைத்தும் இயங்கும் தன்மை உடையவை.

**''இசை கேட்டால் புவி அசைந்தாடும்''**

எனும் திரைப்படப் பாடல் அடி இசைக்குப் பூமியே ஆடும் தன்மையது எனச் சுட்டுகிறது. நடிப்பும், பாட்டும் இணைந்தே நாடகம் என்னும்

நிகழ்த்து கலை பரிணாமம் பெற்றது. பரம்பொருளாகிய பரமன் கூட நந்தியின் மிருதங்க இசைக்கு நர்த்தனம் ஆடி இவ்வுலக உயிர்களைக் காத்து அருளும் பணியைச் செய்கிறார். இறைவனும் உடுக்கை என்னும் இசைக்கருவியை இசைத்துக் கொண்டே ருத்திர தாண்டவம் ஆடிய தன்மையைப் புராணங்கள் குறிப்பிடுகின்றன. இசையும், நடனமும் ஒரு நாணயத்தின் இரு பக்கங்களாக விளங்கத் தக்கவை. இக்கருத்தாக்கப் பின்னணியிலேயே திருஞானசம்பந்தர் தமிழ் இசைப் பாடலுடன் வந்தபொழுது அங்கு ஆட்டம் தானாக நிகழத்தொடங்கியது. எனவே சம்பந்தர் இசைப்பாடல் நிகழ்வுகள் ஆட்டத்துடன் இணைந்து வெளிப்படும் சூழலை உருவாக்கிய தன்மை புலப்படும். இத்தகைய ஆட்டத்தில் அக்கால நாட்டிய மரபுகள், அமைப்புக் கூறுகள் இயல்புகள் முதலியவை வெளிப்படுவது இயல்பான பண்பானது. இப்பண்புகள் அக்காலப் பாமர மக்களின் நாட்டுப்புற நிகழ்த்துக் கலைக் கூறுகளின் வெளிப்பாடாகவே அமைந்திருக்க முடியும். எனவே இப்பண்புகளை ஆராய்ந்தால் சம்பந்தர் நிகழ்த்திய தமிழிசைப் பாடல்களுடன் இணைந்த ஆட்ட மரபுகளை இனம் காணலாம். அது அக்கால மக்களின் கலை வெளிப்பாட்டு மரபின் வெளிப்பாடாகவே அமையும்.

இரவு மடத்தில் திருஞானசம்பந்தருடன் துயில் கொண்டிருந்த நாவுக்கரசர் இறைவன் அழைப்பதாய் அறிந்து திருவாய்மூர் செல்ல, சம்பந்தர் எழுந்து ''அப்பரடிகள் எங்கே? '' எனத் தேடினார். அப்பர் சுவாமிகள் சென்ற இடத்தைத் தெரிந்து கொண்ட ஞானசம்பந்தர், அவரைத் தேடி திருவாய்மூர் சென்றார். அப்பொழுது அப்பர் சுவாமிகள்,

**திறக்கப் பாடிய என்னினும் செந்தமிழ்**
**உறைப்புப் பாடி அடைப்பித்தார் உந்நின்றார்**
**மறைக்க வல்லரோ தம்மைத் திருவாய் மூர்ப்**
**பிறைக்கொள் செஞ்சடையாரிவர் பித்தரே!**

எனப் பாடி, வாய்மூர் பெருமானே! உன் சதுர் ஆட்டமெல்லாம் என்னிடம் தான் செல்லும். மறைக்கதவம் திறக்கப் பாடிய என்னைவிடவும் தீந்தமிழில் உறுதி பொருள் பாடி அடைப்பித்த அருட்செல்வர் உம் எதிரே வந்து நிற்கிறார். பிறை சூடிய பித்தனே! இப்பொழுது உம்மை மறைத்துக் கொள்ளும் வல்லமை உமக்கு உண்டா? காட்டு. உன் அருட்காட்சியைக் காட்டு என வேண்டுகிறார். இக்கருத்து மூலம் இசைப்பாடல் கேட்டு இறைவனே ''சதுர்'' என்னும் ஆட்டத்தை நிகழ்த்திய தன்மை புலப்படுகிறது. இச்சதுர் ஆட்டமே பின்பு பரத நாட்டியமாகப் பரிணமித்தது என்பது அறியத் தக்கது. நாவுக்கரசர் பெருமானின் வேண்டுதலை ஏற்ற திருவாமூர் இறைவன் சம்பந்தர் முன்தோன்றி ஆடிக் காட்டினான். இத்தன்மையை,

**''தளரிள வளரெனவுமைபாடத் தாளமிடவோர் கழல் வீசிக்**
**கிளரிள மணியரவ மாரயார்த் தாடும் வேடக்கினிமையார்**

விளரிள முலையவர்கருள் நல்கி வெண்ணீறணிந்தோர் சென்னியின் மேல்
வளரிள மதிய மொடிவராணீர் வாய் மூரடிகள் வருவாரே''

என்னும் பாடல் வழி அறியலாம். இக்கருத்தாக்கங்கள் மூலம் அக்கால நாட்டுப்புறப் பாமர மக்களின் இசை-நடனம் ஆகிய கூறுகளை ஞானசம்பந்தர் இறைவனுடன் இணைத்து வெளிப்படுத்தியிருக்கும் தன்மையை விளங்கிக் கொள்ள முடியும்.

தில்லைமூதூர், உயிர்கள் உய்யும் பொருட்டு இறைவன் ஐந்தொழில் நாடகம் இயற்றும் பேரரங்கமாக விளங்குகிறது. இதனால் அப்பகுதியில் தங்குவதற்கு அஞ்சிய ''ஞானசம்பந்தர்'', அதன் கிழக்கே உள்ள திருவேட்களத்தைத் தாம் தங்கியிருக்கும் இடமாகக் கொண்டு நாள்தோறும் கூத்தர் பெருமானை வணங்கி வந்தனர். அங்கு திருக்கழிப் பாலை, திருநெல்வாயில் திருவுச்சி (சிவபுரி) ஆகிய தலங்களை வணங்கிப் போற்றினார்''. இத்தன்மை இறைவன் ஆடிய ஆட்டத்தை நினைவுபடுத்துவது போல் உள்ளது. இந்நிகழ்வு அக்கால மக்களின் கலை இலக்கியப் பண்பாட்டு மரபாக வெளிப்படுத்துவதைக் காண முடிகிறது.

4286 செய்யுட்களையுடைய திருத்தொண்டர் புராணத்தில் திருஞானசம்பந்தர் வரலாறு மட்டும் 1256 செய்யுட்களால் ஆனது. ஞானசம்பந்தரின் பக்தியும், ஆளுமைப் பின்புலமும் பற்றியே சேக்கிழார் ஞானசம்பந்தருக்கு மிக முக்கியத்துவம் கொடுத்தார். இத்தன்மைகளினாலேயே 'பிள்ளை பாதி புராணம் பாதி' என்னும் பழமொழி வழங்கப்பட்டு வருகிறது. நாட்டுப்புறப் பாமர மக்களிடம் வழக்கிலிருக்கும் இப்பழமொழி ஞானசம்பந்தருக்கும் நாட்டுப்புற மக்களின் புராணக் கதைகளுக்கும் உள்ள நெருக்கமான தொடர்பினை உணர்த்துவதாய் அமைகிறது.

குழந்தை பிறந்த பத்து நாட்களும் குழந்தைக்குப் பல்வேறு சடங்குகளைச் செய்து மகிழும் நிலையைச் சம்பந்தர் பாடல்வழி (1043) அறியலாம். ஞானசம்பந்தர் தம் ஏழாவது வயதில் சீர்காழியில் இருந்த பொழுது பிறப்பில்லா சிவஞானம் பெற்றார் சம்பந்தர். அவருக்கு வேதியர்கள் தம் குலத்தின் இருபிறப்பு நிலைமையினைச் சடங்குகள் கொண்டு நிகழ்த்திய உபநயனச் சிறப்பினை உலகியல் முறைப்படி செய்தனர். மான் தோலுடன் அமைந்த முப்புரி நூலினை அணிந்து மறை நான்கும் தந்தோம் என்று மந்திரங்கள் கூறிய மறையோர்களுக்குச் சம்பந்தர் தம்முடைய புனித வாக்கினால் நினைத்ததற்கரிய வேதங்களை ஓதி அருள் செய்தார். மறையோர்களுக்கு ஏற்பட்ட ஐயப்பாடுகளை நீக்கி வைத்தார்.

''துஞ்சலுந் துஞ்ச லிலாத போதினும்''

என்னும் பஞ்சாக்கரத் திருப்பதிகத்தினைப் பாடி மந்திரங்களுக்கெல்லாம் மூல மந்திரமாவது ஐந்தெழுத்து மந்திரமே என்னும் உண்மையை உணர்த்தினார். இதனை,

''மந்திர நான்மறை யாகி வானவர்
சிந்தையுள் நின்றவர் தம்மை யாள்வன
செந்தமி லோம்பிய செம்மை வேதியர்க்
கந்தியுள் மந்திரம் அஞ்செ முத்துமே''.

என்னும் பாடல் வழி அறியலாம். நான்மறை வல்ல வேதியர் யாவரும் ஓத வேண்டிய மந்திரம் ''சிவாய நம'' என்னும் ஐந்தெழுத்து மந்திரமே என்னும் செய்தி இதன்வழி அறியலாகிறது. இப்பண்பாட்டு மரபு அக்கால அந்தணர்களிடம் வழக்கிலிருந்த சடங்கு முறையினை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது. இதன் மூலம் அம்மக்களின் சடங்கு நிலையை விளங்கிக் கொள்வதுடன் பாமர மக்களின் பற்றுக்கோடான ஐந்தெழுத்து மந்திரத்தின் இயல்பையும் விளங்கிக் கொள்ள முடிகிறது.

''துணிவளர் திங்கள் துளங்கி விளங்கச் சுடர்ச்சடை சுற்றிமுடித்து
பணிவளர் கொள்கையர் பாரிடஞ்சூழ ஆரிடமும்பலி தேர்வர்
அணிவளர் கோலமெல் லாஞ்செய்து பாச்சில் ஆச்சிராமத்
துறைகின்ற
மணிவளர் கண்டரோ மங்கை யைவாட மயல் செய்வதோ
இவர் மாண்பே''

என்னும் திருப்பதிகப் பாடல் மூலம் சம்பந்தர் இறைவனை வேண்டி மழவன் மகளின் முயலகன் நோய் தீர்த்த தன்மையை அறியலாம். இத்தகைய அருட்செயலை,

''மழவன் சிறுமதலை வான்பெருநோய் தீர்த்த
குழகன் குலமறையோர் கோமான்''

என்னும் நம்பியாண்டார் நம்பியின் வாய்மொழி மூலம் விளங்கிக் கொள்ள முடியும்.

''அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லு மஃதறிவீர்
உய்வினை நாடா திருப்பதும் உந்தமக் கூனமன்றே
கைவினை செய்தெம் பிரான்கழல் போற்றுதும் நாமடியோம்
செய்வினை வந்தெமைத் தீண்டப்பெறா திருநீலகண்டம்''

என்னும் பாடலை முதலாகக் கொண்டு தொடங்கும், திருப்பதிகத்தினைப் பாடி பனியென்னும் நோயை நீக்கும் மந்திரத்தைக் கூறினார் ஞானசம்பந்தர். வணிகனுடன் சென்ற கன்னியின் துயர் தீர்க்க எண்ணிய ஆளுடைய பிள்ளையார், இறைவனைத் தலைவனாகக் கொண்டு

அகப்பொருள் துறையமைந்துள்ள மந்திரத்தால் கன்னிப் பெண்ணின் மாமனாகிய வணிகன் உயிர்பெற்று எழுந்தான். இதனை,

''குவளைக் கருங்கட் கொடியிடை துன்பந்தவிர அன்று
துவளைத் தொடுவிடம் தீர்த்த தமிழன் தொகை செய்தவன்''

என்னும் திருச்சண்பை விருத்தம் விளக்குகிறது.

மேலும் இறைவனை வேண்டி முத்துப் பந்தல் பெற்றமை உலவாக்கிழி பெற்றமை, யாழ்மூரி பாடியமை உள்ளிட்ட பல அதிசயங் களை நிகழ்த்தினார் ஞானசம்பந்தர். அவரது இத்தகைய செயல்களினால் அக்காலச் சமுதாயத்தில் வழக்கிலிருந்த மந்திரித்தல் முறையையும் அதன் மூலம் பல அதிசயங்களை நிகழ்த்திய பாங்கினையும் வழிபாட்டு முறைமையையும் உய்த்துணர முடியும்.

வழிபாட்டு மரபு குறித்து ஆராயும்பொழுது ஞானசம்பந்தர் தம் வாழ்நாளில் உலகியலில் உழன்று வாழும் மக்கள் இனம் உய்வு பெற்று சிவனடிப்பேறு பெறுதற்குரிய எளிய வழியை அறிவுறுத்தியமையைக் காணலாம். ''திருமுடிமேல் நீர் கொணர்ந்து ஊற்றி மலரிட்டு வணங்குங்கள் என்றும் சற்று விரிவாகச் செய்ய வேண்டுமானால் பால் நறுநெய், பழம் இவற்றால் பெருமானை முழுக்காட்ட வேண்டும் என்றும், ஆடவரும், பெண்டிரும் கூடி நின்று வழிபாடு செய்யலாம் என்றும் வழிபாட்டு முறையை எடுத்துரைக்கிறார் ஞானசம்பந்தர் பெருமான்.

''பொன்னியல் நறுமலர் புனலொடுதூபம் சாந்தமும் ஏந்திய கையினராகி
கன்னியர் நாடொறும் வேடமே பரவும் கழுமலம்
தடங்கொண்டதோர் தாமரைப் பொன் முடிதன்மேல்
குடங்கொண்டடியார் குளிர்நீர் சுமந்தாட்ட கொண்டிருந்தான் கிடை மருது
பாலினால் நறுநெய்யாற் பழத்தினால் பயின்றாட்டி
நூலினால் மாலை கொணர்ந்தடியார் புரிந்தேத்த
நறைகொண்ட மலர் தூவி விரையளிப்ப நாடாலும்
முறைக் கொண்டு முப்பிமே பணி செய்ய
மாதரோடும் ஆடவர்கள் வந்தடி யிறைஞ்சி நிறை மாமலர்கள் தூய
முரல்கின்ற கோகரணம்''

என்னும் தொடர்கள், ஆண், பெண் என்னும் வேறுபாடு இன்றி ஆலயம் சென்று அந்தணர் துணையின்றி கருவறையில் புகுந்து வழிபாடு செய்யும் தன்மையை எடுத்துரைப்பனவாக அமைகின்றன. இது ஞானசம்பந்தர் குறிப்பிடும் அக்கால மக்களின் வழிபாட்டு வழக்காறு ஆகும். ''பண்டைத் தமிழர் இவ்வழிபாடே தவம் என வழிகாட்டியருளினார்'' என்னும்

கருத்து (த. விசுவநாதன்: 1990: தமிழ்ஞான சம்பந்தர்: 83) மேற்குறித்த சம்பந்தர் பெருமானின் வழிபாட்டு நெறியை உறுதி செய்கிறது. இவ்வழக்காறு அக்கால மக்களின் வாழ்வியல் பண்பாட்டு மரபின் வெளிப்பாடே ஆகும்.

மதுரையில் சமணர்களை வாதிட்டு வெல்ல சீர்காழியிலிருந்து வந்த ஞானசம்பந்தரை விரட்டியடிக்க மந்திரத்தினால் மடத்திற்குத் தீ மூட்டினார். அதனை அறிந்த சம்பந்தர், சைவர்வாழ் மடத்து அமணர்கள் இட்ட 'தீ' போய்ப் பையவே சென்று பாண்டியனைச் சார்வதாகும் என ஏவினார். இதனை,

**செய்யனே திருவாலவாய் மேவிய**
**ஐயனே யஞ்ச லென்றருள் செய்யெனைப்**
**பொய்யரா மமணர் கொளுவுஞ் சுடர்**
**பையவே சென்று பாண்டியற் காகவே**

என்னும் திருப்பதிகப் பாடலால் அறியலாம். இத்தன்மை அக்கால சமூகத்தில் நிலவிய வாதிட்டு வெல்லும் நாட்டுப்புறப் பண்பாட்டு மரபை அடியொற்றி எழுந்தது என்னும் கருத்தாக்கத்திற்கு வரத் தோன்று கிறது. எரிந்த கட்சி எரியாத கட்சி என இரு பிரிவினர் ''மன்மதன் எரிந்தான்'' என்னும் புராணக் கதையை எரிந்தான் எனவும் எரிய வில்லை எனவும் வாதிட்டு வெற்றி பெறும் 'இலாவணி' என்னும் நாட்டுப்புற நிகழ்ச்சி கலையுடன் இணைத்து ஒப்பு நோக்கத்தக்கது. எனவே, இப்பண்பாட்டு மரபு ஞானசம்பந்தரின் வாய்மொழி இலக்கிய மரபை ஆளும் தன்மைக்குச் சான்றாக அமைகிறது.

மேலும், சம்பந்தர் பெருமானின் தேவாரப் பாசுரங்களிலிருந்து அக்கால சமூகத்தில் நிலவி வந்த சோதிடம் பற்றிய நம்பிக்கை, கோட்பாடு முதலியவற்றை அறியத் தருகின்றன. அக்கால மக்களிடையே சோதிட நம்பிக்கையும் அதைக் கடைபிடிக்கும் வழக்காறு ஆழமான இடம் பெற்றிருந்தமையும் புலனாகிறது.

**''வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்**
**மிக நல்ல வீணை தடவி**
**மாசறு திங்கள் கங்கை முடிமேல ணிந்தென்**
**உளமே புகுந்த அதனால்**
**ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி**
**சனிபாம் பிரண்டு முடனே**
**ஆசறு நல்லநல்ல அவை நல்லநல்ல**
**அடியா ரவர்க்கு மிகவே''**

என்னும் பாடல் மூலம் ஞானசம்பந்தர் வானியல் அறிவையும் சோதிடம் பற்றிய நம்பிக்கையையும் அதனைப் பின்பற்றும் மக்களின் பண்பாட்டு மரபையும் இடம் காண்பதுடன் அக்கால மக்களின் வாழ்வியல் நம்பிக்கை தொடர்பான உண்மையையும் இனம் காண முடியும்.

மேற்குறிப்பிட்ட சான்றுகள் வழி ஆராயும்பொழுது ஞானசம்பந்தர் பாடல்களில் அவர் சமகால மக்கள் வாழ்வியல் வெளிப்படுவதை இனம் காண முடிகிறது. அக்கால மக்களிடம் வழக்கிலிருந்த இசை, நாட்டிய மரபுகள், புராணக் கூறுகள், மந்திரம், சடங்குகள், விவாத முறை, வழிபாட்டு நிலை, சோதிட நம்பிக்கை உள்ளிட்ட பல்வேறு மக்கள் வழக்காற்றுக் கூறுகள் திருஞானசம்பந்தரின் பாடல்களில் வெளிப்படும் தன்மையை இக்கட்டுரை வழி அறிய முடியும். மேலும், இதுபோன்ற வாழ்வியல் பண்பாட்டு ஆய்வுக்கு இக்கட்டுரை துணை செய்வதாக அமையும்.

# 89. சம்பந்தர் படிமங்கள்

க. மோகன்ராஜ் ஸ்தபதி, சுவாமிமலை.

இந்தியாவில் தோன்றிய சமயங்கள் இறைவனை அருவமாகவும் உருவமாகவும் அருவுருவமாகவும் ஏதோ ஒரு வகையில் குறியீட்டை, உருவத்தை உருவாக்கிக் கொண்டு வழிபடுவதை அடிப்படையாகக் கொண்டுள்ளன. அவ்வாறு உருவம் அமைத்துக் கொண்டு வழிபடுவதற் கென்றே சிற்ப நூல்களும் தியான சுலோகங்களும் இலக்கணம் கூறுவது போல் அமைந்திருக்கின்றன. நம் தமிழ்நாட்டுச் சிற்பிகள் அனைவர்க்கும் வரப்பிரசாதமாக பல்வேறு நூல்கள் தோன்றியுள்ளதுடன் பரம்பரை நிலையில் அனுபவப் பிழிவாகவும் பல செய்திகள் நம்மிடம் உள்ளன. அந்த வகையில் அடியார் நிலையில் உள்ள ஞானசம்பந்தரின் படிமங்கள் செய்வது குறித்த சிறுகுறிப்பை இக்கட்டுரையில் காணலாம்.

இறை வடிவங்கள் குறித்த செய்திகளைச் சிவபெருமான் உமாதேவியார்க்கு உபதேசித்ததாகவும், பின்னர் நந்தியம் பெருமான், அகத்தியர், காஸ்யபர் எனத் தொடர்ந்து அச்செய்திகள் நம்மிடம் இன்று இறங்கி நூல்களாக உள்ளன. காஸ்யப சில்ப சாத்திரம், மயமதம், சிற்ப ரத்னாகரம், மனையடி சாத்திரங்கள், ஸ்ரீதத்வநிதி போன்ற நூல்கள் குறிப்பிடத்தக்கன. இத்தகு நூல்கள் பெருந்தெய்வங்களுக்கு உண்டான திருமேனிகளை வடிப்பதற்குத் துணை செய்வன.

ஆனால், அடியார்கள் என்பவர்கள் நம்மோடு வாழ்ந்து மறைந்தவர்கள், இறைக்காட்சிக்கும் அடியார் காட்சிக்கும் வேறுபாடு உண்டு. இறைக் காட்சியைச் சிலரே கண்டிருப்பர். ஆயின் அடியாரைப் பலரும் கண்டு, பழகி ஒன்றாகி வாழ்ந்திருப்பர். எனவே அவர்களை வடிக்கும்போது எல்லாச் சூழலையும் கருத்தில் கொள்ளவேண்டும். இச்சூழலில் நமக்குக் கை கொடுப்பன தியான சுலோகங்களே-பழைய திருமேனிகளே எனலாம்.

அறுபத்து மூவர் திருமேனிகளை வடிக்கும்போது சேக்கிழாரின் பெரியபுராணம் காட்டும் வரலாற்றுக் காட்சிகளை, பழைய கோயில் களில் காணப்பெறும் திருமேனிகளை, பிற அடியார்கள் போற்றிப் பாடிய பாடல்களையெல்லாம் நுண்ணிதின் ஆய்ந்து பழக்கப்படுத்திக் கொண்ட பின்பே அடியவர் திருமேனிகளைச் சமைக்க வேண்டும்.

## ஞானசம்பந்தர் படிமம்

அறுபத்து மூவரில் முதலிடம் பெறும் திருஞானசம்பந்தரின் திருமேனி கிட்டத்தட்ட எல்லாச் சிவன் கோயில்களிலும் கற்சிலையாகவும் ஐம்பொன் சிலைகளாகவும் இடம் பெற்றுள்ளது. கையில் தாளம் வைத்திருப்பது ஒன்றே அவரை உடனடியாக அடையாளம் காட்டும். சடா மகுடம், பாம்பு, மழு, மான் இவை எப்படிச் சிவனை அடையாளம் காட்டு கின்றனவோ அப்படி ஞானசம்பந்தருக்குரிய அடிப்படை அடையாளம் தாளமாகும்.

தாளம் இல்லாத ஞானசம்பந்தரின் திருமேனியும் உண்டு. ஞானப்பால் உண்டு, தந்தையாரின் அச்சுறுத்தலுக்குப்பின் பாலூட்டிய உமாதேவியைச் சுட்டிக் காட்டிய கோலத்தில் அது சமைக்கப் பெற்றிருக்கும் ''தோடுடைய செவியன்'' பாடுவதற்கு முற்பட்ட காட்சி. இதில் 3 வயது குழந்தைகளுக்கான ஆடையற்ற ஆயின் அணிகலன்களுடன் வலக்கையின் ஒருவிரலைச் சுட்டிக்காட்டும் சிறு நடன அமைப்புடன் திருமேனி அமைக்கப்படும். இது சில இடங்களில் தவறாக உணரப்பட்டு காளிங்க கிருஷ்ணன், நவநீதகிருஷ்ணன் எனப்பெயர் சுட்டப்பட்ட சூழலிலும் காணப்படும். தில்லி தேசிய பொருட்காட்சியிலும் இத்தகு தவறான அறிவிப்புடன் ஞானசம்பந்தர் திருமேனிகளைக் காணலாம். காரணம் இரண்டுக்கும் வடிவ ஒற்றுமைதான் என்றாலும் நுணுகி ஆராய்வர் இனம் கண்டுவிடுவர்.

ஆயின், திருக்கோலக்கா சென்ற பிறகு ஞானசம்பந்தருக்குத் திருத்தாளம் கிடைத்து விடுகிறது. எனவே அவரது கரங்களில் தாளம் கொடுக்கப்படுகிறது. தமிழிசையில் தலைநின்றவரல்லவா? ஆதலின் அவருக்குத் தாளம் அடையாளம். சிறு வயதாகவே இருந்தாலும் ஆடையணியாத பழக்கம் அமணர்களுக்கேயுரியது என்பதால் 3 வயது சம்பந்தருக்கும் ஆடை ஆபரணங்கள் இடம் பெறுமாறு செய்வதுதான் உத்தமம்.

நமக்குக் கிடைக்கின்ற வரலாற்றின் அடிப்படையில், தில்லையில் மூடிக்கிடந்த திருமுறைகளை வெளிக்கொணர்வதற்காகச் செய்யப் பெற்ற மூவர் வடிவமே முதலாகத் தோன்றுகிறது. குறிப்பாக திருஞானசம்பந்தரின் திருவுருவம் குறித்து அதற்குமுன் காணப்பெறவில்லை. எனவே இராஜராஜசோழன்தான் திருஞானசம்பந்தரின் திருவுருவைச் சமைத்த முன்னோடி எனலாம். பின்னர் வந்த இராசேந்திரன், குலோத்துங்கன், இராஜராஜன் பாண்டியர்கள் அனைவரும் அவரது திருமேனிகளைப் பெரிதும் போற்றிச் சமைத்துள்ளனர். குறிப்பாக, தாராசுரத்தில் உள்ள திருஞானசம்பந்தர் காட்சிகள் பெரிதும் சுட்டத்தக்கன. புதை பொருள்

களில் கிடைத்த செப்புத் திருமேனிகளிலும் ஞானசம்பந்தர் படிமங்கள் பலவாகக் கிடைத்திருக்கின்றன. இவை ஞானசம்பந்தர் பெற்றிருக்கும் ஏற்றத்தைக் காட்டுவன எனலாம்.

**சிற்ப நூல்களில் ஞானசம்பந்தர்**

புரச் சூடாமநோக் ஞாங்கம் பாலம் ஹராதிபூஷிதம்
திவ்யாம்பரதரம் ஸ்வர்ண தாளவாத்யகரம் சுபம்
ஈஷதுத்தித தக்ஷாங்க்ரிம் க்வணந்நூபுரமண்டிதம்
வந்தேஹம் த்ராவிடாசார்யம் ஞாநஸம்பந்தமந்வஹம்

அதாவது,

''தலையின் முன்புறத்தில் விளங்கும் அழகான கொண்டை யினால் கோபிக்கின்ற முகத்தையும் சரீரத்தையுமுடையவரும் குழந்தை வடிவமாக இருப்பவரும் முத்துமாலை முதலான ஆபரணங்களையுடையவரும் அழகான ஆடையை உடுத்தி யிருப்பவரும், (பரமேஸ்வரனால் அளிக்கப்பெற்ற) ஸ்வர்ணத் தாலான தாளத்தைக் கையில் வைத்திருப்பவரும் நன்மையைச் செய்பவரும் சிறிது தூக்கினாற்போல் வைத்துக் கொள்ளப்பட்ட வலது முழங்காலையுடையவரும் ஒளிக்கின்ற நூபுரத்தைக் கால்களில் அணிந்திருப்பவரும் த்ராவிட மொழி வல்லுநரும் திராவிட குருவுமான ஞானசம்பந்தபெருமானை அறுதினமும் வணங்குகிறேன்''.

இது **மூர்த்தி தியானம்** எனும் நூலில் குறிப்பிடும் சம்பந்தரின் உருவ அமைதி. தனது மூன்று வயதிலே உமையவள் அளித்த ஞானப்பாலை பருகியவர் எனும் செய்தியைக் காதால் கேட்கும்போது **குழந்தை சம்பந்தப் பெருமானின் உதடு** எவ்வளவு அழகானது புண்ணியம் செய்தது என்பதனை நலம் நம் மனக் கண்முன் நினைத்து ஏக்கப் பெருமூச்சு விடவேண்டும். அதனை அப்படியே ஓவியமாக்கி உருவமாக மெழுகில் செய்து பின் உலோகம் ஆக்க வேண்டும். ஈசன், சிவன் என கூறாமல் ''தோடுடைய செவியன்'' என இனிய தமிழில் இறைவனைச் சுட்டிக் காட்டும் பாங்கு அவர் எந்தத் தமிழ்ப் பல்கலைகழகத்தில் படித்தார் என எண்ணி வியக்க வேண்டும். இறைவனால் பொற்றாளம் பெற்றவரின் அழகுத் திருக்கரம் எப்படி இருக்கும். மேலும் முத்துச் சிவிகை, முத்துக்குடை, பொற்சின்னம் ஆகியன கொடுக்கப் பெற்றார்.

பத்ம பீடத்தில் நின்ற நிலை. குழந்தை வடிவம் தலையில் கேசங்கள் இடக்கையில் கிண்ணம் இடையில் எவ்வித வஸ்திரமும் இன்றி அரைஞாண் மற்றும் அதில் கோர்க்கப்பட்ட காய், பூக்கள் தொங்கப் பட்டிருக்க வேண்டும். அரைஞாணிலிருந்து முடிச்சிட்ட கயிறு வலப்பக்கம்

தொங்கவிடப்பட்டிருக்க வேண்டும். கழுத்தில் சூலக்குறியுள்ள ஆபரணம், ஏகருத்ராட்சம் இருத்தல் வேண்டும். கைகளில் காப்பும் காலில் கொலுசும் இருத்தல் வேண்டும். பால் வடியும் முகத்தோடு திருநீறும் திலகமும் இருத்தல் வேண்டும். வலது கரத்தின் விரல்கள் சற்று குவிந்து இருத்தல் வேண்டும். சீர்காழியிலுள்ள திருமேனியும் திருவாவடுதுறையில் நடனக் கோலத்திலும் இச்சிற்பம் அமைக்கப்பட்டு உள்ளது. மற்றொரு வகை இவரின் இரு கரங்களிலும் பொற்தாளத்தோடு முடியினைச் சிறு கொண்டையாகப் போட்டு வலப்பக்கம் இவ்வாறு சாய்ந்தபடியும் அமைக்கலாம். இவ்வாறு **சிவாலய திருமேனி** நூல் குறிப்பிடுகிறது.

கையில் தாளம், நிர்வாணம், ஜடைமுடி வலது பக்கம் சாய்ந்தது என சம்பந்தர் உருவத்தை **ஆலய விக்ரஹ நிர்மாண ஆயாதி சிற்ப ரகசியம்** குறிப்பிடுகிறது.

சிவஞானசம்பந்தர் என பெயரிட்டு பிராம்மணன், கிரீடமணிந்தவர் தாளம் வாசிப்பவனைப்போல இருப்பவர் என **ஸ்ரீதத்துவநிதி** மூன்றாம் பாகம் குறிப்பிடுகிறது.

குழந்தை திருமேனிகளை உத்தம பஞ்ச தாள அளவில் வடிக்க **சிற்ப செந்நூல்** கூறுகிறது.

கண்டிகை, வாகுமாலை பூணூல், தோள்மாலை, தோள்வளை, கடக வளை, காற்சதங்கை போன்றவைகளுடன் ஆபரணங்கள் சிற்பிகளின் கற்பனா சக்திக்கு ஏற்ப வடிவமைத்தல் வழக்கு.

**''கண்டவர் விண்டிலர்**
**விண்டவர் கண்டிலர்''**

என்பதற்கு ஏற்ப சம்பந்தப் பெருமானை அவரது காலத்தில் உரு சமைத்து ஒப்பிட்டு வைக்கவில்லை. செவிவழிச் செய்தியாக கேட்டதனை மனக் கண்முன் நிறுத்தி உருவம் அமைக்கப்பட்டதே சிற்ப சாஸ்திர நூல்களும் சிவாலயங்களில் உள்ள செப்புத் திருமேனிகளும் கற்சிற்பங்களுமாகும்.

இன்றும் கூட எமது சிற்பக் கூடத்தில் மேற்கூறிய சிற்ப சாஸ்திர ஆதாரங்களுடன் சிற்பம் செய்யக் கூறும் கர்த்தாக்களின் மனத்திற் கேற்ப **குழந்தை அடியாரை** மெழுகுப் படிவத்தில் செய்து ஒப்புமை பெற்றே வார்ப்படம் செய்கிறோம்.

நூல்களில் கூறப்படும் இத்தகு செய்திகளை அடிப்படையாகக் கொண்டே சம்பந்தர் படிமம் உருவாக்கப்படுகிறது என்றாலும், விக்ரஹம் செய்து வைக்கும் கர்த்தாவின் பக்தி ஈடுபாட்டுக்கு ஏற்ப வடிக்கும் சிற்பியின் கலை ரசனைக்கு ஏற்ப இந்து சமய சிவாலயங்களால்

திருஞானசம்பந்தப் பெருமான் கற்சிற்பங்களாகவும் உலோகச் சிற்பங்களாகவும் தேர்களில் மரசிற்பங்களாகவும் திருக்கோவில் கோபுரங்களில் சுதை சிற்பமாகவும் பல்வேறு வடிவங்களில் காணப்படுகின்றார்.

**சம்பந்தரின் உருவங்கள்**

3 அமைப்புகளில் ஆலயங்களில் காணப்படுகின்றன.

1. நடனமாடும் அமைப்பில் வலது காலை ஊன்றி இடது காலைத் தூக்கி இடது கையை தோள் மட்டத்திற்கு நேராக வைத்து வலது கையின் ஒற்றை விரலைக் காண்பிப்பது போல் (இது விண்ணில் பரமேஸ்வரியை அடையாளம் காண்பிப்பதாம்) கிட்டத்தட்ட காளிங்க நர்த்தன கிருஷ்ணரைப்போல் அமைப்பது.
2. நேராகவோ பங்கத்துடனோ பாலகன் வடிவில் கையில் தாளத்துடன் இரண்டாவது கோலம்.
3. வாலிப பருவத்தில் (சுமார் 16 வயது) முழுவஸ்த்திரத்துடன் கையில் தாளத்துடன் அமைப்பது மற்றோர் வகை. இது கிட்டத்தட்ட திருமணக்கோலத்துடன் வடிக்கப்படுவதாகும்.

இவ்வாறு திருஞானசம்பந்தரின் திருவுருவத்தை சிற்பிகள் செதுக்கி வடித்து வழிபாட்டிற்கேற்ற வகையில் உருவாக்குகின்றனர்.

## உலோக திருமேனிகளில் சம்பந்தர்







# 90. சம்பந்தர் பாடல்களும் சித்தாந்தமும்

ச. திருஞானசம்பந்தம், ஸ்ரீவைகுண்டம்.

தமிழரின் தனிச்சிறப்புச் சமயமாக விளங்குவது சைவம். இச்சமயம் தொன்மை வாய்ந்தது. இச்சமய நூல்களை இலக்கியம், தோத்திரம், சாத்திரம் என மூவகைப்படுத்தலாம். தோத்திர நூல்களில் பேரிடம் வகிப்பன திருமுறைகள். சாத்திர நூல்களில் சிறப்பிடம் பெறுவன மெய்கண்ட சாத்திரங்கள். சாத்திர நூல்கள் கூறும் கருத்துகளுக்குத் திருமுறைக் கருத்துகள் அடிப்படையாய் அமைந்துள்ளன. திருஞானசம்பந்தரால் அருளப்பட்ட முதல் மூன்று திருமுறைகளில் பொதிந்த சாத்திரத் தொடர்பு களை விளக்குவதாக இக்கட்டுரை அமைகிறது.

**சொல்லாட்சிகளும், தொடர்களும்**

காலத்தால் முற்பட்ட ஞானசம்பந்தரின் திருமுறைச் சொல்லாட்சி களையும், தொடர்களையும் மெய்கண்ட சாத்திரங்களில் காணலாம்.

**1. திருவுந்தியார்**

"உள்ளம் உருகில் உடனாவார்" (2:111:3)

என்பது திருஞானசம்பந்தர் வாக்கு. இதனைத் திருவுந்தியார் (தாழிசை. 7) அப்படியே எடுத்தாண்டுள்ளது.

**2. திருக்களிற்றுப்படியார்**

இறைவனின் அத்துவிதக் கலப்பைத் திருஞானசம்பந்தர் .

(அ) **"ஈறாய்முதல் ஒன்றாயிரு பெண்ணாண்குணம் மூன்றாய்
மாறாமறை நான்காய்வரு பூதமவை ஐந்தாய்
ஆறார்சுவை ஏழோசையொடு எட்டுத்திசை தானாய்
வேறாய்உடன் ஆனானிடம் வீழிம்மி ழலையே"**

(1:11:2)

எனக் குறிக்கிறார். இப்பாடலின் சொல்லாட்சிகளும் கருத்துகளும் பொதிய,

**"ஈறாகி அங்கே முதலொன்றாய் ஈங்கிரண்டாய்
மாறாத எண்வகையாய் மற்றிவற்றின் - வேறாய்
உடனாய் இருக்கும் உருவுடைமை என்றும்
கடனாய் இருக்கின்றான் காண்"** (86)

எனத் திருக்களிற்றுப்படியார் பாடல் அமைந்துள்ளது.

(ஆ) இறை "பெண் ஆண் அலியாகும்" (1:9:3)

என்பது திருஞானசம்பந்தர் கருத்து. இதனைத் திருக்களிற்றுப் படியார்,

"ஆணாகிப் பெண்ணாய் அலியாகி நின்றானும்" (88)

என்று கூறுகிறது.

**(இ) ஞானசம்பந்தரின் அற்புதச் செயல்கள்**

ஞானசம்பந்தர் ஆற்றிய அற்புதங்கள் பல. அவற்றைத் திருஞான சம்பந்தரின் திருமுறைகளின் வழியும் அச்செயல்களை உறுதிப்படுத்தும் பெரியபுராண வழியும் அறியலாம். திருஞானசம்பந்தர் ஆற்றிய அருஞ் செயல்கள் பத்தைத் தொகுத்து திருக்களிற்றுப்படியார் (பா. 70) புகலிவேந்தர் செயலெனப் போற்றுகிறது. புகலிவேந்தன் என்னும் பெயர் திருஞானசம்பந்தருக்குண்மையைப் "பொன்னி நாடன் புகலிவேந்தன் ஞானசம்பந்தன்" (1:50:11) என்றும் அவர்தம் வாக்கால் அறியலாம்.

**3. சிவஞானபோதம்**

(அ) இது காரணப் பெயராகும். சிவத்தை உணரும் ஞானத்தை தெளிவாகப் போதிப்பது என்பது இதன் பொருளாகும். போதம் என்பது உபதேசப் பொருள் எனப் பொருள்படும். இதனை,

"போதம் அமரும் உணரப்பொருளே" (3:113:3)

என்னும் தொடர் விளக்கத்திலிருந்து அறியலாம். இதிலிருந்து சிவஞான போதத்திற்கு அப்பெயர் அமையத் திருஞானசம்பந்தரின் தொடரே அடிப்படையாக அமைந்தது எனக் கொள்ளலாம்.

(ஆ) "கல்லால் நீழல் அல்லாத் தேவை
நல்லார் பேணார் அல்லோ நாமே" (3:40:1)

என்பது ஞானசம்பந்தர் வாக்கு. இதனைச் சிவஞானபோதக் கடவுள் வாழ்த்துக், "கல்லால் நிழல்மலை , வில்லா ரருளிய பொல்லா ரிணைமலர் நல்லார் புணைவரே" என எடுத்தாண்டுள்ளது.

(இ) உடலைச் சிவஞானபோதம், "மாயா இயந்திர தனு" (நூ.3), "மாயா தனு" (உ.வெ:27) என விளக்குகிறது. இதற்கு "ஆய மாய காயம்" (1:50:7) என்றும் சம்பந்தரின் கருத்து அடிப்படை என அறியலாம்.

(ஈ) "அடியார்க் கருளாய்ப் பழுக்கும் நிழல்" (2:19:9)

என்பதனைத்,

"தண்ணிழலாம் பதி" (நூ.9)

எனச் சிவஞானபோதம் எடுத்தாண்டுள்ளது.

(உ) இறைவன், ''அந்தமாதி என்மனார்'' என்பது சிவஞானபோதம். இதற்கு,

**''அந்தமும் ஆதியும் ஆகிய அண்ணல்''** (1:39:1)

**''அந்தமாதி''** (1:73:9)

என்றும் தொடர்கள் அடிப்படையாய் அமைந்துள்ளமையை அறியலாம்.

### 4. சிவஞான சித்தியார்

திருஞானசம்பந்தர் தம் பதிகப் பாடல்களில் பத்தாம் பாடலில் புறச்சமயங்களைப் பழித்துப் பேசித் தம் சமயக் கடவுளை உயர்த்திக் கூறுகிறார். இப்போக்கே பரபக்க, சுபக்கத் தோற்றத்திற்கு அடிப்படை ஆகும்.

**(அ) ''மும்மத நால்வாய்''** (1:102:2)

**காய்ந்த நால்வாய் மும்மதம்** (1:128:13)

என்பன ஞானசம்பந்தரின் தொடர்கள்.

இவற்றை, ''மும்மதத்தின் நால்வாய்'' எனச் சிவஞான சித்தியார் எடுத்தாண்டுள்ளது.

**...தானாய், வேறாய் உடனா னானிடம்** (1:11:2)

என்பது ஞானசம்பந்தர் தம் வாக்கு. இதனை ''உலகெலாம் ஆகி வேறாய் உடனுமாய்'' எனச் சிவஞான சித்தியார் பேசுகிறது.

### 5. இருபா இருபஃது

(அ) இந்நூலில் பாண்டியன்,

**''கேட்பக் கிளக்கும் மெய்ஞ்ஞானத்தின்**
**ஆட்பா லவார்க்கருள் என்பதை அறியே''** (2:32:34)

என்னும் தொடர் காணப்படுகிறது. இது ஞானசம்பந்தரின் திருப்பாசுரப் பாடலின் தொடரை அடிப்படையாய்க் கொண்டது. பாசுரத்தின் நான்காம் பாடல்,

**''ஆட்பா லவர்க்கருளும் வண்ணமும் ஆதிமாண்பும்''** (3:54:4)

என்பதாகும். இப்பாடலில் முதலடியின் இருசொற்களை எடுத்துக்காட்டி ஆசிரியர் இப்பாடலைச் சுட்டுகிறார். இப்பதிகம் பாண்டியன் கேட்க அருளிய அருளுரை எனச் சிறப்பிக்கப்படுவது ஈண்டு அறியத்தக்கது.

**(ஆ) ''அற்றவர்கள் நற்றுணைவ''** (3:64:2)

**''அற்றவர்க் கற்ற சிவன்''** (3:120:2)

என்பன திருஞானசம்பந்தர் வாக்குகள். ''அற்றவர்க்கற்றவன்'' (20:14) என இருபா இருபஃது கூற இத்தொடர்களே அடிப்படை.

### 6. உண்மை விளக்கம்

"மன்னு மாநடம், ஆடிஉட கப்பன அஞ்செழுத் துமே" (3:49:7)

என்பது திருஞானசம்பந்தர் வாக்கு. இதனை அடிப்படையாக வைத்து உண்மை விளக்கம், (பா.31)

**"சிவாயநம என்னும் திருவெழுத்தஞ் சாலே**
**அவாயமற நின்றாடு வான்".**

என்னும் கருத்தை வெளியிட்டுள்ளது.

### 7. திருவருட்பயன்

(அ) இந்நூல் இறைவனைப் பற்றிப் பதிமுதுநிலை என்னும் அதிகாரத்தில் பேசுகிறது. இப்பெயர்க்கு

**"கழுமலம் முதுபதிக் கவுணியன் கட்டுரை"** (1:128:14)

என்னும் தொடரில் அமைந்த முதுபதி என்னும் சொல் அடிப்படையாகும்.

(ஆ) இறைவன் அகர எழுத்துப் போன்றவன் என்பது ஞானசம்பந்தர் வாக்கு (1:88:5) இதனை அடிப்படையாய் வைத்தே,

**"அகர உயிர்போய் அறிவாகி எங்கும் நிகரில் இறை"** (கு.1)

என்பதாகும்.

(இ) நண்ணினர்க்கு நல்லன் (9:1) என்னும் தொடர்க்குச் சார்ந்தவர்க் கின்பங்கள் தழைக்கும் வண்ணம் நேர்ந்தவன் (1:113:5) என்னும் தொடரும்,

(ஈ) **"உன்னுமுள தையம் இலதுணர்வாய் ஓவாது**
**மன்னுபவம் தீர்க்கும் மருந்து"** (1:10)

என்னும் குறளுக்கு, ஐயுற வில்லை பிறப்பறுத்தல் அவலம் அடையாவே (3:104:11) என்னும் தொடரும் அடிப்படையாய் அமைந்துள்ளமையை அறியலாம்.

### 8. வினா வெண்பா

திருஞானசம்பந்தர் திருச்சிறப்புரப்பதிகம் (1:47), திருச்சேய்ஞலூர் (48), திருச்சோபுரம் (51), திருகண்டியூர் வீரட்டம் (3:38) ஆகிய பதிகப் பாடல்கள் வினாவுரைப் பதிகங்களாகும். திருக்கண்டியூர் பதிக முதற் பாடலில்,

**"வினவினே னறியாமையில்லுரை**
**செய்ம்மின் நீர்"** (3:38:1)

என்ற தொடரும்,

**"அடியார் பால்மிகக் கேட்டுகந்த வினாவுரை"** (11)

என இறுதிப்பாடல் தொடரும் காணப்படுகின்றன. எனவே வினா என்னும் பெயர் இந்நூலுக்கமையைத் திருஞானசம்பந்தர் பதிகமே அடிப்படை என்பதை அறியலாம்.

## 9. கொடிக்கவி

இந்நூல் இறைவனின் தன்மையைத்

**"தாக்கா துணர்வரிய தன்மை"** (பா.3)

என்று கூறுகிறது. இத்தொடர்,

**"உணர்கில்லாப் பெருமான்"** (1:87:10)

**"உணர்வரியான்"** (1:42:9)

என்னும் தொடர்களை அடிப்படையாகக் கொண்டது என்பதை அறியலாம்.

## 10. நெஞ்சுவிடுதூது

இந்நூலில் ஆசிரியர் தன்னைத் தலைவியாகவும், இறைவனைத் தலைவனாகவும் கொள்ளும் நாயகி, நாயக பாவனையில் தன் நூலை அமைத்துள்ளார். ஞானசம்பந்தரின் திருப்பாற்றுறை (1:56) , திருவானைக்கா (2:23), திருச்செங்காட்டங்குடி (3:63) ஆகிய மூன்று பதிகங்களும் நாயகி, நாயக பாவனையில் அமைந்துள்ளன. மேலும் அஃறிணைப் பொருட்களைத் தூதாக விடும் போக்கையும், சம்பந்தரின் (1:60, 3:63) பதிகங்களில் காணலாம். எனவே நெஞ்சுவிடுதூதின் நாயகி, நாயக பாவனைக்கும் தூதுவிடுதலுக்கும் திருஞானசம்பந்தரின் பாடல்களே அடிப்படை என்பதை அறியலாம்.

## 11. சங்கற்ப நிராகரணம்

இந்நூல் ஞானசம்பந்தரையும், அருளிப்பாடுகளையும்,

**"காழி மாநகர்க் கவுணியர் கடவுள்**
**ஞான மாகிய நற்பதி கங்கள்"** (14:22:23)

எனச் சிறப்பிக்கிறது. இந்நூலில்,

**"தாமே தாமாய்ச் செய்தனன் என்றும்"** (17:24)

என்னும் தொடர் காணப்படுகிறது. இத்தொடர், பத்திப்பேர் வித்திட்டே (1:126:7) எனத் தொடங்கும் பாடலில் அமைந்த தொடராகும்.

இச்செய்திகளில் இருந்து மெய்கண்ட சாத்திரங்களுக்கு ஞானசம்பந்தரின் பாடல்கள் அடிப்படையாய் அமைந்துள்ளமையை அறியலாம்.

**மானுடப்பிறப்பு**

உயிர்கள் அடையும் பல பிறவிகளில் சிறந்தது மானிடப்பிறவி. இப்பிறவியே மீளா நிலைக்கு உறுதுணையாவதாம். இப்பிறவியின் சிறப்பைச் சித்தியார்,

**உண்டுபல் யோனி எல்லாம் ஒழித்துமா னுடத்து தித்தல்**
**கண்டிடில் கடலைக் கையால் நீந்தினன் காரி யங்காண்**

எனப் பேசுகிறது. இச்சாத்திரக் கூற்றுக்கு,

**பிணிகொள் ஆக்கை ஒழியப் பிறப்புளீர்** (1:28:4)

எனச் சம்பந்தர் சிறப்பித்துப் பேசுவதே அடிப்படை ஆகும்.

**சமயங்கள்**

சமயங்கள் பல, அவை வேத ஆகமங்களை அணுகும் முறைப்பற்றி நான்கு வகைப்படும். ஒவ்வொன்றும் ஆறு சமயங்களைக் கொண்டது. இவற்றைச்

**''சைவமாதி இருமூன்று''** (சித்தியார்-2:4:1)
**''அறுவகைச் சமயம்''** (சித்தியார்-1)
**''இருமுச்சமயம்''** (நெஞ்சுவிடுதூது-73)

எனக் கூறுவதிலிருந்து அறியலாம்.

**''ஆயாதன சமயம் பல''** (1:11:5)
**''ஒத்தாறு சமயங்கள்''** (1:131:1)
**''இருமூன்று சமயங்கள்''** (2:29:5)

எனவும் வெளிப்படும் திருஞானசம்பந்தர் கருத்துக்கள் சமயம் பற்றிய சாத்திரக் கருத்துக்களுக்கு அடிப்படையாகும்.

**சைவமும் வேத ஆகமமும்**

நான்கு கூறாகப் பகுக்கப்பட்ட சமயங்களுக்கு அப்பாற்பட்டு விளங்குவது சைவ சித்தாந்தமாகும். இது ஆகமங்களைச் சிறப்பாகவும் வேதத்தைப் பொதுவாகவும் ஏற்கும் சமயமாகும். ஆகமம் என்பது சைவ சித்தாந்தத்தையே குறிக்கும். ஆகமாந்தம் எனச் சைவ சித்தாந்தத்தைக் குறிப்பதும் ஈண்டறியத்தக்கதாகும். இவற்றை, ஆரணநூல் பொது சைவம் அருஞ்சிறப்பு நூலாம் (8:15) எனவும், சிவாகமங்கள் சித்தாந்தமாகும் (8:15) எனவும் சிவஞான சித்தியார் கூறுவதிலிருந்து அறியலாம். வேதாகமங்கள் சிவனால் அருளப்பட்டவை. ஆயினும் இறைவன் அருளிய நூல்களில் ஆகமமே சிறப்பிடம் பெறுவது. வேதத்தால் இறைவனை அறிய முடியாது என்பதும் திருஞானசம்பந்தர் கருத்தாகும். சித்தாந்தக் கருத்துக்களுக்கு ஆகமமே அடிப்படை என்பதை உண்மை

விளக்கம் (பா. 1, 3, 13, 29) மிகச் சிறப்பித்துப் பேசுகிறது. பிற சாத்திர நூல்களும் இக்கருத்தை வலியுறுத்துகின்றன. திருஞானசம்பந்தர் இறைவனை ஆகமச் செல்வனார் (3:57:10) எனவும் ''அரன் ஆகமம் மிகக் கூறுமால்'' (3:79:6) எனச் சிறப்பிப்பதும்,

**விரும்பு நால்வே தத்தாலும் அறிவொண்ணா**
(1:131:1) எனவும்,

**''முன்னநாள் மறையவை முறைமுறை குறையொடும்**
**தன்னதாள் தொழுதெழ நின்றவன்''** (3:35:1)

எனவும் மறைகளைக் குறைவுபடுத்திக் கூறுவதும் சாத்திர நூல்கள் ஆகமத்திற்கு முதன்மை கொடுக்கக் காரணம் எனலாம்.

### பொருள் வகை

சைவ சித்தாந்தம் பொருள்களை மூன்றாகத் தொகுத்துப் பேசுகிறது. இதனை ''மூன்று முதலும்'' (உண்மை விளக்கம், 50) பதிபசுபாசம் தெரித்து (சித்தியார் - 8:22) எனவும் கூறுவதிலிருந்து அறியலாம். திருஞானசம்பந்தர்,

**''விளையாததோர் பரிசில்வரு பசுபாச**
**வேதனையொண் தளையாயின தவிரவ்வரும் தலைவன்''**
(1:12:3)

எனப் பேசுகிறார். இத்தொடரில் பசு - உயிர், பாசம் - ஆணவம், வேதனை - வினை, ஒண்தளை - மாயை, தலைவன் - சிவபெருமான் என ஐந்து பொருள்களாகக் கூறுகிறார். இவற்றைத் தொகுத்தே சாத்திர நூல்கள் மூன்றாக்கிக் கூறுகின்றன. பொருள்களை ஆறாக்கிப் பேசும் போக்கை,

**''ஏகன் அநேகன் இருள்கருமம் மாயையிரண்(டு)**
**ஆக இவை ஆறாதி இல்''** (திருவருட்பயன்-6:2)

எனப் பேசுவதிலிருந்து அறியலாம்.

### பெயர்கள்

இறைவன், சாத்திர நூல்களில் பல பெயர்களால் சுட்டப்படுகிறான். அண்ணல் முதல் விமலன் ஈறாக அமைந்த பல பெயர்கள் சாத்திர நூல்களில் இடம்பெற்றுள்ளன. திருஞானசம்பந்தர் இறைவனைப் ''பேர்பல உடையான்'' (2:40:5), ''பத்துநூறு பெயரன்'' (1:56:11), ''எண்ணமும் பெயரான்'' (3:30:2) எனச் சுட்டுகிறார். திருஞானசம்பந்தரின் இப்போக்கே சாத்திர நூல்களில் இறைவன் பல பெயர்களால் சுட்டப்படுவதற்குக் காரணம் எனலாம்.

### தோற்றப் பொலிவு

சித்தாந்தத்து இறைவன் சேவுயர் கொடியினான் (சி.சி: 26) நீறணிந்தவன் (நெ.தூ.105), பஞ்சகவ்வியமாடுபவன் (சி.சி:2:92)

நீலகண்டன் (இ.இருபஃது-1,19), பிறை அணிந்தவன் (சி.சி.2:91, 12:1), கொன்றை, கங்கை, பாம்பு அணிந்தவன் (போ.ப.64-9), முக்கண் உடையவன், எருதேறி (நெ.தூ.85), மழுப்படை உடையவன் (நெ.தூ.106) எனக் கூறப்படுகிறது. சாத்திர நூல்கள் கூறும் இத்தோற்றப் பொலிவுக்குத் திருஞானசம்பந்தரின் பாடல்களை அடிப்படை என்பதை அவர்தம் பாடல்களால் அறியலாம்.

## அருட்செயல்கள்

இறைவன் ஆனை உரித்தது, ஆலின்கீழ் இருந்து அறமுரைத்தது, நஞ்சுண்டது, காமனை எரித்தது, முப்புரம் எரித்தது, தக்கன் வேள்வியைச் சிதைத்தது ஆகிய செயல்களுடன் தானே முதற்கடவுளாக நின்று அடிமுடி தேட நின்ற செயல்களைச் சாத்திர நூல்கள் சிறப்பித்துக் கூறுகின்றன. இச்செய்திகளுக்குத் திருஞானசம்பந்தரின் பாடல்களே அடிப்படையாகும்.

## இறைவனின் குடும்பம்

சித்தாந்தத்து இறைவன் சக்தியை மனைவியாகவும், விநாயகன் மற்றும் முருகனை மகனாகவும் உடையவன் எனப் பேசப்படுகிறான். சிவபெருமான்,

**"இளங்கிளை அரிவையொ டொருங்கு டனாகி"** (1:77:7)

**"தம்காதலியும் தாமும் உடனாய்"** (1:71:2)

**"புனர்முலை மாதுமையாள் முயங்குமார்பன்"** (1:53:8)

எனவும்,

**"தந்த மதத்தவன் தாதை"** (1:115:2)

**"மருப்புருவன் தாதை"** (1:117:8)

எனவும்,

**"தழைமயி வேலவன் தாதையே தான்"** (1:115:3)

**"மடமயில் ஊர்தி தாதை"** (2:87:2)

எனவும், திருஞானசம்பந்தர் பேசுவதே சித்தாந்தக் கூற்றுக்களுக்கு அடிப்படை என்பதை அறியலாம்.

சாத்திரங்கள் கூறும் பதி, பசு, பாச இயல்புகள், நால்வகை நெறிகள், தீட்சை வகை, இருவினை ஒப்பு, மலபரிபாகம் ஆகிய பல கருத்துக்களுக்குத் திருஞானசம்பந்த கருத்துகளே அடிப்படை என்பது நுணுகி ஆய்வார்க்குப் புலனாகும்.

# 91. तिरुज्ञानसंबंद के गीतों में विश्वास

**के.एस. प्रणार्थातीहरन,** तिरुच्चि

भक्ति की लेहर दक्षिण भारत से उत्तर भारत की ओर फैलनेलगी। मनुष्य पेट भरने कार्य करने के साथ भगवान को भी ढूँढने का प्रथ्यस करने लगा। श्रद्धा और प्रेम के मिलन को ही भक्ति कहते हैं। इस विशाल देश मे शैव वैष्णव शाक्त सौर्य गाणपत्य एवं कौमार्य आदि छः रूपों मे भगवान की वन्दना चल रही है। नायनमार लोग शिव की प्रार्थना करते थे। आलवार लोग विष्णु की पूजा करते थे। उन्होंने की देन पुशंसनीय है।

भक्ति दो प्रकार के होते हैं। जैसे वानर मार्ग एवं मार्जालमर्ण। मार्जाल मार्ग में बच्चा तो माँ को पहडेया। उसी प्रकार भगवान, भक्त को अनेक कष्ट देने पर भी भक्त लोग सदा भगवान की याद में रहेंगे। मार्जाल मार्ग में अपने बेटों पर अधिक जिम्मेदारी करके माता बिल्ली के रक्षा करेगी। उसी प्रकार भगवान, भकतों के यहाँ अधिक प्यार दिखाकर ढीक रास्ते पर उसे ले चलेगा। जब सम्बंदर बचपन में रहते समय भगवती उमा ने उस को ज्ञान दूध दिया। तब उन्के पिता ने पूछा कि किसने तुमको दूध पि लाया? तब संबंदर ने विश्वास के साथ कह्य कि सीरकाली अथवा ब्रहमपुर में स्थित भगवान शिव ही अपनी पत्नी सहित आकर दूध देथी। तोडुडैय चेवियन नामक भक्तिगीत को उन्होंने गाया।

तेवारम का मतलब यह है कि भक्त भगवान को पुष्पमाला सहित भक्ति गीतों का हार पहनाना हैं। जो व्यक्ति भगवान पर विश्वास रखता है, उसको तुरन्त अपने आप पर भी विश्वास जरूर धेगा। कहा जाता है कि यथा राजा तथा प्रजा। यदि राजा तन्दूस्स्ती के साथ पूर्ण रूप मे अरछा देगा तो देश के लोग भी अरछे देंगे। कून पांडियन नामक राजा गर्मी पीडा के कारण अधिक

कष्ट झोलता लगा। उसे स्वस्थ करने के लिए संबंधर ने मंदिरमावदु नीरू नामक भक्तिगीत को गाया। विश्वास के साथ गाने के कारण राजा का दुख दूर होगया।विभूति मंत्र एवं तंत्र के रूप में रहती हैं। वेद में विभूति का वर्णन है। वह दुख को दूर कर देगी। वह सच में स्थित है। विभूति मुक्ति देथे की शक्ति रखती है। मुनि लोग इसे धारण करते हैं। विभूति पूजनीय विषय है। विभूति को देखते ही आनंद आएगा। हम स्नान करने के बाद सिर को अच्छी तरह साफ करने पर भी पानी पूर्ण रूप मे नहीं जाएगा। विभूति को धारण करते समय वह पानी को सिर से निकाल देती है। यह तो वैज्ञानिक दृश्टि है। जब इस शरीर से प्राण घन्ट जाता है, तब इसे जलाने के कारण सांबल ही रहेगा। यह तो दार्थनिक दृश्टि है। विभूति पाप को दूर करथे की शक्ति रखती है। इसे संबंदर विश्वास के साथ बताते हैं।

तिरूज्ञानसंबंदर के काल में तिरूनाउक्करसर भी रहकर शैव धर्म को स्थापित करने के लिए बडी मदद करते थे। नवग्रह के कारण हुए दोष को दूर करने के लिए वेयुरू तोली पंगन नामक कोलरू पदिगम को संबंदर ने गाया। इसे विश्वास के साथ वेदारण्य क्षेत्र में गाया। आगे तिरूक्कोडि माडर चेंगुन्दूर नामक क्षेत्र में अनेक लोग एवं उनके शिष्य ज्वर से पीडित थे। तब संबंदर ने अव्विनैक्कु इव्विनै नामक शिव विश्वास के साथ गाथे के कारण लोग ढीक होगा।

आगे भगवान कि कृपा की याद सदा रहने की स्थिति देनेकी कृपा प्रार्थना करने लगे। मरैयुडैयाय तोलुडैय नामक भक्तिगीत गाने लगे। फिर तिरूनल्लूर पेरूमाणम नामक क्षेत्र में ज्ञानसम्बन्दर अपनी पत्नी एवं सभी लोगो के साथ कल्लूरपेरूमाणम नामक भक्ति गीत को गाते हुए। मंदिर के अन्दर घुसते ही शिवजी कृपा के कारण गर्भगृह में एक ज्योति हुई।

तुरन्त संबंदर विश्वास के साथ कादलागि कसिन्दु नामक पंचाक्षर गीत को गाते हुए सभी के साथ उस ज्योति में घुस गये । कहा जाता है कि यही संबंदर से आए गए अंतिम गीत है।

तिरूज्ञान संबंदर, प्राप्त ज्ञान को विश्वास के साथ कविता के रूप में प्रकट करके घूमने लगे। उनके अनेक गीत जीवन मे सपूलत्रा प्राप्त करने के लिप भगवान एवं अपने यहां विश्वास रखना आवश्यक है। इस विज्य के स्पषष्ट करता है। विश्वास रखने वालीं को नटराजा कृपा देगे। इसी विश्वास को संबंदर के भक्तिगीत स्पष्ट करते हैं। भगवान को याद रखने के लिए भगवान की कृपा आवश्यक है। इस विश्वास को संबंदर के भक्ति-गीत स्पष्ट करते हैं।

# 92. संबंध के तेवारम में भगवान एवं भक्त

न. सुसीला, तिरूच्ची

कहा जाता है कि भकतों की कीर्ति बताना श्रेष्ठ है। भगवाना तो भकत के हृदय में सदा रहता है। अपने को प्रार्थना करनेवाले भकतों के साथ रहकर, अलग रहकर एक होकर भगवान रक्षा करता है। भक्ति तो केवल भगवान संबंध विषय मात्र नहीं, भगवान की पूजा करनेवाले भक्त के संबंध भी है। यह तो सत्य है। भगवान एवं भक्त के बीच रहनेवाले संबंध ही भक्ति का बुनियादी विषय है। अपनी ओर विश्वास रखनेवाले भक्तो को भगवान अनेक मार्गों में ढीक करके उनको कृपा देता है। ज्ञान संबंधर ने अपने तेवारम में भगवान, भक्तों को कृपा करने की कुशलता का चित्रण किया है। इस निबंध का लक्ष्य यह है कि उनको स्पष्ट करना ही है।

ज्ञानसंबंधर ने कहा है कि भक्तों की चाहो को पूर्ति करने का गुण भगवान रखते हैं और आशा रखनेवाले भक्तों के मन को अपनी ओर लेनेवाने शक्तिशाली हैं। भक्त कहीं भी किसी रूप में जन्म लेने पर भी भगवान भक्तों को कहेगा मैं यहाँ हूँ। इसे संबंधर ने कहा कि अपने भक्तों को भगवान अपनी जगह बताएगा। भगवान को यहां ही गुलाम बनकर भूले बिना प्रार्थना करनेवाले भक्तों को भगवान सर्वं होकर कृपा करेगा। संबंधर ने इसे स्पष्ट किया कि भगवान को याद रखनेवाले गुलाम की ओर भगवान आएगा। इसप्रकार कृपा करनेवाले भगवान के गुण अनेक प्रकार के हैं।

### अपने वश में रखना

प्यार करनेवालों को अपनेवश में रखने की शक्ति भगवान रखते हैं। पूर्णरूप में रहनेवालों की सलाह लेकर वशीभूत करनेवाले मुनि के रूप में

भगवान रहता है। भगवान की प्रगृति यह है कि अपने पसंद भक्तों को वशीभूत करना है। इसलिए स्पष्ट हो जाता है कि वशीभू करने की स्थिति मे ही भगवान भक्तो के साथ रहता है।

## दुख दूर करना

वशीभूत करने के बाद भवतो के दुखों को दूरकरने का काम साथ ही होगा। संबंधर ने प्रार्थना की कि भक्तों के यहों आये दुख न आकर उन्को दूर करने की कृपा भगवान करों संबंधर के वचत येहैं कि डर के कारण रहनेवाले नहीं, पाप करनेवाले नहीं दुखझेलनेवाले भी नहीं भक्तों के लिए व्याधि भी नहीं। भगवान ईश के पैरों (पादों) में ध्यान रखने वाले भक्तों के मन में दुख नहीं रहेगा।

## पाप दूरहोना : प्रतिशोध दूरहोना

भगवान के पैरों को मन में यद करके प्रार्थना करनेवाले भक्तों के पापों को दूर करनेवाले भगवान पाप न रखनेवाले हैं। प्यार करके पूर्ण रूप में ध्यान करके भगवान के पैरों को प्रार्थना करके मनही मन रोनेवालों को पापों को भगवान बीच से करेगा। पाप का नाश करने का कारण उसे पाप विनाशी भी कहते हैं। प्रतिशोध भी दूर धेपायगा।

## कीर्ति एवं बडष्पन देना

भक्तों के प्रतिशोध एवं पापों को दूर करनेवाले भगवान उनको कीर्ति एवं बहापन देंगे। धन बहापन एवं क्रियाशील आदि भगवान देंगे। भगवान के पैरों पर ध्यान देनेवाले भक्त कीर्तिके साथ रहेंगे। भगवान की प्रार्थना करनेवाले भक्त कीर्ति पाएंगे। अर्धनारीश्वर की पूजा करनेवाले भक्तों को धन बहेगा। उन्को नाश नहीं रहेगा। वे उच्च पद बीर्ति के साथ पाएंगे।

## अन्न देना

भक्तों की भूख को भी भगवान दूर करके कृपा करेगा। संबंधर ने कहा कि भक्त जैसे निधि भगवान के लिए कोई नहीं।

## संदेश को हटाकर आनंद देना

कहा जाता है कि पहजान हुए भक्तों के संदेह को भगवान दूर करेगा और भगवान की कृपापर विश्वास रखनेवाले जरूर सफलता पाएँगे। भगवान की ओर रहनेवालों को संतोष अधिक देने के लिए भगवान वैचार हैं। अपने जैसे अपने भकतों को भी आनन्द भगवान देंगे। भगवान की कृपा यह है कि आरम्भ में भक्तों के सन्देह को दूर करके और अंत में आनन्द देना है।

## भगवान की कृपा के कारण ग्रह एवं दिन:

सम्बन्धर धैर्य के साथ स्पष्ट करते हैं कि भभक्तों को दिन एवं गृह दुख नहीं दे सकते। सम्बन्धर इसे आज्ञा देकर बताते हैं। इसका अच्छा उदाहरण कोलरु पदिगम अर्थात (नवग्रह सम्बन्धी भक्ति गीत)

## कर्म को दूर कर्म

सम्बन्धर ने अनेक स्थलों मे तेवारम मे स्पष्ट किया है कि भगवान की पूजा करनेवाले भक्तों के कर्म को शायद भगवान दूर करेंगे।

## तपस्या कि स्थिति देना

भगवान के पैरों पर विशवास रखनेवालों को तपस्या कि स्थिति तक पहुँचना निश्चय है। भगवान की पुशंस्य करनेवाले भक्त संदेह के बिना तपस्या की स्थिति तक पहुँचेंगे।

## सामान्य रूप धारण करना

भगवान अपनी ओर आनेवाले भक्तों को सामान्य रूप में रहेंगे। अन्य लोगों को असाधारण रूप में रहेंगे। सम्बन्धर भगवान को सामान्यता तो भक्तों के यहाँ बताते हुए स्पष्ट करते हैं कि प्यार करनेवालों को वे सामान्य रूप में रहेंगे। सिर न झुकानेवालों को मनमुडाव करने में भगवान समर्थ हैं।

## स्वर्गवास देना

सम्बन्धर का विचार है कि भगवान शिवजी की पूजा करनेवालों को स्वर्ग मिलेगा और इस दुनिया को भी शिवजी दे देंगे। भक्त लोग रहने के

लिए इहलोक माव्र नहीं पर लोक भी शिवजी देंगे। आगे ध्यान देने की बात यह है कि अपनी ओर रहनेवालों एवं आनेवालों को इस संसार था दुनिया को शासन करने की क्षमता शिवजी देंगे।

### जन्म-मरण दूरकरना

शिव के पैरों को प्रार्थना करनेवाले स्वभाव रखनेवालों के लिए अगल जन्म नहीं होगा। सम्बन्धर थे कहा कि प्रार्थना के कारण व्याधि एवं जनम दूर होंगे और वही प्रार्थना का फल है।

### भकतों के साथ रहथ

सम्बन्धर ने स्पष्ट किया है कि भगवान सदा भक्तों के साथ रहना ही चाहेंगे। मन्पघलते सत्य साथ रहेंगे और हे भगवान, इति पुकारते समर जहाँ भक्त खडे धेते हैं वहां इच्छा के साथ बैदगघा।

### शिव प्रति देना (शिवगति)

सम्बन्धर ने दृढ के साथ कहा कि भगवान शिव पक्वता प्राप्त भवतों को अपना कर मोक्ष भी देंगे। निश्चय देने की बात यह है कि शिव के पैरों को प्रार्थन करनेवालों को मोक्ष या शिवगति मिलेग ध्यान देने की बात यह है कि शिवजी के यहां शरणागति मिलेगी।

भगवान शिवजी कृपा सिंधु हैं। भक्तों के लिए अपने आप को देने में एक अलग स्थान रख चुके है। अपनी ओर शरणागत लेनेवालों को अत्यधिक अच्छी-अच्छी स्थितियां दे सक्ते हैं। अपनी भक्ति-गीतों में ज्ञानसम्बन्धर विस्तृत रूप में स्पष्ट कर चुके हैं कि भगवान भक्तों को छाया के समान रहकर कृपा करने की क्षमता रख चुके हैं।

भगवान भकतों के दुख दूर करके, पापों को हटाकर, उनको कीर्ति एवं बडापन देना, अन्न देखर भूख हटाकर. संदेह दूरकरके संतोष देखर, ग्रह एवं दिन के दुख से बचाकर, कर्म को दूर करके तपस्या की स्थिति देखर, जन्ममरण हटाकर. अट्टपट सहायक रूप में रहकर शिवगति देगा। यही है हम जैसे लोगों को ज्ञानसम्बन्धर के तेवारम बतानेवाले विषय है। इन्को हम प्रार्थन के फल के रूप में भी मान सकते हैं।

# 93. SAMBANDAR'S TWO DECADS

**B. DEVENDRAN,** Virudunagar.

Aludaip Pillai, otherwise well known by his other name Gnanasambandar one of the pioneers of Bhakthi cult in Tamilnadu in the seventh century was born in Sirkazhi in Tamilnadu. At the age of three he was given a cup of milk by Parvathi, the consort of Lord Shiva, when he stood alone weeping in hunger. As his father beat him for taking milk from some stranger and asked who gave him the milk, the child out of inspiration began to sing the first decad of his composition on Lord Shiva, "He with studded-ears" pointing out the presence of Lord Shiva and Parvathi on their mount the Bull. Thereafter he visited the several temples and in each shrine of Lord Shiva he composed a `pathiham' (Decad), a sequence of ten stanzas on the Lord. It is said he composed 16000 decads and of them we have in hand only 384. All these decads were composed by him within the short span of his life of sixteen years.

When he attained the proper age for Upanayana, the ceremony of wearing the sacred thread, the rites were duly performed with precision and the priests who performed the ceremony told Aludaip Pillai, that they had taught him thereby the knowledge of the four Vedas, Sambandar replied that the Five Sacred Letters, Namacivaya, are the very Vedas and composed a sequence of ten stanzas to proclaim to the world the supreme virtue the five sacred letters possess to make a man noble, pure, divine and realise God, Lord Shiva in him.

There are distinct poetical works in Saivite literature exclusively dealing at length with the systematic Saivite philosophy. But, the poetry of the distinguished Four Savants is not out and out an embodiment of philosophical expounding. They are melodious and mellifluous poems serving as a guide to layman to his spiritual life. Their poems inculcate Bhakthi

(Devotion) to the common man and demonstrate that by adopting Bhakthi Marg any man can attain spiritual upliftment and thereby Salvation (Mukthi). So, all the four savants in their compositions assure spiritual achievement with an appeal to people to tread along the path of devotion with unswerving concentration. They indicate ways and means for a spiritual life and demonstrate, their own experiences of the effusion of spiritual ecstasy, they beatitude the divine realization brings in, the solace and eternal peace.

In their writings the Saints frequently refer to the 'Feet of God' and advise the devotees to hold them fast for their salvation. The expression 'The Feet of the Lord' has a visual concept of physical existence. But its connotation is completely different from its denotation. It stands for an abstract concept in concrete terms.

In spiritual philosophy God is conceived as formless or abstract. As a consequence to attribute a limb to God becomes a contradiction. But, religious scholars and exponents resolve this contradiction with certain explication.

In the process of spiritual evolution in an individual the removal of hindrances (Mala) that insulate the soul and prevent it from its progress to God-realization is a crucial stage. Once the hindrances are removed, the purged soul stands prestine pure. That is the stage conducive to experience the Divine which presents itself in formless state. This realization of the presence of the Supreme in the soul kindles ecstasy. In Saivism that ecstasy is called "Civananda Anupūthi (experiencing Shiva) and that felt experience is termed 'Thiruvadi', The Sacred Feet. So, whenever the Saivite Saints speak of holding fast to the Lord's Feet, it comes to imply to cherish and nourish that experience of the Divine. While the soul has this spiritual experience constantly, it is elevated from the predicaments of worldly life. And finally it leads to consumate salvation. In reading the poems we have to bear this concept in mind.

The first of the Decads presented here in English translation is given the title 'PANCHCHAKKARA PATHIHAM' (280)

which means 'a sequence of ten stanzas dealing with the five sacred letters'. Every stanza here ends with the expression 'AYNTHELUTHTHUME' which means 'The Five Letters'. The poet here does not explicitly state the mantra. The Decad is also named after The Five Letters.

The five lettered mantra is to be sincerely chanted by the aspirant to achieve everything necessary for a life of perfection. It relieves him from the pains and pangs of life. It removes all hindrances in the path of the aspirant for spiritual salvation. It is an assured means to win the grace of God. It keeps the enthusiasm of the devotee unabted. The Decad ends with the assurance of Saint Gnanasambandar to win a heavenly life by constant and sincere chanting of the Five Sacred Letters.

The Second Decad presented here explicitly states the mantra, 'Namacivaya' and forms section 307 of Sambandar's works. Sambandar married the daughter of Nambiandar Nambi. It is said that as soon as the marriage solemnities were over, Sambandar, accompanied by his bride SOWKKIYAL, devotees and relatives went to the temple at Thiru Nallur Perumanam. In the sanctum sanctorum there appeared a 'jyothi' into which Sambandar and his entorage entered, all singing the greatness of 'Namacivaya' and that forms the 'Namacivaya Pathiham'. It speaks the greatness of the mantra, 'Namacivaya', as the previous Decad speaks the same naming it the 'Five Sacred Letters'.

The chanting of the mantra bestows noble qualities on human beings. It is the very soul of the four Vedas. Sweet to chant and fresh as honey from blooming flowers, it elevates a man from being a human being to godhead. Even a person irrevocably condemned to hell, chanting 'Namacivaya' with sincere devotion can win God's grace. The Lord responses immediately to the supplication of devoted disciples and rescues them from any danger. So, asserting the power of the mantra Namacivaya, Sambandar claims supremacy to it over all other mantras.

In translating these 'decads' the translator follows his own understanding within the limits of experience and knowledge and consulted standard text. Entanglement in philosophical

intricacies shall hinder translation. If a particular idea is concentrated in the rendering another implication in the same expression of the source language shall escape from the target language. But such discrepancies in translations are unavoidable, particularly when the two languages belong to different language families. So, what is comprehensible to everybody is concentrated in the translation.

The lines in the verse are of iambic pentametre of English poetry with variations in rhythm.

**THE LETTERS FIVE - PANCHCHAKKARAP PATHIHAM**

1. Awake or asleep with entrenched devotion deep
Praise forever the glories of His Feet.
The chanting of the sacred letters five
With unswerving mind will kick the approaching death.

2. The letters five are the mantric Vedas four
That steadfast stand and sway the Devas' mind,
And become the mantra for the twilights rites
Of the upright men who feed the sacred fire.

3. To hinder the hindrances to those holy minds
Who control breath in flesh and light up spirit
And ope the way for the flow of honey-sweet
Knowledge, the sacred letters five will serve.

4. The good or the bad, if they chant the letters five
Their pains all vanish; they solve in Shiva's Bliss.
When Yema's messengers come to fetch the soul
The letters five will vanquish all pains of death.

5. The shaft of Mathan has honeyed flowers a five;
The earth has elements five; the gardens five,
The serpant has hoods a five; His fingers five;
And the sacred letters has a count of five.

6. While sneezing and coughing haunt and hurt the flesh,
While the hellish torments torture and the deeds
Of the present pester fast and in rebirth
The letters five will come to the rescue sure.

7. The chanting of the sacred letters five
Will sack the birth and death and dolours harsh;
And favour wealth for the rest of the days to come;
And please very much the Eternal Dancer great.

8. She, with bee-swarming tresses, cherished them dear,
And chanting the mantra Ravana prospered much
His devotees gain the power to sway the world
By offering prayer chanting the letters five.

9. In His frenzied devotees who sing the majestic charm
Of His glorious feet, which the God of sable shade
And the four-faced one have tried in vain to find
To inflame their devotion work the letters five.

10. To them that stand unperturbed by the Buddhists. lies
And Samanas' with stick and bear a mind serene
And apply the holy ash, the letters five
Are a shaft to shoot down clean the fruit of their deeds.

11. The Tamil Gnanasambandar well-versed
In Vedas, the king of Kazhiyur composed these lines
With the Letters Five and who with devotion chant
Will become the devas to live in heaven high.

## NAMACIVAYA DECAD

1. With brimming love and flooding tears who chant
The name of Shiva to redeem them to upright life
The mantra Namacivaya, the eternal truth
Embedded in the Vedas four will serve.

2. In the tongues of disciples true with devotion deep
Namacivaya is sweet as honey fresh
From blooming flowers and it shines as tilak bright
Of purest gold across the universe vast.

3. With fervent devotion it's chanted in heart of heart,
Or, counted on beads, or counted on finger lines;
And such devotees chanting the Letters Five
Deserving well will become the Devas in heaven.

4. Great Yema too fear to near them who hap
To be with them that by habit chant His name.
Benign is He to them that as duty chant
Namacivaya of the fore-head-eyed.

5. Though they do murders and lack all salient traits
And have to their credit no commendable deeds,
They, absolved of their sins will be, if they chant
Namacivaya of the treple-eyed God.

6. Though sins amassed as huge as Manthra range;
And are enmeshed in the family ties, even they,
All evils spurned, will live a prosperous life
Of wealth, if they chant Namacivaya ever.

7. Though weighed with so much sin as to be thrust
Into the sevenfold Hell by Rudra's power,
Into the host of His servants they'll entered be
If they chant Namacivaya, the saviour's name.

8. When Lanka's king did lift up the mountain high.
Lord Shankara pressed it down with His toe that made
King Ravana gasp and daze and mumble fast
'Namacivaya' that sure has power to save.

9. He who resides in lotus flower and He
Who has eyes as lotous flowers once tried in vain
To find the head and foot of Lord Shiva
And uttered Namacivaya in a desperate vein.

10. His name, who ignored the caustic words of lotus
With bowl in palms and those that hold their palms
For bowl for food, who obliging devas drank
The venom, is 'Namacivaya' sublime.

11. They who can chant with blissful feel these lines
Of the sacred Namacivaya of Shiva's shine
Composed by Sambandan in rhythmic Tamil fine
Can have will to snip the bond of kith and kin.

# 94. GOD, HUMAN AND ECOSYSTEM

**T. KAMALI, Chennai.**

God Human and Ecosystem -The principles of Interdependence as shared by Thirugnanasambanthan in Devaram.

This is a world where one thing depends upon others. Plants depend upon the minerals and water in the soil and upon the sun and air for food. Cows, buffaloes depend upon plants for fodder. And man depends upon animals for milk, cheese etc. God has created man, women, animals, plants and human beings always feel a sort of dependence of biotic community, that is, living being or organisms on abiotic environment - water, carbon di-oxide, oxygen, nitrogen, calcium, phosphorus, etc. This interaction is a two-way relationship. Non-living or abiotic environment and the living or biotic communities takes together constitute man's ecosystem from which human beings get the air they breathe, the water they drink, the food they eat, the clothes they wear, the shelter they use etc. Everthing provided by the God for people to live peacefully. Human beings should understand the ecosystem, so that they may not destroy it anymore by destroying forests, for in trees and forests a great many species of animals live, upon which other species depend. Moreover forests prevent soil erosion. Thus they indirectly help conserve soil which provides nutrients for plants, Thirugnanasambandar in his humns praises Lord Siva, Goddess Parvati, the place where their temple is built, the holy river of that region, and animals, plants is their natural setting extensively. Each and every humn of Gnanasambanda, depics the scenario of Lord Siva's temple along with his marvellous activities to save the followers:

"குழலின்னிசை வண்டின் னிசை கண்டுகுயில்கூவும்
நிழலின்னெழில் தாழ்ந்த பொழில் சூழ்ந்த நின்றயூரில்
அழலின்வல னங்கையது வேந்தியனலாடும்
குழலின்னொலி யாடும்புரி கடவுள்களை கண்ணே"

(முதல் தேவாரம்-18:5. 1-4)

Gnanasambandar describes the environmental setting of temple in Tiruninriyur. Various musical sound if one goes there hears; flute music mingles with musical sound of insects; After hearing their music. Cuckoo starts to call disciples for prayer. Entire place is surrounded by beautiful shadow of garden along with water reservoir. He hears the sound of footring wears by dancing Siva with fire on his right hard. Thus he describes the God, temple, surrounding as a dance programme performed by the artist who is lord, Siva, with background music in a stage at Tiruninriyur.

He indirectly instructs us to maintain ecological balance and appreciate our ecosystem properly. He also hoped that we should develop love for our flore and fauna and wild life so that we may use them prudently and conserve them wisely.

Mountains are ever fascinating. They stand like sentinels all along our northern frontiers. Spreeding and sprawling over a length of more than 2500 kilometres and a breadth of about 200 kilimetres, they appear very gigastic and at the same time panoramic. Some of their peaks are so high that the white of their snow seems to mingle with the blue of the sky. Mount Kailash is narrated as the place where Lord Siva sits and controls the whole universe.

"குன்றம்மது எடுத்தானுட றோளுந்நெரிவாக
நின்றங்கொரு விரலாலுற வைத்தானின் றியூரை
நன்றார்தரு புகலித்தமிழ் ஞானம் மிகுவந்தன்
குன்றாத் தமிழ் சொல்லக் குறைவின்றி நிறை புகழே"

(முதலாம் திருமுறை- 18.10. 1-4)

Purasic tale tells that King Ravana takes mount Kailash by his hand. Lord Siva controls him with his leg finger. The crest of mountain is covered round the year with snow which glows and glints more magnificiently which is rightly known as the roof of the world because it is the highest focal knot mentioned by Sambandar as, 'குன்றம்' from which a number of mountain ranges radiate in different directions.

His discriptions are very Pictureqe. So charming are they that all the locations are situated in and around Siva temples of Tamil Nadu.

"நல்லம் மலர் மேலானொடு ஞாலம்மதுவுண்டான்
அல்லரென வாவரென நின்றும் அறிவரிய
நெல்லின் பொழில் சூழ்ந்த நின்றியூரின் நிலையாரெம்
செல்வரடி யல்லாதென சிந்தை யுணராதே"

(முதலாம் திருமுறை- 18.9. 1-4)

Brahman seated on flower. Thirumal once swallowed the whole world. Which one is God; which one is to be considered; people may argue and confuse like this; But Ninriyur is the place which is surrounded by paddy field and cool water resources where Lord Siva establishes Himself permanently to save his disciples from all sorrows and sufferings in life. People who know it very well will never think anythingelse than Lord Siva. That is the greatness of Lord Siva and his temple in Ninriyur.

The relationship between a biotic or living community and the abiotic or non-living environment is expressed by the term ecosystem. An ecosystem may be very small, such as a village pond or very big such as an ocean. Thus ecosystem is a natural ecological grouping of interdependent plants are animals within the defined geographical area. The ecosystems extending over large geographical are called the major ecosystems or biomes. These are four in number - marine, fresh water, forests and grass-lands. The nature and extent of these biomes is determined by geographical parameters such as rainfall, temperature, soil, mountains, seas and deserts.

"பூண்டவரை மார்பில் புரிநூலன் விரிகொன்றை
ஈண்டவ்வத னோடும்மொரு பாலம்மதியதனைத்
தீண்டும் பொழில் சூழ்ந்த"

Lord Siva's chest remain a mountain which wears all sorts of jewels. He wears thread. He wears moon on his hair. Gardens around His temple attempt to touch moon on his Head. Trees in Garden are so tall and high to reach moon, with an intention to touch Lord Siva's Head. This sort of expression knowingly or unknowingly creates a bridge between religion and environment. Environment may broadly be classified as natural, technological and social. The natural environment can be

subsumed as renewable and non-renewable. The renewable one includes soil, water, forest, vegetation and wild life. The non-renewable one comprises minerals, oil and coal. The technological environment is constitited by factories, gadgetry, technology, means of transport and communication and other equipment developed by man including weapons and explosives. The social environment is constituted by its historical, religious, cultural, political and socio-economic components and inter-relationships. Natural environment is to conceive as biotic and abiotic. The biotic one includes living beings called living biological communities. The abiotic one consists of the basic organic and inorganic components of the physical or non-living environment like water carbondioxide, oxygen, nitrogen, calcium, sulphur, phosphorus etc. Lord Siva is the chief of environment. He is the producer; He dictate us and all species to be consumers. He is the decomposer. If we greet him sincerely He save us and guide us in the right path of life. The Inter dependence of Human, ecosystem and Lord Siva as the Master is clearly brought out by Sambandar in almost all Humns of Devaram.

# 95. SOLUTIONS FOR HUMAN PROBLEMS

**T. KASTHURI, New Delhi**

Society is a human institution and for orienting it, it is necessary to find solutions to the problems arising out of transformation. In medieval Tamilnadu. Unfortunately the Kalabras did not pay much attention to the social problems of the state. They only bothered about Introducing Budhist and Jain religion in Tamilnadu through their languages like. Pali, Prahrit, and Sanskrit and changing the thinking of Tamil people according to their own needs. Their attitude towards the problems of Tamilnadu had been that of a spectator who would look at them sometimes with Indulgence and sometimes with indifference. Helping the needy fellowmen have been the virtues greatly valued in the Indian Culture; all Indian religions have emphasised charity. So there were various institutions which used to help the suffering humanity. Tamil Ethic works refer to the social work like care and provision for orphans the old or the diseased, in case they have no sympathetic guardian or protectors. How human problems are dealt by Thirugnanasambandar and what are the solutions suggested by him in Devaram? To find out that is the main objective of this paper.

Human problem is an enduring, major issue. Some issues are considered to be of major significance some minor. Some are resolved fairly with less effort but others persist for many years. Some of them for decades. Subsidiary issues often emerge to be fervently debated while the central dilemma lives on. These, 'persistent challenges' in Human life are Human problems. Most of the human problem conditions are indeed real, but issues based on mass delusions do arise, sometimes major ones. Human problem requires a mood of concern, but it need not be based on an objectively correct view situations.

Closely allied to the human problems are the economic problems. Economic problems, more often than not, lie at the roots of the social problems. An economic problem, theoretically speaking, is the problem of allocation of scarce resources among competing ends.

Sambandar pointed out the following characteristic features of human being as,

1. Pleasure seeking tendency.
2. Efforts for securing blessings.
3. To overcome the difficulty of illness and health disorders.
4. To find out a solution for financial crisis.
5. Liberation from the cycle of birth and rebirth.
6. Freedom from fear.
7. Keep away from sorrows and sufferings of life.
8. To overcome poverty in life.
9. Not willing to accumulate cursing for any reason.
10. Wish to attain moksha after death which is the ultimate salvation for inner soul of human being.

Thirugnanasambar advises us to have faith in Lord Siva, order to get rid of all sorts of miseries in life Lord Siva is the solace for longing souls. He is always willing to save and safeguard people who have offered themselves to him.

In India one car see four varnas, viz. Brahmin, Kshatriya, Vaishya and Sudra in those days. In course of time these were divided into a number of caster and sub-caster due to different occupations and professions, each distinguished from the others in customs, which would not allow any intermarriage or interdining between one caste and another. Thus the caste remain as a sort of social stratification dividing society into groups on the basis of occupation, customs, marriage restrictions and some type of superiority - Inferiority vis-a-vis the other caste. The evil effects of the caste system have been termed as casteism. In a caste - ridden society loyalty frequently

